ஸ்ரீ:



ஸ்ரீமத்

# வால்மீகி ராமாயண

## மொழி பெயர்ப்பு 451

(இரண்டாம் பகுதி)

காஞ்சீபுரம் மகாவித்வான்.

பிரதிவாதி பயங்கரம், அண்ணங்கராசாரியார் சுவாமிகளால்,

எழுதப்பெற்று

ந. குப்புசாமி முதலியாரவர்களால்

தமது குமரன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்று

காஞ்சீபுரம் தமிழ்நூற்பதிப்பகத்தில்

வெளியிடப்பெற்றது.

---

1941



கிளேஸ் பதிப்பு 2-வால்யம் விலை ரூ. 4.

ஸ்ரீ:

ஸ்ரீராமபிரான் திருவடிகளே சரணம்.

# வால்மீகி ராமாயணம்.

காஞ்சீபுரம் உபய வேதாந்த மஹாவித்வான்

ஸ்ரீமத் பிரதிவாதி பயங்கரம்

**அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள்**

மொழிபெயர்த்தது



## (இரண்டாம் பாகம்)

# சுந்தர காண்டம்

### முதல் ஸர்க்கம்

அனுமான் மகேந்திரமலையுச்சியில் நின்று கிளம்புதலும், அவன் கடலிடையில் மைநாகமலையைக் கண்டு பேசிப்போதலும்; தேவர்களனுப்பிய சுரஸையினிடத்து வெற்றி பெறுதலும், சிம்மிகையைக் கொல்லுதலும், இலங்கைத்தீவில் புகுதலும்.

மகாவீரனான அனுமான் மகேந்திர பர்வதத்தின் உச்சியில் நின்று தனது பிதாவான வாயுபகவானை நினைத்துக் கைகூப்பித் தென்திசை நோக்கிச் செல்வதற்காக சமஸ்த வானர வீரர்களும் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே தேகத்தைப் பெருக்கி மிகவும் வளரத் தொடங்கினன். இங்ஙனம் கடல் கடக்கவேண்டிப் பெரிய சரீரமெடுத்த அனுமான் தன் கைகளால் அம் மலையைக் குலுக்கினன். அதனால் அதில் பூத்திருந்த மரங்களெல்லாம் மலர்களை உதிர்த்துவிட்டன. அனுமானால் மிதியுண்ட அப் பர்வதம் மத யானை

மத ஜலத்தைப் பெருகவிடுவதுபோல் எங்கும் தண்ணீரைப் பெருகவிட்டது. அம்மலையிலுள்ளெங்கும் நெருக்குண்ட குகைகளிலிருக்கும் பிராணிகள் விகாரமாய்க் கூச்சலிட்டன. அதிலுள்ள சர்ப்பங்களெல்லாம் தங்கள் படங்களை ஆட்டிக்கொண்டு கோரமான விஷாக்கினிகளைக் கக்கிப் பற்களால் கற்களைக் கடித்துக் கொண்டன. அதில் வசித்து வந்த வித்தியாதரர்கள் மிகவும் பயந்து கவலைப்பட்டு ஸ்திரீகளுடன் கூட ஆகாயத்தில் கிளம்பி உச்சியில் நிற்கும் அற்புதமான உருவமுடைய அனுமானைக்கண்டு ஆச்சரிய மடைந்தனர்.

அனுமான் கிளம்பப் போகிறபடியால் வாலை நீட்டித் தோள்களை இறுக்கி, இடுப்பிலடங்கிக் கால்களைக் குறுக்கிக் கொண்டனன். போகவேண்டிய வழியை வெகுதூரம் நிதானித்து ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டே இருதபத்தில் பிராண வாயுவைத் தடுத்து, கால்களைப் பூமியில் உறுதியாய் ஊன்றிக்கொண்டு, காதுகளை யுட்சுருக்கி, தமது பலத்தை மேற் கொண்டு கிளம்பும் சமயத்தில் வானரர்களைப் பார்த்து "ராமனால் விடப்பெற்ற பாணம் எப்படி வாயு வேகமாய்ச் செல்லுமோ, அப்படியே நான் ராவணனுடைய லங்கைக்குச் செல்வேனாக. லங்கையில் சீதையைக் காணாத பட்சத்தில் இதே வேகமாய்ச் சுவர்க்க லோகத்திற்குச் செல்வேன். அப்படி சுவர்க்கத்திலும் சீதையைக் காணவிடின் ராவணனைக் கட்டிக்கொண்டு வந்து விடுவேன்" என்று கூறி, கருடனைப் போல் வேகமாக ஆகாயத்தில் பரப்பிய அவனது திண்டோள்கள் மலையின் நுனியிலிருந்து வெளிப்பட்ட இரண்டு சர்ப்பங்கள் போல் காணப்பட்டன.

அனுமான் மிகுந்த வேகமாய்க் கிளம்பினதால் அம்மலையிலுள்ள மரங்கள் யாவும் கிளைகளைச் சுருக்கிக்கொண்டு நாற்புறமுங் கிளம்பிவிட்டன. அவனது தொடையின் வேகத்தால் பிடுங்குண்ட மரங்கள் முகூர்த்தகாலம் அவனைப் பின்

சென்றன. வாயுமார்க்கத்தில் செல்கின்ற அவனுடைய கண்கள் மலையிலெரியும் நெருப்புகள் போலும், சூரிய சந்திரர்கள் சேர உதித்தாற்போலும் விளங்கின. ஆகாயத்தில் நிறுத்தப்பட்ட அவனுடைய வாலானது இந்திரதுவஜம்போல் விளங்கியது. மேலே சரீரமும் கீழே சமுத்திரத்தில் பதிந்த நிழலுமாயிருந்த அந்த அனுமான் கடலில் காற்றினுல் தள்ளுண்ணும் கப்பலென்னத் தென்பட்டனன். அவனது தொடையின் வேகத்தால் கடல் வெறிபிடித்தாலெனப் பொங்கியது. கடலில் மலைபோலெழும்பும் அலைத்துகைகளை அனுமான் மார்பினுல் மோதிக்கொண்டே தாண்டிச் சென்றனன். ஆகாயத்திற்பாய்கின்ற அனுமானை அப் பரவையிலுறைகின்ற பாம்புகள் கருடனெனப் பிரமித்துத் திடுக்குற்றன. பத்து யோசனை அகலமும் முப்பது யோசனை நீளமுமான அவனது நிழல் ஜலத்தில் மிக அழகாய்க் காணப்பட்டது.

இங்ஙனம் ஆகாயத்தில் சிறகுடன் பறக்கும் பர்வதமெனப் பிரகாசித்த அந்த அனுமானை சூரியன் தபிக்கவில்லை. வாயுவும் அனுகூலமாய் வீசலுற்றது. ஆகாயத்தில் திரிகின்ற தேவர்களும், கந்தருவர்களும், ரிஷிகளும் அவனது பலாதிசயத்தைப் புகழ்ந்து பாடினுர்கள். இங்ஙனம் அவன் வேகமாய்ச் செல்லும் பொழுது, சமுத்திர ராஜன் இக்ஷ்வாகு குல திலகனுன சகரமகாராஜனுல் தோண்டி வளர்க்கப்பட்டவனுகையால் அவனது வமிசத்திலுதித்த ராமனுக்கு உபகாரம் செய்யும் பொருட்டு ராமகாரியமாகச் செல்லுகிற அனுமானுக்கு உதவி செய்ய எண்ணினன். அவன் சமுத்திரத்தில் முழ்கியிருக்கும் மைனுக மென்னும் பருவதத்தை நோக்கி "ஓ கிரிராஜனே! ராம காரியத்தின் பொருட்டு அதோ வரும் அனுமான் சற்று தங்கி இளைப்பாறும் பொருட்டு நீ உடனே ஜலத்திற்குமேலே கிளம்பி அவனை நன்கு பூஜிப்பாயாக" என்றனன்.

அங்ஙனமே அம் மைனாக பர்வதம் சமுத்திர ஜலத்தைப் பிளந்துகொண்டு வெளிப்பட்டுத் தனது சிகரங்களை வெளியில் தெரியக் காட்டியது. அங்ஙனம் மிக உயரக் கிளம்பிய அம் மலையை அனுமான் வேகமாய் மோதி அமுக்கி விட்டனன். அவனது வேகத்தைக் கண்ட அப் பர்வதராஜன் மிகவும் சந்தோஷித்து அனுமானுக்கருகில் சென்று மானிடரூபந் தாங்கித் தன் சிகரத்தில் நின்று கொண்டு "ஹே! வானரோத்தமா! நீ இப்பொழுது செய்தற்கரிய காரியஞ் செய்தனை. ஆயினும் என் சிகரங்களில் சிறிது தங்கியிருந்து பிறகு யதேச்சையாய்ச் செல்வாயாக. ராமனது முன்னோர்களால் வளர்க்கப்பட்ட சமுத்திர ராஜன் ராம காரியமாகச் செல்லும் உனக்கு உதவி செய்யும் வண்ணம் ஜலத்தில் மூழ்கிக் கிடந்த என்னை மேலெழும்பும்படி வேண்டினன். ஆகையால் நீ அவனைச் சிறிது கண்ணியப் படுத்த வேண்டும். என்னிடத்தில் சிறிது நேரம் தங்கி இளைப்பாறிச் செல்லுவாயாக. இதோ என்னிடத்தில் மிகவும் இனியவைகளான பழங்களும் காய் கிழங்குகளும் ஏராளமாய் இருக்கின்றன. அவற்றை நுகர்ந்து சிறிது களையாற்றிக் கொள்வாயாக.

மகாவீரனே! உனக்கும் எனக்கும் கூட ஓர் சம்பந்த முண்டு. எப்படியெனில் முன் கிருத யுகத்தில் மலைகளுக்கெல்லாம் சிறகுண்டாகியிருந்தன. அதனால் அவை கருடனைப் போல் வேகமாகப் பலதிசைகளிலும் பறந்து திரிந்தன. இதைக்கண்டு தேவர்களும் ரிஷிகளும் மற்றுமுள்ள பிராணிகளும் தம்மேல் எங்கு மலைகள் விழுந்து விடுமோ வென்று அஞ்சினமையால் இந்திரன் தனது வஜ்ராயுதத்தினால் அவற்றின் சிறகுகளைக் கண்டவிடத்தில் வெட்டினன். அதனால் மிகவும் பயமடைந்திருந்த என்னையும் இந்திரன் சிதைப்பதாய் வஜ்ஜிராயுதத்தை ஏந்தி வந்தனன். உடனே மகாத்துமாவான உனது தகப்பனார் (வாயுபகவான்)

என்னை அப்புறம் தள்ளிக் காப்பாற்றினார். அவரால் நான் இந்த லவண சமுத்திரத்தில் தள்ளப்பட்டு அன்று முதல் சுகமாக இருந்து வருகிறேன். ஆகையால் நான் உனக்கு மிகவும் கடமைப்பட்டுளேன். நீ என்னையும் கடலாசனையும் திருப்தி செய்யும் பொருட்டு என் பொன்மயமான சிகரங்களின் மீது தங்கி விடாயாற்றுவாயாக" என்றனன்.

இதைக்கேட்ட அநுமான் "ஓ கிரிராஜனே! நான் களிப்புற்று அதிதி பூஜையும் பெற்றேன். காரியத்தின் அவசரம் எனக்குப் பதறுகின்றது. நடுவிலெங்கும் நிற்கிறதில்லையென்று பிரதிக்ஞையும் செய்யப்பட்டிருக்கின்றது" என்று கூறி, அம்மலையைக் கையால் தட்டிக் கொடுத்து சிரித்துக் கொண்டே ஆகாயத்தில் பாய்ந்தனன். இங்ஙனம் அந்த அநுமான் வேகமாகச் செல்லும்பொழுது சுரசை யென்னும் நாகஸ்திரீ யொருத்தி அநுமானது பேராற்றலை இன்னும் அறிய விரும்பி தேவர்களால் தூண்டப்பட்டு ராக்ஷச சரீரத்தைத் தரித்து விகாரமாய் கோரரூபத்தோடு அனைவர்க்கும் பயத்தை யுண்டுபண்ணிக்கொண்டு வந்து, செல்லும் அநுமானை வழிமறித்து "ஓ வானரனே! உன்னை எனக்கிரையாக தேவர்கள் அளித்திருக்கிறார்களாகையால் உன்னை யான் பக்ஷிக்கும்படி என் வாயில் புகுவாயாக" என்றனள்.

இதைக் கேட்ட அநுமான் தான் ராம காரியத்தின் நிமித்தமாக அவசரமாய்ச் செல்கையால், சீதையைக் கண்டு பிடித்து அச் செய்தியை ராமனுக்கறிவித்த பிறகு நிச்சயமாக உனது வாயில் நானே வந்து விழுவேனெனக் கூறினன். இங்ஙனம் அநுமான் சபதமிட்டுக் கூறின போதிலும் அந்த சுரஸாதேவி அவனை நோக்கி 'வானரச் சிரேஷ்டனே! எனது வாயிற் புகுந்தல்லது நீ போகலாகாது' என்று விஸ்தாரமான தனது வாயைத் திறந்துகொண்டு அநுமான் முன்பு நின்றனள்.

அனுமான் மிகுந்த கோபங்கொண்டு பத்து யோசனை நீளமும் பத்து யோசனை அகலமுமாகத் தன் சரீரத்தைப் பெருக்கினன். இதைக்கண்ட சுரஸை தன் வாயை இருபது யோசனை தூரம் திறந்துவிட்டாள். உடனே அனுமான் முப்பது யோசனை வளர, அவள் நாற்பது யோசனைவளர்ந்தனள். பிறகு அனுமான் ஐம்பது யோசனை வளர, சுரஸை அறுபதானாள். இவன் எழுபதாக, அவள் எண்பதானாள். இவன் தொண்ணூறாக, அவள் நூறு யோசனை நீண்டனள்.

இங்ஙனம் நூறுயோசனை அகன்ற அவளது வாயைப் பார்த்த அனுமான் தனது உடம்பை ஒரு கட்டை விரலளவாகச் சுருக்கி திடீரென்று அவள் வாயில் வேகமாகப் புகுந்து அப்புறப்பட்டு ஆகாயத்தில் வெற்றி தோன்ற இருந்து கொண்டு 'அம்மே! இப்பொழுது நான் உனது வாயிற் புகுந்து மீண்டும் வெளிவந்து விட்டனன். இனி யான் பிராட்டியைத் தேடிச் செல்கிறேன்' என்று கூறினன்.

உடனே சுரஸாதேவி மிகுந்த ஆச்சரியத்துடன் தனது நிஜ ரூபத்தோடு "ஓ வானரோத்தமா! உனது ஆற்றலை மெச்சினேன். நீ சுகமே சென்று காரிய சித்தியடைவாயாக" என்றனள். பிறகு அனுமான் சமுத்திரத்தை ஒரு பொருட்டாக எண்ணாமல் ஆகாச மார்க்கத்தில் கருடனெனப் பாயத் தலைப்பட்டனன். இவ்வாறு பாய்ந்து செல்லும் அவ் வாயு குமாரனை சிம்மிகை யென்னுமோர் அரக்கி நோக்கி 'ஆ! நெடுநாளாகப் பசிப் பிணியால் பீடிக்கப்பட்ட எனக்கு இன்று பெரிய உருவமுள்ள வானரமொன்று ஆகாரமாய்க் கிடைத்தது!' என்று கூறிய வண்ணம் அவனது நிழலைப் பிடித்து அனுமானை நிறுத்தினள். இவளைக் கண்ட அனுமான் கார் கால மேகம் போல் பிரம்மாண்டமாக வளரத் தொடங்கினன். அதற்கேற்றபடி அந்த ராக்ஷசியும் பாதாள பிலம்போன்ற விஸ்தாரமான தனது வாயைத் திறந்துவிட்டாள். உடனே

அனுமான் திடமான தன்னுடலைச் சுருக்கிக்கொண்டு திறப் புண்டிருந்த அவள் வாயில் சடக்கென்று நுழைந்தோடினுன். பிறகு தனது கூரான நகங்களால் அவள் குடலைப் பிடுங்கி மருமங்களைக் கத்தரித்து அதினின்று மனோ வேகமாய் வெளிக் கிளம்பினன். அனுமானுல் மருமத்தில் பிளக்கப் பட்ட சிம்மிகை உடல் நொந்து கடலில் விழுந்து மாண்ட னள். அனுமான் பழையபடி உடலைப் பெருக்கி வளர்த்து கருடனைப்போல் ஆகாயத்தில் பாய்ந்து சென்றுன்.

பிறகு சமஸ்த பூதங்களாலும் புகழப்பட்ட அனுமான் போய்க்கொண்டிருக்கையில் பல மரங்களாலலங்கரிக்கப்பட்ட தோர் தீவையும் அழகிய நந்தவனங்களையும் கண்டனன். கடைசியில் சமுத்திரத்தின் தென்கரையையடைந்து தனது நிஜ ரூபத்தை யெடுத்துக்கொண்டு நாஞவித மரங்களால் நிறைந்துள்ள லம்ப மென்னும் மலையின் செறிந்த நுனியில் இறங்கினன். பிறகு அனுமான் திரிகூட பர்வதத்தின் நுனி யில் விளங்கிய லங்கா நகரத்தைக் கண்டனன்.

முதல் ஸர்க்கம் முற்றிற்று.

---

## இரண்டாவது ஸர்க்கம்

அனுமான் இலங்கைத்தீவிலுள்ள மலை முதலிய பலவற்றை யுங் காணுதலும், இலங்கையினுட்புகுதற்காக மிகச் சிறிய வடிவங்கோள்ளுதலும், சந்திரனுதித்தலும்.

மிகுந்த பராக்கிரமமுடைய அனுமான் நூறு யோசனை விஸ்தார முள்ள சமுத்திரத்தைத் தாண்டினும் சிறிதும் சோர்வடையவேயில்லை. மரங்களடர்ந்த மலைச் சிகரங்களிலும் வனங்களிலும் அந்த அனுமான் திரிந்துலாவினன். பிறகு அவ்வாயு குமாரன் லங்கையை நெருங்கிச் சென்று பொன் மயமான மதில்சுவர் சூழ்ந்து, சூரியன் முதலிய கிரகங்களோ சரத்கால மேகங்களோவெனச் சங்கிக்கும்படியான வீடுகள் நிறைந்து மேடான வீதிகளெங்கும் சூழ்ந்து, அநேகம்

மச்சுகள் திகழ்ந்து, சுவர்ணத்தால் கொடி கொடியாய் அழகாய் இழைக்கப்பட்ட கோபுரவாயில்களுடன் கூடி அமராவதியைப் போல் விளங்க அதையுங் கண்டனன்.

வெண்ணிறத் தழகாய வீடுகளடர்ந்து மலையின் நுனியி லிலங்கு மிலங்கை நகர் அநுமானுக்கு ஆகாயத்தில் நிருமித்த தொரு பட்டணமெனக் காட்சி தந்தது. கைலாச சிகரம் போல் ஆகாயத்தை யளாவி உயர்ந்துள்ள சிறந்த மாளிகை களால் ஆகாயத்தில் பறப்பது போலும்; பொல்லாவரக்கர் போரப்பொலிய உண்டானமையால், நாகங்கள் நிறைந்த போகவதீ நகரம் போலும், இத் தன்மையதென்று நினைக்கவும் அரிதாய், கடலால் சூழப்பட்ட இலங்கையைக் கண்டு அநு மான் ஆச்சரியமடைந்து பலகாலும் பெருமூச்செறிந்து அத னுள் பிரவேசிக்கும் விதத்தைப் பற்றிச் சிந்திக்கலுற்றனன்.

உடனே சூரியன் அஸ்தமித்தனன். அநுமான் சிறிய உருவத்துடன் அதிவேகமாகப் பாய்ந்து லங்கையில் புக யத் தனித்தனன். அங்குள்ள அரக்கர் மாளிகைகள் வைடூரிய மிட்டு விசித்திரமாய் இழைக்கப்பெற்று, அலங்காரமான தளங்களால் விளங்கா நின்றன. அந்த அநுமான் வெண்மை யான விமானங்கள் வரிசை வரிசையாய் விளங்க, சிறந்த செம் பொன் செய் சாளரங்களும் தோரண வாயில்களுமாய் ராவண னது தோள் வலியால் காக்கப்பட்டு, கடுமிடுக்கரான அரக் கர்கள் நிறைந்து பெரும் புகழ்படைத்த அற்புதமான அந் நகர் சிந்தைக்கும் நிலமல்லாதது கண்டு களித்தும் சீதையைக் காணக் கருதி (அது கூடாமையால்) கவலையுற்றும் போந்த னன். சந்திரனுமிவனுக்குந்துணை செய்வதாக தன் நிலவின் மேலாப்பு கொண்டு உலகெங்கும் போந்து, நட்சத்திரங்கள் புடைசூழ நடுவில் துலங்கிப் பல்லாயிரம் கிரணங்களோடு புறப்படலானான்.

இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## மூன்றுவது ஸர்க்கம்

### லங்காநகரக் காவல் தேவதை அனுமானைத் தகைத்தலும், அனுமானிடம் முட்டியடி பெற்றுத் தளர்ந்த அந்த தேவதை தனக்கு முன்பு பிரமன் தந்த வரத்தை யெடுத்துக்கூறி இலங்கையில் புகுமாறு அனுமானுக்கு விடை தருதலும்.

சுவர்ண மயமான வாயில்களும், வைடூரியம், வஜ்ஜிரம், படிகம், முத்து இவைகளிழைத்த திண்ணைகளும், மணிமய மான கெட்டித் தரைகளும், உருக்கிய தங்கத்தினுல் இழைத்த மத்தவாரணங்களும், வைடூரியத்தினுல் செய்த படிக்கட்டு களும், படிகமயமான அங்கணத் துறைகளும், ஆகாயத்தில் பறப்பது போல்ழகிய நற்சாலைகளுமாய், கிரௌஞ்சம், மயில் இவை குலாவ, ராஜ ஹம்ஸங்கள் உலாவ ஆகாயத்தில் கிளம்புவதுபோல் விளங்கு மிலங்கைமாநகரை அனுமான் கண்டு களிகூர்ந்தனன். ரத்தினப்பிரபை யென்னும் வஸ்திர முடுத்து, கொட்டகசாலை யென்னும் செவிக்கணி யணிந்து, யந்திரசாலைகளென்னும் தனங்களுடைய தாய்ச் செல்வம் மல்கு மங்கை ஓர் அணங்கெனத் தென்பட்டது.

அனுமான் அவ்விலங்கையில் புகும்போது, அவ்விலங் கைக்குக் காவலாயிருந்த இலங்கினி, பெண் ரூபம் தரித்து விகாரமான முகமும் பயங்கரமான காட்சியுமாய்க் கிளம்பி அனுமானை நோக்கி "வானரமே! நீ யாவன்? இங்கு வந்த காரணமென்ன? ராவணன் சேனை எங்கும் சூழ்ந்து காவல் பூண்ட இவ்விலங்கையிற் புகுவதற்கு உன்னுலாகாது" என்ற னள். அனுமான் அவளை நோக்கி "நீ யார்? விகாரமான கண்களோடு கோபுர வாயிலிலிருந்துகொண்டு என்னைத் தடுத்து பயங்கரமாய் நின்று விரட்டுவதேன்?" என்று கேட் டனன். நினைத்தவண்ண முருவெடுக்கவல்ல இலங்கினி (லங்கை நகரைக் காக்கும் தேவதை) அனுமானைக் கோபத்

துடன் நோக்கி "குரங்கே! நான் இந்த இலங்கையைக் காக்கும் தேவதை. ராவணனது கட்டளையை எதிர் பார்ப்பவள் யான். என்னை மீறி உன்னால் இந்நகரில் புகமுடியாது. இப்பொழுது என்னால் நீ உயிரிழக்கப் போகிறாய்" என்றனள்.

இதைக் கேட்ட அனுமான் பெரியமலை போன்ற உருவத்தைத் தாங்கி அவளை நோக்கி "காடுகளும் தோட்டங்களும் அழகிய வீடுகளும் கோபுரங்களும் சிங்கார வனங்களும் நிறைந்த இந் நகரை வேடிக்கையாகக் காண விருப்பங் கொண்டுளேன். ஆகையால் என்னைப் போக விடுவாயாக" என்றனன். காமரூபியான அப்பெண்தேவதை பயங்கரமாய்ப் பெருங்கூச்சலிட்டு அனுமானை ஓங்கியறைந்தனள். இதனால் அனுமான் மிகவும் அடிபுண்டு பெருங்கோஷமிட்டுக் கொண்டே இடது கைவிரல்களை முடக்கிக் கொண்டு முட்டியினால் அவ் விலங்காபுர தேவதையை ஒரு குத்து குத்தினன். அந்த ராக்ஷசி அந்த இடி பொறுக்க முடியாமல் கலங்கி கோரமாய் வாயைத்திறந்து கொண்டு புவியில் விழுந்தனள்.

அப்பொழுது மிகவும் நொந்துபோன அவ்வரக்கி அனுமானை நோக்கி பலஹீனமான குரலில் "வானரோத்தமனே! என்னை மன்னிப்பாயாக. மகாபலவானான உன்னால் நான் இன்று தோல்வியடைந்தனன். பிரமதேவன் தானே எனக்கொரு வரமளித்திருக்கின்றனன். அதாவது என்னை எப்பொழுது ஓர் வானரன் தன் பராக்கிரமத்தினால் வெல்லுவானோ அப்பொழுதே அரக்கர்களுக்குப் பயம் நெருங்கியதென்று கூறியிருக்கின்றனன். அதன்படியே இன்று நடந்தபடியால் இனிமேல் இராவணனுக்கும் ராக்ஷசர்களுக்கும் விநாசகாலம் கிட்டிவிட்டது. பிரமனது வாக்கு பொய்க்காதல்லவா? ஆகையால் நீ சுகமாக உள்ளே சென்று உன்னிஷ்டப்படி செய்து கொள்வாயாக." என்றனள்.

மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நான்காவது ஸர்க்கம்

## அனுமான் லங்காபுரிக் கோட்டையைக் கடந்து செல்லுதலும், இராவணனுடைய மூலபலங்களைக் காணுதலும் அந்தப்புரம் நோக்குதலும்.

*உடனே அனுமான் வழியல்லா வழியால் லங்கையின் மதில் சுவரைப் பாய்ந்து கடந்தனன். அப்பொழுது முதலில் இடது காலைத் தூக்கி சத்துருக்கள் தலையில் வைப்பதற்கிடாக வைத்தனன். பிறகு அவன் அப்பட்டண மெங்கும் சுற்றித்திரிய வாரம்பித்தனன். வெளுத்த மேகங்கள் போலழகாய், பத்மம், ஸ்வஸ்திகம், வர்த்தமான மென்கிற நிலையில் கட்டப்பட்டுள்ள அரக்கர் மாளிகைகளால் அப்புர மெங்கும் அழகாய் விளங்கா நின்றது. வீடுவீடாய்ச் செல்லு மந்த வாயுமைந்தன் ஆங்காங்கு விதம்விதமான மாளிகைகளைக்கண்டனன். தேவலோகத்தில் அப்சரஸ்ஸுகளைப்போல் மதமிகுந்த ஸ்திரீகள் அலங்காரமாகப் பாடுகின்ற அழகிய கானங்களைக் கேட்டனன். சீமான்களான அரக்கர் மாளிகைகளில் சிலம்பொலியும், ஒட்டாணத்தொலியும், படிக்கட்டொலியும், தோள்தட்டுமொலியும், சிங்கநாதமும் செவிப்பட்டன. பின்னுமங்கு இருக்கு வேதம் முதலிய மந்திரபாகங்களை ஜெபிக்கும் ஓசையும் செவியுற்றது. ராஜ வீதி நிறைந்து நிற்கும் அரக்கர் பெருஞ் சேனையையும் நடுச்சேனையில் செல்லுகின்ற ராவணன்றன் ஏவலாட்கள் பலரையும் அனுமான் கண்டனன்.*

*தீக்ஷையுற்றவர்களும், மொட்டையானவரும், மாட்டுத்தோலுடுத்தவரும், தருப்பையை ஆயுதமாகப் பிடித்தவரும், தண்டத்தைத் தரித்தவரும், ஒற்றைக்கண்ணுடையோரும், ஒரு காதுடையோரும், தொங்குகின்ற தொந்தியும் முகமுமுடையோரும், கோணிய முகத்தவரும், வித்தியாசமான அவயவமுடையோரும், நானாவித நிறமுடையவரும்,*

குரூபிகளும், அழகுடையவரும், கொடி பிடித்தவருமான இப்படிப்பட்ட பலபேர்களை அனுமான் கண்டனன். அங்கு நடு நகர்க்கரனுக ராவணனிட்ட கட்டளையின்படி ஜாக்கிரதையாய்க் காவல் புரியும் நூறுபிரக் கணக்கான மூலபலத்தையும் அனுமான் கண்டனன்.

சுவர்க்கத்திற்கு நிகராய் திவ்வியமான சப்தங்களொலிக்கப்பெற்று குதிரைகள் கனைக்க, கலன்கள் ஒலிசெய்ய, ரதங்களும் வாகனங்களும் விமானங்களும் வெண்மேகம்போன்ற நான்கு தந்த யானைகளும் நிறைந்து, மதங்கொண்ட மிருகங்களும் அலங்காரமாய் அதிவீரரான ராக்ஷசர்களால் காக்கப்பட்ட ராவணனது அரண்மனையை அனுமான் சென்று கிட்டினன். இப்படி பொன்னும் தங்கமும் இழைத்த மதில் சுவருடன் விலையுயர்ந்த முத்தும் மணியும் பதிக்கப்பெற்று அழகுடையதும் சிறந்த காரகிற்சாந்துகள் பூசப்பெற்றதுமான ராவணனது அந்தப்புரத்தை அனுமான் அணுகினன்.

**நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## ஐந்தாவது ஸர்க்கம்.

### சந்திரனொளி பரம்பக் கண்டு களித்த அனுமான் பலவகை அரக்கியர்களைக் கண்டவிடத்தும் சீதையைக் காணாது வருந்துதல்.

அப்பொழுது ஆகாயத்தில் சந்திரன் மிக்க ஒளியுடன் பிரகாசித்தனன். செவிக்கினிய வீணைமுதலிய தந்தி நாதங்கள் செவிப்பட ஆரம்பித்தன. நல்லொழுக்கமுடைய ஸ்திரீகளும் நாயகருடன் துயில்கொண்டார்கள். இரவு திரியுமரக்கர்கள் வியக்கத்தக்கதான கொடுந்தொழில் புரிந்து சஞ்சரிக்கத் தொடங்கினர். மதித்து மதிமயக்குற்ற ஜனங்கள் நிறைந்து தேரும் குதிரையும், குஞ்சரமும் செறிந்து சிறந்த செல்வம் மல்கும் அரக்கர் மனைகளை அனுமான் கண்டனன்.

ஒருவர்க்கொருவர் பரிகசிப்பவர்களும், பருத்த தோள்களை யடிப்பவர்களும், மதம்மிகுந்த சொற்களைப் பிதற்றுவோரும், ஒருவர்க்கொருவர் மதம்பிடித்து பயமுறுத்துவோரும், மார்பை நெறிப்போரும், சரீரங்களைப் பெண்கள்மீது சிந்துவோரும், விசித்திரமான வேஷம் தரிப்போரும், திடமான விற்களை நாணேற்றுவோருமான ராக்ஷசர்களையும் அனுமான் கண்டனன். பின்னும் அவ்வாயு மைந்தன், சிலர் வாசனை பூசவும், சிலர் கண் துயிலவும், சிலர் சிரிக்கவும், சிலர் சினந்து பெருமூச்செறியவுமான பெண்மணிகளையும் கண்டனன்.

மிகவும் அழகுடையவராய், அதற்கேற்ற நானாவித குணங்கள் படைத்தவரான புருஷர்களையும், அப்படியே அவர்கட்கழகு செய்யும் அழகிய பெண்களையும், கணவரிடத்தில் மிகவும் பற்றுள்ள உத்தமிகளான ராக்ஷச ஸ்திரீகளையும், அழகாய் விளங்கி நாணமுற்று இராப்பொழுதில் காதலருடன் கலந்து களிப்பில் மூழ்கிய சில மாதர்களையும் அனுமான் கண்டனன். போர்வையின்றிச் சில பெண்கள் மனதிற்கிசைந்த காதலரை நாடிச் சென்று களிப்பதையும், தமது சொந்த நாயகர்களிடத்தில் சந்தோஷமுற்றிருக்கும் சுந்தரிகளையும் ஆஞ்சனேயன் கண்டனன். ஆனால் ராமனது மனைவியான ஜனகராஜன் திருமகளை மாத்திரம் கண்டானில்லை. மீண்டுமவன் சீதையை நெடுநேரம் தேடியும் காணவில்லையாதலால் மிகவும் வருந்திக் கவலைப்பட்டனன்.

ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஆறாவது ஸர்க்கம்.

### அனுமான் இராவணன் கிடக்கு முட்புறங் காணுதல்.

தீரனை அனுமான் மீண்டும் ராவணனது அரண்மனையை யடைந்து சீதையைத் தேடினன். அதில் முதலிலுள்ள வெள்ளியிற்செய்து விசித்திரமாய்த் தங்கமிட்

டிழைத்த ஆசார வாசலையும், அழகிய வாயிற்படிகளையுடைய விதம் விதமான பல கட்டுகளையும், சூரராய் ஓய்வின்றி யானை யூரும் பிரதானிகள் காவல் புரியுமிடத்தையும் தாண்டிச் சென்று பல ரத்தினங்களாலிழைக்கப்பட்ட சிறந்த ஆசனங் களும் பாத்திரங்களும் நிறைந்து பெருந் தேர்கள் பேரொலி செய்யப்பெற்ற மகாரதர்களிருப்பிடங்களையுங் கடந்து சென்று ராவணனிருப்பிடத்தைக் கிட்டினன். அங்கு களித்த பெண்மணிகள் நிறைந்து அவர்களுடைய சிறந்த ஆபரணங்கள் ஆரவாரிப்பதால் கடல்போல் கலகலவென்ன, குடை விசிறி முதலியவை நிறையப்பெற்றுச் சிறந்த சந்தன மும் காரகிலும் புகைய, ஜனங்கள் விசேஷமாயடர்ந்து மிக மிக விளங்க, பேரியும் மத்தளமும் சப்திக்க, சங்குமுழங்க ரத்தினங்களாலிழைக்கப்பெற்ற ராவணனது பெரிய வீட்டை அனுமான் கண்டனன். அங்கு ராவணனிருக்கு மிடத்திற்கு சமீபத்தில் தானே அனுமான் சஞ்சரித்தனன்.

பிறகு அனுமான் அதிவேகமாக, பிரஹஸ்தன், கும்ப கர்ணன், மஹோதரன், விரூபாக்ஷன், வித்யுஜ்ஜிஹ்வன், வித்தியுன்மாலி, வஜ்ஜிரதம்ஷ்ட்ரன், சுகன், ஸாரணன், இந்திரஜித்து, ஜம்புமாலி, ஸுமாலி முதலியவர்களுடைய சிறந்த மாளிகைகளின் செல்வப் பெருக்கையும் கண்டு வியந் தனன். இங்ஙனம் நான்கு பக்கங்களிலும் உள்ள சகலமான வர்களின் வீடுகளையும் தாண்டி வந்து மீண்டும் தைரியமாக ராவணனுடைய இருப்பிடத்திற்கே வந்து சேர்ந்தனன். அங்கு அனுமான் திரியும்பொழுது ராவணனது சமீபத்தில் படுத்து சூலம், கதை, சக்தி, தோமரம் முதலிய ஆயுதங்களைத் தரித்துக்கொண்டு விகாரமான கண்களுடன் கூடி உறங்கு கின்ற ராக்ஷசர்களைக் கண்டனன். பின்னும் அம் மனையில் பலவிதமான சேனைகளையும் பெரிய சரீரம் படைத்த பல ஆயுதங்கள் தரித்த ராக்ஷசர்களையும், சிறந்த யானைகளையும்,

குதிரைகளையும், ஓராயிரம் காலாள் சேனைகளையும் அனுமான் கண்டனன்.

மயில் கூடுகள் நிறைந்து கொடிமரங்கள் நாட்டிப் பார்த்த விடமெங்கும் பலவித ரத்தினங்கள் நிறைந்த நிதிக்குவியல் களுடன் பூதநாதனை சிவன்பதி(கைலாசம்) போலும் மந்தர கிரிபோலும் விளங்கும் அந்த அழகிய அரண்மனையை அனுமான் கண்டனன். ரத்தினங்களின் காந்தியும் ராவணனது தேசுங்கலந்து அந்த மாளிகை ஸஹஸ்ர கிரணனை சூரியனைப்போல் விளங்கியது. பொன்மயமான படுக்கைகளும், ஆசனங்களும், சிறந்த பாத்திரங்களும், மதுமயமான சாராயங் களும், மணிமயமான ரத்தினங்களின் நிறைவும் அமைந்து குபேரனது அரண்மனைபோல் மனத்துக்கினியதான அநேக மாடங்களையுடையதாய் பெண்மணிகள் நிறைந்து நன்ருய் வகுத்த கட்டுக்களையுடையதான அந்த ராவண மாளிகையில் அனுமான் நுழைந்தனன்.

ஆருவது ஸர்க்கம் முற்றிற்று

---

## ஏழாவது ஸர்க்கம்.

### அனுமான் ராவணனது அந்தப்புரத்தில் பல விடுதிகளையும் புஷ்பக விமானத்தையும் காணுதல்.

அனுமான் ராவணனது அரண்மனையில், நானுவித ரத்தினங்களால் திகழ்வனவும், தேவாசுரர்களும் புகழ்ந்து வெகுமதிக்கத் தக்கவைகளும், சிற்ப சாஸ்திரத்தின்படி குறையொன்றுமின்றி விளங்குபவைகளும் ராவணன் தனது புஜபலத்தினுல் சம்பாதித்தவைகளுமான பல மாளிகைகளைக் கண்டனன். பிறகு நிகரற்ற அழகுவாய்ந்து விளங்கும் புஷ்பக விமானத்தைக் கண்டனன்.

அப் புஷ்பக விமானம் தெய்வயோகத்தினுல் பூமியில் இறங்கின சுவர்க்கமோவென்னும்படி மிகுந்த ஒளியுடன்

பிரகாசித்துக் கொண்டிருந்தது. நானாவித மணிகளாலும் மணம்மிக்க பற்பல புஷ்பங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, மிகுந்த அழகுள்ள மடந்தையர்மணிகள் உலாவிக்கொண்டிருக்கையால் அது மின்னற் கொடிகளால் திகழ்கின்ற மேகம்போல் பிரகாசித்தது. மற்றும் சிறந்த ஹம்ஸப் பறவைகள் கட்டப்பெற்று, ஆகாயத்தில் புண்ணிய புருஷர்கள் ஏறிப்போகிற உயர்ந்த விமானம்போல் அனைவராலும் அது பூஜிக்கப்பட்டது. சிறந்த ரத்தினங்களாலிழைக்கப்பெற்ற அப்புஷ்பக விமானம், காடு மலை முதலியவை நிறைந்து விளங்குகிற இப்பூமண்டலம் முழுவதும் சித்திரத்தில் எழுதப் பெற்றிருந்தது. மற்றும் அதில் வைடூரியங்களாலும் வெள்ளியாலும் பவழங்களாலும் பறவைகள் செய்யப்பட்டிருந்தன. நானாவித ரத்தினங்களால் பல வர்ணங்களையுடைய சர்ப்பங்களும் சிறந்தழகான அவயவங்களமைந்த குதிரைகளும் நிருமிக்கப்பட்டிருந்தன. அதில் சித்திரிக்கப்பட்ட அலங்காரமான படங்கள் எவருக்கும் மேன்மேலும் மன்மத விகாரத்தை விளைத்துக்கொண்டிருந்தன. தாமரைக் குளங்களில் இழிந்து தாமரைப் பூக்களையும் நெய்தல் பூக்களையும் பறித்து விளையாடுகின்ற யானைகளும், அந்த யானைகளால் அபிஷேகஞ் செய்யப்பெற்று அழகிய கைகளில் கமலங்களைப் பிடித்த லக்ஷ்மிதேவியும் சித்தரிக்கப்பட்டிருந்தன.

இங்ஙனம் அழகாய் இருப்பதும் மங்களமுமான அவ் விமானம் முழுவதும் திரிந்து எவ்வளவு சென்றும் ராவணனாவது அவனது ஸ்திரீகளாவது இருக்கிற இடம் தெரியாமையாலும், அதன் முடிவு காண முடியாமையாலும் அனுமான் மிகுந்த ஆச்சரியமடைந்தனன். பின்னும் அந்த அனுமான் லங்காபுரம் முழுவதும் மிகுந்த ஊக்கத்துடன் எவ்வளவு தேடியும் சீதையைக் காணாது மிகவும் வருந்தினன்.

ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எட்டு & ஒன்பதாவது ஸர்க்கம்

## புஷ்பக விமானத்தை வருணித்தல்.

அனுமான் கண்ட அப் புஷ்பக விமானமானது விசுவகர் மாவால் நிருமிக்கப்பட்டு ஒப்புயர்வற்ற அழகுடன் விளங் கியது. அவ்விமானம் மிகவும் உயர்ந்து ஆகாயத்தை யளாவிக் கொண்டிருந்தது. அவ் வழகிய விமானம் பெருந்தவம் செய் தும், மிகுந்த பராக்கிரமத்தைக் காட்டியும் ராவணனால் சம் பாதிக்கப்பட்டது. அது தன் மேலேறிக் கொள்பவர் எங்கெங்குப் போகவேண்டுமென்று மனதில் நினைக்கின் றனரோ, அவ்வவ்விடங்களுக்கெல்லாம் தடையின்றிச் சீக்கிரத்தில் செல்ல வல்லது. விமானம், கோபுரம் முதலிய நானாவித ஸந்நிவேசங்களமைந்ததாய் மிகுந்த ஒளியுடன் கூடி பார்க்க வெகு ரமணீயமாய் இருந்தது.

பின்னுமவ் விமானம் தனது எஜமானனது மனத்தை யறிந்த மாத்திரத்தில் மன வூக்கத்துடன் வெகு விரைவில் வாயுவை நிகர்த்த வேகத்துடன் செல்லும். அதைத் தடை செய்ய எப்படிப்பட்டவர்க்கும் முடியாது. சிறந்த புண்ணிய வான்களான தேவதைகளின் வாஸஸ்தானமான சுவர்க்க லோகம்போல் பிரகாசித்துக் கொண்டிருக்கும். பருத்த சரீரங்களமைந்து ஆகாயத்தில் பறப்பவர் போலவும், அதிக வேகமுடையவர் போலவும் தோற்றங்கொண்டு கோபுரந் தாங்கிகள் போன்று பூதகணங்களை நிகர்த்த உருவத்துடன் கூடின பலவாயிரம் ராக்ஷசப் பிரதிமைகள் அவ்விமானத்தைத் தூக்கிக்கொண்டு செல்வதுபோல் நிருமிக்கப்பட்டிருந்தது.

அவ் விமானத்தின் நடுவில் அகன்று நீண்ட சிறந்த மாளிகை யொன்றை அனுமான் கண்டனன். ராவணனது மாளிகை ஒரு யோசனை நீளமும், அரையோசனை அகலமும் உடையதாகிப் பலவாயிரம் மாடமாளிகைகளோடு கூடிப் பிர

காசித்துக் கொண்டிருந்தது. அனுமான் சீதையைத் தேடிக் கொண்டு புஷ்பக விமானந் தவிர மற்றை இடங்களில் ராவணனது அரண்மனை வரையில் விஸ்தீரணமாயிருக்கின்ற அவன் தம்பிகள் புதல்வர்கள் மந்திரிகள் முதலியவர்களின் வீடுகள் முழுவதும் தேடித் திரிந்தனன்.

பிறகு அனுமான் ராவணனது மூலஸ்தானமான ஒரு பெரிய மாளிகையைக் கண்டனன். அங்குச் சிறந்த பராக்கிரம முடைய ராக்ஷசர்கள் ஆயுதங்களைக் கையில் ஏந்தியவண்ணம் காவல் புரிந்து கொண்டிருந்தனர். அந்த ராவண பவனத்தில் அவனது மனைவிகளான ராக்ஷச மடந்தையர் பலரும், அவன் பராக்கிரமத்தினால் கொண்டுவந்த ராஜ கன்னிகைகள் பலரும் நிறைந்திருந்தனர். இந்திரன், குபேரன் இவர்களது ஐசுவரி யங்களைவிட ராவணனது ஐசுவரியம் பெருகியிருந்தது. அந்த ராவணனது அரண்மனையின் நடுவில் புஷ்பக விமானம் ஓர் அழகிய மாளிகை போன்றதாய் விளங்கியது.

அவ்வழகிய புஷ்பக விமானம் முன் பிரமதேவனுக்காக விசுவகர்மாவினால் விலையுயர்ந்த ரத்தினங்களாலும் வைடூரிய மணிகளாலும் நிருமிக்கப்பட்டது. அதைக் குபேரன் பெருந் தவஞ்செய்து பிரமதேவனிட மிருந்து பெற்றனன். ராவணன் அந்தக் குபேரனைப் பராக்கிரமத்தினால் ஜயித்து அவ் விமானத்தைக் கைப்பற்றினன். அது அழகிய பிரதிமைகளோடு கூடின பொற்கம்பங்களும் வெள்ளிக் கம்பங்களும் அமைந்து காந்தியால் சூரியன் போலவும் அக்கினி போலவும் விளக்க முற்றுப் பொற்படிகளும், அழகான சிறந்த திண்ணைகளும் பொருந்திப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. சிறந்த இந்திர நீல மணிகளாலும் சிம்மளத்தீவில் விளைகின்ற உயர்ந்த நீல மணிகளாலும் அதிலுள்ள திண்ணைகள் இழைக்கப் பட்டிருந் தன. தரைகள் சிறந்த பவழங்களாலும், உயர்ந்த ரத்தினங் களாலும், நிகரில்லாத குண்டு முத்துக்களாலும் நிருமிக்கப்

பட்டிருந்தன. சிறந்த செஞ்சந்தனம் மட்டிப்பால் இவற்றின் நறுமணங் கமழப்பெற்று அழகிய உருவங்களோடு விளங்குகிற மேத்தைமேலுள்ள கிருகங்களால் விளங்குகிற அத் திவ்விய விமானத்தின்மேல் அனுமான் ஏறினன்.

பிறகு அங்குண்டான வாசனை மிகவும் சிறந்திருக்கை யால் அது ராவணனிருக்கின்ற இடத்தினின்றுமே வீசக் கூடியதென்று ஊகிக்கத் தக்கதாய் இருந்தது. அந் நறுமணம் ராவணன் இதோ இருக்கிறன்; இங்குவா' என்று அனுமானை அழைப்பதுபோலிருந்தது. அப்பால் அனுமான் ராவணனது இருப்பிடத்திற்குப் புறப்பட்டனன். அதில் ரத்தின மய மான படிக்கட்டுகளும், பொற்சாளரங்களும் ஆங்காங்கு விளக்கமுற்றிருந்தன. தரைகள் ஸ்படிக ரத்தினங்களால் இழைக்கப்பட்டிருந்தன. அதிலுள்ள கம்பங்கள் முத்துக் களாலும் பவழங்களாலும் பொன்னாலும் வெள்ளியாலும் ரத்தினங்களாலும் செய்யப்பட்டு வெகு ரமணீயமாய் விளங் கின. அதில் சமுத்திரங்கள், நதிகள், பர்வதங்கள், வனங் கள் முதலிய பூமியின் அடையாளங்களால் சித்திரிக்கப்பட்ட பெரிய ரத்தினக் கம்பளம் தரையில் விரிக்கப்பட்டிருந்தது. அத் திவ்விய விமானம் பல வர்ணங்களமைந்து வசிஷ்டரது காமதேனுவைப்போல் விரும்பினவற்றையெல்லாம் கொடுக்க வல்லதும் மிகுதியும் காந்தி விளங்கப்பெற்றுக் காண்போர் மனதுக்கு மிகவும் ஆனந்தம் விளைப்பதும் துக்கங்களையெல் லாம் போக்குவதுமாகி லக்ஷ்மிக்குப் பிறப்பிடம்போல் பிர காசித்துக்கொண்டிருந்தது. ராவணனால் பாதுகாக்கப்பட்ட அவ்விமானம் இளங்தென்றலும், கண்களுக்கினிய உருவங் களும், செவிக்கினிய மதுர கானங்களும், மிகுந்த ருசியுள்ள பக்ஷணங்களும், சிறந்த வாசனைப் பொருள்களும் நிறையப் பெற்றிருக்கையால் உட்புகுபவருடைய பஞ்சேந்திரியங்களுக் கும் மிகுதியும் திருப்தியை விளைவிப்பதாயிருந்தது.

அநுமான் ராவணனது இச் சிறந்த மாளிகையின் மேன்மையைக் கண்டு வியப்புற்று "இது இந்திரன் வசிக்கின்ற அமராவதியோ? அல்லது பிரமலோகமோ?" என்று நினைத்தனன். அவ்வழகிய மாளிகையில் சுவர்ணமயமான தீபங்களின் ஒளியும், ராவணனுடைய காந்தியும், ஆபரணங்களின் பிரகாசமும் வியாபித்திருக்கையால் 'இம்மாளிகை எரிகின்றதோ' என்று அநுமான் சங்கித்தனன். அப்பால் அநுமான் சிறந்த வஸ்திரங்களையும் பூமாலைகளையும் தரித்த பலவாயிரம் சிறந்த மாதர்கள் மன்மத கேளீவிலாசங்களிலீடுபட்டு இளைப்புற்று மதுபான மயக்கத்தினால் மெய்மறந்து நித்திரை செய்வதைக் கண்டனன். அங்ஙனம் அந்த ஸ்திரீ ரத்தினங்களோடு கூடி நிர்மலமாய் விளங்குகின்ற அந்த ராவணனது மாளிகை நக்ஷத்திரங்களோடு கூடிச் சரத்காலத்தில் நிர்மலமாய் விளங்குகின்ற ஆகாயம்போல் விளங்கியது. அம் மடந்தையரால் சுற்றிலும் சூழப்பட்ட ராவணன் நக்ஷத்திரங்களால் சூழப்பட்ட சந்திரனைப்போல் பிரகாசித்தனன்.

அம் மடந்தையர்மணிகள் மதுபான மயக்கத்தினால் தாறுமாறாய்ப் புரண்டு உறங்குகையால் அவர்களில் சிலருக்கு நெற்றிப் பொட்டுகள் கலைந்திருந்தன. சிலருக்குச் சிலம்புகள் ஒதுங்கி இருந்தன. சிலருக்கு ஹாரங்கள் நழுவியும், முத்துமாலைகள் அறுந்தும், சேலைகள் அவிழ்ந்தும் கிடந்தமையால் அவர்கள் இளைப்புத் தீரும்பொருட்டுச் சேணத்தை அவிழ்த்துப் புரளவிட்ட பெண் குதிரைகள்போல் காணப்பட்டனர்.

சில மடந்தையர்களின் கொங்கைமேலிருக்கின்ற ஹாரங்கள் சந்திர சூரியர்களின் கிரணம்போல் வெளுத்துப் பருத்திருக்கையால் ஸ்திரீகளின் முலைத்தடங்களில் படுத்துறங்கும் ஹம்சங்களோவென்னும்படி விளங்கின. சில பெண்

களின் மிருதுவான அவயவங்களிலும், கொங்கை முனைகளி லும் தரித்திருந்த அழகிய ஆபரணங்களின் வரிசைகள் அவர் மேல் காதலுற்று அவர்களை யணைந்திருக்கும் காமுகர்களைப் போல் விளங்கின. அப்பொழுது அந்த ராவணனது மனைவி களிற் சிலர் மதுபான மயக்கத்தினால், ராவணனுடைய முக மென்று பிரமித்துத் தமது சக்களத்திகளின் முகங்களை அடிக்கடி முத்தமிட்டனர். மற்றுஞ் சில மடந்தையர் தமது புஜங்களையும் அழகிய ஆடைகளையும் தலையணையாகவைத்துப் படுத்திருந்தனர். ஒருத்தியின் மார்பில் மற்றொருத்தியும், ஒருத்தியின் மடியில் மற்றொருத்தியும் தலைசாய்த்துக்கொண்டு நித்திரை செய்தனர். மற்றுஞ் சில மடந்தையர் ஒருவர்க் கொருவர் துடைகளையும் பக்கங்களையும் இடையின் முன் புறத்தையும் நிதம்பத்தையும் தலையணையாக வைத்துக் கொண்டு ஒருவர்மேலொருவர் கைகால் முதலிய அவயவங் களைப்போட்டு மதுபான மயக்கத்தினால் மயங்கி உறங்கிக் கொண்டிருந்தனர். அந்தப் பெண்மணிகளின் கூட்டம் கயிற்றால் ஒருவரோடொருவர் கட்டப்பட்டதுபோல் புஜங் களால் ஒருவரையொருவர் பின்னிக்கொண்டு வண்டுகள் போன்ற தலைமயிர் விளங்கப்பெற்றுப் படுத்திருக்கும் பொழுது, நாரில் கோக்கப்பட்டு மதித்த வண்டுகளால் சூழப் பட்டு விளங்கும் பூமாலைபோல் பிரகாசித்துக்கொண்டிருந்தது.

ராஜரிஷிகளின் ஸ்திரீகளும், பிதிர்தேவதைகளின் பெண்டிர்களும், தைத்தியர்களின் வனிதைகளும், கந்தருவ ரது சுந்தரிகளும், ராக்ஷச கன்னிகைகளும் ஆகிய எல்லோ ரும் அந்த ராவணனைத் தாமே விரும்பி வந்திருந்தனர். சிலரை ராவணன் தானே ஆசைப்பட்டுப் பிடித்துக்கொண்டு வைத் திருந்தனன். யௌவனமதம் நிறைந்த சில மடந்தையர் மன்மத பாதை பொறுக்க முடியாமல் தாமே ராவணனைக் கைப்பற்றினர். அநேகமாய் அங்குள்ள எல்லா ஸ்திரீகளும்

ராவணனது சௌந்தரியம் முதலியவற்றைக் கண்டு மோகித்து வந்தவர்களேயன்றி ராவணனால் பலாத்காரஞ் செய்து கொண்டுவரப்பட்டவரல்லர். ஒவ்வொருத்தியும் ராவணனைத் தவிர மற்றெவனையும் விரும்பினவளல்லள். ராவணன் கைப் பற்றுவதற்கு முன்னம் மற்றொருவனை மணம்புரிந்தவள் ஒருத்தியும் அங்கு அகப்படாள்.

அப்பொழுது அநுமான் 'ராவணனுடைய இந்த மனைவிமார்கள் எப்படித் தம் கணவனுடன்கூடி சமஸ்த போகங்களையும் அனுபவிக்கிறார்களோ, அப்படியே சீதையும் ராமனோடு கூடி சுகங்களை அனுபவிக்கும்படி ராவணன் அவளை ராமனுக்குத் திருப்பிக்கொடுப்பானாயின், இவன் பிறப்புப் புகழத்தக்கதாய் இருக்கும்' என்கிற எண்ணம் கொண்டனன்.

ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பத்தாவது ஸர்க்கம்.

### அனுமான் மந்தோதரியைப்பார்த்து சீதையென்று பிரமித்தல்.

அநுமான் அங்கு நாற்புறத்திலும் உற்றுப்பார்த்துக் கொண்டிருந்து தேவேந்திரனது படுக்கையைப்போல் விளங்கி ஸ்படிக ரத்தினங்களால் நிருமிக்கப்பட்ட ராவணனது மேலான மஞ்சத்தைக் கண்டனன். அது ஓரங்களில் தந்த மயமாகவும், அப்புறம் கொஞ்சதூரம் பொன்மயமாகவும், மற்றை இடங்களிலெல்லாம் வைடூரிய மணிகளால் நிருமிக்கப்பட்டுமிருந்தது. அம் மஞ்சமானது பொன்னாற் செய்யப்பட்ட சூரியன்போல் தகதகவென்று விளக்குமுற்றிருந்தது. அதைச் சுற்றிலும் அசோக புஷ்பங்களால் தொடுத்த மாலைகள் கட்டப்பட்டிருந்தன. சாமரங்கள் தரித்த மடந்தையர் அதைச் சுற்றிலும் வீசிக்கொண்டிருந்

தனர். சுகமான பலவகை வாசனைகள் வீசிக்கொண்டிருந்தன. அம் மஞ்சத்தின்மேல் சிறந்த படுக்கைகள் பரப்பப்பட்டிருந்தன. அனுமான் அவ்வழகிய மஞ்சத்தின்மேல் ராவணன் இரவில் நானுவித மன்மத கிரீடைகளை நடத்திப் பலவித மதுபானங்களைப் பருகி ஓய்ந்து உறங்கிக்கொண்டிருக்கக் கண்டனன்.

ராவணன் ஒளியுள்ள குண்டலங்களையணிந்து, பொன் சரிகை வஸ்திரங்களைத் தரித்து, கமகமவென்று மணங் கமழப்பெற்ற செஞ்சந்தனத்தை மேனியில் பூசிக்கொண்டு சிவந்த மேகம்போல் புலப்பட்டனன். பின்னுமவன் சிறந்த ஒளியுடைய ஆபரணங்களையணிந்து சர்ப்பம்போல் பெருமூச்சுவிட்டுக்கொண்டே நித்திரையிலாழ்ந்திருந்தனன். அவனருகில் சென்ற அனுமான் 'இவன் சீதையை யபகரித்த பாபிஷ்டனல்லவா!'' என்று நினைத்து அப்புறம் சென்று ஓர் திண்ணையிலுட்கார்ந்து உறங்குகின்ற அந்த தசக்கிரீவனைக் கண்டனன். அப்படுக்கையில் சாய்ந்துகிடக்கிற ராவணனது புஜங்களில் முன்பு இந்திரனுடன் போராடும்பொழுது அவனது ஐராவதத்தின் தந்தங்கள் பொருந்துகொள்கையாலுண்டான இரணக் காய்ப்புகள் விளங்கிக்கொண்டிருந்தன. பருத்த அவனது தோள்கள் இந்திரனுடைய வஜ்ஜிராயுதத்தின் அடிகள் திகழப்பெற்றிருந்தன. விஷ்ணுதேவனுடைய சக்கராயுதத்தின் அறுப்புகளும் அவற்றில் அழகாகத் தோன்றிக்கொண்டிருந்தன.

இங்ஙனம் வெளுத்த படுக்கையில் படுத்து அகன்ற கங்கையின் வெள்ளத்தின் நடுவில் தூங்கிக்கொண்டிருக்கிற யானையைப்போல் உறங்கிக்கொண்டிருக்கும் ராவணனைக்கண்ட அனுமான் பின்னும் அவனது காற்கடையில் உறங்கிக் கொண்டிருந்த அவனது மனைவிமார்களையும் கண்டனன். சந்திரனைப்போன்று அழகுடைய அம் மடந்தையர் மணி

களின் முகங்கள் அழகிய குண்டலங்களமையப் பெற்று ரம ணீயமாய் விளங்குகையால் அவ்விமானம் நக்ஷத்திரக் கூட் டங்களோடு கூடின ஆகாயம்போல் விளங்கியது.

அவர்களில் சிறந்த அழகுடைய ஓர் பெண்மணி நடனத் தில் திறமையுடையவளாகையால் அந்த நினைவினுல் தூக்கத் திலும் மிருதுவான அபிநயங்களால் அழகான அவயவங்கள் அசையப்பெற்று நித்திரை செய்தனள். ஒருத்தி வீணையை யணைத்தவண்ணம் தூங்கிக்கொண்டிருந்தனள். சுந்தரமான ஸமஸ்த அவயவங்களும் திரண்டுருண்ட கொங்கைகளும் அமைந்த ஓர் பெண்மணி வெகுகாலமாகப் பிரிந்திருந்த தன் காதலனை மீளவுமடைந்து ஆசைதீர அழுந்த அணைத்துக் கொள்வதுபோல் தப்பட்டையைத் தழுவிப் படுத்திருந்தனள். தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ஓர் அணங்கு ஏகாந் தத்தில் தனது ஆசைநாயகனை அவாவற அழுந்தக் கட்டி யணைக்கும் காமுகிபோல் புல்லாங்குழலையணைத்து உறங்கிக் கொண்டிருந்தனள். நுண்ணிய இடையையுடையவளும் தோஷங்களொன்றுமின்றி அழகாயிருப்பவளுமாகிய ஓர் மாது மதுபான மயக்கங்கொண்டு வாத்தியம் வாசித்தமை யால் இளைப்புற்றுப் பணவமென்னும் வாத்தியத்தையணைத்த வண்ணம் துயில்கொண்டிருந்தனள். இன்னும் பல மதிமுக மடந்தையர் பற்பல வாத்தியக் கருவிகளை யணைத்துக் கொண்டே உறங்கினர்.

ஓர் மடந்தை பொற்கலசங்கள்போன்ற கொங்கைக ளிரண்டையும் கைகளால் பிடித்துக்கொண்டு மதத்தினுல் மெய்மறந்து அழகான பின்புறமுடைய மற்றொரு மடந் தையை ஆலிங்கனஞ் செய்துகொண்டே உறங்கினள். அம் மடந்தையர்களிடையில் ஏகாந்தத்திலிடப்பட்ட ஓர் மேலான படுக்கையில் படுத்து சௌந்தரியத்தின் மிகுதியால் திகழ்

கின்ற மந்தோதரி (ராவணனது பட்டமகிஷி)யை அநுமான் கண்டனன். அப்பெண்மணி மிகுந்த விலையுயர்ந்த ரத்நாபரணங்களையணிந்து பொன்போன்றழகிய தன் சரீரகாந்தியால் அம் மாளிகை முழுவதையும் அலங்கரிப்பவள்போல் புலப்பட்டனள். அவள் ராவணனுக்கு மிகுதியும் அன்பிற்கிடமானவள்; அவ் வந்தப்புரம் அனைத்திற்கும் தலைவியாய் இருப்பவள். அநுமான் அவளது அபூர்வ ஸௌந்தரியத்தையும் யௌவனப்பெருக்கையும் கண்டமாத்திரத்தில் தீர யோசியாமல் அவளை சீதையென்று ஊகித்தனன். இதனால் அவ் வாயுமைந்தன் மிகுந்த சந்தோஷமடைந்து அதை அடக்க முடியாமல் தோள்களைத் தட்டி வாலை முத்தமிட்டு இங்குமங்கும் உலாவினன். அங்குள்ள தூண்களின்மேல் ஏறி மீண்டும் தரையில் குதித்துத் தனது சுபாவத்தை வெளிக்காட்டிக்கொண்டு குரங்குச் சேஷ்டைகளையெல்லாஞ் செய்தனன்.

பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினோராவது ஸர்க்கம்

## அநுமான் மீளவும் அந்தப்புரத்தில் சீதையைத் தேடுதல்.

அநுமான் மந்தோதரியை மீண்டும் ஒருதரம் நன்கு உற்றுப் பார்த்தவுடன் அவள் சீதையல்லவென்று அவனுக்கு நிச்சயமாகத் தெரிந்தது. அவன் "ஆ! என்னே! என் மதி மயக்கம்! பதிவிரதையான சீதை ராமனைப் பிரிந்து நல்ல ஆடை யாபரணங்களையணிந்து, போஜனம் செய்து, மதுபான மேலிட்டால் இங்ஙனம் சுகமாக நித்திரை செய்வாளோ? ராமனைக்காட்டிலும் மற்றொருவனைத் தேவேந்திரனேயாயினும் கைப்பற்ற மாட்டாளே. ஆகையாலிவள் சீதை

யன்று, வேறெவளோ ஒருத்தி" என்று நிச்சயித்து அங்கிருந்து பானசாலைக்குச் சென்று திரிந்தனன்.

அங்குப் பலவாயிரக்கணக்கான அழகிய ஸ்திரீகள் துயில் கொண்டிருந்தனர். அவர்களில் சிலர் நர்த்தனம் செய்ததாலும், சிலர் பாட்டுகள் பாடியதாலும், மற்றுஞ் சிலர் வீணை முதலிய வாத்தியங்கள் வாசித்ததாலும், பின்னுஞ்சிலர் மதுபான மயக்கத்தினாலும் இளைப்புற்றுத் தூங்கிக் கொண்டிருந்தனர். அப்பெண்மணிகளின் நடுவில் ராவணன், பெரிய தொழுவத்தில் ஆநிரையினிடையிலிருக்கின்ற காளைபோல் பிரகாசித்தனன்.

அனுமான் பான சாலையில் பற்பல மிருகங்களின் மாமிசங்களையும், அகன்ற பொன் பாத்திரங்களில் தயிரும் ஸௌவர்ச்சல மென்னும் உப்புஞ் சேர்த்து மணமிட்டுவைத்திருக்கின்ற பன்றிமாமிசங்களையும், ஆடு, மான் இவற்றின் மாமிசங்களையும் கண்டனன். இன்னும் தேன்முதலியவற்றையும் பல வகைப் பானங்களையும் கண்டனன். அப்பான பூமியில் ஆங்காங்கு கெட்டியான பசும் பொன்னால் செய்யப்பட்ட ஆஸனங்களும் படுக்கைகளும் பளபளவென்று மெருகிடப் பெற்று இருக்கையால் அப்பிரதேசம் நெருப்பில்லாமலே பற்றிக்கொண்டு எரிவதுபோல் புலப்பட்டது. இங்ஙனம் நானாவித பசனம் செய்யப்பட்ட மாமிசங்களும், பானங்களும், பக்ஷணங்களும் நிறைந்த அப் பான சாலையை அனுமான் கண்டனன். அங்கு இடப்பட்டிருந்த தூபங்களினுடையவும், துயிலும் மாதரசிகளின் கொங்கைகளில் பூசப்பட்டிருந்த குங்குமக் குழம்பு செஞ்சந்தனம் இவற்றினுடையவும் வாசனையானது கமகமவென்று அந்தப் புஷ்பகவிமானம் முழுமையும் வியாபித்திருந்தது. அனுமான் சிறிதும் விடாமல் ராவணனது அந்தப்புரம் முழுவதும் சுற்றிப்பார்த்தனன். ஆனால் எவ்வளவு தேடியும் சீதையைக் காணாததால் வருந்தினன்.

அனுமான் தான் பிறரால் கைப்பற்றப்பட்ட அன்னிய ஸ்திரிகள் இரவில் மெய்மறந்து அலங்கோலமாய்க் கிடந்துறங்கும் போது கண்டதைப்பற்றி மிகவும் வருந்தி அதனுல் தனக்குப் பாபம் நேருமோ வென்று சிந்தித்தனன். ஆபினும் அவன் ஜிதேந்திரியன் (இந்திரியங்களை வென்றவன்) ஆதலால் அவர்களை ஏகாந்தமான இடத்தில் கண்டும் அவனுக்குச் சிறிதும் மன்மத விகாரம் உண்டாகவில்லை. இதனுல் தனக்கு தோஷம் சம்பவிக்காதென்று உறுதி கொண்டனன். மேலும் தான் சீதையைத் தேடவேண்டியதன் நிமித்தமாக அங்ஙனம் அவ்வழகிய ஸ்திரீகளைக்காண நேர்ந்ததனுலும், தான் பரிசுத்தமான இருதயத்துடன் இருப்பதாலும் தனக்கு அவர்களைக் கண்டதாலுண்டாகும் தோஷம் சம்பவியாதென்று எண்ணினன். இங்ஙனம் எவ்வளவுதூரம் சென்று தேடினும் சீதையைக் காணுமையால் அப் பான பூமியைவிட்டு மீண்டும் ராவணனது அந்தப்புரத்தில் தேட முயன்றனன்.

பதினேராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பன்னிரண்டு & பதின்மூன்றுவது ஸர்க்கம்

அனுமான் மீளவும் அந்தப்புரத்தில் சீதையைத் தேடுதலும், பிறகு அசோக வனத்தில் தேடத்தொடங்கி தேவதா நமஸ்காரஞ் செய்தலும்.

அனுமான் மீண்டும் ராவணனது அந்தப்புரமெங்கும் தேடியும் சீதையைக் காணப்பெருமையால் தனக்குள் "ஆ! நான் எவ்வளவுதேடியும் சீதையைக் காணப்பெறவில்லையே! ஒருகால் அவள் மரணமடைந்திருப்பாளோ! அவள் சிறந்த பதிவிரதையாகையால் தன்னை ராவணன் நிர்ப்பந்தப் படுத்திய போது அவன் கருத்துக்குட்படாமல் இருந்திருப்பாள். துர்ப்புத்தியுள்ள ராவணன் பாபமென்று நினையாமல் அவளைப்

பிடித்துக் கொன்றிருப்பான். ஒருகால் சீதை மிகவும் பயங்கர மான கொடிய ராக்ஷச ஸ்திரீகளைக் கண்டு பயந்து பிராணனை விட்டிருக்கக்கூடும். சீதையைக் காணுமல், பகைவன்மேல் பராக்கிரமத்தையும் நிறைவேற்றுமல் வானரர்களும் நானும் திரிந்து வெகுகாலத்தைக் கடத்திவிட்டோமாகையால் இப் பொழுது சுக்கிரீவனிடஞ்செல்ல எனக்கு மனமில்லை. அப் படிச்செல்லின், அவன் ஆணைப்படி என் உயிரை வாங்கிவிடு வான்.

ஆ! எனது பிரயாசைகளெல்லாம் வீணுகிவிடும்போல் இருக்கிறதே! நான் சீதையைக் காணுமல் சென்று அங்கதன் முதலியோருக்கு என்னவென்று கூறுவேன்? அங்குச் செல்லாமலே இங்குத் தங்கியிருப்பின் நான் வரவேண்டிய காலம் வரையில் காத்திருந்து, அக்காலம் கடக்கையில் அவர் கள் எப்படியாயினும் உயிரை விட்டு விடுவார்கள். உத்ஸா கத்தினுல் எவர்க்கும் காரியம் கைகூடுகின்றதாகையால் நான் அதைக் கடைப்பிடித்து சீதையை மீண்டும் ஒருதரம் லங்கை முழுதும் தேடுவேனுக. பர்ணசாலை, புஷ்ப கிருகம், சித்திர சாலை, கிரீடா கிருகம் (விளையாடும் மாளிகை) தோட்டங்கள், வீதிகள், விமானங்கள் முதலிய எல்லாவிடங்களிலும் சென்று மீண்டு மொருதரம் தேடப் போகிறேன்'' என்று ஆலோ சித்து அவ்வண்ணமே சென்று தேடினன். அப்பொழுதும் சீதையைக் கண்டானில்லை.

ஆகையால் அவ் வாயுமைந்தன் மிகுந்த வருத்தமுற்று தனக்குள் "என்ன ஆச்சரியம்! லங்கை முழுதும் ஒரு மயி ரிழை யிடமும் தவருமல் தேடிப்பார்த்தும் சீதை அகப்பட வில் லேயே! சிறந்தகுலத்தில் அயோநிஜையாய்ப் பிறந்தசீதையை ராவணன் வேகமாக எடுத்துக்கொண்டு வரும்பொழுது ராம பாணங்களை நினைத்துப் பயப்பட்டு விலவிலத்துப் போகையில் கைகள் தழதழத்துத் தவறி சீதை கீழே ஒருகால் விழுந்து

விட்டனளோ? அப்படி யில்லையாயின் அக் கொடியோன் ஆகாயமார்க்கத்தில் சீதையைக் கொண்டு போகையில், அவள் சமுத்திரத்தைக் கண்டு மனம் தத்தளிக்கப்பெற்று, திடம் தப்பி அதில் வீழ்ந்திருப்பாளென்று எனக்குத் தோன்றுகிறது. அன்றி ராவணன் தன் கருத்துக்கிசையாத சீதையை ஒருகால் தின்று விட்டிருப்பான். அப்படியில்லையாயின் ராவணனது மனைவிகள் சீதையைக்கண்டு சக்களத்திக் காய்ச்சலினால் கொடிய மனமுடையவராகி அந்த சீதையைப் பிடித்துத் தின்றுவிட்டிருப்பார்கள். அன்றி கொடிபோன்ற சீதை ராமனைவிட்டுப் பிரிந்திருக்கும் வேதனையைப் பொறுக்க முடியாமல் தானே பிராணனைத் துறந்தனளோ? ஒருகால் சீதையை ராவணன் பூமியின் கீழ் நிருமாணிக்கப்பட்ட மாளிகைகளி லொன்றில் சிறை வைத்திருப்பானோ? ஐயோ! 'சீதை அகப்படவில்லை' யென்று சொன்னால் ராமன் உடனே உயிரை விட்டுவிடுவானே! அதனால் எனக்கு தோஷம் சம்பவிக்குமே! சொல்லாதிருப்பேனாயின் எஜமானனை வஞ்சிப்பதாலுண்டான பாபம் சம்பவிக்குமே! இந்த சங்கடத்திற்கென்ன செய்வது? 'சீதை அகப்படவில்லை' யென்ற சொல்லைக்கேட்டதும் ராமன் இறப்பது நிச்சயம். இதைக்காணும் லக்ஷ்மணன் ராமனிடம் மிகுந்த பிரீதியுடையவனாகையால் தானும் உயிரைவிட்டுவிடுவான். இதைக்கேள்வியுற்றதும் பரதன் மரணமடைவது நிச்சயம். பிறகு சத்துருக்கனனும் உயிரை விடுவான். இங்ஙனம் புதல்வர்களிறந்ததைக்கண்டு தாய்மார்களான கோசலை, சுமித்திரை, கைகேயி ஆகிய இவர்களும் பிராணன்களை விடுவார்கள்.

தவிர, ராமன் மரணமடைந்தவுடன், சுக்கிரீவன் அவனிடமுள்ள நன்றியறிவால் அவன் தனக்குச் செய்த உபகாரத்தை நினைத்து பதிலுக்குத் தான் செய்த பிரதிக்கினை பொய்யானதுபற்றிப் பரிதபித்து உயிரை விட்டுவிடுவான்.

உடனே ருமை, தாரை, அங்கதன் முதலியோர் மாள்வது நிச்சயம். பிறகு சமஸ்த வானரர்களும் இவற்றைக் கண்டு மனம் தாங்கப் பெருமல் முட்டிகளாலும் உள்ளங்கைகளாலும் தலைகளிலடித்துக்கொண்டு மரணமடைவார்கள். இதனால் பிறகு உலகில் வானரப் பூண்டேயில்லாமல் போய்விடும்.

ஐயோ! நான் சீதையைக் காணுமல் ராமனிடம் செல்வேனுயின் இப்படிப்பட்ட அனர்த்தங்கள் உண்டாவது நிச்சயமாகையால் நான் கிஷ்கிந்தைக்குச் செல்லவேமாட்டேன். கடைசிவரை சீதை அகப்படாவிடில் காய் கிழங்குகளைத் தின்றுகொண்டு சமுத்திர தீரத்தில் வசிக்கக்கடவேன். அப்படியில்லையாயின் சமுத்திரக் கரையில் சிதையை (கட்டைகளை) அடுக்கி எரிகின்ற நெருப்பில் குதித்து பிராணனை விட்டுவிடுகிறேன்.

தவிர, படுபாவியான ராவணனைக் கொல்லாமல் விடப்போவதில்லை. சீதை அகப்படாமற்போயினும் அவனையாவது அடித்துக்கொன்று, அவன் செய்த காரியத்திற்குப் பதில்செய்து அவன்மேல்ராமனுக்குள்ள பகையைத் தீர்த்துக் கொள்ளுகிறேன். அல்லது இந்த ராவணனை விலவிலக்கும்படி ஆகாசமார்க்கத்திலெடுத்துக்கொண்டுபோய் ராமனுக்குக் காணிக்கையாக சமர்ப்பிக்கிறேன்" என்று இவ்வாறெல்லாம் ஆலோசித்துக்கொண்டு சிந்தையிலாழ்ந்தனன்.

பிறகு திடீரென்று ஓர் அழகிய அரண்மனை உத்தியானவனத்தைக் கண்டு "ஓ! பெரிய மரங்களால் நிறையப்பெற்ற அவ் வசோகவனத்தை நான் இன்னும் சென்று காணவில்லையல்லவா? ஒருகால் என் அதிர்ஷ்ட வசத்தினல் ஜனகராஜன் திருமகளை நான் அங்குக் காணக்கூடும். ராம லக்ஷ்மணர்களுக்கும் சீதைக்கும் நமஸ்காரம். சிவன், இந்திரன், யமன், வாயுதேவன் ஆகிய இவர்களுக்கும் நமஸ்காரம். சந்திர

சூரியர்களுக்கும் தேவதைகளுக்கும் நமஸ்காரம்" என்று அந்தந்த தேவதைகளுக்கும் சுக்கிரீவனுக்கும் நமஸ்காரஞ் செய்து பிறகு அவ் வசோக வனத்தின் பயங்கரமான காவல்களையும், பந்தோபஸ்துக்களையும் கண்டு தனக்குள் "ஆ! இதைக் காக்கும்பொருட்டு ராவணன் ஏற்படுத்தின காவற்காரர்கள் இதிலுள்ள மரங்களை வெகு ஜாக்கிரதையுடன் பாதுகாத்து வருகின்றனர். எங்கும் தடையின்றிச் செல்ல வல்ல வாயுதேவனும் பயத்தினால் மரங்களை அதிகமாக அசைத்து வீசாமலிருக்கின்றனன். இப்படிப்பட்ட வனத்தில் ராம காரியத்தின்பொருட்டு நான் ராவணனது வேலையாட்களின் கண்களுக்கிலக்காகாமல் ஓர் சிறிய உருவத்துடன் நுழைவேனாக. எனக்குக் காரியசித்தி யுண்டாவதற்காக இதோ நான் தேவதைகளையும் ரிஷிகளையும், அக்கினி, வாயு, இந்திரன், வருணன், சந்திரன், சூரியன், அசுவினிதேவதைகள், சிவன் முதலியோர்களையும் விஷ்ணுதேவனையும் வணங்குகின்றேன்" என்று நினைத்து அங்ஙனமே சமஸ்த தேவதைகளுக்கும் நமஸ்காரஞ் செய்தனன்.

பதின்மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பதினான்காவது ஸர்க்கம்.

## அனுமான் அசோகவனத்தில் புகுந்து சிம்சுபா விருக்ஷத்தைக் காணுதல்.

பிறகு அனுமான் ராவணனது மாளிகையிலிருந்து மேலே எழும்பி, நாணினின்று விடப்பட்ட பாணம்போல் அதிவேகமாக மாந்தோப்புகள் சூழப்பெற்று அநேகமாயிரம் கொடிகள் நிறைந்த அவ் வசோக வனத்தில் பிரவேசித்தனன். அது நானாவிதப் பறவைகளும், மிருகக் கூட்டங்களும் நிறைந்திருக்கையால் விசித்திரமாகி மாந்தோப்பு செண்பகத்தோப்பு

முதலிய பலவகைத் தோப்புகளும் அமைந்து விடியற்காலத்து சூரியனைப்போல் பிரகாசித்துக்கொண்டிருந்தது. புஷ்பங்களும் பழங்களும் நிரம்பின பலவகை மரங்களும், குயில்களும், மயில்களும், வண்டுகளும் அதில் நிறைந்திருந்தன. சீதையைத் தேடும்பொருட்டு அனுமான் செடிகளையும் மரங்களையும் அசைத்துக்கொண்டே செல்கையில் அவற்றில் சுகமாக நித்திரை செய்துகொண்டிருந்த பக்ஷிகள் குவியல் குவியல்களாக மேலே கிளம்பின. அப்பொழுது அவற்றின் சிறகுகளாலடிக்கப்பட்டு நானாவிதமான வர்ணங்களையுடைய புஷ்பங்கள் கீழே உதிர்ந்தன. இங்ஙனம் அவ் வானரனால் அசைக்கப்பட்ட அம் மரங்களெல்லாம் காற்றால் அசைக்கப்பட்டவை போல் பக்ஷிகள் ஓடப்பெற்றுப் புஷ்பம், இலை, காய், பழம் முதலியவை ஒன்றுமில்லாமல் அடிமரம் மாத்திரமேயிருந்து உபயோகமற்றவைகளாயின. அனுமான் தனது வலிமையினால் அவ் வனத்திலுள்ள பெருங் கொடிகளின் கூட்டங்களையழித்தனன். அனுமான் அவ் வனத்தில் திரிந்துகொண்டு மனோகரமான வெள்ளி பூமிகளையும், பொன் பூமிகளையும் சிறந்த ரத்தினங்களிழைக்கப்பட்ட படிக்கட்டுகளமைந்த அழகிய நடைவாவிகளையும், முத்துக்களாலும் பவழங்களாலும் ஏற்பட்டிருந்த மணற்குன்றுகளையும் கண்டு வியப்புற்றனன்.

இன்னும் அங்குத் தாமரை வனங்களும், நெய்தல் வனங்களும் மிகுதியும் மலர்ந்திருந்தன. அவற்றின் கரைகளில் பொன்வர்ணமுடைய நானாவிதமான மரங்கள் மிகுதியும் அழகை விளைத்தன. அவற்றில் சக்கரவாகங்களும் நீர்க்கோழிகளும் ஹம்சங்களும், சாரசப் பறவைகளும் இனிமையாகக் கூவிக்கொண்டிருந்தன, அவற்றைச் சுற்றிலும் தெளிந்த ஜலமுடைய வாய்க்கால்களும், சிறந்த கற்பகக் கொடிகளும், புதர்களும் விளங்கின. பிறகு அவ் வானரன்

கல் வீடுகளால் நிறைந்த ஓர் அழகிய மண் மலையையும் அதினின்றும் ரமணீயமாய்ப் பெருகி வரும் ஓர் நதியையும் கண்டனன். அம் மலையினருகில் நானாவித பட்சிகள் நிறைந்த தாமரைத் தடாகங்களையும் மற்றும் ஓர் அழகிய நடை வாவியையும் அனுமான் கண்டனன். குளிர்ந்த ஜலம் நிறைந்த அவ் வாவியின் படிகள் உயர்ந்த ரத்தினங்களா லிழைக்கப்பட்டிருந்தன. விசுவகருமாவினால் நிருமிக்கப்பட்டு மிகுதியும் பெரியனவாகிய மாடமாளிகைகளாலும் அழகிய வனங்களாலும் அது நாற்புறத்திலும் அலங்கரிக்கப்பட்டிருந் தது. அனுமான் அங்கு பல கொடிகளும் ஏராளமான இலை களும் நிறைந்து நாற்புறத்திலும் பொன்மயமான திண்ணை கள் அமைந்து விளங்குகிற ஓர் சிம்சுபா விருக்ஷத்தைக் கண் டனன்.

பின்னும் அவ் வானரன் அங்கு அழகிய பொன் மரங் களையுங் கண்டு ஆச்சரியமுற்றனன். அவன் அச் சிம்சுபா விருக்ஷத்தின் மேலேறித் தனக்குள் 'ராமனைப் பிரிந்திருக் கும் சீதை மனக்களிப்பற்றிருப்பாளாகையால் சற்று மன அமைதி ஏற்படும் பொருட்டு ரமணீயமான இத் தாமரை யோடைக்குத் தவறாமல் வருவாள். இங்குள்ள அழகிய பொருள்களைக் கண்டு அதனால் தனது தாபத்தை ஒருவாறு நீக்கிக்கொள்ளும்பொருட்டு இங்கு வருவாள். அப்பொழுது நான் அவளைக் காணலாகும்' என்று ஆலோசித்து அம் மரத் தின் இலை மறைவில் மறைந்திருந்து அங்குள்ள விசேஷங் களை யெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தனன்.

**பதினைந்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

## பதினைந்து & பதினாறாவது ஸர்க்கம்.

### அனுமான் சீதையைக் காணுதலும் அவளது துர்த்தசையைக்கண்டு புலம்புதலும்.

அவ் வனத்தில் பற்பல சுரபுன்னை மரங்களும், எழிலைப் பாலைமரங்களும், செண்பகமரங்களும், நறுவிலிமரங்களும் நாற்புறத்திலும் நிரம்பவும் புஷ்பித்து மிகுதியும் பிரகாசித்துக்கொண்டிருந்தன. அவற்றிலுள்ள சில அசோகமரங்கள் பொன்வர்ணமுடையவைகளும், சில அக்கினிஜ்வாலைபோல் பிரகாசிப்பவைகளும், சில நீலரத்தினம் போன்றவைகளுமாகி இங்ஙனம் அநேகமாயிரம் பிரகாசித்துக்கொண்டிருந்தன.

அவ்வழகிய வனம் இந்திரனது நந்தவனத்தைவிட உயர்ந்ததாய்க் குபேரனது சைத்திரரதமென்னும் உத்தியானம்போல் விசித்திரமும் ரமணீயமுமாய் எல்லாவிடத்திலும் காந்தியமைந்து விளக்கமுற்றது. அவ்விடத்திற்குக் கொஞ்சம் அருகாமையில் மிகுதியும் உயர்ந்திருப்பதும், பௌத்தாலயம்போல் நிருமிக்கப்பட்டதுமான ஓர் மாடமாளிகையை அனுமான் கண்டனன்.

பிறகு அனுமான் அவ்வனத்தில் அழுக்கான வஸ்திரந் தரித்துச் சுற்றிலும் ராக்ஷச ஸ்திரீகள் சூழ்ந்து காத்துக் கொண்டிருக்க, உபவாசத்தினால் (பட்டினியாய் இருக்கை) இளைத்துத் தளர்ந்து அடிக்கடி பெருமூச்செறிந்துகொண்டு ஒளியிழந்த முகத்துடனிருக்கும் ஓர் பெண்மணியைக் கண்டனன். அவள் மிகவும் உருவம் மாறியிருக்கையால், வருந்தி அறியக்கூடியவளாயிருந்தனள். அவள் அழகிய சரீர காந்தியுடையவளாயினும் அழுக்கு வஸ்திரம் தரித்திருந்தமையால் புகை மூடின நெருப்பைப்போல் பிரகாசித்தனள். அவள் விலையுயர்ந்த ஒரே வஸ்திரத்தையணிந்து அழுக்குடன்கூடி அலங்காரமின்றித் தாமரையில்லாத ஓடையைப் போல் ராமனைப்பிரிந்து வருந்திக்கொண்டிருந்தனள்.

பின்னுமவள் கண்ணீர் நிறைந்த முகமுடையவளாகி மனக்களிப்பின்றி ஆகாரமில்லாமையால் இளைத்து எப்பொழுதும் சோகத்திலாழ்ந்து துக்கமே கதியாயிருந்தனள். மிகவும் கொடிய ராக்ஷச ஸ்திரீகளால் சூழப்பட்ட அப்பெண்மணி நாய்க்கூட்டங்களால் சூழப்பட்ட மான்பேடு (பெண் மான்) போல் வருத்தமுற்றிருந்தனள். அம் மாதரசி, கறுத்த சர்ப்பம்போல் பிரகாசிப்பதும் இடையின் பின்புறம் வரையில் தொங்குவதுமாகிய ஒரே தலைப்பின்னலுடன்கூடிச் சரத்காலத்தில் கறுத்த வனக்கூட்டங்களோடு கூடின பூமி போல் திகழ்வுற்றிருந்தனள். அநுமான் அவ் வணங்கை நன்கு உற்றுப்பார்த்து யுக்திகள் அமைந்த காரணங்களால் 'இவளே சீதை'யென்று ஊகித்தனன்.

அம்மடந்தையர் மணி பூரணச்சந்திரன்போன்ற முகமும் அழகிய புருவங்களும் திரண்டுருண்ட அழகான கொங்கைகளும் அமைந்து, நிருமிகென்ற தலைமயிர்களும் கோவைப் பழம்போல் சிவந்த அதரமும், சிறந்து அழகான இடையும் நன்கமைந்த பாதங்களும் தாமரையிதழ்போன்ற கண்களும் விளங்கப்பெற்று மன்மதனுடைய ரதிதேவிபோல் விளக்கமுற்றிருந்தனள். அழகான மேனியுடன் தரைமேலுட்கார்ந்து, நியமங்களைக் கைப்பற்றின தாபஸிபோல் புலப்பட்டுக்கொண்டிருந்த அந்த சீதை மிகவும் நெடுமூச்செறிந்து கொண்டு சர்ப்ப ராஜ கன்னிகைபோல் பிரகாசித்துக்கொண்டிருந்தனள்.

இலக்கணப்படி அமையாத சொல்லின் பொருளை வருந்தி அறிவதுபோல், அநுமான் அலங்காரமில்லாமல் உபவாஸாதிகளால் உருவம் மாறியிருக்கிற சீதையை ராமன் சொன்ன அடையாளங்களைக்கொண்டு ஆலோசித்து மிக வருத்தப்பட்டு அறிந்தனன். அநுமான் புறப்படும்பொழுது ராமன் சீதையின் அங்கங்களில் எங்கெந்த ஆபரணங்கள்

இருப்பதாக மொழிந்தனனே, அவ்வாபரணங்களை யெல்லாம் சீதை பதிவிரதையாகையால் கணவனைப் பிரிந்த சமயத்தில் தரிக்கலாகாதென்று மரக்கிளைகளில் வைத்திருக்கக் கண்டனன்.

பிறகு அநுமான் தனக்குள் 'ஆ! இவ் வழகிய சீதையின் மனம் ராமனிடத்தில் மிகவும் நிலையுற்றிருக்கின்றது. அந்த் ராமனுடைய மனமும் இவளிடத்தில் நிலையுற்றிருக்கிறது. ஆனதுபற்றியே இவ்விருவரும் இதுவரை ஜீவித்திருக்கின்றனர். இப்படியில்லையாயின் ஒரு முகூர்த்த காலமாயினும் பிழைத்திருக்கமாட்டார்கள். ஆ! சீதை சுதந்திரமற்றவளாகையால் தேகத்தை விட வல்லளல்லள். ராமன் இவ் வழகிய பெண்மானை விட்டு இன்னும் பிழைத்திருக்கின்றனனே! இப்படிப்பட்ட பதிவிரதாமணியைப் பிரிந்த எவன்தான் பிராணனை விடாமலிருப்பான்? ராமன் மிகவும் கடினமான மனமுடையவன்போலும்!' என்று சிந்தித்தனன். அநுமான் இங்ஙனம் அழுக்கடைந்த வஸ்திரம் தரித்து உபவாஸம் (பட்டினியிருக்கை) முதலிய பதிவிரதா தர்மங்களோடு கூடின சீதையைக்கண்டு சந்தோஷமடைந்து மனதில் ராமனை நினைத்து உத்ஸாகமடைந்தனன்.

பிறகு அந்த வாயுசேயன் சீதையின் துர்த்தசையைக் கண்டு கண்களில் நீர் ததும்பப்பெற்று இங்ஙனம் புலம்பினன். "ஹா! இந்த சீதை பிராணன் நசிக்கும்படியான காலம் சம்பவிக்கினும் ஒரு பிரயத்தனமும் செய்யாமல் சிறிதும் கலக்கமடையாமல் வர்ஷாகாலம் வந்தபோதும் கலங்காத கங்கையைப்போல் பிரகாசிக்கின்றனளே! குணத்திலும், வயதிலும், நடவடிக்கைகளிலும், குலத்திலும் ஸாமுத்திரிகாலக்ஷணங்களிலும் (சரீர சுபலக்ஷணங்கள்) இவள் ராமனுக்குத் தகுந்திருக்கின்றனள்; இவளுக்கும் அவன் தகுந்திருக்கின்றனன். ஆனால் இவளுக்கு அவனைக்காட்டிலும் ஒரு

விசேஷம் உண்டு. இவள் கறுத்தழகிய கண்களையுடையவ ளாகையால் இவளுக்குக் கண்ணழகு விசேஷம்.

அழகிய இப்பெண்மானுக்காகவே ராமன் பலிஷ்டர்களான வாலி, கபந்தன், விராதன், பதினாலாயிரம் ராக்ஷசர்கள், கரன், திரிசிரஸ், தூஷணன் முதலியோரைக்கொன்றனன். இவள் நிமித்தமாகவே சுக்கிரீவன் வானர ராஜ்ஜியமாகிற ஐசுவரியத்தைப் பெற்றனன். இப்பெண்மணியைப் பற்றியே நானும் ஆயிரம் மைல் தூரமான சமுத்திரத்தைத் தாண்டி வந்தேன். இந்த சீதையின் பொருட்டு ராமன் சமஸ்த லோகங்களையும் தலைகீழாகச் செய்யினும் அது யுக்தமேயென்று எனக்குத் தோன்றுகிறது. மூன்று லோகங்களை யாளும் பாக்கியம் உயர்ந்ததா? சீதை உயர்ந்தவளா? என்று ஆலோசித்துப் பார்க்கின், மூவுலகாளும் பரிசு முழுவதும் சீதையின் பதினறில் ஒருபாகத்திற்கும் ஈடாகாது.

ஐயோ! இப்படிப்பட்ட மேன்மையுடைய சீதை ராக்ஷசஸ்திரீகளிடம் அகப்பட்டுக்கொண்டிருக்கின்றனளே! சுகத்திற்கே ஆளானவளும் துக்கமென்பது இன்னதென்று அறியாதவளுமான சீதை இத்தகைய கஷ்டங்களுக்கு ஆளாயினளே! இவள் அல்லும் பகலும் ராமனையே நினைத்துக் கொண்டு வருந்துகின்றபடியால் உடலிளைத்துப்போயினளே! பெண்களுக்குக் கணவனென்றால் ஆபரணத்தைக்காட்டிலும் மேலான பூஷணமாகும். ஆகையால் பூஷணம் (ஆபரணம்) தரிக்கத்தகுந்த இப்பெண்மணி, அப்படிப்பட்ட பூஷணமாகிய கணவனில்லாமையால் எள்ளளவும் பிரகாசியாதிருக்கின்றனள். ராமன் இப்படிப்பட்ட சீதையைப் பிரிந்ததற்கு பிராணனை விடவேண்டியிருக்க இன்னும் உயிருடன் இருக்கின்றனனே! இது மற்று எவனுக்கும் செய்யமுடியாது. ஐயோ! தாமரையிதழ் போன்ற கண்களையுடையவளும்

சுகத்தைமாத்திரமே அனுபவிக்கத்தகுந்தவளுமான ஸீதை வருந்துவதைக்கண்டால், இவளது துக்கத்திலாவது, சுகத்திலாவது சிறிதும் சம்பந்தமற்ற அன்னியனான என்னுடைய மனமும் வருந்துகின்றதே! இனி இவளுக்கு அன்பனும் பரம தயாளுவுமான ராமனுடைய மனம் வருந்துமென்பது சொல்லவேண்டுமோ? இப்படிப்பட்ட ஒப்புயர்வற்ற வடிவமுடைய ஸீதை சோகத்தினால் பீடிக்கப்பட்டு ஆண் சக்கரவாகத்தைப்பிரிந்த பெண் சக்கரவாகம்போல் கணவனது பிரிவை ஒருநொடிப்பொழுதும் பொறுக்கமுடியாமல் மிகுந்த துர்த்தசையை அடைந்தனளே!" என்று தனக்குள் புலம்பி அச்சிம்சுபாவிருக்ஷத்திலேயே உட்கார்ந்திருந்தனன்.

பதினாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினேழாவது ஸர்க்கம்.

### அனுமான் ஸீதையைக் காவல் புரிகின்ற ஏகாக்ஷி முதலிய ராக்ஷசிகளைக் கண்டுகொண்டு சிம்சுபா விருக்ஷத்தில் மறைந்திருத்தல்.

அப்பொழுது சந்திரன் அனுமானுக்குத் தன் நிலவைக் காட்டிக்கொண்டே ஆகாயத்தில் வெகு தூரஞ்சென்று அதன் பின்பாகத்தை யடைந்தனன். அனுமான் ஸீதையைப் பார்க்க விரும்பி அப் பெண்மணியின் சமீபத்திலிருக்கின்ற பயங்கர காட்சியையுடைய ராக்ஷச ஸ்திரீகளைக் கண்டனன். அவர்களில் ஒற்றைக்கண்ணுடையவளையும், ஒற்றைக்காதுடையவளையும் காதில்லாதவளையும், முளைபோன்ற காதுடையவளையும், தலைப்பக்கம் மூச்சு விடுகின்ற மூக்கையுடையவளையும், மிகுதியும் பெரிய தலையுடையவளையும், தலைமயிரே இல்லாதவளையும், காதும் நெற்றியும் தொங்கப்பெற்றவளையும், வயிறும் முலைகளும் தொங்கப்பெற்றவளையும், இன்னும் பற்பல உருவமுடையவர்களையும் அனுமான் கண்டனன்.

அவர்களில் சிலர் கறுப்புநிறமும், சிலர் கோரோசனை வர்ணமும் உடையவராய் இருந்தனர். மிகுந்த கோபமுடைய வர்களும் கலகத்தில் பிரீதியுடையவர்களுமான அவ்வரக்கி கள் இரும்பினால் செய்யப்பட்ட சூலம், கூடம் என்னும் ஆயுதம், தடி முதலிய ஆயுதங்களைத் தரித்துக்கொண்டிருந் தனர்.

அவர்களில் சிலர் பன்றி, மான், புலி, எருமை, ஆடு, நரி இவற்றின் முகம்போன்ற முகமுடையவர்; சிலர் யானை, ஒட்டகம், குதிரை இவற்றின் கால்போன்ற காலுடையவர்; சிலர் ஒற்றைக்கால் ஒற்றைக்கையுடையவர்; சிலர் கழுதை, குதிரை, பசு, யானை, குரங்கு இவற்றின் காதுபோன்ற காதுடையவர்; சிலர் விகாரமான மூக்கும், அகன்ற மூக்கும் உடையவர்; சிலர் மூக்கேயில்லாதவர். அவர்கள் எப்பொழு தும் மாமிசத்தைத் தின்று ரத்தங்களையும் மதுபானங்களையும் பருகுபவர். இத்தகைய பயங்கரமான உருவமுடைய ராக்ஷச ஸ்திரீகளை அனுமான் கண்டனன். சீதை அவர்களால் சூழப் பட்டுக் கொடிய கிரகங்களோடு கூடின ரோகிணியை நிகர்த்து ஆபரணங்களை யணியாதிருக்கையால் புஷ்பமில்லாத பூங் கொடிபோல் சோபை குறைந்து அவ்வசோக வனத்தின் இடையில் அனுமானுக்குப் புலப்பட்டனள். லக்ஷ்மியைப் போன்றழகிய அந்த சீதாதேவியைக் கண்டு அனுமான் கண்களில் ஆனந்த நீர்களைப் பெருக்கிக்கொண்டு ராமனை நினைத்து அவனுக்கு நமஸ்காரஞ் செய்தனன். பிறகு அந்த ராக்ஷச ஸ்திரீகள் தன்னைப் பாராதிருக்கும்பொருட்டு அம் மரத்தின் இலைக் கூட்டங்களில் மறைந்திருந்தனன்.

பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## பதினெட்டு & பத்தொன்பதாவது ஸர்க்கம்

## ராவணன் சீதையைக் காண அசோக வனத்திற்கு வருதலும், அவனைக்கண்ட சீதை பயத்தினால் நடுங்கி வருந்துதலும்.

அப்பொழுது ராத்திரி முழுதுங் கடந்து சிறிதுநேரம் மாத்திரமே மிகுந்திருந்தது. பிராமண ராக்ஷசர்கள் ஓதும் வேதாத்தியயன கோஷங்களை அனுமான் செவியுற்றனன். செவிக்கினிய மங்கள வாத்தியங்களின் முழக்கங்களையும், துதி பாடகர்கள் முதலியவர்களுடைய செவிக்கினிய சப்தங்களையும் கேட்டு ராவணன் விழித்துக்கொண்டு சீதையை நினைத்துக்கொண்டானாகையால் பாவமென்று நினையாமல் அந்த சீதையினிடத்தில் மன்மதனால் மிகவும் தூண்டப்பட்டு அம்மதிமயக்கத்தை மனத்தில் அடக்கிக்கொள்ளமுடியாதிருந்தனன்.

உடனே அந்த ராவணன் விலையுயர்ந்த ஆடையாபரணங்களையணிந்து அசோக வனத்திற்குப் புறப்பட்டனன். ரத்தினங்களாலும் சுவர்ணங்களாலும் இயற்றப்பெற்ற வெளி வாசற்படிகளையுடைய வழியிலுள்ள அதன் உத்தியான வீதிகளைப் பார்த்துக்கொண்டே அவ்வசோக வனத்தில் நுழைந்தனன். தேவஸ்திரீகளும் கந்தருவ ஸ்திரீகளும் தேவேந்திரனைப் பின் தொடர்வதுபோல் அந்த ராவணனை நூறு பெண்மணிகள் பின் தொடர்ந்தனர். அவர்களில் சிலர் பொன் தண்டுகளையுடைய கை விளக்குகளையும், சிலர் சாமரங்களையும்; சிலர் விசிறிகளையும் பிடித்துக்கொண்டிருந்தனர். மற்றுஞ்சிலர் பொன் பாத்திரங்களில் ஜலம் எடுத்துக்கொண்டு ராவணனுக்கு முன்னே நடந்தனர். அவர்களில் ஓர் மதிமுக மடந்தை, கள் நிறைந்த ரத்தின மயமான பாத்திரத்தை வலக்கையால் எடுத்துக்கொண்டு போயினள்.

மற்றொரு மடந்தை பொன் கம்பியிடப்பெற்ற குடையைப் பிடித்துக்கொண்டு ராவணன் பின்னே போயினள். சிறப்புள்ள ராவணனது மனைவிகள் தூக்க மயக்கத்தினாலும், மதுபான மதத்தினாலும் கண்கள் சுழலப்பெற்று மிகுந்த ஒளியுடன் விளக்கமுற்று மேகத்தை மின்னற்கொடிகள் பின் தொடர்வதுபோல் ராவணனைப் பின்தொடர்ந்து சென்றனர். இங்ஙனம் ராவணன் மன்மதனால் பீடிக்கப்பட்டு சீதையினிடம் மனம் புகப்பெற்று அழகிய மடந்தையர் மணிகள் பின் தொடர வருவதை அனுமான் கண்டனன். அவ்வானரன் இலைகள் நிறைந்த ஓர் கிளையில் எவர்க்கும் புலப்படாதபடி இலைகளையும் புஷ்பங்களையும் மூடி மறைத்துக்கொண்டு சமீபத்தில் வந்துகொண்டிருக்கின்ற ராவணனைக் கண்டனன். பிறகு அந்த ராவணனது செயல்களையெல்லாம் பார்க்கும்பொருட்டு கீழ்க்கிளைக்கு இறங்கி இலைகள் நிறைந்திருக்கின்ற ஓரிடத்தில் எவர்க்கும் புலப்படாதபடி அமர்ந்திருந்தனன்.

அப்பொழுது அக்கொடியவரக்கன் தூரத்தில் வருவதைக்கண்ட சீதை பெருங்காற்றிலகப்பட்டு அலமருகின்ற வாழைமரம்போல் கிடுகிடுவென்று நடுங்கினள். மிகுந்த திகிலடைந்து தொடைகளால் வயிற்றையும் கைகளால் கொங்கைகளையும் மறைத்து ரோதனஞ் செய்துகொண்டு உட்கார்ந்திருந்தனள். ராமனையே மனத்தில் தியானித்துக்கொண்டு ஆகாரமில்லாமையால் இளைத்து அழுகையே கதியாகப்பெற்று துக்கத்தின் முடிவு காணாமல் ராமனைப் பிரிந்த பரிதாபத்தினால் ஒரு நிலையிலிருக்கமுடியாமல் துடித்து மணி மந்திராதிகளால் கட்டுண்டு தரையில் சுற்றிக்கொண்டிருக்கிற ஸர்ப்பராஜ கன்னிகையைப்போல் அங்கங்களை மடக்கிக்கொண்டு கிடந்தனள்.

மிகுந்த மேன்மையுடையவளும் அழகான அவயவங்கள் அமையப்பெற்றவளுமான அந்த ஜானகி ரத்தினங்களா லிழைக்கப்பட்ட மாளிகையில் வசிக்கத் தகுந்தவளாயினும், வெறும் புறமான வெளித் தரையில் உட்கார்ந்திருப்பது பற்றிக் கொஞ்சநேரத்திற்குமுன் பறிக்கப்பட்டு வெயிலில் வாடுகின்ற தாமரைத் தண்டுபோல் புலப்பட்டனள். தலை மயிர்களெல்லாம் ஒன்று சேர்ந்து பின்னிக்கொண்டு நீண்டு தொங்குகின்ற ஜடையுடன் கூடி, சோகத்தினால் சிந்தையா லும் பயத்தினாலும் மிகுதியும் உடலிளைத்துப் பதிவிரதா தருமம் என்னும் தவத்தையே தனமாகக்கொண்டு, துக்கத்தி னால் பரிதபித்து, கைகளைக் குவித்துக்கொண்டிருக்கையால், மனத்தில் ராமனால் ராவணனுக்குத் துன்பம் நேரிடவேண்டு மென்று தன் இஷ்டதேவதையைக் குறித்து வேண்டிக்கொள் பவள்போல் புலப்பட்டனள்.

பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபதாவது ஸர்க்கம்

### ராவணன் சீதையை வசப்படுத்திக் கோள்ளும்போருட்டுப் பலவாறாக வேண்டுதல்.

பிறகு ராவணன் சீதையை நெருங்கி அவளை நோக்கி "யானையின் துதிக்கைபோன்ற தொடைகளையுடைய சீதே! நீ என்னைப் பார்த்துப் பயத்தினால் ஸ்தனங்களையும் வயிற்றையும் மறைத்துக்கொண்டிருப்பது ஏனோ? அகன்ற கண்களையுடையவளே! அவயவங்களெல்லாவற்றிலும் சுப லக்ஷணங்களமையப்பெற்று சமஸ்த லோகங்களின் மனத்தை யும் இழுக்குந்தன்மையளே! எனதன்பிற்கிடமாயிருப்பவளே! நான் உன்னை மணக்க ஆசைப்படுகின்றேனாகையால் என்னை ஏற்றுக்கொள்வாயாக. என்னிடத்தில் உனக்குச் சிறிதும் பயம் வேண்டாம்.

சீதே! எனக்கு அன்னிய ஸ்திரீகளின் சேர்க்கையால் தோஷமுண்டாகுமென்று நினைக்கவேண்டாம். எல்லாவிதத்தி லும் அன்னிய ஸ்திரீகளைப்புணருவதும், பலாத்காரஞ்செய்து அவர்களைக்கொண்டு வருவதும் ராக்ஷசர்களுக்கு சகஜமான தருமமாகும். குலதருமத்தினால் எள்ளளவும் தோஷமுண் டாகாமை மாத்திரமன்றியே புண்ணியமும் சம்பவிக்கும். என் சரீரத்தில் மன்மதவிகாரம் யதேஷ்டமாக மிகுதியும் விளையுமாக. ஆயினும் நீ என்னை விரும்பாதவரையில் நான் உன்னைத் தொடமாட்டேன்.

தேவி! நீ இங்ஙனம் ஆகாரமின்றி உடலிளைத்து, மயிர் ஜடையிட்டு துக்கத்தினால் புலம்புவது நன்றன்று. நீ இவற்றைத் துறந்து என்னுடன்கூடி உயர்ந்த ஆடையாப ரணங்களினால் உன்னை யலங்கரித்துக்கொண்டு, சிறந்த மாலை களைச்சூடி மேலான படுக்கையில் படுத்து நல்ல சுகங்களை யனுபவிப்பாயாக. ஏ சுந்தராங்கி! கழிந்துகொண்டே போகிற உனது அழகிய யௌவனப் பருவம் மறுபடியும் திரும்பாதாகையால் இப்பொழுதே என்னுடன்கூடி சுகங் களை யனுபவிப்பாயாக.

சீதே! நிகரில்லாத சௌந்தரியத்தினாலும் யௌவனத் தினாலும் விளங்குகின்ற உன்னைக்கண்டு பிரமதேவனைப் போன்றவனாயினும் எவன்தான் பொருள் செய்யாமலிருக்க வல்லவனாவான்? ஒன்றுமென பிரமதேவனும் கூட மோகிப்பா னென்பதில் சந்தேகமில்லை. இனி மற்றை எவன்தான் மனமயக்க முறாதிருக்க முடியும்? கொடிபோன்றவளே! உனது அவயவங்களில் எதெதைப் பார்க்கிறேனோ, அந்தந்த அவயவத்தில் என் கண்கள் மிகுதியும் ஆழ்ந்து அதைக் கடந்து மற்றொன்றில் செல்ல முடியாதிருக்கின்றன. நான் உனதவயவங்களில் எதைப்பார்க்கினும், மீளவும் என்கண்ணை அதினின்றும் திருப்பமுடியாதிருக்கின்றேன்.

சீதே! என்னைக் கணவனாக ஏற்றுக்கொள்வாயாக. நான் பலவிடங்களில் சென்று கொண்டுவந்த உத்தம ஸ்திரீகள் பலர் இருக்கின்றனர். அவர்களெல்லார்க்கும் நீ தலைவியாய் இருப்பாயாக. என்னால் நானா உலகங்களினின்றும் பராக்கிரமத்தினால் கொண்டுவரப்பட்ட ரத்தினங்களும் எனது ராஜ்ஜியமும் உன்னுடையவைகளே, நானும் உன்னுடையவனே. ஆகையால் இவற்றை யெல்லாம் நீ இஷ்டப்படி அனுபவிக்கலாம். உனக்குச் சுபம் உண்டாகுமாக. நான் உனக்காக இப் பூமண்டலத்தை யெல்லாம் ஜயித்து ஜனக மகாராஜனுக்குக் கொடுக்கிறேன். என்னெதிரில் நின்று போராடவல்லவன் எவனுமில்லை. தேவர்களும் அசுரர்களும் என்னுடன் பலதடவை யுத்தம்செய்து தோல்வியுற்று எதிரில் நிற்கமுடியாமல் ஓடிப்போயினர். பிறகு மற்றவரைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? ஆகையால் நீ இப்பொழுதே ஒளிதிகழப்பெற்ற ஆபரணங்களை உன் அவயவங்களெல்லாவற்றிலும் அழகாக அணிந்து கொள்வாயாக. நீ ஆபரண மில்லாமலே இவ்வளவு அழகாய் இருக்கின்றனை. இனி ஆபரணங்களை யணிவாயாயின் உன்னழகை வருணிக்கவே முடியாது.

மேன்மையுடையவளே! நீ நன்கலங்கரித்துக்கொண்டு உன் மனம்போனபடி சுகங்களையனுபவிப்பாயாக. கள்ளைக் குடித்து என்னுடன் இஷ்டப்படி விளையாடிக்கொண்டிருப்பாயாக. வேண்டினவர்களுக்கு இஷ்டப்படி பூமியையாவது தனங்களையாவது கொடுப்பாயாக. என்னை நம்பி என்னிடத்தில் அன்புவைப்பாயாக. என் ஐசுவரியங்களையும், பராக்கிரமங்களையும், கீர்த்தியையும் கண்டு களிப்பாயாக. சுந்தரீ! மரவுரி உடுத்துக் காட்டில் திரிகிற ராமனை யடைந்து நீ என்ன சுகமடையப் போகின்றனை? வெற்றியற்று, ஐசுவரியத்தையுமிழந்து வனத்திலகப்பட்டுத் தரையில் படுத்திருக்

கின்ற ராமன் இன்னம் பிழைத்திருக்கிறுனே இல்லையோ என்று எனக்கே சந்தேகமாயிருக்கின்றது.

சீதே! என்கையிலகப்பட்ட உன்னைத் தேவாசுரர்கள் ஒன்று கூடிவரினும் மீட்கமுடியாது. இனி அற்பமானிடனுன ராமனைப்பற்றிக் கேட்கவேண்டுமோ? மிகுந்த கண்ணழகுடையவளே! உன் விலாசங்கள் ஒப்பற்றவை. இவ்வளவு அழகுடையவளாயினும் வீணுகப் பயப்படுந் தன்மையளாய் இருக்கின்றனையே! தைரியம் இல்லாமற் போயிற்றே! சீதே! நீ என் கருத்துக்கிசைவாயாக. எனது சமஸ்த மனைவிகளும் ஸ்ரீ மகாலக்ஷ்மிக்கு அப்சரஸ்திரீகள் பணி செய்வதுபோல் உனக்குப் பணிவிடை செய்வார்களாக. தேவீ! ராமன் தவத்திலாவது, பலத்திலாவது, பராக்கிரமத்திலாவது, தனத்திலாவது, கீர்த்தியிலாவது எனக்கு நிகராகமாட்டான். மடந்தையர் மணியே! உனக்கு நிகரற்ற ஐசுவரியங்களையும் பூமியையும் கொடுக்கிறேன். என்னை உனக்கு அடிமையாக்கிக்கொள்வாயாக" என்றனன்.

இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தோராவது ஸர்க்கம்.

### சீதை ராவணனது வார்த்தைகளைக் கண்டித்துத் தன்னை மீளவும் ராமனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கச்சொல்லுதல்.

இங்ஙனம் கூறிய ராவணனது கொடிய வார்த்தைகளைக் கேட்ட சீதை மனவருத்தமுற்று மனதில் ராமனையே தியானம் செய்துகொண்டு, ராவணனேடு நேரில் வார்த்தை சொல்லத் தகாதாகையால், ஒரு புல்லை நடுவில் வைத்துக் கொண்டு அவனைக் குறித்து "என்னிடத்தினின்று மனத்தைத் திருப்பிக்கொண்டு உனது மனைவிகளிடம் அன்பு வைப்பாயாக. பாபிகள் மோட்சத்தை விரும்பத்தகாதாப்

போல் நீ என்னை விரும்புவது யுக்தமன்று. எவ்வளவு விரும்பினும் பாபிஷ்டனுக்கு மோக்ஷம் நேரிடாதாப்போலே உனக்கும் நான் சித்திக்கமாட்டேன். சிறந்த குலத்தில் பிறந்து உயர்ந்த குலத்தில் புகுந்து பதிவிரதையாய் இருக்கும் நான் நிந்தைக்கிடமாகி செய்யத்தகாத இப்படிப்பட்ட காரியத்தைச் செய்ய ஒரு காலும் நேராது" என்று கூறி ராவணனைப் பொருள்செய்யாமல் மறுபுறம் முகத்தைத்திருப்பிக்கொண்டு மீளவும் அவனை நோக்கி,

"ராக்ஷசனே! நான் அன்னியனது மனைவி; அத்துடன் சிறந்த பதிவிரதை; என்னை நீ விரும்புவது தகாது. பிறர் உன் மனைவியைப் புணரும்பொழுது, உனக்கு எப்படியிருக்குமோ, அதையே உபமானமாகக்கொண்டு, உன் மனைவிகளை விபசாரதோஷம் இல்லாதபடி நீ காப்பதுபோல் பிறரது மனைவிகளையும் அங்ஙனமே காக்கவேண்டும். தன் மனைவிகளிடத்தில் திருப்தி உண்டாகப்பெருமல் சபல முற்று அன்னிய ஸ்திரீகளை ஒருவன் விரும்புவாஞயின் அவன் தன்னுடைய ஆயுள் ஐசுவரியம் முதலியவையெல்லாம் நசிக்கப்பெற்றுக் கெடுதியை அடைவான். இப்பொழுது உனக்கு அப்படிப்பட்ட கெடுதி உண்டாகாதபடி நன்மை சொல்லும் பெரியோர்கள் எவரும் இல்லையோ? விபீஷணன் முதலியோர் உனக்கு நீதியைச் சொல்லவில்லையா? அவர்கள் சொல்லியிருப்பினும் அவர்களை நீ அநுசரித்திருக்கமாட்டாய். உன் விபரீதமான இந்தத் துர்ப்புத்தியே அதைத் தெரிவிக்கின்றது.

ராவணு! இப்பொழுது நீ கொண்டிருக்கும் எண்ணத்தை மாற்றுவிடின், பலவித ரத்தினங்கள் நிறைந்து ரமணீயமாயிருக்கின்ற இந்த லங்கையும் இதிலுள்ள சமஸ்த ராக்ஷசக் கூட்டங்களும் சீக்கிரத்திலேயே நாசமடையப் போகின்றன. என்னை உனது அந்தப்புர ஸ்திரீகளெல்

லார்க்கும் தலைவியாய் இருக்கச் செய்கையாலாவது உன் ஆபரணங்களைக் கொடுக்கையாலாவது உன்னிடம் ஆசைப் படச் செய்ய உனக்கு எள்ளளவும் சாத்தியமன்று. ஒளி சூரியனைப் பிரிந்திருக்கமாட்டாதாப்போல் நானும் ராமனை க்ஷணமும் பிரிந்திருக்கமாட்டேன். நான் உலக நாதனான ராமனால் அணைக்கப்பட்டு பெருமைக்கிடமான அவனது வலது புஜத்தைத் தலையணையாகக்கொள்ளும் புகழுடை யவள். இப்படிப்பட்ட நான் அநாமதேயனான உன்னைப் போன்ற மற்றொரு அற்பனுடைய புஜத்தில் என்னவென்று தலை சாய்ப்பேன்? நான் அந்த ராமனொருவனுக்கே தகுந்த மனைவியாகையால் மற்றெவனுக்கு மல்லேன்.

ராவணா! நீ இவ்விலங்கையில் சுகமாக இருக்க விரும்புவா யாயின், பயங்கரமான சாவை விரும்பாதிருப்பாயாயின் ராமனை நண்பனாகச் செய்து கொள்வதே யுக்தமாகும். நீ அவரைச் சரணமடைந்து என்னையவரிடம் சேர்த்து விடுவா யாக. இராமன் சரணமடைந்தவனை ஒருபோதும் கெடுக்க மாட்டான். நானும் உனக்காக அவரை வேண்டி உன் பிழையைப் பொறுத்தருளும்படி செய்கிறேன். அவர் சரணம் புகுந்தவரிடம் அன்பு மிகுந்திருக்கப் பெற்றவராகை யால் உன்னைத் தப்பாமல் மன்னிப்பார்.

ராவணா! இவ்வண்ணம் நீ என்னை ராமனிடம் சேர்த்து விடுவாயாயின் உனக்கு நன்மை உண்டாகும். இல்லையேல் தவறாமல் ராம பாணத்தினால் மாண்டு போவாய். இதில் சிறிதும் சந்தேகமில்லை. ஒருக்கால் இந்திரனது வஜ்ஜி ராயுதம் உன்னைப்போன்றவனை விட்டாலும் விடக்கூடும் யமன் உன்னைப்போன்றவனைப் பிடித்து நெடுநாள் விடினும் விடக்கூடும். ராமன் கோபமுறுவானாயின் உன்னைப்போன்ற துஷ்டனை எவ்விதத்திலும் விடமாட்டான். பெருமையுள்ள

அந்த ராமனென்னும் கருடன், கருடன் சர்ப்பங்களை யழிப்பதுபோல் வேகமாக ராக்ஷசர்களென்னும் சர்ப்பங்களை அழிக்கப்போகின்றனன்.

அற்பனே! ராமனால் என்னை உன்னிடமிருந்து மீட்க முடியாதென்றனையே! விஷ்ணு மூன்றடிகளால் அசுரர்களிட மிருந்து திகழ்கின்ற லக்ஷ்மியை அபகரித்தாற்போல் சத்துருக்களை யழிக்கவல்ல ராமன் உன்னிடமிருந்து என்னைச் சீக்கிரமாகவே கொண்டுபோவான். ராக்ஷசா! ஜனஸ்தானத்தில் உள்ள அரக்கரனைவரும் ராமனால் மாண்டொழிந்ததை யறிந்து நீ ராமனுடன் எதிர் நின்று யுத்தம் செய்ய வல்லமை யில்லாமையால் பயந்து நான் தனியாய் இருக்கும்பொழுது என்னைத் திருடி வந்தனை. அடே! பாபிஷ்டனே! நீ அப்பொழுது அந்த ராம லக்ஷ்மணரது கண்களுக்கிலக்கா யிருப்பையாயின் இவ்வளவு காலம் நீ உயிருடனிருந்திருக்க மாட்டாய். சீக்கிரத்தில் ராமன் இவ்விடம் வந்து உன்னைக் கொல்லப்போகின்றனர்" என்றனள்.

இருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்திரண்டாவது ஸர்க்கம்

### ராவணன் சீதையை வசப்படுத்தும்படி ராக்ஷச ஸ்திரீகளுக்குக் கட்டளையிட்டு அந்தப்புரத்திற்குப் போதல்.

இங்ஙனம் சீதை மொழிந்த ரோஷமான வார்த்தைகளைக் கேட்ட ராவணன் அவளை நோக்கி "அழகுடையவளே! நீ இப்பொழுது என்னை அவமதித்துப் பேசின வார்த்தைகளை இப்பொழுது எனக்கு உன்மீது மேன்மேலும் வளர்ந்து வருகின்ற காமமானது பொறுத்துக்கொள்ளும்படி செய்கிறது. சீதே! நீ என்னை எந்தெந்த விதமாக அவமதித்துப் பேசினையோ அவற்றில் ஒவ்வொரு வார்த்தைக்கும் உன்னைச்

சித்திரவதை செய்யவேண்டும். எனினும் உன்மீது எனக் குண்டான காம விகாரத்தின் காரணமாகவே உன்னை நான் கொல்லாதிருக்கின்றனன். நான் உனக்கு ஏற்படுத்தின கெடுவான ஒரு வருஷத்தில் இன்னும் இரண்டு மாதங்களே இருக்கின்றன. அதற்குள் நீ எனக்கு மனைவியாகாமற் போயின் அந்த கெடு தாண்டின மறுதினமே விடியற்கால போஜனத்திற்காக உன்னைக்கொன்று சமைத்து உண்பேன்" என்றனன். அப்பொழுது ராவணனுடன் வந்திருந்த தேவதா ஸ்திரீகளும் கந்தருவ ஸ்திரீகளும் மனவருத்தத்தினால் கண் கலங்கப்பெற்று அந்த சீதையை கண் ஜாடை உதடசைத்தல் முதலியவற்றால் சமாதானப்படுத்தினர்.

அப்பொழுது சீதை ராவணனை மிகுந்த கோபத்துடன் "அடபாவி! ராமனது மனைவியான என்னை மூன்று உலகங் களிலும் நீ ஒருவன் தவிர மற்ற எவனும் மனத்தினாலுங்கூட இங்ஙனம் விரும்பமாட்டான். என்னை நோக்கி இப்படிப் பட்ட சொல்லத்தகாத வார்த்தைகளை மொழிந்தனையே! இந்தப் பாவத்திற்கு நீ எங்குப்போய்த்தான் தப்புவித்துக் கொள்ளப்போகின்றனை? நீ எந்த உலகம் செல்லினும் இப் பாவம் உன்னைவிடாது. சண்டாளனே! பதிவிரதையான என்னைக் காம விகாரத்துடன் பார்க்கின்றனையே! உன் கண்க ளிரண்டும் ஏன் தரையில் இற்று விழாதிருக்கின்றன? சொல் லத்தகாத கொடிய வசனங்களை மொழிந்த உன் நாக்கு ஏன் அறுந்து விழாதிருக்கின்றது?

ராவணா! உன் கொடுஞ் செயலுக்கு உன்னை நீறு செய்ய வேண்டியதே நியாயம்; ஆயினும் 'அபகாரிகளைச் சபிப்பாய்' என்று ராமனது ஆக்கினை இல்லாமையாலும், கற்புநெறி தவறாமையென்னும் தவத்தைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுகையாலும் என் தேஜஸ்ஸினால் உன்னை இப்பொழுது நீறு செய்யாதிருக்கின்றேன்.

ராவணா! நீ உன்னைச் சூரனென்றும் பலவானென்றும் குபேரன் தம்பியென்றும் கூறினையே! நீ உண்மையில் அப்படியே இருப்பாயாயின் மாயமானை யனுப்பி ராம லக்ஷ்மணர்களை என்னைவிட்டு நீங்கும்படி சூழ்ச்சிசெய்து ஏன் என்னைத் திருடி வந்தனை? அவர்களெதிரிலேயே எடுத்துக்கொண்டு வந்திருக்கலாமல்லவா? ஆகையால் உனது விநாசத்திற்காகவே அற்பனான நீ என்னைக் களவாடி வந்தனை. இதில் சிறிதும் சந்தேகமில்லை" என்றனள்.

இங்ஙனம் சீதை சொன்ன ரோஷமான வார்த்தைகளைக் கேட்ட ராவணன் பதில் ஒன்றும் சொல்லமுடியாமையால் மிகுந்த கோபாவேசத்துடன் தன் கொடிய கண்களை மலர விழித்து அவளை உற்றுநோக்கி "தரித்திரனான ராமனை விரும்புபவளே! உன்னை இப்பொழுதே கொன்றுவிடுகிறேன்" என்று கூறி, அவளைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்த பயங்கரமான உருவமுடைய ராக்ஷஸிகளை விளித்து 'நீங்களனைவரும் ஒன்றுகூடி இந்த சீதையைச் சீக்கிரத்தில் என்கருத்துக்கிசையும்படி செய்வீர்களாக. இதமான பேச்சுகளினாலும், வேண்டினவற்றைக் கொடுக்கையாகிற தானோபாயத்தினாலும், அவை பலிக்காவிடின் பேதோபாயத்தினாலும், அதுவும் பலிக்காவிடில் தண்டோபாயத்தினாலும் (இம்சித்தாகிலும்) இவளை எனக்கு ஸ்வாதீனப்படுத்துவீர்களாக" என்று ஆஞ்ஞாபித்து சீதையைப் பலவாறு விரட்டினன்.

அப்பொழுது ராவணனது இளைய மனைவியான தானியமாலிகை யென்னும் ராக்ஷஸி அவனை அழுந்தக்கட்டிக் கொண்டு "மஹாராஜனே! நீ என்னைக்கூடி இஷ்டமானபடி சுகபோகங்களை யனுபவிப்பாயாக. சிறந்த பாக்கியவானான நீ இவளை நீயே வருந்தி விரும்பினும் உன்னை யணைந்து நல்ல சுகங்களை யனுபவிக்க இவள் கொடுத்துவைக்கவில்லை. உன்னைச் சிறிதும் விரும்பாத இவளை நினைத்து ஏன் வீணாகப்

பரிபவப்படுகிறாய்? உன்னை மிகுதியும் விரும்பும் என்மேல் ஆசை வைப்பாயாக" என்றனள். அக்கொடியோன் சிரித்துக்கொண்டே மடந்தையர் பின்தொடரத் தன் மாளிகைக்குச் சென்றனன்.

இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்துமூன்று & இருபத்து நான்காவது ஸர்க்கம்.

## ராக்ஷசிகள் சீதையை விரட்டுதலும், சீதை ரோதனஞ் செய்தலும்.

ராவணன் சென்றதும் பயங்கரமான உருவமுடைய ராக்ஷச ஸ்திரீகளனைவரும் சீதையிடம் ஓடிவந்து சுற்றிக் கொண்டனர். அவர்கள் கோபத்தினால் உடம்பு தெரியாமல் சீதையை நோக்கி "சீதே! ராவணன் பிரமதேவனது வமிசத்தில் பிறந்தவன். சிறந்த பராக்கிரமமும் ஐசுவரியங்களையும் உடைய அவனை நீ ஏன் விரும்பாதிருக்கின்றனை?" என்றனர்.

பிறகு பூனையின் கண்போன்ற கண்களையுடைய ஹரிஜடை என்னுமரக்கி கோபத்தினால் கண்களைச் சுழற்றிக் கொண்டு "முப்பத்து முக்கோடி தேவர்களையும் தேவேந்திரனையும் வென்ற ராவணனுக்கு நீயே தகுந்தவளாய் இருக்கின்றனை" என்றனள். பிறகு பிரகஸை என்னும் அரக்கி "அடீ! சீதே! ராவணன் தன்மனைவிகள் அனைவரினும் மிகுந்த அன்பிற்கிடமாயிருப்பவளும் மகா பாக்கியவதியுமான மண்டோதரியையும் துறந்து உன்னையே பற்றியிருப்பான். ஆகையாலவனை நீ விரும்புவாயாக" என்றனள்.

பிறகு விகடையென்கிற ராக்ஷசி "சீதே! நீ என்ன அற்பத்தனமுடையவளாய் இருக்கின்றனையே! ராவணன் சாமானியமானவனா? குலத்திலும், செல்வத்திலும், பராக்கிரமத்திலும் நிகரற்று விளங்குமவனை நீ விரும்பாதது

ஏனோ?" என்றனள். அதன் பிறகு துர்முகி என்னுமரக்கி சீதையைப்பார்த்து "ஒப்பற்ற அழகுடையவளே! எவனுக்கு சூரியனும் பயந்து வெயில் காயமாட்டானோ, வாயு வேகமாக வீசமாட்டானோ, எவனிடம் பயங்கொண்டு மரங்களும் புஷ்ப மழைகளைப் பெய்கின்றனவோ, எவன் விரும்பினபோதெல் லாம் மேகங்கள் மழையைப் பொழிகின்றனவோ, அப்படிப் பட்ட ராக்ஷச ராஜனான ராவணனை நீ விரும்பி அணைவாயாக. இல்லாவிடில் உன் பிராணன் தக்குவதரிது" என்றனள்.

சீதை ராக்ஷசிகள் சொன்ன வார்த்தைகளைக்கேட்டு நீர் நிறைந்த கண்களுடன் அவர்களை நோக்கி "நீங்கள் மொழிந்த வார்த்தைகள் மிகுந்த பாவமுடையவையாகையால் அவற்றை நான் ஏற்கமாட்டேன். மானிட ஸ்திரீ ஒரு ராக்ஷசனுக்கு மனைவியாவது யுக்தமன்று. ஆகையால் நீங் கள் சொன்னபடி நான் செய்யமாட்டேன். இதன்பொருட்டு என்னைக்கொன்று தின்றுவிடினும் அது எனக்கு முற்றிலும் சம்மதமேயாகும். என் கணவன் தீனனாயினும் ராஜ்ஜி யத்தை இழந்தவனாயினும் அவனே எனக்குக் குரு. ஸுவர்ச் சலை சூரியனைப்போலவும், சசீதேவி தேவேந்திரனைப்போல வும், ரோஹிணி சந்திரனைப்போலவும், லோபமுத்திரை அகஸ்தியரைப்போலவும், சாவித்திரி சத்தியவானைப்போல வும், ஸ்ரீமதி கபிலரைப்போலவும், கேசினி சகரசக்கரவர்த்தி யைப்போலவும், தமயந்தி நளனைப்போலவும் நான் எனது கணவனான ராமனையே அனுசரித்திருக்கின்றேன்" என்று தனது மனவுறுதியைக் கூறினள்.

ராவணனால் கட்டளையிடப்பெற்ற ராக்ஷசிகள் சீதை மொழிந்த வசனங்களைக் கேட்டுக் கோபாவேசத்துடன் மெய் மறந்து அவளைப் பலவாறு விரட்டிக்கொண்டிருந்தனர். பின்னுமொரு கொடிய ராக்ஷசி கையில் கோடாலியை ஏந்திய வண்ணம் மிகுந்த கோபத்துடன் சீதையை அணுகி

'இவள் பிரபுவான ராவணனுக்குத் தகுந்த மனைவியாயிருக்கத்தகுந்தவளன்று' என்றனர். சீதை மிகுந்த வருத்தத்துடன் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு அனுமான் மறைந்திருக்கிற சிம்சுபாவிருக்ஷத்தினருகே வந்தனர்.

அப்பொழுதும் அவ்வரக்கிகள் அவளை விடாமல் சூழ்ந்துகொண்டு மிகுந்த பயமான வார்த்தைகளால் அவளை ராவணனிடம் அன்புகாட்டும்படி வேண்டினர். சிலவரக்கிகள் மிகவும் கொடூரமான வசைச்சொற்களை மொழிந்து சீதையை விரட்டினர். மற்றுஞ் சிலர் ராவணனது பெருமையையும் பராக்கிரமத்தையும் உயர்த்திக்கூறி ராமனை இகழ்ந்து பேசி அவளை ராவணனிடம் அன்புகாட்டும்படி கேட்டுக்கொண்டனர்.

இங்ஙனம் அவ்வரக்கிகள் சீதையைக் குறித்து பயங்கரமான வசனங்களை மொழிந்தனர். அவர்களில் சண்டோதரி என்னும் ராக்ஷசி கோபத்தினால் மெய்மறந்து பெரிய சூலத்தைச் சுழற்றிக்கொண்டு சீதையை நோக்கி "நீ ராவணனது கருத்துக்கிசையாமலிருப்பது எனக்கு ஒருவிதத்தில் சந்தோஷமேயாகும். எப்படியெனில் உன்னை ராவணன் இவ்விடம் கொண்டுவருகையில் நான் பார்த்ததுமுதலாக எனக்கு ஒரு பெரிய விருப்பம் உண்டாயிருக்கிறது. அதாவது உன்னைக்கொன்று உனது வயிற்றின் வலப்பக்கத்திலிருக்கிற காலகண்டமென்னும் மாமிச பிண்டத்தையும், இடப்பக்கத்திலுள்ள குல்மமென்னும் மாமிச பிண்டத்தையும் தாமரை மொக்குபோன்ற ஹிருதயமென்னும் மாமிசத்தையும் குடல்களையும் தலையையும் தின்னவேண்டுமென்று எனக்கு எண்ணம்" என்றனள்.

பிறகு அஜாமுகி யென்னும் ராக்ஷசி 'நீங்களெல்லாரும் இந்த சீதையை யறுத்து மாமிசங்களை சமமாகப் பங்கிடுவீர்

களாக; பிறகு நாமனைவரும் ஒருவர்க்கொருவர் சண்டை யில்லாமல் புசிக்கலாம்' என்றனள். அதைக்கேட்ட மற்ற வர்களும் "அதுவே சரி. இவளது மாமிசத்தைத் தின்று கள்ளையும் குடித்து லங்கையின் மேல்பாகத்திலிருக்கின்ற நிகும்பலை யென்னும் பத்திரகாளிக்குப் பிரீதியுண்டாகும்படி நர்த்தனஞ் செய்வோம்" என்றனர். சீதை இங்ஙனம் அக் கொடிய ராக்ஷசிகள் விரட்டிக்கொண்டிருக்கையில் தைரி யத்தை யிழந்து கூக்குரலிட்டு அழுதனள்.

இருபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தைந்து & இருபத்தாறவது ஸர்க்கம்.

### சீதை ராக்ஷசிகள் சொன்னவற்றைக் கண்டித்து அசோக மரத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு வருந்துதலும், உயிரைவிட நிச்சயித்தலும்.

சீதை அழுதுகொண்டே அவ்வரக்கிகளை நோக்கி "ஒருகாலும் ஒரு மானிட ஸ்திரீ ராக்ஷசனுக்கு மனைவி யாகத் தகுந்தவளல்லள். உங்களிஷ்டப்படி நீங்களெல்லா ரும் என்னைத் தின்பீர்களாக. நான் நீங்கள் சொல்லுகிறபடி ஒருபோதும் செய்யேன்'' என்று கூறித் தனதங்கங்களை மடக்கிக்கொண்டு மிகுதியும் நடுநடுங்கினள். அந்த சீதை அச்சிம்சுபா விருக்ஷத்தினருகிலுள்ள ஓர் அசோக மரத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு சோகத்தினால் தன்பெரிய கொங்கைகளைக் கண்ணீர்ப் பெருக்கினால் நனைத்து மனத்தில் ராமனையே சிந்தித்துக்கொண்டு துயரத்தின் முடிவைக் காணாதிருந்தனள்.

அப்பொழுது சீதை 'ஆ! ராமா!' என்றும் 'ஐயோ! லக்ஷ் மணா!' வென்றும் 'ஆ! மாமி கௌசல்யே! சுமித்திரே!' என் ம் புலம்பிக்கொண்டு 'ஐயோ! நான் இப்படி இங்குத்

தயையில்லாத ராக்ஷசிகளால் பிடிக்கப்பட்டு வருந்தி ராமனைப் பிரிந்து பரிதாபமுற்று இன்றுகாறும் பிராணனை வைத்திருக்கின்றேனே! ஆ! இதென்ன கொடுமை! ஆகையால் மாதர்க்காயினும் புருஷனுக்காயினும் கடவுளது இஷ்டம் இல்லாதபொழுது மரணம் நேராது' என்று பண்டிதர்கள் சொல்லுகிற உலக வார்த்தை உண்மையாகவே இருக்கின்றது. நான் மிகுந்த பாவம் செய்தவளாகையால் கணவனான ராமனைப் பிரிந்து மிகுதியும் பயங்கரமான துக்கத்தை யனுபவித்துக்கொண்டிருக்கிறேன். இப்படிப்பட்ட பெரிய கஷ்டத்தை என்னால் பொறுக்கமுடியவில்லை யாகையால் பிராணனைவிட விரும்புகிறேன். ராமனை விட்டுப் பிரிந்து இக்கொடிய ராக்ஷசிகளினிடையில் அகப்பட்டுக்கொண்டிருக்கிற எனக்குப் பிராணனால் பிரயோஜனமென்ன?

ஆ! நான் இவ்வளவு துக்கமடைந்திருப்பினும் இந்த என் இருதயம் பல சுக்கலாய்ப் பிளவாதிருக்கின்றதே! ஈதென்ன கடினமான கல்லைப்போல் மிகுதியும் உறுதியாயிருக்கின்றதே! ஐயோ! அப்படிப்பட்ட ராமனைப்பிரிந்து இப்படிப்பட்ட பாவப் பிழைப்பு பிழைத்துக்கொண்டு நெடுங்காலம் உயிரை வைத்துக்கொண்டிருக்கிறேனே! நான் எவ்வளவு பாபிஷ்டையோ? எவ்வளவு கெட்டகுணமுடையவளோ? சீ! என் பிழைப்புப் பாழாய்ப்போகுமாக. ராமனைப் பிரிந்த எனக்கு உயிரில் ஆசையேதுக்கு?

உயிரில் ஆசையில்லாதபோது சுகத்தில் ஆசை உண்டாவதேது? ஓ ராக்ஷசிகளே! நானென்னவோ சரீரத்தை விடுவேனன்றி வைத்துக்கொண்டிருக்கமாட்டேன். ஆகையால் உங்களைப்பற்றி எனக்குப் பயமில்லை. உங்களிஷ்டப்படி என்னைக் கொன்று தின்பீர்களாக. நான் ராமனைப் பிரிந்து வெகுகாலம் இத்துக்கத்தைப் பொறுக்கமாட்டேன். ராவணனை எனது இடக்காலாலும் தொடமாட்டேன். நீங்கள்

என்னை இருதுண்டங்களாக நறுக்குவீர்களாக; பிடித்துக் கிழிப்பீர்களாக! எரிகிற நெருப்பிலிட்டுக் கொளுத்துவீர்களாக; மற்று எதுவேனும் செய்வீர்களாக. நான் ராவணனை அணுகமாட்டேன்.

அந்தோ! மிகுந்த வல்லமையுடைய ராமன் இவ்வற்பனான ராவணனிடமிருக்குமென்னை ஏன் இதுவரையில் பாதுகாக்கவில்லை? அந்த ராம லக்ஷ்மணர்களுக்கு நான் இங்கிருப்பது தெரியாதிருக்கவேணும். அதனால்தான் இன்னும் இங்கு வரவில்லை. அப்படி ராமனுக்கு நானிங்கிருப்பது தெரிந்திருக்குமாயின் இவ்விலங்கை ஆழமான சமுத்திரத்தினால் சூழப்பட்டிருப்பினும் அவன் தனது ஒப்புயர்வற்ற பாணங்களை இங்குச்செலுத்திக் கடலையும் வற்றச்செய்து ராவணனைக் கொன்றுவிடுவான். இதில் சந்தேகமில்லை. இவ்விலங்கையிலுள்ள ஸமஸ்த ராக்ஷசர்களும் ராமபாணத்தினாலடிபுண்டு யமபுரத்தையடைவார்கள். இப்பொழுது நானிங்கு எப்படிப் புலம்புகின்றேனோ, அப்படியே வீடுகள்தோறும் ராக்ஷச ஸ்திரீகளனைவரும் ராமனால் தம்தம் கணவர் மாண்டுபோகப் பெற்று இதைக்காட்டிலும் அதிகமாகப் புலம்பப்போகின்றனரென்பது திண்ணம்.

ஓ ராக்ஷசிகளே! அந்த ராம லக்ஷ்மணர்களின் கண்களில் பகைவனென்பவன் எவனாயினும் தென்படுவானாயின் சிறிது நேரமும் பிழைத்திருக்கமாட்டான். இனிச் சீக்கிரத்திலேயே இவ்விலங்கையிலுள்ள அரக்கர் யாவரும் அழிந்து இதன் மார்க்கங்களெல்லாம் சிதையின் புகைகளால் சூழப்பட்டுக் கழுகுகள் கூட்டங் கூட்டமாய் வட்டமிடப்பெற்றுச் சுடுகாட்டைப்போலாகப் போகின்றன. இதில் சிறிதும் சந்தேகமில்லை.

சூரனான ராமன் நான் ராவணனது வீட்டிலிருக்கிறேனென்று அறிவானாயின் அக்கணமே இவ் வி ல ங் கா பு ரி

அவனது பாணங்களால் கொளுத்தப்பட்டு, இருள்மூடப் பெற்றுக் காந்தியற்று பலவான்களான அரக்கரனைவரும் முடியப்பெற்றதாகும். இப்பொழுது நான் என் மனத்திற்கினிய ராமனைக் காணுமல் வருந்துகின்றேன். ஐயோ; ராமனை இழந்து என்ன செய்வேன்? இங்கு எனக்கு விஷம் கொடுப்பாராயின் அதைத்தின்று, ராமனைப் பிரிந்திருப்பதைக் காட்டிலும் சீக்கிரமாக யமனைக்காண்பேன். ராமனுக்கு நானிங்கிருக்கிற விஷயம் தெரியாது என்று தோன்றுகிறது. தெரிந்திருக்குமாயின் இதுவரை வெறுமனே இருப்பானு? பூமி முழுதும் என்னைத்தேடவே தேடுவான். அங்ஙனம் தேடக்காணுமையால் அந்த ராமன் என்னைப்பற்றின துக்கத்தினுல் பரிதபித்து ஒருக்கால் பூமியில் விழுந்து தேகத்தை விட்டுச் சுவர்க்கலோகம் அடைந்திருப்பான்.

அன்றி ராமன் அரசனுயினும் ரிஷியைப்போன்றவனுகையால் அவனுக்குத் தருமத்தில் மாத்திரம் விருப்பம் இருக்குமேயன்றிக் காமத்தில் விருப்பம் இருக்காது. இங்ஙனம் மன்மத சுகங்களில் பற்றில்லாத அவனுக்கு மனைவியான என்னுல் என்ன பயன்? ஒருவனிடத்தில் பிரீதி உண்டாகில் அவனைப் பார்த்துக்கொண்டேயிருந்தால்தான் அவனிடத்தில் அந்த பிரீதி என்றும் மாருதிருக்கும்; அவனை வெகுநாள் பாராதிருப்பின் அவனிடம் பிரீதி மாறிப்போய்விடும். அதுபோல் ராமன் என்னைப் பாராதிருக்கின்றமையால் என்னிடத்தில் அவனுக்குள்ள பிரீதி ஒருக்கால் மாறிவிட்டதோ! என்னவோ! ஆயினும் ராமனைப் போன்ற உத்தமனுக்கு அங்ஙனம் நேராது. அவன் ஒருபோதும் என்னை மறக்கமாட்டான். இப்படி நேரிட்டது என்னுடைய பாபவிசேஷமேயன்றி இது அவன் பிழையல்ல. ஆகையால் இப்படி ராமனைப் பிரிந்து பரிதபிக்கின்ற எனக்குப் பிழைத்திருப்பதைக் காட்டிலும் உயிரை விட்டு விடுவதே மேலாயிருக்கின்

றது. ஆகையால் உயிரை விடுகிறேன்" என்று ரோதனஞ் செய்தனள்.

இருபத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தேழாவது ஸர்க்கம்.

### திரிசடை தான் கண்ட கனவின் விருத்தாந்தத்தை ராக்ஷச ஸ்திரீகளுக்குச் சொல்லுதல்.

சீதை இங்ஙனம் உயிரைவிடத் துணிந்து கூறின ரோஷமான வார்த்தைகளைக்கேட்ட ராக்ஷச ஸ்திரீகளில் சிலர் அவ்விஷயத்தை ராவணனுக்குச் சொல்லப்போயினர். மற்றவர்கள் மீண்டும் சீதையைப் பயப்படுத்தி விரட்டிக்கொண்டிருந்தனர். அப்பொழுது தூங்கிக்கொண்டிருந்த திரிசடை என்னும் ஓர் கிழ ராக்ஷசி திடீரென்று விழித்துக்கொண்டு சீதையை விரட்டிக்கொண்டிருந்த அரக்கியர்களை நோக்கி "ஓ ராக்ஷசிகளே! நான் இப்பொழுது ஓர் பயங்கரமான கனவு கண்டேன். அது ராக்ஷசர்களுக்கு நாசத்தையும் ராமனுக்கு க்ஷேமத்தையும் தெரிவிக்கத் தக்கதாய் இருக்கின்றது" என்றனள்.

அதைக்கேட்ட அந்த ராக்ஷச ஸ்திரீகளனைவரும் மிகவும் பயந்து அக்கனவை விவரமாய்த் தங்களுக்குச் சொல்லும்படி திரிசடையை வேண்டினர். திரிசடை அவர்களை நோக்கி "ராமன் வெளுத்த பூமாலைகளையும் வெண்மையான வஸ்திரங்களையும் தரித்து யானையின் தந்தங்களால் செய்யப்பட்டதும் ஆகாயத்தில் சஞ்சரிப்பதுமான ஓர் அழகிய பல்லக்கிலேறிக்கொண்டு லக்ஷ்மணனுடன் கூட இவ்விலங்கைக்கு வந்தனன். இந்த சீதை வெளுத்த வஸ்திரம் தரித்து சமுத்திரஞ் சூழ்ந்த ஓர் வெள்ளி மலையின்மேல் ஏறியிருப்பதாகவும், காந்தி சூரியனைச் சேர்வதுபோல் சீதை

ராமனுடன் சேர்ந்ததாகவும் நான் கனவில் கண்டனன். பிறகு ராமன் லக்ஷ்மணனோடும் சீதையோடும்கூடி சூரியன் போல் பிரகாசிக்கின்ற உயர்ந்த புஷ்பக விமானத்திலேறி வடதிசை நோக்கிப் போயினன். விஷ்ணு தேவனோடொத்த பராக்கிரமமுடைய அந்த ராமனை தேவதைகளாவது அசுரர்களாவது மற்றும் எவர்களாவது எள்ளளவும் யுத்தத்தில் வெல்லவல்லவரல்லர்.

ராவணன் அலரிப் பூமாலைகளைத் தரித்துக்கொண்டு சரீரம் முழுவதும் எண்ணெயில் நனையப்பெற்றுச் சிவந்த வஸ்திரந்தரித்து எண்ணெயைப் பருகியவண்ணம் மயக்கத்துடன் தரையில் விழுந்திருக்கக் கண்டேன். அன்றியும் ராவணன் அப்பொழுது புஷ்பக விமானத்தினின்று பூமியில் விழுந்து மொட்டைத் தலையுடன் கறுப்புவஸ்திரம் தரித்து ஒரு பெண்பிள்ளையால் இழுக்கப்பட்டிருக்கக் கண்டேன். மேலும் அவன் சிவந்த பூமாலைகளையணிந்து செஞ்சந்தனத்தைப்பூசி சிரித்து நர்த்தனஞ்செய்துகொண்டு மனத் தடுமாற்றத்துடன் கழுதைமேலேறித் தென்திசையை நோக்கிப் போய்க்கொண்டிருந்தனன். மீளவும் அவன் பயத்தினால் மோகித்துக் கழுதையினின்று தலைகீழாகத் தரையில் விழவுங்கண்டேன். பிறகு அந்த ராவணன் உடனே எழுந்து தழதழப்புடன் பயத்தினால் வருந்தி அவயவங்கள் விலவிலக்கப் பைத்தியம் பிடித்தவன்போல் திகம்பரனுகி (ஆடையில்லாதவனுகி)ப் பல கெட்ட வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு மிகுந்த துர்க்கந்தமுடைய நரகத்தைப்போன்ற மலக்குவியலில் விழுந்து மூழ்கினன். அன்றியும் சிவந்த வஸ்திரம் தரித்துச் சரீரம் முழுவதும் சேற்றைப் பூசிக்கொண்டிருக்கிற ஒரு கறுத்த பெண்பிள்ளை ராவணனைக் கழுத்தில் கட்டித் தென்திசைக்கு இழுத்துக்கொண்டுபோயினள். இவ்வண்ணமே கும்பகர்ணனும் இருக்கக் கண்டேன்.

ராவணன் பன்றியின் மேலும், இந்திரஜித்து முதலை யின்மேலும், கும்பகர்ணன் ஒட்டகத்தின்மீதும் ஏறிக்கொண்டு தென்திசைக்குப் போயினர். விபீஷணன் மாத்திரம் வெண் குடையுடன் கூடி வெளுத்த பூமாலைகளையும் வஸ்திரத்தையும் உடுத்து வெண் சந்தனம் பூசி, துந்துபி வாத்தியகோஷங்கள் முழங்க நன்கு அலங்கரித்துக்கொண்டு திவ்வியமான யானை யின்மீதேறித் தன் மந்திரிகள் நால்வருடனும் வீற்றிருக்கக் கண்டனன். அரக்கர்களனைவரும் எண்ணெயைப் பானஞ் செய்துகொண்டு சிவந்த பூமாலைகளையும் வஸ்திரங்களையும் தரித்து கூட்டங்கூடி மயக்கத்துடன் ஆடிக்கொண்டிருந்தனர்.

ஓ ராக்ஷசிகளே! மிகவுமழகிய இந்த லங்கா நகரம் கோபுரங்களும் வெளி வாசற்படிகளும் இடிந்து யானை குதிரை தேர்களுடன் சமுத்திரத்தில் விழக்கண்டேன். லங்கா நகரம் ராமதூதனான ஓர் வானரனால் கொளுத்தப் பட்டது. கும்பகர்ணன் முதலிய ராக்ஷசர்கள் சிவந்த வஸ்திரங்களையுடுத்துக் கோமயமடுவில் பிரவேசித்தனர். இக்கனா விடியற்காலையில் ஏற்பட்டதால் இதில் கண்ட விஷ யங்களனைத்தும் வெகு சீக்கிரத்தில் நிறைவேறுமென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆகையால் சீதையை இனிமேல் விரட்டவேண்டாம். சீக்கிரம் ராமன் இவ்விடம் வந்து ராவணனையும் அவனைச் சேர்ந்த ராக்ஷசர்களையும் கொன்று சீதையை அடையப்போகின்றனன். அப்பொழுது அவன் உங்களையும் கொன்றுவிடுவான். ஆகையால் சீதையிடம் நல் வார்த்தைகளைப் பேசுவீர்களாக. மேலும் சீதையை நம்மை மன்னிக்கும்படி வேண்டிக்கொள்வீர்களாக" என்றனள்.

பின்னும் அந்த திரிசடை அவர்களை நோக்கி "ராக்ஷசி களே! இந்த சீதை, வணங்கி வேண்டிக்கொள்ளில் அருள் புரியுந்தன்மையள். ஆகையால் ராமனால் உங்களுக்கு நேரப் போகிற பெரிய பயத்தினின்று ரக்ஷிப்பதற்கு இவள் வல்ல

வள். அன்றியும் இப்பெண்மணியின் இடக்கண்ணும் இடது புஜமும் துடிப்பதைக் காண்பீர்களாக. இதோ இவளது இடது துடையும் துடித்துக்கொண்டு, ராமன் எதிரே வந்திருப்பதாகத் தெரிவிக்கின்றது. பிங்களிகையென்னும் பக்ஷி மரத்தின் கிளைமேல் உட்கார்ந்து மிக்க மனக்களிப்புடன் செவிக்கினிய சொற்களைமொழிந்து கொண்டு அழகிய 'கல கல' சப்தம் செய்வதாகி அடிக்கடி ராமன் வருவானென்று சந்தோஷத்துடன் சொல்வதுபோல் இருக்கின்றது.

இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தெட்டு & இருபத்தொன்பதாவது ஸர்க்கம்

### ராக்ஷசிகளின் உபத்திரவங்களைப் பொறுக்கமுடியாமல் சீதை ஜடையைக் கழுத்தில் உறியாகப் போட்டுக்கொள்ளுதலும், சுபசகுனங்கள் தோன்றலும்.

ராக்ஷசிகளால் விரட்டப்பட்ட சீதை தன்மனத்திற்குள் "ஐயோ! கொடிய செயலுடைய ராவணன் என்னை எவ்விதத்திலும் கொல்லத் தயாராய் இருக்கின்றனன். அதுவும் துர் மரணமே (அகால மரணம்) ஆகின்றது. நானாகவே பிராணனை விடுவதும் துர்மரணமாயினும் துஷ்ட ராக்ஷசனால் மரணமடைவதைக் காட்டிலும் நானாகவே பிராணனை விடுவதில் உண்மையில் பிழையொன்றுமில்லை. 'பிராணனை எப்படியாயினும் காப்பாற்றிக்கொள்ளவேண்டுமாகையால் ராவணனை அனுசரித்தாயினும் அதை நிறுத்திக்கொண்டு தோஷமில்லாதிருக்கலாகாதா?' என்றால், பிராமணன் வேதமந்திரங்களைச் சூத்திரனுக்குச் சொல்லக்கூடாதாப்போல் ராமனது சொத்தாகிய என் மனத்தை நான் ராவணனுக்கு எவ்விதத்திலும் கொடுக்கமாட்டேன். ராவணன் கொடுத்த இரண்டு மாதத் தவணைக்குள் ராமன் இவ்விடம் வாராதிருப்பானாகில் ராவ

ணன் என்னைத் தனது ஆயுதங்களால் துண்டந்துண்டமாகத் துண்டிப்பான். ஐயோ! இதென்ன கொடிய துக்கம்! ஐயோ! ராமா! ஆ! லக்ஷ்மணா! ஆ! சுமித்திரே! ஐயோ அன்னையே! ராமனைப்பெற்ற தாயே! கௌசல்யே! ராமா! எல்லா பிராணிகளிடத்தும் அன்பாய் இருப்பவனே! இப்பொழுது நான் ராவணன் கையிலகப்பட்டுச் சாவதை அறியாயல்லவா? கணவனை உன்னைக்காட்டிலும் வேறொரு தெய்வம் உளதென்றறியேன். உன் மடியிலுட்காரும் பாக்கியம் ஒரு காலத்திலாயினும் நிறைவேறுமற்போகுமா என்னும் ஆசையால் தரையே படுக்கையாகப்பெற்று ராவணனை நீறுசெய்ய வல்லவளாயினும் என்னை ரக்ஷிக்கவேண்டுவது உன்கடமையாய் இருக்க எனக்கு என்ன? என்று நினைத்து என் ஸ்வரூபம் குறையாமல் இருக்கின்றேன்.

ராமா! நான் இவ்வளவு காலமாக உன்னைப் பிரிந்து உன்னைக்காணவும் நேராமல் வருந்தி இளைத்து மீளவும் உன்னுடன்கூடுவோமென்னும் ஆசைக்கு எள்ளளவும் அவகாசமின்றி யிருக்கிறேனாகையால் நான் இதுவையில் ஆசரித்த தருமமும் (சிறந்த ஒழுக்கம்) வீணாயிற்று. எனது பதிவிரதா தருமமும் பயன்தராதொழிந்தது. இவையெல்லாம் எனது தௌர்ப்பாக்கியத்தினாலேற்பட்டவையென்றே நினைக்கிறேன். நான் அற்ப பாக்கியமுடையவள். இப்பொழுது பிராணனை விட்டுவிடலாமென்றால் இந்த ராக்ஷசன் வீட்டில் எனக்கு விஷத்தையாவது கூரான கத்தியையாவது கொடுப்பவன் எவனுமில்லையே!" என்று புலம்பி ராமனையே மனத்தில் தியானித்துக்கொண்டு கிடுகிடுவென்று நடுக்கமுற்று வாய் உலரப்பெற்று புஷ்பித்திருக்கின்ற அச் சிம்சுபா விருக்ஷத்தின்கீழ் வந்தனள்.

பிறகு சீதை துக்கத்தினால் மிகவும் பரிதபித்து தன் தலைப்பின்னலைக் கையில் பிடித்துக்கொண்டு அதனால் உறி

போட்டுக்கொண்டு பிராணனைத் துறந்துவிட விரும்பினள். அப்பொழுது அவளுக்குச் சுபமான பல சகுனங்கள் புலப்பட்டன.

அப்பொழுது சீதையினது இடக்கண்ணானது மீனால் அசைக்கப்பட்டுச் சலிக்கின்ற தாமரைப் பூப்போல் துடித்தது. அவளது இடது புஜமும் துடித்தது. அவளது அழகிய யானையின் துதிக்கையை நிகர்த்த இடது துடை மிகுதியும் துடித்துக்கொண்டு ராமன் எதிரே இருக்கிறனென்று தெரிவித்தது. அவளது அரையில் உடுத்திருந்த வஸ்திரம் கொஞ்சம் நழுவிற்று. சீதை இதுவரையில் பல தடவைகளில் பலிப்பனவாகப் பரீக்ஷித்து நிச்சயிக்கப்பட்ட இந்த சகுனங்களையும் மற்றும் பல சுப சகுனங்களையும் கண்டு, உடனே ராமனது வரவைக்குறித்து சமாசாரம் வருமென்று மனத்தெளிவுபெற்றுச் சிறிது மனக்களிப்படைந்தனள். அப்பொழுது அவளது முகம் ராகுவினின்றும் விடுபட்ட சந்திர பிம்பம்போல் பிரகாசித்தது.

இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பதாவது ஸர்க்கம்

### அனுமான் சீதையை சமாதானப் படுத்த முதலில் ராம குண கீர்த்தனஞ் செய்யவேண்டுமென்று நிச்சயித்தல்.

அதுவரை அச்சிம்சுபாவிருக்ஷத்துக் கிளையில் மறைந்து உட்கார்ந்திருந்த அனுமான் சீதையின் விருத்தாந்தங்களையும், திரிசடை கூறின கனவின் வரலாற்றையும், ராக்ஷச ஸ்திரீகள் சீதையை விரட்டிக்கூறின வார்த்தைகளையும் நேரில் உள்ளபடி செவியுற்று சீதையைக் குறித்து மிகவும் வருந்தினன். பிறகு அந்த அனுமான் தனக்குள் "ஐயோ! பாவம்! இதுவரை இந்த சீதை என்றும் துக்கத்தை யநுபவித்தவ

ளல்லள். அப்படிப்பட்டவள் இப்பொழுது முடிவில்லாத துக்கத்தையனுபவித்துப் பரிதபிக்கின்றனள். இவளை இப்போது ராமனது வரலாறுகளைக் கூறிச் சமாதானப் படுத்துவதே யுக்தம்.

ராக்ஷச ஸ்திரீகள் மிக்க கவனிப்புடன் சீதையைக் காத்துக்கொண்டிருக்கின்றனர். இப்பொழுது சீதையுடன் எப்படி வார்த்தைசொல்லி அவளைச் சமாதானப்படுத்தமுடியும்? இந்த ராத்திரியின் மிகுதி கடப்பதற்கு முன்னமே சமாதானப்படுத்தாதிருப்பேனாயின், இப்பெண்மணி பிராணனை விடுவாள். ஆகையால் நான் இங்கிருந்துகொண்டே தகுந்த அவகாசம் கிடைக்கும்பொழுது இவளைச் சமாதானப்படுத்துவேன். இவளிடம் பேசாமல் நான் ராமனிடம் செல்வேனாயின் அவன் 'சீதை என்ன சொன்னாள்' என்று கேட்பானேல் நான் என்ன சொல்வேன்? அப்படி ஒருக்கால் ராமனை சமாதானம் செய்து இங்கு அழைத்துவந்த போதிலும் அதுவரை இந்த சீதை உயிருடனிருப்பது நிச்சயமில்லை. ஆயினும் நான் சீதை கேட்கும் வண்ணம் சம்ஸ்கிருத (வடமொழி) பாஷையில் பேசுவேனாயின் சீதை குரங்குவடிவமுள்ள என்னைக்கண்டு 'இது ராவணனது மாயை' என்று பயப்படுவாள். ராக்ஷசிகளுக்கு வடமொழி பாஷை தெரியாது.

ராவணன் மாறுவேடம் தரிப்பதிலும் இஷ்டப்படி வடிவங்கொள்வதிலும் வல்லவனாகையால் இதுவிஷயம் சீதைக்கும் ஏற்கனவே தெரியுமாகையால் இவள் என்னை ராவணனென்று நினைத்து மிகுந்தபயத்துடன் கூச்சலிடின், உடனே இந்த ராக்ஷச ஸ்திரீகள் பற்பல ஆயுதங்களுடன் என்மேல் எதிர்த்து வருவார்கள். பிறகு ராவணனது ராக்ஷசவீரர்கள் என்னைப் பிடித்து ஹிம்சிப்பார்கள். நான் அவர்களிடமிருந்து தப்பித்துக்கொண்டு சமுத்திரத்தைத்தாண்டித் திரும்பி வரும்

பொழுது, அவர்கள் ஆகாயத்திற்கிளம்பி என்னைப் பிடித்துக் கொள்ளினும் கொள்வர். அப்பொழுது சீதைக்கு ராமன் சொல்லியனுப்பிய சமாசாரம் தெரியாமற்போகும்; பிறகு ராவணன் சீதையைக்கொன்றாலும் கொன்றுவிடுவான். ஆகையால் இதனால் ராமனது காரியம் முற்றிலும் கெட்டுவிடும். இதற்கென் செய்வது?" என்று வெகுநேரம் ஆலோசித்தனன்.

பிறகு அவ்வானரன் "நான் இவளது கணவனான ராமனது பெயரை முதலில் எடுத்துரைக்கின்றேன். சீதையின் மனம் ராமனிடத்திலேயே மிகவும் பற்றி யிருப்பதாகையால் அவனைக்குறித்த அவ்வார்த்தைகளைக்கேட்டு இவள் பயப்படாதிருப்பாள். எங்ஙனம் மொழிந்தால் இப்பெண்மணி என் வார்த்தைகளில் ஆதரம் வைத்து நம்பிக்கை யடைவாளோ அப்படியே எல்லாவற்றையும் செய்து முடிக்கிறேன்" என்று தனக்குள் நிச்சயித்துக்கொண்டனன்!

முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தோராவது ஸர்க்கம்

### அநுமான் ராமனது வரலாறுகளைக் கூறுதலும், சீதை தலையெடுத்துப் பார்த்தலும்.

இங்ஙனம் அநுமான் சிந்தித்து சீதையினருகில் அவளுக்கு மாத்திரம் செவியிற்படும்படி இனியவாக்கியங்களை மொழியலாயினன்:— 'தசரதன் என்னும் ஓர் அரசன் இருந்தனன். அவனுக்குச் சிறந்த குணங்களும், மேலான பராக்கிரமமும் நிறைந்த ராமன் என்னும் பெயருடைய ஓர் குமாரன் உண்டு. அவன் பதினான்கு வருடங்களுக்குமுன் தன் தந்தையின் வார்த்தையைத் தவிர்க்க முடியாமல் தன் மனைவியான சீதையும் தம்பியான லக்ஷ்மணனும் பின் தொடரப்பெற்று வனத்திற்குச் சென்றனன். அவன் அக்கொடிய வனங்களில்

வேட்டையாடும்பொழுது சூரர்களும் காமரூபிகளுமான கணக்கற்ற ராக்ஷசர்களை அவலீலையாகக் கொன்றனன். ராவணன் ஜனஸ்தானத்திலுள்ள ஸமஸ்த ராக்ஷசர்களும் கரனும், தூஷணனும் ராமனால் அடிபட்டதைக் கேட்டுக் கோபமுற்று ராமனை அழகிய மாயா மிருகத்தினால் மோசஞ்செய்து சீதையை அபகரித்துக்கொண்டு போயினன்.

பிறகு ராமன் சீதையைக் காட்டில் தேடிக்கொண்டு போகையில் சுக்கிரீவனென்னும் வானரனை சிநேகம் செய்து அவனது கொடிய விரோதியான வாலியைக்கொன்று அவனது வானர ராஜ்ஜியத்தை சுக்கிரீவனுக்களித்தனன். பிறகு சுக்கிரீவனது கட்டளையினால் அனேகமாயிரம் வானரர்கள் எல்லாத் திசைகளிலும் சென்று அந்த சீதாதேவியைத் தேடுகின்றனர். நான் அவள்பொருட்டு நூறு யோசனை அகலமுடைய சமுத்திரத்தை வேகமாகத் தாண்டி வந்தனன். ராமன் சொன்ன அங்க அடையாளங்களெல்லாம் நிறையப் பெற்ற அந்த சீதையை இதோ நான் காண்கிறேன்'' என்று இவ்வளவும் கூறி அனுமான் சற்று மௌனமாய் இருந்தனன்.

இவ்வார்த்தைகளைச் செவியுற்ற சீதை மிகுந்த ஆச்சரியத்துடன் தன் முகத்தை உயரத்தூக்கி சிம்சுபா விருக்ஷத்தைக் கண்டனள். சீதை அங்ஙனம் நான்கு திசைகளிலும் விதிசைகளிலும் ஆராய்ந்து நோக்கியும் எவரையும் காணாமல், ராமனையே மனத்தில் தியானம் செய்துகொண்டு மிகுந்த சந்தோஷமடைந்தனள். பிறகு சீதை அம்மரத்தின் பக்கத்தின் மேலும் கீழும், ஆகாயத்திலும் பூமியிலும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டேயிருக்கையில் சிறிய உருவமுடைய அனுமான் அவளது கண்களுக்கு இலக்காயினன்.

முப்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்திரண்டு & முப்பத்து மூன்றவது ஸர்க்கம்

### சீதை தான் கேட்ட ராமகதை கனவோ வென்று பிரமித்து மீளவும் அது உண்மையாகவே இருக்கும்படி தேவதைகளை வேண்டுதல்.

பிறகு சீதை அவ்வானரனைக் கண்டு பயத்தால் மனங் கலங்கப்பெற்று 'அப்பா! இவ்வானரத்தினுருவம் எவ்வளவு பயங்கரமாயிருக்கின்றது! இது எங்கிருந்து வந்ததோ?' என்று நினைத்து மீளவும் துக்கத்தினால் பரிதபித்து 'ராமா! ராமா! லக்ஷ்மணா!' என்று புலம்பினள். சீதை மிகுந்த வணக்கத்துடன் தனக்கருகாக அம்மரக்கிளையில் உட்கார்ந்திருக்கிற அனுமானைப் பார்த்து 'இவ்விலங்கை எங்கே? ராமனது வரலாற்றைச் சொல்பவன் எங்கே? ஆகையால் இது கனவே யன்றி மற்றொன்றுமன்று' என்று நினைத்தனள். அவள் அவ்வானரனுடைய விகாரமான உருவத்தைக்கண்டு மிகுதியும் மூர்ச்சித்து உயிரிழந்தவள்போல் பிரக்கினை தப்பியிருந்தனள்.

சிறிது நேரஞ்சென்று மயக்கம் தெளிந்தெழுந்த சீதை தனக்குள் "ஐயோ! விகாரமான குரங்கைக் கனவில் காணலுற்றேனே! அப்படிக் காண்பவர்களுக்குக் கஷ்டங்கள் நேரிடுமென்று சொல்லுவார்களே! ஆகையால் ராமலக்ஷ்மணர்களுக்கு என்ன கஷ்டம் வந்ததோ? அவர்களுக்கும் எனது தந்தையாரான ஜனகமகாராஜர்க்கும் மங்களம் உண்டாகுக. இது கனவல்ல. தூங்கினாலன்றோ கனவு காண நேரும். நான் எல்லையில்லாத துக்கத்தினால் பீடிக்கப்பட்டு எப்பொழுதும் ராமனையே மனத்தில் தியானித்துக்கொண்டிருப்பதால் அந்த பிரமத்தினால் இங்ஙனம் ராம கதையைக் கேட்கிறாப் போல் தெரிகிறது. இதோ ராமநாமங்களைச் சொல்பவனொருவனைக் காண்கிறேனே. ராமனைக் குறித்து என் மனத்

தில் மிகுதியும் வளர்ந்து வருகின்ற மனோரதமே எனக்கு இங்ஙனம் தோற்றும்படி மாறியிருக்கலாமென்று நினைக்கிறேன்.

ஆனால் உருவமில்லாத மனோரதத்தை எங்ஙனம் காணலாகும்? இதோ எனக்கு ஸ்பஷ்டமாக ஒரு வானர உருவம் தெரிகின்றது. ஆகையால் இது மனோரதமன்றென்று தோன்றுகிறது. மேலும் அவ்வானரனது இனிய குரலும் எனக்குக் கேட்கின்றது. ஆகையால் இவ்வானரன் எவனோ? உண்மையாகவே இவ்விடம் வந்து எனக்குத் தெரியவேண்டுமென்று புலப்பட்டு இங்ஙனம் மொழிந்தானேயன்றி மற்றொன்றுமில்லை. தேவேந்திரனுக்கும், பிருகஸ்பதிக்கும், பிரமதேவனுக்கும், அக்கினிக்கும் நமஸ்காரஞ் செய்கிறேன். இவ்வானரன் மொழிந்த வார்த்தைகளெல்லாம் சொன்னபடியே உண்மையாய் இருக்குமாக. இது கேவலம் ஒரு கனவல்லாதிருப்பதாக" என்று சொல்லிக்கொண்டனள்.

அப்பொழுது அனுமான் மரத்தினின்று கீழே இழிந்து வணக்கத்தினால் சரீரம் வணங்கப்பெற்று நமஸ்காரஞ்செய்து சிறிது அருகே சென்று தலையில் கைகூப்பிய வண்ணம் சீதையைப் பார்த்து "தாமரை யிதழ் போன்ற கண்களையுடைய மாதரசே! நிந்தைக்கிடமாகாதவளே! அழுக்கடைந்து நலுங்கின பட்டு வஸ்திரந் தரித்து மரத்தின் கிளையைப் பிடித்துக்கொண்டு நிற்கின்ற நீ யார்? ஐயோ பாவம்! உனது அழகிய கண்களினின்றும் அருவிபோல் நீர் பெருகுவதற்கென்ன காரணம்? எவனுடைய குலம் பாழாகுவதற்கு இத்தகைய வருத்தமுனக் கேற்பட்டது? நீ தேவ கன்னிகையா? அசுர வனிதையா? நாக ரமணியா? கந்தருவ காந்தையா? ராக்ஷச ஸ்திரீயா? யக்ஷ தருணியா? கின்னர நாரியா? இவர்களில் யாவள்? அழகிய முகமுடையவளே! நீ ருத்திர கணங்

களில் சேர்ந்தவளா? வாயுக்களில் சேர்ந்தவளா? வஸுக்களில் சேர்ந்தவளா?

கறுத்த கண்களையுடையவளே! நீ கோபத்தினாலாவது தெரியாமையாலாவது கணவனை வசிஷ்டரைக் கோபிக்கச் செய்து சுவர்க்க லோகத்தினின்று புறப்பட்டு வந்த அருந்ததியா? உனது அழகிய அங்கங்களின் மங்களகரமான அமைப்பை உற்று நோக்கின் நீ ஒரு மஹாராஜன் பட்டத்து ஸ்திரீயாயிருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது. நீ இங்ஙனம் வருந்த வேண்டிய காரணமென்ன? நீ ராவணன் பலாத்காரமாக எடுத்து வந்த சீதாதேவியாயிருப்பின் உன் விஷயத்தை நான் அறிய விரும்புகிறேன். உனக்கு சுபம் உண்டாகுமாக. யோசித்துப் பார்க்கில் நீ ராமனது மனைவியான சீதையாகத்தானிருக்கவேண்டும். உண்மையை நீயே கூறுவாயாக" என்றனன்.

இங்ஙனம் சீதை அனுமான் மொழிந்ததைக்கேட்டு ராம ஸங்கீர்த்தனம் கேட்டமையால் மனக்களிப்புற்று அவ்வனுமானை நோக்கித் தான் உண்மையில் ராமனது மனைவியென்று கூறித் தான் ராமனுடன் வனவாஸம் வந்தது முதல் அது வரையில் நடந்த வரலாறுகளை யெல்லாம் ஒன்றும் விடாமல் கூறினள். மேலும் அவள் ராமன் காட்டிற்குச் செல்ல நேர்ந்த காரணங்களையும் அவனது ஒப்பற்ற குணங்களையும் பராக்கிரமங்களையும் உள்ளபடியே கூறினள். பிறகு ராவணன் தன்னை அபகரித்துக் கொண்டு வந்தமையும், அவன் பிராணனோ டிருக்க இரண்டு மாதங்களை கெடுவிட்டிருக்கும் விஷயத்தையும் அவ்விரண்டு மாதங்களுக்கு மேல் தன் பிராணனை இழக்கநேருமென்றும் கூறினள்.

முப்பத்து மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்துநான்காவது ஸர்க்கம்.

## சீதை அனுமானை ராவணனென்று சந்தேகிக்க அனுமான் ராமகுணங்களைச் சொல்லி சந்தேகம் தீர்த்தல்.

அனுமான் சீதையின் வார்த்தைகளைக் கேட்டு அவளுக்கு இனிய மறுமொழி கூறினன். "தேவி! நான் ராமனது கட்டளையினால் தூதனாகி உன்னிடம் வந்தேன். சீதே! ராமன் க்ஷேமமாகவே இருக்கின்றனன்; தனது க்ஷேமத்தை உனக்குச் சொல்லச்சொல்லினன். லக்ஷ்மணன் உனக்குத் தலை வணங்கி நமஸ்காரஞ் செய்தனன்" என்றனன். சீதை ராம லக்ஷ்மணர்களது க்ஷேமத்தைக் கேட்டு அளவற்ற மகிழ்ச்சியினால் சரீரம் முழுவதும் மயிர்க்கூச்சலுண்டாகப் பெற்று ஆச்சரியமான பிரீதியுடன் அனுமானுடன் சம்பாஷித்தனள். அப்பொழுது அவ்வாயுசேயன் அம்மாதுசிரோமணியின் அருகிற் சென்றனன். அவனது சரீர அமைப்பை நன்கு கண்ட சீதை "ஐயோ! முன்பின் தெரியாத இவ் வானரன்முன்னே நான் ஏதேதோ மொழிந்தனனே! ஆ! ராவணனே மாறுவேடம் பூண்டு வந்திருக்கின்றான் கொல்!" என்று சிந்தித்தனள்.

இங்ஙனம் தன்னை ராவணனென்று சந்தேகித்து மிகுந்த பயத்தோடு துக்கத்தினால் பீடிக்கப்பட்டுத் தரையில் உட்கார்ந்த சீதையைப் பார்த்து அனுமான் வந்தனஞ் செய்தனன். அவள் அவனை நோக்கி "ஏ ராவணா! நீ நினைத்தபடி வடிவங் கொள்பவனென்று எனக்குத் தெரியும். முன்பு ஜனஸ்தானத்தினின்று நீ சந்நியாசி வேஷம் பூண்டு திருடி வந்தாற் போல் இப்பொழுது வானர உருவம் தாங்கி என் மனதைச் சோதிக்க வந்திருக்கின்றனை. ராக்ஷசா! உனக்கு இது சிறிதும் தகாது. என்னை மேன்மேலும் இப்படி வருந்தச் செய்யாதே! இது உனக்கு நல்லதன்று" என்று இனிய குரலில் கூறினள்.

அனுமான் அவளது சந்தேகத்தைப் போக்க நினைத்து அவளை நோக்கி "தேவி! நான் உண்மையில் ராமதூதனே. ராமன் தன் தம்பியான லக்ஷ்மணனுடன் க்ஷேமமாக இருக்கின்றான். அவனது கோபம் வீணாகாது. எவன் உன்னைத் திருட்டுத்தனமாய் ஜனஸ்தானத்தினின்றும் கொண்டுவந்தனனோ அவனுக்கு நேரப்போகிற முடிவைச் சீக்கிரத்தில் காணப்போகிறாய். நெருப்புப்போல் விளங்கும் பாணங்களை யெய்து எவன் ராவணனைச் சீக்கிரத்தில் கொல்லப்போகிறானோ அந்த ராமனால் அனுப்பப்பட்ட தூதனேயென்று என்னை அறிவாயாக. அந்த ராம லக்ஷ்மணர்களிருவரும் உனது க்ஷேமத்தை விசாரித்து வரச்சொல்லினர். ராமனது நண்பனான சுக்கிரீவ மகாராஜனும் உனக்கு நமஸ்காரஞ் செய்து உன் க்ஷேமத்தை விசாரிக்கச் சொல்லினன். அவர்கள் எப்பொழுதும் உன்னையே நினைத்துக்கொண்டிருக்கின்றனர். நான் குரக்கரசனான சுக்கிரீவனது மந்திரி; அனுமான் என்னும் பெயருடையவன்; பெரிய சமுத்திரத்தைத் தாண்டி லங்கையில் புகுந்து உன்னைக் காண வந்தவன். நீ நினைத்த படி நான் ராவணனல்லேன். உன் பயத்தையும் சந்தேகத்தையும் விடுவாயாக" என்றனன்.

முப்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தைந்தாவது ஸர்க்கம்.

### சீதை ராமனது அவயவ லக்ஷணங்களை வினவ அனுமான் அவற்றைக்கூறி அவளை சமாதானப் படுத்துதல்.

இங்ஙனம் அனுமான் கூறக்கேட்ட சீதை மனதைச் சற்று சமாதானப் படுத்திக்கொண்டு "ஓ வானரனே! நீ அந்த ராம லக்ஷ்மணர்களை எப்படி அறிவாய்? வானரர்களுக்கும் அந்த ராம லக்ஷ்மணர்களுக்கும் எவ்வண்ணம் நட்பு நேர்ந்தது? அந்த ராம லக்ஷ்மணர்களின் அங்க அடையாளங்

களை நீ கண்டபடி எனக்கு விஸ்தாரமாகக் கூறக்கடவாய். அவற்றை நான் கேட்பேனாயின் எனது வருத்தம் சற்று குறையும்'' என்று வினவினள்.

அனுமான் சீதையை நோக்கி "தேவி! ராமன் தாமரை யிதழ் போன்ற கண்களையுடையவன்; மிகுந்த அழகுடைய வன்; ஸமஸ்தஜனங்களின் மனதையும் இழுக்குந் தன்மையன்; ஒளியில் சூரியனையும், பொறுமையில் பூமியையும், புத்தியில் பிருகஸ்பதியையும் நிகர்த்தவன்; உலகத்தையெல்லாம் பாது காக்கும் தன்மையன்; தன் பந்துஜனங்களைக்காப்பாற்றுபவன். சிறந்த தரும மார்க்கங்களில் ஒழுகுபவன்; சத்துருக்களை நாசஞ்செய்பவன்; சிறந்த ஒழுக்கங்களைத் தான்மாத்திரம் அனுஷ்டிப்பதன்றி ஜனங்களைக் கொண்டும் அனுஷ்டிக்கச் செய்பவன்; ஞானிகளால் மிகவும் பூஜிக்கப்பட்டவன்; வேதங் களை நன்கு ஓதி உணர்ந்தவன்; தனுர்வேதத்திலும் (வில் வித்தை) மற்றுமுள்ள வேதாந்தங்களிலும் அவன் சிறந்த பண்டிதன்.

சீதே! ராமன் மலைபோன்ற தோள்களையும் முழங்கால் வரை நீண்ட கைகளையும் உடையவன். சங்கைப்போன்ற கழுத்தையும் மறைந்த தோள் எலும்புகளையும் உடையவன். அவனது குரல் துந்துபி சப்தம்போல் கம்பீரமாயிருக்கும். அவன் மிகக்குள்ளமும் மிக உயரமுமில்லாமல் நடுத்தரமான உயரமும் கறுத்த மேனியின் நிறமும் உடையவன். அவனுடைய மார்பு, மணிக்கட்டு, முட்டி இம்மூன்றும் வலிவா யிருக்கும். அவனது புருவங்களும் புஜங்களும் மிக நீண்டிருக் கும்; மயிர் நுனிகளும், முழந்தாள்களும் ஒன்றோடொன்று சமமாய் இருக்கும்; வயிறு, நாபி, உரம் ஆகிய இம்மூன்றும் உயர்ந்திருக்கும்; கண்களின் கடைகள் நகங்கள் கை கால்களா கிய இம்மூன்றும் சிவந்திருக்கும்; பாதரேகைகள், தலை

மயிர்கள் நிகுநிகுப்புற்றிருக்கும். அவனது வயிற்றிலும் கழுத்திலும் மூன்று மூன்று ரேகைகள் உண்டு. அவனது ஸ்தனங்கள், ஸ்தனங்களின் நுனிகள், பாதரேகைகள் ஆகிய மூன்றும் பள்ளமாயிருக்கும். அவனது தலை மூன்று சுழிகளுடன்கூடி ஒருவகையாக உருண்டு குடையின் உருவம்போல் அகன்று அழகாய் இருக்கும்.

சீதே! ராமனது கட்டைவிரலடியில் நான்கு ரேகைகள் உண்டு; நெற்றி, உள்ளங்கால், உள்ளங்கை ஆகிய இவற்றில் நான்கு ரேகைகளை உடையவன். அவன் நான்கு முழம் (96 அங்குலம்) அளவுடையவன்; சிம்மத்தைப்போன்ற கம்பீரமான நடையுடையவன். பின்னும் அவனது முகமும் கண்களும் வாயும் நாக்கும் உதடும் தவடையும் ஸ்தனங்களும் நகங்களும் தாமரைப் புஷ்பம் போலிருக்கும். அவனது தலையும், நெற்றியும், செவிகளும், கழுத்தும், வயிறும், மார்பும், கைகளும், கால்களும், பின்புறமும் பெரியனவாயிருக்கும்.

ஜானகி! லக்ஷ்மணன் சற்றேறக்குறைய ராமனது உருவத்தைப் போன்றவனே. அவ்விருவரும் உன்னைப் பூமியெங்கும் தேடிக்கொண்டே வருகையில் சுக்கிரீவனென்னும் குரக்கரசனைக்கண்டனர்" என்று கூறிப் பிறகு ராமனுக்கும் சுக்கிரீவனுக்கும் நட்பு ஏற்பட்டது முதல் கிஷ்கிந்தையில் நடந்த சகல விருத்தாந்தங்களையும், சுக்கிரீவனால் சீதையைத் தேடும் பொருட்டு வானரர்கள் அனுப்பப்பட்ட வரையிலும் ஒன்றையும் விடாமல் சீதைக்குக் கூறினன்.

பிறகு அந்த அனுமான் தானும் வானரர்களும் தென் திசைநோக்கிப் புறப்பட்டது முதல் தான் சீதையைக்கண்ட வரையில் இடையில் தானும் வானரர்களும் அடைந்த பலவித கஷ்டங்களையும் சீதையைக்காணமையால் வானரர்கள் கிஷ்கிந்

தைக்குச்செல்ல மனமில்லாமல் உயிரை விட்டுவிட நிச்சயம் செய்ததையும், பிறகு சம்பாதி யென்னும் கழுகினால் சீதையினிருப்பிடத்தைத் தெரிந்து கொண்டது முதலான எல்லா விஷயங்களேயும் ஒன்றும் விடாமல் உள்ளபடியே சீதையிடம் கூறினன்.

அனுமான் இங்ஙனம் சீதைக்கு நம்பிக்கையை விளைவிக்கவல்ல ராமனது அங்க அடையாளங்களேயும் குணங்களேயும் கூறினபோது அவள் சந்தோஷத்தின் மிகுதியால் முகவிலா சம்பொருந்தி அனுமானை அன்புடன் நோக்கி அவன் உண்மையில் ராமனாலனுப்பப்பட்ட தூதனே யென்று நிச்சயித்தனள்.

முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

முப்பத்தாறுவது ஸர்க்கம்.

## அனுமான் சீதைக்கு ராமனது மோதிரத்தைக் கொடுத்து சந்தோஷப் படுத்துதல்.

பிறகு அனுமான் சீதையைப்பார்த்து "தேவீ! நான் ராமனால் உன்னைத் தேடும்பொருட்டு அனுப்பப்பட்ட வானரனேயன்றி ராக்ஷசனல்லேன். இதோ அதற்கடையாளமாக ராமனது நாமமிடப்பெற்ற அவன் மோதிரத்தைக் கொண்டு வந்திருக்கிறேன். காண்பாயாக. ராமன் உனக்கு என்னிடத்தில் நம்பிக்கை யுண்டாகும் பொருட்டே இதை என்னிடம் கொடுத்தனுப்பினன். சீதே! இனி சந்தேகத்தைவிட்டு சமாதானமடைவாயாக. உனது துன்பங்களெல்லாம் தொலைந்தன. சீக்கிரத்தில் ராமன் இவ்விடம் வந்து ராவணனைத் தொலைத்து உன்னை அடையப்போகின்றனன்" என்றனன்.

சீதை மிகுந்த ஆவலுடன் ராமனது கணையாழியை வாங்கி அதை உற்று நோக்கித் தனது கணவனை ராமனையே அடைந்துவிட்டாற்போல் சந்தோஷமடைந்தனள். அவள்

மிகுந்த சந்தோஷத்துடன் அனுமானை ஆதரத்துடன் வெகு மதித்துப்புகழ்ந்து 'ஏ வானரோத்தமா! நீ ஒருவனே ஒருவர்க்கும் புகமுடியாத இவ்விலங்கையில் புகுந்தனை. ஆ! என்னே உன் வீரபராக்கிரமம்! நூறுயோசனை அகலமுள்ள சமுத்திரத்தைத்தாண்டி வந்தனை. நீயே பராக்கிரமசாலி! நீயே வல்லமை உடையவன்! நீயே மிகுந்த புத்திசாலி! வானர திலகனே! உன்னைப்பார்க்கில் நீ ராவணனிடம் சிறிதும் அஞ்சுகிறவனுகத் தோன்றவில்லை. நீ சாதாரண வானரனல்லன் என்று எனக்குத் தோன்றுகிறது. இப்பொழுது என் பாக்கியவசத்தினுல் ராம லக்ஷ்மணர்கள் க்ஷேமமாய் இருக்கிறார்களென்று உன்னுல் கேட்கப்பெற்றேன்.

வானர சிரேஷ்டனே! ராமன் க்ஷேமமாய் இருந்தும் தன் இஷ்டமனைவியான என்னை ராக்ஷசன் கொண்டுபோனதற்குக் கோபமுற்று இப்பூமண்டலத்தை யெல்லாம் ஏன் எரிக்கா திருக்கின்றனர்? அவ்வண்ணன் தம்பிக ளிருவரும் தேவதைகளையுமடக்க வல்லவர்களல்லவா? ஆ! இதெல்லாம் எனது பாப கருமத்தினுல் நேர்ந்ததன்றி வேறல்ல. அனுமானே! ராமன் என்னை நினைத்துக்கொண்டு துக்கத்தினுல் உடம்பு இளைக்காதிருக்கின்றானு? எப்பொழுதும் என்னையே நினைத்து வருந்துகிறாரா? என்னைப் பெறுதற்கு வேண்டிய காரியங்களைச் செய்கின்றாரா? இங்ஙனம் நான் தூரத்திலிருப்பினும் என்னிடம் பிரீதியுடையவராய் இருக்கின்றாரா? வானர வீரனே! அவர் என்னை இந்த துக்கத்தினின்றும் கரையேற்றுவாரல்லவா? கௌசல்யை முதலிய தாய்மார்கள் க்ஷேமங்கள் அப்பொழுதைக் கப்பொழுது தெரிந்துகொண்டிருக்கின்றதா? சீக்கிரத்தில் ராமன் வானர வீரர்களுடன்கூடி இவ்விடம் வந்து பொல்லா வரக்கனைக் கொன்றொழிப்பானு? அந்த ராமன் என்னைப் பிரிந்த சோகத்தினுல் தைரியத்தை விடாதிருக்கின்றனனு?

அநுமானே! 'ராமனைவிட்டுப் பிரிந்தும் உயிருடன் இருக்கின்றனையே!' என்று என்னைக் கேட்க வேண்டாம். ஏனெனில் ராமனது அன்பிற்கெல்லாம் நானே இருப்பிடம். ஆகையால் இப்படிப்பட்ட அன்பிற்கிடமான நான் உயிரை விடுவேனாயின் ராமன் எள்ளளவும் ஜீவித்திருக்கமாட்டான். ஆகையால் எனது பிராணநாதன் என்னைக் கொண்டுபோக முயற்சி செய்யும் சமாசாரம் எனக்குத் தெரியும் வரையில் நான் பிழைத்திருக்க வேண்டியவளன்றோ" என்றனள்.

அநுமான் தலையில் அஞ்சலி செய்தவண்ணம் சீதையை நோக்கி "தேவீ! ராமனுக்கு இதுவரை நீ இங்கிருக்கும் விஷயம் தெரியாதிருந்தமையால் வாளாவிருந்தனர். என்றால் உன் சங்கதியைக் கேட்டவுடனே, அவர் பெரிய வானர சேனையைத் திரட்டிக்கொண்டு வேகமாக இவ்விடம் வந்து ராவணனைக் கொன்று உன்னைக் கொண்டுபோவார். இதில் சிறிதும் சந்தேகமில்லை.

சீதே! ராமன் உன்னைக் காணுதிருக்கின்றமையால் துக்கசாகரத்தில் மூழ்கி சிம்மத்தினால் பிடிக்கப்பட்ட யானை போல் எள்ளளவும் சுகத்தை அடையாதிருக்கின்றனன். தேவீ! நிச்சயமாக ராமனது முகாரவிந்தங்களைக் காணப் போகிறாய். உன்னைப் பிரிந்த வருத்தத்தினால் ராமன் உணவு உண்பதில்லை; தினந்தோறும் சாயங்காலத்தில் சரீரம் தரித்திருப்பதற்கு வேண்டிய காய் கிழங்குகளைமாத்திரம் தின்கின்றனர். அவர் மனமெல்லாம் உன்னிடத்திலேயே லயித்திருக்கின்றமையால் அவர் தேகத்தினின்று ஈக்களையாவது கொசுக்களையாவது புழுக்களையாவது அப்புறம் போகும்படி ஓட்டுவதில்லை. ராமன் உன்னைவிட்டுப் பிரிந்த வருத்தத்தினால் மன்மத பாதையிலகப்பட்டு எப்பொழுதும் உன்னையே சிந்தித்துக் கொண்டிருக்கின்றனன். அவர்க்கு நித்திரை யென்பதே கிடையாது. சிறிதளவு நித்திரை

செய்ய நேர்ந்தாலும் அப்பொழுது 'சீதே!' என்று மதுரமான குரலில் கூப்பிட்டுக்கொண்டே எழுந்திருப்பார்.

அழகிய கண்களையுடையவளே! ராமன் பழத்தையாவது புஷ்பத்தையாவது மற்றும் மனோகரமான பதார்த்தம் எதையாயினும் காண்பானாயின், அப்பொழுது உம்மை நினைத்துப் பெருமூச்செறிந்துகொண்டு 'ஆ! பிராண நாயகி!' என்று பலவாறு வாய் பிதற்றுவான். அவர் அல்லும் பகலும் உம்மையே நினைத்துக்கொண்டு இருக்கிறார். இதனால் அவர் உம்மைத் தேடும் விஷயத்தில் எவ்வளவு முயற்சி யெடுத்துக்கொள்வாரென்பதை நீரே உணர்வீராக." என்றனன்.

முப்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தேழாவது ஸர்க்கம்

### அநுமான் தானொருவனே சீதையைத் தன் தோள்மீதேற்றிக் கொண்டு ராமனிடம் போவேனென்ன சீதை ராமனே ராவணனைக் கொன்று தன்னைக் கொண்டு போவது யுக்தமென்று உரைத்தல்.

இங்ஙனம் இனிமையாக மொழிந்த அநுமானுடைய வார்த்தைகளைக்கேட்ட சீதை மிகுந்த சந்தோஷங்கொண்டு அவ்வானரனை நோக்கி "வானரோத்தமா! நான் ராமனைப் பிரிந்தது என்சொந்த புத்தியாலன்று, ஒருவனுக்கு மிகுந்த ஐசுவரியம் வரும்பொழுதும் மிகுதியும் பயங்கரமான விசனம் நேரும்பொழுதும் அவன் எள்ளளவும் சுதந்திரனல்லன். தெய்வம் அவனைக் கயிற்றினால் கட்டினாற்போல் பிடித்து இழுத்துக்கொண்டு போகின்றது. மானிடர்க்குத் தெய்வத்தைத் தடுப்பது சாத்தியமன்று. ராம லக்ஷ்மணர்களும் நானும் இப்பொழுது ஆழங்காண முடியாத துன்பக்கடலுள் மூழ்கியிருக்கின்றனம். நாங்கள் எப்பொழுது அதினின்று வெளிக்கிளம்பிக் கரைசேரப் போகின்றனம்? ராமன் எப்

பொழுது லங்கையை நீறுசெய்து என்னைக் கைப்பற்றப் போகின்றனன்?

அனுமானே! ராவணன் எனக்கு ஏற்படுத்தியிருக்கும் ஒருவருஷ காலமாகிற கெடுவில் இனி இரண்டு மாதங்களே மிகுந்திருக்கின்றன. அதற்குள் ராமனை இவ்விடத்திற்கு வரும்படி செய்யவேண்டும். ராவணனது தம்பியான விபீஷணன் என்னை ராமனிடம் திருப்பிக்கொடுத்துவிடும்படி எவ்வளவு தூரம் சொன்னபோதிலும் ஆயுட்காலம் முடிவடையப்போவதால் ராவணன் அதற்குச் சிறிதும் இணங்கவில்லை. மேலும் எனது மனம் இதுவரையிலில்லாமல் திடீரென்று நிர்மலமாக இருப்பதாலும், மற்றும் பல சுப சகுனங்களை நான் கண்டவுடன் உன்னையும் கண்டமையாலும் நிச்சயமாக ராமன் என்னைச் சீக்கிரத்திலேயே பெறப்போகின்றனன்" என்று ஓயாமல் ராமனைக் குறித்துச் சொல்லிக் கொண்டே இருந்தனள்.

அப்பொழுது அனுமான் அவளை நோக்கி "அழகிற் சிறந்த முகமுடையவளே! நான் போய் உமது வரலாற்றை ராமனுக்குச் சொன்னவுடன் அவர் சிறிதும் தாமதமின்றிப் பெரிய வானர சேனையைக் கூட்டிக்கொண்டு இவ்விடத்திற்கு வருவார். இவ்வளவு சொல்லி என்? சீதே! அப்படியில்லையாயின் உமது துக்கத்தை இப்பொழுதே நான் போக்கடித்து விடுகிறேன். நீர் என் முதுகின்மேலேறிக் கொள்ளலாம். உம்மை முதுகின்மேலேற்றிக்கொண்டே நான் சமுத்திரத்தைத் தாண்டிச் சென்று ராமனிடம் கொண்டு சேர்த்துவிடுகிறேன். இக்காரியம் என்னால் முடியுமாவென்று நீர் சிறிதும் சந்தேகப்படவேண்டா. ராவணனுடன் கூடின இவ்விலங்கையையும் கூட அநாயாஸமாகப் பெயர்த்து எடுத்துக் கொண்டு போக எனக்குச் சக்தியுண்டு. இனி உம்மை எடுத்துக்கொண்டு போவது எனக்கெவ்வளவு? உம்மைக் காண

நானுவித முயற்சிகளைச் செய்துகொண்டிருக்கிற ராமனை நீர் இப்பொழுதே காணநேரும். அம்மே! உம்மை இவ்விடத்தி லிருந்து நான் எடுத்துக்கொண்டு பிரயாணமாய்ப் புறப்பட்ட வுடனே ராக்ஷசர்கள் ஒருகால் என்னைப் பிடித்துக்கொள்வார் களென்று நீர் சந்தேகப்படவேண்டாம். இவ் விலங்கையி லுள்ள எவனுயினும் ஆகாயத்தில் என்னைப் பின்தொடர்ந்து என்னைப்போல் வர வல்லவனல்லன். வைதேகி! நான் எப்படி சுகமாக சமுத்திரத்தைத் தாண்டி இவ்விடம் வந்தேனே, அப்படியே வருத்தமின்றி உம்மை எடுத்துக்கொண்டு ஆகாச மார்க்கத்தில் திரும்பிப்போவேன்." என்றனன்.

இங்ஙனம் அனுமான் மொழிந்த அற்புதமான வார்த்தை களைக்கேட்ட சீதை அவனைநோக்கி "அனுமானே! உனது குரங்குத்தன்மைக்குச்சேர நீ இங்ஙனம் கூறினுயென்று நினைக்கிறேன். உன்தேகமோ மிகுதியும் அற்பமாயிருக்கின் றது. இங்கிருந்து ராமனிருக்குமிடமோ வெகு தூரத்திலிருக் கின்றது. நீ அவ்விடத்திற்கு என்னைக் கொண்டுபோக விரும்பு கின்றனை. இதெப்படி கூடும்? ஆச்சரியமாயிருக்கின்றதே!" என்றனள்.

உடனே அனுமான் தன் உண்மையான வடிவத்தை சீதைக்குக்காட்ட விரும்பி அம்மரத்தினின்று பூமியில் குதித்து தனது தேகத்தைப் பெருக்கினன். அங்ஙனம் பர்வதம்போன்ற உருவத்துடன் கூடி சிவந்தமுகமும் வஜ்ஜி ரம்போல் கடினமான கோரப்பற்களும் நகங்களும் பொருந் திப் பயங்கரமாகப் புலப்படுகின்ற அவ்வாயுமைந்தனை சீதை கண்டனள். அப்பொழுது அனுமான் "சீதே! மலை, வனம் நதி, மாடமாளிகை, கோட்டை வாயிற்படி இவை முதலியவற் றுடன் கூடின இவ்விலங்கைமா நகரத்தையும், இதற்குத் தலை வனுன ராவணனேடுங்கூடப் பிடுங்கி எடுத்துக்கொண்டுபோக எனக்குச் சக்தியுண்டு. தேவி! ஆகையால் பயப்படவேண்

டாம். புத்தியைத் திடப்படுத்திக்கொண்டு சீக்கிரம் என்முதுகில் ஏறிக்கொள்வீராக" என்றனன்.

சீதை அநுமானை நோக்கி "வானர திலகனே! உனது தைரியத்தையும் பலத்தையும் நான் நன்கு அறியாமலில்லை. இப்படிப்பட்ட உன்னைப்போன்றவனன்றி மற்று எவன்தான் மிகப்பெரிய சமுத்திரத்தைத் தாண்டி இங்கு வருவான்? வானரோத்தமா! நீ ராக்ஷசர்கையில் அகப்படாமல் என்னை எடுத்துக்கொண்டு போவாயென்று எனக்கும் நம்பிக்கையுண்டு. ஆயினும் நான் உன்னோடுவருவது எள்ளளவும் யுக்தமன்று. ஏனெனில் நீ மிகுந்த வேகமுடையவனாகையால் நீ என்னை முதுகில் எடுத்துக்கொண்டு சமுத்திரத்தை தாண்டும்பொழுது நான் பயங்கரமான சமுத்திரத்தைக்கண்டு பயந்து உன் முதுகினின்று விழுந்துவிடுவேன். சமுத்திரத்திலுள்ள ஜலஜந்துக்கள் என்னை விழுங்கிவிடும். அநுமானே! நீ சத்துருக்களை யழிக்கும் தன்மையனேயாயினும், உன்னோடு நான் வரத்தகுந்தவ ளல்லேன். ஏனெனில் நீ என்னைக் கொண்டுபோவது கண்டு ராக்ஷசர்கள் பலர் உன்னைப் பின்தொடர்ந்து சூலாயுதங்களையும் இரும்புத் தடிகளையும் தரித்து உன்னைச் சுற்றிலும் சூழ்ந்து கொள்வார்கள். அப்பொழுது நீ ஒருவனேயாகையால் உன்னைக்காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டுச் சண்டை செய்வதன்றி என்னையும் காப்பாற்ற வேண்டிவரும். அதுவோ ஒருவர்க்கும் முடியாதகாரியம். நீயோ தனியனாய் ஆயுதமில்லாமல் அவர்களிடமிருந்து தப்பித்துக்கொள்ளும் பொருட்டு மிகுந்த பிரயாசத்துடன் சண்டைசெய்ய நேரிடும். அப்பொழுது என்கதி யாதாகும்? அப்பொழுது நான் பயத்தினால் வருந்திக் கீழேவிழ நேரிடும். அப்பொழுது ராக்ஷசர்கள் என்னைக்கொண்டுபோய்க் கொன்றுவிடுவார்கள். பிறகு உனக்கு ஜயமே உண்டாயினும் அதனால் யாதுபயன்?

வாயுமைந்த! நீ எனக்காகப்பட்ட பாடுகளெல்லாம் அப்பொழுது வீணாய்விடும். ஆகையால் நீ ராமனிடஞ்சென்று என் விஷயத்தைக்கூறி ராமனுடன் கூடி இவ்விடம் வருவாயாயின் எனக்கு மிகுதியும் மேன்மையுண்டாகும். நீண்ட புஜங்களை யுடையவனே! இதனால் ராமனுக்கு சிறந்த கீர்த்தியும் உண்டாகும். இப்பொழுது ராம லக்ஷ்மணர்களது பிராணன்களும், அவர்களது தம்பிகளின் பிராணன்களும், உன் அரசனான சுக்கிரீவனது பிராணனும் என்னைப்பற்றி நின்று இருக்கின்றன. இப்படிப்பட்ட எனக்குப் பிராணபயம் நேருமாயின் இத்தனை பேர்களின் பிராணன்களும் பாழாய்விடும். பிறகு சமஸ்த வானரர்களும் கரடிகளும் பிராணன்களை விடுவார்கள்.

ஆஞ்சனேய! நான் என் கணவனான ராமனது சரீரத்தைத்தவிர மற்றொரு புருஷனது உடம்பைத் தொடமாட்டேன். ஆனால் "ராவணன் உன்னைத் தொடவில்லையோ?" எனில் அப்பொழுது எனக்கு எதுவும் செய்ய சக்தியில்லாமல் போயிற்று. ராவணனது பலாத்காரத்தினால் அவன் மேல் படும்படியாயிற்று. அப்பொழுது ராமனும் அருகில் இல்லை. அதற்கு என்ன செய்யலாகும்? ராமன் இவ்விடம் வந்து ராவணனை அவனது பந்துக்களோடு கொன்று என்னை இவ்விடமிருந்து அழைத்துக்கொண்டு போவானாயின் அதுவே அவனுக்குத் தகுந்திருக்கும். ஆகையால் மாருதியே! நீ ராம லக்ஷ்மணர்களையும் வானர சேனைகளையும் இவ்விடத்திற்குச் சீக்கிரத்தில் அழைத்துக்கொண்டுவந்து வெகு காலமாக வருந்தி மனக்களிப்பற்றிருக்கின்ற எனக்கு சந்தோஷத்தை விளைவிப்பாயாக" என்றனள்.

முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தெட்டாவது ஸர்க்கம்.

### சீதை அடையாளமாக காகாசுர விருத்தாந்தத்தைச் சொல்லிச் சூடாமணியை அனுமானிடம் கொடுத்தல்.

இங்ஙனம் சீதை சொல்லக்கேட்ட அனுமான் அவளை நோக்கி "தேவி! சிறந்த பதிவிரதையாகையால் நீ கூறினவை யனைத்தும் மிகவும் யுக்தமாகவே யிருக்கின்றன. உன்னைத் தவிர மற்ற எவள் இப்படிப்பட்ட வார்த்தைகளைமொழிவாள்? உனது சகிக்க முடியாத துயரத்தைக் கண்டதாலும், ராம னுக்கு எப்படியாயினும் நன்மை செய்யவேண்டுமென்னும் விருப்பத்தினாலும், அன்பினால் நான் மனம் கலங்கப்பெற்று இங்ஙனம் மொழிந்தேனன்றி வேறில்லை. பின்னும் இலங்கை புகமுடியாதிருப்பதையும், சமுத்திரம்தாண்ட முடியாதிருப்ப தையும், என்னுடைய திறமையையும் ஆலோசித்து இங்ஙனம் மொழிந்தேனென்றுங்கொள்க.

சீதே! உனக்கு என்னுடன் கூடவர சம்மதமில்லையாயின் நான் வந்து உன்னைக் கண்டது ராமனுக்குத் தெரியும்படி ஏதேனும் ஓர் அடையாளமாயினும் கொடுப்பாயாக" என்ற னன். அப்பொழுது சீதை அடையாளம் கொடுப்பவளாகித் தன் கணவனோடு ஏகாந்தத்தில் நடந்த ஒரு வரலாற்றைப் பற்றிக் கூறத்தொடங்கினள்.

சீதை அனுமானை நோக்கி "முன்பு சித்திரகூட பர்வதத் தின் வடகிழக்கு மூலையிலுள்ள தாழ்வரையில் ஒரு ஏகாந்த மான இடத்தில் நான் வசித்திருக்கும்பொழுது ஒரு சம்பவம் நிகழ்ந்தது. இது மிகுதியும் மேலான அடையாளமாகை யால் இதை எனதன்பனான ராமனிடம் சொல்வாயாக. நான் ஒரு சமயம் விளையாடிக் களைப்புற்று ராமனது மடியில் உட் கார்ந்திருந்தபொழுது ஒரு காகம் மாமிசத்தின் போராசையால் என் கொங்கைகளினிடையில் மூக்கால் குத்தியது.

நான் எவ்வளவு அதட்டி ஓட்டினும் அதுபோகாமல் என் ஸ்தனங்களைக் குத்திக்கொண்டு அங்கேயே மறைந்திருந்தது. அதைக் கண்டு ராமன் என்னைப் பரிகசிக்கையில் நான் வெட்கத்திஞல் ராமனைக் கோபித்தேன். பிறகு ராமன் என்னை நல் வார்த்தைகளைச் சொல்லி சமாதானப்படுத்தினன். நான் இளைப்புற்று ராமனது மடியில் படுத்துறங்கினேன். தூக்கந் தெளிந்து நான் எழுந்திருக்கையில் ராமனும் என் மடிமேல் படுத்து நித்திரை செய்தனன். அப்பொழுது அக்காகம் மீண்டும் அவ்விடத்திற்கு வந்து என்னை எதிர்த்து மறுபடியும் எனது கொங்கைகளினிடையில் அதிகமாகப் பிறி என்னை மிகுதியும் புண்படுத்தியது. அந்தப் புண்ணினின்று பெருகின ரத்தத்திஞல் ராமன் நனைந்தனன். பிறகு என்னல் எழுப்பப்பட்ட ராமன் எனது ஸ்தனங்கள் பீறப்பட்டுப் புண்ணுயிருப்பது கண்டு மிகுந்த கோபங்கொண்டு தனது தர்ப்பாஸனத்தினின்று ஓர் தர்ப்பத்தையெடுத்து அதை பிரமாஸ்திர மந்திரத்திஞல் அபிமந்திரித்து அக்காகத்தின் மேலெய்தனன். அக்காகம் இந்திரனது பிள்ளையாம்; பறக்கும் வகைகளில் மேலாயிருப்பது. அப்படிப்பட்ட காகத்தை அப் பிரமாஸ்திரம் ஆகாயத்தில் துரத்திக்கொண்டே போயிற்று. அக்காகம் தன்னை எவரேனும் காப்பாற்றுவாரென்று இப்பிரபஞ்சம் முழுதும் திரிந்தது. அக்காகத்தைத் தந்தையாகிய இந்திரனுங் காக்க முடியாதென்று கைவிட்டனன். தேவதைகளும் மகரிஷிகளும் கைவிட்டனர்.

இங்ஙனம் அக்காகம் மூன்றுலோகங்களிலும் திரிந்து தன்னைக் காப்பவர் எவருமில்லாமையால் கடைசியில் அந்த ராமனையே சரணமடைந்தது. ராமன் தன்னைச் சரணமடைபவன் எவனுயினும் அவனைக் காப்பாற்றும் குணமுடையவனுகையால் அக்காகத்தைக் கொல்லாது விட்டனன். ஆயினும் தனது பிரமாஸ்திரம் வீணுகாதாகையால் அக்காகத்தின்

விருப்பத்தின்படி அதன் வலது கண்ணைக் குருடாக்கி அதன் உயிரைக் காப்பாற்றினன். பிறகு காகம் தன் இருப்பிடம் சென்று சேர்ந்தது.

அனுமானே! இங்ஙனம் முன்பு எனக்காக ஒரு அற்ப ஜந்துவின்மேல் பிரமாஸ்திர பிரயோகஞ் செய்த ராமன் இப்பொழுது என்னை ஒரு ராக்ஷசன் கொண்டுபோனதைக் கேட்டும் எப்படி வெறுமனே யிருக்கின்றனன்? இதற்கு நான் செய்த பாவமே காரணமென்று தோன்றுகிறது.

வானரனே! நீ ராமனை எனக்காக க்ஷேமம் விசாரித்துத் தலைசாய்த்து நமஸ்கரிப்பாயாக. லக்ஷ்மணனை எனக்காக க்ஷேமம் விசாரிப்பாயாக. உனது பிரயத்தனத்தினால் தான் ராமன் என்னை யழைத்துக்கொண்டு போகும் விஷயத்தில் முயற்சி யுடையவனாவான். நான் கூறினதாக இங்ஙனம் ராமனிடம் சொல்வாயாக. "ராமா! நான் இனி ஒருமாதமே பிராணனை வைத்துக்கொண்டிருப்பேன். அதற்குமேல் எள்ளளவும் ஜீவித்திருக்கமாட்டேன். இங்ஙனம் சத்தியமாய் ஆணையிட்டுச் சொல்கின்றேன். அதற்குள் இங்கு வந்து என்னைச் சிறைமீட்டு ரக்ஷித்தருளவேண்டும் என்று நான் சொன்னதாகக் கூறுவாயாக" என்றுமொழிந்து, தன் வஸ்திரத்தின் நுனியில் முடிந்துவைத்திருந்த அழகிய சூடாமணியை யெடுத்து 'இதை ராமனிடம் எனதடையாளமாகக் கொடுப்பாயாக!' என்று அனுமானிடம் கொடுத்தனள்.

அனுமான் அதை வாங்கிக்கொண்டு சீதையை வலம் வந்து வணங்கி மிகுந்த மகிழ்ச்சியுடன் மீளவும் பிரயாணமாய்ப்போக முயற்சிகொண்டனன்.

முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தோன்பதாவது ஸர்க்கம்.

**சீதை ராம லக்ஷ்மணர்களும் வானரர்களும் சமுத்திரம் தாண்டுவதைப்பற்றி வினவ அனுமான் சமாதானம் கூறுதல்.**

அனுமான் புறப்பட்டுப் போகக்கண்ட சீதை கண்ணீரால் தடுக்கப்பட்டுத் தழுதழுத்த உரைகளுடன் "அனுமானே! காலதாமதம் செய்தால் நான் பிழைத்திருக்க முடியாது. ஆகையால் நான் பிழைத்திருக்கும்பொழுதே ராமன் வந்து என்னை இந்த ஆபத்தினின்று ரக்ஷித்து சந்தோஷப் படுத்தும்படி நீ அவனுக்குச் சொல்லவேண்டும். இல்லையாயின் இத்தனை நாள் அவன் சம்பாதித்த புகழெல்லாம் பாழாய் விடுமென்று சொல்வாயாக. நீ மிகுந்த புத்தியும் யுக்தியும் உடையவனாகையால் என்னைப் பெறவேண்டுமென்கிற ஆணவம் ராமனுக்கு மேன்மேலும் உண்டாகும்படியான வார்த்தைகளைச் சொல்லி அவனைச் சீக்கிரம் இவ்விடம் வரும்படி செய்யவேண்டும்" என்றனள்.

அனுமான் அவளை நோக்கி "சீதே! நீர் சிறிதும் கலங்க வேண்டாம். வெகு சீக்கிரத்தில் ராமன் லக்ஷ்மணனுடன் கூடி எண்ணிறந்த வானர சேனைகளையும் கரடிச் சேனைகளையும் கூட்டிக்கொண்டு இவ்விடம் வந்து ராவணனை வென்று உன்னை மீட்கப்போகின்றனன். நீ கூறியவை எல்லாவற்றையும் அப்படியே ஒன்றும் விடாமல் நான் ராமனிடம் கூறுகின்றேன். இனிக் கவலையை ஒழித்து உத்சாகத்துடனிருப்பீராக" என்றனன்.

சீதை அனுமானை நோக்கி "வாயு மைந்தனே! உனக்கு விருப்பமுளதாயின் இங்கு ஏகாந்தமான பிரதேசத்தில் ஒரு நாள் தங்கி இளைப்பாறி நாளைய தினம் செல்லலாம். இங்ஙனம் நீ இங்கு என் சமீபத்திலிருப்பாயாயின் எனக்கு இப்பொழுது நேர்ந்திருக்கும் பெரிய துக்கத்திற்குச் சிறிது

இடை வெளி உண்டாகும். வானர திலகனே! இப்பொழுது எனக்கொரு பெரிய சந்தேகம் உண்டாயிருக்கிறது. அது யாதெனில்; அந்த ராம லக்ஷ்மணர்களும் வானர சைன்னியங்களும் தாண்ட முடியாத இப்பெரிய சமுத்திரத்தை எப்படித் தாண்ட வல்லவராவர்? கருடன், வாயு ஆகிய இருவர்க்கும் உனக்கும் தவிர, மற்று எவர்க்கும் கடல் தாண்டுவது சாத்தியமில்லையென்பது அனைவருமறிந்த விஷயம். இதைப் பற்றி எனக்கு எவ்விதமான சமாதானம் கூறப்போகின்றனை? நீ யொருவனே ராவணன் முதலியோரைக் கொன்று என்னை ராமனிடம் சேர்ப்பிக்க வல்லவனாயினும், நீ அப்படிச் செய்வாயாயின் அதனால் தூதனாகிய உனக்குமாத்திரம் கீர்த்தி விளையுமேயன்றி ராமனுக்குச் சிறிதும் உண்டாகாது. ராமனே நேரில் இங்கு வந்து ராவணனை வென்று என்னை மீட்டுக் கொண்டு போவானாயின் அதுவே அவனுக்குத் தகுதியாய் இருக்கும். ஆகையால் அந்த ராமன் சைன்னியங்களுடன் கடல் தாண்டி வருவதெப்படி?" என்றனள்.

இங்ஙனம் வினவிய சீதையை நோக்கி அனுமான் "அழகிய கண்களையுடையவளே! சுக்கிரீவனிடம் என்னைக் காட்டிலும் மேற்பட்டவர்களும் என்னைப் போன்றவர்களுமான வானரர்கள் பலர் இருக்கின்றனரேயன்றி என்னைக் காட்டிலும் குறைந்தவன் ஒருவனுமில்லை. உலகத்தில் பிரபுக்கள் சிறந்தவர்களை எப்பொழுதும் எங்கும் அனுப்பமாட்டார்கள். கேவலமான அற்ப ஜனங்களையே அனுப்புவார்களல்லவா? எல்லோரினும் கடைப்பட்டவனான நானே இக்கடலைத் தாண்டி வரும்பொழுது மிகுந்த பலசாலிகளான மற்றைய வானரர்கள் வருவதுபற்றிச் சொல்லவேண்டுமோ? ஆகையால் தேவீ! துயரப்படவேண்டாம். அந்த ராம லக்ஷ்மணர்களும் என் முதுகின்மேலேறிக்கொண்டு உதித்த சூரிய சந்திரர்கள் போல் விளக்கமுற்று உன்னிடம் வந்து சேருவார்கள்.

அழகிய முகமும் சிறந்த கற்புமுடையவளே! சீக்கிரத்தில் ராமன் கூரிய பாணங்களைப் பிரயோகித்து இலங்கையைப் பாழ்செய்யப் போகின்றனன். ராவணனையும் அவனது பந்துக்களையும் கொன்று உம்மை அழைத்துக்கொண்டு அயோத்திக்குச் செல்லப்போகின்றனன். ஆகையால் நீர் சமாதானமுற்றிருப்பீராக; மைதிலீ! இனிச் சீக்கிரத்தில் உமது துக்கமெல்லாம் தொலையப் போகின்றது. நான் போய் ராமனிடம் சேரும்வரையில் பொறுத்திருப்பீராக. நான் போனதும் அவரை யழைத்துக்கொண்டு வருகிறேன், விடைதருக" என்றனன்.

முப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நாற்பதாவது ஸர்க்கம்.

## சீதை ராமனுக்கு மற்றோர் அடையாளம் கூறுவதும், அனுமான் சீதையிடம் விடைபெற்று மேல் காரியத்தை ஆலோசித்தலும்.

சீதை அனுமான் கூறின இதமான வார்த்தைகளைக் கேட்டு சற்று மனந்தேறி "அனுமானே! இன்பமான செய்தி கூறுகின்ற உன்னைக் காண்பதனால் எனது கஷ்டங்களில் பாதி தொலைந்ததென்று சந்தோஷிக்கின்றனன். மிகுந்த வருத்தத்தினால் பீடிக்கப்பட்டிருக்கும் நான் சீக்கிரத்தில் ராமனை அணையும்படி செய்வாயாக ராமனுக்குத் தெரிவிக்கும் பொருட்டு காகாசுர வரலாற்றை ஓர் அடையாளமாகச் சொன்னேனன்றோ? மற்றுமோர் அடையாளமும் சொல்லுகிறேன். ஒரு நாள் என் நெற்றியில் திலகம் அழிந்துபோகையில் இராமன் மனச்சிலையால் திலகத்தை இட்டனன். அதையும் நினைத்துக்கொள்ளுமாறு சொல்வாயாக. மிகச் சிறந்த இச் சூடாமணியை இப்படிப்பட்ட துக்க காலத்திலும் ஜாக்

கிரதையுடன் காப்பாற்றி உன்னிடம் அடையாளமாகக் கொடுத்திருக்கின்றேன். இனி நான் ஒரு மாதத்திற்குமேல் ஒரு நொடிப்பொழுதாயினும் அவரைவிட்டுப் பிழைத்திருக்கப் போறேனென்று கூறுவாயாக" என்று கண்ணீரைப் பெருக்கிக் கொண்டே கூறினள்.

அனுமான் சீதையைப் பார்த்து "சீதே! உமது பிரிவாற்றாமையால் ராமன் ஒன்றும் தோன்றப்பெறாமல் காரியங்களில் கண்வையாதிருக்கின்றனன். இங்ஙனம் உமக்கு நம்பிக்கை யுண்டாகும் பொருட்டு சத்தியத்தின்மேல் ஆணையிடுகின்றேன். அங்ஙனம் ராமன் வருந்துவதைக் கண்டவுடனே லக்ஷ்மணனும் பரிதபிக்கின்றனன். எப்படியோ வெகு கஷ்டத்தின்மேல் நீர் எனக்குப் புலப்பட்டீர். இப்பொழுது சந்தோஷிக்கவேண்டிய காலமேயன்றி துக்கிப்பது யுக்தமன்று. நீர் சொன்ன அடையாளங்களும் உமது அழகிய ரத்தின மயமான இச்சூடாமணியும் ராமனுக்குத் தகுந்த அடையாளங்களாக அமையும். சீக்கிரத்தில் ராமன் இவ்விடம் வந்து விரோதிகளைவென்று உம்மை யடையப்போகின்றனன். ஆகையால் நீர் இனிமேலாவது கவலையை ஒழித்து உத்சாகத்துடனிருக்கவேணும்" என்று கூறி சீதைக்கு வணக்கம் செய்து பிரயாணமாகப் போகத் தொடங்கினன்.

அப்பொழுது மீண்டும் சீதை அவனை நோக்கி "அனுமானே! நீ ராமனிடம் சென்றவுடன் நான் இங்கு அனுபவிக்கின்ற கஷ்டங்களையும் ராக்ஷச ஸ்திரீகள் என்னை விரட்டுவதையும் நீ நேரில் கண்டபடி ஒன்றும் விடாமல் விவரமாக அவனிடம் சொல்வாயாக. உனக்கு மார்க்கம் சுகமாயிருக்குமாக" என்றனள்.

நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பத்தோராவது ஸர்க்கம்

## அனுமான் அசோக வனமழித்தல்.

உடனே அனுமான் சீதையிடம் விடை பெற்றுக் கொண்டு பிரயாணமாயினன். பிறகு அவன் தனக்குள் சிந்தித்தனன்:—"இப்பொழுது நான் சீதையைக் கண்டாயிற்று. இனி ராவணனுடைய இருதயம் முதலியவை தெரியவேண்டிய ஸ்வல்ப காரியமே மிகுந்திருக்கின்றது. இக்காரியத்தை சாதிப்பதற்கு எனது பராக்கிரமத்தைச் சிறிது காட்டியே ஆகவேண்டும். இப்பொழுது நான் யுத்தத்தை நடத்திச் சில மேலான ராக்ஷச வீரர்களைக் கொல்வேனாயின், மற்றை ராக்ஷசர்கள் ஒரு விதத்தில் கர்வத்தையிழப்பார்கள். எவன் தன்னை ஒரு காரியஞ் செய்யவேண்டுமென்று கட்டளையிட்டு அனுப்புகையில், அம்மேலான காரியத்தை நிறைவேற்றி அதற்கு விரோதமில்லாதபடி வேறு காரியங்கள் பலவற்றையும் நிறைவேற்றுவானோ, அவனே காரியஞ்செய்யத் தகுந்தவன். ஆகையால் நான் இப்பொழுதே ராக்ஷசர்களுடன் சிறிதுநேரம் சண்டையிட்டு அவர்களின் பலாபலங்களை நிச்சயித்துக்கொண்டு கிஷ்கிந்தைக்குச் செல்லப் போகிறேன். அங்ஙனஞ்செய்யாமல் சீதையை மாத்திரம் கண்டு வெறுமனே திரும்பிச் செல்வேனாயின், 'ராக்ஷசர்களின் பலம் எப்படிப்பட்ட தென்று சுக்கிரீவன் வினவுவானாயின் என்னென்று பதிலுரைப்பேன்?

ஆகையால் இப்பொழுது ராக்ஷசர்களுடன் பலாத்காரமாக யுத்தம் வைத்துக்கொள்ளவேண்டும். பிறகு நான் யுத்தத்தில் ராவணனையும் அவனது மந்திரிகளையும், சேனாதிபதிகளையும் எதிர்த்து, சீதையைக் குறித்து அவன் மனதிலுள்ள நிச்சயத்தையும் அவனது பலத்தையும் சுகமாகத் தெரிந்துகொண்டு கிஷ்கிந்தைக்குத் திரும்புவேன்.

இப்போதே இந்த அசோகவனத்தை, த்வம்சம் செய்வேன். இதனால் ராவணன் என்மேல் கோபமூண்டு பயங்கரமான ஆயுதங்களைத் தரித்த பெரும் படைகளை என் மேல் எதிர்க்க அனுப்புவான். அதன் பிறகு அவர்களுக்கும் எனக்கும் எனது விருப்பத்தின்படி பெரிய யுத்தம் நடக்கும். நான் எனது சிறந்த பராக்கிரமத்தினால் அவ்வரக்கர் சேனைகளைக்கொன்று வெற்றியுடன் கிஷ்கிந்தைக்குச் செல்வேன்" என்று ஆலோசித்தனன்.

உடனே அனுமான் கோபாவேசத்தை ஏற்றிட்டுக்கொண்டு தனது தொடைகளின் வேகத்தினால் மரங்களும் கொடிகளும் நிறைந்த அவ்வந்தப்புர வனத்தை முறித்தனன். அங்ஙனம் மரங்கள் முறியவும், குளங்கள் இடியவும், விளையாடும் மலைச்சிகரங்கள் சூரணமாகவும் செய்யப்பெற்ற அவ்வசோகவனம் பார்க்க மிகவும் இனிமையற்றிருந்தது. அதிலுள்ள கொடிகள் தமக்கு ஆதாரமான கிளைகளினின்று விடுபட்டுச் சிதறி அல்லாட்டமுற்று, அவயவங்கள் விலவிலக்கப்பெற்ற பெண்மணிகள்போல் புலப்பட்டன. அதிலுள்ள கொடிமாடங்களும், சித்திர மாளிகைகளும் பாழாகி யொழிந்தன. பெரிய பாம்புகளும் கொடிய மிருகங்களும் பயந்தோடப் பெற்ற அவ்வசோகவனம் அழகற்றிருந்தது. மிகுந்த பலமுடைய அனுமான் ராவணனது மனத்திற்கு மிக வருத்தம் விளைவிக்கவல்ல இக்காரியத்தைத் தானொருவனாகவே செய்து, மேலும், பலசாலிகளான ராக்ஷசர்களுடன் யுத்தஞ் செய்ய விரும்பி மிகுந்த ஒளியுடன் பிரகாசித்துக்கொண்டு அவ்வனத்தின் வெளிவாசற்படியில் இருந்தனன்.

நாற்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பத்திரண்டாவது ஸர்க்கம்

## இராவணன் கிங்கரரேன்னும் ராக்ஷசர்களை யனுப்புதலும் அவர்களை அனுமான் முடித்தலும்.

பிறகு இலங்கையிலுள்ளோரனைவரும் பக்ஷிகளின் இரைச்சல்களையும் மரங்கள் மளமளவென்று முறிந்து விழுகின்ற சப்தத்தையும் கேட்டு பயத்தினால் பரபரப்புற்றனர். மிருகங்களும் பட்சிகளும் பயத்தினால் திக்பிரமம் பிடித்து மூலைக்கொன்றாகப் பறந்தோடிக் கூச்சலிட்டன. அப்பொழுது ராக்ஷசர்களுக்குப் பயங்கரமான அபசகுனங்கள் தோன்றின. தூங்கிக்கொண்டிருந்த ராக்ஷச ஸ்திரீகள் இந்த ஆரவாரங்களினால் தூக்கம் விழித்து மிகப் பெரிய தேகத்துடன் பர்வதம்போன்ற அனுமான் நந்தவனத்தை யழிப்பதைக்கண்டு சீதையை நோக்கி "இவன் யாவன்? பெயரென்ன? எவனாலனுப்பப்பட்டு வந்தனன்? எங்கிருந்து வந்தனன்? எதற்காக வந்தனன்? உன்னோடு இவன் எப்படி சம்பாஷணை செய்தனன்? உன்னோடு எதைக்குறித்து இவன் பேசினன்? பயப்படாமல் எல்லாவற்றையும் விவரமாகச் சொல்வாயாக" என்று வினவினர்.

சீதை அவர்களை நோக்கி "ராக்ஷசர்கள் பயங்கரமான நானாவித உருவங்களைத் தரிக்க வல்லவர்; அப்படிப்பட்டவர்களை அறிதற்கு எனக்கு எப்படி முடியும்? பாம்பின் கால் பாம்புக்கே தெரியுமன்றி மற்றெவர்க்கும் தெரியாது. அங்ஙனமே நீங்களும் ராக்ஷசர்களாகையால் இவ்வானர உருவம் கொண்ட ராக்ஷசனது செயல்கள் உங்களுக்கே தெரியும். இவனைப் பார்த்து நானும்கூடப் பயந்திருக்கின்றேன். இவன் எவனோ எனக்குத் தெரியவில்லை. இவனைக்கண்டால், மாயச் செயல்களையுடைய ராக்ஷசன் எவனோ இவ்வானர ரூபந் தரித்து வந்தானென்று தோன்றுகிறது" என்றனள்.

இங்ஙனம் சீதை சொன்னவுடன் அந்த ராக்ஷச ஸ்திரீகள் பயந்து அவ்வனத்தில் நாற்புறத்திலும் ஓடி மறைந்தனர். சிலர் சீதையைக் காக்கும்பொருட்டு அங்கேயே இருந்தனர். சிலர் இவ்விஷயத்தை ராவணனுக்கு அறிவிக்க ஓடினர். அவர்கள் ராவணனிடஞ் சென்று "மகாராஜனே! பயங்கரமான உருவமுடைய ஒரு வானரன் சீதையோடு வார்த்தையாடி அசோக வனத்தை சீர்குலையும்படி நாசஞ் செய்கின்றனன். சீதையை நாங்கள் பலவாறு வினவியும் அவனைப் பற்றிய வரலாற்றை அவள் சொல்லவில்லை. சீதையிருக்கும் இடத்தைத் தவிர அவ்வனத்திலுள்ள எல்லா பிரதேசங்களையும் அவன் பாழ் செய்துவிட்டனன். இவன் இந்திரனுடைய தூதனோ? அல்லது குபேரனுடைய தூதனோ? இல்லையாயின் ஒருகால் ராமன் சீதையைத் தேட விரும்பி அனுப்பின தூதனோ? எதுவும் தெரியவில்லை. நீ அவனை உடனே தண்டிக்கவேண்டும்" என்றனர்.

ராவணன் மிகுந்த கோபங்கொண்டு சிறந்த சூரர்களான கிங்கரர் என்னும் ராக்ஷசர்களைக்கூவி அனுமானையடக்கும்படி கட்டளையிட்டனன். உடனே எண்பதினாயிரம் பேர்களான அவ்வரக்கர்களனைவரும் அனுமானையணுகி, விட்டில்கள் அக்கினிமேல் எதிர்ப்பதுபோல் அனுமானை எதிர்த்தனர். அவர்கள் அவ்வானரனை விசித்திரமான கதைகளாலும் இரும்புத் தடிகளாலும், பாணங்களாலுமடித்தனர்.

அனுமான் சந்தோஷத்தின் மிகுதியால் ஒளி விளங்கப்பெற்று தேகத்தை மிகப் பெரிதாகச் செய்து கொண்டு பயங்கரமான கர்ஜனை செய்து "நான் மிகுந்த பராக்கிரமமுள்ள ராமனது தூதன்; அனுமான் என்னும் பெயருடையவன்; மிகுந்த பலவானான வாயுதேவனின் குமாரன், கற்களையும் மரங்களையும் கொண்டு பலவிதங்களில் யுத்தஞ் செய்ய வல்ல எனக்கு இந்த ராவணனைப்போன்ற ஆயிரம் ராவணர்

களும் எதிரன்று. நான் இவ்வரக்கரனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே இவர்களைப் பொருள் செய்யாமல் இந்த லங்காபுரம் முழுவதையும் கலக்கி சீதையை நமஸ் கரித்து ராமனிடம் செல்லப் போகிறேன்" என்று இரைச்ச லிட்டனன்.

இதைக்கேட்ட ராக்ஷசர்கள் பயந்தபோதிலும் ராவண னைத் திருப்தி செய்யும்பொருட்டு அவனை எதிர்த்தனர். அவனை அணுகமுடியாமல் ஆங்காங்கு தூரத்திலிருந்து கொண்டு பயங்கரமான பலவித ஆயுதங்களை வீசியெறிந்து கொண்டிருந்தனர். உடனே அவ்வாயுகுமாரன் தோரணவாயிலி லிருந்த பயங்கரமான இரும்புத் தடியை எடுத்துக்கொண்டு கிறுகிறுவென்று வேகமாகச் சுழற்றி வீரர்களான அந்த ராக்ஷசர்களனைவரையும் கொன்று, மீளவும் யுத்தத்தை விரும்பி அத்தோரணவாயிலில் உட்கார்ந்தனன்.

பிறகு அங்கிருந்து பயத்தினால் தப்பித்துக்கொண்டு ஓடிப்போன சில ராக்ஷசர்கள் கிங்கரர்களனைவரும் முடிந் தார்களென்று ராவணனுக்குக் கூற அவன் கோபத்தினால் கண்களைச் சுழற்றிக்கொண்டு மிகுந்த பராக்கிரமசாலியான பிரஹஸ்த குமாரனை அனுமான்மேல் எதிர்க்கும்படி ஆஞ்ஞா பித்தனன்.

நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்துமூன்றாவது ஸர்க்கம்

## அனுமான் சைத்திய பிரசாதத்தையும் அதிலுள்ள ராக்ஷசர்களையும் துவம்சம் செய்தல்.

இங்ஙனம் கிங்கரர்களை முடித்த அனுமான் சிறிது ஆலோசித்து தன் பலத்தைக் காட்டும்பொருட்டு அவ்வுத்தி யானவனத்தின் தோரணவாயிலினின்றும் கிளம்பி மேரு

சிகரம்போல் மிகுதியும் உயர்ந்திருக்கின்ற தேவாலயத்தின் மேலேறினன். மிகுந்த உயரமுள்ள அம்மேல்மாடத்தின் மேலேறித் தனது சக்தியினால் மிகப்பெரிய தேகத்தைத் தரித்து இலங்கைமுழுவதும் சப்தம் நிரம்புமாறு கம்பீரமாகத் தனது புஜங்களைத் தட்டினன். அப்பெருஞ் சப்தத்தினால் பக்ஷிகள் ஆகாயத்தினின்று பூமியில் விழுந்தன; அத் தேவாலயத்தைக் காக்கின்ற ராக்ஷசர்களும் மூர்ச்சித்தனர். அனுமான் மீண்டும் முன்பு கிங்கரர்களை யெதிர்ப்பதற்கு முன் கூறின தனது வரலாறுகளையும் பராக்கிரமத்தையும் மற்றொரு தடவை உரக்கக் கூறி கர்ஜித்தனன்.

இப்பெருஞ் சத்தத்தைக்கேட்ட தேவாலயத்தைக் காக்கும் ராக்ஷசர்கள் நூறுபேரும் நானாவித பாணங்களையும் ஈட்டிகளையும் கத்திகளையும் கோடாலிகளையும் எடுத்துக் கொண்டு அனுமானைச் சூழ்ந்துகொண்டு எதிர்த்தனர். அவ்வாயுதங்களினால் அவர்கள் அனுமானை யடித்தனர். உடனே அனுமான் மிகுந்த கோபத்துடன் அத்தேவாலயத்தின் மேல்மாடத்தின்மேல் சுவர்ணாலங்காரங்களால் விளங்குகிற ஸ்தம்பத்தை வேகமாகப் பிடுங்கி கிறுகிறுவென்று சுழற்றினன். அங்ஙனம் சுழற்றுகையில் அது மற்ற ஸ்தம்பங்களோடுறைகையால் நெருப்பு உண்டாயிற்று. அதனால் அம்மேல்மாட முழுவதும் எரிந்துபோயிற்று. இதைக்கண்ட அனுமான் சந்தோஷமுற்று அந்த ராக்ஷசர்கள் நூறுபேரையும் அந்த ஸ்தம்பத்தினால் அடித்துக்கொன்று ஆகாயத்தில் நின்றுகொண்டு இங்ஙனம் மொழிந்தனன்.

"சிறந்த பராக்கிரமமும் தீரமுமுடைய என்னைப் போன்ற பல்லாயிரம் வானர வீரர்கள் சுக்கிரீவனிடத்தில் உண்டு. அவர்களில் சிலர் பத்து யானை பலமுடையவர்; சிலர் நூறுயானை பலமுடையவர், சிலர் ஆயிரம் யானை பல

முடையவர்; மற்றும் சிலர் ஓகமென்னும் கணக்குடைய யானைகளின் பலமுடையவர்கள்; சிலர் வாயுவைப்போன்ற பலமுடையவர்; மற்றவானர சேனதிபதிகளின் பலத்தைப் பற்றி இவ்வளவவ்வளவென்று சொல்வதற்கில்லை. சுக்கிரீவன் இப்படிப்பட்ட வானரர்கள் தன்னை நூறு பதினுயிரம் லக்ஷம் கோடிக்கணக்கில் சூழ்ந்துவரப்பெற்று உங்களெல்லோரையும் முடிக்க இவ்விடம் வரப்போகின்றனன். நீங்கள் ராமனேடு விரோதம் வைத்துக்கொண்டீர்களாகையால் இனி இந்த லங்காபுரமும், நீங்களும், ராவணனும் முடிந்துபோனதாகவே நிச்சயித்துக்கொள்ளுங்கள்" என்றனன்.

நாற்பத்து மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்து நான்காவது ஸர்க்கம்.

## அனுமான் ஜம்புமாலியை முடித்தல்.

ராவணனல் கட்டளை யிடப்பெற்ற பிரஹஸ்தனது குமாரனை ஜம்புமாலி யென்பவன் சிறந்த வில்லைப் பிடித்து கழுதைகள் பூட்டப்பெற்ற ரதத்தின் மேலேறிக்கொண்டு அனுமானை எதிர்த்து வந்தனன். அவன் தோரண வாயிலின் மேல் கொடுங்கையிலிருக்கின்ற அனுமானைக் கூரான பாணங்களால் அடித்தனன். அதனுல் அனுமான் உடம்பில் ரத்தம் பெருகப்பெற்று மிகுந்த கோபத்துடன் தன் பக்கத்திலிருந்த ஒரு பெரிய கல்லைப் பெயர்த்துத் தன் பலமுள்ளவளவும் சுற்றி ஜம்புமாலியின்மேல் எறிந்தனன். அந்த ராக்ஷசன் பத்து பாணங்களால் அக்கல்லைப் பிளந்ததுமன்றி ஐந்து பாணங்களால் அவ்வானரனை புஜத்திலும், ஒரு பாணத்தினுல் மார்பிலும், பத்து பாணங்களினுல் ஸ்தனங்களினிடையிலும் அடித்தனன்.

அனுமான் இங்ஙனம் தனது தேகமெங்கும் பாணமய மாயிருப்பதைக்கண்டு மிகமிகக் கோபமுற்று முன்பு கிங்கரர்களைக்கொன்ற இரும்புத்தடியையே எடுத்துக்கொண்டு கிறுகிறுவென்று சுழற்றி ஜம்புமாலியின் மார்பில் எறிந்தனன். அந்தக்ஷணமே ஜம்புமாலி தன் உடம்பிலுள்ள ஆபரணங்களெல்லாம் பொடி பொடியாகப் பெற்றுத் தரையில் வீழ்ந்தனன். பிறகு ராவணன் ஜம்புமாலி மாண்டொழிந்ததைக் கேட்டுக் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று மிகுந்த வீரியமும் சிறந்த பராக்கிரமமும் பொருந்திய மந்திரி குமாரர்களை அனுமான்மேல் எதிர்த்துப்போக ஆஞ்ஞாபித்தனன்.

நாற்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நாற்பத்தைந்தாவது ஸர்க்கம்.

அனுமான் மந்திரிகுமாரர்கள் எழுவரையும் முடித்தல்.

மிகுந்த பலமுடைய அம்மந்திரிகுமாரர்கள் எழுவரும் பெரிய சைன்னியம் சூழ வரப்பெற்று விற்களைத் தரித்து அழகிய தேர்களில் ஏறிக்கொண்டு அனுமானை எதிர்க்கப் புறப்பட்டனர். அப்பொழுது அவர்களது தாய் தகப்பன்மார்களும் மற்றுமுள்ள உறவினர்களும் அனுமானால் கிங்கரர்களும் ஜம்புமாலியும் மாண்டதைக் கேட்டவர்களாகையால் அவர்களுக்கும் அனுமானால் ஆபத்து நேருமோவென்று பயந்து தழதழத்து நின்றனர். மந்திரி குமாரர்கள் எழுவரும் தோரண வாயிலில் யுத்தத்திற்கு ஆயத்தனாகவிருந்த அனுமானை யெதிர்த்து அவன்மேல் அம்புமாரி பொழிந்தனர். அனுமான் அப்பாணங்களால் மறைக்கப்பட்டு உருவம் தெரியாதிருந்தனன்.

அனுமான் அதனைச் சிறிதும் பொருள்படுத்தாமல் துணிவு குன்றாமல் மிக ஆச்சரியமாக நடந்துகொண்டனன்.

அவர்களது ரதத்தின் வேகம் தன்னைப் பிடிக்கவொட்டாமல் தடுத்து சித்திர கதிகளைச் செய்து ஆகாயத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தனன்.

அன்றியும் பயங்கரமாகக் கர்ஜித்து அப்பெரிய சைன்னியங்களை யெல்லாம் விரட்டிக்கொண்டு அந்த ராக்ஷசர்களில் சிலரை உள்ளங்கையாலறைந்தனன்; சிலரைக் காலால் விழத் தள்ளினன்; சிலரை முட்டிகளாலடித்தனன்; மற்றுஞ் சிலரை நகங்களால் பிளந்தனன்; சிலரை மார்பினால் மோதியும், பின்னும் சிலரைத் தொடைகளாலிடித்தும் அடித்து முடித்தனன். அவன் செய்த கர்ஜனையைப் பொறுக்கமுடியாமல் சிலர் அங்கங்கேயே தரையில் வீழ்ந்தனர்.

இங்ஙனம் அம்மந்திரி குமாரர்கள் அனுமானால் கொல்லப்பட்டதைக் கண்ட மிகுந்த சைன்னியங்களெல்லாம் பயத்தினால் தளர்ந்து மூலைக்கொன்றாக ஓடின. யானைகள் விகார சப்தத்துடன் வீறிட்டன; குதிரைகள் தரையில் விழுந்தன. ஏர்க்கால்களும் கொடிகளும் குடைகளும் முறியப்பெற்ற தேர்களால் பூமி முழுவதும் நிறைக்கப்பட்டிருந்தது. பிறகு ரத்த வெள்ளம் ஆறுகள் போல் பெருகியது. அனுமான் மீண்டும் யுத்தஞ்செய்ய விரும்பி அவ்வனத்தின் வெளி வாயிற்படிக்கே போயிருந்தனன்.

நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நாற்பத்தாறுவது ஸர்க்கம்.

அனுமான் விருபாக்ஷன் முதலிய சேனாதிபதிகளை முடித்தல்.

பிறகு ராவணன் அனுமானது பராக்கிரமத்தைப் பற்றி மனதில் சிறிது பயமடைந்த போதிலும் அதை வெளிக்குக்காட்டாமல் கொஞ்சநேரம் ஆலோசனை செய்து

விருபாக்ஷன், யூபாக்ஷன், துர்த்தரன், பிரகஸன், பாஸகர்ணன் என்று பிரஸித்தர்களும் சிறந்த வீரர்களுமான தனது சேனாதிபதிகளை விளித்து "ஆ! இந்த வானரன் செய்யுங் காரியங்களைப்பற்றி ஆலோசிக்கையில் இவன் கேவலம் வானரனென்று எனக்குத் தோன்றவில்லை. மிகுந்த பலமுடைய பெரும்பூதமாக இருக்கவேண்டும். ஒருக்கால் இந்திரனோ? அல்லது மற்ற எவரோ? நமது விரோதிகளான தேவதைகளும், யக்ஷர்களும் நாகர்களும் கந்தருவர்களும் தமது தவமகிமையினால் நம்மைக்கொல்லும் பொருட்டு இப்பூதத்தைப் படைத்திருக்கலாமென்று நினைக்கிறேன். இவ்வானரன் மிகுந்த பராக்கிரமமுடையவனாகையால் நீங்கள் அவனைக் குரங்கென்று அலக்ஷியமாயிராமல் வெகு ஜாக்கிரதையுடன் பிடித்துக்கொண்டு வருவீர்களாக." என்றனன்.

உடனே அந்த சேனாதிபதிகள் தேர், யானை, குதிரை, காலாள் முதலிய நான்குவித சைன்னியங்களுடன் நானாவித பயங்கரமான ஆயுதங்களைத் தரித்து அனுமானை நோக்கி எதிர்த்து வந்தனர். அவர்களில் துர்த்தரன் கூரான ஐந்து பாணங்களை அனுமானது தலைமேல் எய்தனன். அப்பாணங்களால் தலையிலடிக்கப்பட்ட அனுமான் பத்துத் திசைகளிலும் பிரதித்துவனி உண்டாகும்படி சிம்மநாதம் செய்துகொண்டு ஆகாயத்தில் கிளம்பினன். பிறகு துர்த்தரன் வில்லில் நாணேற்றி ரதத்தின்மேலேறித்தானும் ஆகாயத்தில் கிளம்பிக் கூரான பாணங்களை நூறு நூறாக இறைத்துக்கொண்டு அனுமானை எதிர்த்தனன். அனுமான் அந்த துர்த்தரன் தன்னை அணுகாதிருக்குமாறு தன் வேகத்தினால் தடுத்துத் தன் சரீரத்தை அதிகமாக வளர்த்துக்கொண்டு கிளம்பி மலைமேல் இடி விழுவதுபோல் துர்த்தரனது தேரின்மேல் குதித்தனன். அதனால் அந்த துர்த்தரன், குதிரைகள் மடிந்து இருசும் ஏர்க்காலும் முறிந்து

பாழான தேரைவிட்டு மரணம் அடைந்து பூமியில் விழுந்தனன்.

இதைக்கண்ட மற்ற சேனாதிபதிகள் ஆகாயத்தில் கிளம்பி மிகுந்த கோபத்துடன் அனுமானை இரும்புத்தடிகளால் மார்பிலடித்தனர். அனுமான் அதைப் பொருள் செய்யாமல் கனவேகமாகக் கீழேகுதித்து ஒருபெரியமராமரத்தைப் பிடுங்கி அதனால் விருபாக்ஷன் யூபாக்ஷன் ஆகிய இருவரையும் அடித்துக்கொன்றனன்.

இதைக்கண்ட பிரகஸனும் பாஸகர்ணனும் கூரான சூலாயுதங்களைப் பிடித்து அனுமானை எதிர்த்து வந்தனர். அனுமான் மிருகங்களோடும் சர்ப்பங்களோடும் மரங்களோடும் கூடின ஓர்மலைச் சிகரத்தைப் பிடுங்கி அந்த ராக்ஷசர்களிருவரையும் அதனாலடித்துக்கொன்றனன். பிறகு அவ்வாயுசேயன் மிகுந்திருந்த சைன்னியங்களை யெல்லாம் அனாயாசமாகக்கொன்று மீளவும் அந்தத் தோரணவாயிற்படியை யடைந்து இன்னும் ராக்ஷசர்கள் யுத்தம் செய்ய வருகின்றனரா வென்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தனன்.

நாற்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தேழாவது ஸர்க்கம்.

### அனுமான் அக்ஷகுமாரனைக் கொல்லுதல்.

சேனாதிபதிகளனைவரும் தமது சைன்னியங்களோடு அனுமானால் முடிக்கப்பட்டதை ராவணன் அறிந்து, மிகுந்த ஆத்திரமடைந்து சிறந்தவில்லாளியான தனது மகன் அக்ஷகுமாரனை விளித்து அனுமான்மேல் எதிர்த்துச் செல்லும்படி ஆஞ்ஞாபித்தனன். உடனே அவ்வக்ஷகுமாரன் கவசங்களணிந்து சிறந்த வில்லைப்பிடித்து உயர்ந்த தேரிலேறி கணக்கற்ற ராக்ஷச சேனைகள் பின்தொடர அனுமானை நோக்கிச்

சென்றனன். சிம்மம்போல் கம்பீரமான தோற்றமுடைய அவ்வக்ஷ குமாரன் பிராணிகளை நாசஞ்செய்ய முயன்ற பிரளய காலாக்கினிபோல் புலப்பட்டுக்கொண்டு அநுமானிடஞ்சென்று அவனது உருவத்தையும் யுத்தகோலத்துடனிருக்கிற கொழுப்பையுங் கண்டு ஆச்சரியமும் பரபரப்பும் உண்டாகப்பெற்று 'இவன் சிறந்த வீரன்' என்று எண்ணி கூர்மையான மூன்று பாணங்களையெய்து அவ்வானரனை யுத்தத்திற்குத் தூண்டினன். பின்னுமவன் பிரசண்ட பராக்கிரமத்துடன் அநுமான்மேல் எதிர்க்கத் தலைப்பட்டனன். அப்பொழுது அவ்விருவரும் போராடுவது எங்கும் நிகரற்றதாகி தேவாசுரர்களுக்கும் மிக்க வியப்பைக் கொடுப்பதாய் இருந்தது.

அவ்விருவரும் யுத்தஞ் செய்யும்பொழுது பூமி நடுங்கியது; சூரியன் ஒளிமழுங்கினன்; வாயுவும் வீசவில்லை; மலைகள் நடுக்கமுற்றன. மேகங்கள் கர்ஜித்தன; சமுத்திரம் கலக்கமுற்றது. அவ்வக்ஷ குமாரன் சிறந்த வில்லாளியாகையால் விஷம் பூசின நுனியுடையவைகளும் சர்ப்பம் போன்றவைகளுமான மூ ன் று பாணங்களை அவ்வநுமானுடைய தலையில் பிரயோகித்தனன். அதனால் அநுமான் தலையில் ரத்தம் பெருகப்பெற்று, அப்பெருக்கின் சிவந்த கிரணங்கள் தலையில் பிரகாசிக்கையால் கதிராயிரமிரவிபோல் காணப்பட்டனன். பின்னுமவ்வாயுமைந்தன் கோபத்தினால் சிவந்து நெருப்புப்போல் விளங்குகிற கண்களின் ஜுவாலைகளால் அக்ஷ குமாரனையும் அவனது சைன்னியங்களையும் கொளுத்தி விடுபவன்போல் மிக உக்ரமூர்த்தியாகப் பிரகாசித்தனன்.

பிறகு அக்ஷகுமாரன் மேகம் பெரிய பர்வதத்தின்மேல் மழைபெய்வதுபோல் பர்வதம்போன்ற அவ்வானரோத்தமன் மேல் அதிக வேகத்துடன் பாணங்களைப் பிரயோகித்தனன்.

இங்ஙனம் அக்ஷகுமாரன் பாணங்களைத் தொடுக்கையில் அனுமான் உரக்க இரைச்சலிட்டுக்கொண்டு, புஜங்களையும் துடைகளையும் உதறி பயங்கரமான தோற்றத்துடன் வேகமாக ஆகாயத்தில் கிளம்பினன். பின்னுமவன் மனோவேகத்துடன் பாணங்களிடையில் வாயுவைப்போல் திரிந்துகொண்டு லாகவத்தினால் அவ்வரக்கனது பாணங்கள் தன்மேல் படவொட்டாமல் தடுத்துக்கொண்டு மிக உல்லாஸமாக ஆகாயத்தில் திரிந்தனன். அப்போது அவ்வக்ஷகுமாரன் கூரான பாணங்களை யெய்து அனுமானது மார்பைப் பிளக்கையில் அவ்வாயு மைந்தன் உரக்க இரைச்சலிட்டு சிறந்த பராக்கிரமமுடைய அவ்வக்ஷ குமாரனை மாய்க்கும்விதத்தைப்பற்றித் தனக்குள் இங்ஙனம் சிந்தித்தனன்.

"யுத்தத்தில் மனவூக்கமுடையவனும் சிறந்த பராக்கிரமமுடையவனுமான இவ்விளைஞன் பால சூரியனைப்போல் பிரகாசிக்கின்றனன். இவனது பராக்கிரமம் ஒப்புயர்வற்றது; தேவாசுரர்களுடைய மனங்களையும் நடுங்கச்செய்யு மென்பதில் சந்தேகமில்லை. இவனது பராக்கிரமம் யுத்தத்தில் மேன்மேலும் வளர்ந்து கொண்டே யிருக்கிறது. இனி நான் இவனைப் பார்த்துக்கொண்டேவாளாவிருப்பின் இவனால் எனக்கு நிச்சயமாகத் துன்பம் நேரிடும். மேன்மேலும் கொழுந்துவிட்டெரிகின்ற நெருப்பை யணைக்காமல் வாளாவிருப்பது யுக்தமன்றல்லவா? ஆகையால் இப்பொழுதே இவனைக் கொல்லவேண்டும்" என்று ஆலோசித்தனன்.

அப்பொழுது அனுமானுக்குச் சரியாக ஆகாயத்தில் தேருடன் கிளம்பியுத்தஞ் செய்கின்ற அவ்வக்ஷ குமாரனது தேர்க் குதிரைகளெட்டையும் அனுமான் தனது உள்ளங்கையாலடித்துக் கீழேவிழத்தள்ளினன். அதனால் அவ்வரக்கனது தேர் சக்கரங்கள் முறிந்து ஏர்க்கால் ஒடிந்து குதிரை

கள் மடிந்து ஆகாயத்தினின்று தரையில் வீழ்ந்தது. உடனே அவ்வக்ஷ குமாரன் வில்லையும் கத்தியையும் எடுத்துக்கொண்டு ஆகாயத்திற் கிளம்பினன்.

இதைக்கண்ட அனுமான் அவனுடன் கூடவே சென்று கருடன் பெரிய சர்ப்பத்தைப் பிடித்துக்கொள்வதுபோல் அவ்வரக்கனைப் பிடித்து அநேகம் தடவை கிறுகிறுவென்று சுழற்றி வேகமாகத் தரையில் அடித்தனன். இதனால் அவ்வக்ஷகுமாரன் கைகால்கள் முறிந்து உடம்பெல்லாம் குருதி வெள்ளம் பெருகப்பெற்று எலும்புகள் முறிந்து தரையில் விழுந்து மாண்டனன்.

இதைக்கண்ட ஆகாசத்தில் திரியும் மகரிஷிகளும், பூதங்களும், யக்ஷர்களும் தேவதைகளும் தேவேந்திரனும் ஒன்றுகூடி ஆச்சரியமுற்று அனுமானைக் கொண்டாடினர். உடனே அனுமான் பிரளயகாலத்தில் பிராணிகளையெல்லாம் சம்மரித்த பின்பு வியாபாரமற்றிருக்கிற யமனைப்போல் விளக்கமுற்று மீண்டும் அவ்வசோக வனத்தின் வெளிவாயிற் படிக்கே சென்றனன்.

நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்

## இந்திரஜித்து பிரமாஸ்திரத்தினால் அனுமானைக் கட்டிக்கொண்டு போதல்.

பிறகு ராவணன் அனுமானால் தனது அருமை மகனான அக்ஷகுமாரன் மாண்டொழிந்ததைக் கேட்டு துக்கத்தினால் மனம் கலங்கப்பெற்றும், தைரியத்தை ஏற்றுக்கொண்டு, ரோஷம் மிகப்பெற்று இந்திரனையும் வென்ற இந்திரஜித்தை நோக்கி மைந்த! "பிரமதேவனை ஆராதித்து நீ திவ்வியாஸ்திரங்களையெல்லாம் பெற்றவன். தேவதைகள் தேவேந்திரனோடு கூடி எதிர்த்து வந்தபோதுங்கூட நீ நிறைவேற்றிய

பராக்கிரம காரியங்களை உலகமெல்லாம் உணர்ந்தே யிருக்கின்றது. மூன்று உலகங்களிலும் உன்னுடன் யுத்தஞ்செய்து அஞ்சி ஓடாதவன் எவனும் இல்லை. விவேகத்தை முன்னிட்டு நீ ஆலோசனை செய்கையில் உனக்கு முடியாத காரியம் ஒன்றுமேயிராது. மூன்று உலகங்களிலும் உனது அஸ்திர பலத்தையும் தேகபலத்தையும் அறியாதவன் எவனும் இல்லை. உன் தபோபலமும் யுத்தத்தில் நிறைவேற்றுகிற பராக்கிரமமும் எனக்கு நிகரானவை. உனக்கு எப்பொழுதுமே யுத்தத்தில் வெற்றி உண்டாவது நிச்சயம்.

மகனே! கிங்கரர்களனைவரும் அடிபட்டுப் போயினர். ராக்ஷசர்களிற் சிறந்த ஜம்புமாலியும் முடிந்தனன். சேனாதிபதிகளனைவரும் மாண்டனர். மற்றும் நான்கு வகைச்சேனைகள் நிறைந்த பெரிய சைன்னியங்களும் அழிந்தன. உனது அருமைத் தம்பியான அக்ஷகுமாரனும் அடிபட்டொழிந்தனன். நீ பகைவரைப் பறந்தோடச் செய்யும் திறமையும் பெற்று பிரமாஸ்திரப் பிரயோகமும் தெரிந்தவனாகையால் நீயே அவ்வானரனை வென்றுவர வேண்டும்." என்றனன்.

பிறகு இந்திரஜித்து வேகத்தில் கருடனுக்கொப்பான நான்கு சிம்மங்கள் பூட்டப்பெற்றதும் தடையின்றி மிகுந்த வேகத்துடன் போவதுமான அழகிய ரதத்தில் ஏறிக்கொண்டு அனுமானிருக்குமிடஞ் சென்றனன். அப்பொழுது திசைகளெல்லாம் கலக்கமுற்றன; கொடியமிருகங்கள் பலவாறுகக் கூச்சலிட்டன. அன்றியும், அந்த யுத்தத்தைக்காணும் பொருட்டு அவ்விடத்திற்கு நாகர்களும், யக்ஷர்களும் மகரிஷிகளும் சித்தர்களும் வந்தனர். சிறந்த விக்கிரமமுடைய அனுமான் இந்திரஜித்து வருவதைக் கண்டு பெரிய சப்தம் உண்டாகும்படி சிம்மநாதஞ் செய்து சரீரத்தை வளர்த்திக் கொண்டனன்.

பிறகு அவ்விருவரும் இடி இடித்தாற்போல் பயங்கர மான சப்தங்களைச் செய்துகொண்டு சண்டை செய்யத் தொடங்கினர். இந்திரஜித்து பாணங்களைத் தொடுத்து வேகமாக பிரயோகிக்கையில், அனுமான் தேகத்தைப் பெருகச்செய்துகொண்டு அந்த பாணங்களைத் தன்மேல் படவொட்டாமல் தடுத்து, அவற்றின் வேகத்தை வீணாக்கி ஆகாயத்தில் திரிந்தனன். இந்திரஜித்து குறிவைத்து பாணப் பிரயோகம் செய்வதில் சிறிதும் மனவூக்கம் தவற மாட்டான்; எய்த பாணங்களும் கணக்கில்லாமலிருப்பவை; இங்ஙனம் அவன் அனுமானைக் குறிவைத்து பாணங்கள் பலவற்றைப் பிரயோகித்துக்கொண்டிருப்பினும், அவற்றினின்று அவன் தப்புவித்துக்கொள்வதனால் பாணங்கள் வீணாய் விழுவதைக் கண்டு மிகவுஞ் சிந்தையுற்றனன்.

பிறகு அவ்விந்திரஜித்து அவ்வாயு சேயனைக் கொல்ல முடியாதென்று தெரிந்துகொண்டு, பிடித்துக்கொள்ளவாவது வேண்டுமென்றெண்ணி எங்ஙனம் பிடிபடுவானென்று ஆலோசித்து ஓர் உபாயத்தை ஊகித்தனன். உடனே அக்கொடியோன் பிரமாஸ்திரத்தை அனுமான்மேல் பிரயோகஞ்செய்து அவனைக்கட்டினன். அனுமான் அவ்வஸ்திரத்தினால் கட்டுண்டு சேஷ்டையற்றவனாகித் தரையில் வீழ்ந்தனன். அனுமான் பிரமாஸ்திரத்தின் வீரியத்தை நன்குணர்ந்து முன்பு பிரமதேவன் முகூர்த்தகாலம் கடந்தவுடன் அவ்வஸ்திரபந்தம் விட்டுப் போகுமென வரமருளியிருந்த சக்தியையும் நன்காராய்ந்து பிரமதேவனது ஆக்கினையை அனுசரித்துக் கட்டுண்டிருந்தனன்.

பின்னும் அவ்வானரவீரன் தனக்குள் 'நான் சூரியனை விழுங்கப் போனது முதல் என்னை பிரமதேவனும் தேவேந்திரனும் வாயுதேவனும் ரக்ஷித்துக்கொண்டிருப்பவராகையால் இவ்வஸ்திரத்தால் இப்பொழுது நான் கட்டுண்டிருப்பி

னும் எனக்கு யாதும் பயம் உண்டாகாது. ஒருக்கால் ராக்ஷசர்கள் என்னைப் பிடித்துக்கொள்ளினும் அது எனக்கு நல்லதாகவே வந்து முடியும். எப்படியெனில் அதனால் எனக்கு ராவணனோடு சம்பாஷிக்க நேரும். ஆகையால் என்னைப் பகைவர்கள் பிடித்துக்கொள்ளினும் பிடித்துக்கொள்வார்களாக.' என்று நிச்சயித்து வாளாவிருந்தனன்.

இதைக் கண்ட ராக்ஷசர்கள் சணற்புரிகளையும் மரவுரிகளையும் சேர்த்துக் கயிறாகத் திரித்து அவற்றால் அவ்வானரனைக் கட்டினர். அவனும் 'ராவணன் வெறும் குதூகலத்தினாலாவது என்னைப் பார்க்க முயலாதிருக்கமாட்டான்' என்று நினைத்துப் பகைவர் தன்னைக்கட்டுவதற்கும், பலாத்காரமாகப் பிடித்துக்கொள்வதற்கும் சம்மதித்திருந்தனன்.

ராக்ஷசர்கள் அங்ஙனம் அநுமானை சணற் கயிறுகளால் கட்டுகையால் பிரமாஸ்திரம் அவனைவிட்டு நீங்கியது. அந்த பிரமாஸ்திரபந்தம் மற்றொன்றால் கட்டுவதைப் பொறுக்காதாகையால் அநுமான் கயிறுகளால் கட்டப்பட்டவுடனே அவ்வஸ்திரம் விடுபெற்றொழிந்தது.

இவ்விஷயத்தை புத்தியிற் சிறந்த இந்திரஜித்து தெரிந்துகொண்டு 'மற்றொன்றால் கட்டப்பட்டவனிடம் பிரமாஸ்திரம் நிற்காதே! ஐயோ! பெரியகாரியம் செய்தும் அது வீணாய்விட்டதே! மூடர்களான இவ்வரக்கர்கள் பிரமாஸ்திரத்தின் மகிமையை யறியாமல் இவ்வானரனைக் கயிறுகளினால் கட்டினரே! ஐயோ! பிரமாஸ்திரப் பிரயோகஞ் செய்த பிறகு மற்றொரு அஸ்திரம் காரியஞ்செய்ய வல்லதன்று; மீளவும் அப்பிரமாஸ்திரத்தையே பிரயோகிப்பினும் அது உபயோகப்படாது. ஆகையால் நம் எல்லோர்க்கும் பிழைப்பில் சந்தேகம் உண்டாய் விட்டது.'' என்று சிந்தித்தனன்.

அநுமான் பிரமாஸ்திரத்தினின்றும் விடுபட்ட போதிலும், தன்னை ராக்ஷசர்கள் கயிறுகளால் கட்டிப்பிடித்து

இழுத்துக்கொண்டு போகையில் அது தனக்குசம்மதமாயிருந்ததனுல் தான் அஸ்திரத்தினின்று விடுபட்டதைப் பாராட்டவில்லை. அப்பால் கொடிய ராக்ஷசர்களனைவரும் அவ்வானரனை மண் கட்டிகளால் அடிப்பதும் முட்டிகளால் குத்துவதுமாகி ராவணனது சமீபத்திற்கு இழுத்துக்கொண்டு போயினர். அனுமான் ராவணனது பாத மூலத்திலிருக்கிற வயது சென்ற மந்திரிமார்களையும், உயர்ந்த ரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட சபா மண்டபத்தையுங் கண்டனன்.

பிறகு ராவணன் கோபத்தினுல் சிவந்த கண்களைச் சுழற்றிக்கொண்டுராட்சசர்களால்இங்குமங்கும்இழுக்கப்பட்டு வருகின்ற அனுமானைக்கண்டு அவன் குற்றத்தை விசாரிக்கும் பொருட்டுத் தனது மந்திரிகளுக்குக் கட்டளையிட்டனன். அதன்மேல் அவர்களும் அனுமானைப் பார்த்து நீ செய்ய வந்த காரியம் என்னென்றும் உன்னையிங்கு அனுப்பினவர் எவரென்றும் கிரமமாக வினவுகையில் அவ்வானரன் 'நான் குரக்கரசனை சுக்கிரீவனுடைய தூதன். அவனுல் அனுப்பப்பட்டு வந்தவன்' என்று தெரிவித்தனன்.

நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தோன்பது & ஐம்பதாவது ஸர்க்கம்.

### அனுமான் ராவணனது ஒப்பற்ற ஒளியைக்கண்டு ஆச்சர்யப்படுதலும், அவனுடன் பேசுதலும்.

பிறகு அனுமான் 'ராவணன் தனது சிம்மாசனத்தினின்று அசையாமலே என்னை இவ்விடத்திற்கு கட்டுவித்துக்கொண்டு வந்தானே' என்று அவனது செயலுக்கு ஆச்சரியப்பட்டுக் கோபத்தினுல் கண்கள் சிவக்கப்பெற்று அவ்வரக்கர்கோனை உற்று நோக்கினன்.

அந்த ராவணன் வஜ்ஜிரமணிகளிழைக்கப் பெற்று மிகுதியும் விலையுயர்ந்த ரத்தினங்கள் நிறைந்த சுவர்ணத்தி

ளுல் செய்யப்பட்ட ஆபரணங்களை யணிந்திருந்தனன். பற் பல முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட மிகுதியும் விலை யுயர்ந்த பொற்கிரீடம் தரித்து மிகவும் காந்தி விளங்கப்பெற் றிருந்தனன். பின்னுமவன் விலையுயர்ந்த பட்டுவஸ்திரம் தரித்துச் சிவந்த சந்தனம் பூசிக்கொண்டிருந்தனன். அவ் வீரன், சிறிது திறந்த வாயுடையவைகளும், பார்க்க அழகாய் இருப்பவைகளும், சிவந்த கண்களுடன்கூடி, பெரிய கூரான கோரப் பற்கள் பளபளவென்று விளங்கவும் உதடுகள் தொங்கவும் பெற்ற பத்துத்தலைகளோடு கூடிப் பலவகைக் கொடிய மிருகங்கள் நிறைந்த மந்தர பர்வதம்போல் மிகுதி யும் ஒளி விளங்கப்பெற்றிருந்தனன். அவன் விசித்திரமா யிருப்பதும் ரத்தினங்கள் இழைக்கப் பெற்றிருக்கையால் அழகியதும் பெரியதுமான மேலான ஸ்படிகமணி பீடத்தில் மிடுக்குடன் உட்கார்ந்திருந்தனன். அழகிய பெண்மணிகள் அவனைச் சுற்றிலும் சூழ்ந்து சாமரங்களை வீசிக்கொண்டிருந் தனர். மந்திராலோசனையிற் சிறந்தவர்களும் பலத்தில் கொழுத்தவர்களுமான துர்த்தரன், பிரஹஸ்தன், மஹாபார்சு வன், நிகும்பன் என்னும் நான்கு மந்திரிகளான ராக்ஷசர் களால் சூழப்பெற்று நான்கு சமுத்திரங்களால் சூழப்பட்ட அகண்ட பூமண்டலம்போன்று அவர்களோடு இனிமையான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருந்தனன். மற்றுமவன் நல்ல புத்தி சாமர்த்தியம் பொருந்தி விளங்குபவர்களான வேறு மந்திரிகள் பலராலும் சூழப்பெற்று தேவதைகளால் சூழப்பட்ட தேவேந்திரன்போல் புலப்பட்டனன்.

அநுமான் ராவணனது இத்தகைய அற்புதமான உரு வத்தைக் கண்டு மிகுதியும் ஆச்சரியமடைந்து தனக்குள் "ஆ! என்ன உருவம்! என்ன தைரியம்! என்ன பலம்! என்ன காந்தி! ஆ! ஆ!! இந்த ராக்ஷச ராஜனுக்கு சமஸ்த லக்ஷணங்களும் அமைந்திருக்கின்றன. இவனிடத்தில்

அதருமம் ஒன்று இல்லாதிருக்குமாயின் இவன் ராக்ஷசர்களுக்கு மாத்திரமன்றி தேவதைகளுக்கும் அதிபதியாய் இருப்பானே! இவன் கோபமுறுவானாயின் உலகத்தையெல்லாம் ஒரே சமுத்திரமாகச் செய்யவல்லவன்." என்று உள்ளத்துள்ளே எண்ணி வியந்தனன்.

ராவணன் தன் முன் நிறுத்தப்பட்டிருக்கும் அனுமானைக் கண்டு தன் மனதில் சந்தேகம் உண்டாகப்பெற்று "முன்பு நான் கைலாச பர்வதத்தைப் பிடித்து அசைக்கும் பொழுது என்னைச் சபித்த நந்திதேவனே நேரில் இவ்விடம் இவ்வுருவத்துடன் வந்தானோ? அல்லது ஒருகால் மகா சூரனை வாணனே (பாணாசுரன்) இங்ஙனம் வானர உருவந் தாங்கி வந்தானோ?" என்று சிந்தித்து கோபத்தினால் கண்கள் சிவக்கப் பெற்று "எங்கிருந்து வந்தனை? உன்னை இங்கு அனுப்பினவன் எவன்? நீ அசோகவனத்தை யழித்ததேன்? ராக்ஷச ஸ்திரீகளை ஏன் விரட்டினை? என்று இந்த துர்ப்புத்தியை வினவுவாயாக.'' என்று பிரஹஸ்தனுக்குக் கட்டளையிட்டனன்.

உடனே பிரஹஸ்தன் அனுமானை நோக்கி "வானரா! பயப்படாமல் உண்மையைச் சொல்வாயாக. இங்கு உன்னை இந்திரன் அனுப்பினனோ? விஷ்ணுதேவன் நமது பிரபுவை ஜயிக்கவிரும்பி உன்னை இவ்விடம் தூதனுப்பினனோ? அல்லது நீ குபேரனது தூதனோ? உன்னையமன் அனுப்பினனோ? எவர் அனுப்பியபோதிலும் உன்னை ஒன்றுஞ் செய்யவில்லை. நீ மாத்திரம் பயப்படாமல் உண்மையைக் கூறுவாயாக" என்று வினவினன்.

இங்ஙனம் பிரஹஸ்தனால் வினவப்பட்ட அனுமான் அவனைப் பாராட்டாமல் ராவணனையே நோக்கி "ராவணா! நான் தேவேந்திரனுக்காவது யமனுக்காவது வருணனுக்காவது தூதனாக இங்கு வரவில்லை. எனக்குக் குபேரனோடு

சிறிதும் சிநேகமில்லை. விஷ்ணு தேவனும் என்னை இங்கு அனுப்பவில்லை. நான் உண்மையில் வானரனேயன்றி மாறு வேடம் தரித்து வந்தவனல்லேன். ராக்ஷசர்களுக்கு அதிபதியான உன்னைக் காணவிரும்பியே அசோகவனத்தை யழித்தேன். பிறகு என்னைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டு என்னை எதிர்த்துவந்த அரக்கர்களைக் கொன்றேன். என்னை தேவாசுரர்களுங்கூட எவ்வகை அஸ்திரத்தினாலும் எவ்வகைப் பாசத்தினாலும் கட்டமுடியாது. உனக்குப்போல் எனக்கும் இவ்வரம் பிரமதேவனிடத்தினின்றே கிடைத்தது. அரக்கர் கோனான உன்னைக் காணவேண்டியே நான் இவ்வஸ்திரத்திற்குக் கட்டுண்டிருந்தேனன்றி வேறில்லை. உலகுக்கெல்லாம் பிரபுவான ராமனுடைய தூதனென்று என்னை அறிவாயாக. நான் இப்பொழுது உனக்கு இதமாகச் சொல்லப் போகிற வார்த்தைகளை ஊக்கத்துடன் கேட்பாயாக." என்று சில கூறத்தொடங்கினன்.

ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஐம்பத்தோராவது ஸர்க்கம்.

## அனுமான் ராவணனுக்கு இதோபதேசஞ் செய்தல்.

பிறகு அனுமான் ராவணனை நோக்கி "ராக்ஷசர்களுக்கு அதிபதியே! உனது சிநேகிதனான சுக்கிரீவன் சில விஷயங்களைச் சொல்லி என்னை யனுப்புகையால் நான் உன்னிருப்பிடத்திற்கு வந்தேன். அவன் உனக்குச் சொல்லியனுப்பின வார்த்தைகளைக் கேட்பாயாக. உலகங்களுக்கெல்லாம் பிரபுவான தசரத சக்கரவர்த்தியின் மூத்த குமாரனான ராமன் தந்தையின் கட்டளைப்படி அயோத்தியினின்று புறப்பட்டு தம்பி லக்ஷ்மணனோடும், மனைவி சீதையோடும் கூடி தண்டகாரணியம் புகுந்தனன். உடனே சிறிது நாட்களுக்கெல்லாம் சீதை காணமற்போயினள்.

அதனால் அந்த ராம லக்ஷ்மணர்கள் மிகுந்த வருத்தத்துடன் ஸீதையைத் தேடிக்கொண்டு ருச்சியமூக பர்வதத்திலிருந்த சுக்கிரீவனையடைந்து அவனிடம் சிநேகஞ்செய்து கொண்டு அவனது விரோதியான வாலியைக்கொன்று வானர ராஜ்ஜியத்தை அவனுக்களித்தனர். இதற்குப் பதிலாக சுக்கிரீவன் ஸீதையைத் தேடிக் கொடுப்பதாக பிரதிக்ஞை செய்து எல்லாத் திசைகளுக்கும் வானரர்களையனுப்பினன். கணக்கற்ற வானர வீரர்கள் எல்லாத் திசைகளிலும், பூமியிலும் ஆகாயத்திலும் பாதாளத்திலும் ஸீதையைத் தேடுகின்றனர். அவர்களில் ஒருவனான நான் வாயுதேவனுடைய குமாரனான அநுமானென்னும் பெயருடையவன். ஸீதையின் நிமித்தமாக நூறுயோசனை விஸ்தாரமுடைய சமுத்திரத்தைத் தாண்டி இவ்விடம் வந்து அவளைக் கண்டேன்.

ராவணா! நீயோ தவ ஒழுக்கங்களிற் சிறந்து சிறந்த நீதி சாஸ்திரங்களையுணர்ந்து மிகுந்த கீர்த்திமானாய் விளங்குகின்றனை. இப்படிப்பட்ட நீ அன்னிய ஸ்திரீகளைப்பிடித்து சிறைவைப்பது எள்ளளவும் யுக்தமன்று. முதலில் சிறிது சுகத்தைக் கொடுக்கக்கூடியதாயினும் இத்தகைய செய்கை வேரோடு நாசஞ்செய்யும் தன்மை வாய்ந்தது. இப்படிப்பட்ட காரியத்தை உன்னைப்போன்ற புத்திசாலிகள் செய்ய முயற்சி கொள்வார்களா? 'எல்லோரையும் வேரோடு நாசஞ்செய்யவல்ல என்னை எவன் நாசம் செய்யக்கூடும்?' என்கிறாயோ? ராம லக்ஷ்மணர்கள் சீறிச்சிவந்து நிற்பார்களேல், அவர்கள் பிரயோகிக்கும் பாணங்களின் முன்பு நிற்க வல்லவன் தேவர்களிலாவது அசுரர்களிலாவது எவனுமில்லையென்று உணர்வாயாக.

ராவணா! ராமனுக்குக் கெடுதிசெய்து சுகம்பெற விரும்புபவன் மூன்று உலகங்களில் ஒருவனும் அகப்படமாட்டான். ஆகையால் நீ உடனே ஸீதையை ராமனிடம் கொண்டு

சேர்த்துவிடுவாயாயின் உனக்கு நல்லகாலமுண்டு. இல்லை யேல் இவ்விலங்கையும், நீயும், சமஸ்த ராக்ஷசர்களும் சீக்கிரத்தில் ராம பாணங்களுக்கு இலக்காகி முடிந்துபோவீர்களென்பது திண்ணம். ராக்ஷஸேச்வரா! நீ சீதையைக் கொண்டு வந்து உன் வசத்தில் வைத்துக்கொண்டிருப்பதாக நினைத்துக்கொண்டிருக்கின்றனை. சீதை உன்னையும் உன் குலத்தையும் பாழ் செய்யவல்ல கொடிய விஷமுடைய ஸர்ப்பமென்பதைத் தெரிந்துகொள்ளா திருக்கின்றனை.

ராவணா! சிறந்த வரங்களையும் நீண்ட ஆயுளையும் பெற்ற நீ இங்ஙனம் துர்ப்புத்தியால் முடிவடையாதிருக்கும்வண்ணம் உனக்கு சுக்கிரீவன் இந்தவிதம் கூறும்படி சொல்லினன். 'நான் செய்த பாவச்செயலுக்கு எப்படியும் நான் பலன் அனுபவித்துத் தானே தீரவேண்டும். ஆகையால் தருமசிந்தையினால் எனக்கென்னபயன்?' என்பாயேல், தருமகாரியம் அதருமத்தை நாசஞ்செய்யுமாகையால் நீ தருமத்தையே ஆசரிப்பாயாயின் உன் பாப கருமங்களெல்லாம் நசித்துப்போகும். 'நான் இதுவரையில் செய்திருக்கிற தருமமே இப்பொழுது நான் செய்திருக்கும் அதருமத்தினாலேற்பட்ட பாவங்களைத் தொலைக்காதா?' என்னில், இதுவரையில் நீ செய்த தருமத்தின் பலனையெல்லாம் அனுபவித்தாய்விட்டது; ஆகையால் உனது தருமமெல்லாம் மிகுதியில்லாமல் தீர்ந்துபோயிற்று. இதற்கு சந்தேகமில்லை. ஆகவே சீதையை அபகரித்த அதருமத்தைத் தொலைக்கவல்ல தருமம் உன்னிடத்திலில்லை. ஆகையால் இந்த அதருமத்தின் பலனையுங்கூட இனிச் சீக்கிரத்தில் அனுபவிக்கப் போகின்றனை. ராமனைச் சாதாரண மனிதன் என்று நினைத்துவிடவேண்டாம். அவன் ஒருவனே ஜனஸ்தானத்திலுள்ள ராக்ஷசர்களையெல்லாம் கொன்றதையும், ஒரே பாணத்தினால் வாலியைக் கொன்றதையும், ராமனும் சுக்கிரீவனும் சிநேகஞ்செய்து கொண்டிருப்பதையும்

நன்கு ஆலோசித்து உனக்கு எது இஷ்டமோ அதைச் செய்வாயாக.

ராக்ஷச ராஜனே! நானொருவனே குதிரைகளும் தேர் களும் யானைகளும் நிறைந்திருக்கிற இவ்விலங்கை முழுவதை யும் நாசஞ்செய்ய வல்லவன். ஆனால் இது ராமனுக்கு இஷ்ட மன்று. ஏனெனில் சீதையை விரோதித்த ராக்ஷசர்களை வரையும் தானே கொல்வதாக அப்பெருமான் வானரர்களும் கரடிகளும் நிறைந்த கூட்டத்தின் முன்னிலையில் பிரதிக்கினை செய்திருக்கின்றனன். ஒன்றுமன இந்திரனுங்கூட ராமனுக்கு அபராதஞ் செய்து சிறிதும் சுகத்தைப் பெறவல்லனல்லன். இனி உன்னைப் போன்றவனைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? சீதையென்னு முருவத்துடனிருக்கிற இந்தக் கால பாசத்தை நீயே கழுத்தில் போட்டுக்கொண்டதுபோதும்; இனி உனக்கு இதம் எதுவோ அதை ஆலோசிப்பாயாக. நான் ராமனது வேலையாளாகையால் அவனது பிரபாவங்களை நன்றாக அறி வேன். நான் ராஜ தூதனாகையால் உனக்கும் இதத்தை நான் அவசியம் தேடவேண்டும். நான் மனிதனுமல்லேன், ராக்ஷ சனுமல்லேன். வானரனாகையால் மத்தியஸ்தனாயிருப்பது பற்றிப் பக்ஷபாதமில்லாமல் சொல்வேன். ஆகையால் என் வார்த்தையைக் கேட்பாயாக.

லங்கேச்வரா! அந்த ராமன் சமஸ்த உலகங்களையும் பிரளயகால உருத்திரனைப்போல் சங்கரித்து மீளவும் அவற்றைப் பழையபடியே சிருட்டிக்க வல்லவன். ராமன் விஷ்ணு தேவனுக்கொப்பான பராக்கிரமமுடையவனாகை யால் அவனோடு யுத்தஞ்செய்யவல்லவன் தேவதைகளிலும், அசுரர்களிலும், யக்ஷர்களிலும், ராக்ஷசர்களிலும், வித்தியா தரர்களிலும், கந்தருவர்களிலும், மற்றுமுள்ள எந்த பிராணி களிலும் எவ்விடத்திலும் எக்காலத்திலும் அகப்படமாட்

டான். அப்படிப்பட்டவனுக்குத் தீங்கிழைத்த நீ இனிப் பிழைப்பதரிது.

ராவணா! சாமான்னிய தேவதைகளையன்றி இந்திரனாயி னும் முப்புரங்களை யெரித்த முக்கண்ணனாயினும் அவனது தந்தையான பிரமதேவனேயாயினும், இவர்கள் எல்லாரும் ஒன்றுகூடியாயினும் யுத்தத்தில் ராமனால் கொல்லப்படுமவனை எள்ளளவும் பாதுகாக்க வல்லவரல்லர்." என்றனன். இங்ஙனம் மிடுக்குடன் சொன்ன அனுமானது வார்த்தைகளைக் கேட்ட ராவணன் அவை தனக்கு இஷ்டமில்லாதிருந்தமை யால் கோபாவேசத்தினால் கண்கள் சுழலப்பெற்று அவ்வானர னைக் கொல்லும்படி கட்டளையிட்டனன்.

ஐம்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்.

## விபீஷணன் தூதனைக் கொல்லலாகாதென்று ராவணனுக்கு நன்மை கூறுதல்.

இங்ஙனம் ராவணன் கட்டளையிட்டதைக்கேட்ட விபீஷ ணன் தனதண்ணனை நோக்கி "ராக்ஷஸேந்திரனே! கோபத்தை நீக்கி மனத்தெளிவு பெற்று அருள்புரிவாயாக. நன்மை தீமை களையறிந்த சிறந்த அரசர்கள் தூதனைக்கொல்லமாட்டார்கள். ஆகையால் இத்தூதனைக் கொல்வது ராஜ தருமத்திற்குச் சேராது. உனக்கு இதனால் நிந்தை உண்டாகுமென்பது நிச்சயம். சிறந்த தருமமுடையவனும் ராஜ தருமங்களில் பண்டிதனும், நன்மை தீமைகளை யறிந்தவனும் சாஸ்திரங் களை யுணர்ந்தவனுமான உன்னைப்போன்ற பேரறிஞர்கள் இப்படிப்பட்ட தகாத இடத்தில் கோபமேற்றுக்கொள்வது சிறிதும் சரியல்ல. நீயோ ராக்ஷசர்களெல்லோருக்கும் பிரபு, பகைவரைப் பறந்தோடச்செய்பவன்; எப்படிப்பட்டவர்க்கும் அணுக முடியாதவன். ஆகையால் நான் சொன்ன காரணத்

த்தைப் பற்றி தூதனைக்கொல்லாமல் அவனுக்கு ஏதேனுமொரு தண்டனை விதிப்பாயாக." என்றனன்.

பின்னுமவ்விபீஷணன் ராவணனை நோக்கி "லங்கேச்வரா! 'கேவலம் இவ்வானரன் தூதனல்லவே! அட்சகுமாராதிகளைக் கொன்று இவ்வளவவ்வளவென்று அளவிடமுடியாத தீமைகளைச்செய்தவனுகையால் விரோதியல்லவோ?' என்னில், இவன் பெரிய பகைவனேயாயினும் தூதனாக வந்திருப்பதாலும் பெரியோர்கள் தூதனைக்கொல்லலாகாதென்று சொல்வார்களாகையாலும் இவனுக்குத் தகுந்த ஏதாவதொரு தண்டனையை விதிக்கலாமேயன்றி இவனை யடியோடு கொல்வது சிறிதும் யுக்தமன்று.

அங்கங்களுக்கு விகாரத்தை ஏற்படுத்துதலும், சாட்டையால் அடித்தலும், தலையை மொட்டையடித்தலுமாகிய இவை தூதனுக்குத் தகுந்த தண்டனைகளென்று பெரியோர் கூறுவார்கள். பின்னும் இந்த வானரனைக் கொல்வது சாஸ்திரவிரோதமாத்திரமன்று, இதனுல் நமக்கு யாதொரு குணமும் தோற்றவில்லை. எவன் இவ்வானரனை இவ்விடத்திற்கு அனுப்பினுனே அவனிடம் உனது பராக்கிரமத்தைக் காட்டுவாயாக. இவன் நல்லவனுகவாவது கெட்டவனுகவாவது இருக்கட்டும். பிறரால் அனுப்பப்பட்டு வந்தவனுகையால் இவன் அவர் சொல்லியனுப்பின வார்த்தைகளைச்சொல்லினன். ஆகையாலிவன் கொல்லத்தகுந்தவனல்லன். மேலும் இவனை நீ கொன்றுவிடுவாயாயின் பெரிய சமுத்திரத்தைத்தாண்டி இவ்விலங்கைக்கு வருந்திறமையுடைய மற்றொருவன் இருப்பதாக எனக்குத்தெரியவில்லை. இதனுல் அந்த ராமலக்ஷ்மணர்களை இவ்விடம் அழைத்துக்கொண்டுவந்து உன்னேடு யுத்தத்திற்கு மூட்டிவிடும் திறமையுடைய வேறொரு தூதன் எவனுமில்லையென்றே சொன்னபடியாகும். ராஜனே! தேவாசுரர்களாலும் ஜயிக்க முடியாத நீ அற்ப மனிதரோடு யுத்தஞ்செய்

வதைத் தவிர்க்க விரும்பி இத்தூதனை முடிப்பது நியாயமல்ல. உனக்கு அளவற்ற ராக்ஷச சைன்னியங்கள் இருக்கின்றன. ஆகையால் உனது கட்டளைக்குட்பட்டு சில ராக்ஷசர்களே சென்று அந்த ராம லக்ஷ்மணர்களை வென்றுவருவார்கள்." என்றனன். இங்ஙனம் விபீஷணன் தன் மனத்திற்கு இனிதாக மொழிந்த நல்ல வார்த்தைகளைக் கேட்ட ராவணன் ஆலோசித்து அவற்றை ஒப்புக்கொண்டனன்.

ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

### ராக்ஷசர்கள் அனுமானுடைய வாலில் நெருப்பிடுதலும் சீதை இதையறிந்து அக்கினியை வேண்டிக்கொள்ள அவன் அனுமானுக்குக் குளிர்ந்திருத்தலும் அனுமான் ராக்ஷசர்களை அதஞ் செய்தலும்.

பிறகு ராவணன் விபீஷணனை நோக்கி "நீ சொல்வது மிகுந்த நியாயமே. ஆயினும் இவ்வானரனுக்கு வால் பிரியமானதால் அதைக் கொளுத்தி விடுக" என்று கட்டளையிட்டனன். உடனே ராக்ஷசர்கள் கிழிந்த பஞ்சுத்துணிகளை அனுமானது வாலில் சுற்றினர். அப்பொழுது அனுமான் தன் சரீரத்தைப் பெருக்கினன். பிறகு அந்த ராக்ஷசர்கள் துணிக்கந்தைகளால் சுற்றப்பட்ட அவனது வாலை எண்ணெயில் நனைத்து அதில் நெருப்பு வைத்தனர்.

அனுமான் மிகுந்த கோபத்துடன் எரிகிறவாலை கிறுகிறுவென்று சுழற்றி அந்த ராக்ஷசர்களெல்லோரையும் கீழே விழத்தள்ளினன். பிறகு லங்கையிலுள்ள ராக்ஷசர்கள் இச்செய்தியைக்கேட்டு சந்தோஷமுற்று சிறுவர்களும் ஸ்திரீகளும் வயதுசென்றவர்களும்கூடி வேடிக்கை காணவந்தனர்.

அப்பொழுது அனுமான் தனக்குள் "இப்பொழுது நான் கட்டுண்டிருப்பினும் இதை விடுவித்துக்கொண்டு ஒரு நொடிப்பொழுதில் இவ்வரக்கர்களனைவரையும் கொன்றுவிட வல்லேன். ஆயினும் ராமன் தானே ராவணனையும் மற்றுமுள்ள ராக்ஷசர்களையும் முடிப்பதாகப் பிரதிக்ஞை செய்திருப்பதாலும், மீண்டும் நான் இலங்கை முழுவதையும் நன்கு காணவேண்டியிருப்பதாலும் இப்படிப்பட்ட அவமானத்தைப் பொறுத்திருக்கிறேனன்றி மற்றொன்று மில்லை. இவ்விலங்கையின் பாதுகாப்புக்காக ஏற்படுத்தி யிருக்கிற கோட்டைகளையும் வழிகளையும் நன்றாகப் பார்க்கவில்லையாகையால் இந்த ராக்ஷசர்களுடன் சென்று பார்ப்பேனாக" என்று நினைத்துக்கொண்டனன்.

பிறகு அந்தக் கொடிய ராக்ஷசர்கள் சங்கங்களை ஊதிக்கொண்டு பேரிவாத்தியங்களைக் கொட்டுவதும் இரைச்சலிடுவதும் தோள் தட்டுவதுமாகப் பல செயல்களைச் செய்து பெரிய சத்தஞ் செய்துகொண்டு அப்பட்டணம் முழுவதும் அவ்வானரனைத் திருப்பிக்கொண்டு போயினர். அனுமான் அவ்விலங்கா நகரிலுள்ள எல்லா வீதிகளிலும் சென்றுகொண்டே அதிலுள்ள சமஸ்தமான விசேஷங்களையும் ரகசிய இடங்களையும் கோட்டைகளையும் நன்கு கண்டுகொண்டனன். அப்பொழுது ஆங்காங்கு ஸ்திரீகளும் சிறுவர்களும் கிழவர்களும் எரிகிறவாலுடன் கூடின அனுமானைக் காண விருப்பங்கொண்டு மிகுந்த உத்ஸாகத்துடன் வீடுகளினின்று வெளிப்பட்டனர்.

சில விகாரமான ராக்ஷச ஸ்திரீகள் இந்த சமாசாரத்தை சீதைக்குக் கூறினர். இதைக்கேட்ட சீதை மிகுந்த வருத்தமடைந்து அக்கினிதேவனை மனதில் தியானஞ் செய்து 'நான் உத்தமியான பதிவிரதையாய் இருப்பின் அந்த ராமனுக்கு என்னிடம் சிறிதளவாவது தயை இருக்குமாயின், ஓ

அக்கினியே! நீ அனுமானுக்குக் குளிர்ந்திருப்பாயாக.' என்று வேண்டினள். அவ்விதமே அனுமானுடைய வாலில் பற்றின நெருப்பு சீதையின் வேண்டுகோளுக்கிரங்கி அனுமானுக்குச் சிறிதும் பாதையை உண்டாக்கவில்லை. தவிர, அவனது தந்தையான வாயுதேவனும் சீதையின் மனம் குளிரும்படி பனிக்காற்றுப்போல் குளிர்ந்து வீசினன்.

அப்பொழுது அனுமான் தனக்குள் "ஆ! இதென்ன ஆச்சரியம்? என் வாலில் இதோ அக்கினி மிகுதியும் ஜ்வலிக்கின்றதே; அப்படியிருந்தும் என்னைச் சிறிதும் தகிக்காதிருக்கின்றதே! இவ்வக்கினி என் வால் நுனியில் குளிர்ந்த சந்தனம் வெட்டிவேர் முதலியவற்றைக் கலந்து பூசினாற்போல் குளிர்ந்திருக்கின்றதே! சீதாதேவியின் தயையினாலும், ராமனது பிரபாவத்தினாலும் என் தந்தையான வாயுதேவனுடைய அருளினாலும் இவ்வக்கினிதேவன் என்னைக் கொளுத்தாதிருக்கின்றனன்" என்று சிந்தித்தனன்.

உடனே அவ்வானர திலகன் திடீரென்று வேகமாகக் கிளம்பி சிம்மநாதஞ் செய்துகொண்டு பருவதம்போல் மிகவுமுயர்ந்த நகரத்து வாயிலைச் சேர்ந்தனன். பருவதம்போலிருக்கிற அவ்வீரன் ஒரு நொடிப் பொழுதில் மிகுதியும் குள்ளனாகி அக்கட்டுகளையெல்லாம் உதறி விட்டனன். மீளவும் பெரிய உருவமுடையவனாகி தோரண வாயிற்படியில் வைத்திருந்த காலாயஸமென்னும் பெரிய இரும்புத் தடியைக் கையிலெடுத்துக்கொண்டு தனக்குக் காவலிருக்கிற ராக்ஷசர்களையெல்லாம் அதனால் உருமாய்த்தனன். பிறகு அனுமான் வாலில் பற்றின அக்கினி ஜ்வாலைகள் தன்னைச் சுற்றிலும் ஜ்வலிக்கப்பெற்றுக் கிரணங்களால் சூழப்பட்டு மிகுந்த ஒளியுடன் விளங்குகின்ற சூரியனைப்போல் பிரகாசித்தனன்.

ஐம்பத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஐம்பத்துநான்காவது ஸர்க்கம்

### அநுமான் தன் வாலிலிருக்கிற நெருப்பினால் விபீஷணனது வீடு தவிர மற்ற வீடுகளையெல்லாம் கொளுத்துதல்.

பிறகு அநுமான் தனக்குள் "அசோக வனத்தை அழித்தேன்; மேலான சில ராக்ஷசர்களையும் கொன்றேன்; சேனைகளில் சில பாகத்தையும் உருமாய்த்தேன். இப்பொழுது இப்பட்டினத்தின் கோட்டையை யழிப்பதொன்றே பாக்கியிருக்கின்றது. என் வாலில் ஜ்வலிக்கின்ற அக்கினி தேவன் என்னைத் தகிக்காமலிருக்கிறானல்லவா? இத்தகைய உபகாரஞ் செய்த இவ்வக்கினிதேவனுக்கு இம்மேலான வீடுகளை ஆகுதியாகக் கொடுத்துத் திருப்தி செய்வது யுக்தமென்று தோன்றுகிறது." என்று சிந்தித்து உடனே அவ்வானரன் எரிகின்ற வாலுடன் மின்னலோடு கூடின மேகம் போல் புலப்பட்டுக்கொண்டு லங்காபுரத்திலுள்ள வீடுகளின் மேல் திரிந்தனன்.

அவ்வநுமான் முதலில் பிரஹஸ்தனது வீட்டின்மேல் கிளம்பி அங்கு நெருப்பைப் பற்றவைத்து அதற்கடுத்த மகா பார்சுவனது வீட்டிற்குக் கிளம்பினன். அவனது வீட்டில் காலாக்கினிபோன்ற நெருப்பைப் பற்றவிட்டு, பிறகு வஜ்ஜிரதம்ஷ்ட்ரன், சுகன், சாரணன், இந்திரஜித்து, ஜம்புமாலி, சுமாலி, ரச்மிகேது, நராந்தகன், கும்பன் முதலியவர்களின் வீடுகளைக்கொளுத்திக்கொண்டே சென்று இடையிலிருந்த விபீஷணனது வீட்டை மாத்திரம் விட்டு மறுபடியும் கிரமமாக வீடுகள்தோறும் சென்று எல்லாவற்றையும் கொளுத்தினன். அதனால் ராக்ஷசர்கள் சம்பாதித்து வைத்திருந்த சிறந்த ஐசுவரியங்களான வைரம், மரகதம், மாணிக்கம், ரத்தினம், முத்து முதலியவைகளெல்லாம் கொளுத்தப்பட்டு நீறாகி யொழிந்தன.

பிறகு அவ்வானரன் ராவணனது மாளிகைக்குச்சென்று அதிலும் நெருப்பு மூட்டி பிரளயகால மேகம்போல் உரக்க இரைச்சலிட்டனன். அப்பொழுது வாயுதேவன் வேகமாக வீச, அக்கினிதேவன் மிகுந்த உத்ஸாகத்துடன் லங்கை முழுவதும் வியாபித்தனன். பொற்சாளரங்கள் பொருந்தி முத்துக்களும் ரத்தினங்களும் இழைக்கப்பெற்று விளங்குகிற மிகப் பெரிய அழகிய மாளிகைகள் பலவும் எரிந்து தரையில் வீழ்ந்தன. ராக்ஷசர்களெல்லாரும் உத்ஸாகங் குலைந்து நிலை நின்ற செல்வமெல்லாம பாழாகப்பெற்று மனக்களிப்பின்றி ஓடத்தொடங்கி 'ஐயோ! ஒன்றுன அக்கினி தேவனே வானர உருவத்துடன் இவ்விடத்திற்கு வந்தனன்போலும்!' என்று முறையிட்டனர்.

சிலர் சுற்றிலும் நெருப்பு சூழ்ந்தெரியப்பெற்ற மேல் மாடத்திலின்று அழுதுகொண்டு தலை மயிர்கள் அவிழ்ந்து தலைபத் திடீரென்று கீழே விழுந்தனர். இங்ஙனம் ராக்ஷசர்களின் வீடுகளில் நெருப்பை எவ்வளவு மூட்டியும் அனுமான் திருப்தியடையவில்லை. அவ்வண்ணமே ராக்ஷசர்கள் மாண்டு எவ்வளவு பிணங்கள் விழுந்தாலும் பூமியும் திருப்தியடைய வில்லை. இங்ஙனம் சிவபிரான் திரிபுர தகனஞ் செய்தாப் போல் அனுமான் லங்காபுரத்தை தகனஞ் செய்தனன்.

சிறந்த அறிவுள்ள வயதுசென்ற கிழவர்கள் அனைவரும் கூட்டங் கூட்டமாகச் சேர்ந்து, பிராணிகளோடும் வீடுகளோடும் மரங்களோடும் கூடின அந்த லங்கா நகரம் முழுவதும் திடீரென்று ஒரு நொடிப் பொழுதில் எரிந்துபோனதைக்கண்டு 'இவ்வானரன் வஜ்ராயுதந் தரித்த இந்திரனே? அல்லது ஒன்றுன யமனே! வருணனே! வாயுவோ! ருத்திரனே! அக்கினியோ! சூரியனே! குபேரனே! சந்திரனே! தெரியவில்லை. இவன் கேவலம் வானரனல்ல. பிரமதேவன் ராக்ஷசர்களை அழிக்க முயற்சி செய்கையில், அவ

னது கோபமே இங்ஙனம் வானர உருக்கொண்டு வந்ததோ! அல்லது விஷ்ணுதேவனின் தேஜஸ்ஸே இங்ஙனம் ராக்ஷசர்களை நாசஞ் செய்யும்பொருட்டு வானர உருவந் தரித்து இப்பொழுது இவ்விடம் வந்ததோ?" என்று பலர் பலவாறு சொல்லிக்கொண்டனர்.

இங்ஙனே லங்கையிலுள்ள சமஸ்த பிராணிகளும் மனவிரக்கத்திற்கிடமாகி நெருப்பால் கொளுத்தப்பட்டு துக்க சப்தங்களால் கதறலிட்டன. ராக்ஷசர்கள் எரிந்துவிழும்பொழுது ஐயோ! தந்தையே! ஆ! அருமைக் குமாரனே! ஐயோ! ஆசை நாயகனே! என்று பலவாருகச் சொல்லிக் கூச்சலிடுகையில் அந்த சப்தம் மிகவும் கொடியதாகிக் கேட்க மிகவும் பயங்கரமாகவிருந்தது. தேவதைகள் அனுமானைப் புகழ்ந்தனர். சகல தேவதைகளும் மகரிஷிகளும் கந்தருவர்களும் வித்தியாதரர்களும் நாகர்களும் யக்ஷர்களும் லங்கா பட்டணம் அங்ஙனம் கொளுத்தப்பட்டது கண்டு நிகரில்லாத சந்தோஷத்தை யடைந்தனர்.

ஐம்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தைந்தாவது & ஐம்பத்தாறுவது ஸர்க்கம்.

## அனுமான் சீதையை மீளவும் நேரில் கண்டு பிரயாணமாய்ப் பறப்படுதல்.

அனுமான் லங்கை முழுவதும் கொளுத்திப் பிறகு சமுத்திரத்தில் வாலை நனைத்து அதிலுள்ள நெருப்பை அணைத்தனன். பிறகு அவன் திடீரென்று மனக்கலக்கமடைந்து தன்னுள் "ஆ! கோபத்தினால் முன்பின் தெரியாமல் என்ன காரியம் செய்தேன்! ஐயோ! மகாபாபியானேனே! எனது பிரயாசங்களெல்லாம் வீணாயினவே! ஐயோ! சீதை இவ்விலங்கையிலிருப்பதை யடியோடு மறந்துவிட்டேனே! அவளும் நெருப்பில் கொளுத்தப்பட்டிருப்பாளோ! ஐயோ!

நான் என் ஜாதி புத்தியினால் சீதையைப் பாதுகாக்காமல் போயினனே! இவ்விலங்கையில் ஒரு பிரதேசமாயினும் கொளுத்தப்படாமல் காணப்படவில்லையே. பட்டணமெல்லாம் தீருகிவிட்டதே. என் விவேகக் குறைவினால் சீதையும் நசித்து நான் முயன்ற காரியமெல்லாம் பாழாயிருக்குமாயின் நானும் இவ்விடத்திலேயே பிராணனை விடுவேனாக. இனி நான் பிராணனை வைத்துக்கொண்டு சுக்கிரீவனை எங்ஙனம் காண்பேன்? ராம லக்ஷ்மணர்கள் சீதை மரணமடைந்ததைக் கேட்டு உடனே உயிரை விட்டுவிடுவார்கள். இதைக்கண்ட சுக்கிரீவன் சமஸ்த பந்துக்களோடும் தன்னை மாய்த்துக்கொள்வான். பரதனும் சத்துருக்கனும் இதுகேட்டு நிச்சயமாக மரணமடைவர். இங்ஙனம் இக்ஷ்வாகு வம்சமெல்லாம் நாசமடைந்தவுடனே ஜனங்களெல்லாரும் துக்கத்தினாலுண்டான பரிதாபத்தினால் பிடிக்கப்பட்டவராவர். இப்படிப்பட்ட அனர்த்தங்களுக்கு மூலகாரணமான நான் கொடிய பாபியே யானேன்.” என்று எண்ணுகின பலவு மெண்ணினன்.

பின்னும் அவ்வானரன் சில சுப சகுனங்களைக்கண்டு சற்று மனத்தெளிவடைந்து தனக்குள் “நெருப்பிற்குக் கொளுத்துவதே இயற்கையான குணம். அப்படி யிருந்தும் அவ்வக்கினி தேவன் எனது வாலைக்கொளுத்தாதிருந்தனனே; இது சீதையினது அருளினாலும் ராமனது பிரபாவத்தினாலும் விளைந்ததன்றி வேறல்ல. அப்படியிருக்க சிறந்த பதிவிரதையும் பூஜிக்கத் தகுந்தவளுமான சீதையை அக்கினி தேவன் ஸ்பரிசிக்கவும் (தொடவும்) வல்லனல்லன். சீதையை அணுகியிருக்கவேமாட்டான். பின்னுமந்த சீதை தனது தவமகிமையினாலும், சத்தியத்தையே மொழியுந் தன்மையினாலும் கணவனைத் தவிர மற்றொருவரையும் நினையாமையாகிற பதிவிரதா தருமத்தின் பெருக்கினாலும் அக்கினியையுங்கூட தகித்துவிடுவாளே! அப்படிப்பட்ட அவளை அக்கினி

தேவன் எவ்வளவும் தகிக்க வல்லவனல்லன்." என்று ஒரு வாறு தேறுதலடைந்தனன்.

அப்பொழுது ஆகாயத்தில் சாரணர்கள் "அஹோ அனுமான் லங்கை முழுவதையும் கொளுத்தி எவர்க்கும் செய்ய முடியாத காரியத்தைச் செய்தனன். என்ன ஆச்சரியம்! சீதை மாத்திரம் கொளுத்தப்படவில்லை. இப்படிப் பட்ட ஆச்சரியத்தை நாம் இதுவரை பார்த்ததே இல்லை.' என்று சொல்லிக்கொண்டனர். இதைக்கேட்ட அனுமான் மிகுந்த சந்தோஷமடைந்து மீளவும் சீதையை நேர்கண்டு ராமனிடம் திரும்பிப்போக மனங்கொண்டனன்.

அங்ஙனமே சிறிது நேரத்தில் அவ்வாயு மைந்தன் சீதையினிடஞ் சென்று அவளுக்கு வணக்கம் செய்து "எனது அதிர்ஷ்ட வசத்தினால் நீர் யாதொரு அபாயமும் அடையாதிருக்கக் காண்கிறேன்" என்றனன். அப்பொழுது சீதை அனுமானை நோக்கி "சத்துருக்களையடக்கும் வீரனே! இந்த ராக்ஷசர்களெல்லாரையும் உருமாய்த்து என்னை ராமனுடன் சேர்ப்பிக்கையாகிற இக்காரியத்தை நிறைவேற்று வதற்கு நீ ஒருவனே வல்லவன். நீ இங்ஙனம் வெளிப் படுத்துகின்ற உன்பலத்தின் மிகுதி உனக்கு அளவற்ற புகழ்ச்சியை விளைப்பதேயன்றி ராமனுக்கன்று. ஆகையால் அந்த ராமனே இவ்விடம் வந்து இவ்விலங்கை முழுவதையும் பாழ்செய்து என்னைக்கொண்டுபோவானாயின் அதுவே அவ னுக்குத் தகுந்ததாய் இருக்கும். ஆகவே யுத்தத்தில் தகுந்தவழியில் அவனது பராக்கிரமத்தை நிறைவேற்றும் படி நீயே நடப்பிக்கவேண்டும்" என்றனள்.

அனுமான் 'அப்படியே ஆகட்டும்' என்று சொல்லி சீதையிடம் விடைபெற்றுக்கொண்டு அவளை வணங்கி உடனே பிரயாணமாகி அரிஷ்டமென்கிற பர்வதத்தின்மேல் ஏறினன். பல குகைகளோடு கூடின அதன் சிகரங்கள்

அனுமானுடைய வேகத்தைப் பொறுக்க முடியாமல் பலவாறாகச் சிதறின. அனுமான் அதன் நுனியில் நின்றுகொண்டு சமுத்திரத்தைத் தாண்டும்பொருட்டுத் தன் தேகத்தைப் பெருக்கச்செய்தனன். உடனே அனுமான் சமுத்திரத்தைத் தாண்டும்பொருட்டு வாயுதேவனைப்போல் ஆகாயத்தில் கிளம்பினன். அப்பொழுது அம்மேலான பர்வதம் அனுமானால் பிடிக்கப்பட்டுச் சிகரங்கள் கிடுகிடுவென்று நடுங்கவும், மரங்கள் வேர் அறுந்துவிழவும் பெற்றுத் தன்னிடத்திலுள்ள ஜந்துக்களோடு பெரிய சப்தமிட்டது. அதன் குகைகளிலுள்ள பெரிய சிம்மங்கள் அனுமான் அதில் காலூன்றுகையால் பிடிக்கப்பட்டுப் பயங்கரமாகக் கர்ஜிக்கையில் அப்பெருஞ் சப்தம் ஆகாயத்தைப் பிளப்பதுபோல் உரக்கச் செவிப்பட்டது.

அப்பொழுது அம்மலையில் உலாவிக்கொண்டிருந்த வித்தியாதர ஸ்திரீகள் வஸ்திரங்கள் நழுவித் தாறுமாறாகவும் பூஷணங்கள் கலைந்து சிதறவும் பெற்றுத் திடீரென்று ஆகாயத்தில் கிளம்பினர். கொடிய விஷமுடைய பெரிய ஸர்ப்பங்கள் உடைந்து விழுகிற பெரிய கற்களால் தலையும் கழுத்தும் முறியப்பெற்றுத் துடித்துச் சுழன்று பரிதவித்தன. மிகுதியும் உயர்ந்த அப்பர்வதம் அனுமான் பாதங்களை ஊன்றிப் பிடிக்கையால் பாதாளத்திலாழ்ந்து நிலத்திற்கு சமமாயிருந்தது.

ஐம்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஐம்பத்தேழாவது ஸர்க்கம்.

## அனுமான் மீளவும் சமுத்திரத்தைத் தாண்டி அக்கரை சேருதலும், போய் வந்த வரலாற்றை ஜாம்பவான் முதலியவர் வினவுதலும்.

அனுமான் வாயுவை நிகர்த்த வேகமுடையவனாகையால், உரகர்களும், யக்ஷர்களும் கந்தருவர்களும் நிறைந்த ஆகாய

மாகிற பெரிய சமுத்திரத்தைச் சிறிதும் சோம்பலின்றிப் பெரிய ஓடம் சமுத்திரத்தைத் தாண்டுவதுபோல் இளைப் பின்றித் தாண்டினன். அவன் அடிக்கடி மேகக் கூட்டங் களில் புகுவதும் அடிக்கடி வெளிப்படுவதுமாகி மேகங்களில் மறைவதும் தோன்றுவதுமாயிருக்கிற சந்திரனைப்போல் புலப்பட்டனன்.

அம்மகா வீரன் திரும்பிவரும்பொழுது மைநாக பர்வ தத்தைத் தடவிக்கொடுத்து விடைபெற்றுக்கொண்டு நாணி னின்று விடுபட்ட நாராச பாணம்போல் மிக்க வேகத்துடன் போயினன். பிறகு கொஞ்சதூரஞ் சென்றதும் மேகம் போன்ற மகேந்திர பர்வதத்தைக் கண்டு நண்பர்களைக் காணப்போகிறோமென்ற சந்தோஷத்தினால் சிம்மநாதஞ் செய்து வாலையும் உதறினன். அங்கு சமுத்திரத்தின் வட கரையில் அநுமானைக் காணவேண்டுமென்று மிகுதியும் விருப்புற்று எதிர் பார்த்துக்கொண்டிருந்த அங்கதன் முதலிய வானர வீரர்கள் அவ்வநுமானுடைய மேக கர்ஜனைபோன்ற சிம்மநாதத்தைக் கேட்டு மிகுந்த சந்தோஷமடைந்து ஆங் காங்கு மேற்கிளம்பிப் பாயத் தொடங்கினர். சீக்கிரத்தில் அவ்வானரர்களனைவரும் மேகத்தைப்போல் வருகின்ற அநு மானைக் கண்டு கைகளைக் குவித்து நின்றிருந்தனர். அப் பொழுதே அநுமான் மரங்கள் நிறைந்த அம்மகேந்திர பர்வ தத்தின் சிகரத்தில் இறங்கினன்.

உடனே அவ்வானர வீரர்களனைவரும் மிகுந்த சந் தோஷத்துடன் அநுமானைச் சூழ்ந்துகொண்டு வேர்களையும் பழங்களையும் கொண்டுவந்து உபசாரமாகக் கொடுத்து அவ னைப் பூஜித்தனர். அநுமான் ஜாம்பவான் முதலிய வயது முதிர்ந்த பெரியோர்களுக்கும் இளவரசனை அங்கதனுக் கும் வந்தனஞ்செய்து, 'கண்டேன் சீதையை' என்று சுருக்கமாகச் சொல்லினன். உடனே அநுமான் அங்கதனைக்

கையில் பிடித்துக்கொண்டு அம்மகேந்திர பர்வதத்தில் ரமணியமான ஒரு வனப்பிரதேசத்தில் உட்கார்ந்து மிகுந்த சந்தோஷத்துடன் "அசோக வனத்தில் மிகவும் பயங்கர மான உருவமுடைய ராக்ஷஸ ஸ்திரீகளால் சூழ்ந்திருக்கப் பெற்ற சீதையைக் கண்டேன். அப்பெண்மணி ராமனைப் பார்க்க மிகுதியும் ஆவல்கொண்டு உபவாஸங்களால் (பட்டினி யாய் இருந்து) வருந்தி இளைத்து சடைகளைத் தரித்து அங்கம் முழுதும் தூள்படியப் பெற்றிருக்கின்றனள்" என்று கூறினன்.

இதைக்கேட்ட வானரர்களெல்லாரும் மிகுந்த சந்தோ ஷத்தினால் சிம்மநாதஞ்செய்தனர். சிலர் ஜாதிக்கிணங்குமாறு கிலகிலவென்ற சப்தங்களைச் செய்தனர். சிலர் வால்களை மேல் தூக்கிக்கொண்டு தரையில் அடித்தனர். சிலர் சந்தோ ஷத்தை அடக்க முடியாமல் மலைச்சிகரங்களினின்று கிளம்பிக் குதித்து அனுமானைத் தொட்டுத் தடவிக்கொடுத்தனர்.

அப்பொழுது அங்கதன் அனுமானை நோக்கி "வாயு புத்திரனே! மிகுதியும் விஸ்தாரமான சமுத்திரத்தைத் தாண்டிப்போய் மீளவும் திரும்பி வந்தனை. ஆதலால் பலத்தி லாவது பராக்கிரமத்திலாவது உனக்கு நிகரானவன் எவனுமே யில்லை. உனக்குள்ள ராம பக்தியை என்ன வென்று சொல்லுவேன்! ஆ! அப்பா! உன் வீரியமே வீரியம். ஆ! உன் தைரியமே தைரியம். எமது பாக்கியவசத்தினால் ராமன் சீதையைப் பிரிந்த துக்கத்தைத் துறந்து சுகமா யிருப்பான்" என்றனன். உடனே ஜாம்பவான் அனுமானை நோக்கி அவன் சமுத்திரத்தை தாண்டினதைப்பற்றி வின வத் தொடங்கி "அனுமானே! நீ சீதா தேவியை எங்ஙனம் கண்டனை? அவள் அங்கு எப்படியிருக்கின்றனள்? ராவணன் அப்பெண்மணியின் விஷயத்தில் எவ்வண்ணம் நடக்கின் றனன்? இவற்றை யெல்லாம் உள்ளபடி மொழிவாயாக.

நாம் ராமனிடம் போகும்பொழுது அங்கு எந்த சங்கதியைச் சொல்லவேண்டுமோ, எதை மறைக்க வேண்டுமோ, அதையெல்லாம் நீ புத்தியிற் சிறந்தவனாகையால் விவரமாக எமக்குச் சொல்வாயாக." என்று வினவினன்.

ஐம்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம்.

## அனுமான் தான் போய்வந்த வரலாற்றை வானர வீரர்களிடம் கூறுதல்.

பிறகு அனுமான் உடம்பெல்லாம் மயிர்க்கூச்சலுண்டாகப்பெற்று சீதாதேவிக்கு மனப்பூர்வமாக வணக்கம் செய்து சொல்லத் தொடங்கினன். அனுமான் அவர்களை நோக்கித் தான் அம்மகேந்திர மலையினின்றும் கிளம்பிச்சென்றதும் மைநாக மென்னும் பருவதத்தினால் தடைசெய்யப்பட்டதும் பிறகு அதற்கும் தனக்கும் நிகழ்ந்த சம்பாஷணைகளையும் பின்பு ஸர்ப்பங்களுக்கெல்லாம் தாயான ஸுரஸாதேவியை வென்ற விதத்தையும், பிறகு நிழலைப்பிடித்து விழுங்க வந்த ஸிம்ஹிகை யென்ற ராக்ஷசியைக் கொன்றதையும் விரிவாகக் கூறி, பிறகு தென்கரையையடைந்து அஸ்தமய சமயத்தில் லங்கையில் நுழையும்போது அவ்விலங்கைமாநகர் பெரிய ராக்ஷசி உருவத்துடன் தன்னைத்தடுக்க வந்ததையும் பிறகு தான் அவ்வரக்கியை முஷ்டியினால் குத்தி முடித்ததையும் உடனே லங்கையில் பிரவேசித்த விதத்தையும் ஒன்றும் விடாமல் விரிவாகக் கூறினன்.

பிறகு அனுமான் தான் லங்கை முழுவதும் சீதையைத் தேடும்போது கண்ட அதிசயங்களையும் லங்கையின் ஐசுவரியங்களையும்கூறி கடைசியில் அசோக வனத்திலுள்ள சிம்சுபா விருட்சத்தின்கீழ் சீதை புட்கார்ந்திருந்த விதத்தையும் தான் நேரில் கண்டபடி கூறினன். பின்பு ராவணன் வீட்டிற்

காலையில் ராக்ஷச ஸ்திரீகளால் சூழப்பெற்று சீதையை யணுகித் தகாத வார்த்தைகளைச் சொன்னதையும் அதற்குச் சீதை பதிலளித்ததையும் பிறகு ராவணன் திரும்பிச் சென்றதையும் ராக்ஷச ஸ்திரீகள் சீதையைச்சூழ்ந்து விரட்டியதையும் கூறினன்.

பிறகு சீதை அவ்வரக்கிகளின் உபத்திரவங்களைப் பொறுக்க முடியாமல் உச்சுருக்கிட்டு உயிர்விடத்துணிந்ததையும் தான் அதற்குள் அவளை யணுகி அவளுக்குத் தன்மேல் ராமதூதனென்கிற நம்பிக்கையுண்டாகும் வண்ணம் தான் சம்பாஷணை செய்ததையும், பிறகு அவளிடம் ராமனது கணையாழியைக்கொடுத்து அவளிடமிருந்து சூடாமணியை ராமனுக்கடையாளமாகப் பெற்றுக் கொண்டு வந்ததையும், பின்னுமவள் ராமனிடஞ் சொல்லும்படி கூறின வார்த்தைகளையும் விரிவாக அநுமான் வானரர்களுக்குக் கூறினன்.

அநுமான் பிறகு தான் அவ்விலங்கா நகரத்திற் கெல்லாம் அலங்காரமாயிருந்த சைத்திய பிராசாதமென்னும் தேவாலயத்தை யழித்து அதற்குக் காவலாகவிருந்த நூறு ராக்ஷசர்களைக் கொன்றதையும் ராவணனால் தன்னுடன் எதிர்க்கும்படி அனுப்பப்பட்ட கிங்கரர்கள், மந்திரி குமாரர்கள், சேனாதிபதிகள், அக்ஷகுமாரன் முதலியோரைத் தான் இரும்புலக்கையால் அனாயாஸமாக அடித்துக்கொன்றதையும வானரர்களுக்கு விவரமாகக்கூறினன்.

பிறகு அநுமான் தன்னை இந்திரஜித்து பிரமாஸ்திரத்தினால் கட்டி ராவணன் முன் இழுத்துச் சென்றதையும் அப்பொழுது தான் ராவணனுக்குச் செய்த இதோபதேசத்தையும், அதனால் அவன் கோபங்கொண்டு தன்னைக்கொல்ல ஆஞ்ஞாபித்ததையும், விபீஷணன் அவ்விதம் கூடாதென்று தடுத்ததையும், பிறகு தனது வாலில் துணியைச் சுற்றி எண்ணெயிட்டுக் கொளுத்தினபடியையும், அப்பொழுது

சீதையின் மகிமையினால் தனதுவாலை அக்கினிபகவான் தகியாமலிருந்த படியையும், பிறகு தான் இலங்கை முழு வதையும் கொளுத்திவிட்டு மீண்டும் சீதையைக் கண்டு வணங்கி அவளிடம் விடைபெற்றுக்கொண்டு வந்ததையும், ஒன்றும் விடாமல் விவரமாய் வானரர்களுக்குச் சொல்லினன். பின்னும் அநுமான் அவ்வானரர்களை நோக்கி "ஸ்ரீராம னுடைய பிரபாவத்தினாலும் உங்கள் அநுக்கிரக பலத்தினா லும் நான் சுக்கிரீவனுடைய கட்டளையையெல்லாம் செய்து முடித்தேன். இனி இதில் எது செய்யப்படாமல் குறைவா யிருக்கின்றதோ அதையெல்லாம் செய்யவேண்டுமென்று விரும்புகிறேன்." என்றனன்.

ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தோன்பதாவது ஸர்க்கம்.

### அநுமான் மீளவும் தான் சென்று வந்த வரலாற்றைச் சுருக்கமாகச் சொல்லித் தன் அபிப்பிராயத்தைக் கூறுதல்.

அநுமான் மீண்டும் அவ்வானரர்களை நோக்கி "சீதை மிகுந்த சீலமுடைய பதிவிரதாசிரோமணி யாகையால் ராமனது முயற்சியும், சுக்கிரீவனது உத்ஸாகமும் பயன்பெற் றவையேயாகும். என் மனமும் அவளிடத்தில் மிகுந்த பக்தியுடையதாய் இருக்கின்றது. ராவணன் தவமகிமையினால் ஸமஸ்தலோகங்களையும் கோபங்கொண்டு தகிக்கவும் வல்ல வன். அவன் சிறந்த பதிவிரதையான சீதையைத் தொடினும் மிகுந்த தவமுடையவனாகையால் அவன் தேகம் பாழடை யாமலிருக்கின்றது. சீதை தன் கணவனைக் கொண்டே ராவ ணனைக் கொல்விக்க வேண்டுமென்று திடமான உறுதியைக் கடைப்பிடித்து ராவணன்மேல் கோபஞ்செய்யாதிருப்பது பற்றியே, அந்த ராவணன் இதுவரையில் பிழைத்திருக்கின் றனன்.

ஓ வானர சிரேஷ்டர்களே! வேலைக்காரனுடைய வெற்றி எஜமானனுடையதே யாதலால் நீங்கள் சம்மதிப்பீர்களாயின் சீதா ராமர்களின் ஸ்ரீபாதங்களை தியானஞ்செய்து கொண்டு இப்பொழுதே மீண்டும் லங்கைக்குச்சென்று சீதாதேவியை எடுத்துக்கொண்டுவந்து அவளோடு கூடவே ராம லக்ஷ்மணர்களைப் பார்ப்பது யுக்தமென்று என்னபிப்பிராயம். நான் ஒருவனே அந்த இலங்கையிலுள்ள ராக்ஷசர்களெல்லோரையும் ராவணனையும் கணப்பொழுதில் கொல்ல வல்லவன். இனி பராக்கிரமத்தில் மிகுந்தவர்களும் பலிஷ்டர்களும் புத்திசாலிகளுமான உங்களுடன் கூடியிருக்கையில் நான் லங்கையிலுள்ள ராக்ஷசர்களையும் ராவணனையும் கொல்வேனென்பது சொல்லவேண்டுமோ? நீங்கள் சம்மதிப்பீர்களாயின் இப்பொழுதே மீண்டும் இலங்கைசென்று ராவணனைக் கொன்றுவிடுவேன். யுத்தத்தில் நான் இடைவிடின்றிப் பெய்கிற கல்மழை நிகரற்றதாகி அமிர்த பானஞ்செய்து சாவில்லாத தேவதைகளையும் கொன்றுவிடுமே; இனி அந்த ராக்ஷசர்களைக் கொல்லுவது சொல்லவேண்டுமோ? எப்படிப்பட்ட சைன்னியமாயினும் ஜாம்பவானை எள்ளளவும் அசைக்கமுடியாது. அரக்கர்களையெல்லாம் நொடிப்பொழுதில் நாசஞ்செய்ய அங்கதன் ஒருவனே போதுமானவன். பனஸநீலர்களின் துடைவேகத்தினால் மந்தரபர்வதமும் சிதறிப்போய்விடும்; இனியுத்தத்தில் இந்த ராக்ஷசர்கள் விரைந்து பறந்தோடுவார்களென்பது சொல்லவேண்டுமோ?

சிறந்த பராக்கிரமமுடைய இந்த மைந்தனையும் துவிதனையும் எதிர்க்க வல்லவர் தேவாசுரர்களிலும், யக்ஷர்களிலும், கந்தருவர்களிலும் எவர் இருக்கின்றனர்? அமிருதத்தைப் பருகின இவ்விருவர்க்கும் எவராலும் மரணம் உண்டாகாதிருக்குமாறு பிரமதேவன் நிகரில்லாத வரத்தைக் கொடுத்திருக்கின்றனன். இவ்விருவருமே லங்கையிலுள்ள

எல்லா சைன்னியங்களையும் நாசஞ் செய்யவல்லவர். நான் ஒருவனே லங்கையிலுள்ள அநேக ராக்ஷசர்களைக் கொன்று பட்டணத்தைக் கொளுத்தி நீறு செய்துவிட்டேன். லங்கை முழுவதும் என் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் நடுங்கும்படி செய்துவிட்டேன்.

ஐயோ! பாவம்! சுகமனுபவிப்பதற்கே தகுந்த சீதா தேவி அசோகவனத்தில் கொடிய ராக்ஷச ஸ்திரீகளால் விரட்டப்பட்டுத் துன்புறுவதைக் கண்டால் மிகுதியும் மன இரக்கம் உண்டாகின்றது. ராவணன் அவளை எவ்வளவு நிர்ப்பந்தஞ் செய்யினும், எவ்வளவு விரட்டினும் அவனிடம் சிறிதும் மனதைச் செலுத்தாமல் ராமனிடத்திலேயே மனப்பற்றுடையவளாய் இருக்கின்றனள். தலை மயிர்களெல்லாம் ஒரே சடையாகப் பின்னிக்கொள்ள சிறிதும் மனக்களிப்பற்று உடலிளைத்துக் கணவனையே எப்பொழுதும் விடாமல் சிந்திப்பவளாகித் தரையில் படுத்திருக்கின்றனள். ராவணன் அவளை ஸ்வாதீனப்படுத்தும்பொருட்டு எத்தனையோ ஆசை மூட்டும்படியான வார்த்தைகளைப் பேசினானேனும் அவையெல்லாம் அவளிடத்தில் சிறிதும் பயன்படவில்லை. சீதை அவனது உபத்திரவங்களைப் பொறுக்க முடியாமல் மரணம் அடையவேண்டுமென்று நிச்சயம் செய்துகொண்டிருக்கின்றனள். அப்படிப்பட்ட அவளையழைத்துக்கொண்டு போகாமல் வெறுமனே ராமனிடம் எப்படிச் செல்லலாகும்? சீதையினிடத்தில் சிறந்த ஒழுக்கங்கள் வரம்பழியாதிருக்கின்றன; கணவனிடத்திலுள்ள பக்தியும் மிக்க சிறப்புற்றது.

'இவ்வளவு மகிமையுடைய சீதை தானே ராவணனை ஏன் கொல்லலாகாது?' என்பீர்களாயின்;—ராவணனுக்குச் சாபத்தினால் துர்மரணம் சம்பவிக்காது; ஆகையால் அவனைக் கொல்லுவதற்கு ராமனே நிமித்த காரணமாய் இருக்கவேண்

டும்; பிரதான காரணமோ சீதையே. மேலும் அவள் தன் கணவனது சம்மதமின்றி எதுவும் செய்யவல்லவளல்லளாகை யால் ராவணனைச் சபிக்காதிருக்கின்றனள். இனி இப் பொழுது செய்யவேண்டியதெதுவோ அதை நன்கு ஆலோசித்துச் செய்வீர்களாக" என்றனன்.

ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபதாவது ஸர்க்கம்

## அங்கதன் சொல்லை ஜாம்பவான் மறுத்தல்.

இங்ஙனம் அனுமான் மொழிந்த வசனங்களைக் கேட்ட அங்கதன் "வானரர்களே! நாம் சீதாதேவியைக் கண்டும் அவளைக்கொண்டுபோகாமல் ராமனிடம்போவது யுக்தமன்று. தேவதைகளோடும் தைத்தியர்களோடும் கூடின ஸமஸ்த உலகங்களிலும் ஆகாயத்திற் கிளம்பிப் போவதிலும் பராக்கிரமத்திலும் நமக்கு நிகரானவர் எவருமில்லை. அப்படிப் பட்ட நம்முள் அனுமான் அந்த ராக்ஷசர்களில் வீரர்களாயிருப்பவர்களைக் கொன்ற பிறகு நமக்கு இனிச் செய்ய வேண்டியது என்ன விருக்கின்றது? சீதாதேவியை அழைத்துக்கொண்டு போவோம்" என்றனன்.

இதைக் கேட்ட ஜாம்பவான் "ராஜ குமாரா! நீ கூறின விஷயம் நமக்கு சாதிக்கத் தகுந்ததாயினும் நாம் ராமனது கட்டளையை யனுசரித்தல்லவோ முயற்சி செய்யவேண்டும். சீதையைத் தேடிவரும்படி நமக்குக் கட்டளையேயன்றி கொண்டுவரும்படியில்லையே; ஆதலால், சீதையைத் தேடிக் கண்டோமென்று சென்று நிற்பதே நமக்குற்றது" என்றனன்.

அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## அறுபத்தோராவது ஸர்க்கம்.

### வானரர்கள் புறப்பட்டுச் சென்று வழியில் மதுவனத்தை யழித்தலும் ததிமுகன் தடுத்தலும்.

பிறகு ஸமஸ்த வானரர்களும் ஜாம்பவானது அபிப்பிராயத்திற்கிணங்கி அம்மஹேந்திர பருவதத்தை விட்டு ஆகாயத்தில் கிளம்பிக் கிஷ்கிந்தையை நோக்கிப் பிரயாணமாயினர். அங்ஙனமவர்கள் ஆகாயமார்க்கமாகச் செல்லுகையில் வழியில் மனோகரமான சுக்கிரீவனது மதுவனத்தைக்கண்டனர். அது இந்திரனது நந்தவனத்தைப்போன்று தகுந்த பாதுகாப்பிலிருந்தது. சுக்கிரீவனது மாமனை ததிமுகனென்னும் வானரன் அதை எப்பொழுதும் பாதுகாத்துக்கொண்டிருப்பான். சுக்கிரீவனது மனத்திற்கு இனியவை யனைத்திலும் மிக மேலாயிருக்கின்ற அவ்வழகிய வனத்திலுள்ள மதுவை அவ்வானரர்கள் பானஞ்செய்ய விரும்பி இளவரசனான அங்கதனைப்பார்த்து "நாங்கள் மதுபானஞ் செய்ய விரும்புகிறோம்." என்றனர்.

உடனே அங்கதன் பெரியோரான ஜாம்பவான் முதலிய வானரர்களின் அனுமதியின் பேரில் அவ்வானரர்களுக்கு மதுபானஞ்செய்ய உத்தரவு கொடுத்தனன். அவ்வானர வீரர்கள் சந்தோஷத்தைத் தாங்க முடியாமல் நர்த்தனஞ் செய்தனர்; சிலர் கானஞ் செய்தனர்; சிலர் தலைகீழாக வீழ்ந்தனர்; சிலர் சிரித்தனர்; சிலர் கால்களை மேல் கிளப்பிக் கொண்டு பின்புறம் தரையில் படும்படி கீழ் விழுந்தனர்; சிலர் இங்கு மங்கும் உலாவினர்; சிலர் கிளம்பிக் குதித்தனர்; சிலர் பிதற்றினர்; சிலர் ஒருவரை யொருவர் கட்டிக்கொண்டு கோச கோசவென்று பேசிக்கொண்டனர். சிலர் மரத்திற்கு மரம் பாய்ந்து விளையாடினர். அவ்வானரர்களனைவரும் யதேஷ்டமாக மதுபானஞ்செய்து மதி மயக்கத்தினால் மனச்செயல் பலவாறாக மாறப்பெற்றுப் பல சேஷ்டைகளைச் செய்து கொண்டு

தாறு மாறுயிருந்தனர். அதில் ஒருவனாயினும் மதம் பிடிக்காதவனில்லை. ஒருவனாயினும் மனக்களிப்புறாதவன் இல்லை.

பிறகு அவ்வனத்தைப் பாதுகாக்கின்ற ததிமுகனென்னும் வானரன், அவ்வனத்திலுள்ள தேன் முதலியவற்றையெல்லாம் வானரர்கள் பருகிக்கொண்டிருத்தலால் அங்குள்ள மரங்களின் இலைகளும் புஷ்பங்களும் பாழடைவதுகண்டு மிகவும் கோபித்து அவ்வானரர்களைத் தடுத்தனன். அவன் தன்னை அவ்வானரர்கள் எள்ளளவும் பொருள் செய்யாமல் விரட்டுவது கண்டு சிலரைத் திட்டினன்; சிலரை உள்ளங்கையால் அறைந்தனன். சிலரை நல்வார்த்தை சொல்லி வேண்டிக்கொண்டனன். அவன் எவ்வளவு பிரயத்தனஞ் செய்த போதிலும் அவ்வானரர்கள் ஒன்றுகூடி அவனைச் சூழ்ந்து வார்த்தைகளால் அவமதித்ததுமன்றி அவனைப் பிடித்துத் துன்புறுத்தவும் தொடங்கினர். அவர்கள் மதத்தினால் கண்மண் தெரியாமல் அந்தத் ததிமுகனை நகங்களால் கீறிப் பற்களால் கடித்து, கைகால்களால் நன்கு அடித்து வீழ்த்திச் சிறிதும் பயமின்றி அவ்வழகிய வனத்திலுள்ள தேன், பழங்கள் முதலிய இனிய பதார்த்தங்களை யெல்லாம் தின்று அவ்வனத்தைப் பாழ்படுத்தினர்.

அறுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபத்திரண்டாவது ஸர்க்கம்.

## வானரர்களால் அடிக்கப்பட்ட ததிமுகன் சுக்கிரீவனிடம் சென்று முறையிடுதல்.

அப்பொழுது அனுமானும் அங்கதனும் வானரர்களை நோக்கி "நீங்கள் யதேஷ்டமாகத் தேன்களைப் பானஞ்செய்வீர்களாக. உங்களைப் பானஞ்செய்ய வொட்டாமல் தடுக்கும் விரோதிகளை நாங்கள் தகர்க்கிறோம்" என்றனர்.

உடனே அவ்வானர வீரர்கள் மிகுந்த உற்சாகங்கொண்டு அநுமான் சீதையைக் கண்டு வந்த சந்தோஷத்திற்குப் போக்கு வீடாக மதுவனத்திலுள்ள காவற்காரர்களை பலாத்காரமாகத் தடுத்து தேன்களைப்பருகி மிகுந்த ருசியுள்ள பழங்களையும் தின்றனர். அவ்வனத்துக்குக் காவலாக விருந்தவர்களை மேல்விழுந்து பலவாறு புடைத்தனர். அவர்களெல்லோரும் ஒன்றுகூடி குறுணித்தேன் நிறைந்த தேன் கூடுகளைக் கைகளில் எடுத்துப் பருகிக்கொண்டிருந்தனர். சிலர் பருகி மிகுந்த தேன் கூடுகளை உடைத்தனர்; சிலர் தேன்களைப் பருகிக் கூடுகளை வீசி யெறிந்தனர். சிலர் மதங்கொண்டு அத்தேன் கூடுகளை யெடுத்துக்கொண்டு ஒருவரையொருவர் அடித்துக்கொண்டனர். சிலர் மதுபான மயக்கத்தினால் இளைப்புற்று இலைகளைப் படுக்கையாகப் பரப்பிப் படுத்துக்கொண்டனர். அவர்கள் மதுபானத்தினால் மதம்பிடித்துப் பைத்தியம் பிடித்தவர்போன்று, சந்தோஷம் மேலெழப்பெற்று ஒருவரையொருவர் விழத்தள்ளினர். சிலர் ஒருவரையொருவர் காலால் தூண்டினர். சிலர் நடக்க முடியாமல் தடுமாறினர். சிலர் கர்வத்துடன் சிம்மநாதங்களைச் செய்தனர். சிலர் சந்தோஷத்தை யடக்க முடியாமல் பக்ஷிகளைப்போல் கூவினர். சிலர் தரையில் வீழ்ந்து தூங்கினர்.

அவ்வனத்தில் ததிமுகனுடைய கட்டளைப்படி நடக்கிற மதுரக்ஷகர் (தேன் கூடுகளைக் காப்பவர்) அனைவரும் அவ்வானரர்களால் நன்கு அடிக்கப்பட்டு அங்குமிங்கும் ஓடிப் போயினர். சில வானரர்கள் அக்காவற்காரர்களை முழந்தாள்களில் பிடித்திழுத்துப் பலவாறு அவமானம் செய்தனர். இப்படியாக அங்கு வானர வீரர்கள் செய்த சேஷ்டைகள் எல்லையற்றவை.

அப்போது ததிமுகன் ஆயிரக்கணக்கான வனபாலர்களையும் நல்வார்த்தைகளால் சமாதானப்படுத்தி மீண்டும் அவர்

களுக்கு தைரியத்தை மூட்டி மதுவனத்தை யழிக்கின்ற வானரர்களை எதிர்த்தனன். அவன் பெரிய மரத்தைப் பிடுங்கி ஆயுதமாகத்தரித்து அங்கதன் முதலானோர் இருந்த இடத்தை நோக்கி ஓடிவந்தனன். இதைக்கண்ட அங்கதன் மதுபான மயக்கத்தினால் கண்மண் தெரியாமல் அத்ததி முகனை இன்னானென்று கவனியாமல் வேகமாகத் தரையில் விழத்தள்ளி நன்றாகக் கசக்கிவிட்டனன். இதனால் அந்த ததிமுகன் கைகால்களும் தொடைகளும் முறியப்பெற்று வில விலத்து ரத்தப்பிரவாகத்தில் நனைந்து பிரக்ஞையற்று மூர்ச் சித்தனன்.

சிறிதுநேரம் கழித்து அத்ததிமுகன் மூர்ச்சை தெளிந் தெழுந்து சுக்கிரீவனிடம் முறையிடவேண்டித் தனது வேலைக்காரர்களையும் கூட்டிக்கொண்டு வேகமாக ஆகாயத்திற் கிளம்பி சுக்கிரீவனிருப்பிடம் சென்றனன்.

அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபத்து மூன்றவது ஸர்க்கம்.

## சுக்கிரீவன் மதுவன மழிந்த வரலாற்றைக் கேட்டு வானரர்களை உடனே வரச் சொல்லும்படி ததிமுகனைத் திருப்பி அனுப்புதல்.

ததிமுகன் சுக்கிரீவனையடைந்து அவனது பாதங்களில் தலை சாய்த்து வணங்கி "ராஜனே உன் தந்தை ருக்ஷராஜஸ் ஸாவது உனதண்ணன் வாலியாவது நீயாவது இதற்கு முன்பு என்றாயினும் மதுவனத்தை மனம்போனபடி அனுபவிக்கும் படி எவர்க்கும் காட்டிக்கொடுத்ததில்லை. அப்படிப்பட்ட வனத்தை இன்று வானரர்கள் வந்து தேன்களைப்பருகி பழங் களைத்தின்று நாசஞ்செய்கின்றனர். நானும் இந்த வன பாலர்களும் எவ்வளவு தடுத்தும் அவர்கள் எங்களைச்சிறிதும்

பொருள் செய்யாமல் அடித்தும் குத்தியும் விரட்டியும் துரத்தினர். இதென்ன அநியாயம்!" என்று முறையிட்டனன்.

ததிமுகன் இங்ஙனம் முறையிட்டுக் கொண்டிருக்கையில் லக்ஷ்மணன் சுக்கிரீவனை நோக்கி "வானரராஜனே! இவ்வானரன் எதைக்குறித்து இங்ஙனம் துக்கித்து உன்னிடம் முறையிடுகின்றனன்?" என்று வினவினன். இதைக்கேட்ட சுக்கிரீவன் லக்ஷ்மணனைப்பார்த்து "லக்ஷ்மணா! வீரனாகிய இந்தத் ததிமுகன் 'தென் திசையில் போய் தேடித்திரும்பி வந்த வீரர்களான அங்கதன் முதலிய வானர வீரர்கள் மது வனத்திலுள்ள தேன்களையெல்லாம் பருகிப் பாழாக்கினர் என்று முறையிடுகின்றனன். இதனால் அவர்கள் காரியத்தைச் சாதித்தே இருப்பார்களென்பது நிச்சயம். சீதா தேவியைப் பார்த்தேயிருப்பர்கள். இதில் சந்தேகமே இல்லை. அநுமானே சீதையைக்கண்டு வந்திருக்கவேண்டும். அவனைத் தவிர மற்று எவனும் இக்காரியத்தை சாதிக்க வல்லனல்லன். லக்ஷ்மணா! அவர்கள் வெகு சந்தோஷமான நிலைமையில் இருப்பார்கள். ஆனதுபற்றியே சிறிதும் பயமின்றி மதுவனத்தில் புகுந்து மனம் போனபடி யெல்லாம் கோலாஹலங்கள் செய்கின்றனர். அவர்கள் மூடரல்லர். அவர்கள் சீதையைக்காணுமலே வந்திருப்பார்களாயின் பிரமதேவனால் எனது தந்தைக்கு வரமாகக் கொடுக்கப்பட்டதும் அழகியதுமான மதுவனத்தில் எள்ளளவும் தைரியத்துடன் நுழையமாட்டார்கள்" என்று கூறினன்.

இதைக் கேட்ட லக்ஷ்மணனும் ராமனும் அளவற்ற மகிழ்ச்சியடைந்தனர். சுக்கிரீவன் ததிமுகனை நோக்கி "அந்த வானரர்கள் நான் சொன்ன காரியத்தை நிறைவேற்றி வந்தவராகையால் அவர்கள் மதுவனத்திலுள்ள தேன்களையெல்லாம் அநுபவித்ததற்கு நான் சந்தோஷித்தனன். அவர்கள் காரியத்தை நிறைவேற்றி வந்தனராகையால் நான் அவர்களைப்

பொறுக்கவேண்டியவனுய் இருக்கிறேன். நீ அனுமான் முதலிய அவ்வானரர்களைச் சீக்கிரம் இங்குவரச் சொல்லுவா யாக. அவர்கள் சீதையைப் பெறுதற்குச் செய்த பிரயத் தனங்களை விரைவில் கேட்க விரும்புகின்றேன்" என்றனன்.

அறுபத்து மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபத்து நான்காவது ஸர்க்கம்.

## ததிமுகன் சென்று அங்கதன் முதலியவர்களை சுக்கிரீவ னிடம் அனுப்புதலும், அனுமான் ராமனிடத்தில் 'கண்டேன் சீதையை' என்றுரைத்தலும், ராமன் அனுமானைக் கௌரவித்தலும்.

உடனே ததிமுகன் சுக்கிரீவனுக்கும் ராம லக்ஷ்மணர் களுக்கும் வணக்கம் செய்து விடை பெற்றுக்கொண்டு, தன்னுடன் வந்த வனபாலர்களுடன் ஆகாயத்திற் கிளம்பி வந்தாற்போலவே சீக்கிரமாகவே மீண்டு மதுவனத்தை யடைந்து அங்கதன் முதலிய வானர வீரர்களைக்கண்டு, இருகைகளையும் குவித்து அஞ்சலிசெய்து அங்கதனை நோக்கி "நல்லியற்கையுடையவனே! நாங்கள் உங்களைத் தடுத்தோ மென்று கோபங்கொள்ளவேண்டாம். நான் சுக்கிரீவனிடம் சென்று இது விஷயத்தைத் தெரிவித்தனன். அவன் நீங்கள் வந்திருக்கும் சமாசாரத்தைக் கேட்டவுடனே மிகுதியும் சந்தோஷமுற்று உங்களனைவரையும் சீக்கிரம் வரும்படி என்னிடம் சொல்லியனுப்பினன்" என்றனன்.

உடனே அவ்வங்கதன் முதலிய வானர வீரர்கள் கனவேகமாக ஆகாயத்தில் கிளம்பி வாயுவால் தூண்டப்பட்ட மேகங்கள் போல் பேரிரைச்சலிட்டுக்கொண்டு போயினர். அங்கதன் வருவதற்குச் சிறிது தாமதமாகையில் ராமன் அதுகண்டு 'இன்னும் அங்கதன் வரவில்லையே! காரியம் ஆயிற்ரோ இல்லையோ தெரியவில்லையே' என்று வருத்த

முற்றனன். அப்பொழுது சுக்கிரீவன் ராமனைப் பார்த்து "நீ இனி சமாதான முறுவாயாக. உனக்கு மங்களம் உண்டாகுக. அவர்கள் சீதையைக்கண்டு வந்திருக்கிறார்கள். இதில் சிறிதும் சந்தேகமில்லை. அப்படி யில்லையாயின் இவர்கள் நான் வைத்த கெடு கடந்த பின்பு இங்கு வரவே மாட்டார்கள். காரியம் கைகூடாதிருக்கு மாயின் அங்கதன் என்னிடம் திரும்பி வரமாட்டான். மேலும் காரியம் கைகூடாதிருப்பின் இவர்களது முகங்கள் மிகவும் வாட்டமுற்றிருக்கும்; இங்ஙனம் மிகுந்த உத்சாகத்துடன் சிறிதும் பயமின்றி மதுவனத்தை யழித்திருக்கமாட்டார்கள். நிச்சயமாக அனுமான் சீதையைக் கண்டுபிடித்திருப்பான். சூரியனிடத்தில் ஒளி வீசுவதுபோல் அனுமானிடத்தில் காரிய சித்தியும், புத்தியும், உத்சாகமும், பராக்கிரமமும் நிலை கொண்டிருக்கின்றன. அனுமான் முயற்சி செய்யும் காரியம் எப்படிப்பட்டதெனினும் ஒருபோதும் நிறைவேறாமல் போகாது." என்றனன்.

பிறகு அவ்வானரர்கள் சீதையைக் கண்டுவந்த சந்தோஷத்தின் மிகுதியால் கிலகிலவென்று சப்தம் செய்து கொண்டும் சிம்மநாதஞ் செய்து கொண்டும் கிஷ்கிந்தையை யடைந்து அனுமானையும் அங்கதனையும் முன்னிட்டுக்கொண்டு வந்தனர். அவர்கள் உடம்பெல்லாம் மயிர்க்கூச்சலடைய சந்தோஷ வெள்ளம் பொங்கி சுக்கிரீவனும் ராமனும் இருந்த இடத்தில் வந்திறங்கினர். உடனே அனுமான் ராமனை வணங்கி "சீதாதேவி பதிவிரதைகளுக்குள்ள ஒழுக்கங்களுடன் யாதொரு கெடுதியுமின்றி க்ஷேமமாய் இருக்கின்றனள்" என்று சொல்லினன். அதனால் மிகுந்த சந்தோஷமடைந்த ராமன் அளவுகடந்த கௌரவம் காட்டி அந்த அனுமானை விசாரித்தனன்.

அறுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## அறுபத்தைந்தாவது ஸர்க்கம்.

## அனுமான் ராமனுக்கு சீதையின் வரலாறுகளை யெல்லாம் கூறி சூடாமணியைக் கொடுத்தல்.

ராமன் சீதை எவ்விதமான கெடுதியுமின்றி க்ஷேமமாய் இருக்கிறளென்பதைக் கேட்டு வானரர்களை நோக்கி "வானரர்களே! சீதை எங்கே இருக்கின்றனள்? என் மீது அவளது மனம் எங்ஙனமிருக்கின்றது?" என்று ஆர்வத்துடன் வினவினன். அனுமான் உடனே எழுந்து சீதையிருக்கும் திசையை நோக்கி அவளுக்குத் தலைவணங்கி நமஸ்காரஞ் செய்து பேசத்தொடங்கி சீதையைக்கண்ட வரலாற்றை யெல்லாம் முறையே சொல்லி வந்தனன். "ராமா! நான் நூறுயோசனை விஸ்தாரமுள்ள சமுத்திரத்தைத் தாண்டி சீதையைத் தேடிச் சென்றனன். சமுத்திரத்தின் தென்கரையில் துர்ப்புத்தியான ராவணனது லங்கா பட்டணம் இருக்கின்றது. அங்கு ராவணனது அந்தப்புரத்தின் உத்தியான வனமான அசோக வனத்தில் பதிவிரதையும் சுந்தரியுமான சீதையைக் கண்டனன். அவள் தன் கருத்தையெல்லாம் உன்னிடத்திலேயே வைத்து உன்னிடத்திலுள்ள ஆசையைப் பற்றியே உயிரை வைத்துக்கொண்டிருக்கின்றனள்.

ராமா! சீதை அவ்வசோக வனத்தில் ராக்ஷசிகளால் சூழப்பெற்று அடிக்கடி விரட்டப்பட்டதை நான் கண்டேன். ராவணன் எவ்வளவோ வருந்தி அவளைத் தன் கருத்திற் கிசையும்படி சொல்லினும் அவள் அவனைச் சிறிதும் பொருள் செய்யாமல் உன்னையே நினைத்துக்கொண்டு பிராணனை விட்டுவிட வேண்டுமென்று கூட நிச்சயித்திருந்தனள். நான் அப்பொழுது மெதுவாக உனது வரலாற்றை இனிமையாகக் கீர்த்தனஞ்செய்துகொண்டு அவளுக்கு என்னிடத்தில் நம்பிக்கையை விளைவித்தேன். பிறகு நான் சீதைக்கு இங்கு நடந்த விசேஷங்களையெல்லாம் அடைவே தெரிவித்தேன்.

அவள் உனக்கும் சுக்கிரீவனுக்கும் விளைந்த சிநேகத்தைக் கேட்டு சந்தோஷமுற்றனள். அவள் சிறந்த ஒழுக்கமுடைய கற்பலங்காரியாக விளங்குகின்றனள். உன்னிடத்திலுள்ள பக்தி எள்ளளவும் மாறாமல் மேன்மேலும் வளரப்பெற்றிருக்கின்றாள்.

ராமா! சீதை முன்பு சித்திரகூடத்தில் உன்னருகில் காகத்தைப்பற்றி நடந்த ஒருவரலாற்றை நடந்தபடியே எனக்கு அடையாளமாகச் சொல்லினள். பின்னுமவள் ஒரு நாள் நெற்றியில் திலகம் கலையப்பெற்றபோது நீ மனச்சிலையை எடுத்துக் குழைத்து விளையாட்டாக அவளது நெற்றியில் இட்டதை உனக்கு ஞாபகமூட்டச் சொல்லினள். அன்றியும் அவள் தனது சூடாமணியைச் சிறந்த அடையாளமாக இதோ கொடுத்திருக்கின்றாள். அவள் இன்னும் ஒரு மாதம்வரைதான் பிராணனை வைத்துக்கொண்டிருக்க முடியுமென்றும், அதற்குமேல் ராவணனால் அவளுக்குக் கொடுக்கப்பட்ட கெடு கடந்துவிடுகிறபடியால் நிச்சயமாகப் பிராணனை விட்டுவிட நேருமென்றும் சொல்லினள். ராமா! அங்கங்கெல்லாம் இளைத்துப் பதிவிரதா தருமத்தைச் சிறிதும் தவறாமல் அனுஷ்டித்துக்கொண்டு ராவணனது அந்தப்புரத்தில் சிறைப்பட்டிருக்கின்ற சீதை மான் பேடுபோல் பயந்து மலர்ந்த கண்களுடன் என்னைப் பார்த்து மொழிந்த விஷயங்களைச் சொன்னேன். இனி சீக்கிரம் சமுத்திரத்தைத் தாண்டி இலங்கை செல்ல வழிதேட வேண்டும். அக்காரியத்தை விரைவில் நிறைவேற்றுவாயாக" என்று விண்ணப்பஞ்செய்து சீதை கொடுத்தனுப்பின சூடாமணியை அவனிடம் கொடுத்து வணங்கி நின்றனன்.

அறுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## அறுபத்தாறவது ஸர்க்கம்.

## ராமன் சூடாமணியைப் பார்த்து வருத்தமுறுதலும் சீதையின் வரலாற்றை விரிவாகச் சொல்லும்படி அனுமானை வேண்டுதலும்.

இங்ஙனம் அனுமான் மொழிந்தவுடன் ராமன் அச்சூடாமணியை மார்பின்மேல் வைத்துக்கொண்டு கண்களில் நீர் ததும்பப்பெற்று சுக்கிரீவனைப் பார்த்து "கன்றிடத்தில் பிரீதியுடைய பசு அக்கன்றிடத்தில் அன்பினால் எப்படி உருகுமோ அப்படியே இச்சூடாமணியைக் கண்டவுடன் என் மனம் உருகுகின்றது. இச்சிறந்த மணியை என் மாமனரான ஜனகர் சீதைக்குக் கொடுத்தனர். விவாஹகாலத்தில் சீதையின் தலையில் கட்டப்பட்டு மிகுந்த ஒளியுடன் பிரகாசித்துக்கொண்டிருந்தது. அதை நினைத்துக்கொள்ளின் அச்சமயம் இப்பொழுதுதான் போலிருக்கின்றது. இச்சிறந்த ரத்தின மணியை முன்பு ஜனகர் யாகஞ்செய்கையில் இந்திரன் மனமகிழ்ந்து அவருக்குக் கொடுத்தனன். இது என் பிராண நாயகியின் தலையில் அழகுற்றிருக்குமாகையால் இப்பொழுது இதைப் பார்த்தவுடன் சீதையே வந்துவிட்டாற்போல் நினைக்கின்றனன்" என்றுரைத்து, பின்னையும்,

"வானர திலகனே! சீதை இன்னும் என்னைப்பற்றி என்னென்ன மொழிந்தனள்? விரிவாகக் கூறுவாயாக" என்றனன். பிறகு லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! ஜலத்தில் தோன்றின இம்மணி சீதையைவிட்டுத் தனியே வந்திருக்கக் காண்கின்றேனே! இதைக் காட்டிலும் அதிகமான துக்கம் என்னவிருக்கின்றது? சீதை இன்னும் ஒருமாதம் வரைக்கும் எப்படியாவது பிழைத்திருப்பாளாயின் அதற்குள் நாம் சென்று அவளைப் பெறலாம். லக்ஷ்மணா! இனி அரைக்கணமும் நான் அம்மாதர்மணியை விட்டுப் பிரிந்திருக்கப் பொறேன்" என்றனன்.

பிறகு மீண்டும் அனுமானை நோக்கி ராமன் "அனுமானே! சீதை யாது மொழிந்தனள்? ஒன்றையும் மறைக்காமல் உள்ளதை உள்ளபடியே எனக்கு இப்பொழுது மொழிவாயாக. நோய்வாய்ப்பட்டவன் ஔஷதத்தினால் ஜீவித்திருப்பது போல் நான் சீதை சொல்லியனுப்பின வார்த்தைகளைக் கேட்டுத் தான் ஜீவிப்பேன்" என்றனன்.

அறுபத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபத்தேழாவது ஸர்க்கம்

## அசோகவனத்தில் பிராட்டி சொன்ன வார்த்தைகளை அனுமான் இராமபிரானிடம் பன்னியுரைத்தல்.

இங்ஙனம் ராமன் அனுமானை வினவினவுடனே அனுமான் ராமனுக்கு விண்ணப்பஞ் செய்தனன். "ராமா! சீதை முன்பு சித்திரகூட பர்வதத்தில் நடந்த வரலாற்றை நடந்தபடியே எனக்கு அடையாளமாகச் சொல்லியனுப்பினள். ஒருநாள் சீதை உனது மடியில் படுத்துறங்கித் தூக்கம் தெளிந்தெழுந்தபோது காக்கையொன்று திடீரென்று வந்து அப்பெண்மணியின் ஸ்தனங்களிடையில் குத்தியதாம். அப்பொழுது முறைப்படி நீயும் அப்பெண்மணியின் மடியில் படுத்துத் தூங்கினையாம். மீளவும் அக்காகம் தேவிக்குத் தீங்கு செய்ததாம். அது அடிக்கடி அவளது கொங்கையில் ஆழ்ந்திருக்குமாறு குத்திக்கொண்டிருந்ததாம். பிறகு அக்கொங்கையினின்றும் பெருகி வருகின்ற ரத்த வெள்ளத்தினால் நனைந்த நீ அவளால் எழுப்பப்பட்டு எழுந்திருந்தனையாம்.

நீண்ட கைகளையுடையவனே! நீ அங்ஙனம் அக்காகத்தின் செயலைக் கண்டு மிகுந்த கோபத்துடன் அதைத் தண்டிக்கக்கருதி, தர்ப்பாசனத்தினின்று ஒரு தர்ப்பையை

எடுத்து அதைப் பிரமாஸ்திர மந்திரத்தினால் அபிமந்திரித்தனையாம். உடனே அத்தர்ப்பத்தை நீ அக்காகத்தின் மேல் பிரயோகிக்க, அது ஜுவலித்துக்கொண்டு வருகிற அப்பிரமாஸ்திரத்தினால் வேகமாகத் துரத்தப்பட்டுத் தனது தந்தையான இந்திரனும் தேவதைகளும் மகரிஷிகளும் தன்னைக் காக்கமுடியாமல் கைவிடப்பெற்று மூன்று உலகங்களிலும் அலைந்தோடி எவரும் காப்பவரில்லாமையால் மீண்டும் உன்னையே சரணமடைந்ததாம். நீ சரணமடைந்தவரை ரக்ஷிக்கும் குணமுடையவனாகையால் அக்காகாசுரன் கொல்லத் தகுந்தவனாயினும் நீ அவன் பிழையைப் பொறுத்து, பிரமாஸ்திரத்தை வீண்செய்ய முடியாமைபற்றி அவன் வலக்கண்ணைக் குருடாக்கினையாம். இந்திரன் மகனான அக்காகம் உனக்கும் உன் தந்தையான தசரத மகாராஜனுக்கும் வணக்கம் செய்து தன்னிருப்பிடம் சென்றதாம். இவ்விருத்தாந்தத்தை மேலான அடையாளமாகக் கூறச்சொல்லினள்.

ராமா! மீளவும் சீதை உன்னிடம் இங்ஙனம் சொல்லும்படி கூறினள்;—"ராமா! நீ வீரர்களிற் சிறந்தவன்; பராக்கிரமத்தில் ஒப்புயர்வற்றவன்; தேவாசுரர்களாவது, கந்தருவராவது, யக்ஷர்களாவது, கின்னரர்களாவது மற்றும் எவராவது உன்னை எதிர்த்து நிற்கவல்லரல்லர். அப்படிப்பட்ட நீ ஏன் என்னை அபகரித்துக்கொண்டு வந்த ராவணனைக் கொல்லாதிருக்கின்றனை? சிறந்த பலமும் பராக்கிரமமுமுடைய லக்ஷ்மணனுவது உன்னிடம் அனுமதி பெற்றுவந்து என்னை ஏன் காப்பாற்றுமலிருக்கின்றனன். அண்ணன் தம்பிகளாகிற உங்களை இம்மூவுலகங்களும் ஒன்று சேர்ந்துவரினும் எதிர்க்க முடியாதன்றோ? அப்படிப்பட்ட சிறந்த பராக்கிரமமுடைய நீங்கள் என்னை இதுவரை கவனியாதிருப்பது எனது பாடவிசேஷமேயன்றி வேறில்லை." என்று சொல்லச்சொல்லினள்

ராமா! இங்ஙனம் கண்ணீர் பெருகப்பெற்று மனஇரக்கமுண்டாகும்படி சீதை மொழிந்த வார்த்தைகளைக் கேட்ட நான் அவளைப் பார்த்து "தேவீ! உன்னைப்பிரிந்த வருத்தத்தினால் ராமன் எந்தக் காரியங்களிலும் மனப்பற்றில்லாதிருக்கின்றனன். ராமன் துக்கத்தினால் வருத்தமுறும்போது லக்ஷ்மணனும் கூட பரிதபிக்கின்றனன். அம்மே! நான் இப்பொழுது மிகுந்த பிரயாசத்தினால் உன்னைக்காணப் பெற்றேன். இது சந்தோஷப்படவேண்டிய சமயமேயன்றி துக்கிக்க வேண்டிய சமயமன்று. நீ வெகு சீக்கிரத்தில் துக்கங்களெல்லாம் தொலையப்பெற்று ராமனை யடைவாய். அந்த ராம லக்ஷ்மணர்களிருவரும் உன்னைக்காண உத்சாகங்கொண்டு பிரயாசப்பட்டுக்கொண்டே யிருக்கிறபடியால் இனிச் சீக்கிரத்திலேயே இவ்விடம் வந்து பாவியான ராவணனையும் அவனது உறவினர்களையும் யுத்தத்தில் கொன்று உன்னைத் தன் பட்டணத்திற்கு அழைத்துக்கொண்டு போகப் போகின்றனர். இதில் சிறிதும் சந்தேகமில்லை. இப்பொழுது ராமனுக்கு நான் உன்னைக் கண்டதற்குச் சிறந்த அடையாளமாக ஏதாவதொன்றைக் கொடுப்பாயாக" என்றேன்;

பிறகு சீதை இச்சிறந்த சூடாமணியை வஸ்திரத்தின் தலைப்பினின்று அவிழ்த்து என்கையில் கொடுத்தனள். நான் அத்திவ்விய ரத்தினத்தை வாங்கிக்கொண்டு அவளுக்கு வணக்கஞ்செய்து விரைவுடன் இவ்விடம் திரும்பத்தொடங்கினேன். அப்பொழுது சீதை, பிரயாணத்திற்காக முயன்று சரீரத்தைப் பெருக்குகின்ற என்னைப்பார்த்து முகம் முழுதும் கண்ணீர் பெருகப்பெற்று தடுமாற்றத்துடன் என்னை நோக்கி "அனுமானே! ராமலக்ஷ்மணர்களுக்கும் சுக்கிரீவனுக்கும் மற்றுமுள்ள அனைவர்க்கும் ஆரோக்கியம் சொல்லுவாயாக, ராமன் என்னை இந்த துக்கசாகரத்தினின்று கடைத்தேற்றும்படி நீதான் ஏற்பாடு செய்யவேண்டும். அனுமானே!

நீ ராமனிடம் சென்றவுடன் நான் படுகிற இந்தக் கொடுந் துக்கப் பெருக்கையும் இந்த ராக்ஷசர்கள் என்னை விரட்டு வதையும் நீ ராமனுக்குச் சொல்லவேண்டும். உனக்கு வழி மங்களகரமாய் இருக்குமாக" என்றனள். ஆகையால் "ராமா! நீ சீதை க்ஷேமமாய் இருக்கிறாளென்பதை நம்பி இனிச் செய்யவேண்டிய காரியங்களைக் கவனிப்பாயாக" என்றனன்.

அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று

---

அறுபத்தெட்டாவது ஸர்க்கம்.

## அனுமான் சீதைக்குத் தான் மொழிந்த இன்னுஞ் சில சமாதானங்களையும் ராமனுக்குத் தெரிவித்து சீதையின் க்ஷேமத்தைக் கூறுதல்.

அநுமான் மீண்டும் ராமனை நோக்கி "ராமா! இங்ஙனம் நான் பிரயாணமாகப் புறப்படுகையில் சீதை மறுபடியும் என்னை விளித்து 'அநுமானே! நீ ராமனுக்கு, யுத்தத்தில் ராவணனைக் கொன்று என்னைச் சீக்கிரத்தில் பெறும்படி பற் பலவாறு மொழியவேண்டும். வீரனே! உனக்கு விருப்ப முளதாயின் இங்கு ஒரு நாள் இருந்து பிறகு செல்வாயாக. எங்காயினும் ஓர் இரகசியமானவிடத்தில் இளைப்பாறியிருந்து நாளைய தினம் போகலாம். வீரியமுடையவனே! அங்ஙனம் நீ ஒரு நாள் இங்கு இருப்பாயாயின், அதனால் எனது பெருத்த துக்கத்திற்கு ஒரு முகூர்த்தகாலமாயினும் விடு முறை நேரும். முதலே ராமனைப்பிரிந்த பெரிய துக்கத்தில் மூழ்கி வருந்தி இங்ஙனம் துர்த்தசையடைந்திருக்கிற என்னை நீ புறப்பட்டுப் போனவுடனே, உன்னைக் காணாமையாலுண் டான துக்கம் அதற்குமேல் பரிதபிக்கச் செய்யும். வீரனே! ராம லக்ஷ்மணர்களும் வானர வீரர்களும், தாண்டமுடியாத விசாலமான சமுத்திரத்தை எங்ஙனம் தாண்டுவர்? கருட னுக்கும் வாயுதேவனுக்கும் உனக்கும் தவிர மற்று எவர்க்

கும் இந்த சமுத்திரம் தாண்டமுடியாதல்லவா? ஆகையால் இதைப்பற்றி நீ என்ன உபாயம் ஆலோசித்திருக்கின்றனை? வானர வீரனே! ராவணனையும் ராக்ஷசர்களையும் கொன்று என்னை ராமனிடம் கொண்டு சேர்ப்பிக்கவல்ல திறமை உன்னிடத்திலுண்டென்பதை நான் நன்கறிவேன். ஆயினும் நீ அங்ஙனம் செய்யில் உனக்குமாத்திரம் கீர்த்தி விளையுமேயன்றி ராமனுக்குப் பெரிய குறையாகும். ஆகையால் ராமன் சைன்னியங்களோடு இங்கு வந்து யுத்தத்தில் ராவணனைக் கொன்று வெற்றிபெற்று என்னை அயோத்திக்கு அழைத்துக் கொண்டு போவானாயின், அது எனக்கும் அவனுக்கும் புகழை விளைவிப்பதாய் இருக்கும். ராவணன் ராமனுக்கு பயந்து கபடமாக என்னை வனத்தினின்று அபகரித்து வந்தாற்போல் ராமனும் என்னை ரகசியமாகக் கொண்டுபோவது எள்ளளவும் யுக்தமன்று. ஆகையால் அவன் நேரில் இங்கு வந்து தனது பராக்கிரமத்தைக் காட்டி என்னை அழைத்துக்கொண்டு போகும்படியான காரியத்தை நீ நிறைவேற்றவேண்டும்' என்றனள். ராமா! பிறகு நான் வைதேகியை நோக்கி,

'தேவீ! குரக்கரசனான சுக்கிரீவன் உன் காரியத்தை நிறைவேற்றுவதாக நிச்சயித்திருக்கின்றனன் பராக்கிரமமும் சக்தியும் அமைந்தவர்களும் மிகுந்த வேகமுடையவர்களுமான கோடிக்கணக்கான வானர வீரர்கள் அவன் கட்டளைப் படி நடக்கச் சித்தமாய் இருக்கின்றனர். அவ்வானரர்கள் மேல் ஆகாயத்திலாவது கீழ்ப் பாதாளத்திலாவது இவ்விரண்டிற்குமிடையில் குறுக்கிலாவது யாதொரு தடையுமின்றித் திரியவல்லவர். எடுத்த காரியத்தை முயற்சியுடன் செய்து முடிக்கவல்ல சூரர்கள். அவர்களனைவரும் ஆகாச மார்க்கத்தில் சஞ்சரித்து இப்பூமண்டலம் முழுவதையும் பல தடவை வலஞ்செய்திருக்கின்றனர். சுக்கிரீவனிடத்திலுள்ள வானரர்களில் என்னைக் காட்டிலும் மேலானவர்களும்

சிலர் என்னோடொத்தவர்களுமாய் இருக்கின்றனர். அவர்களில் ஒருவனுயினும் எனக்குக் குறைந்தவன் இருக்கவே மாட்டான். நானே இவ்விடத்திற்கு வந்தேனே! இனிச் சிறந்த பலமுடைய அவ்வானரர்கள் வருவார்களென்பதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? தேவி! ஆகையால் இதைப் பற்றி நீ இனி வருத்தமுறவேண்டாம். வானர வீரர்கள் ஒரே தாண்டில் இவ்விலங்கைக்கு வந்து சேருவார்கள். ராமலக்ஷ்மணர்கள் எனது முதுகின் மேலேறிக்கொண்டு உதயமான சூரிய சந்திரர்கள்போல் உன்னிடம் வந்து சேருவார்கள். சீக்கிரத்தில் கோடிக்கணக்கான வானரர்கள் லங்கையில் வந்து சேர்ந்திருக்கக் காண்பாய். லங்கையைச் சேர்ந்த மலய பர்வதத்தின் தாழ்வரைகளில் மேகம்போன்ற உருவமுடையவர்களும் மலைகளை நிகர்த்தவர்களுமான வானர வீரர்கள் சிம்மநாதம் செய்யும் சப்தங்களை நீ விரைவில் கேட்கப் போகிறுய். வெகு சீக்கிரத்தில் ராமன் வனவாச விரதத்தை நிறைவேற்றி பகைவர்களைக் கொன்று உன்னுடன் கூடி அயோத்தியில் பட்டாபிஷேகம் பெற்றிருக்கக் காண்பாய்' என்று மொழிந்தேன். இங்ஙனம் அவளுக்குத் தேறுதல் மொழிகளைக்கூறி நான் புறப்பட்டு உன்னுடைய பாதாரவிந்தம் வந்து சேர்ந்தேன்" என்று விண்ணப்பஞ் செய்து முடித்தனன் அனுமான்.

அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பில்

**சுந்தர காண்டம்**

முற்றுப்பெற்றது.

ஸ்ரீராமபிரான் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பில்

# யுத்த காண்டம்.

---

## முதல் ஸர்க்கம்

### இராமபிரான் அனுமானைப் புகழ்ந்துகூறி ஆரத்தழுவுதலும், தான் கடல்கடந்து செல்வது எங்ஙனேயென்று சிந்தை யுறுதலும்.

ராமன் அனுமான் மொழிந்த உண்மையான விருத்தாந்தங்களை யெல்லாம் கேட்டு மிகுந்த சந்தோஷமடைந்து சுக்ரீவன் முதலானோரை நோக்கி "அனுமான் செய்த காரியம் இப்பூமியில் எவர்க்கும் செய்யமுடியாதது. அதுவன்றி நினைப்பதற்குங்கூட இவ்வுலகில் மற்ற எவர்க்கும் முடியாதது. கருடன் வாயுதேவன் ஆகிய இருவருமே சமுத்திரத்தைத் தாண்ட வல்லவர்கள். என்னே! அனுமான் செயல்!

லங்கையோ தேவதைகளுக்கும் தானவர்களுக்கும், யக்ஷர்களுக்கும், நாகர்களுக்கும், ராக்ஷசர்களுக்கும் எதிரிட முடியாதபடி ராவணனால் பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டிருக்கிறது. எப்படிப்பட்ட பலவானாயினும் தன் முயற்சியினால் ஒருக்கால் அதில் புகுவானாயினும் மறுபடி உயிரோடு திரும்பி வரமுடியாது. அப்படிப்பட்ட அளவில்லாத ராக்ஷசர்களால் பத்திரமாகக்காக்கப்பட்ட லங்கைக்குள் அனுமான் நுழைந்து, சீதையைக் கண்டுவந்ததல்லாமல், அசோக வனத்தை யழித்தல் முதலிய தீரமான செயல்களைத் தன் அரசனான சுக்கிரீவனது கட்டளையில்லாமலே செய்து சுகமாகத் திரும்பி வந்தவிது மிகவும் மெச்சத்தக்கதன்றோ.

உலகில் வேலைக்காரர்கள் மூன்று வகைப்பட்டிருப்பார்கள். எவன் தன் எஜமானன் சொன்ன காரியத்தை மாத்திரம் செய்வதன்றி, அவனிடத்திலுள்ள பக்தி மிகுதியால், அவன் கட்டளையிடா திருப்பினும், அக்காரியத்திற்கு அனுகூலமான இதர காரியங்களையும் செய்கிறானோ, அவனைச் சிறந்த ஊழியக்காரன் என்பார்கள். எவன் எஜமானன் சொன்ன காரியத்தைமாத்திரம் செய்து முடித்து வருகிறானோ, அவனை மத்திம (நடுத்தரமான) வேலைக்காரன் என்பார்கள். எவன் தன் பிரபுவின் காரியத்தையுங்கூட நன்கு நிறைவேற்ற மாட்டானோ அவனை அதம வேலைக்காரன் என்று சொல்லுவார்கள். இப்பொழுது அனுமான் உத்தம வேலைக்காரனாய் விளங்கி சுக்கிரீவனுக்கும், எனக்கும் மிகுந்த சந்தோஷத்தை விளைவித்தான். தவிர, சீதையின் பிரிவாற்றாமையால் பிராணனை விட விருந்த எனக்கு அவளுடைய இருப்பிடத்தையும் விருத்தாந்தங்களையும் அறிந்து வந்து கூறினமையால், உயிர்ப்பிச்சையளித்தனன். ஆ! ஆ!! இவ்வனுமானுக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்! எனக்குள்ள சகல சொத்துக்களையும் (ஐசுவரியங்களையும்) கொடுத்தால் தான் என்மனம் நிம்மதியடையும். இதோ நான் கொடுக்கிற ஆலிங்கனமே அவற்றிற்குச்சமமாகையால் இதையே கொடுத்தேன்" என்று கூறி பிரீதியால் அவயவங்களெல்லாம் மயிர்க்கூச்சலுண்டாகப்பெற்று அனுமானை மிக்க ஆர்வத்தோடு ஆலிங்கனம் செய்தனன்.

மீண்டும் ராமன் சுக்கிரீவன் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே "ஐயோ! இப்பொழுது சீதையின் சமாசாரத்தைக் கேட்கப் பெற்று சந்தோஷமடைந்திருப்பினும், அக்கரை காணமுடியாததும் ஆழமுள்ளதுமான மகா சமுத்திரத்தை எப்படி தாண்டுவது? என்பதை நினைத்துக்கொண்டால் மீண்டும் எனக்கு துக்கமே உண்டாகிறது. வானரர்கள் சமுத்

திரத்தை எங்ஙனம் தாண்டப்போகிறார்கள்?" என்று கூறி சோகத்தினால் தடுமாற்ற முற்றுச் சிந்திக்கத்தொடங்கினன்.

முதலாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இரண்டாவது ஸர்க்கம்.

## சுக்கிரீவன் ராமனுடைய துக்கத்தைப் போக்கும் வசனங்களைக் கூறுதல்.

பிறகு சுக்கிரீவன் ராமனது கவலையைப் போக்க விரும்பி அவனை நோக்கி "வீரர்களின் தலைவனே! அற்பனைப் போல் நீ இங்ஙனம் விசாரப்படலாகாது. சீதையின் விருத்தாந்தமும் ராவணன் இருக்குமிடமும் தெரிந்த பின்பும் உனக்கு வருத்தம் உண்டாவதற்குத் தகுதியில்லையே? நீ சாஸ்திரங்களின் கரையைக் கண்டவனாகையால் இனிமேல் நடக்கப்போகும் விருத்தாந்தங்களையும் கண்டறியும்படியான சூக்ஷ்ம புத்தியுடையவன். மிகுந்த தேஜஸ்ஸும், பலமும், ஆண்மையும், பராக்கிரமமுமுடைய உனக்குச் சோகம் உண்டாக வழியில்லையே.

'சமுத்திரத்தை எப்படி தாண்டுவது?' என்பதைப்பற்றி நீ சிறிதும் வருந்தவேண்டியதில்லை. நாங்கள் சமுத்திரத்தைத் தாண்டி லங்கையுள் புகுந்து ராவணனை நிச்சயமாகக் கொன்று விடுகிறோம். சோகத்தினால் உத்சாகம் குறையப் பெற்று அதைரியமடைந்தவனுக்கு எல்லாக் காரியங்களும் பாழாய் விடுமாகையால் நீ வருந்தலாகாது. சூரர்களும் சாமர்த்திய சாலிகளுமான எனது வானர வீரர்கள் உனக்கு நன்மை செய்யும்பொருட்டு நெருப்பில் குதிப்பதற்கும் உத்சாகங் கொண்டிருக்கிறார்கள். இனி மற்றைக் காரியங்களைப்பற்றிச் சொல்லவேண்டுமோ?

ராமா! நாம் சமுத்திரத்தில் அணை கட்டும்படிக்கும், ராவணனைக் காணும்படிக்கும் நீ மிகுந்த உத்சாகம் கொள்ள

வேண்டும். சமுத்திரத்தில் அணைகட்டி இவ்வானர சைன்னியம் லங்கையைக் காணுமளவே தாமதம். உடனே ராவணனும் அவனது கூட்டத்தாரும் மாண்டார்களென்று நிச்சயிப்பாயாக. ஆகையால் நீ தைரியத்தைக் கைக்கொண்டு துக்கத்தைத் துறக்க வேண்டும்.

ராஜாதி ராஜனே! யுத்தத்தில் நீ வில்லைத்தாங்கி நிற்கையில் உன்னெதிரில் நிற்க வல்லவன் இம்மூவுலகிலுமில்லை. ஆகையால் உனது பராக்கிரமத்தினால் சமுத்திரத்தைத் தாண்டி, ராவணனைக்கொன்று சீதையைக் காணப்போகிறாய். எனவே, நீ துக்கத்தை விட்டுக் கோபத்தைக் கைப்பற்றி சமுத்திரத்தைத் தாண்டும்படியான உபாயத்தைப் பற்றி இங்கேயே ஸூக்ஷ்ம புத்தியுடன் எங்களுடன் கூடி ஆலோசிப்பாயாக. கோபமுடைய க்ஷத்திரியர்களுக்கு எப்படிப் பட்டவர்களும் பயப்படுவார்கள்.

ராமா! நீ யுத்தத்தில் மிகுந்த உத்சாகமுடையவனல்லவா? அணைகட்டி சமுத்திரத்தைத் தாண்ட முடியாவிடினும் வேறு எந்த விதத்திலாவது தாண்டுவோம். தாண்ட வேண்டியதே தடை. உடனே ராவணன் முடிந்தான் என்று நினை. உனக்கு ஜயமுண்டாகுமென்பதற்கு எனக்குச் சுப சகுனங்கள் தோன்றுகின்றன. என் மனமும் மிகுந்த சந்தோஷமுற்றிருக்கிறது." என்றனன்.

இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

மூன்றாவது ஸர்க்கம்

## ராமன் அனுமானை லங்காபுரத்தின் கோட்டை முதலிய அமைப்பை வினவுதலும் அவற்றை அனுமான் விரிவாகக் கூறுதலும்.

இங்ஙனம் சுக்கிரீவன் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட ராமன் மிகுந்த உத்சாகமும் தைரியமுமடைந்து அனு

மானைப் பார்த்து "அனுமானே! தவப்பெருக்கினாலாவது, அணைகட்டியாவது, தண்ணீரை முற்றும் உலர்த்தியாவது இந்த சமுத்திரத்தைத் தாண்டுவதற்கு நான் வல்லவனாகவே இருக்கிறேன். அதைப்பற்றிச் சிறிதும் எனக்குச் சிந்தையில்லை. ஆயினும், லங்கையினுடைய கோட்டை, சைன்னியங்களின் எண்ணிக்கை, பாதுகாப்புகள், மதில், அகழி முதலிய ஏற்பாடுகள், ராக்ஷசர்கள் குடியிருக்குமிடங்கள் முதலியவற்றை நீ கண்ணால் கண்டபடி மீளவும் நன்றாகத் தெரிந்து கொள்ள விரும்புகிறேனாகையால் அவற்றையெல்லாம் உள்ளபடி எனக்கு மீண்டுமொருதரம் கூறுவாயாக" என்றனன்.

அனுமான் கைகுவித்த வண்ணம் ராமனை நோக்கி "லங்கையிலுள்ள ஜனங்களெல்லாரும் எப்பொழுதும் சந்தோஷமுற்றிருப்பார்கள். அதில் மதம் பிடித்த யானைகளும் கூட்டங்கூட்டமான ராக்ஷசர்களும் நிரம்பியிருக்கின்றமையால் ஒருவராலும் அதில் பிரவேசிக்க முடியாது. அதில் விசாலமான நான்கு வாயில்கள் இருக்கின்றன. அவற்றின் கதவுகள் இரும்புப்பூட்டு முதலியவற்றால் திடமாக நிருமிக்கப்பட்டும் பெரிய உழல் தடிகளையுடையனவாயும் இருக்கும். அந்த வாசற்படிகளில் பாணங்களையும் கற்களையும் இறைக்கும்படியான யந்திரங்கள் சன்னத்தமாக நிருமாணிக்கப்பட்டிருக்கும். பகைவர்கள் வருங்காலத்தில் அந்த யந்திரங்களின் உதவியால் பாணங்களும் கற்களும் அவர்கள்மேல் வீசப்பட்டு அவர்களை உட்புகவொட்டாமல் தடுப்பார்கள்.

மேலும் அவ்வாயில்களில் சூரர்களான ராக்ஷசர்கள் பயங்கரமான பெரிய இரும்புத் தடிகளை நூற்றுக் கணக்காக வைத்திருக்கின்றனர். லங்கையைச் சுற்றி மிகவும் உயர்ந்ததும் ஒருவராலும் ஏற முடியாததும் நவரத்தினங்களினால் இழைக்கப்பெற்றதுமான ஒரு பெரிய மதில் சுவர் இருக்

கிறது. அம்மதிலைச்சுற்றி மிகவும் ஆழமுள்ளதும், முதலை களும் திமிங்கிலங்களும் நிறைந்திருக்கப்பெற்ற பயங்கரமான காட்சியையுடைய அகழிகள் பல இருக்கின்றன. வாசற் படிகளின் அருகில் அவ்வகழிகளின்மேல் போகவும் வரவும் சுகமாய் இருக்கும்படி மரப்பலகைகளால் செய்யப்பட்ட நான்கு சாரங்கள் இருக்கின்றன. மிகுந்த அகலமுள்ள அப்பலகைகளை வேண்டும்பொழுது எடுக்கும்பொருட்டு அவற்றில் பெரிய யந்திரங்கள் பல இருக்கின்றன.

சாதாரண சமயங்களில் அப்பலகைகள் போக்குவரவிற் காக அவ்வகழிகளின்மேல் இருக்கும். பகைவர்கள் வரும் பொழுது அவற்றிலுள்ள யந்திரங்களால் அப்பலகைகளை மேல் தூக்கிவிடுவார்கள். அகழிகள் அகலமும் ஆழமும் உடையனவாகையால் பகைவர்கள் அவற்றைத் தாண்டி லங்கையில் புக முடியாது. லங்கை திரிகூட பர்வதத்தின் மேலிருக்கையால் அதிலேறி மேலே போவதற்குப் பிடிப்பு ஒன்றுமேயில்லை. தேவதைகளாலும் அதில் நுழைய முடி யாதபடி அவ்வளவு பாதுகாப்புகளுடன் (ஜலம், மலை, வனம், மதில் முதலியவற்றுடன் லங்கை விளங்குகிறது.

மேலும் லங்கை விசாலமான சமுத்திரத்தின் அக்கரை யில் இருக்கிறது. அதைத் தாண்டக் கப்பல் வழியும் கிடை யாது. தேவ நகரம்போல் அவ்விலங்கை பர்வதத்தின் நுனி யில் கட்டப்பட்டு குதிரைகளும் யானைகளும் நிறைந்து எவர்க்கும் புகமுடியாததாய் இருக்கிறது. லங்கையின் கீழ் வாசற்படியில் பதினாயிரம் ராக்ஷசர்களும், தெற்கு வாசற்படி யில் லக்ஷம் ராக்ஷசர்களும், மேற்கு வாயிலில் பத்துலக்ஷம் ராக்ஷசர்களும், வடக்கு வாயிலில் நூறுகோடி ராக்ஷசர்களும், கத்தி, சூலம், ஈட்டி, உலக்கை முதலிய ஆயுதங்களுடன் ஜாக்கிரதையாகக் காவல் புரிகின்றனர்.

ராமா! நான் அந்த சாரங்களையும், அகழிகளையும் அழித்துவிட்டதுடன் மதில் சுவரையும் இடித்து லங்கை முழுவதையும் கொளுத்திவிட்டேனாகையால், இப்பொழுது அவ்வளவு கஷ்டமில்லை. தவிர ராவணனது சைன்னியங்களில் பாதிக்குட்பட்ட மகாபராக்கிரமமுள்ள ராக்ஷசர்களையெல்லாம் தொலைத்துவிட்டேன்.

ராமா! எந்த விதத்தினாலாவது சமுத்திரத்தைத் தாண்டுவோம். பிறகு ராவணன் அவனது கூட்டங்களுடன் ஒழிந்தானென்று நிச்சயிப்பாயாக. அங்கதன், மைந்தன், துவிவிதன், ஜாம்பவான், நலன், நீலன் ஆகிய இவர்கள் ஆகாயத்திற் கிளம்பி சமுத்திரத்தைத் தாண்டிப்போய், லங்கையை அதன் பர்வதங்களோடும், காடுகளோடும், அகழிகளோடும், வெளிவாசற்படிகளோடும், மதில்களோடும், வீடுகளோடும் பிடுங்கி இங்குக்கொண்டுவர வல்லவர். எங்களுக்கு இங்ஙனம் கட்டளையிடுவாயாக. நல்ல முகூர்த்தத்தில் பிரயாணத்தைத் துவக்கும்படி அனுமதி செய்வாயாக" என்று விநயமுடன் விளம்பினன்.

மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நான்காவது ஸர்க்கம்

## ராமனும் சைன்னியங்களும் சமுத்திரக்கரை சேருதல்.

இங்ஙனம் அனுமானது வசனங்களைக் கேட்ட ராமன் "பாதகனான ராவணனது பட்டணத்தைச் சீக்கிரத்திலேயே நிச்சயமாக நான் பாழாக்கி விடுவேன்" என்று கூறி, சுக்கிரீவனைப் பார்த்து "சுக்கிரீவா! இச்சமயம் சூரியன் நடுப்பகலில் இருக்கிறனாகையால் இத்தருணம் ஜயத்தைத் தரவல்ல அபிஜித் என்னும் முகூர்த்தம் நடக்கிறது. மேலும் இன்று உத்தரபல்குனி (பங்குனி மாதத்துப் பௌர்ணமி) நக்ஷத்திரம். புனர்வஸுவில் பிறந்த எனக்கு இது ஸாதன

தாரையாய் இருக்கிறது. மற்றும் சுபத்தை அறிவிக்கின்ற பல சகுனங்களும் தோற்றுகின்றன. ஆகையால் இந்த நல்ல முகூர்த்தத்திலேயே நான் பிரயாணத்தைத் துவக்கினால் நான் ராவணனைக் கொன்று சீதையை மீட்டுவருவேனென்பதில் சந்தேகமில்லை. உடனே சமஸ்த சைன்னியங்களுடனும் இன்றைத்தினமே பிரயாணப்படுவோமாக." என்றனன்.

இங்ஙனம் ராமனது கட்டளையின்படி நீலன் லக்ஷம் வானரர்கள் பின் தொடர, காய் கிழங்குகள் ஏராளமாய் இருக்கப்பெற்றுச் செழித்த வனங்களும் குளிர்ந்த ஜலங்களும் அமைந்து தேன் மிகுதியாகக் கிடைக்கக்கூடிய மார்க்கத்தில் வழிகளைச் சீர்ப்படுத்தி, விரோதிகள் எவரும் அங்குப் புகா வண்ணம் வெகு ஜாக்கிரதையாய் சமுத்திரக் கரைவரையில் சிறந்த பாதைகளை ஏற்படுத்தி, அவற்றைத் தகுந்த பாதுகாப்புக்களுடன் வைத்துக்கொண்டே சென்றனன். வானர சைன்னியங்கள் நூறு நூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும், லட்சம் லட்சமாகவும் கூடித் தென் சமுத்திரத்தை நோக்கி நடந்துகொண்டிருந்தன.

கஜனும், கவயனும், கவாக்ஷனும் சேனையின் முன்பு நடந்து சென்றார்கள். ருஷபன் வானர சைன்னியத்தின் வலப்பக்கத்தைப் பாதுகாத்துக்கொண்டு சென்றனன். கந்தமாதனன் சைன்னியத்தின் இடது பக்கத்தைப் பாதுகாத்துக்கொண்டு போயினன். ராமன் ஐராவதத்தின்மேல் தேவேந்திரன் செல்வதுபோல் அனுமான் மேலேறி சேனைகளுக்கு உத்சாகத்தை வளரச் செய்துகொண்டு சைன்னியத்தின் இடையில் சென்றனன். குபேரன் ஸார்வபௌமமென்னும் யானையின் மேலேறிச் செல்லுவதுபோல் லக்ஷ்மணன் அங்கதன் மேலேறிக்கொண்டு சென்றனன்.

ஜாம்பவான், சுஷேணன் வேகதர்சி, தூமரன் ஆகிய இந் நால்வரும் சேனையின் பின்பாகத்தைப் பாதுகாத்து வந்தார்கள். இங்ஙனம் அனைவரும் தென் திசையைக் குறித்து மிகுந்த உத்சாகத்துடன் சென்றனர். வீரனுகிய சதவலி யென்னும் வானரன் பத்துகோடி வானரர்களால் சூழப்பட்டு வானர சைன்னியங்களை யெல்லாம் பாதுகாத்துக் கொண்டிருந்தனன். சேனுபதியான நீலன் முன்னமே கூறியபடி நாற்புறங்களிலும் திரிந்துகொண்டு வானர சைன்னியங்களைப் பாதுகாத்து வந்தனன்.

இங்ஙனம் பெரிய சமுத்திரத்தைப் போன்ற அவ்வானர சைன்னியம் மிகுந்த உத்சாகத்துடன் சிம்மநாதங்களைச் செய்துகொண்டு, காடு, மலை, வனாந்தரம் முதலியவற்றைத் தாண்டித் தென் திசையை நோக்கிச் சென்றது. ராம லக்ஷ்மணர்கள் அனுமான் மேலும் அங்கதன் மேலும் ஏறிக்கொண்டிருக்கையால் பெரிய கிரகங்களாகிய சுக்கிர வியாழன்களுடன் கூடிய சந்திர சூரியர்களைப்போல் பிரகாசித்தனர்.

அப்பொழுது லக்ஷ்மணன் ராமனைப் பார்த்து "ராமா! மங்களகரமான சகுனங்கள் தோன்றுவதைப் பார்ப்பாயாக. இதோ காற்று மெதுவும் இதமும் சுகத்தைக் கொடுப்பதும் மங்களத்தை அறிவிப்பதுமாகி மெல்லமெல்ல சேனையின் பின்னே வீசுகின்றது. மிருகங்களும் பட்சிகளும் மதுரமான பூரண சப்தங்களைச் செய்கின்றன. திசைகளெல்லாம் ஒளிபெற்று விளங்குவதுடன் சூரியனும் நிர்மலனாகித் தோற்றுகின்றனன்.

சுக்கிரன் பாபக்கிரக சம்பந்தமின்றி உனக்குப் பின்புறத்தில் பிரகாசிக்கின்றனன். ஸப்தரிஷிகளும் (ஸப்தரிஷிமண்டலமென்கிற நட்சத்திரக் கூட்டங்கள்) சிறந்த ஒளியுடன் தென்திசைக்குப்போய்த் திரும்பி வருபவராகி துருவனை வலம் செய்துகொண்டு மிகவும் பிரகாசிக்கின்றனர்.

நமது வமிசத்தின் பிரதான அரசனும் ராஜரிஷியுமான திரிசங்குவும் விசுவாமித்திரரால் படைக்கப்பட்ட ஸப்த ரிஷிகளிலடங்கிய வஸிஷ்டருடன்கூடி நிர்மலனாகி பிரகாசிக்கின்றனன். நமது இக்ஷ்வாகு வம்சத்தரசரது சிறந்த நக்ஷத்திரமாகிய விசாகையென்னும் இரண்டு நக்ஷத்திரங்கள் க்ரூர கிரகங்களால் அணுகப்படாமல் தெளிவுற்று பிரகாசிக்கின்றன.

நிருதியென்னும் தேவதையுடையதும் ராக்ஷசர்களின் நக்ஷத்திரமுமாகிய மூல நக்ஷத்திரம் அருகேயுள்ள தூமகேதுவால் தீண்டப்பட்டு பரிதாபமுற்று மிகுதியும் பீடிக்கப்பட்டிருக்கின்றது. இதெல்லாம் ராக்ஷச விநாசத்தின் பொருட்டே ஏற்பட்டிருக்கின்றன. ஆகையால் நீ நிச்சயமாக ராவணனையும் மற்ற ராக்ஷசக் கூட்டங்களையும் கொன்று சீதையை மீட்டுவரப் போகிறாய்'' என்றனன்.

அப்பொழுது வானர சைன்னியமானது பூமி முழுவதும் பரந்து சென்றது. வானரர்களின் கைகளாலும் கால்களாலும் கிளம்பின தூள் சூரியனுடைய ஒளியை மறைத்து நின்றது. அவ்வானரர்கள் தெளிந்த நீரையுடைய தாமரையோடைகளையும் நதிகளையும் தாண்டி ராம காரியத்தின் நிமித்தமாக மிகுந்த பராக்கிரமம் அதிகரிக்கப்பெற்று, ஒருவர்க்கொருவர் தமது சந்தோஷப் பெருக்கையும் வீரியத்தின் மிகுதியையும், பலத்தின் பெருமையையும் காட்டிக்கொண்டு நடந்தனர். மிகுந்த உத்சாகத்தினால் சிலர் வேகமாகச் சென்றனர். சிலர் மேலே கிளம்பினர். சிலர் 'கிலா கிலா' சப்தங்களைச் செய்தனர், சில வானரர்கள் தங்கள் வால்களைப் பூமியில் அடித்தனர். சிலர் கால்களைப் பூமியில் அதிரும்படி உதைத்தனர். சிலர் கைகளை நீட்டி, மரங்களை முறித்துப் பர்வதங்களைப் பிளந்தனர். இங்ஙனம் இரவு பகலாக விடாமல் பிரயாணம் செய்து முடிவில் ஸஹ்யபர்வதத்தையும் மலயபர்வதத்தையு மடைந்தனர்.

பிறகு அங்கிருந்து புறப்பட்டு, வழியிலுள்ள நானாவித மான மரங்களை முறித்துக்கொண்டும், நதி குளங்களைக் கலக்கி தாண்டிக்கொண்டும் சென்றனர். வழியிலுள்ள சிறந்த மரங்களிலுண்டான இனிய பழங்களைத் தின்று ஆங்காங்குத் தொங்குகின்ற தேன் கூடுகளை நாசம்செய்து யதேஷ்டமான தேனைப் பருகினர். கடைசியில் ராமன் மகேந்திர பர்வதம் சேர்ந்து பலவகை மரங்களால் பிரகாசிக்கின்ற அதன் சிகரத் தின் மேலேறினன். அங்கிருந்து ஆமைகளும் மீன்களும் நிறைந்த சமுத்திரத்தைக் கண்டனன். உடனே சமஸ்த வானர சைன்னியங்களுடன் அச்சிகரத்தினின்றும் கீழே இறங்கி சமுத்திரக் கரையோரத்திலுள்ள காட்டைக்குறித்து வேகமாகச் சென்றனன்.

இங்ஙனம் சமுத்திரக்கரையை யடைந்த ராமன் சுக்கிரீவனை நோக்கி "சுக்கிரீவா! தாண்ட முடியாத பெரிய சமுத்திரத்தை யடைந்துவிட்டோம். சமஸ்த சைன்னியங்களுடன் இவ்விடத்தில் தங்குவோமாக. சமுத்திரத்தைத் தாண்டும் உபாயத்தைப்பற்றி இனி ஆலோசிக்கவேண்டு மல்லவா." என்றனன்.

பிறகு ராமனது கட்டளையின்படி அனைவரும் அங்கு இறங்கினர். சூரர்களான வானர வீரர்கள் நான்கு பக்கங் களிலும் சதா திரிந்துகொண்டு பகைவர்கள் எவரும் அங்கு வராதபடி சேனைகளைப் பாதுகாத்துக்கொண்டிருந்தனர். வானரர்கள் உத்சாகத்தினால் செய்த ஆரவாரத்தின் பேரொலி சமுத்திரத்தின் பெருங்கோஷத்தினும் மிகுந்து ஒலித்தது.

அந்த சமுத்திரமோ மிகவும் விசாலமாய் ஆழமாய் அக்கரை இன்னதென்று சொல்லமுடியாமலிருந்தது. பயங்கர மான ராக்ஷசர்களும், முதலைகளும், நூறுயோசனை நீளமுள்ள திமிங்கிலங்களும், சிறந்த மாணிக்கங்களையுடைய கொடிய

விஷப்பாம்புகளும், கொடிய பெரிய நீர்யானைகளும் நிறைந்த அம் மகா சமுத்திரமானது ஒருவர்க்கும் தாண்டமுடியாமலிருந்தது. இன்னுமதில் தண்ணீரில் மறைந்து கிடக்கும் பெரிய கற்பாறைகளும், மலைகளும் நிறைந்திருந்ததுடன் அசுரர்களுக்கும் அது இருப்பிடமாகவிருந்தது. இப்படிப்பட்ட சமுத்திரத்தைக் கண்ட வானர வீரர்கள் இதை எப்படி தாண்டப்போகிறோமென்று பெருந்துயர முற்றனர். எல்லாவிதத்திலும் ஆகாயத்தைப்போல் காணப்பட்ட அம் மகா சமுத்திரத்தில் கிளம்புகின்ற அலைகள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு யுத்தத்தில் பெரிய பேரி வாத்தியங்கள் போல் பயங்கரமான சப்தத்துடன் ஒலித்துக்கொண்டு இருந்தன. அந்த சமுத்திரத்தை வானர வீரர்கள் ஆச்சரியத்துடன் கண்டு திகைத்தனர்.

நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஐந்தாவது ஸர்க்கம்.

## ராமன் சமுத்திரத்தைக்கண்டு சீதையை நினைத்துக்கொண்டு வருந்துகையில், லக்ஷ்மணன் சமாதானம் கூறுதல்.

சைன்னிய மெல்லாம் சமுத்திரக்கரையில் இறங்கினவுடனே ராமன் தன்பக்கத்தில் பணிந்து விநயத்துடன் நின்றுகொண்டிருந்த லக்ஷ்மணனைப் பார்த்து "விசனமானது காலம் செல்லச்செல்லக் குறைந்துகொண்டே வருமென்று உலகத்தவர் சொல்லுவார்கள். ஆயினும் சீதையைப் பிரிந்த என்னுடைய விசனமோவென்றால் அதற்கு நேர் மாறாகவிருக்கின்றது. அவ்விசனம் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே இருக்கிறது. ஐயோ! நான் சீதையை மீளவும் மீட்டுக்கொண்டு வரச் சக்தி யுடையவனாய் இருந்தும் வருந்துவது தகுமோ வென்று நீ சங்கிக்கவேண்டா.

எனக்கு சீதை தூரத்திலிருக்கிறாளென்பதைப் பற்றியாவது ராக்ஷசன் கொண்டுபோனானென்கிறதைப் பற்றியாவது சிறிதும் வருத்தமில்லை. அவளது இளமைப் பருவம் வீணாகக் கழிந்து போகிறதேயென்றுதான் வருந்துகிறேன்" என்று கூறி, அங்கு வீசும் காற்றைப்பார்த்து "வாயுவே! நீ சீதை இருக்குமிடம் சென்று அவள்மீது பட்டு அப்படியே வந்து என்மீது வீசுவாயாக. அதனால் நான் அவளையே தொட்டவனாவேன்.

சமஸ்தமான சுகபோகங்களையும் துறந்து என்னைப் பின் பற்றி வனத்திற்கு வந்த சீதை தன்னை ராவணன் கொண்டு போகும்பொழுது தன் ஒப்பற்ற கற்பெனும் நெருப்பினால் அவனை நீறுசெய்ய வல்லவளாயினும் என்னிடத்திலுள்ள பக்தியினால் என்னையே கதியாக நினைத்து 'ஐயோ! நாதா!' என்று முறையிட்ட உரை என் இருதயத்தைத் தகிக்கின்றது. மன்மதனென்னும் நெருப்பானது என் தேகத்தை இரவும் பகலும் குளிர்காலமென்றும் வெயிற்காலமென்றும் பேதமில்லாமல் எரிக்கின்றது. என்னால் இந்த தாபத்தைப் பொறுக்க முடியவில்லை யாகையால் சமுத்திரத்தில் புகுந்து படுத்துக் கொள்கிறேன். அப்பொழுது எனது தேகம் தாபம் குறையப்பெற்று சற்று குளிர்ந்திருக்கும். இப்பொழுது சீதை பிழைத்திருக்கிறாளென்று கேள்விப்படுகையால் நான் உயிர் தரித்திருக்கிறேன். ஐயோ! லக்ஷ்மணா! நான் ராவணனையும் ராக்ஷசர்களையும் கொன்று லக்ஷ்மியைப்போன்ற சீதையை எப்பொழுது காண்பேனோ! அழகிய கோவைப்பழம் போன்ற அதரமுடையதும் தாமரை மலர்போன்றழகியதுமான சீதையின் முகத்தை உயர நிமிர்த்தி, வியாதியஸ்தன் ரசாயனமென்கிற ஔஷத மருந்தைப் பருகுவதுபோல் அதரத்தின் அமிர்தத்தை எப்பொழுது பருகப்போகிறேனோ! அவள் என்னைத் தழுவி யணைக்கையில் ஒன்றோடொன்று

இணைந்தவைகளும், பருத்துப் பனம்பழம் போன்றவைகளு மான அவளது கொங்கைகள் அசைந்துகொண்டு என் மேனி யில் எப்பொழுது மோதப் போகின்றனவோ!

ஐயோ! பூங்கொடி போன்ற சீதை ராக்ஷச ஸ்திரீ களின் நடுவில் அகப்பட்டுக்கொண்டு வருந்துவது ஏனோ! நான் ராக்ஷசர்களைத் தொலைத்து எப்பொழுது சீதையை மீளவும் அடையப்போகிறேனே! தேவகன்னிகையையொத்த வளும் சிறந்த பதிவிரதையுமான சீதை மிகுந்த சந்தோஷத் துடன் என் கழுத்தைத் தழுவியணைத்து ஆனந்த பாஷ்பங் களை எப்பொழுது பெருக்கப் போகின்றனளோ? சீதையைப் பிரிந்ததனுலுண்டான இவ்விசனத்தை எப்பொழுது விடப் போகிறேனே?" என்று புலம்பினன்.

இங்ஙனம் புலம்பின ராமனை லக்ஷ்மணன் தகுந்த சமாதானங்களைச் சொல்லித் தேற்றினன்.

ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஆறாவது ஸர்க்கம்.

### லங்கையில் அனுமான் செய்த காரியங்களைப்பற்றி ராவணன் சிந்தித்து பகைவர்கள் வருவதற்கு முன்செய்யவேண்டிய ஏற்பாடுகளைப்பற்றி ஆலோசித்தல்.

லங்கையில் அனுமான் செய்த பயங்கரமான காரியங் களைக்கண்ட ராவணன் வெட்கத்தினல் தலை வணக்கமுற்று ராக்ஷசர்களெல்லோரையும் பார்த்து "கேவலம் ஓர் குரங்கு பகைவர்க்கு எவ்விதத்திலும் எதிரிட முடியாத இவ்விலங்கை மாநகரில் புகுந்ததல்லாமல் சீதையையும் கண்டு போயிற்று. நகரத்திற்கு முக்கியமான மாளிகையும் நாசம் செய்யப்பட் டது. வலிமை மிக்க பல ராக்ஷசர்களும் கொல்லப்பட் டனர். இங்ஙனம் ஓர் குரங்கு வந்து லங்கையை யெல்லாம்

பாழ் செய்து விட்டதே! இதை நினைக்கின் சற்று பயமாகத் தான் தோன்றுகிறது. ஆகையால் இனிச் செய்யவேண்டியதைப்பற்றி ஆலோசித்துச் சொல்லுங்கள்.

'மிகுந்த பலமுடைய உனக்கு மந்திராலோசனை எதற்கு?' என்கிறீர்களோ; சொல்லுகிறேன் கேளுங்கள். பெரியோர் மந்திராலோசனையே ஜயத்திற்கு மூலகாரணமென்று சொல்லுவார்கள். உலகத்தில் அரசர்கள் உத்தமர், மத்தியமர், அதமர் என்று மூன்றுவகைப்பட்டிருப்பர். எவன் சிறந்த புத்தியையுடைய மந்திரிகளோடாவது, தன் சுகதுக்கங்களையே தமது சுகதுக்கங்களாக நினைத்திருக்கும் நண்பர்களோடாவது, தன் இதத்தையே விரும்பும் பந்துக்களோடாவது கலந்து ஆலோசனை செய்து செய்யவேண்டிய காரியங்களை ஆரம்பித்து தெய்வத்தின்மேல் பாரத்தை இட்டிருப்பானோ அவனே உத்தம புருஷன் எனப்படுவான்.

எவன் தான் ஒருவனே காரியத்தை ஆலோசனைசெய்து தெய்வத்தை நம்பித் தானே காரியங்களைச்செய்வானோ அவன் மத்தியம புருஷன் எனப்படுவான். எவன் நன்மை தீமைகளை நிச்சயித்துக்கொள்ளாமல், தெய்வத்தையும் பொருள் செய்யாமல் ஒருவரையும் ஆலோசனை கேட்காமல் மனம் போனபடி காரியங்களைச் செய்வானோ அவனே அதம புருஷனென்று சொல்வார்கள்.

இதுபோலவே மந்திராலோசனைகளும் உத்தமம், மத்தியமம், அதமம் என்று மூன்றுவகைப்பட்டிருக்கும். மந்திரிகளெல்லாரும் ஒற்றுமையாய் இருந்து சாஸ்திரஞானம் என்னும் பார்வையுடன்கூடி ஆதரவுடன் எந்த ஆலோசனை செய்வார்களோ அது உத்தமமான மந்திராலோசனை எனப்படும்.

எந்த சபையில் மந்திரிகள் ஆலோசனை செய்யும் பொழுது ஒருவர்க்கொருவர் அபிப்பிராயபேதம் உண்டாகப்

பெற்றிருந்து கடைசியில் எல்லாரும் ஒருமனப்பட்ட அபிப்பிராயம் அடைவார்களோ அதை மத்தியம மந்திராலோசனை என்று கூறுவர்.

எந்த ஆலோசனை சபையில் மந்திரிகள் ஒருவர்க்கொருவர் வாதம் செய்து மிகுந்த பிடிவாதத்துடன் அவரவர் தம் தம் எண்ணத்தையே போற்றி ஒரு மனப்பட்ட அபிப்பிராயம் கொள்ளாமலிருக்கிறார்களோ அது அதமமான மந்திராலோசனை எனப்படும்.

இப்பொழுது ராமன் விஷயத்தில் நான் மந்திராலோசனை செய்ய விரும்புகிறேனாகையால் நீங்கள் எல்லாரும் ஒருமனப்பட்ட அபிப்பிராயத்துடன் இருக்கும்படியாக நன்கு ஆலோசனை செய்து இனி நடக்கவேண்டிய காரியத்தைக் கூறுங்கள்.

ராமன் தனது பராக்கிரமத்தினால் சமுத்திரத்தில் அணைகட்டியோ அல்லது அதை உலர்த்தியோ அதைத் தாண்டி வருவானென்று எனக்குத் தோன்றுகிறபடியால், ராமன் வானர சைன்னியங்களுடன் கூடி லங்கையைத் தகையும் காலத்தில் நம் பட்டணத்திற்கு ராக்ஷசர்களுக்கு மேன்மையை விளைவிக்க வல்ல உபாயங்களை யெல்லாம் நன்கு ஆலோசிப்பீர்களாக" என்றனன்.

ஆறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஏழாவது ஸர்க்கம்.

### ராவணனது மந்திரிகள் பகைவரது பலத்தை அறியாமல் அவனது பராக்கிரமங்களைப் புகழ்ந்து அவனை சந்தோஷப்படுத்துதல்.

இங்ஙனம் ராவணன் கூறக்கேட்ட ராக்ஷசர்கள் பகைவரின் பலத்தையறியாமல் அவனைப் பார்த்துக் கைகூப்பிக்கொண்டு "ராஜனே! நம்மிடம் பல பேர்களை ஒரே தடவை

யில் கொல்லவல்ல பெரிய கதைகளும் ஈட்டிகளும் கத்திகளும் சூலங்களும் ஏராளமாய் இருக்கும்போது நமக்கென்ன பயம்? உனக்கு சைன்னியங்களின் உதவிதான் எதற்கு? நீ ஒருவனே போதுமானவனல்லவோ?

பிரபூ! நீ பாதாளத்திற்புகுந்து நாகர்களை வென்றவனல்லவா? குபேரனையும் யக்ஷர்களையும் வென்று கைலாச சிகரத்தினின்று இப்புஷ்பக விமானத்தைக் கொண்டுவந்தவனல்லவா? ராக்ஷசர் தலைவனே! காலபாசத்தையுடைய யமனும் உனக்குப்பயந்து உன்னட்டை விரும்பவில்லையா? மிகுந்த சூரர்களும் மாயச் செய்கைகளையுமுடைய காலகேயர்களை வென்று அவர்களை உன்வசமாக்கிக் கொள்ளவில்லையோ?

இத்துடன் நில்லாமல் தேவலோகஞ்சென்று இந்திரனையும் ஜயித்தனை. வருணபுத்திரர்களை வென்றனை. இங்ஙனம் நீ செய்த அற்பமான யுத்தத்திற்கே உலகங்களெல்லாம் கிடுகிடுவென்று நடுக்கமுற்றன. பலம் மிகப்பெற்ற கோடிக்கணக்கான க்ஷத்திரியர்களை யுத்தத்தில் வென்ற தீரனான உனக்கு அற்பனான அந்த ராமன் எம்மாத்திரம்? மிகுந்த புஜபல பராக்கிரமமுடைய இவ்விந்திரஜித்து ஒருவனே வானரர்களெல்லாரையும் உருமாய்க்க வல்லவன். இவன் சிவனைக் குறித்து நிகரில்லாத யாகத்தைச் செய்து அதனால் ஒருவர்க்கும் கிடைக்கமுடியாத அருமையான வரங்களைப் பெற்றிருக்கின்றானல்லவா? இவன் தேவேந்திரனை வென்றதுடன் அவனைப்பிடித்து விலங்கிட்டு லங்கைக்குக் கொண்டுவந்தானல்லவா? இவன் ஒருவனையே நீ யுத்தத்திற்கு அனுப்புவாயாக. இவனே எளிதில் பகைவர்களனைவரையும் மாய்த்து வருவான்.

ராஜனே! அற்பனாகிய ஒரு அனுமானால் இவ்வாபத்து இருந்தாற்போலிருந்து எதிர்பாராமல் சம்பவித்து விட்டது. எனினும் இதைப்பற்றி நீ எள்ளளவும் சிந்திக்கலாகாது.

நீ நிச்சயமாக ராமனைக் கொல்லப்போகிறாய். கவலையை ஒழித்து சந்தோஷமாய் இருப்பாயாக" என்றனர்.

ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## எட்டாவது ஸர்க்கம்.

### பிரகஸ்தாதி மந்திரிகள் தாம் ஒவ்வொருவரே ராமனை ஜயித்துவருவோமென்று கூறுதல்.

*பிறகு ராக்ஷச சேனாபதியான பிரகஸ்தன் ராவணனைப் பார்த்து "தேவதைகளாவது, அசுரர்களாவது, நாகர்களாவது, கந்தருவர்களாவது, பிசாசர்களாவது எவரும் யுத்தத்தில் உன்னை எதிர்க்கவல்லவரல்லர். இனி இவ்வானரர்கள் நமக்கு எம்மாத்திரம்! நாம் மனவூக்கமின்றி ஏமாந்திருந்த சமயத்தில் அந்த அனுமான் நம்மை வஞ்சித்துப் போயினன். இல்லாவிடில் அவ்வானரன் உயிருடன் இங்கிருந்து போக முடியாது. நான் ஒருவனே சென்று சமஸ்த வானரர்களையும் கொன்று இவ்வுலகிலேயே வானரர்கள் இல்லாமலிருக்கும்படி செய்துவிடுகிறேன். ராவணா! இனி உனக்குக் கவலைவேண்டாம்" என்றனன்.*

*பிறகு துர்முகனென்னும் ராக்ஷசன் மிகுந்த ஆத்திரத்துடன் எழுந்து "கேவலம் ஓர் குரங்கு வந்து நம்மெல்லார்க்கும் இப்படிப்பட்ட அவமானத்தை விளைவித்தது. அதுடன் நிற்காமல் நமது பட்டணத்தையும் கொளுத்தி நமதரசனையும் அவமதித்தது. இதை எள்ளளவும் பொறுக்கலாகாது. இப்பொழுது நானொருவனேசென்று வானரர்களெல்லாரையும் சமுத்திரத்தில் பிரவேசிக்கினும், ஆகாயத்தில் கிளம்பினும் பாதாளத்தில் மறையினும் விடாமல் கொன்று திரும்பிவருகிறேன்" என்றனன்.*

*பிறகு வஜ்ஜிரதமிஷ்ட்ரன் என்னு மரக்கன் பயங்கரமான இருப்புத்தடியைக் கையில் பிடித்தவண்ணம் "இதோ*

நான் ஒருவனே சென்று ராமனையும் லக்ஷ்மணனையும் சுக்கிரீவனையும் இருப்புத்தடியால் கொன்று வானரர் எல்லாரையும் கலக்கிவிட்டு வருகிறேன். ராஜனே! நான் இன்றொரு யுக்தி சொல்லுகிறேன் கேட்பாயாக. நமது ராக்ஷசர்களில் சில ஆயிரம் பேர்கள் மானிட தேகங்களைத் தரித்து ராமனிடம் போய் 'நாங்கள் உன் தம்பியான பரதனால் அனுப்பப்பட்டு வந்தனம். நீ உடனே அயோத்திக்கு மீண்டு வருவதைப் பற்றி வேண்டிய பிரயத்தனங்கள் செய்யவேண்டும்' என்று சொல்வார்களாக. உடனே ராமன் சேனைகளைவிட்டு சீக்கிரமாக அவர்களைத் தொடர்ந்துசெல்வான்.

பிறகு நாம் இங்கிருந்து சூலம், சக்தி, கதை, பாணம் முதலியவற்றைத் தரித்துச் சீக்கிரமாக அவ்விடம் செல்வோம். அப்பொழுது நாம் கூட்டங் கூட்டமாக ஆகாயத்தினின்று கற்களையும் ஆயுதங்களையும் பெரிய மழையாகப் பெய்து அவ்வானர சைன்னியங்களையெல்லாம் பாழ்செய்து யமலோகத்திற்கு அனுப்பிவிடுவோம். ராம லக்ஷ்மணர்கள் இதைக் கண்டு கபடம் அறியாமையால் நம்முடையவர்களைத் தம்முடையவர்களாக நம்பி நீதியினின்றும் தவறினோர்களென்கிற உறுதியினால் நிச்சயமாகத் தம் பிராணன்களை விடுவார்கள்" என்றனன்.

பிறகு கும்பகரணனது புத்திரனான நிகும்பனென்பவன் மிகுந்த கோபாவேசத்துடன் ராவணனைப் பார்த்து "நீங்களனைவரும் மகாராஜனான ராவணனுடன் இங்கேயே இருப்பீர்களாக. நானொருவனே சென்று ராம லக்ஷ்மண சுக்கிரீவர்களையும் அனுமானையும் கொன்றுவருகிறேன்" என்றனன். பிறகு அவன் கூறினபடியே வஜ்ஜிர ஹனுவென்னும் ராக்ஷசன் வீரமொழிகளைக் கூறினன்.

எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று

### ஒன்பதாவது ஸர்க்கம்.

## நிகும்பாதிகள் எழுந்து யுத்தத்திற்குப் புறப்படுகையில், விபீஷணன் வேண்டாமென்று தடுத்தல்.

பிறகு நிகும்பன், ரபஸன், சூரியசத்துரு, ஸுப்தக்னன், யஜ்ஞஹன், மஹாபார்சுவன், மஹோதரன், அக்கினிகேது, இந்திரஜித்து, பிரகஸ்தன், விருபாக்ஷன், வஜ்ஜிரதம்ஷ்டரன், தூமராக்ஷன், அதிகாயன், துர்முகன் ஆகிய இவ்வரக்கர்களனைவரும் பட்டயங்களையும், ஈட்டிகளையும், கத்திகளையும், விற்களையும் பாணங்களையும், கண்ட கோடாலிகளையும் ஏராளமாக எடுத்துக்கொண்டு ராவணனைப் பார்த்து "நாங்கள் இப்பொழுதே சென்று ராமனையும் சுக்கிரீவனையும், லங்கையில் ரகசியமாய்ப் புகுந்து கெடுதிசெய்த அனுமானையும் கொன்று விட்டுவருகிறோம்" என்றனர்.

இங்ஙனம் பிரயாணமாகப் போக முயன்றிருக்கிற அவ்வரக்கர்களையெல்லாம் விபீஷணன் நிறுத்தி மீளவும் உட்காரவைத்து, கைகூப்பி ராவணனைப் பார்த்து "அண்ணே! சாம தான பேதங்களென்கிற மூன்று உபாயங்களும் பயன் படாமற்போகும் சமயங்களில் தான் 'தண்டம்' என்கிற பராக்கிரமத்தைக் காட்டவேண்டியதாகுமென்பர். நாம் இன்னும் முற்கூறிய மூன்றுவிதமான உபாயங்களை உபயோகிக்கவில்லை. ஆகையால் இது தண்டிப்பதற்குக் காலமல்ல.

மேலும் பகைவனை ராமன் தண்டிக்கத் தகுந்தவனல்லன். நிலைநின்ற பலமுடையவன்; வெற்றியடையவிருப்பமுடையவன்; அகாலத்தில் ரோஷத்தை ஏற்றுக்கொள்பவனல்லன், ஒருவராலும் எதிர்க்க முடியாதவன். அனுமான் பயங்கரமான சமுத்திரத்தைத் தாண்டி ஒருவராலும் செய்ய முடியாத காரியத்தைச் செய்தானே! இப்படி யாகுமென்று எவனேனும் நினைத்ததுண்டா? ஆகையால் ராமனுக்குத்

தெய்வமும் பிரதிகூலமன்று. ராக்ஷசர்களே! பகைவர்களின் பலங்களும் பராக்கிரமங்களும் அளவிறந்தவையாகையால் முன்பின் பாராமல் நீங்கள் இடரென்று அவர்கள் அற்பர்களென்று நினைத்து அவமதித்துச் செல்லலாகாது.

ராமனது மனைவியை ஜனஸ்தானத்தினின்றும் ராவணன் கொண்டுவந்தனனே. இதற்கு, ராமன் இந்த ராவணனுக்கு முன்பு என்ன அபகாரஞ் செய்தான்? கரனைக் கொன்றதனால் தான் என்னில், கரன் தானே மிதம்விஞ்சி ராமனைக் கொல்லப் போகையில் ராமன் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு அவனைக் கொல்ல நேர்ந்தது. இதில் என்ன தோஷம்? ஆகையால் ராமன் தண்டிப்பதற்குத் தகுந்தவனே யல்லன். அவன் மனைவியை அபகரித்துக்கொண்டு வருவது சிறிதும் யுக்தமன்று.

பிறர் மனைவியைக் கொண்டுவருவது அபகீர்த்தியையும், ஆயுளின் முடிவையும், தனநாசத்தையும் விளைவிக்கும். ராமனோ மகா பராக்கிரம சாலி. தர்மத்தில் தவறாமல் நடப்பவன். அப்படிப்பட்டவனோடு வீண் வைரம் (விரோதம்) வைத்துக் கொள்வது நமக்கு யுக்தமன்று. ஆகையால் சீதையை அவனுக்குக் கொடுத்து அவனால் நாம் பந்துமித்திரர்களுடன் நாசமடையாமல் இன்னும் கொஞ்சகாலம் க்ஷேமமாகக் காலம் கழிப்போமாக. நான் நன்மையை விளைப்பதும் நீதியுடையதுமான வசனத்தைக் கூறுகிறேன். ராமன் தனது கூரான பாணங்களால் இந்நகரத்தைப் பிளந்து நம்மைப் பாழ்படுத்துவதற்கு முன் சீதையைக்கொண்டு அவனிடம் சேர்த்துவிடுவீர்களாக" என்றனன். இங்ஙனம் விபீஷணன் கூறியதும் ராவணன் அனைவர்க்கும் விடைகொடுத்தனுப்பித் தானும் தன் அரண்மனையை அடைந்தனன்.

ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று

## பத்தாவது ஸர்க்கம்

## சீதையை விட்டுவிடும்படி விபீஷணன் ராவணனுக்குப் புத்திமதி கூறுதல்.

மறுநாள் பொழுது விடிந்ததும் விபீஷணன் ராவணனது அரண்மனையை அடைந்தனன். அவ்வரண்மனை ஆகாயத்தை யளாவியதாய் உயர்ந்து பிரிவினையுடன் நன்கு நிருமிக்கப்பட்ட பல கட்டுகளையுடையதாய் இருந்தது. வீணை, பிடில் முதலிய வாத்தியங்களின் ஒலி அங்கு எப்பொழுதும் கேட்டுக்கொண்டிருந்தது. அழகிற் சிறந்த இள மங்கையர்கள் கணக்கின்றி நிறைந்திருந்தனர். இப்படிப்பட்ட ராவணனது மாளிகையில் நுழைந்த விபீஷணன் சிம்மாசனத்தில் வீற்றிருந்த ராவணனுக்கு வணக்கம் செய்து அவனை நோக்கி "சீதை நமது பட்டணத்திற்கு வந்ததுமுதல் கெட்ட சகுனங்கள் பலவும் புலப்படுகின்றன. நெருப்பு (அக்கினி) மந்திரங்களைச் சொல்லி ஹவிஸ்ஸுக்களை விதிப்படி ஹோமஞ்செய்யினும் புகை மூடிக்கொள்ளுகையால் அடிக்கடி அணைந்தணைந்து எரிகின்றதேயன்றி நன்கு ஜ்வலிக்கிறதில்லை. இதுவன்றி சமையல் செய்யும் அடுப்புகளிலும், அக்கினிஹோத்திர வீடுகளிலும் வேதமோதுமிடங்களிலும் சர்ப்பங்கள் காணப்படுகின்றன. ஹோமஞ் செய்வதற்காக வைத்திருக்கிற ஹவிஸ்ஸுக்களுக்கு எறும்புகள் வருகின்றன. பசுக்களுக்குப் பால் உலர்ந்துபோகின்றது. மதங்கொண்ட யானைகளுக்கு மதம் குறைகின்றது. குதிரைகள் தீனமாகக் கனைத்துக்கொண்டு ஆகாரத்தின்மேல் இச்சையில்லாதிருக்கின்றன.

ராஜனே! நமது கழுதைகளும் ஒட்டகங்களும் மயிர் உதிரப்பெற்றுக் கண்ணீர் பெருக்குகின்றன. காக்கைகள் கொடியனவாகி எங்கும் கூட்டம் கூட்டமாகக் கூடிக் கூவுகின்றன கழுகுகள் வீடுகளின்மேல் குவியல் குவியல்களாக வந்து நிற்கின்றன. நரிகள் காலை மாலைகளில் பட்டணத்திற்

கருகாமையில் வந்து அமங்கலமாகக் கூவுகின்றன. நாய்கள் இடி இடித்தாற்போல் குரைக்கின்றன. தவிர எவர்க்கும் புக முடியாத நமது லங்கையில் ஓர் குரங்கு நுழைந்து பலமுள்ள அநேக ராக்ஷசர்களைக் கொன்றதல்லாமல் உன்னையும் அவமதித்து பட்டணத்தையே கொளுத்திவிட்டது.

ராவணா! இவற்றையெல்லாம் யோசிக்கில் நமக்கு அபஜயமே உண்டாகுமென்று தோன்றுகின்றது. நம்முடைய ராக்ஷச வீரர்களான மந்திரிகள் உன்னுடைய முகமலர்ச்சிக்காகச் சத்ருக்களின் பலத்தைத் தெரிந்துகொள்ளாமல் உன்னைத் தூண்டிவிட்டு சண்டையை நடத்த விரும்புகின்றனர். நான் உனக்குச் சகோதரனாகையால் உனக்கு நேரும் கஷ்ட நிஷ்டூரங்கள் என்னுடையதேயென்று நினைத்து உனக்கு நியாயமானதும் நன்மையை விளைவிப்பதுமான நீதிகளைச் சொன்னேன். சீதையை உடனே ராமனிடம் விட்டு விடுவாயாக. அதனால் நாம் நமது பந்துமித்திரர்களுடன் ராமனது கூரான பாணங்களுக்கு இலக்காகாமல் சுகமாக வாழலாம். இப்படி நான் சொல்லுவதைப்பற்றி நீ என்னைக் கோபிக்காமல் நான் சொன்ன விஷயங்களை நன்கு ஆலோசித்து எது உசிதமோ அதன்படி நடப்பாயாக" என்றனன்.

இங்ஙனம் விபீஷணன் சொன்ன தரும மொழிகளைக் கேட்ட ராவணன், தான் நினைத்ததே நன்மை என்கிற பிடிவாதமுடையவனாகையால் மிகுந்த கோபங்கொண்டு விபீஷணனை நோக்கி "எனக்கு எவனிடத்திலும் பயமில்லை. என் கையிலகப்பட்ட சீதையை ராமன் தேவேந்திரனுடன் கூடிவரினும் பெறமுடியாது. சீதையை நான் விடமாட்டேன்" என்றுகூறி விபீஷணனை விடைகொடுத்தனுப்பினன்.

பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

பதினோராவது ஸர்க்கம்.

## ராவணன் மனக்கலக்கமுற்று மீளவும் ஆலோசனை செய்யும்பொருட்டு மந்திரிகளுடன் சபைக்கு வருதல்.

ராவணன் சீதையினிடத்திலுள்ள காமமோகத்தாலும், விபீஷணன் தனக்கு மிகவும் இதமான வார்த்தைகளைச் சொல்லினும், அதை பிரதிகூலமானதாக நினைத்ததாலும், சீதையை எடுத்துக்கொண்டுவந்த பாபகர்மத்தினாலும் சிந்தையிலாழ்ந்து மிகுந்த வியாகூலமடைந்து மீண்டும் மந்திராலோசனை சபையைக்கூட்டி ஆலோசிக்க விரும்பினன்.

உடனே அவன் நன்கலங்கரிக்கப்பட்ட ரதத்தின்மேலேறி மந்திராலோசனை சபைக்குச் சென்றனன். அவனுக்கு முன்னும் பின்னும் கணக்கில்லாத ராக்ஷச வீரர்கள் கவச கேடயங்களைத்தரித்துச் சென்றனர். ராவணனது கட்டளையின்படி லங்கையிலுள்ள ராக்ஷசர்களனைவரும் ஒருங்கே வந்து கூடினர். அவர்களில் சிலர் வாகனங்கள் மேலும், சிலர் ரதங்களின் மேலும், சிலர் வண்டிகளிலும் வந்திறங்கினர்.

விசுவகர்மாவால் நிருமாணிக்கப்பட்டதும் நவரத்தின கசிதமாய் மிகுந்த காந்தியுடன் விளங்குவதுமான மந்திராலோசனை சபையையடைந்த ராவணன் வைடூரியமணிமயமான உயர்ந்த சிம்மாசனத்திலமர்ந்தனன். பல்லாயிரக்கணக்கான ராக்ஷச வீரர்கள் அவரவர்களந்தஸ்திற்குத் தகுந்த ஆசனங்களில் உட்கார்ந்தனர். சிறந்த ஞானமும் அனுபவமும் உடைய மந்திரிகள் அநேகம்பேர் வந்துசேர்ந்தனர். அப்பொழுது தர்மாத்மாவான விபீஷணனும் உத்தமமான தேரில் ஏறிக்கொண்டு அண்ணனது சபைக்குப்போயினன். பிறகு விபீஷணன், பிரகஸ்தன், சுகன் முதலானோர் ராவணனுக்கு வணக்கம் செய்து, தகுந்த ஆசனங்களிலமர்ந்தனர். அப்பொழுது ராவணன் ராக்ஷசர்களின் நடுவில் வஸ்திரக்களி

னிடையில் தேவேந்திரன்போல் தன் தேக காந்தியால் பிரகாசித்துக்கொண்டிருந்தனன்.

பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது ஸர்க்கம்.

## ராவணன் சீதையைவிட்டுக் கோடாமலே ராமனை வெல்வதற்கு உபாயத்தை ஆலோசித்தல்.

பிறகு ராவணன் பிரகஸ்தனை நோக்கி "சேனாதிபதி! ரத, கஜ, துரக பதாதிகளென்று சொல்லப்பட்ட நான்கு விதமான சைன்னியங்களுக்கு, முன்னைவிட மிகுந்த மன வூக்கத்துடன் பட்டணத்தைப் பாதுகாக்கும்படி கட்டளை இடுவாயாக" என்று ஆஞ்ஞாபித்தனன் பிரகஸ்தன் உடனே அவ்விராவணனது ஆக்கினையைச் சிரமேற்கொண்டு அவ் வண்ணமே செய்தனன்.

ராவணன் ஜயத்தை விரும்பாமல் காமசுகத்தையே விரும்பி நண்பர்களைப் பார்த்து "நீங்கள் எல்லா விதத்திலும் நன்கு ஆலோசித்து நிச்சயித்து ஆரம்பித்த காரியங்களில் ஒன்றாயினும் எப்பொழுதும் பயன்படாமற் போனதே இல்லை. இப்பொழுது நாம் யோசிக்கவேண்டிய விஷயத்தைப்பற்றி முன்னமே உங்களுக்குக் கூறியுள்ளேன். கும்பகர்ணன் அப்பொழுது நித்திரையிலிருந்தபடியால் அவனுக்குமாத்தி ரம் இவ்விஷயம் தெரியாது. அவனும் இதை அறிவானாக" என்று மொழிந்து, கும்பகர்ணனை நோக்கி "ராமனது மனைவி யான அழகிய சீதையை ஜனஸ்தானத்தினின்று கொண்டு வந்தேன். அந்த சுந்தராங்கி நான் எவ்வளவு வேண்டிக் கொண்ட போதிலும் என் படுக்கையில் ஏற இஷ்டப்பட வில்லை. எல்லா சாமுத்திரிகா லக்ஷணங்களுடனும் கூடிய அம்மாதரசியின் ஒவ்வொரு அழகிய அங்கமும் என்னை மன்

மதனுக்கு ஆளாகும்படி செய்கின்றன. மாரனது மலர்க் கணையால் அடிக்கப்பட்டு இரவும் பகலும் நான் வருந்துகிறேன். 'அப்படியாயின் பலாத்காரம் செய்தாயினும் அவளைக் கூடலாகாதா?' என்னில் அம்மாதரசி ராமனது வரவை எதிர் பார்ப்பவளாகி 'ஒரு வருஷத்திற்குள் ராமன் வராத பட்சத்தில் நீ சொன்னபடி செய்கிறேன்' என்று ஒரு வருஷ காலம் கெடுவேண்டிக் கொண்டனள். அவளது கண்ணழகிலும் இனிய பேச்சுக்களிலும் ஈடுபட்டு அப்படியே ஆகட்டுமென்று ஒப்புக்கொண்டேன்.

இப்பொழுது ராமலக்ஷ்மணர்கள் யுத்தத்தின்பொருட்டுக் கணக்கற்ற வானரர்களுடன் கூடி சமுத்திரத்தின் அக்கரையில் தங்கியிருக்கின்றனர். அவர்கள் பெரிய ஆழமான சமுத்திரத்தை எங்ஙனம் தாண்டுவார்கள்? ஒருக்கால் தாண்டி வந்து விட்டால் பெரிய யுத்தம் செய்ய நேரிடும்போல் தோன்றுகிறது. கேவலம் ஓர் அநுமான் என்ற குரங்கினால் நமக்குப் பெரிய மனவருத்தம் நேர்ந்ததே! ஆகையால் காரியங்கள் எப்படி எப்படி நேருமோ என்று சிறிது விசாரமாகத் தான் இருக்கிறது. ஆகையால் நீங்கள் அனைவரும் தீர ஆலோசித்து சீதையை நான் இழக்காமலிருக்கும்படிக்கும், ராம லக்ஷ்மணர்களை நான் கொல்லும்படிக்கும் தகுந்த வழியைக் கூறுவீர்களாக" என்றனன்.

இங்ஙனம் ராவணன்மொழிந்த வசனங்களைக் கேட்ட கும்பகர்ணன் மிகுந்த கோபமுற்று அவனைப் பார்த்து "ராவணா! நீ சீதையை முன்பு கொண்டுவந்தபொழுதே எங்களுடன் ஆலோசித்திருப்பாயாயின், இப்பொழுது உன்மனம் சஞ்சலமில்லாமலிருக்கும். இப்பொழுது விஞ்சிப்போயின பின்பு ஆலோசிப்பதெல்லாம் வீணையாகையால் உன்மனம் குதிராமலிருக்கின்றது. பத்துத் தலையனே! எவன் முன்னதாக ஆலோசித்து நியாயத்தை அறிந்து, பின்பு அந்த நியாயத்

கின்படி ராஜகாரியங்களைச் செய்கிறானோ, அப்படிப்பட்டவன் காரிய சித்தியடைந்து மனம் நிர்மலமாய் இருக்கப்பெறுவானாதலால் உன்னைப்போல் பின்பு சஞ்சலமான புத்தியை அடையமாட்டான்.

தசக்கிரீவா! இப்பொழுது நீ சீதையைக் கொண்டுவந்த காரியமோ மிகப்பெரியது. எவ்வளவோ அபாயகரமான இக்காரியத்தை நீ ஆலோசிக்காமலே செய்தனை. இதுவரை உனது பாக்கிய வசத்தினால் ராமன் உன்னைக் கொல்லாதிருக்கின்றனன். ராவணா! 'இனிக்கதியென்?' என்னில், இங்ஙனம் நீ உனக்குத் தகாத காரியம் செய்தாயாகையால், அதை நான் தவிர மற்றெவராலும் சரிப்படுத்த முடியாது. நான் உன் பகைவர்களை யழித்து அதைச் சீர் திருத்துகிறேன்.

பெரியோனே! நான் பர்வதம்போன்ற உருவத்துடன் பெரிய இரும்புத் தடியைத் தரித்துக் கூரான கோரப் பற்களுடன் சிம்மநாதஞ் செய்துகொண்டு யுத்தத்திற்குத் தொடங்குகையில் தேவேந்திரனும்கூட பயந்து ஓடிப் போவானே! மற்றவரைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? அந்த ராமன் என்மேல் ஒரு பாணத்தை எய்து மீளவும் இரண்டாவது பாணத்தைத் தொடுத்து அடிப்பதற்குள் நான் அவனது ரத்தத்தைப் பருகி விடுவேன். அங்ஙனமே லக்ஷ்மணனையும் கொன்று வானரர்களெல்லோரையும் தின்று விடுகிறேன். இனி நீ கவலையை யொழித்து நல்ல மதுபானங்களைக் குடித்து உல்லாசமாக விளையாடிக்கொண்டு உனக்கிஷ்டமான காரியங்களைச் செய்வாயாக. நான் சென்று ராமனை யமபுரத்திற்கனுப்பி விடுகிறேன். பிறகு சீதை வெகுகாலம் உன் வசத்திலிருப்பாள்" என்றனன்.

பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## பதின்மூன்றாவது ஸர்க்கம்

## மகா பார்சுவன் சீதையை பலாத்காரம் செய்து அநுபவிக்கும்படி ராவணனுக்கு உரைத்தலும் அதற்கு ராவணன் கூறும் சமாதானமும்.

மகா பார்சுவன் என்பவன் உடனே கைகுவித்த வண்ணம் ராவணனைப் பார்த்து "ராஜனே! நீ மிகவும் பிரயாசப்பட்டு சீதையைக் கொண்டுவந்தும் அவளை யணையாமல் வெறுமனே இருப்பது யுக்தமல்ல. இவ்வுலகில் உன்னை ஜயிப்பவன் எவனுமில்லை. ஆகையால் நீயே அனைவர்க்கும் கட்டளையிடுபவன். ஆகையால் நீ அதர்மத்திற்குச் சிறிதும் பயப்படாமல் பகைவர்களின் தலையை மிதித்து சீதையுடன் கூடி இன்பம் நுகருவாயாக. உன்னை அவள் விரும்பா விடினும் நீ மேல் விழுந்து வஞ்சனையிற்புகுந்து பலவந்தமாக அநுபவிப்பாயாக. 'இதன் காரணமாக மேல் வரும் பயத்தைத் தடுக்காமல் இவ்வண்ணம் எப்படிச் செய்யலாம்?' என்னில், இங்ஙனம் நீ காமத்தைத் தீர்த்துக்கொண்ட பின்பு உனக்கு ஏதேனும் பயம் சம்பவிக்குமாயின் உனக்கது எம்மாத்திரம்? ராக்ஷச ராஜனே! கும்பகரணனும் இந்திரஜித்தும் எங்களை சகாயமாக அழைத்துக்கொண்டு சென்று பகைவர்களை மாய்த்து விடுவார்கள். இதில் சந்தேகமில்லை" என்றனன்.

இதைக்கேட்ட ராவணன் புன்முறுவலுடன் மகாபார்சுவனை நோக்கி "உன் வார்த்தைகளுக்கு சந்தோஷித்தேன். என்னிடத்தில் ஒரு ரகசியம் உளது. அதைச் சொல்லுகிறேன் கேள். முன்பு ஒரு காலத்தில் ஆகாயத்தில் புஞ்சிகஸ்தலையென்னும் அப்சரமடந்தை என்னைக் கண்டஞ்சி ஒதுங்கியொதுங்கி மறைந்து பிரமதேவனை வணங்கும்பொருட்டுப் போய்க்கொண்டிருக்கக் கண்டேன். பிறகு நான் அப்பெண்மணியைப் பலவந்தமாகப் பிடித்துத் துன்பங்களை விளைத்து

அதிக்கிரமம் செய்தேன். அவள் வாடிவதங்கின தாமரைக் கொடிபோல் நலுங்கி, பிரமதேவனிடம் சென்றனள். அவளது கற்பை நானழித்த விஷயம் பிரமதேவனறிந்து மிகவும் கோபமுற்று 'இது முதலாக நீ இங்ஙனம் அன்னிய ஸ்திரீகளைப் பலவந்தமாகப் புணருவாயாயின் அப்பொழுதே உனது தலை நூறு சுக்கல்களாக வெடித்துப்போகக்கடவது' என்று சாபங்கொடுத்தனன். இதனால்தான் நான் சீதையைப் பலவந்தப்படுத்தப் பயப்படுகிறேன்.

மகா பார்சுவனே! அந்த ராமனுக்கு எனது வீரபராக்கிரமங்கள் சிறிதும் தெரியாது. விவேகமில்லாத அந்த அற்பமனிதன் எனது கொடிய பாணங்களால் வீணில் மடியப் போகிறான். பிறகு அந்த வானர சைன்னியங்களையும் சின்னபின்னப்படுத்தி நாசம் செய்யப்போகிறேன். இதில் சிறிதும் சந்தேகமில்லை'' என்றனன்.

பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினான்காவது ஸர்க்கம்.

### விபீஷணன் ராமனது ஒப்புயர்வற்ற பராக்கிரமங்களைக்கூறி சீதையை விட்டுவிடுவதே யுக்தமென்று சொல்லுதல்.

பிறகு விபீஷணன் ராவணனைப் பார்த்து "ராஜனே! சீதையைக் கொடாமலே ராமனைக் கொல்லும் உபாயத்தைக் கேட்டனை. ஐயோ! சீதை என்பவள் அணுகின மாத்திரத்திலேயே மனிதனை முடிக்கவல்ல கொடிய சர்ப்பமென்பதை இன்னும் நீ தெரிந்துகொள்ளவில்லையே! அந்த சர்ப்பத்தை நீ என்னென்று விரும்பினை? இது உனக்கு மாத்திரமன்றி உன்னைச்சேர்ந்த அனைவர்க்குமே நாசத்தை விளைவிப்பதாகும். மிகுந்த பலமும் வீரமும் பொருந்திய கணக்கற்ற வானரர்கள் லங்கையின்மேல் எதிர்த்து வருவதற்கு முன்பே சீதையை ராமனுக்குக் கொடுத்து விடுவாயாக. இம்மூவுலகிலும் எங்குச்

சென்றபோதிலும் விடாமல் தொடர்ந்து கொல்லக்கூடிய ராம பாணங்கள் லங்கையில் புகுவதற்கு முன்பே சீதையை விட்டு விடுவாயாக." என்று மொழிந்து, பிரகஸ்தனை நோக்கி, "ஓ பிரகஸ்தனே! மிகுந்த வேகமும் கூர்மையும் பொருந்திய ராம பாணங்கள் இன்னும் உன் தேகத்தைப் பிளந்து கொண்டு உள் நுழையாதிருக்கின்றன. ஆனதுபற்றியே நீ உன்னை இங்ஙனம் புகழ்ந்து கொள்கின்றனை.

சேனாதிபதீ! கும்பகர்ணனாவது இந்திரஜித்தாவது ராவணனாவது மகாபார்சுவனாவது மற்றும் எவராவது ராம னுக்கு எதிரில் யுத்தத்தில் நிற்கவல்லரல்லர். நீங்கள் சூரிய னது பாதுகாப்பிலிருப்பினும், தேவதைகளெல்லோரும் உங் களைக் காக்கவரினும், யமனது மடியில் ஏறியிருப்பினும், ஆகாயத்திற் கிளம்பினும், பாதாளத்தில் புகினும் நீங்கள் உயிரோடிருக்கும் வரையில் உங்களை ராமன் விடமாட்டான். கொன்றே தீருவான்.

பிரகஸ்தா! ராம லக்ஷ்மணர்களை எவராலும் கொல்ல முடியாது. ராமன் தருமத்தை முக்கியமாகக் கடைப்பிடித் தொழுகுபவன். யுத்தத்தில் தன்னையும் சாரதியையும் ரக்ஷித்துக் கொண்டே பகைவரை முடிக்கும்படியான மகா ரதன். தவிர, விராதன், கபந்தன் முதலிய மகா சூரர்களான அரக்கர்களையும் மிக எளிதாகக் கொன்ற வீரன். நீ சீக்கிரத் தில் ராம பாணங்களாலடிபுண்டு சாகப்போகிறவனாகையால் உனக்கு இவ்வித மதிமயக்க மேற்பட்டு உன்னையே புகழ்ந்து கொள்கின்றனை. விநாசகாலத்தில் விபரீதபுத்தி உண்டாகு மென்பார்களே; அது உன்னிடத்திலேயே உண்மையாயிற்று.

ராவணனோ நமக்கரசன். எதையும் ஆலோசித்துச் செய்பவனல்லன். அன்றியும், காமம், குரோதம் முதலிய வற்றால் மனநிலைமை தப்பியிருப்பவன். அப்படிப்பட்ட

இவனுக்கு நன்மை செய்யவேண்டியிருக்க, அங்ஙனம் செய்யாமல் அவனது விநாசத்தையே விளைவிக்கவல்ல யோசனைகளைக் கூறி அவன் போகிற வழியே போகிறீர்கள். இதனால் ராக்ஷசர்களனைவர்க்குமே விநாசத்தை உண்டாக்கப் போகிறீர்களே யன்றி வேறில்லை.

ராக்ஷசர்களே! ராவணனை நீண்ட உடலும் கொடிய விஷமுமுள்ள ராம த்வேஷம் என்கிற ஓர் பெரிய சர்ப்பம் சுற்றிக் கொண்டிருக்கின்றது. நீங்கள் அந்த சர்ப்பத்தினின்று இவனை இழுத்து விடுவிப்பீர்களாக. ராவணன் சீதையை ராமனுக்குக் கொடாதிருப்பின் இருக்கட்டும். நான் சொல்லுகிற இவ்வார்த்தையைக் கேளுங்கள். இது லங்கைக்கும் ராவணனுக்கும் அவனைச் சேர்ந்த நமக்கும் நன்மையைத் தரவல்லது. ராவணனது சம்மதியை எதிர்பாராமல் நாமாகவே ராமனுக்கு சீதையைக் கொடுத்து விடுவோம்." என்றனன்.

பதினான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினைந்தாவது ஸர்க்கம்.

### இந்திரஜித்து விபீஷணனைக் கண்டிக்கையில் விபீஷணன் அவனுடைய துர்ப்புத்தியைச் சொல்லி தூஷித்தல்.

உடனே மிகுந்த கோபத்துடன் எழுந்த இந்திரஜித்து, விபீஷணனை நோக்கி "சிற்றப்பனே! நீ கடைசியில் சொன்ன வார்த்தை நடக்கப்போகிறதில்லை யாதலால் பயனற்றது. புலஸ்திய வம்சத்தில் பிறந்த நீ இங்ஙனம் கூறுதல் சரியோ? இந்த வமிசத்தில் நீ ஒருவன் மாத்திரமே பலமும், கீர்த்தியும், முயற்சியும், சாகசத்தன்மையும், மன உறுதியும், கர்வமும் இல்லாதிருப்பவன். ஆகையால் நீ கூறின வார்த்தைகள் உன் சுபாவத்திற்குத் தகுந்தனவே.

ஓ ராக்ஷசா! மூன்று லோகங்களுக்கும் அதிபதியான இந்திரனையும் நான் பூமியில் விழத் தள்ளினேன். எல்லா தேவதைகளும் எனக்குப் பயந்து வருந்தி மூலைக்கொருவராக ஓடிப்போயினர். ஐராவதம் என்னால் தள்ளுண்டு விகாரமான சப்தத்துடன் வீறிட்டுக்கொண்டு தரையில் வீழ்ந்தது. தேவதைகளையும் சிதறடித்த மகா பராக்கிரமசாலியான எனக்கு அந்தச் சிறிய மானிடப்பதர்கள் எம்மாத்திரம்? மிகவும் துர்ப்பலரான அவ்வரசகுமாரர்களை எம்மில் மிகவும் துர்ப்பலனான ஒரு ராக்ஷசனே மிக்க சுலபமாகக் கொன்று விடக் கூடும்." என்றனன்.

இங்ஙனம் இந்திரஜித்து கூறினதைக் கேட்ட விபீஷணன் " அடா! குழந்தாய்! நீ நேற்றுப் பிறந்தவன். நன்மை தீமைகளைப்பற்றி ஆராயும் சக்தி உனக்குக் கிடையாது. 'இளங்கன்று பயமறியாது' என்னும் பழமொழிக்கிணங்க நீ கூறும் வார்த்தைகள் பயனற்றவை. இந்திரஜித்தே! நன்மை பயக்கக்கூடிய என் வார்த்தைகளைக் கேட்டும் நீ அறிவின்மையால் வாய் வந்தபடி பிதற்றுகின்றனையே! ஆகையால் நீ ராவணனுக்குப் பிள்ளையென்னும் பேர் கொண்டு நண்பன்போல் வெளிக்குத் தோன்றும் பகைவனே யாகின்றனை. இங்ஙனம் தந்தையின் விநாசத்திற்கு சம்மதிக்கையால் துர்ப்புத்தியுடைய உன்னைக் கொன்றுவிடவேண்டும். நன்மை தீமைகளை அறியும் விவேகமில்லாத உன்னை இவ்வாலோசனை சபைக்கு அழைத்து வந்தவனையும் கொல்ல வேண்டும். பிரகஸ்தனும், மகாபார்சுவனும் மிகுந்த துர்ப்புத்தி யுடையவர்கள். நீயோ இவ்வளவு அவ்வளவு என்று சொல்லமுடியாத கெட்டபுத்தி யுடையவன். அதனால் தான் மனம் போனபடி பிதற்றுகின்றனை. பயங்கரமான ராமனது பாணங்களை எவன் சகிக்க வல்லன்?" என்றுகூறி ராவணனை நோக்கி "ராஜனே! சீதையை ராமனிடம் கொண்டுபோய்ச்

சமர்ப்பித்து விட்டு நாம் மேல்வரும் வருத்தத்தைத் துறந்து சுகமாக இருப்போமாக" என்றனன்.

பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பதினாறவது ஸர்க்கம்.

## ராவணன் விபீஷணனை அவமானம் செய்ய அவன் நான்கு மந்திரிகளுடன் ஆகாயத்தில் கிளம்பிச் சென்று மீளவும் இதோபதேசம் செய்தல்.

இங்ஙனம் தெளிவான இதவசனங்களைச் சொன்ன விபீஷணனைப் பார்த்து ராவணன் "ராக்ஷசாதமனே! உலகத்தில் 'பங்காளிக்காய்ச்சல்' என்று சொல்லுவதை நான் கேட்டிருக்கிறேன்; அதை இன்றே கண்டேன். பங்காளிகள் தமது தாயாதிகளுக்கு வருத்தம் நேரும்பொழுதெல்லாம் சந்தோஷமுற்றிருப்பார்கள். சமயம் பார்த்து அவர்களைப் படுகுழியில் தள்ளிவிடுவார்கள். தமது அபிப்பிராயங்களை வெளிக்காட்டாமல் மறைவாகவே வைத்துக்கொண்டு நட்புள்ளவர் போலவே நடித்துத் தக்க சமயத்தில் துரோகம் செய்வார்களென்பது பிரசித்தமான விஷயம்.

ஒரு காலத்தில் பத்மவனமென்னும் பெரிய காட்டில் சில யானைகள், தம்மைப்பிடிக்கும்பொருட்டுக் கயிறு கொண்டு வந்தவர்களும், தமது இனத்து யானைகளை வைத்துக் காப்பவருமான சிலமனிதர்களைப்பார்த்து முறையிட்ட வசனங்களை நான்கேள்விப்பட்டிருக்கிறேன். அவற்றை கூறுகிறேன்கேள். அந்த யானைகள் கூறியதாவது 'ஓ மானிடர்களே! எங்களுக்கு நெருப்பினாலும், ஆயுதங்களாலும், கயிறுகளாலும் சிறிதேனும் பயமில்லை. ஆனால் எங்களுடைய இனத்தவையாயிருந்தும் எம்மேல் விசுவாசமின்றி எங்களைப் பிடித்துக் கொடுப்பவைகளும் எமது பங்காளிகளுமான யானைகளாலேயே எமக்குப் பயம் நேரிடுகின்றது. ஏனெனில் அந்த யானை

களேயன்றே உங்களுக்கு எம்மைப் பிடிக்கும் உபாயத்தை அறிவிப்பவை. பசுக்களிடத்தில் சம்பத்திருப்பது போலும், பிராமணர்களிடத்தில் இந்திரியத்தை யடக்கும் தன்மை இருப்பது போலும், ஸ்திரீகளிடத்தில் சபல புத்தி இருப்பது போலும், பங்காளிகளிடத்தில் பொறுமையிருப்பது சகஜம். ஆகவே பங்காளிகளின் பொறுமை காரணமான பயம் அனைவர்க்கு முண்டு' என்கிற வார்த்தைகளைச் சொல்லின.

விபீஷண! நீ எனக்குப் பங்காளி யாகையால், நான் இங்ஙனம் லோகங்களால் பூசிக்கப்பட்டவனுகி, மிகுந்த ஐசுவரியம் பெற்று ராக்ஷசர்களுக்கெல்லாம் தலைவனுய் இருப்பது உனக்குப்பொறுக்க முடியவில்லை. வண்டு புஷ்பங்களிலுள்ள தேனை ஆசையுடன் பருகிவிட்டுப் பிறகு அப்புஷ்பங்கள் தேன் கொடுத்த உபகாரத்திற்காக அங்குச்சிறிதும் நிற்க மாட்டாதல்லவா? அதுபோல் துஷ்டர்களுக்குத் தம்மைப் போஷித்தவர்களிடத்திலும் நல்ல மனம் உண்டாகாது. ஆகவே, நீயும் என்னுல் சகலவிதமான சுகங்களை யநுபவித்தும் என் மேன்மையைப் பொறுதவனுயிருக்கின்றனை.

ராக்ஷசாதமா! நீ தவிர மற்றொருவன் இப்படிப்பட்ட வசனங்களைப் பேசுவானுயின் அவன் இந்த க்ஷணத்திலேயே உயிரை இழந்திருப்பான். நீ குடியைக் கெடுக்கவந்த கோடாரிக்காம்பு. சீ! சீ!! அப்புறம் போவாய்" என்றனன்.

விபீஷணன் இங்ஙனமவன் கூறின இழிவுரைகளைக் கேட்டு அங்கு நிற்கப் பொறுமல் கதையைக் கையிலெடுத்துக் கொண்டு நான்கு ராக்ஷசர்களோடு ஆகாயத்தில் கிளம்பினன். அப்பொழுது அவனுக்கு ராவணனை விட்டு ராமனைச் சரணமடைந்து சுகம்பெறவேணுமென்கிறஎண்ணம் உண்டாயிற்று.

விலகிச்சென்ற விபீஷணன் ஆகாயத்திலிருந்தவண்ணமே ராவணனை நோக்கி "ராஜனே! நீ எனக்கு அண்ணனுகையால்

தந்தையைப்போல் பூஜிக்கத் தகுந்தவன். ஆயினும் நீ தரும மார்க்கத்தில் நிற்கமாட்டாமல் என்மேல் இல்லாத தோஷத்தை ஏறிட்டுப் பேசினை. இதை நான் எள்ளளவும் பொறுக்க மாட்டேன். ராவணா! நான் உன் மேன்மையை விரும்பி நன்றாக ஆலோசித்து உனக்கு நன்மை பயக்கக்கூடிய வசனத்தைக் கூறினும் நீ எமன் வசம் அகப்பட்டு எனது வார்த்தைகளை ஏற்றுக்கொள்ளவில்லை. எரிகிற நெருப்பைப் போல் தகதகவென்று ஜ்வலிப்பவைகளும் பொன்னால் அலங்காரம் செய்யப் பெற்றவையுமான பாணங்களால் ராமன் உன்னை அடிக்கையில் அதைப்பார்க்க என் மனம் பொறுக்க முடியாதிருக்கின்றது. மூத்தவனென்று உனது நன்மையை விரும்பி நான் மொழிந்த வசனங்களை நீ பொறுக்க வேண்டும். நீ உன்னையும் இவ்வரக்கர்களையும் லங்கை நகரையும் பாதுகாத்துக் கொள்வாயாக. உனக்குச் சுபம் உண்டாகுக. நான் சென்று வருகிறேன். என்னைவிட்டு நீ சுகமாய் இருப்பாயாக" என்றனன்.

பதினாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினேழாவது ஸர்க்கம்.

### விபீஷணன் ராமனிடம் போதலும் வானரர்கள் அவனை விரட்டுதலும் ராமன் அவனை அங்கீகரித்து வரவழைத்தலும்.

விபீஷணன் இங்ஙனம் ராவணனுக்குக் கூறிவிட்டு ஒரு முகூர்த்தகாலத்தில் ராம லக்ஷ்மணர்கள் தங்கியிருக்குமிடத்திற்கு வந்து சேர்ந்தனன். ஆகாயத்தில் வந்துகொண்டிருந்த விபீஷணனைக் கண்ட சுக்கிரீவன் நான்கு மந்திரிகளுடன் கூடி வானரர்களுடன் ஆலோசித்து அவர்களைப் பார்த்து "வானரர்களே! அதோ நான்கு ராக்ஷசர்களுடன் ஒரு பெரிய ராக்ஷசன் சமஸ்த ஆயுதங்களையும் தரித்து வருகின்றனன். இவன் நிச்சயமாக நம்மைக் கொல்ல வருகின்றவனேயாவன்"

ன்றதும், வானரர்கள் அவனை நோக்கி "ராஜனே! எங்களுக்குக் கட்டளை இடுவாயாக. இவ்வற்பர்கள் மறுபடி ஆகாயத்திலிருந்து கிளம்ப முடியாதபடி அவர்களை நொடிப்பொழுதில் அடித்து வீழ்த்துகின்றோம்" என்றனர்.

இவர்கள் இங்ஙனம் பேசிக்கொண்டிருக்கையில் விபீஷணன் 'எவர் என்ன சொன்னபோதிலும் ராமன் ரக்ஷிக்காமல் கைவிடான்' என்னும் நம்பிக்கையால் அவ்வார்த்தைகளைப் பாராட்டாமல் சமுத்திரத்தின் வடகரைக்கு வந்து ஆகாயத்திலேயே சிறிதும் பயமின்றி நிலையாக நின்றனன். அப்பொழுது அவன் அனைவர்க்கும் கேட்கும்படி பெரிய குரலில் "ஓ வானரோத்தமர்களே! துன்மார்க்கனான ராவணனுக்குத் தம்பியான நான் விபீஷணனென்னும் பெயருடையவன். அந்த ராவணன் ஜனஸ்தானத்தில் ஜடாயுவைக்கொன்று சீதையை அபகரித்து வந்து லங்கையில் சிறை வைத்திருக்கின்றனன். அவளோ இரவும் பகலும் ராமனையே நினைத்து உருகுகின்றனள். 'சீதையை ராமனுக்குத் திருப்பிக்கொடுத்து விடு' என்று நான் அவனுக்குப் பல நியாயமான வார்த்தைகளால் தெரிவித்தும் அவன் காலனால் தூண்டப்பட்டு என் வார்த்தையை ஏற்றுக்கொள்ளவில்லை. மேலுமவன் என்னை வெறுத்து விரட்டி ஓட்டிவிட்டனன். ஆகையால் நான் ராமனையே சரணம் புகுந்தவனானேன். ராமனுக்கு எனது வரவைத் தெரிவிப்பீர்களாக" என்றனன்.

உடனே சுக்கிரீவன் சீக்கிரமாக ராமனிடம் சென்று "ராமா! விபீஷணனென்பவன் நான்கு ராக்ஷசர்களுடன் வந்து உன்னைச் சரணமடைவதாகக் கூறுகின்றனன். இவன் ராவணனிடமிருந்து வந்திருப்பதால் இவனிடம் நம்பிக்கை வைக்கலாகாது. இவன் ராவணனால் அனுப்பப்பட்ட வேவுகாரனாகவிருப்பான். வேவுகாரர்கள் தங்கள் சொந்த பெயர்களை மறைத்துத் தங்கள்மேல் எதிரிகளுக்கு நம்பிக்கை

யுண்டாகும் வண்ணம் மிகவும் இனிமையாகப்பேசி அநு கூலர்போல் நடித்து நம்மில்புகுந்து சமயம் பார்த்து நமக்குள் ஒருவர்மேல் ஒருவர்க்கு மித்திர பேதம் விளையச்செய்வார் கள். அந்த வகையில் இவ்விபீஷணன் நம்மை வஞ்சிக்க வந்த வனே. இவன் ராவணனது தம்பியாகையால் நமக்கு நிச்சய மாகத் தீங்கிழைப்பான். 'சரணமடைந்தவனைக் கைவிட லாமோ?' வென்னில் இவன் ராவணனால் ஏவப்பட்ட வேவு காரனாகையால் இவனது சரணாகதி மேல்வேஷமாகும். இவன் வேவு பார்க்க மாத்திரம் வந்தவனல்லன். சமயம் பார்த்து உன்னையும் லக்ஷ்மணனையும் கொல்லும்படி ராவணனால் ஏவப்பட்டு வந்திருக்கவுங் கூடும். இவனைக் கொன்று விடுவதே நலம்" என்றனன்.

இங்ஙனம் ராமனிடத்திலுள்ள மிகுந்த அன்பினால் கூறின சுக்கிரீவனது வார்த்தைகளைக் கேட்ட ராமன் இந்த சுக்கிரீவன் நம்மேலுள்ள பிரீதியால் கண்மண் தெரியாமல் நமது வார்த்தைகளைக் கேட்கமாட்டான் என்பதை நினைத்து அநுமான் முதலிய வானர வீரர்களைப் பார்த்து "நீங்கள் சுக்கிரீவன் கூறினதைக் கேட்டீர்களல்லவா? விபீஷணன் விஷயத்தில் எது செய்வது யுக்தமென்பதை நன்கு ஆலோ சித்துத் தெரிவிப்பீர்களாக" என்றனன்.

இப்படி ராமனால் வினவப்பட்ட வானரர்கள் அவனை நோக்கி "ராமா! மூன்று லோகங்களிலும் உனக்குத் தெரியா தது எதுவுமில்லை. அப்படியிருந்தும் வானரர்களுக்கு நண்பன் என்னும் புகழை உலகத்தில் வெளிப்படுத்துவதற் காக எங்களை இங்ஙனம் வினவுகின்றனை போலும். நீயோ 'தஞ்சமென்று அடைந்தவனை அஞ்சேல்' என்று கூறி அபய மளிக்கும் தன்மையன். எதையும் ஆலோசித்துச் செய்பவன். கணக்கில்லாத கலியாண குணங்களையுடையவன். உனக்கு நாங்கள் என்ன கூறவல்லோம்? ஆனாலும் உனது மந்திரிகள்

ஒவ்வொருவரும் தம் தம் அபிப்பிராயத்தைத் தக்க காரணங்களுடன் கூறுவார்களாக" என்றனர்.

பிறகு இளவரசனுன அங்கதன் ராமனைப் பார்த்து "இவன் உன்னைச் சரணமடைந்தவனுயினும் பகைவனிடத்திலிருந்து வந்தவனுதலால் நம்பத் தகுந்தவனல்லன். நாம் விபீஷணனைப் பரீக்ஷிக்காமல் ஏற்றுக்கொள்ளலாகாது. குணம் உளதென்று ஏற்படுமாயின் அங்கீகரிக்கலாம். தோஷமுடையவன் என்று ஏற்படுமாயின் விட்டுவிட வேண்டும்" என்றனன்.

பிறகு சரபனென்பவன் அங்கதனது அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்ளாமல் ஒரு சாரனை (வேவுகாரன்) விபீஷணனிடம் அனுப்பி அவனது குணதோஷங்களைப் பரீக்ஷித்துப் பிறகு நியாயப்படி அவன் தோஷமற்றவனுயின் அவனை ஏற்றுக்கொள்ளலா மென்றனன்.

பிறகு ஜாம்பவான் ராமனைப் பார்த்து "ராமா! விபீஷணனே ராவணனின் தம்பி. அவன் வந்த காலமும் தேசமும் தகுந்தவைகளல்ல. ஆகையால் இவனை நம்பலாகாது" என்றனன். பிறகு மைந்தன் அங்கதனுடைய அபிப்பிராயத்தைத் தழுவிப்பேசினன்.

கடைசியாக அனுமான் பேசத்தொடங்கி" ராமா! உனக்கிருக்கும் புத்தியோ பிருஹஸ்பதிக்கும் கிடையாது. ஆயினும் கேவலம் வானரனுன என்னை கௌரவித்து என் அபிப்பிராயத்தைச் சொல்லும்படி கேட்டபடியால் கூறுகிறேன். இதுவரை உனது மந்திரிகள் கூறியது ஒன்றுகூட சரியல்லவென்பது எனதபிப்பிராயம். ஏனெனில் குண தோஷங்களைப் பரீக்ஷித்த பின் அவனுடன் உரையாட வேண்டுமென்றும், உரையாடின பின்பே குணதோஷங்களைப் பரீக்ஷிக்கவேண்டுமென்றும் கூறின அபிப்பிராயங்கள் ஒன்றையொன்று பற்றியிருக்கையால் இந்த யோசனை சரிப்படாது.

தூரத்திலிருப்பவனுக்கே வேவுகாரனையனுப்பி ரகசிய மாக அவனது ரகசியங்களை யறிவது யுக்தம். சமீபத்தி லிருக்கின்ற விபீஷணனுக்குச் சாரனையனுப்புவது சரியல்ல. மேலும் அவன் வந்த தேசகாலங்களும் சரியானவையென்றே எனக்குத் தோன்றுகிறது. விபீஷணன் உன்னிடத்திலுள்ள குணத்தையும் ராவணனிடத்திலுள்ள தோஷத்தையும் ஆராய்ந்து, ராவணனுக்கு நல்ல வார்த்தை சொல்லியும் அவன் கேளாமையால் அவனை வெறுத்து, உன்னிடத்தில் கரதூஷண வதம், வாலியைக்கொன்றது முதலிய பராக்கிர மங்களையும் கண்டு புத்தியில் ஆலோசித்ததனால் உன்னைப் பணிந்துய்யவேண்டி இப்போது இங்குவந்து சேர்ந்தது அவ னுக்குத் தகுந்ததேயாகும்.

மேலும் இவனது முகத்தில் புழுக்கமாவது தழதழப்பா வது ஒன்றுமில்லை. வானரர்கள் மரம் செடிகளைக் கொண்டு மேல் விழுவதைக் கண்டும் இவர்கள் விரோதிகளென்று சந்தேகம் கொள்ளாமலே வந்தனன். கெட்ட எண்ண முடையவன் இங்ஙனம் மனத்தெளிவுடன் எதிர்கொண்டு வரமாட்டான். இவன் முகம் தெளிவுற்று சுத்தமான வார்த்தைகளைப் பேசுகிறான்.

ஆனால் 'தன் பந்துக்களையும் ஐசுவரியங்களையும் விட்டு வெறுமனே நமது நட்பை மாத்திரம் எதிர்பார்த்து வரு வானோ? இதற்கு ஒரு முக்கிய காரணம் இருக்கவேண்டுமே' என்னில், நீ ராவணனைக் காட்டிலும் பலவானான வாலியை உன்னைப்பற்றின சுக்கிரீவனுக்காக ஒரே பாணத்தினால் கொன்றதையும், பிறகு வானர ராஜ்ஜியத்தில் நீ ஆசை வைக்காமல் அதில் அவ்வாலியின் தம்பிக்குப் பட்டங் கட்டினதையும் இவன் கேட்டிருக்கையால் அங்ஙனமே தன தமையனைக்கொன்று சுக்கிரீவனைப்போல் உன்னைப் பற் றின தனக்கு ராக்ஷச ராஜ்ஜியத்தைக் கொடுப்பாய் என்கிற

நினைவினால் இராஜ்ஜியத்தை விரும்பியே இங்கு வந்தவன். ஆகையால் இவனை ஏற்றுக்கொள்ளலாம்" என்றனன்.

பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினெட்டாவது ஸர்க்கம்

### ராமன் தகுந்த காரணம் சொல்லி விபீஷணனை அழைத்துக் கொண்டுவரக் கட்டளையிடுதல்.

பிறகு ராமன் பேசத் தொடங்கி "வானர சிரேஷ்டர்களே! தஞ்சமென்று அடைந்தவனை அவனிடம் எவ்வளவு தோஷங்களிருப்பினும் நான் எவ்விதத்திலும் கைவிடமாட்டேன். அங்ஙனம் செய்வது பெரியோர்களால் புகழத்தக்கதேயன்றி நிந்திக்கப்படுவதன்று" என்றனன்.

உடனே சுக்கிரீவன் ராமனைப் பார்த்து "ராமா! இவனோ ராவணனது தம்பி. அவனால் சகல சுகங்களையும் பெற்று அநுபவித்து வந்தவன். இப்படிப்பட்டவன் அண்ணனுக்கு மிகுந்த ஆபத்தான சமயத்தில் அவனைக் கைவிட்டு இங்கு ஓடி வந்தனனே! இவனைப்போன்ற நன்றி கெட்டவன் ஒருவனுமில்லை. ஆகையால் இவனை ஏற்றுக்கொள்வது ஆபத்துக்கிடமாகும்" என்றனன்.

இதைக் கேட்ட ராமன் "சுக்கிரீவா! அண்ணனைவிட்டு இவன் ஓடி வந்ததில் நீதி சாஸ்திரத்தில் சொல்லிய ஒரு நியாயம் உளது. அது என்னென்னில் பங்காளிகளும் அக்கம் பக்கத்து தேசத்திலுள்ள அரசர்களும் ஆபத்து நேரும் பொழுது மேல் விழுந்தடிப்பார்களாகையால் பகைவரென்றே கூறப்படுவார்கள். இவ்விபீஷணனும் ராவணனுக்கு உடன் பிறந்த பங்காளியாகையால் அண்ணனுக்கு ஆபத்து நேர்ந்திருக்கிற இப்பொழுது அவனைக் கொல்லும்பொருட்டு இவ்விடம் வந்தனன். அல்லது இவ் விபீஷணன் அனுமான்

சொன்னபடி ராஜ்ஜியத்தின்மேல் ஆசையுடையவனாயும் இங்கு வந்திருக்கக்கூடும்.

இங்ஙனம் ராவணனைக் கொல்வித்து லங்கைக்குத் தானே அரசனாகலாம் என்கிற எண்ணத்துடன் வந்திருக்கின்ற விபீஷணன் நம்மை அநுசரித்தாலல்லாமல் அவனெண்ணம் நிறைவேற வழியில்லையாகையால் அவன் நமக்கு அபகாரம் செய்யமாட்டான். மேலும் இவனது குரலானது மிகுந்த பேரொலியுடன் செவிப்படுகின்றமையால் பலவானான ராவணனால் இவனுக்கு பயம் சம்பவித்திருக்கிறதென்று தெரிகிறது. ஆகையால் இவன் ஏற்றுக்கொள்ளத் தகுந்தவனே. இவனிடத்தில் சிறிதும் சந்தேகம் கொள்ளவேண்டிய அவசியமில்லை" என்றனன்.

ராமன் இங்ஙனம் மொழிகையில் சுக்கிரீவன் லக்ஷ்மணனும் தானுமாக எழுந்து அவனை வணங்கி "ராமா! இந்த ராக்ஷசன் ராவணனால் தூண்டப்பட்டு இவ்விடம் வந்து தன் உண்மையை மறைத்துக்கொண்டு நமக்கு நம்பிக்கையை விளைவித்து, நாம் ஏமாறி இருக்கையில் நம்மைக் கொல்லவிருக்கின்றனன். ஆகையால் இவனை இவனது நான்கு மந்திரிகளுடன் கொன்றே தீரவேண்டும்" என்றனன்.

ராமன் அவனுக்கு சமாதானம் சொல்லத் தொடங்கி "சுக்கிரீவா! இந்த ராக்ஷசன் துஷ்டனாயினும் சரி. நல்லவனாயினும் சரி. இவனால் என்னையும் என்னைச் சேர்ந்தவர்களையும் ஒன்றும் செய்ய முடியாது. குரக்கரசனே! இப்பூமண்டலத்திலுள்ள சமஸ்த ராக்ஷசர்களும் ஒன்றாகக்கூடி என்மேல் எதிர்த்து வரினும் எனக்கு இச்சை உளதாயின் ஆயுதங்களில்லாமலே விரல் நுனியால் எளிதில் கொன்றுவிடுவேன்.

முன்பொரு காலத்தில் ஆண் பெண்ணாகிய இரண்டு புறாக்கள் ஓர் மரத்தில் இனிது வசித்து வந்தன. ஒரு நாள்

வேடனொருவன் இரைதேடிக்கொண்டிருந்த பெண் புறுவைக் கொன்று அதைத் தன் வலைப் பையில் வைத்துக்கொண்டு நடுக்காட்டில் வந்துகொண்டிருந்தபொழுது களைத்து ஓர் மரத்தின்கீழ் தங்கினன். தற்செயலாக அம்மரமே அவ் விரண்டு புறுக்களும் வசித்துவந்த மரமாய் இருந்தது. அதில் தன் மனைவியை இழந்து மிகவும் பரிதபித்துக்கொண் டிருந்த ஆண் புறுவானது வேடன் கீழே வந்ததையும் அவ னது பையில் தன் மனைவியின் உடல் இருந்ததையும் கண்டு அவனிடம் கோபங்கொள்ள வேண்டியதற்கு மாருக அவன் மிகவும் களைத்துத் தன் மரத்தின்கீழ் வந்ததற்காக அவனைக் குளிர்காயச் செய்வதற்காக தீ மூட்டி அவனது ஆகாரத்திற் காகத் தன் சரீர மாமிசத்தையும் கொடுத்தது. கேவலம் ஓர் புறு தன்னை நோக்கி வந்த வேடனை அங்கீகரித்ததல்லவா? இனி என்னைப் போன்றவன் என்ன செய்யவேண்டுமோ, அதை நீயே ஆலோசித்துச் சொல்வாயாக.

கையைக் கூப்பிக்கொண்டு அடைக்கலம்புக வந்தவன் விரோதியாயினும், நண்பனுயினும், கபடமுடையவனுயினும் மற்ற எவனுயினும் அவனைப் பாதுகாக்கவேண்டியதே நியாய மாகும். அப்படிச் செய்யாவிடில் பாபம் சம்பவிக்கும். ஒருவன் ஒருவனை 'ரக்ஷிக்கவேண்டும்' என்று சரணம் அடை கையில் அவன் ரக்ஷிக்கவல்லவனுய் இருந்தும் அவனை ரக்ஷிக் காமல் பார்த்துக்கொண்டிருப்பானுயின், அதனுல் அவன் தன் பகைவனுல் நாசம் அடைவானுயின் அவன் (அந்த ரக்ஷிக்காத வன்) பலகாலமாக சம்பாதித்த புண்ணியங்களையெல்லாம் அவன் பெற்று நல்லகதி அடைவான். ஆகையால் சரண மடைந்தவனை ரக்ஷிக்காவிட்டால் பெரிய தோஷம் சம்பவிக் கும். எனக்கு நரகம் நேரும்.

ஆகையால் வானரோத்தமனே! 'சரணம்' என்ற பொழுதே அவனுக்கு நான் அபயம் கொடுத்தாய்விட்டது

அவன் விபீஷணனாயினும், விபீஷணை வேடம்பூண்ட ராவணனேயாயினும் நான் அவனை ரக்ஷித்தே தீருவேன். உன்னையே புருஷகாரமாகக்கொண்டு அவன் வந்தமையால் நீயே சென்று அவனை அழைத்து வருவாயாக" என்றனன்.

இங்ஙனம் ராமன் கூறினதைக் கேட்ட சுக்கிரீவன் நன்கு மனம் தெளியப்பெற்று ராமனது குணத்தைவியந்து அவனைப் பார்த்து "ராமா! நீ தர்மசூக்ஷ்மங்களை அறிந்தவன். சர்வலோக ரக்ஷகன். பிறர்க்கு சுகத்தை விளைவிப்பதற்கே பிறந்தவன். உனது கருத்து மிகவும் புகழத்தகுந்தது. நீ கூறின காரணங்கள் மிகவும் நியாயமானவைகளாய்க் காணப்படுகின்றன. எனது மனமும் விபீஷணனைத் தூயவனென்றே நம்புகின்றது; ஆகையால் நான் சென்று விபீஷணனை அழைத்து வருகிறேன்" என்று கூறி விபீஷணனிடம் சென்று ராமன் அவனுக்கு அபயம் கொடுத்ததைக் கூறி அவனை ராமனிடத்திற்கு அழைத்து வந்தனன்.

பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பத்தோன்பதாவது ஸர்க்கம்.

### விபீஷணனை ராமன் லங்கா ராஜ்ஜியத்தில் பட்டாபிஷேகம் செய்தலும் சமுத்திரத்தைத் தாண்ட ஆலோசித்தலும்

பிறகு விபீஷணன் தனது நான்கு மந்திரிகளுடன் ராமனது பாதாரவிந்தங்களில் விழுந்தனன். அவன் "ராமா! ராவணனது தம்பியான நான் அவனால் அவமதிக்கப்பட்டபடியால் சமஸ்த பூதங்களுக்கும் ரக்ஷகனான உன்னைச் சரணமடைந்தேன். நான் லங்கையிலுள்ள எனது மனைவி மக்களையும் ஐசுவரியங்களையும் விட்டு நீயே கதியென்று வந்தவன். இனி என் பிராணனும், என் சுகங்களும் உனதீனமே" என்றனன்.

ராமன் விபீஷணனை நோக்கி "சரணம் என்றபொழுதே உன்னை நான் ஏற்றுக்கொண்டிருக்கவேண்டும். இதுவரையில் தாமதம் செய்த குற்றத்தைப் பொறுப்பாயாக" என்று இனிய உரைகளால் சமாதானப் படுத்தி அவன் மனத்தைக் குளிரச் செய்து அவனை மிக்க ஆதரத்துடன் பார்த்துக் கொண்டே "எனக்கு ராக்ஷசரது பலாபலங்களை உண்மை யாகச் சொல்லவேண்டும்" என்று வினவினன்.

விபீஷணன் கூறத்தொடங்கி "ராமா! ராவணன் பிரமதேவனிடமிருந்து பெற்ற வரத்தின் மகிமையால் கந்தருவர்களாலும், அசுரர்களாலும், ராக்ஷசர்களாலும், மற்றுமுள்ள சமஸ்தப் பிராணிகளாலும் அவன் கொல்ல முடியாதவன். அவனுக்குப் பின்பு பிறந்தவனான கும்பகர்ணன் தேவேந்திரனைப்போன்ற வீரியமும் பலமும் உடையவன். ராவணனது சேனாதிபதி பிரகஸ்தனாவன். ராவணனது குமாரனான இந்திரஜித்து எப்பொழுதும் பாணப் பிரயோகம் செய்து கொண்டிருப்பவனாகையால் நாணடிபடாதிருக்குமாறு கை விரல்களுக்கு உடும்புத்தோலால் செய்த கவசத்தையும், உடம்பிற்கு பிளக்கமுடியாத பெரிய கவசத்தையும் பூண்டிருப்பான். யுத்தத்தில் பகைவர்களது கண்களுக்குப் புலப்படாமலே அவர்களைக் கொல்லும் திறமை யுடையவன். மகோதரன், மகாபார்சுவன், அகம்பனன் என்கிற இம்மூன்று பேரும் அவனது சேனாதிபதிகள். மாயச்செயல்களை யுடையவரும் மிகவும் பலிஷ்டர்களுமான இப்படிப்பட்ட ராக்ஷசர்கள் பதினாயிரம் கோடிப் பேர் லங்கையில் இருக்கிறார்கள். ராவணன் இவர்களுடைய சகாயத்தால் லோக பாலர்களையும், தேவதைகளையும் தோல்வி யடையச் செய்தனன்." என்றான்.

பிறகு ராமன் விபீஷணனை நோக்கி "நான் ராவணனையும் அவனைச் சேர்ந்த சமஸ்தமான ராக்ஷசர்களையும் கொன்று லங்கைக்கு உன்னை அரசனாக்க விரும்புகிறேன். இந்த

ராவணன் பாதாளம் புகினும், தனக்கு வரங்கொடுத்த பிரமனது லோகம் சென்றாலும், என்னிடமிருந்து பிராணனைத் தப்புவித்துக்கொள்ள வல்லனல்லன். நான் ராவணனை அவனது கூட்டத்தாருடன் கொல்லாமல் அயோத்திக்குப் போகேன். இங்ஙனம் கீர்த்தியையுடைய எனது தம்பிமார் மூவர் மேலும் ஆணையிடுகிறேன்" என்றனன்.

ராமன் இங்ஙனம் கூறின மொழிகளைக் கேட்ட விபீஷணன் அவனைத் தலை சாய்த்து வணங்கி "நீ ராக்ஷசர்களைக் கொல்லும்பொழுது நான் சகாயம் செய்து என் பலமுள்ளவளவும் பகைவர்களை எதிர்த்துச் சண்டை செய்கிறேன்" என்றனன். இங்ஙனம் மொழிந்த விபீஷணனை ராமன் அழுந்தக் கட்டியணைத்து சந்தோஷமுற்று லக்ஷ்மணனைப் பார்த்து "சமுத்திரத்தினின்று தீர்த்தம் கொண்டு வருவாயாக. அந்த நீரினால் விபீஷணனை ராக்ஷச ராஜனாக எனது விருப்பத்தின்படி அபிஷேகம் செய்வாயாக" என்றனன். உடனே லக்ஷ்மணன் வானரர்களினிடையில் விபீஷணனை ராக்ஷச ராஜனாக அபிஷேகஞ் செய்தனன்.

பிறகு அனுமானும் சுக்கிரீவனும் ஏகாந்தத்தில் விபீஷணனை நோக்கி சமுத்திரத்தைத் தாண்டக்கூடிய உபாயத்தைப்பற்றி ஆலோசனை கூறுமாறு கேட்டனர். விபீஷணன் அவர்களை நோக்கி "ராமன் சமுத்திர ராஜனைச் சரணமடைய வேண்டும். இம்மகா சமுத்திரம் ராமனது மூதாதையான சகரனால் தோண்டுவிக்கப்பட்டு அளவிடமுடியாதபடி வளர்ந்திருக்கிறது. ஆகையால் சமுத்திர ராஜன் அந்த உபகாரத்தை நினைத்து ராம காரியமென்று அறிந்து தன்னைத் தாண்டும்படியான வழியைக்கூறுவான்" என்றனன்.

சுக்கிரீவன் உடனே ராமனிடம் சென்று விபீஷணனுடைய அபிப்பிராயத்தைக் கூறினன். ராமன் அக்கருத்

துக் கிசைந்து சமுத்திரத்தின் கரையில் தர்ப்பைகளைப் பரப்பி அதன்மேல் படுத்துக்கொண்டனன்.

பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இருபதாவது ஸர்க்கம்.

ராமன் சைன்னியங்களுடன் சமுத்திர தீரத்திற்கு வந்ததை ராவணன் அறிந்து, சுக்கிரீவனை ராமனிடத்திலிருந்து வேறுபடுத்த சுகனை அனுப்புதல்.

பிறகு ராவணனுடைய சாரனாகிய (வேவு பார்ப்பவன்) சார்த்தூலன் என்னுமரக்கன் இக்கரைவந்து வானர சைன்னியங்களையெல்லாம் உள்ளபடி கண்டு மீளவும் வேகமாக லங்கைக்குச்சென்று ராவணனைப் பார்த்து "அதோ குரங்குகளும் கரடிகளும் நிறைந்த ராம சைன்னியம் ஆழமும் விசாலமுமான இரண்டாவது சமுத்திரம்போல் விளக்கமுற்று லங்கையின்மேல் எதிர்த்து வருகின்றது. ராம லக்ஷ்மணர்கள் சமுத்திரக் கரையில் இறங்கியிருக்கின்றனர். ராஜனே! நான் சாமான்யமாகப் பார்த்து வந்தேன். கண்ணுக்கெட்டாத தூரம்வரை ஒரே குரங்குமயமாக விருக்கின்றது. உள்ளபடி அவர்களின் எண்ணிக்கையை அறிந்துகொள்ள எவனையேனும் அனுப்புவாயாக" என்றனன்.

உடனே ராவணன் சுகனென்னும் ராக்ஷசனைப் பார்த்து "நீ சுக்கிரீவனிடம் சென்று நான் சொன்னதாகக் கூறுவாயாக. 'வானர ராஜனே! நீ வீணில் அற்பனான ராமனுடன் கூடி என்னோடு விரோதம் வைத்துக்கொள்ளலாகாது. எனக்கும் உனதண்ணனான வாலிக்கும் மிகுந்த நட்புண்டு. அதுபற்றி நீ எனக்குச் சகோதரனாயினை. தவிர நீ பிரமதேவனது குமாரனான ருக்ஷராஜஸ்ஸின் புதல்வனாகையால் எனக்கு நெருங்கிய உறவினனுமாவாய், ஆகையால் ராமனைவிட்டு என்னோடு நட்புக்கொள்வதே உனக்கு உரியதாகும். நீ

வெறுமனே கிஷ்கிந்தைக்கு உனது சைன்னியங்களுடன் திரும்பிச் செல்வாயாக. உன்னாலும் ராமனாலும் மற்ற தேவதைகள், கந்தருவர்கள் முதலியவர்களாலும் லங்கையில் பிரவேசிக்க முடியாது. ஆகையால் நீ வீணில் அவமான மடையாமல் வந்த வழியே செல்வாயாக' என்று தெரிவித்து வருக" என்றனன்.

உடனே சுகன் ஓர் பக்ஷியினுருவம் தரித்து ஆகாயத்தில் கிளம்பி சுக்கிரீவன் இருக்கும் இடத்திற்கு வந்தனன். அவன் ஆகாயத்திலிருந்துகொண்டே சுக்கிரீவனைப் பார்த்து ராவணன் சொன்ன வார்த்தைகளையெல்லாம் ஒன்றும் விடாமல் சொல்லினன். அவன் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது அவன்மேல் கோபங்கொண்ட வானரர்கள் பலாத்காரமாக அவனைப் பிடித்து ஆகாயத்தினின்று கபிலென்று விழும்படி பூமியில் தள்ளி முட்டிகளால் குத்திச் சிறகுகளையுடைய இறக்கைகளை முறிக்க முயன்றனர்.

இதனால் மிகவும் வருந்தின சுகன் பயத்துடன் உடல் நடுங்க ராமனைப் பேர் சொல்லியழைத்து "ராமா! உனக்குத் தூதுவர்களைக் கொல்லுவது நியாயமாகுமோ? இவ்வானரர்கள் என் இறகுகளை முறித்ததன்றி என்னைக் கொல்லவும் விரும்புகின்றனர். அங்ஙனம் வேண்டாமென்று ஆஞ்ஞாபித்து என்னை விடுவிப்பாயாக" என்றனன்.

பிறகு ராமனது கட்டளையினால் விடுபட்ட சுகன் மீளவும் சுக்கிரீவனை நோக்கி "சுக்கிரீவா! ராவணனது மொழிகளுக்கு உனது பதிலை நான் தெரிந்துகொள்ளாமல் செல்வேனாயின் அவன் என்னைக் கொன்றுவிடுவான். ஆகையால் அவனுக்கு நான் கூறவேண்டியதை சீக்கிரம் சொல்வாயாக" என்றனன்.

சுக்கிரீவன் அவனை நோக்கி "நீ ராவணனிடம் சென்று நான் சொன்னதாகச் சொல்லுக;—'நீ எனக்கு பந்துவல்ல,

நண்பனுமல்ல. நீ எனக்கு எவ்வித உபகாரமும் செய்ததில்லை. ஆகையால் சகோதரன் எப்படியாவாய்? எனது நண்பனை ராமனுக்கு நீ விரோதியாதலால் எனக்கும் நீ விரோதியே. வாலி எனது பகைவனாகையால் அவனது நண்பனைதுபற்றி யும் நீ எனக்கு விரோதி. லங்கையில் என்னால் புகமுடியாது என்கிறாய். உன்னை வெல்ல ஒருவர்க்கும் சாத்தியமில்லை யென்கிறாய். மூடனான உனது பேச்சுக்கள் பயனற்றவை. நீ சூரியமண்டலம் சென்றபோதிலும், தேவதைகள் தேவேந் திரனுடன்கூடி உன்னைப் பாதுகாக்கவரினும், நீ பாதாளத்தில் புகினும் நீ ராமபாணத்திற்குத் தப்பிப் பிழைக்கமாட்டாய்; சீக்கிரத்தில் சமுத்திரத்தைத் தாண்டி லங்கையை வளைத்து உன்னையும் உன் பந்துமித்திரர்களையும் நாசம்செய்யப் போகி றேன்.' என்று ராவணனிடம் கூறுவாயாக" என்றனன்.

பிறகு அங்கதன் சுக்கிரீவனைப் பார்த்து "இவன் இரா வணனது தூதனல்லன்; வேவுபார்க்க வந்தவன். இவன் நமது சேனைகளின் நிலைமையை யெல்லாம் கண்டுகொண்ட னன். ஆகையால் இவனை லங்கைக்குப் போகவிடாமல் தண் டிக்க வேண்டும்" என்றனன்.

உடனே சுக்கிரீவனது கட்டளையின்படி வானரர்கள் ஆகாயத்திற் கிளம்பி, அந்த சுகன் அலறிப் புலம்புமாறு அவனைப் பிடித்துக் கீழே தள்ளி சிறகுகளை முறித்து, கண் களைப் பிடுங்க முயன்றனர். சுகன் ஓ வென்று கதறி ராமனை யழைத்து "ராமா! தூதனான என்னை இவர்கள் துன்புறுத்துகிறார்கள். நான் உயிரை விடுவேனாயின் நான் இதுவரையில் செய்த பாபங்களெல்லாம் உன்னையே சேரும்" என்று கூறி ஓலமிட்டனன். ராமன் அவனது அழுகுரலைக் கேட்டு அவனை விட்டுவிடும்படி வானரர்களுக்குக் கட்டளை இட்டனன்.

இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்தோராவது ஸர்க்கம்

## ராமன் தர்ப்பசயனத்தில் மூன்று இரவுகள் இருந்து ஆராதித்தும் சமுத்திர ராஜன் வரக்காணுமையால் பாணப்பிரயோகம் செய்ய முயலுதல்.

பிறகு ராமன் கடலைச் சரணமடையவனுப் தருப்பைகளைப் பரப்பிக் கடலரசனுக்கு அஞ்சலிசெய்து கையைத் தலையணையாக வைத்துக்கொண்டு படுத்துக்கொண்டனன். "இப்பொழுது நான் சமுத்திர ராஜனை வழிவிடும்படி வணங்கி வேண்டிக்கொள்ளுகிறேன். என் சரணுகதிக்கு இவன் இசைந்து வழிவிடுவானுயின் சமுத்திரத்தை தாண்டுகிறேன். இல்லையாயின் இந்த சமுத்திரத்தின் கரையிலேயே உயிர் துறந்து விடுகிறேன்." என்று ராமன் மனதில் எண்ணி ஸ்னுனுதிகளால் சரீர சுத்திசெய்துகொண்டு சாஸ்திரங்களில் சொல்லிய விதிப்படி மௌன விரதத்துடன் சமுத்திர ராஜனை தியானித்தவண்ணம் தருப்பைகளின்மேல் படுத்துக் கொண்டனன்.

இங்ஙனம் மூன்று இரவுகள் சென்றும் சமுத்திர ராஜன் வந்து முகங்காட்டவில்லை யாதலால் ராமன் மிகுந்த கோபத்துடன் லக்ஷ்மணனைப் பார்த்து "லக்ஷ்மணு! மிகுந்த கர்வமுடைய சமுத்திர ராஜன் இன்னும் தன்னைக் காட்டாதிருக்கின்றனன். இனிய வசனங்களால் இவனை வணங்கி ஆராதித்தும் இவன் மனமிரங்கவில்லை. ஆகையால் வில்லையும் கொடிய சர்ப்பங்கள்போன்ற பாணங்களையும் கொண்டுவருவாயாக. சமுத்திரத்தை முழுவதும் வற்றச்செய்து விடுகிறேன். வானரர்கள் இதைக் கால்நடையாகவே கடந்து செல்வார்களாக. இதோ இந்த மகாசமுத்திரத்தையும் அதில் நிறைந்திருக்கும் தானவர்களையும் கலக்கிப் பாழ்செய்துவிடுகிறேன்" என்றனன்.

இங்ஙனம் மொழிந்து ராமன் பயங்கரமான வில்லை இடையில் முஷ்டியால் கெட்டியாகப் பிடித்து உலகத்திலுள்ள ஜந்துக்களெல்லாம் பயந்து கிடுகிடுவென்று நடுங்க, தேவேந்திரன் வஜ்ஜிராயுதங்கள் பலவற்றைப் பிரயோகிப்பது போல் பயங்கரமான பாணங்களைப் பிரயோகித்தனன். அந்த சிறந்த பாணங்கள் மிகுந்த வேகமுடையவையாகிப் பேரொளியுடன் தக தகவென்று ஜ்வலித்துக்கொண்டு சர்ப்பங்கள் பயந்து வருந்தும்படி சமுத்திர ஜலங்களில் பிரவேசித்தன. உடனே சமுத்திரம் கரையோரத்தில் பெரிய பெரிய அலைகள் வரிசை வரிசையாக மேல்கிளம்பப் பெற்று விளங்கியது. நடுவில் பாணம் புகுந்திருக்கையால் புகை உண்டாகப்பெற்றும், பாணத்தினுடைய நெருப்பினால் சோஷிப்பதுமாய் இருக்கையால் அலைகள் சுழித்துக் கொண்டிருந்தன. பாணங்கள் பாதாளம் வரை நுழைகையால் சமுத்திரத்திலுள்ள சர்ப்பங்கள் வாயால் விஷத்தைக் கக்கிக்கொண்டு ஜ்வலிக்கின்ற முகமுடையவைகளும் கண்கள் மினுமினுக்கப் பெற்றவைகளுமாகி மிகவும் வருத்தமுற்றன. அங்ஙனமே பாதாளத்திலுள்ள தானவர்களும் பீடிக்கப்பட்டனர்.

இன்னும் சமுத்திரத்திலுள்ள ராக்ஷசர்களும் பெரிய மீன்களும், முதலைகளும், சர்ப்பங்களும் அலைகளால் மேலே வீசி எறியப்பட்டு சமுத்திரம் மிகவும் கோரமாகக் கலக்கப்பட்டது. பின்னும் ராமன் பாணங்களைத் தொடுக்கும் பொருட்டு வில்லை இழுத்துக்கோபத்தினால் பெருமூச்சு விடுகையில் லக்ஷ்மணன் 'இனி நான் வெறுமனே இருந்தால் உலகங்களெல்லாம் கொளுத்தப்படும்' என்று நினைத்து திடீரென ஓடிவந்து 'வேண்டாம் வேண்டாம்' என்று கூறி வில்லைப் பிடித்துத் தகையலுற்றனன்.

இருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்திரண்டாவது ஸர்க்கம்.

## ராமன் சமுத்திரத்தின்மேல் பிரமாஸ்திரம் விடத்தொடங்குதலும் சமுத்திர ராஜன் அஞ்சி ஓடிவந்து சேது கட்ட அனுமதித்தலும்.

பிறகு ராமன் சமுத்திரத்தைப் பார்த்து "சமுத்திர ராஜனே! உன்னை இப்பொழுதே பாதாளம் வரை உலரும்படி செய்கிறேன். ஜலமெல்லாம் உலர்ந்து போகையில் பாதாளம் வரை உலர்ந்துபோகும். பாதாளத்திற்குப்போவது அசாத்தியமாகையால் ஆகாச மார்க்கமாகவே போகவேண்டியதாய் வரும். ஆகையால் இப்பொழுதே ஆகாய வழியாய்ப்போவது மேலாகையால் கோபமேன்? என்னில்; வருணனே! நான் சேதுகட்டுவதற்கு கஷ்டப்படவேண்டிய அவசியமேயில்லை. நான் வில்லினின்றும் பெய்த பாணவர்ஷங்களால் பாணங்களே சேதுவாக அமையப் பெற்று இப்பொழுதே வானரர்கள் கால் நடையாகவே உன்னைத்தாண்டி அக்கரை சேருவார்கள். நீ ராக்ஷசர்களுக்கு இருப்பிடமானவனாகையால் அவர்களுடைய சகவாசத்தினால் எனது பலத்தையும் பராக்கிரமத்தையும் தெரிந்து கொள்ளாதிருக்கின்றனை" என்றனன்.

இங்ஙனம் கூறிக்கொண்டே ராமன் ஓர் பாணத்தையெடுத்து அதை பிரமாஸ்திர மந்திரத்தினால் அபிமந்திரித்து மேலானவில்லில் தொடுத்துக் காதுவரையிலும் இழுத்தனன்! அப்பொழுது ஆகாயமும் பூமியும் இருபிளவாகும்போலிருந்தன. பர்வதங்களெல்லாம் நடுங்கின. உலகமெல்லாம் இருள் மூடிக்கொண்டது. திசைகளெல்லாம் ஒளி மழுங்கப்பெற்றன. குளங்களும் நதிகளும் கலங்கின. சந்திர சூரியர்களும் நக்ஷத்திரங்களும் கோணல்களாகச் சேர்ந்து திரிந்தன. ஆகாயத்தினின்று பெரிய சப்தத்துடன் இடிகள் விழுந்தன. பெரிய காற்றுகள் கனமாக வீச அதனால் மரங்கள் முறிந்து மலைகள்

நிலை குலையப்பெற்றன. பெரிய மேகங்கள் ஆகாயத்தினின்று 'வைத்யுதம்' என்கிற நெருப்புகளைக் கக்கின.

அப்பொழுது சமுத்திரம் மிகவும் கலக்கப்பட்டு ஒரு யோசனை தூரம் கரையைக்கடந்து வந்தது. சமுத்திர ஜலத்தின் நடுவிலிருந்து சமுத்திர ராஜன் பொன்னால் செய்த ஆபரணங்களையணிந்து சிறந்த பூமாலைகளையும் ஆடைகளையும் தரித்து வேகமாக ஓடிவந்து ராமனை வணங்கி கைகூப்பிய வண்ணம் "ராமா! நிலம், நீர், தீ, கால், விசும்பு என்கிற பஞ்சபூதங்களும் நிலைநின்ற ஏற்பாட்டில் இருப்பவைகளாகித் தம் தமது குணத்தை என்றும் கடவாதிருப்பவை. ஆகவே நான் இப்படியே ஆழமாக இருக்கவேண்டியவன். ஆழமில்லாமல் தாண்ட சுகமாய் இருத்தல் என் சுபாவத்திற்கு இணங்காததாகும். இதுபற்றியே நான் உன் எதிரில் வாராதிருந்தனன். ஆயின் 'ஆழமாகவே இருந்து ஜலத்தையாவது அசையாமல் நிறுத்தி நமக்கு வழிவிடலாகாதா?' என்னில்; நான் அங்ஙனம் செய்வேனாயின் பீடை உண்டாகும். ஆகையால் ஜலத்தைக்கூட சிறிதும் நிற்கச்செய்ய வல்லனல்லேன்.

ராமா! ஆயினும் என்னால் கூடிய வேறு ஒரு உபகாரம் செய்கிறேன். அதாவது உன் சேனைகள் சமுத்திரத்தைத் தாண்டும் வரையில் ஜலத்தில் போகுமவர்களை 'முதலை' முதலிய ஜல ஜந்துக்கள் துன்புறுத்தாதிருக்கும்படி பார்த்துக் கொள்ளுகிறேன். வானரர்கள் என்னைத் தாண்டும் பொருட்டு அணைகட்டுவதற்கு உபயோகிக்கிற மலை, மரம், கல் முதலியவற்றை கலையச்செய்யாமல் சேது (அணை) மார்க்கம் உண்டாகும்படி செய்கிறேன்.

தசரத குமாரனே! இந்த நலன் என்பவன் விசுவகர்மாவின் புதல்வன். சில்ப வித்தைகளில் தந்தைக்கு நிகரானவன். இவனே என்மீது அணையைக் கட்டுவானாக. அந்த

அணை முழுகாதிருக்கும்படி நான் தாங்கிக் கொள்ளுகிறேன்." என்றனன்.

அப்பொழுது ராமன் சமுத்திர ராஜனைப் பார்த்து கடலரசனே! நான் தொடுத்த பாணம் வீணாகாதல்லவா? இதற்கு இலக்கென்?" என்று வினவினன். சமுத்திர ராஜன் ராமனைப் பார்த்து "இவ்விடத்திற்கு அருகான வடபாகத்தில் 'துருமகுல்யம்' என்னும் ரமணீயமான பிரதேசத்திலுள்ள எனது விரோதிகளின் மீது அப்பாணத்தை விடுவாயாக." என்றனன். ராமன் அங்ஙனமே துருமகுல்ய மென்னும் பிரதேசத்தின் மேல் அந்த பாணத்தைப் பிரயோகித்தனன். அந்த பாணம் பூமியைப் பிளந்துகொண்டு உள்ளே நுழைகையில் அந்த அடிபட்ட இடத்தில் 'மருகாந்தாரம்' என்கிற பாலைவனப் பிரதேசம் ஏற்பட்டது. ஏனெனில் அங்குத் தேங்கியிருந்த ஜலங்களையெல்லாம் ராமபாணம் உறிஞ்சி விட்டது. பிறகு அப்பாணம் சமுத்திர ராஜனது விரோதிகளை நாசம் செய்தது. ராமன் சமுத்திரத்தின் நடுவிலுள்ள பிரதேசமான அம்மருகாந்தாரத்திற்கு, புல், காய் கிழங்குகள், நானாவித மூலிகைகள் முதலியவை அதில் உண்டாகும்படி வரமளித்தனன்.

பிறகு வானரர்கள் ராமனது கட்டளையினால் காடுகளிலுள்ள நானாவித மரங்களையும், மலைகளையும், குன்றுகளையும், பாறைகளையும் கொண்டுவந்து சமுத்திரத்தை நிறைத்தனர். நலன் அவற்றைக் கொண்டு சமுத்திரத்தின் நடுவில் பெரிய அணையைக் கட்டினன். அவ்வானரர்கள் நலனைக் கொண்டு முதல் நாள் பதினான்கு யோசனை தூரம் அணையையும், இரண்டாவது நாள் இருபது யோசனை தூரம் அணையையும், மூன்றாவது நாள் இருபத்தொரு யோசனை தூரம் அணையையும், நான்காவது நாள் இருபத்திரண்டு யோசனை தூரம் அணையையும், ஐந்தாவது நாள் சுவேலபர்வதம் வரையில்

இருபத்து மூன்று யோசனை தூரமும் நிருமாணித்து அணையைக் கட்டி முடித்தனர்.

தேவதைகளும், கந்தருவர்களும், சித்தர்களும், மகரிஷிகளும் ஆகாயத்தில் வந்து நின்று பத்து யோசனை அகலமும், நூறுயோசனை நீளமுமுள்ள அவ்வழகிய அணையைக் கண்டு ஆச்சரியமடைந்தனர். வானரர்கள் அப்பெரிய சேதுவைக் கண்டு மிகுந்த சந்தோஷத்தால் குதித்துப் பலவிதமான சேஷ்டைகளையும் செய்தனர். வானரர்களெல்லாரும் அவ்வணையின்மேல் நடந்து சென்று சுகமாக சமுத்திரத்தின் தென்கரைக்குச் சென்றுகொண்டிருந்தனர்.

பிறகு ராமன் அனுமானின் தோளிலும் லக்ஷ்மணன் அங்கதனுடைய தோளிலும் ஏறிக்கொண்டு விபீஷணன் சுக்கிரீவன் முதலியவர்களால் சூழப்பட்டு சமுத்திரத்தின் தென்கரையை யடைந்தனர். பயங்கரமான அப்பெரிய வானர சைன்னியம் சமுத்திரத்தைத் தாண்டும்போது விளைந்த சப்தமானது பயங்கரமாய் சமுத்திர கோஷத்திற் காட்டிலும் விஞ்சி இருந்தது. அப்பொழுது தேவர்களும், சித்தர்களும், சாரணர்களும், மகரிஷிகளும் ராமனிடம் வந்து அவனை மங்கல நீரால் ஸ்நானம் செய்வித்து "ராமா! நீ பகைவர்களையெல்லாம் வெல்லுவாயாக. பூ மண்டலத்தை யெல்லாம் பாதுகாத்து வருவாயாக." என்று பலவகையான சுப வசனங்களால் பூஜித்துச் சென்றனர்.

இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இருபத்துமூன்றாவது ஸர்க்கம்

## ஸ்ரீ ராமன் யுத்தத்தை அறிவிக்கிற சகுனங்களைக் கண்டு அவற்றை லக்ஷ்மணனுக்குக் காண்பித்தல்.

பிறகு ராமன் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! குளிர்ந்த நீரும் நல்ல காய் கிழங்குகளும் நிறைந்த காடு

களோடு கூடின பிரதேசங்களை வாஸஸ்தானமாக ஏற்படுத்திக்கொண்டு, சேனைகளை, குரங்குகள் கரடிகள் கொண்டை முசுக்கள் என்னும் அந்தந்த பாகங்களாகப் பிரித்து கருட வியூகமாக ஏற்பாடு செய்து சுகமாய் இருப்போம். இப்பொழுது பெரிய பயங்கரமான யுத்தம் நடக்கப்போகிறதென்று எனக்குத் தோன்றுகிறது.

லக்ஷ்மணா! காற்றுகள் கலக்கமுற்று வீசுகின்றன. பூமியும் கிடுகிடுவென்று நடுங்குகிறது. மலைச்சிகரங்கள் அல்லாடுகின்றன. மரங்கள் காரணமின்றி முறிந்து விழுகின்றன. மேகங்கள் ரத்தத்துளிகளோடு கூடின ஜலத்தைப் பொழிகின்றன. சூரியனிடமிருந்து பிண்டம்போன்ற நெருப்பு விழுகிறது. மிருகங்களும் பக்ஷிகளும் தீனஸ்வரத்துடன் கத்துகின்றன; இரவில் சந்திரன் தாபத்தைத் விளைவிக்கின்றனன். நரிகள் அமங்களகரமான சப்தத்தைச் செய்கின்றன. இனிச் சூரர்களான வானரர்களும் ராக்ஷசர்களும் ஒருவர்க்கொருவர் பிரயோகிக்கும் பர்வதங்களாலும் சூலம் சக்தி முதலிய ஆயுதங்களாலும் பூமி முழுவதும் மறைக்கப்பட்டு ரத்தங்களும் மாமிசங்களும் நிறைந்ததாகும். ஆகையால் தாமதமில்லாமல் இப்பொழுதே வேகமாக லங்காபுரிக்குச் செல்வோமாக.'' என்றனன். உடனே அனைவரும் லங்கையை நோக்கிச் சென்றனர்.

இருபத்துமூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்துநான்காவது ஸர்க்கம்

### ராமன் சேனையைக் கருடவியூகமாக ஏற்படுத்துதலும், சுகன் ராவணனிடம் போய் சீதையைக் கொடுக்கும் படி விண்ணப்பஞ் செய்தலும்.

வானரர்கள் குளிர்ந்த நீர் முதலிய சௌகரியங்களமைந்த இடத்தில் இறங்கி லங்கையினின்று சைன்னியங்

களின் இரைச்சலையும் பேரி மிருதங்கம் முதலிய வாத்தியங்களின் சத்தங்களையும் கேட்டனர். அவர்கள் அந்த சப்தங்களைக் கேட்கப்பொறுமல் அதைக் காட்டிலும் அதிகமான சப்தம் கிளம்பும்படி சிம்மநாதங்களைச் செய்தனர். ராக்ஷசர்களும் அவ்வானரர்களின் பேரிரைச்சலைச் செவியுற்று நிலை கலங்கினர்.

ராமன் விசித்திரமான கொடிகளாலும், கோபுரங்களாலும், மாளிகைகளாலும் விளங்குகின்ற லங்காபுரியைக்கண்டு சிறிதும் மனக்களிப்பின்றி சீதையை நினைத்து வருந்தினன். பிறகு வருத்தத்தை யடக்கிக்கொண்டு லங்கையின் விநோதமான காட்சிகளையும் அமைப்பையும் லக்ஷ்மணனுக்குக்காட்டி வானரத் தலைவர்களைப் பார்த்து "அங்கதனும் நீலனும் தமது வானர சைன்னியங்களை யழைத்துக்கொண்டு சேனையின் நடுப்பிரதேசத்தில் இருப்பார்களாக. ருஷபன் தனது சைன்னியங்களோடு வானர சேனையின் வலப்பக்கத்தில் காத்திருப்பானுக. கந்தமாதனன் தன் சைன்னியங்களுடன் வானர சேனையின் இடது பக்கத்தில் இருப்பானுக. நானும் லக்ஷ்மணனும் சேனையின் தலைப்பாகத்தில் இருக்கின்றனம். ஜாம்பவான், சுஷேணன், வேகதர்சி, இம்மூவரும் சேனையின் வயிற்றுப் பாகத்தைக் காப்பார்களாக. சுக்கிரீவன் வானர சைன்னியத்தின் பின்பாகத்தைப் பாதுகாப்பானுக" என்று ஆஞ்ஞாபித்தனன்.

இங்ஙனம் பெரியதான அவ்வானர சைன்னியம் கருடவியூகமாக நன்கு ஒழுங்கு செய்யப்பெற்று வானர வீரர்களால் பாதுகாக்கப்பட்டுப் பெரிய சமுத்திரம்போல் விளங்கியது. அப்பொழுது ராமன் அதுவரையில் வானரர்களால் கட்டுண்டு கிடந்த சுகனை அவிழ்த்து விட்டுவிடும்படி சுக்கிரீவனுக்குக் கட்டளையிட சுகன் விடுபட்டு வெகு சீக்கிரமாக ராவணனிடம் சென்றனன்.

ராவணன் சுகனைப் பார்த்து "சுக்கிரீவன் எனக்கு என்ன பதில் சொல்லியனுப்பினான்?" என்று வினவ, சுகன் ராவணனை நோக்கி "பிரபுவே! நான் உனது விருப்பப்படி சுக்கிரீவனிடம் சென்று நீ சொன்ன வார்த்தைகளை ஒன்றுவிடாமல் தெளிவாகக் கூறினேன். அவ்வானரர்கள் என்னைக் கண்டவுடன் மிகுந்த கோபத்துடன் மேற்கிளம்பி என்னைப் பிடித்துக்கொண்டு வலியப் புடைத்தும், எனது சிறகுகளை முறித்தும் படாதபாடுகள் படுத்தி என்னைக் கொல்லவும் முயன்றனர்.

ராக்ஷஸேச்வரா! ஐயோ! நான் என்னவென்று சொல்லுவேன்? அவ்வானரர்கள் கொடியர்; அளவற்ற பராக்கிரமமுடையவர். ராமன் இதுவரையில் ஒருவராலும் நினைப்பதற்கும் அசாத்தியமான பெரிய அணையை சமுத்திரத்தில் கட்டி அதன் வழியாக சமுத்திரத்தைத் தாண்டி இதோ லங்கைக்கு அருகாமையில் கணக்கற்ற வானர வீரர்களுடன் வந்திருக்கின்றனன். இதோ அவர்கள் லங்கையின் கோட்டைமேல் வரப்போகின்றனர். சீக்கிரத்தில் சீதையையாவது ராமனுக்குக் கொடுப்பாய்; அல்லது யுத்தத்தையாவது ஆரம்பிப்பாய். அவ்வானரர்களை எதிர்ப்பது நமது ராக்ஷசர்களுக்குச் சிறிதும் சாத்தியமில்லை. ஆயினும் நான் கூறின இரண்டிலொன்றைச் சீக்கிரம் செய்வாயாக" என்றனன்.

இவற்றைக்கேட்ட ராவணன் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று சுகனைப்பார்த்து "தேவர்களும் கந்தருவர்களும், தானவர்களும் மற்றுமுள்ள எல்லாரும் என்மேல் எதிர்த்து யுத்தஞ் செய்யினும் சீதையை மாத்திரம் கொடுக்க மாட்டேன். வெகு காலமாக யுத்தமில்லாமையால் அம்பறாத் தூணிகளில் வீணே கிடந்து ஜ்வலிக்கின்ற எனது பாணங்கள் வெகுவிரைவில் ராமனைக் கொல்லப்போகின்றன. எனது ஆற்றலும் பலமும் பராக்கிரமங்களும் உனக்கு நன்கு

தெரிந்திருந்தும் அற்பனை ராமனது சைன்னியங்களைப்பற்றிப் புகழ்ந்து கூறினை. அடா! சுகனே! ஆயிரங்கண்களையுடைய இந்திரனையினும், வருணனையினும், யமனையினும் குபேரனையினும் யுத்தத்தில் நெருப்புப் போன்ற பாணங்களைப் பிரயோகிக்கின்ற என்னை எதிர்க்க வல்லராகாமற் போயினரல்லவா?" என்றனன்.

இருபத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தைந்தாவது ஸர்க்கம்.

### ராவணன் சுகசாரணர்களை அனுப்புதலும் வானர சேனையில் அவர்களடைந்த துன்பமும் அவர்கள் வானர சேனைகளைப்பற்றி ராவணனிடம் சென்று கூறுதலும்.

ராமன் பெரிய சைன்னியங்களுடன் சமுத்திரத்தைத் தாண்டி வந்ததைக் கேட்ட ராவணன் தனது மந்திரிகளான சுகசாரணர்களைப் பார்த்து "ராமன் சைன்னியங்களுடன் சமுத்திரத்தைத் தாண்டிவந்துவிட்டதாகக் கேள்விப்படுகிறேன். இதுவரையில் என்றும் கண்டதும் கேட்டதுமல்லாத பெரிய அணையை ராமன் கட்டினனென்று என் காதில் விழுகின்ற இவ்விஷயம் எனக்கு சிறிதும் நம்பத்தகுந்ததாகவில்லை. நிற்க: எனக்கு அவ்வானர சைன்னியங்களின் விதமெல்லாம் தெரியவேண்டும். ஆகையால் நீங்கள் எவர்க்கும் தெரியாதபடி ஏகாந்தமாக அவர்களது சைன்னியத்தில் புகுந்து அதன் பரிமாணத்தையும் (அளவையும்) அவர்களது பராக்கிரமங்களையும், ராமன் சுக்கிரீவன் இவர்களது மந்திரிகள் எவரென்பதையும், யுத்தத்தில் முன் நிற்கும் சூரர்கள் எவர் என்பதையும், அவர்கள் சேது (அணை) கட்டினவிதத்தையும், ராமனது மனநிலைமையையும் பராக்கிரமத்தையும் ஆயுதங்களையும் உள்ளபடி தெரிந்துகொண்டு வருவீர்களாக" என்று கட்டளையிட்டனுப்பினன்.

வீரர்களான அந்த சுகசாரணர்கள் உடனே மாயமாக வானரரூபம் தரித்து வானரசைன்னியத்தில் வந்து புகுந்தனர். அவர்கள் சிந்திக்க முடியாததும், காண்போர்க்கு மயிர்க்கூச்சலை விளைவிப்பதுமான அப்பெரிய வானர சேனையைப் பார்த்து ஆச்சரியமடைந்து அதை இவ்வளவென்று கணக்கிடமுடியாமல் திகைத்தனர். வானர வேடம் பூண்டிருந்த அவர்களை சிறிது நேரத்தில் விபீஷணன் தெரிந்து கொண்டு அவர்களிருவரையும் பிடித்து ராமனிடம் கொண்டு வந்து "ராமா! இதோ ராவணனது மந்திரிகளான இவ்விரண்டு ராக்ஷசர்களும் நமது ரகசியங்களைத் தெரிந்து கொண்டுபோகும் விருப்பத்தினால் வந்திருக்கின்றனர். இவர்களைத் தகுந்தபடி தண்டிப்பாயாக" என்றனன்.

அந்த சுகசாரணர்கள் இருவரும் மிகவும் துக்கித்தவர்களாகி பிழைப்பதில் ஆசையை இழந்து கைகளைக்கூப்பிக் கொண்டு பயத்துடன் ராமனைப்பார்த்து "நல்லியற்கையுடையவனே! நாங்கள் ராவணனா லனுப்பப்பட்டு உன் சைன்னியத்தை யெல்லாம் பார்த்துத் தெரிந்துகொள்வதற்காக இவ்விடம் வந்தோம்" என்றனர். ராமன் கருணைக் கடலாகையால் அவர்களை நோக்கி "என் சைன்னியங்களை யெல்லாம் நன்றாகப் பார்வையிட்டுச் செல்வீர்களாக. நீங்கள் பாராதது இன்னுமிருக்குமாயின் விபீஷணனே உங்களுக்கு அவற்றைக்காட்டுவான். நீங்கள் ஆயுதமின்றி இருப்பதால், உங்களைக் கொல்லமாட்டோம். ஓ சுகசாரணர்களே! நீங்கள் ராவணனிடம் சென்று நான் சொன்னதாகக் கூறுவீர்களாக. 'அடா ராவணா! நீ எந்த பலத்தைக்கொண்டு சீதையைத் திருடிக்கொண்டு போயினையோ, அந்த பலத்தை இப்பொழுது நீயும் உன் சைன்னியமும் உன் பந்துக்களும் இஷ்டப்படி காட்டுவீர்களாக. நாளை விடியற் காலத்தில் லங்கையையும் அதிலுள்ள ஸமஸ்த ராக்ஷசக்கூட்டங்களையும்

துவம்சம் செய்யப்போகிறேன். வல்லமையைக் காட்ட வரலாம்' என்று கூறவேண்டும்." என்றனன்.

உடனே சுகசாரணர்கள் ராமனைப்புகழ்ந்து லங்கையில் நுழைந்து ராவணனைப்பார்த்து "லங்கேச்வரா! விபீஷணன் எங்களைப்பிடித்துக் கொல்ல வேண்டுமென்று ராமனிடம் கொண்டுபோயினன். ராமன் தரும சுபாவமுடையவனாகையால் ஆயுதமில்லாத எங்களைக் கொல்லாமல் உயிர்ப்பிச்சையளித்துப் போகவிட்டனன். ராம லக்ஷ்மணர்களும், விபீஷணனும் சுக்ரீவனும் லோக பாலர்களைப் போன்ற சூரர்களும் பாணம்விடுவதில் சமர்த்தர்களும் திடமான பராக்கிரமமுடையவர்களுமாய் இருக்கின்றனர். லங்கையைப் பாழ்செய்யும் பொருட்டு ஒற்றுமையாயிருக்கின்றனர். மற்ற வானர சைன்னியங்களின் சகாய மில்லாமலே இந்நால்வரும் லங்கையைப் பெயர்த்து வீசி எறியவல்லவரென்று தோன்றுகிறது.

ராவணா! ராமனது உருவத்தையும் ஆயுதங்களையும் பார்க்கில் அவனொருவனே லங்கைமுழுவதையும் நாசம் செய்ய வல்லவன் என்று எமக்குத்தோன்றுகின்றது. இவ்வளவு அவ்வளவென்று கணக்கிட முடியாத பெரிய சமுத்திரத்தைப் போன்ற அவ்வானர சைன்னியங்கள் பத்து யோசனை தூரம் வியாபித்திருக்கின்றன. அதைப் பலவானான லக்ஷ்மணன் பாதுகாக்கின்றனன். அந்த ராமனையும் அவனது சைன்னியங்களையும் தேவதைகளாலும் அசுரர்களாலும் அல்லது ஒன்று சேர்ந்த தேவாசுரர்களாலும் எதிர்க்க முடியாது. ராமன் சமுத்திரத்தின் மேல்கட்டின அணையானது பத்து யோசனை அகலமும் நூறு யோசனை நீளமுமுடையதாய் விளங்குகிறது. சைன்னியங்கள் இன்னும் அணையின் மூலமாய் வந்துகொண்டேயிருக்கின்றன. அதற்கு முடிவே தெரியவில்லை. அவ்வானரர்களனைவரும் யுத்தம் செய்ய மிகுந்த உத்ஸாகமும் சந்தோஷமும் கொண்டிருக்கின்றனர்.

ராவணா! அவர்களை உன்னால் ஜயிக்கமுடியாது. அவர்களோடு விரோதம் வைத்துக்கொண்டதுபோதும். கோபத்தை யடக்கிக்கொண்டு சீதையைக் கொண்டுபோய் ராமனிடம் விட்டு விடுவாயாக" என்றனர்.

இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தாறவது ஸர்க்கம்

### வானர சேனைகளைப் பார்க்கும்பொருட்டு மாளிகையின் மேலேறின ராவணனுக்கு சாரணன் அவ்வானரர்களின் பராக்கிரமங்களைத் தனித்தனியே கூறுதல்.

உடனே ராவணன் வானர சைன்னியங்களைப் பார்க்க விரும்பி மிகவும் உயர்ந்த தனது அரண்மனை மேல் மாடத்தின்மேல் சுகசாரணர்களோடு ஏறினன். அவன் திரிகூடத்தின் கீழுள்ள பூமியெல்லாம் வானரர்களால் இடைவெளியின்றி நிறைந்திருக்கக் கண்டனன். அம்மகா சைன்னியத்தைப் பார்த்து ராவணன் வியப்புற்று சாரணனை நோக்கி "இவர்களில் எவர் சூரர்? எவர் மிகுந்த பலமுடையவர்? எவர் யுத்தத்தின் முன் நிற்பவர்? சுக்கிரீவன் இவர்களில் எவருடைய வார்த்தையைக்கேட்பான்?" என்று வினவினன்.

சாரணன் சொல்லத்தொடங்கி "ராவணா! அதோ லங்காபுரிக்கு எதிர்முகமாக சிம்மநாதம் செய்து கொண்டு நூறாயிரம் வானரர்களால் சூழப்பட்டிருப்பவன் சுக்கிரீவனது சேனாபதியான நீலன் என்பவன். அதோ மிகுந்த கோபத்துடன் சண்டை செய்ய விரும்பி வாலைப்பூமியின் மேல் அடித்துக்கொண்டு நிற்பவன் வாலி புத்திரனும் இளவரசனுமான அங்கதன் எனப்படுவான். அவன் மிகுந்த பலமும் சாதுரியமும் வீரியமுமுடையவன். அவனுக்குப் பின்புறத்தில் பெரிய சைன்னியத்தினால் சூழப்பட்டு நிற்பவன் நலன் என்பவன். இவனே சமுத்திரத்தில் பெரிய அணை கட்டினவன். அவனு

டைய சைன்னியத்திலுள்ள வானரர்கள் பயங்கரமான உருவ முடையவர்கள். அவர்களை எவராலும் வெல்ல முடியாது. அதோ கணக்கில்லாத வானரர்களால் சூழப்பட்டிருக்கும் வீரர்கள் சுவேதன், குமுதன், ரம்பன், சரபன், பனஸன், விநதன், குரோதனன், கவயன் முதலியவர்களாவர். இவர்களுடைய சைன்னியத்திலுள்ள வானரர்களை எதிர்த்து நிற்க எவருக்கும் சாத்தியமன்று. மிகுந்த பயங்கரத்தன்மையுடையவர்களும் பலிஷ்டர்களும் காமரூபிகளுமான இவர்கள் ஒவ்வொருவருக்கும் வேறுவேறு சைன்னியங்கள் இருக்கின்றன."

இருபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இருபத்தேழாவது ஸர்க்கம்.

சாரணன் ராவணனுக்கு முக்கியமான வானர வீரர்களைக் காட்டுதல்.

"ராமன் நிமித்தமாகப் பராக்கிரமத்தைக்காட்டி உயிரையும் பொருள் செய்யாமல் யுத்தம் செய்யத் தயாராகவிருக்கும் பிரதான வீரர்களைச் சொல்லுகிறேன். அதோ நிற்பவன் ஹரன். அவன் ஆயிரங்கோடி வானரர்களுடன் கூடி உன்னை யுத்தத்தில் வெல்ல விரும்புகின்றனன். அதோ கறுத்த மேகம்போலும் கறுத்த மைபோலும் நிற்கின்ற கரடிக் கூட்டங்களைக் காண்பாயாக. இவைகள் கணக்கிட முடியாமல் உண்மையான பராக்கிரமமுடையவையாகி உன்மேல் எதிர்த்து வருகின்றன. இக்கரடிகளுக்கெல்லாம் 'தூம்ரன்' என்பவனே அதிபதியாவான். அவனுடைய தம்பியே அதோ நிற்கும் ஜாம்பவான். இவனே மிகவும் முக்கியமானவன். யுத்தத்தில் விரோதிகளைக் கொல்லாமல் திரும்பமாட்டான். இவன் முன்பு தேவாசுர யுத்தத்தில் இந்திரனுக்குப் பெரிய உதவி செய்து பலவரங்களைப் பெற்றிருப்பவன். இவன் தன் பெரிய கரடிக்கூட்டங்களுடன் உன்னை எதிர்த்து வருகின்றனன்.

ராவணா! அதோ நிற்பவர்கள், தம்பன், ஸங்காதன் என்பவர். அந்த ஸங்காதன் வானரர்கள் எல்லோர்க்கும் பாட்டன். ஒரு யோசனை தூரம் அகன்ற சரீரமுடையவன். ஒரு யோசனை உயரமுடையவன். இவன் முன் அசுரர்களோடு யுத்தம் செய்து வெற்றியடைந்திருக்கிறான். இவன் அக்கினி தேவனுக்கு ஒரு கந்தருவ கன்னிகையிடத்தில் பிறந்தவன். இவனை வெல்ல ஒருவராலும் முடியாது. அதோ நிற்கும் கிரதனன் என்கிற வானரன் ஆயிரம் கோடி வானரர்களுடன் கூடி லங்கையை எதிர்க்க விரும்புகின்றனன். அவனையடுத்து ஆயிரம் லக்ஷம் வானரர்களால் சூழப்பட்டு நிற்பவன் பிரமாதியென்னும் வானரன். இவனை ஒருவராலும் எதிர்க்க முடியாது.

கவாக்ஷன் என்பவன் முயல்களுக்கெல்லாம் தலைவன். பற்பல நூறு லக்ஷங்களான கொண்டை முசுக்களுடன் சண்டைக்குத் தயாராக இருக்கின்றனன். அதோ நடுவில் நிற்பவன் வானரர்களுக்குத் தலைவனான சதபலி என்பவன். இவன் வெற்றியை விரும்பி சூரியனைப் பூஜிக்கின்றனன். இவனொருவனே லங்கையைப் பாழ் செய்ய விரும்புகின்றனன். இன்னும் கஜன், கவாக்ஷன், கவயன், நலன், நீலன் இவர்கள் ஒவ்வொருவரும், பப்பத்துக் கோடி சைன்னியங்களுக்குத் தலைவராவர்.

ராவணா! அந்த வானரர்கள் கண்செல்லுமளவும் வியாபித்திருக்கையால் அவர்களைக் கணக்கிட முடியாது. இவ்வானரர்கள் ஒவ்வொருவரும் பெரியமலை போன்ற உருவமுடையவர். மிகுந்த பலமுடையவர். ஒருவராலும் எதிர்க்க முடியாதவர்" என்றனன்.

இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்தெட்டாவது ஸர்க்கம்

## சாரணன் சொன்னது போக மிகுந்ததை யெல்லாம் சுகன் சொல்லுதல்.

பிறகு சுகன் சொல்லத்தொடங்கி "ராஜனே! பயங்கரரான இவ்வானரர்களை எதிர்க்க சாத்தியமன்று. மிகுந்தபலிஷ்டரும் காமரூபிகளுமான இவர்கள் தேவதைகளைப்போன்ற பராக்கிரம சாலிகள். தேவதைகளுக்கும் கந்தருவர்களுக்கும் பிறந்தவர்கள். பிறந்தது முதல் மாயச்செயல்களை யுடையவர். அதோ நிற்கும் இரண்டு யௌவன வானரர்களைப்பார். அவர்கள் மைந்தன், துவிவிதன் என்பவர். அவ்விருவரும் பிரம்ம தேவனது அனுமதியால் அமிருத பானம் செய்தவர். ஆகையால் அவர்களை எதிர்த்து நிற்பவர் எவருமில்லை.

அவர்களது பக்கத்தில் மலைபோன்ற உருவமுடைய இருவர் பத்துகோடி சைன்னியங்களால் சூழப்பட்டு லங்கையைப் பார்த்துக் கொண்டிருக்கின்றனர்; பார். அவர்கள் யமனது புதல்வர்களான சுமுகனும் துர்முகனுமாவர். தந்தையை நிகர்த்த பராக்கிரமமுடையவர். ஆ! அதோ நிற்கும் அநுமானைப் பார்ப்பாயாக. அவனே முன்பு லங்கையில் புகுந்து சீதையைப் பார்த்துச் சென்றவன். இவன் கேசரியின் மனைவியிடத்தில் வாயுதேவனுக்குப் பிறந்தவன். இவனது பலமும் பராக்கிரமமும் அளவிட முடியாதவை. ஒருவராலும் வெல்ல முடியாத அந்த அநுமான் இப்பொழுது லங்கையை இஷ்டப்படி பாழ் செய்யப்போகின்றனன். பொன் சிகரத்தின்மேல் ஏறின கறுத்த மேகம்போல் அநுமானது தோளின்மேல் வீற்றிருக்கு மழகனைப்பார். அவனே கரன் முதலிய பதினாலாயிரம் ராக்ஷசர்களையும், விராதன், கபந்தன், வாலி முதலிய பலிஷ்டர்களையும் கொன்ற திரனான ராமன். சத்தியம், பராக்கிரமம், பலம், கருணை முதலியவற்றிற்கு இருப்பிடமானவன். பிரம்மாஸ்திர மந்திரங்களையும் வேதங்களையும்

அறிந்தவன். இப்பொழுது உன்னைக் கொல்லும்பொருட்டு வந்திருக்கின்றனன்.

ராமனுக்கு வலதுபக்கத்தில் நிற்பவன் அவனது தம்பியான லக்ஷ்மணன். இவனும் எல்லாவிதத்திலும் தனதண்ணனுக்கு சமானமானவன். ராமனுக்கு வலக்கை போன்றவன். இவன் ஒருவனாகவே ராக்ஷசர்களைக் கொல்லவேண்டுமென்று விரும்புகின்றனன். ராமனுக்கு இடது பக்கத்திலிருப்பவன் உன் தம்பியான விபீஷணன். இவனையே லங்கா ராஜ்ஜியத்திற்கு அரசனாக ராமன் அபிஷேகம் செய்தனன். ஆகையால் இவன் பரபரப்புடன் உன்னோடு யுத்தம் செய்ய விரும்புகின்றனன்.

ராமனுக்கும் விபீஷணனுக்கு மிடையில் நிற்பவன் வானரர் தலைவனான சுக்கிரீவன். எங்கும் என்றும் தோல்வியடையாதவன். இவனது மார்பில் நூறு கமலங்களையுடைய பொன் மாலையொன்று விளங்குகிறது பார். அதில் வீரலக்ஷ்மி நிலைபெற்றிருக்கு மாகையால் அதைத் தரித்தவன் என்றும் தோல்வி யடையமாட்டான். ராமன் வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு இந்தப் பொன் மாலையையும் (வாலியின்மாலை) தாரையையும் நிலையான வானர ராஜ்ஜியத்தையும் சுவாதீனப் படுத்தினன்.

லங்கேசுவரா! பண்டிதர்கள் நூறு லக்ஷங்களைக் கோடியென்பார்கள். நூறுபிரம் கோடிகளைச் சங்கமென்பார்கள். நூறுயிரம் சங்கங்கள் மகா சங்கமெனப்படும். நூறுயிரம் மகா சங்கங்கள் பிருந்தம். நூறுயிரம் பிருந்தங்கள் மகா பிருந்தம். நூறுயிரம் மகா பிருந்தங்கள் பத்மம். நூறுயிரம் பத்மங்கள் மகா பத்மம். நூறுயிரம் மகா பத்மங்கள் கர்வம். நூறுயிரம் கர்வங்கள் மகா கர்வம். நூறுயிரம் மகா கர்வங்கள் சமுத்திரம். நூறுயிரம் சமுத்திரங்கள் ஓகம். நூறுயிரம் ஓகங்கள் மஹௌகம். இங்ஙனம் அந்தந்த சேனை

பதிகளின்கீழ் வேறு வேறாக ஆயிரம் கோடிகளும், நூறு சங்கங்களும், ஆயிரம் மகா சங்கங்களும் நூறு பிருந்தங்களும், ஆயிரம் மகாபிருந்தங்களும், நூறு பத்மங்களும், ஆயிரம் மகாபத்மங்களும் நூறு கர்வங்களும் நூறு சமுத்திரங்களும் நூறு மஹௌகங்களும் கோடி மஹௌகங்களுமாகி சமுத்திரம்போல் கரையுமற்று விளங்கும் சேனையுடன் கூடி ராமன் உன்னை யெதிர்த்து வருகின்றனன். நீ உடனே நமக்குத் தோல்வி நேரிடாதிருக்கும்படி பிரயத்தனஞ் செய்வாயாக" என்றனன்.

இருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

இருபத்தொன்பது & முப்பதாவது ஸர்க்கம்

ராவணன் சுகசாரணர்களை விரட்டி சார்தூலன் முதலான அரக்கர்களை அனுப்புதலும் அவர்கள் வானரர்களால் அடைந்த துன்பமும் அவர்கள் ராமனால் விடுவிக்கப்பட்டு ராவணனிடம் வந்து செய்தி கூறலும்.

இங்ஙனம் சுகசாரணர்கள் தன் விரோதிகளைப்பற்றித் தோத்திரம் செய்து கூறின வார்த்தைகளைக் கேட்ட ராவணன் மிகுந்த சீற்றங்கொண்டு அவர்களை நோக்கி "அரசனை யண்டிப் பிழைத்து வரும் மந்திரிகளான நீங்கள் எனக்குப் பிரியமல்லாத வார்த்தைகளைச் சொல்லி விரோதிகளைப்பற்றி இங்ஙனம் தோத்திரம் செய்தீர்கள். இது உங்களுக்குத் தகுமா? என் நாக்கு அசைந்த மாத்திரத்தில் என் விரோதிகளுக்குத் தீமை விளையுமென்பது உங்களுக்குத் தெரியாதா? அல்லது உங்களுக்குத் தண்டனை சம்பவியாதென்கிற தைரியமா? இங்ஙனம் என்னெதிரில் பகைவர்களைத் தோத்திரம் செய்த உங்களைக் கொன்று விடுவதே யுக்தமாயினும், முன்பு நீங்கள் செய்த சில உபகாரங்கள் நினைவுக்கு வருகிறபடியால்

உங்களைக் கொல்ல நான் விரும்பவில்லை. சீ! சீ!! என் கண்முன் நிற்காமல் ஓடுங்கள்” என்று விரட்டினன்.

பிறகு ராவணன் சார்தூலன் முதலிய சாரர்களை வரவழைத்து "ஓ சாரர்களே! நீங்கள் ராமனிடம் சென்று அவன் செய்ய வேண்டியதாக நிச்சயித்திருக்கும் காரியம் எதுவென்று பரிக்ஷித்துப் பாருங்கள். அப்படிப்பட்ட நிச்சயம் தளர்ந்திருக்குமாயின், அவனைப் பயமுறுத்துவோம். அவனது அந்தரங்கரான மந்திரிகளையும், நண்பர்களையும் பரிட்சியுங்கள். அந்த நட்பும் திடமாய் இராத பக்ஷத்தில் அவர்களை அவனிடத்தினின்று வேறுபடுத்தி விடுவோம். அவன் எங்கு எப்படி நித்திரை செய்கிறான்? சிந்தையுற்ற மனதுடன் இருக்கிறானா? திடமானமனதுடன் இருக்கிறானா? பட்டணத்தின் மேல் இப்பொழுதே படையெடுக்கப் போகிறானா? கொஞ்சகாலம் தாமதித்து எதிர்க்கப் போகிறானா? நீங்கள் மறைந்திருந்து நான் சொன்ன விஷயங்களை யெல்லாம் நன்கு ஆராய்ந்து தெரிந்து கொண்டு வருவீர்களாக” என்றனன்.

உடனே அந்த சாரர்கள் (வேவு பார்க்கிறவர்கள்) சார்த்தூலனென்கிற ராக்ஷசனை முன்னிட்டுக்கொண்டு மாறுவேடம் பூண்டு ராம லக்ஷ்மணர்கள் இருக்கும் இடத்திற்குப் போயினர். அவர்கள் ராம லக்ஷ்மணர்களையும் விபீஷண சுக்கிரீவாதிகளையும் மற்றுமுள்ள வானர சைன்னியங்களையும் கண்டு பயத்தினால் விலவிலத்தனர்.

அவர்கள் அந்த சேனையில் உலாவிக்கொண்டிருக்கையில், திடீரென்று விபீஷணனால் பார்க்கப்பட்டுப் பிடியுண்டனர். சார்த்தூலன் ஒருவனைமாத்திரம் மிகவும் கொடிய செய்கையுள்ள ராக்ஷசனென்று விபீஷணன் வானரர் கையில் பிடித்துக் கொடுத்தனன். வானரர்கள் அவனைச் சாகும்படி அடித்துக் கொண்டிருக்கையில் ராமன் தயையினால் அவனை

யும் மற்ற சாரர்களையும் வானரர் செய்யும் துன்பத்தினின்றும் விடுவித்தனன். அந்தச் சாரர்கள் 'செத்தோம், பிழைத்தோம்' என்று கூறிக்கொண்டே நெடுமூச்செறிந்து கொண்டு மிக மனவருத்தத்துடன் லங்கைக்குச் சென்றனர்.

அவர்கள் ராவணனிடம் சென்று "ராஜனே! அந்த வானரர்களின் ரகசியங்களைக் கண்டுபிடிப்பது எங்களுக்கு சாத்தியமன்று. அவர்கள் மிகுந்த பலமும் பராக்கிரமமும் உடையவர்கள். மேலும் ராமனால் பாதுகாக்கப்பட்டிருப்பதால் அவர்களுடன் பேசுவதற்கே முடியாமல் போய்விட்டது. இனி வானரர்களைப் பரீக்ஷிப்பது எங்கே? நான்கு பக்கங்களிலும் பர்வதம்போன்ற உருவமுடைய வானரர்கள் காவலராய் இருக்கின்றனர். ஆகையால் நாங்கள் சேனையுள் புகுந்த உடனே விபீஷணன் எங்களைக் கண்டு கொண்டனன். இதனால் மற்றெங்கும் திரிந்து பார்க்கவும் முடியவில்லை. அந்தோ! அந்த வானரசேனையின் மருமம் சாரர்களால் கண்டு பிடிக்கக் கூடியதல்ல.

விபீஷணனால் கண்டுபிடிக்கப்பட்ட எங்களை அக்கொடிய வானரர்கள் அடித்தும் குத்தியும், பற்களால் கடித்தும், உள்ளங்கைகளால் அறைந்தும் துன்பப்படுத்தி நாங்கள் மூர்ச்சிக்குமளவும் படாதபாடு படுத்தினர். ராமன் தனது இயற்கைக் குணமான அருளால் எங்களை விடுவித்து எங்களுக்கு உயிர்ப்பிச்சை யளித்தனன். அதோ ராமன் வில்லும் கையுமாய் சைன்னியங்களுக்கு முன்னின்று லங்கையின் கோட்டை வாயிலுக்கருகில் யுத்தம் செய்யும்பொருட்டு திடமான மனதுடன் நிற்கின்றனன். சீக்கிரத்தில் கோட்டையைத் தகர்க்கப் போகின்றனன். ஆகையால் நீ சீக்கிரம் இரண்டிலொன்று செய்வாயாக. சீதையையாவது விரைவில் கொடுத்துவிடுவாயாக. அல்லது யுத்தத்தையாவது நன்றாக நடத்துவாயாக" என்றனர்.

பிறகு ராவணன் சிறிது பீதியடைந்தபோதிலும் அதை வெளிக்காட்டாமல் "சாரர்களே! எவ்விதத்திலும் நான் கொண்டுவந்த சீதையைக் கொடுக்கமாட்டேன். அது விஷயம் இருக்கட்டும்" என்று கூறி, சார்த்தூலனை நோக்கி "சார்த்தூலா! வானரர்களின் உருவமும் பிரபாவமும் எப்படிப் பட்டது? அவர்கள் எவருடைய பிள்ளைகள்? அவர்களுடைய நிலைமையெல்லாம் உள்ளபடி எனக்குச் சொல்லுவாயாக" என்றனன்.

சார்த்தூலன் ராவணனை நோக்கி "ராஜனே! சுக்கிரீவன் ருக்ஷராஜஸ்ஸின் புதல்வன்; யுத்தத்தில் ஒருவராலும் ஜயிக்க முடியாதவன். தாம்ரனும் ஜாம்பவானும் கத்கனுடைய பிள்ளைகள். அனுமானின் பிதாவான கேசரி என்பவன் பிருகஸ்பதியின் புதல்வன். சுஷேணன் தருமதேவதையின் புதல்வன். ததிமுகன் சந்திரனுடைய குமாரன். சுமுகன், துர்முகன், வேகதர்சீ இம்மூவரும் பிரமதேவனால் சிருஷ்டிக் கப்பட்ட யமனைப்போன்றிருப்பவர். அங்கதன் தேவேந்திர னுடைய பேரன். பலிஷ்டர்களான மைந்தனும் துவிவித னும் அசுவினி தேவதைகளின் புதல்வர்கள். கஜன், கவா க்ஷன், கவயன், சரபன், கந்தமாதனன் ஆகிய இவ்வைந்து பேர்களும் யமனுடைய புதல்வர்கள்.

இங்ஙனம் தைரிய வீர்யாதி லக்ஷ்மீ விலாசம் பொருந்தி, மிகுந்த உத்சாகப்பெருக்குடன் விளக்கமுற்றவர்களும், தேவ தைகளுக்குப்பிறந்தவர்களும், யுத்தத்தில் மகாசூரர்களுமான பத்துகோடி வானரர்கள் இருக்கின்றனர். அவர்கள் பிறந்த இடம் முதலிய மற்ற விசேஷங்களைச் சொல்ல என்னால் தரமன்று. ராமனது பலம், வீரியம் முதலியவற்றை முன் னமே சுகன் சொல்லக் கேட்டிருக்கிறாய். லக்ஷ்மணனும் ராமனைப் போன்றவனே. சுவேதன், ஜோதிர்முகன் என் பவர் சூரியனது புத்திரர்கள். ஹேமகூடன் என்பவன்

வருணனது புதல்வன். நலன் விச்வகர்மாவுக்குப் பிறந்தவன். இனிமேல் நீ செய்யவேண்டியதைச் செய்வாயாக" என்றனன்.

முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தோராவது ஸர்க்கம்.

## ராவணன் ராமனது மாயத் தலையையும் மாய சூடாமணியையும் சீதைக்குக் காட்டுதல்.

இங்ஙனம் ராமன் வந்திருக்கிறானென்று சாரர் மூலமாகக் கேள்விப்பட்ட ராவணன் சிறிது பயமடைந்து மந்திரிகளுடன் கலந்து செய்யவேண்டிய காரியங்களைப் பற்றி நன்கு ஆலோசித்தபின் அவர்களை யனுப்பிவிட்டனன். பிறகு அவன் மாயைகளில் நிபுணனும் மகா பலவானுமாகிய வித்யுஜ்ஜிஹ்வன் என்னும் ராக்ஷஸனை அழைத்து "ராக்ஷஸா! நீ மாயையால் ராமனது தலை ஒன்று செய்து அதையும் பாணத்துடன் கூடின பெரிய வில்லையும் எடுத்துக்கொண்டு என்னிடம் வருவாயாக" என்று கட்டளையிட்டனன். உடனே அவனுக்குப் பரிசாக ஓர் விலையுள்ள ஆபரணத்தைக் கொடுத்தனன்.

பிறகு ராவணன் சீதையைக் காணவேண்டுமென்கிற விருப்பத்துடன் அசோக வனத்திற்குச் சென்று சீதையை யணுகி "கல்யாணி! நான் எவ்வளவு கூறினும் நீ என் கருத்துக்கிசையாமல் ராமனை நம்பியிருக்கின்றனை. அந்த ராமனோ யுத்தத்தில் எனது ராக்ஷஸர்களால் மடிந்தனன். இனி உன் கருவம் அடங்கியதல்லவா? இனி நான் உன்னை வேண்டிக் கொள்ளவேண்டிய அவசியமில்லை. உனக்கு இனி யாரும் கதியில்லை. அறிவு கெட்டவளே! இனியுன் கருத்தை மாற்றுவாயாக. எனது மனைவிமார்களுக்கெல்லாம் நீயே தலைவியாய் இருப்பாய். உனது கணவன் கோரமான மரணமடைக்

தனன். எனது ஸேனாதிபதியான ப்ரஹஸ்தன் பெரிய ராக்ஷஸ சைன்னியங்களுடன் சென்று ராம லக்ஷ்மணர்களைக் கொன்றதுமன்றி, சுக்கிரீவன் முதலிய வானர சைன்னியங்களையும் அதமாக்கினன். தப்பிப்போன வானரர்கள் திசைக்கொருவராய் ஓடிப்போயினர். அனுமான் ராக்ஷஸர்களால் அடிக்கப்பட்டு தவடைகள் முறிந்து விழுந்துகிடக்கின்றனன். அங்கதன், நீலன், கவாக்ஷன், மைந்தன், த்விவிதன், ஜாம்பவான், சுஷேணன் முதலிய பலமான வானரர்கள் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு ஓடி விழுந்துகிடக்கின்றனர். சில வானரர்கள் ஆகாயத்தில் கிளம்பிச் சென்றனர். கரடிகள் மரங்களில் தொத்தி ஏறிக்கொண்டன. ராமனது தலையும் லக்ஷ்மணனது தலையும் ரத்த வெள்ளத்தில் மூழ்கியிருக்கின்றன. அவற்றை இதோ கொண்டுவரச் செய்கிறேன். உனது கண்களால் பார்ப்பாயாக" என்றனன்.

பிறகு ராவணனது கட்டளையினால் வித்யுஜ்ஜிஹ்வன் தான் செய்த ராமனது மாயத் தலையையும் பெரிய வில்லையும் ஸீதைக்கு முன்னே கொண்டுவைத்தனன். பிறகு ராவணன் அந்தப் பெரிய வில்லையெடுத்து ஸீதையை நோக்கி "ஏ! தரித்திரம் பிடித்தவளே! இதோ உனது ராமனுடைய வில்லைக் காண்பாயாக. இதோ உனது கணவனின் வெட்டுண்ட தலையைக் காண்பாயாக. இனி உன் கஷ்டம் தொலைந்தது. எனக்குட்பட்டு இஷ்ட போகங்களை யனுபவிப்பாயாக" என்றனன்.

முப்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்திரண்டாவது ஸர்க்கம்.

## ஸீதை மாயத் தலையைப் பார்த்துப் புலம்புதல்.

இங்ஙனம் வித்யுஜ்ஜிஹ்வனால் கொண்டுவரப்பட்ட மாயத் தலையானது உண்மையில் ராமனது தலைபோலவே காணப்

பட்டது. ராமனுக்குத் தகுந்திருக்கிற கண்களின் அழகை யும் அம்முகத்தின் நிறத்தையும், முகத்தையும், தலை மயிரை யும் அந்தச் சூடாமணியையும் கண்டு அது ராமனது தலையே என்று பிரமித்து சீதை மிகுதியும் வருந்திப் புலம்பத் தொடங்கினள்.

"ஆ! கைகேயீ! ரகுகுல திலகன் இதோ பாழாயினன். இனி உன் கருத்து ஈடேறிற்றல்லவா? உன் கலக வார்த்தை யினலல்லவோ ராமன் மாண்டனன்? ஐயோ! பெரிய தோள் களையுடையவனே! சத்துருவைக் கொல்லாமல் திரும்பமாட் டாத வீரனை நீ இன்று பாழாயினையே! இதென்ன கொடுமை! ஐயோ! நான் விதவையாயினனே! முதலில் மனை விக்கு முன் கணவன் மரணமடைவானுயின் அதற்கு மனைவி யினிடத்தில் குணமில்லாமையையே காரணமாகச் சொல்லு வார்கள். நான் பிழைத்திருக்கையில் நீ மரணமடைந் தனையே! இப்படி நேர்ந்ததற்கு என்னிடத்தில் குணமில்லா மையே அன்றி நன்னடத்தையுடைய உன்மேல் யாதொரு தோஷமுஞ் சொல்லவொண்ணுது.

ராமா! இனி நான் என் செய்வேன்? நினைக்கமுடியாத பராக்கிரமமுடையவனே! உனதன்னைமார்கள் புத்திரசோகத் தினுல் வருந்தித் தவிப்பார்களே! ஐயோ! முன்பு நீ வெகு காலம் நீண்ட ஆயுளுடன் இருப்பாயென்று கூறின சோதி டர்களின் வார்த்தை பொய்யாகிவிட்டதே! நீ அற்பாயுளாய்ப் போயினையே!

ஐயோ! ராமா! திக்கற்றவரும் மன இரக்கத்திற்கு இடமுமாகிய என்னைவிட்டு, பூமியை என்னைக் காட்டிலும் அன்பிற்கிடமான ஓர் பெண்மணியைப்போல் கட்டியணைத் துப் படுத்திருக்கின்றனையே! சுவர்க்கத்திலுள்ள உனது தந்தையான தசரத ராஜனை நினைத்துக்கொண்டு அங்குச் சென்றுவிட்டாய்போலும்! என்னை எப்பொழுதும் விட்டுப்

பிரியேன் என்று கூறின உனது வார்த்தை பொய்யாயிற்றே! ஐயோ! என்னுடன் ஒரு வார்த்தையேனும் பேசாதிருக்கின்றனையே! காகுத்தா! எப்பொழுதும் உன்னைவிட்டுப் பிரியாத என்னை இப்பொழுது தனியேவிட்டுத் தவிக்கச் செய்வது உனக்கு நீதியோ? என்னையும் உன்னிடம் அழைத்துக் கொண்டு போவாயாக.

ஐயோ! கரன் முதலான பதினாலாயிரம் ராக்ஷசர்களை எளிதில் ஒரு முகூர்த்த காலத்தில் கொன்ற தீரனான நீ அற்பனான பிரஹஸ்தனால் எப்படிக் கொலையுண்டனை? இதென்ன ஆச்சரியம்? ராவணா! ராமனை அடித்தாற்போல் என்னையும் சீக்கிரமாக அடித்து அவன்மேல் விழத்தள்ளுவாயாக. அவன் தலையோடு என் தலையையும், அவன் சரீரத்தோடு என் சரீரத்தையும் சேர்ப்பாயாக. நானும் அவன் சென்றவழியே செல்கிறேன்" என்று சீதை கண்களை மலர விழித்து அந்தத் தலையையும் வில்லையும் அடிக்கடி பார்த்து வருத்தத்தினால் பரிதபித்துப் புலம்பினாள்.

அப்பொழுது வாயில்காப்போனொருவன் அங்கு விரைந்து வந்து ராவணனை நோக்கி "ராஜனே! பிரஹஸ்தன் மந்திரிகளுடன் வந்திருக்கின்றனன். பெரிய கஷ்ட சாத்தியமான காரியத்தைப்பற்றி இப்பொழுதே சீக்கிரம் ஆலோசிக்க வேண்டுமாம்" என்றனன். உடனே ராவணன் அவ்விடத்தை விட்டு மந்திரிகளிடம் சென்றனன். ராவணன் சென்றவுடன் ராமனது மாயத்தலையும் வில்லும் கண்ணுக்குப் புலப்படாமல் போயின. பிறகு ராவணன் மந்திரிகளுடன் கலந்தாலோசித்து ராமனைக்குறித்துத்தான் செய்யவேண்டிய காரியத்தை நிச்சயித்தனன்.

முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்து மூன்றுவது ஸர்க்கம்.

## விபீஷணனது மனைவியான சரமை என்பவள் சீதையை சமாதானப் படுத்துதல்.

சீதை ராமனை நினைத்து மிகவும் வருந்திப் புலம்பி மூர்ச்சித்துக் கீழே விழுந்தபொழுது அவளிடத்தில் பிரீதியுள்ள விபீஷணனது மனைவியான சரமையென்பவள் அவளைத் தேற்றும்பொருட்டு ஓடி வந்தனள். அந்த சரமை ராவணனது கட்டளையினால் சீதையைப் பாதுகாத்துக்கொண்டிருந்தவள். அவள் மிகவும் இரக்கமுடையவளாகையால் சீதையைத் தன் உயிர்த்தோழியாக மதித்துவந்தனள். அவள் சீதையை நிதானமாகக் கைகளால் தடவிக்கொடுத்து சமாதானப்படுத்தி "சீதே! மனதில் சமாதானமடைவாயாக இப்பொழுது ராவணன் உன்னிடம் வந்ததும் ராமனது தலையையும் வில்லையும் உனக்குக் காட்டினதும் நீ அவற்றைப் பார்த்துப் புலம்பினதும் ஆகிய இவையெல்லாம் எனக்குத் தெரியும். வைதேகி! நீ சிறிதும் மனவருத்தமடைய வேண்டாம்.

ஜானகி! ராமனே சிறந்த வில்லாளி. வீரியம், பலம், மேன்மை முதலியவற்றிற் கிருப்பிடமானவன். அவனை ஒருவராலும் கொல்லமுடியாது. வானரர்கள் இறந்ததாகச் சொல்வதும் பொருந்தாது. அவர்கள் மரங்களைப் பிடுங்கிக்கொண்டு சண்டை செய்யும் தன்மையர். அன்றியும் தேவேந்திரனால் தேவதைகள் பாதுகாக்கப்பட்டிருப்பது போல் ராமனால் நன்கு பாதுகாக்கப்பட்டிருப்பவர். ஆகையால் அவர்களைக் கொல்வதும் சாத்தியமன்று. ராமன் புருஷசிரேஷ்டனாகையால் எப்படிப்பட்ட தசையில் இருப்பினும் அவனைக் கொல்வதற்கு எள்ளளவும் உபாயம் புலப்படவில்லை.

'ஆயின் அவன் தலையும் வில்லும் எங்ஙனம் அகப்பட்டன?' என்னில், மாயாவியான ராவணன் ராமனது தலை

யைப் போலும் வில்லைப் போலும் தன் மாயையினால் செய்து அவற்றை உனக்குக் காட்டி உன்னைத் தன்வசமாக்குவதற்குச் செய்தானே யன்றி வேறில்லை. அவன் இங்கிருக்கும் பொழுது பிரஹஸ்தனும் மந்திரிகளும் கூப்பிடுவதாக அழைக்கப்பட்டானல்லவா? இதன் காரணத்தைக் கூறுகிறேன் கேட்பாயாக. இப்பொழுது ராம லக்ஷ்மணர்கள் அளவில்லாத வானர சைன்னியங்களுடன் சமுத்திரத்தைத் தாண்டி லங்கையின் கோட்டைவாயிலில் வந்திருக்கின்றனர். அவர்களது வருகையால் பீதியடைந்த ராவணன் தகுந்த ஆலோசனை செய்வதற்கே மந்திரிகளுடன் சென்றனன்.

சீதே! அந்தா பேரி வாத்தியங்களும், முரசங்களின் சப்தமும் கேட்கின்றன பார். யுத்தம் செய்வதற்காக ராவணனது கட்டளையினால் ராக்ஷசர்கள் கூட்டம் கூட்டமாய் தேர்களிலும், குதிரைகளிலும், யானைகள் மேலும் ஆரோகித்துச் செல்லும் சத்தங்களைக் கேட்பாயாக. ராமன் கொலையுண்டிருப்பின் இப்படிப்பட்ட பரபரப்பும் ரணபேரி வாத்தியங்களின் ஓசையும் ஏற்படமாட்டாதன்றோ?

ஜானகி! இனி உன் கஷ்டங்கள் தொலைந்தன. ராமன் நிச்சயமாக யுத்தத்தில் ராவணனையும் அரக்கர்களையும் கொல்லப்போகின்றனன். தேவேந்திரனது மடியில் இந்திராணி உட்காருவதுபோல் நீ ராமனது மடியில் வீற்றிருக்கப் போகின்றனை. அப்பொழுது உன் முக மலர்ச்சியைக் கண்டு நான் சந்தோஷிக்கப்போகிறேன். கல்யாணி! பரந்த மார்பையுடைய ராமன் உன்னிடம் வந்து கலந்து, உன்னைக் கட்டியணைக்கையில் நீ அவனது மார்பில் ஆனந்தத்தினால் விளையும் கண்ணீர்களைப் பெருக்கப் போகின்றனை. பயிர்களோடு கூடின பூமி நல்ல மழை பெய்யப் பெற்று விளக்க முறுவதுபோல் நீ ராமனுடன் கூடி அவன் பராக்கிரமத்தைக் கண்டு மிகுந்த சந்தோஷம் அடையப் போகின்றனை. நீ ஆபரங் கிரணங்

கிரணங்களையுடைய சூரியனை வணங்குவாயாக. இந்த தேவன் சமஸ்த உயிர்களுக்கும் விரோதிகளைத் தொலைத்து வெற்றியைக் கொடுக்கக் கூடியவன்'' என்றனள்.

முப்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

முப்பத்து நான்காவது ஸர்க்கம்.

## ஸரமை ராவணனது அபிப்பிராயத்தைத் தெரிந்துகொண்டு ஸீதையிடம் வந்து சொல்லுதல்.

ஸீதை ராவணனது வார்த்தைகளினால் வஞ்சிக்கப்பட்டு வருத்தமுற்றிருக்கையில், ஸரமை தான் மொழிந்த நல்ல வார்த்தைகளால் ஆகாயம் நீரினால் பூமியைக் குளிரச் செய்வதுபோல் அவளை சந்தோஷப்படுத்தினள். பிறகு ஸரமை ஸீதையை நோக்கி "ஸீதே! உனது சௌக்கியத்தின் பொருட்டு நான் எங்கு வேண்டுமென்றாலும் எவர்க்கும் தெரியாமல் செல்வேன். நான் ஆகாயத்தில் செல்லும்போது என்னைப் பின் தொடர்ந்து வருவதற்கு வாயுவாயினும், கருடனாயினும் சமர்த்தரல்லர்." என்றனள்.

அப்பொழுது ஸீதை ஸரமையை நோக்கி "நேசியே! எனக்கு நன்மை செய்ய வேண்டுமென்று உனக்கு விருப்பமுளதாயின், உனக்கு இந்நினைவு திடமாய் இருக்குமாயின் நீ ராவணனிடம் சென்று அவன் என்ன செய்கிறானென்பதைத் தெரிந்துகொண்டுவருவாயாக. அவன் என் விஷயத்தில் என்ன செய்ய நிச்சயித்திருக்கிறான் என்பதைக் கண்டு வருவாயாக'' என்றனள்.

உடனே ஸரமை ஒருவர்க்கும் தெரியாமல் ராவணனது மந்திராலோசனை சபையை அடைந்து அங்கு பேசப்பட்ட சமஸ்த வார்த்தைகளையும் உற்றுக் கேட்டு மீண்டும் ஸீதையை அடைந்தனள். ஸீதை அவளைத் தழுவியணைத்து உட்கார

வைத்தனள். அப்பொழுது சரமை பேசத் தொடங்கி "சீதே! ராவணனது தாயான கைகஸியும், வயது சென்றவனை அவித்தனென்னும் மந்திரியும் உன்னை விட்டுவிடும்படி ராவணனுக்குப் பெரிய புத்திமதிகள் கூறினர். அவர்கள் ராவணனை நோக்கி 'நீ ராமனுக்குத் தகுந்த மரியாதைகளுடன் சீதையைக் கொண்டுபோய்க் கொடுத்து விடுவாயாக. அப்படி நீ செய்யாவிடில் உனக்கும் உன்னைச் சேர்ந்தவர்களுக்கும் பெரிய அனர்த்தம் விளையும். ஜனஸ்தானத்தில் அவன் அற்புதமாகச் செய்த கரதூஷணாதிகளின் வதமாகிற ஒன்றே இதற்குச் சான்றாகும். அது அப்படி இருக்கட்டும். சமுத்திரம் தாண்டுவதும், சீதையைக் காண்பதும், ராக்ஷசர்களெல்லோரையும் ஒருவனே யுத்தத்தில் கொல்வதுமாகிய இந்தச் செயல்களை அவனது வேலைக்காரனான ஒரு அனுமான் செய்தனனே! இது போதாதோ?' என்று கூறினர்.

அப்பொழுதும் ராவணன் உன்னை விடுவதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. சீதே! ராவணன் தன் மந்திரிகளுடன் இங்ஙனம் நிச்சயித்துக் கொண்டிருக்கிறானாகையால், யுத்தத்தில் மரணமடைந்தாலல்லது உன்னை விடப்போவதில்லை. ராமன் தப்பாமல் யுத்தத்தில் கொடிய பாணங்களால் ராவணனைக் கொன்று உன்னை மீட்கப்போகிறான்." என்றனள். இங்ஙனம் சரமை சொல்லிக் கொண்டிருக்கையில் அவளது வார்த்தை உண்மையென்பதற்கு அறிகுறியாக பேரிவாத்தியத்தின் முழக்கமும் சங்க வாத்தியங்களின் துவனிகளும் நிறைந்த வானர சைன்னியங்களின் சிம்மநாதம் செவியிற்பட்டுக் குளிர்ந்தது.

முப்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

### முப்பத்தைந்தாவது ஸர்க்கம்.

## மாலியவான் ராமனுக்கு சீதையைச் சமர்ப்பிப்பதே நியாயமென்று ராவணனுக்குப் போதித்தல்.

அப்பொழுது ராமன் சங்கத் துவனிகளும் பேரி வாத்தியத்தின் சப்தங்களும் 'இன்னது இனையது' என்று தோன்றுமல் ஒரே கோஷமாகக் கிளம்பும்படி செய்துகொண்டு லங்கையின்மேல் எதிர்த்துச் சென்றனன். ராவணன் அந்த சப்தங்களைக் கேட்டுச் சிறிது பயந்து மந்திரிகளைக் கூட்டி ஆலோசித்தனன். அவன் அவர்களை நோக்கி "நீங்கள் பயங்கரமான பராக்கிரமமுடையவராய் இருந்தும், ராமனது சைன்னியங்களைக் கண்டு ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு உத்சாகமற்றிருப்பதற்கென்ன காரணம்?" என்றனன்.

அப்பொழுது ராவணனுக்குப் பாட்டனோடுகூடப் பிறந்தவனும், மிகவும் மதியுள்ளவனுமான மாலியவான் என்னும் ராக்ஷசன் ராவணனை நோக்கி "ராஜனே! ஓரரசன் தன் விரோதியின் பலத்தைக் காட்டிலும் தன் பலம் குறையப் பெற்றிருப்பினும், தன் விரோதியின் பலத்தினோடு சமமான பலமுடையவனயிருப்பினும், தான் அப்படிப்பட்ட விரோதியுடன் கட்டுக்கொள்ளவேண்டும். அவ்வரசன் தன் பகைவனைக் காட்டிலும் பலமுள்ளவனயின் அவனோடு விரோதம் பாராட்டவேண்டும். ராவணு! நீதி சாஸ்திரத்தில் இங்ஙனம் சொல்லியிருப்பதால், பலம் குறைந்திருக்கப் பெற்ற நீ பலவானன ராமனுடன் சமாதானஞ் செய்துகொள்வதே எனக்கு சம்மதமாய் இருக்கிறது. ஆகையால் சீதையைக் கொடுத்துவிடுவாயாக.

ராவணு! தேவரிஷிகள், கந்தருவர் முதலிய அனைவரும் ராமனுக்கு ஜயம் உண்டாக வேண்டுமென்று விரும்புகின்றனர். அப்படிப்பட்ட தேவபலமுடைய ராமன் பலவானுகை

யால் அவனோடு விரோதம் வைத்துக்கொள்ள வேண்டாம். தேவாதிகள் ராமனது ஜயத்தை விரும்புவதற்கென்ன காரணம்: என்னில்; பிரமதேவன் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் அவலம்பமாக தர்மம், அதர்மம் என்கிற இரண்டையும் சிருஷ்டித்தனன். அவ்விரண்டில் நல்லியற்கையுடைய தேவர்கள் தர்மத்தையும், துஷ்ட குணமுடையவர்களான ராக்ஷசர்களும் அசுரர்களும் அதர்மத்தையும் அங்கீகரித்தனர். இங்ஙனம் தேவாதிகள் தர்ம பக்ஷத்தைக் கைப்பற்றியிருப்பது பற்றியும், ராமனும் தர்மத்தைக் கைப்பற்றியிருப்பதனாலேயும் தேவதைகள் அந்த ராமனிடம் பக்ஷபாதிகளாகையால், அவன் மிகுந்த பலவானாயிருக்கின்றனன்.

பத்துத் தலையனே! நம்மினத்தவர்களான ராக்ஷசர்கள் காடுகளில் திரிந்து பரிசுத்தர்களான மகரிஷிகளுக்குச் செய்யும் தீங்குகள் அளவற்றவையாகையால் அந்த ரிஷீச்வரர்கள் ஓயாமல் அக்கினிஷ்டோமம் முதலிய யாகங்களைச் செய்வதும் வேதங்களை ஓதுவதுமாய் இருக்கின்றனர். அவர்கள் அங்ஙனம் செய்வதால் ராக்ஷசர்கள் அவர்களை அணுக முடியாமல் நான்கு திசைகளிலும் பயந்து ஓடிப் போகின்றனர். இன்னும் அந்த ரிஷிகள் ஹோமஞ் செய்கின்ற அக்கினிகளினின்று கிளம்பும் புகைகள் பத்துத் திசைகளிலும் பரவி ராக்ஷசர்களின் பலத்தைக் குறைக்கின்றன. அவர்கள் செய்யும் தவமகிமையினால் ராக்ஷசர்கள் தபிக்கப்படுகிறார்கள். இங்ஙனம் நமது அதர்மங்களால் ரிஷிகளுக்குண்டான கோபம் நம்மை நாசஞ் செய்து தேவாதிகளுக்கு பலத்தை வளரச் செய்கின்றது. நீ தேவதைகள், தானவர்கள், யக்ஷர் முதலானவர்களால் மரணம் நேராதிருக்கும்படி வரம் பெற்றனை. இப்பொழுது பலிஷ்டர்களும் மகா பராக்கிரம சாலிகளுமான மானிடர்களும், வானரர்களும் கரடிகளும், கொண்டை முசுக்களும் பெரிய சைன்னியத்துடன் இவ்விடம் வந்து கர்ஜிக்

கின்றனர். உனக்கு இவர்களிடத்தில் மரணம் விளையாதபடி வரமில்லை.

தசக்ரீவனே! அதுமட்டுமல்ல. ராக்ஷசர்களுக்கு விநாசம் விளையப் போகிறதென்று தெரிவிக்கிற பல பயங்கரமான கெட்ட சகுனங்களையும் நீ கவனிக்கவேண்டும். மேகங்கள் கொடிய சப்தங்களுடன் கர்ஜித்துக்கொண்டு லங்கை முழுவதும் ரத்தங்களைப் பெய்கின்றன. குதிரை முதலிய வாகனங்கள் ரோதனம் செய்துகொண்டு கண்ணீர்களைப் பெருக்குகின்றன. நரிகள் பயங்கரமாக ஊளையிடுகின்றன. இன்னும் இவைபோன்ற கெட்ட சகுனங்களை நீ காணவில்லையோ? இந்த ராமன் கேவலம் மானிடனல்லன். விஷ்ணு தேவனே அரக்கர்களைக் கொல்ல மானிட உருவம் தாங்கி வந்திருக்கின்றனனென்று தோன்றுகிறது. ஆகையால் அவனுடன் சமாதானம் செய்து கொள்வாயாக" என்றனன்.

முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தாறாவது ஸர்க்கம்.

## ராவணன் லங்கையைப் பாதுகாக்க ஏற்பாடு செய்யல்.

ராவணனுக்கு மரணகாலம் சமீபித்து விட்டமையால் மாலியவான் சொன்ன இதமான வசனங்களை ஏற்றுக்கொள்ளாமல் மிகுந்த கோபத்துடன் அவனை நோக்கி "கிழவனே! ராமன் ஓர் மானிடனாகையால் அற்பபலமுடையவன். குரங்குகளை சகாயமாகக் கொண்டமையால் நல்ல பலமில்லாதவன். தந்தையால் துரத்தப்பட்டு வந்தவனாகையால் ராஜ்ஜியமில்லாதவன். நானோ ராக்ஷசர்களுக்கெல்லாம் அதிபதி. தேவர்களுக்கும் பயத்தை விளைவிப்பவன். எல்லாவித பராக்கிரமங்களாலும் குறைவற்றிருக்கின்றனன். இப்படிப்பட்ட என்னை நீ குறைந்தவனாகப் பேசின காரணம் என்ன? எனது

ராக்ஷஸ ஜாதியில் இத்தகைய வீரன் இருக்கிறான் என்னும் துவேஷத்தினாலா? பகைவர்களிடத்துள்ள பக்ஷபாதத்தினாலா? பயத்தினாலா? நீ சொல்லியவையனைத்தும் உண்மையாய் இருப்பினும் லக்ஷ்மிதேவியைப் போன்ற சீதையை ராமனுக்கு பயந்து நான் கொடுக்கமாட்டேன்.

பாட்டனே! சீக்கிரத்தில் அந்த ராம லக்ஷ்மணர்கள் சமஸ்த வானர சைன்னியங்களுடன் என்னால் நாசமடையப் போவதை நீ காணப்போகின்றனை" என்று கூறிச் சிறிது கோபம் குறையப்பெற்று வயதுசென்ற பாட்டனை அங்ஙனம் கோபமாகப் பேசி அவமதித்ததைப் பற்றிச் சிறிது பச்சாத்தாபங்கொண்டு மீண்டுமவனை நோக்கி "ராமனே வந்து என்னை பயப்படுத்தி என்னை இரு துண்டுகளாக வெட்டினும், நான் ராமனுக்கே அன்று; மற்ற எப்படிப்பட்டவனுக்கும் வணங்கமாட்டேன். இது என் ஜன்மத்தில் பிறந்த குணமாகையால் விடத்தக்கதன்று" என்றனன். பிறகு மாலியவான் தான் செய்த உபதேசம் பயன்படாமைக்கு லஜ்ஜைப்பட்டு விடைபெற்றுக்கொண்டு தன் வீட்டிற்குப் போயினன்.

பிறகு ராவணன் லங்கைக்குக் கிழக்கு வாசற்படியில் பிரகஸ்தனையும், தெற்கு வாசற்படியில் மகாபார்சுவனையும், மேற்கு வாசற்படியில் இந்திரஜித்தையும் அநேக ராக்ஷசர்களுடன் பாதுகாவல் புரியும்படி ஆஞ்ஞாபித்தனன். வடக்கு வாசற்படியில் சுகசாரணர்களை நியமித்து தானும் அங்கேயே இருப்பதாக தெரிவித்தனன். பட்டணத்தின் நடுவிலுள்ள குல்மத்தில் விருபாக்ஷன் என்னும் ராக்ஷசனை அநேக ராக்ஷசர்களுடன் இருக்கும்படி ஏற்பாடு செய்தனன்.

முப்பத்தாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

### முப்பத்தேழாவது ஸர்க்கம்.

## ராமன் வானர சைன்னியங்களுக்குப் பாதுகாப்புகளை ஏற்பாடு செய்தல்.

ராமன், லக்ஷ்மணன், சுக்கிரீவன், விபீஷணன், அங்கதன் முதலியோர் ஒன்றுகூடி ராவணனை ஜயிப்பதற்குத் தக்க ஆலோசனைகளைச் செய்யத் தொடங்கினர். அப்பொழுது பக்ஷிரூபம் தரித்து விபீஷணன் ஆஞ்ஞையால் லங்கைக்குச் சென்று திரும்பிவந்த அவனது நான்கு மந்திரிகளும் ராவணன் யுத்தத்திற்காகச் செய்திருக்கும் சகலவித ஏற்பாடுகளையும் தாங்கள் நேரில் கண்டபடி விஸ்தாரமாகக் கூறினர். லங்கையின் நான்கு வாயில்களிலும் கோடிக் கணக்கான ராக்ஷச வீரர்கள் கணக்கற்ற பலவிதமான ஆயுதங்களுடன் காவல்புரிந்து வருவதைத் தாங்கள் கண்டபடி கூறினர்.

உடனே ராமன் உரத்த குரலில் வானரர் அனைவர்க்கும் கேட்கும்படி "நீலன் பல வானரர்களுடன் கூடி லங்கையின் கிழக்கு வாசலில் சென்று பிரகஸ்தனுடன் சண்டை செய்வானாக. அங்கதன் தெற்கு வாசற்படிக்குச் சென்று மஹாபார்சுவனைத் துன்புறுத்துவானாக. அனுமான் கோடிவானரர்களால் சூழப்பட்டு மேற்கு வாசற்படிக்குச் சென்று இந்திரஜித்துடன் யுத்தம் செய்வானாக. வடக்கு வாயிலிலுள்ள ராவணனையும் சுகசாரணர்களையும் நானே லக்ஷ்மணனுடன் கூடி எதிர்த்து யுத்தம் செய்கிறேன். சுக்கிரீவனும் ஜாம்பவானும் விபீஷணனும் ஆகிய இம்மூவரும் ராவணனிருக்கும் வடக்கு வாசலுக்கும் இந்திரஜித்து இருக்கிற மேற்கு வாசலுக்கும் இடையிலிருந்துகொண்டு அனுமானுக்கும் எனக்கும் சகாயம் செய்வார்களாக. எல்லா வானரர்களும் இனி இப்பொழுது இருக்குமாறு மானிட உருவம் தரித்திருக்கலாகாது. நமது ஜனங்களில் நம்முடையவரென்று தெரிவதற்கு வானரர்களாய் இருக்கையே நமக்கு அடையாள

மாகும்" என்று கூறிவிட்டு சுவேல பர்வதத்தின் தாழ்வரை மிகுதியும் அழகாய் இருப்பதைக் கண்டு அதன் மேலேற விருப்பங்கொண்டனன்.

முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தெட்டாவது ஸர்க்கம்

## ராமன் லங்கையைப் பார்க்கும்பொருட்டு சுவேல பர்வதத்தின் மேலேறுதல்.

பிறகு ராமன் லக்ஷ்மணன் பின் தொடர்ந்து வரப் பெற்று சுவேல பர்வதத்தின்மேல் ஏற நினைத்து சுக்கிரீவ விபீஷணர்களை நோக்கி "நாம் எல்லோரும் இந்த சுவேல பர்வதத்தின்மேல் ஏறி இன்றிரவெல்லாம் இதன்மேல் தங்கியிருந்து ராவணனது பட்டணமாகிய லங்காபுரியைக் காண்போம். அப்படிபாவி சீதையைக் கொண்டுபோயினனல்லவா? அவனொருவனைப்பற்றியேயன்றோ இதர ராக்ஷசர்களையும் கொல்ல நேருகிறது" என்றிங்ஙனம் கூறிக்கொண்டே சுவேல பர்வதத்தின் மேலேறினன்.

அப்பால் சுக்கிரீவன், விபீஷணன், அநுமான், அங்கதன் முதலிய வானர சிரேஷ்டர்களும் அவனைப் பின்பற்றி ஏறினர். பிறகு மற்றுமுள்ள பல வானரர்களும் மிகுந்த வேகத்துடன் கூட்டங் கூட்டமாய் அம்மலையின் மேலேறினர். சீக்கிரத்தில் அந்த ராமாதிகள் அந்த சுவேல பர்வதத்தின் நாற்புறத்திலும் மேலேறி, திரிகூட பர்வதத்தின் சிகரத்தில் ஆகாயத்தில் தொங்குவதுபோல் புலப்படுகின்ற லங்காபுரத்தைக் கண்டனர். அப்பொழுது கறுத்த ராக்ஷசர்கள் லங்கையின் பிராகாரத்தின் குறடுகளைச் சுற்றி நின்று அப்பொழுது தான் கட்டப்பட்ட மற்றொரு பிராகாரம்போல் பிரகாசிக்கையில் அதை வானரோத்தமர்கள் கண்டனர். அப்பொழுது சூரியன் அஸ்தமித்தனன். அந்த ராமாதிகள்

அன்றிரவு சுவேல பர்வதத்தின் நுனியில் சுகமாக வாசஞ் செய்துகொண்டிருந்தனர்.

முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## முப்பத்தோன்பதாவது ஸர்க்கம்

### ராமன் லங்காபுரத்தைக் காணுதல்.

அதன் மறுநாள் பொழுது விடிந்தவுடன் அவ்வானரர்கள் லங்கையிலுள்ள அழகிய அரண்மனைகளையும், உத்தியான வனங்களையும், கோபுரங்களையும், மண்டபங்களையும், குளங்களையும் கண்டு 'தேவேந்திரனுடைய நகரமான அமராவதியோ? அல்லது குபேரனுடைய பட்டணமோ?' என்று ஐயமுற்று ஆச்சரியமடைந்தனர். சில வானர வீரர்கள் சுக்கிரீவனால் கட்டளையிடப்பெற்று லங்காபுரிக்குப் போயினர். அவர்களுடைய காலடிகளால் கிளம்பின தூள் ஒரு நிமிஷத்திற்குள் ஆகாயத்தில் பரவிச் சென்றது.

லங்கையின் வனங்களிலுள்ள கரடிகளும், சிம்மங்களும், பன்றிகளும், யானைகளும், எருமைக்கடாக்களும் வானரர்களது சிம்மநாதங்களைக் கேட்டவுடன் மிகவும் பயந்து மூலைக்கு ஒன்றாக ஓடின. இங்ஙனம் போய்க்கொண்டிருக்கிற அவ்வானரர்களுக்கு திரிகூட பர்வதத்தின் மூன்று சிகரங்களில் ஒன்றாகிய நடுச்சிகரம் புலப்பட்டது. ஆகாயத்தையளாவி மிகவும் உயர்ந்த அச்சிகரம் நூறு யோசனை அகன்று நிர்மலமாகிப் பார்க்க மிகவும் அழகாயிருந்தது. மற்றும் அது மழமழப்புற்றதும் ரமணீயமாயிருப்பதுமான காந்தி விளங்கப்பெற்று பக்ஷிகளுக்குங்கூட ஏற முடியாததாய் இருந்தது. ராவணனுடைய நகரமான லங்கை அச்சிகரத்தின்மேல் நூறு யோசனை விஸ்தார முடையதும் முப்பது யோசனை நீளமுடையதுமாக ஏற்பட்டிருந்தது.

அந்த லங்கா நகரமானது வெளுத்த மேகம் போன்ற உயர்ந்த கோபுரங்களாலும் பொன் மயமான மதில்களாலும்

வெள்ளி மயமான மாட மாளிகைகளாலும் அலங்கரிக்கப் பட்டு மிகவும் அழகு திகழப்பெற்று விளங்கியது. நகரத்தின் நாற்சந்தி வீதியின் நடுவில் ஆயிரம் ஸ்தம்பங்களால் அலங் கரிக்கப்பட்டு உயர்ந்து கயிலாயத்தை நிகர்த்த ராவணனது கண்போன்ற சிறந்த மாளிகை ஒன்று விளங்கியது. அதை எப்பொழுதும் குறையாமல் நூறு ராக்ஷசர்கள் பாதுகாத்துக் கொண்டிருப்பர். இங்ஙனம் மனத்திற்கு மிகவும் இனியதாகி நல்ல அடவிகளும் விளையாடுவதற்குரிய மலைகளும் விசித்திர மான உத்தியான வனங்களும் அமைந்து விளக்க முற்றிருப் பதும், பலவகை ராக்ஷசர்கள் வசிக்கப்பெற்றதும் எல்லா பதார்த்தங்களும் நிறைந்து விளங்குவதுமான லங்காபுரத்தை ராமன் வானரர்களுடன் கண்டு ஆச்சரிய முற்றனன்.

முப்பத்தோன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பதாவது ஸர்க்கம்.

## சுக்கிரீவனும் ராவணனும் துவந்தயுத்தம் செய்தல்.

அப்பொழுது ராமன் அந்த லங்காபுரியின் கோபுரத்து நுனியில் ராவணன் இருக்கக் கண்டனன். அவனுடைய இரண்டு பக்கங்களில் இரண்டு வெண்சாமரங்களும், தலைமேல் வெற்றியை விளைவிக்கும்படியான வெண்கொற்றக் குடையும் பிரகாசித்துக் கொண்டிருந்தன. சுக்கிரீவன் ராவணனைப் பார்த்தவுடனே 'ராமனுக்கெதிரில் துர்ப்புத்தியாகிய இவன் ராஜோபசாரத்துடன் எங்ஙனம் இருக்கலாகும்!' என்று கோபத்தின் மிகுதியால் விரைந்து மனோபலமும் தேக பல மும் மிகப்பெற்று வானரர்களும் ராமனும் பார்த்துக்கொண் டிருக்கும் பொழுதே அப்பர்வத சிகரத்தினின்று ராவண னிருக்கும் கோபுரத்திற்குக் கிளம்பினன்.

சுக்கிரீவன் ராவணனை நோக்கி "அடே! ராக்ஷசா! நான் லோகநாதனாகிய ராமனது நண்பனும் வேலைக்காரனுமான

சுக்கிரீவனென்பவன், உன்னுடன் சண்டை செய்ய வந்துளேன்" என்று கூறிக்கொண்டே அவனது கிரீடங்களைப் பிடித்து இழுத்துத் தரையில் விழும்படி தள்ளித் தானும் கீழே குதித்தனன். மீண்டும் மேலே கிளம்பித் தன்மேல் எதிர்த்துவரும் அந்த சுக்கிரீவனை ராவணன் மிகுந்த கோபத்துடன் கைகளால் பிடித்துத் தரையில் விழத்தள்ளினன்.

சுக்கிரீவன் பந்துபோல் எழும்பித் தனது இரு கைகளாலும் ராவணனை இழுத்துத் தள்ளினன். பிறகு அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் முட்டிகளால் குத்துவதும், உள்ளங் கைகளால் அறைவதும், முழங்கைகளால் இடிப்பதும் நகங்களால் பிறுவதுமாகிப் பல வகைகளில் கடூரமான மல்லயுத்தஞ் செய்தனர். பின்னும் அவ்விருவரும் நெடுநேரம் மல்லயுத்தஞ் செய்து பிறகு மேலெழும்பிக் குதிப்பதும், ஒருவரையொருவர் பிடித்திழுப்பதும் கைகளாலும் கால்களாலும் பின்னிக்கொள்வதுமாகி ஒருவர்க்கொருவர் தேகங்களை அழுந்தக் கட்டிக்கொண்டே மதிலுக்கும் அகழிக்கும் இடையில் வீழ்ந்தனர். மறுபடியுமெழுந்து ஒருவரையொருவர் பிடித்து மேல் தூக்கித் தரையில் தள்ளுபவராகி இங்ஙனம் பலவிதமாகவும் விசித்திரமாகவும் நெடுநேரம் அமராடினர். பிறகு மண்டலகதி முதலான பலவகைப் போர்த்துறைகளைப்பற்றி யுத்தஞ் செய்தனர்.

அப்பால் அவ்விருவரும் விசித்திரமான வகையில் வட்டமாயோடுவதும், பலவாறு நிற்பதும் வளைந்து வளைந்தோடுவதும், முன் செல்வதும், பின் வருவதும், குறுக்கே செல்வதும், இடசாரி வலசாரியாகச் செல்லுவதும் எதிரியின் அடி தன்மேல் படாதபடி, சாதுரியமாக விலகுவதும், ஒருவன் நிற்க மற்றொருவன் அவனைச் சுற்றியோடுவதும், ஒருவனையொருவன் எதிர்த்து விரைந்தோடுவதும், உடம்பை ஒடுக்குவதும் விரிப்பதுமாகி மெதுவாகச் செல்வதும், தவளை

போற் செல்வதுமாகிய பலவகை வழிகளில் சென்று ஒரு வரையொருவர் வெல்ல வழி பார்த்தனர்.

இங்ஙனம் சண்டை செய்து கொண்டிருக்கும்போது ராவணன் இளைப்புற்று எங்குப் பார்க்கிலும் ராவணனாகவே தோற்றுவிக்கும்படியான தன் மாயா பலத்தைக் காண்பிக்கத் தொடங்கினன். ஜயசீலனான சுக்கிரீவன் அவனது நினைவை யறிந்து சிறிதும் இளைப்படையாமல் வெற்றி வீரனாகவே ஆகாயத்தில் கிளம்பி, கபடத்தில் நுழையாமல் தர்ம யுத்தத் திலேயே ராவணனைக் கொல்ல வல்லவனாயினும், அது ராம னது காரியமாதலால் அங்ஙனம் செய்யாது ராமனையடைந் தனன். ராவணன் சுக்கிரீவன் மீளவும் வருவானென்று ஏமாறி அங்கேயே நின்றுகொண்டிருந்தனன்.

நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தோராவது ஸர்க்கம்.

### ராவணனிடஞ் சென்று மிக்க சாகசஞ் செய்துவந்த சுக்கிரீவனிடத்து ராமன் தனது உள்ளன்பைத் தெரிவித் தலும், ராம சைன்னியங்கள் அணிவகுக்கப் பெறுதலும், அங்கதன் தூதுசென்று பிரபல காரியங்கள் செய்து வருதலும்.

ராமன் சுக்கிரீவனைக் கட்டியணைத்து "நீ என்னுடன் ஆலோசிக்காமல் இப்படிப்பட்ட பெரிய சாகசம் செய்தனையே. ராவணனால் உனக்கு என்ன தீங்கு நேருகிறதோ வென்கிற அச்சத்தினால் நானும் விபீஷணனும் பரிதவித்தனம். இனி மேலாயினும் இப்படிப்பட்ட சாகசம் செய்யாதிருப்பாயாக. ஏனெனில், உனக்கு ஏதேனும் கெடுதி நேரிடுமாயின், எனக்கு சீதையாலாவது, லக்ஷ்மணனாலாவது, பரதனா லாவது, சத்துருக்கனனாலாவது விளையும் பிரயோஜனமென்? சுக்கிரீவா! சற்று முன்பு நீவாராதிருக்கும்போது உனது பராக்கிரமம் எனக்குத் தெரிந்திருப்பினும், உன்னிடத்தி

னுள்ள அன்பின் மிகுதியால் 'உனக்கு அபாயம் விளையுமோ? என்னவோ?' என்று சங்கித்து, அப்படி ஒருக்கால் நேர்ந் தால் ராவணனைக் கொன்றபின் விபீஷணனுக்கு லங்கையில் முடி சூட்டி குலதர்மம் இடையில் அழிந்து போகாதபடி அயோத்திக்குச் சென்று பரதனை ராஜ்ஜியத்தில் நிறுத்தி, பிறகு என் தேகத்தை விடவேண்டுமென்று இங்ஙனம் மன தில் எண்ணமிட்டுக் கொண்டிருந்தேன்." என்றனன்.

சுக்கிரீவன் ராமனைப் பார்த்து "ரகுகுலவீரனே! ராமா! உனக்குப் பணிசெய்வதே எனக்கு ஸ்வரூபமாய் இருக்க நீ இங்ஙனம் கூறுவதழகோ? நான் செய்த காரியம் ஒரு வேலைக் காரன் தன் எஜமானனுக்குச் செய்யவேண்டிய காரியமே யன்றி வேறல்லவே" என்றனன்.

பிறகு ராமன் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! நாம் பெரிய இவ்வானர சைன்னியங்களை அந்தந்த வானர சேனு பதிகளுக்கு வெவ்வேறாகப் பங்கிட்டுக்கொடுத்து, கருடவியூ கம் முதலிய வியூகங்களால் ஒழுங்கு படுத்திக்கொண்டிருப் போம். மிகப்பெரிய வீரர்களான கணக்கற்ற வானரர்களுக் கும் ராக்ஷசர்களுக்கும் விநாசம் நேருமென்பதை அறிவிக் கின்ற பயங்கரமான சகுனங்களைக் காணுகின்றோம். காற்று வேகமாய் வீசுகின்றது. பூமி நடுங்குகின்றது. பர்வத சிகரங்கள் அல்லாடுகின்றன. மரங்கள் காரணமில்லாமலே முறிந்து விழுகின்றன. மேகங்கள் ரத்தமழைகளைப் பெய் கின்றன. அமங்களமாக குள்ளநரி முதலிய மிருகங்களும், கழுகு பருந்து முதலிய பறவைகளும் பலஹீனமான குரலில் கத்துகின்றன. சந்திரன் இரவில் வெப்பத்தை விளைவிக் கின்றனன். சீக்கிரமாக சைன்னியங்களுடன் லங்கைக்குச் செல்வோமாக" என்றனன்.

அப்பால் விடியற்காலையில் ராமன் வில்லைத்தரித்துப் பெரிய சைன்னியம் சூழ்ந்துவரப்பெற்று லங்காபுரத்தைக்

குறித்துச் சென்றனன். விபீஷணன், சுக்கிரீவன், அனுமான், ஜாம்பவான், நலன், சுஷேணன், நீலன், லக்ஷ்மணன் ஆகிய இவர்கள் ராமனைப் பின் சென்றனர்.

பிறகு அனைவரும் சீக்கிரத்தில் லங்கையை யடைந்து தம் தமக்குச் சொன்ன இடங்களைக் கடவாமல் விடுதிகளை ஏற்படுத்திக்கொண்டு இறங்கினர். ராமன் வில்லைத்தரித்து லக்ஷ்மணனுடன் கூடி, லங்கையின் வடக்கு வாசற்படியைத் தன் சேனையைப் பிறர் துன்புறுத்தாதபடி பாதுகாத்துக்கொண்டு தகைந்தனன். ராமன் அந்த வடக்கு வாயிலிலுள்ள வேதிகையின்மேல் ராக்ஷசர்கள் வைத்திருக்கிற நானாவிதமான பல ஆயுதங்களையும் கவசங்களையும் கண்டனன்.

நீலன் கிழக்கு வாசலில் மைந்தனோடும் துவிவிதனோடும் கூடி நின்றிருந்தனன். அங்கதன், ருக்ஷன், கவாக்ஷன், கஜன், கவயன் ஆகிய இவர்களோடு கூடித் தெற்கு வாசற்படியைத் தடுத்து நின்றனன். அனுமான் பிரமாதியோடும், பிரகசனோடும் மற்றும் பல வானரர்களோடும் கூடி மேற்கு வாசலில் காத்துக்கொண்டிருந்தனன். சுக்கிரீவன் சகல வானர ரோடும் கூடி பலிஷ்டர்களான ராவண இந்திரஜித்துகளுடன் யுத்தம் செய்கிற ராமன் அனுமான் ஆகிய இருவரில் எவர்க்கு வேண்டினும் சகாயம் செய்யும் பொருட்டு வடக்கு வாசலுக்கும் மேற்கு வாசலுக்கு மிடையில் மிக்க அவதானத்துடன் இருந்தனன்.

இங்ஙனம் புகழ்பெற்ற வானரசேனா வீரர்களின் கீழ்ப் படிந்து நடப்பவரான முப்பத்தாறுகோடி வானரர்கள் லங்காபுரியைத் தகைந்துகொண்டு நின்றனர். அவ்வானர வீரர்கள் ஒவ்வொருவாசலிலும் ஒவ்வொரு கோடி வீதம் நிற்கும்படி ஆஞ்ஞாபிக்கப்பட்டனர். பிறகு அவர்கள் கோரப் பற்களுடன் கூடின பெரும்புலிகள் போன்று மரங்களையும் பருவத

சிகரங்களையும் பெயர்த்துப் பிடித்துக்கொண்டு மிகுந்த உத்சாகத்துடன் யுத்தம்செய்யத் தயாராக இருந்தனர். அவர்களில் சிலர் பத்து யானை பலமுடையவர்களும், சிலர் நூறுயானை பலமுடையவர்களும் ஆயிரம் யானை பலமுடையவர்களும், சிலர் ஓகக்கணக்குடைய யானைகளின் பலமுடையவர்களும், மற்றும் சிலர் இவ்வளவு அவ்வளவென்று அளவிட முடியாத பலமுடையவர்களுமாயிருந்தனர். இங்ஙனம் அவ்வானர வீரர்களால் அந்தத் திரிகூட பர்வதமெல்லாம் நாற்புறத்திலும் சூழப்பட்டிருந்தது.

அப்பொழுது ராமன் அங்கதனை நோக்கி 'நீ ராவணனிடம் சென்று நான் சொன்னதாக இங்ஙனம் சொல்லுவாயாக; 'அடே! ராக்ஷசா! உனது செல்வமும், பிரபுத்துவமும், பிழைக்கும் விருப்பமும், அறிவும் சீக்கிரத்தில் நாசமடையப் போகின்றன. நீ கர்வமுற்று ரிஷிகளுக்கும், தேவதைகளுக்கும், கந்தருவர்களுக்கும் அப்சரஸ்திரீகளுக்கும், நாகர்களுக்கும், யக்ஷர்களுக்கும், அரசர்களுக்கும் எந்தெந்த அபகாரம் செய்தனையோ, அதற்கெல்லாம் மூலகாரணமான பிரமாவின் வரத்தினாலுண்டான கொழுப்பெல்லாம் இப்பொழுது நிச்சயமாக அழியப் போகிறது. தேவதைகளும் மகரிஷிகளும் உன்னால் என்ன துன்பமடைந்தார்களோ அந்தத் துன்பத்தை நீ என்னால் அடையப் போகின்றனை.

ராக்ஷசாதமா! மாரீசனது மாயையால் என்னை அப்புறம் போகச் செய்து எந்த பலத்தைக்கொண்டு சீதையை அபகரித்தனையோ அந்த பலத்தையெல்லாம் இப்பொழுது காட்டுவாயாக. இப்பொழுது நீ சீதையைக் கொடுத்து என்னை சரணமடையாவிடில் எனது கொடிய பாணங்களால் உலகம் முழுவதிலும் ராக்ஷசன் ஒருவனும் இல்லாது முடியும்படி செய்து விடுகிறேன். விபீஷணன் என்னைச் சரணமடைந்தமையால் சீக்கிரத்தில் லங்கைக்கு அரசனாகப் போகின்றனன்.

நீ சீதையைக் கொடுத்துச் சரணமடைவாயாயின் விபீஷணனுக்கு ராஜ்ஜியங் கொடுத்து உன்னை உயிரோடு விடுவேன். இல்லாவிடில் தைரியத்தை ஊன்றி, வீரியத்தையும் கைப்பற்றி என்னுடன் யுத்தம் செய்வாயாக. நீ யுத்தத்தில் என் பாணங்களாலடிக்கப்பட்டு மரணம் அடைந்து அதனால் பாவங்களைத் துறந்து பரிசுத்தனாவாய். அப்படி யன்றி நீ பறவையுருவமெடுத்து மனோவேகத்துடன் மூன்று லோகங் களுக்குப் போயினும், என் கண்களில் பட்டபின், பிராண னோடு திரும்பிப்போக வல்லனல்லை. இனி உலகத்தில் ஒரு ராக்ஷசனைக் கூட பிழைத்திருக்கும்படி விடமாட்டே னாகையால் உனக்கு சாவுச்சடங்குகளைச் செய்பவன் எவனுமே இருக்கமாட்டான். ஆகையால் இப்பொழுது நீயே உனக்கு மரணச்சடங்குகளைச் செய்துகொள்வாயாக. நீ சாகப்போகிறா யாகையால் இப்பொழுதே லங்கை முழு வதையும் நன்கு பார்த்துக்கொள்வாயாக' என்று சொல்லு" என்றனன்.

உடனே அங்கதன் ஆகாயத்தில் கிளம்பி ஒரு முகூர்த்த காலத்தில் ராவணனது அரண்மனையையடைந்து, அங்கு மந்திரிகளுடன் உட்கார்ந்திருக்கின்ற ராவணனைக்கண்டனன். முதலில் தன் ஊரையும் பெயரையும் தெரிவித்து பிறகு அனைவர்க்கும் கேட்கும்படி ராவணனை நோக்கி ராமன் மொழிந்த வார்த்தைகளனைத்தினையும் ஒன்றுகூட விடாமல் கூறினன். இங்ஙனம் அவன் கூறுகையில் ராவணன் கோபத் தினால் கண்கள் சிவக்கப்பெற்று அவ்வங்கதனைக் கொல்லும் படி மந்திரிகளுக்குக் கட்டளையிட்டனன். உடனே நான்கு ராக்ஷசர்கள் அவனைப்பிடித்துக்கொள்ள, அவர்களைத் தன் இருகரங்களாலும் பக்ஷிகளைப்போல் இறுகப் பிடித்துக் கொண்டு பர்வதம் போன்ற மாளிகையின்மேல் கிளம்பினன். அந்த ராக்ஷசர்கள் ராவணன் பார்த்துக்கொண்டிருக்கும்

பொழுதே அவ்வங்கதனுடைய வேகத்தினால் ஆகாயத்தினின்று உதறப்பட்டு பூமியில் விழுந்தனர்.

பிறகு அங்கதன் ராவணனுடைய உயர்ந்த அவ்வழகிய மாளிகையைக் காலால் உதைக்க, அது பல சுக்கல்களாகப் பிளந்து பூமியில் விழுந்தது. உடனே அங்கதன் ஆகாயத்தில் வேகமாய்க் கிளம்பி சீக்கிரத்தில் வானர சைன்னியத்தை யடைந்து ராமனது பக்கத்தில் நின்றனன். ராவணன் தனது அழகிய உயர்ந்த மாளிகை அங்ஙனம் முறிந்ததற்கு மிகவும் வருந்தினன். பிறகு வானரர்களெல்லோரும் சுக்கிரீவனது கட்டளைப்படி லங்கையைச் சுற்றிலும் வளைத்துக்கொண்டு தகைந்தனர். இங்ஙனம் லங்கையில் இறங்கி சமுத்திரக் கரையோரம் வரையிலும் நிறைந்திருக்கிற பலநூறு அக்ஷௌஹிணிக் கணக்குடைய அவ்வானர சைன்னியங்களைக்கண்டு தீரர்களான சில ராக்ஷசர்கள் ஆச்சரியமுற்றனர். தீரரல்லாதவர் பயமடைந்தனர். சிலர் யுத்த விருப்பத்தினால் சந்தோஷமடைந்தனர். மதிலுக்கும் அகழிக்கும் இடையிலுள்ள இடமெல்லாம் வானரர்களால் சூழப்பட்டு, மிகுதியும் வானரர்கள் நிறைந்திருக்கையால் அது வானரமயமான மற்றொரு மதில் போல் தீனர்களான ராக்ஷசர்களுக்குப் புலப்பட்டது. ராக்ஷசர்களெல்லோரும் பயத்தினால் உடம்பு தெரியாமல் 'ஹா! ஹா!!' என்றனர்.

நாற்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்திரண்டு & நாற்பத்து மூன்றாவது ஸர்க்கம்.

## வானரர்களுக்கும் ராக்ஷசர்களுக்கும் யுத்தாரம்பம்.

ராவணன் லங்காபுரத்தை வானரர்கள் நான்கு பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு தடுப்பதைக் கேள்விப்பட்டு மிகவும் கோபமுற்று மாளிகையின் மேலேறிக் கணக்கிடமுடியாத வானர சைன்னியங்களைக் கண்டு அவர்களை எங்ஙனம் முடிக்-

கலாமென்று சிந்தித்துக் கொண்டிருந்தனன். வானரர்கள் பர்வத சிகரங்களையும், பெரிய மலைத்துண்டங்களையும், கைகளில் ஏந்திக்கொண்டும், நானாவித மரங்களைப் பிடுங்கி எடுத்துக்கொண்டும் யுத்தத்திற்கு ஆயத்தமாயிருந்தனர். உடனே ராமனது கட்டளையினால் அவ்வானரோத்தமர்கள் மரங்களாலும் மலைச் சிகரங்களாலும், முட்டிகளாலும், லங்கையின் மதில் சிகரங்களையும் உத்தியான வனங்களையும், பட்டணத்து வாயிற் படிகளையும் முறித்துச் சிதைத்துப் பாழ்செய்தனர். பின்னும் மண் புழுதிகளையும் மலைச் சிகரங்களையும் புற்களையும் கட்டைகளையும் போட்டுத் தெளிந்த ஜலமுடைய அகழிகளைத் தூர்த்துவிட்டனர். அவர்கள் பெரிய மதில்கள் மேலேறி வாயிற்படிகளை இடிப்பதும், கோபுரங்களை இடிப்பதும் இங்குமங்கும் கிளம்பிப் போவதும் வருவதும் கர்ஜனை செய்வதுமாகி யிருந்தனர்.

கவாக்ஷனென்னும் கொண்டை முசு வீரன் கோடி கொண்டை முசுக்களால் சூழப்பட்டு ராமனது பக்கத்தில் நின்றனன். தூம்ரன் பயங்கரமான கோடி கரடிகளோடுகூடி ராமனது அருகில் நின்றனன். பிறகு ராவணனது கட்டளையினால் கணக்கற்ற ராக்ஷச வீரர்கள் கத்தி கோடாலி முதலிய ஆயுதங்களைத்தரித்து பேரி வாத்தியங்கள் பயங்கரமாக முழங்க யுத்தம் செய்யக் கிளம்பினர். பலிஷ்டர்களான ராக்ஷசர்கள் செய்யும் சிம்மநாதங்கள் சங்கத்துவனிகளோடும் யானைகளின் கிங்காரங்களோடும், குதிரைகளின் கனைப்புகளோடும், ரதங்களின் சக்கரக்கட்டுகளுடைய சப்தங்களோடும் மற்ற ராக்ஷசர்களின் இரைச்சலோடும் கூடி பூமியிலும் ஆகாயத்திலும் சமுத்திரம் முழுவதிலும் எதிரொலி உண்டாகும்படி வியாபித்தன.

கிளம்பின ராக்ஷசர்கள் பளபளவென்று விளங்குகிற கதைகளாலும் கத்திகளாலும் சூலங்களாலும் கோடாலி

களாலும் வானரர்களை யடித்தனர். வானரர்கள மரங்களை யும் மலைச் சிகரங்களையும் வீசியெறிந்தும் நகங்களால் பீறியும் பற்களால் கடித்தும், ராக்ஷசர்களைத் துன்புறுத்தினர்.

அப்பொழுது அங்கதன் இந்திரஜித்தோடும், விபீஷண னுடைய மந்திரி சம்பாதியென்பவன் பிரஜங்கனெனனும ராக்ஷசனுடனும், அனுமான் ஜம்புமாலியோடும், விபீஷணன் மித்திரக்னன் என்னும் ராக்ஷசனுடனும், கஜன் தபனனோடும், நீலன் நிகும்பனோடும், சுக்கிரீவன் பிரகஸனோடும், லக்ஷ்மணன் விரூபாக்ஷனோடும், ராமன் அக்கினிகேது, ரச்மிகேது, ஸுப்தக்னன், யஜ்ஞகோபன் ஆகிய இந்நால்வருடனும் யுத்தம் செய்தனர்.

மைந்தன் வஜ்ஜிரமுஷ்டி யென்பவனோடும், துவிவிதன் அசனிப்ரபன் என்பவனோடும், நலன் பிரதபனென்பவனுட னும், சுஷேணன் வித்தியுன்மாலியோடும், நானாவிதமான யுத்தங்கள் செய்தனர். அந்த யுத்தத்தில் வானரர்களுடைய வும் ராக்ஷசர்களுடையவும் தேகங்களினின்று தலை மயிர்களை வேலம்பாசியாகவும், கைகால் முதலிய அவயவங்களை கட்டைக் குவியல்களாகவும் பெற்ற ரத்தப் பிரவாகங்களா லாகிய நதிகள் பெருகின.

இந்திரஜித்து பெரிய கதையினால் அங்கதனையடித்தனன். அங்கதன் இந்திரஜித்தினுடைய பொன்மயமான தேரையும் சாரதியையும் குதிரைகளையும் மடியும்படி அடித்தனன். ஜம்புமாலி சக்தியை எடுத்து அனுமானது மார்பைப் பிளந் தனன். அனுமான் விரைவுடன் ஜம்புமாலியின் ரதத்தின் மேலேறி அவ்வரக்கனுடன் கூடவே அந்த ரதத்தை உள்ளங் கையால் அறைந்தனன். பிரதபனன் பாணங்களால் நலனை நலிந்தனன். நலன் மிகுந்த கோபங்கொண்டு அவனது கண் களைப் பிடுங்கியெறிந்தனன். சுக்கிரீவன் பிரகஸனை ஒரு

எழில் பாலைமரத்தினால் அடித்து முடித்தனன். ராமன் தன்னை யெதிர்த்துவந்த நான்கு ராக்ஷசர்களையும் சில பாணங்களை யெய்து கொன்றனன். மைந்தன் வஜ்ஜிரமுஷ்டியைக் கொன்றனன். வித்தியுன்மாலி சுஷேணனை அடித்து அடிக்கடி சிம்ம நாதம் செய்தனன். அப்பால் சுஷேணன் ஒரு பெரிய மலைச் சிகரத்தை வீசியெறிந்து அவனது ரதத்தை விரைவில் முறித்துத் தள்ளினன். பின்னுமொரு மலைச்சிகரத்தை வீசி யெறிந்து அவ்வித்தியுன்மாலியை முடித்தனன்.

இங்ஙனம் சூரர்களான அவ்வானரர்கள் வீரர்களான அவ்வரக்கர்களை தேவதைகள் அசுரர்களைப்போல் துவந்துவ யுத்தத்தில் நன்கு துன்புறுத்தினர். தேவாசுர யுத்தத்தை நிகர்த்த அந்த யுத்தத்தில் வானரர்களுடையவும், ராக்ஷசர் களுடையவும் முண்டங்கள் நாற்றிசைகளிலும் உயரக் கிளம்பு வதும் விழுவதுமாய் இருந்தன. அப்பொழுது ராக்ஷசர்கள் வானர வீரர்களால் பிளக்கப்பட்டு சரீரம் முழுவதும் ரத்தம் பெருகி நிரம்பப்பெற்றுத் தமக்குப் பலத்தைக் கொடுப்பதான சூரிய அஸ்தமயத்தை எதிர் பார்த்துக்கொண்டு மீளவும் பலத்துடன் பெரிய யுத்தம் செய்யத் தயாராகவிருந்தனர்.

நாற்பத்து மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்து நான்காவது ஸர்க்கம்.

## ராத்திரி யுத்தம்.

சிறிது நேரத்திற்குள் சூரியன் அஸ்தமித்தனன். இரவு நேரத்தில் ராக்ஷசர்களுக்கு வலிவு அதிகப்படுமாகை யால் அவர்கள் மிகுந்த தீரத்துடன் வானரர்களை யெதிர்த்த னர். பயங்கரமான அவ்விரவில் இருளின் மிகுதியால் வான ரர்கள் ராக்ஷசர்களென்று மயங்கி வானரர்களையும், ராக்ஷசர் கள் வானரர்களென்று ராக்ஷசர்களையும், கண்மண் தெரியாமல் தம்மினத்தவர்களைத் தாங்களே அடித்துக்கொண்டனர். அந்த

இருட்டில் கறுத்த சரீரமுடையவரும் பொன் கவசம் பூண்டிருப்பவருமான ராக்ஷசர்கள் மேகங்களுடன் கூடின பர்வதங்கள்போல் விளங்கினர். அவர்கள் மிகுந்த வேகத்துடன் வானரர்களைத் தின்றுகொண்டு யுத்த பூமியில் சஞ்சரித்தனர். வானரர்களும் மிகுந்த கோபமுடையவர்களாகி மேமற கிளம்பிக் கூரான தமது பற்களால் குதிரைகளையும் துவஜங்களை (கொடிகள்) யும் கிழித்தனர். பின்னும் அவர்கள் கோபத்தினால் மெய்மறந்தவராகி யானைகளையும் யானைமேலிருப்பவர்களையும் ரதங்களையும் இழுத்துப் பற்களால் கடித்து இங்ஙனம் யுத்தத்தில் ராக்ஷச சைன்னியத்தைப் பலவாறு கலக்கினர்.

ராம லக்ஷ்மணர்கள் கொடிய சர்ப்பங்கள் போன்ற பலபல பாணங்களால் கணக்கற்ற ராக்ஷசர்களைக்கொன்றனர். யுத்த பூமியில் ரத்தவெள்ளம் ஆறுபோலோடியது. வானரர்களாலடிக்கப்பட்டுக் கூச்சலிடுகிற ராக்ஷசர்களுடையவும் ராக்ஷசர்களால் இம்சிக்கப்பட்டு இரைச்சலிடுகின்ற வானரர்களுடையவும் மிடற்றோசைகள் பயங்கரமாய்க் கிளம்பின. பிறகு பயங்கரமான அவ் வந்தகாரத்தில் ராக்ஷசர்கள் பாணமழைகளைப் பெய்து ராமனையே எதிர்த்தனர்.

ராமன் ஒரு நொடிப்பொழுதில் அந்த ராக்ஷசர்களில் அறுவரை ஆறுபாணங்களாலடித்தனன். யமசத்துருவும், மஹாபார்சுவனும், மஹோதரனும் வஜ்ஜிரதம்ஷ்டரனும், ராவணனால் வடக்குவாசற்படியில் காவலிருக்கும்படி கட்டளையிடப்பட்ட சுகஸாரணர்களும் ஆகிய இவ்வரக்கர்களறுவரும், ராமனால் மருமஸ்தானங்களில் (உயிருக்குச் சீக்கிரத்தில் அபாயம் விளைக்கக்கூடிய இடங்களில்) பாணங்கள் எய்யப்பட்டு மிகவும் வருந்தி முதுகுகாட்டி ஓடினர். ராமன் அவ்விருட்டில் அக்கினி ஜ்வாலைகள்போல் விளங்குகிற பாணங்களைப் பரப்பி வெளிச்சம் உண்டாகச் செய்தனன்.

ராமனை எதிர்த்து நின்ற மற்ற ராக்ஷசர்களனைவரும் நெருப்பில் விழும் விட்டில் பூச்சிகளைப்போல் நாசம் அடைந்தனர். கொண்டைமுசுக்கள் ராக்ஷசர்களை இருகரங்களாலும் அழுந்தக் கட்டிக்கொண்டு தின்றன. அப்பொழுது அங்கதன் தன்னுடன் யுத்தம் செய்துகொண்டிருந்த இந்திரஜித்தின் சாரதியையும் குதிரைகளையும் நாசம் செய்து அவனையும் கொல்வதற்கு மிகவும் பயங்கரமான யுத்தம் செய்ய ஆரம்பிக்கையில், இந்திரஜித்து அவனெதிரில் நிற்கமுடியாமல் திடீரென்று ஆகாயத்தில் மறைந்துவிட்டனன்: இது கண்ட வானரர்களனைவரும் இந்திரஜித்து தோல்வி யடைந்து ஓடிவிட்டதாக நினைத்து 'நல்லது, நல்லது' என்று சந்தோஷப் பட்டனர்.

பாபிஷ்டனான அவ்விந்திரஜித்து மாயாவியாகையால் கண்ணுக்குப் புலப்படாதவனாகி மிகுந்த கோபாவேசத்துடன் ராமனையும் லக்ஷ்மணனையும் சர்ப்பங்களின் உருவமுடைய பயங்கரமான பாணங்களால் ஸமஸ்த அவயவங்களிலும் துன்புறுத்தினன். மேலுமவன் கபடயுத்தம் செய்ய முயன்று மாயையை உண்டுபண்ணி ஒருவருக்கும் புலப்படாதவனாகி யுத்தத்தில் ராமலக்ஷ்மணர்களை மதிமயங்கச் செய்து அவர்களை சர்ப்பங்களின் உருவமுடைய பாணங்களால் துன்புறுத்தினன். இங்ஙனம் துஷ்டனான இந்திரஜித்து ராமலக்ஷ்மணர்களை எதிரில் நின்று எதிர்க்கமுடியாமல் மாயையை உண்டாக்கி அவர்களை நாகாஸ்திரங்களால் கட்டிவிட எண்ணங் கொண்டனன்.

நாற்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

926/2

## நாற்பத்தைந்தாவது ஸர்க்கம்.

## இந்திரஜித்து நாகபாசங்களால் ராம லக்ஷ்மணர்களை பந்தஞ் செய்தல்.

ராமன் மாயாவியான இந்திரஜித்து இருக்குமிடந் தெரியவிரும்பி வானர சேனாபதிகள் பதின்மருக்குக் கட்டளையிட்டனன். அங்ஙனமே அங்கதன், நீலன், சரபன், வினதன், ஜாம்பவான் முதலிய பத்து சேனாதிபதிகளும் பெரிய மரங்களைப் பிடுங்கி எடுத்துக்கொண்டு பத்து திக்குகளிலும் இந்திரஜித்தைத் தேடும்பொருட்டு ஆகாயத்தில் கிளம்பினர். இந்திரஜித்து சிறந்த பாணங்களால் அவர்களை வாட்டினன். அவ்வானர வீரர்கள் மிகுந்த பலமுடையவராயினும் அவனது பாணங்களால் சரீரங்கள் பிளக்கப்பெற்று மேகங்களால் மறைக்கப்பட்ட சூரியனைப்போல் இருட்டிலிருக்கிற இந்திரஜித்தைக் கண்டிலர். அச்சமயம் அம்மாயாவி ராம லக்ஷ்மணர்களையே குறிவைத்து சர்ப்பரூபமுடைய கொடிய பாணங்களைப் பிரயோகித்தனன்.

அங்ஙனம் பாண உருவமுடைய சர்ப்பங்களால் அடிக்கப்பட்ட ராம லக்ஷ்மணர்களின் சரீரங்களில் குருதிவெள்ளம் பெருகிவந்தது. அவர்களது உடலில் ஊசிநாட்டவும் இடமில்லாதிருந்தது. அந்த ராம லக்ஷ்மணர்களிருவரும் பாணங்களால் கட்டுண்டு ஒரு க்ஷணத்திற்குள் கண்ணெடுத்துப் பார்க்கவுங்கூடச் சக்தியற்றவராயினர். கூரான பாணங்களின் நுனிகள் சமஸ்த அவயவங்களிலும் நன்கு பாய்ந்துவிட்டபடியால் அவர்கள் மிகவும் நடுங்கிக் கயிறறுந்து விழுகின்ற துவஜங்கள் (கொடிகள்)போல் தரையில் விழுந்தனர். அவ்வீரர்களிருவரும் பாணரூபங்களான சர்ப்பங்கள் உடம்பு முழுவதும் பின்னிக்கொள்கையால் கட்டுண்டு ரத்தவெள்ளத்தில் நனைந்து வீரர்களின் படுக்கையாகிற யுத்த பூமியில் படுத்து மனவருத்தமுற்றுச் சரீரம் முழுவதும் நோவெடுக்

கப்பெற்றிருந்தனர். அவர்களது அவயவங்களில் பாணங்களினால் பிளக்கப்படாத ஓரங்குலம் இடங்கூட இல்லை. அவர்கள் மிகுந்த வேகத்துடன் ரத்தத்தை அளவில்லாமல் பெருக்கினர். வானரர்கள் அவர்களைக் கண்டு மிகுதியும் பரிதாபமடைந்தனர். அனுமான் முதலிய வீரர்கள் நாகபாசங்களால் கட்டுண்டு விழுந்துகிடக்கிற ராம லக்ஷ்மணர்களைச் சூழ்ந்து நின்று மிகவும் துக்கித்தனர்.

நாற்பத்தைந்தாவது சர்க்கம் முற்றிற்று.

---

நாற்பத்தாறவது ஸர்க்கம்.

## வானரர்கள் துக்கித்தலும் இந்திரஜித்து தன் வெற்றியை ராவணனுக்கு மொழிதலும்.

சற்று நேரம் யுத்தம் ஓய்ந்திருக்கும் சமயத்தில் ராமனிருக்கிற அந்த இடத்திற்கு விபீஷணனும் சுக்ரீவனும் வந்து திகைத்து வருந்தினர். அங்ஙனம் வீரசயனத்தில் படுத்து இடையிடையில் (சிறிது கைகாலசைத்தல்) முதலிய சேஷ்டையுடையவரும் உடம்பு முழுவதும் பாணங்கள் நிறைந்திருப்பவரும், நினைவு தவறி விழுந்திருப்பவருமான ராமலக்ஷ்மணர்களை வானர வீரர்களனைவரும் விபீஷணனோடு கூட நாற்புறங்களிலும் சூழ்ந்து, கண்ணும் கண்ணீருமாயிருந்து மிகவும் வருந்துபவராயினர்.

இந்திரஜித்து இருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க விபீஷணன் தானும் மாயையைக் கைப்பற்றி ஆகாயத்தில் கிளம்பினன். சிறிது நேரத்தில் பாவியான இந்திரஜித்தைக் கண்டனன். இந்திரஜித்து தன்னுடைய நாகாஸ்திரங்களினால் ராம லக்ஷ்மணர்கள் கட்டுண்டு படுத்திருப்பதைக்கண்டு, மிகுந்த சந்தோஷமடைந்து ராக்ஷசர்களை உத்சாகப்படுத்திக் கொண்டு அவர்களை நோக்கி "கரதூஷணன் முதலிய பதி

ஞலாயிரம் ராக்ஷசர்களையும் வென்ற சூரர்களான ராம லக்ஷ்மணர்கள் என் பாணங்களால் அடியுண்டு கட்டுண்டு விழுந்து வருந்துவதைக் காண்பீர்களாக. தேவதைகள் அசுரர்கள் ரிஷிசமூகங்கள் ஆகிய எல்லோரும் ஒன்று சேர்ந்து வரினும் இவ்விருவரையும் இந்த நாக பாசங்களின் கட்டினின்று விடுவிக்கமுடியாது. எவன் பொருட்டு என் தந்தை துக்கத்தினுல் பரிதபித்து இரவு பகல் தூக்கம் உண்டாகப் பெருமல் வருந்துகிருரோ, எவன் நிமித்தமாக லங்கையிலுள்ள பிரஜைகளனைத்தும் கலக்கமுற்றுத் தடுமாற்ற மடைந்ததோ, அப்படிப்பட்டவனை; நம்மெல்லாரையும் நாசம் செய்ய முயன்ற ராமனை நான் இதோ கொன்றுவிட்டேன். வானரர்கள் சமுத்திரத்தில் அணைகட்டினது முதலான அரியசெயல்களெல்லாம் வீணுயின'' என்றனன்.

பிறகு அவ்விந்திரஜித்து மீண்டும் யுத்தம் செய்ய விரும்பி நீலனை ஒன்பது பாணங்களாலும், மைந்தன் துவிவிதன் இவ்விருவர்களில் ஒவ்வொருவனையும் மேலான மும்மூன்று பாணங்களாலும், ஜாம்பவானை ஒரு பாணத்தினுலும், அனுமானைப்பத்துபாணங்களாலும், கவாக்ஷனையும் அங்கதனையும் பற்பல பாணங்களாலும் அடித்து மிகவும் துன்புறுத்தினன். வானரர்களெல்லாம் அவனைக்கண்டஞ்சி ஓடினர். ராக்ஷசர்கள் அவனது வெற்றியைக்கண்டு வியந்தனர். பிறகு அவ்விந்திரஜித்து ராம லக்ஷ்மணர்களிருவரும் இப்படியப்படி அசையவும் மூச்சுவிடவும் சக்தியற்றுத் தரையில் விழுந்திருப்பதைக்கண்டு இறந்தார்களென்று நினைத்துக்கொண்டு ஜயசீலனுக லங்கையுள் பிரவேசித்தனன்.

அப்பொழுது ராம லக்ஷ்மணர்களைக் கண்டு கண்ணும் கண்ணீருமாய்ப் புலம்பும் சுக்கிரீவனை விபீஷணன் நோக்கி "வீரனே! இங்ஙனம் நீ அழலாகாது. நமக்குப் புண்ணிய வசமான பாக்கியம் இருக்குமாயின் இவ்விருவரும் மூர்ச்சை

தெளிந்து எழுந்திருக்கக் கூடும். நீ தைரியத்தைக் கைக் கொண்டு வேறு கதியின்றியிருக்கும் எனக்கு தைரியத்தை உண்டுபண்ணுவாயாக. தைரியத்தையும் தருமத்தையும் கைப் பற்றுகிறவர்களுக்கு எப்பொழுதும் துர்மரணமுண்டாகாது" என்றனன்.

உடனே விபீஷணன் தண்ணீர் கொண்டுவந்து சுக்கிரீவனது கண்களைத் துடைத்து மீண்டுமவனை நோக்கி "நண்பனே! இந்த ராம லக்ஷ்மணர்கள் மரணமடையவில்லை. அவர்கள் மூர்ச்சை தெளிந்து எழுந்தவுடனே நமது பயத்தைப் போக்கடிப்பார்கள். இந்த நாகபாசம் ராமனைக் கொல்லவல்லதன்று. இது எப்படியெனில்? காந்தியின் பெருக்கு ராமனை விடாதிருக்கின்றது பார். இவ்வழகு மரணமடைந்தவர்க்கு ஒரு போதும் நேராது. ஆகையால் நான் செய்யவேண்டிய காரியங்களையெல்லாம் மீளவும் குதிரச்செய்யும் வரையில் நீ தைரியத்தை ஏற்றுக்கொண்டு உன் சைன்னியங்களுக்கும் தைரியத்தை விளைவிப்பாயாக" என்றனன். அப்பொழுது விபீஷணனைக் கண்ட வானரர்கள் அவனை இந்திரஜித்து என்று பிரமித்து பயத்தால் உடல் நடுங்கி ஓட யத்தனித்தனர். அவர்களை விபீஷணன் கூவியழைத்து "நான் இந்திரஜித்தல்லேன். விபீஷணனேயாவன்" என்று கூறி அவர்களது பயத்தைப் போக்கினன்.

பிறகு இந்திரஜித்து சமஸ்த ராக்ஷச சைன்னியங்களும் சூழ வரப்பெற்று ராவணனையடைந்து அவனை வணங்கி "ராம லக்ஷ்மணர்களைக் கொன்றுவிட்டேன்" என்று இந்த பெரிய செய்தியைக் கூறித் தான் அந்த ராம லக்ஷ்மணர்களை நாகபாசங்களால் பந்தித்து அசையாதிருக்கச் செய்து ஒளிப் பெருக்கை யகற்றின வண்ணத்தையெல்லாம் நடந்தபடியே தெரிவித்தனன். ராவணன் சந்தோஷத்தையடக்க முடியா

மல் ஆசனத்திலிருந்து விரைந்தெழுந்து புதல்வனையழுந்தக் கட்டியணைத்தனன்..

நாற்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தேழு & நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்.

## ராவணன் சீதைக்கு நாகபாசத்தால் கட்டுண்டிருக்கின்ற ராம லக்ஷ்மணர்களைக் காட்டுதலும், சீதை பலவாறு புலம்புதலும்.

*பின்பு அனுமான் அங்கதன் நீலன் சுஷேணன் முதலிய வானர வீரர்கள் வந்து ராம லக்ஷ்மணர்களைச் சுற்றிச் சூழ்ந்து பாதுகாத்துக் கொண்டிருந்தனர். மற்ற வானர சேனைபதிகள் சேனைகளையெல்லாம் வியூகங்களாகப் பிரித்து நாற்புறத்திலும் மனவூக்கத்துடன் மரங்களைக் கைகளில் ஏந்தி ராக்ஷசர்கள் எவரும் வராதபடி பாதுகாத்துக்கொண்டிருந்தனர்.*

*அப்பொழுது ராவணனது கட்டளையினால் சீதைக்குக் காவலாய் இருந்த ராக்ஷசஸ்திரீகளும் விபீஷணனது மகளான திரிசடையும் புஷ்பகவிமானத்தில் சீதையை ஏற்றிக்கொண்டு அமர்க்களம் சென்று அடிபுண்டு வீழ்ந்திருக்கிற ராம லக்ஷ்மணர்களைக் காட்டினர். சீதை தரையில் விழுந்துகிடக்கிற அந்த வானர சைன்னியத்தையெல்லாம் கண்டனள். ராக்ஷசர்கள் மனத்தில் மிகவும் சந்தோஷ முற்றிருப்பதையும் வானரர்கள் ராம லக்ஷ்மணர்களுக்கருகில் துக்கித்திருப்பதையும் கண்டனள். சீதை ராம லக்ஷ்மணர்கள் பாணங்களால் பீடிக்கப்பட்டுக் கவசங்கள் முறிந்து விற்கள் நழுவி பாணங்களால்சமஸ்த அவயவமும் பிளக்கப்பெற்று பாணங்களாகிற படுக்கையில் படுத்திருக்கக் கண்டு மிகவும் வருந்தி வெகு நேரம் கதறினள்.*

*அவள் ராமனை நோக்கி "ஐயோ! ரகுகுலதிலக! முன்பு என்னைப் பதிவிரதையென்றும், விதவையாகாளென்றும்*

கூறின சோதிடர்களின் மொழி இப்பொழுது பொய்யாயி னவே! என்னை மாங்கல்யவதி என்று மொழிந்த ஞானிகளின் வாக்குப் பலியாதொழிந்ததே! இதோ என் பாதங்களில் பத்ம ரேகைகள் நன்றாகப் புலப்படுகின்றன. இந்த ரேகையுடைய பெண்மணிகள் மகாராஜனுக்கு மனைவிகளாகி அவருடன் ஸாம்ராஜ்ஜியத்தில் பட்டாபிஷேகம் பெறுவார்களென்று சொல்வார்களே! இவை என்னிடத்தில் ஏன் வீணாயினவோ? தௌர்ப்பாக்கியமுடைய பெண்டிர்கள் எந்த லக்ஷணங்கள் (அடையாளங்கள்) இருந்தால் விதவையாகி விடுவார்களோ, அந்த கெட்ட அடையாளங்கள் எவ்வளவு தேடிப் பார்க்கினும் என்னிடத்தில் புலப்படவில்லையே. துவஜம், வஜ்ரம், முதலிய மற்றை ரேகைகளும், பத்மரேகைகளும் லக்ஷ்மீ விலாசத்தை வளர்ப்பவைகளாகி உண்மையான பெயருடையவைகளாய் இருக்குமென்று லக்ஷண சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக் கின்றது. இப்பொழுது ராமன் இறந்ததனால் என் விஷயத் தில் மாத்திரம் அவை பொய்யாயின. எனது தலை மயிர்கள் நுண்ணியவைகளும் ஏற்றக் குறைவில்லாதவைகளும் கறுத் தவைகளுமாய் இருக்கின்றன. புருவங்கள் ஒன்றோடொன்று சேராதிருக்கின்றன. என் பற்கள் இடைவெளியின்றி நெருக்கமாயிருக்கின்றன. எனது சமஸ்த அவயவங்களும் பருத்து அழகாயிருக்கின்றன. இங்ஙனம் சமஸ்த சுப லக்ஷணங்களும் பொருந்திய எனது உருவத்தைக் கண்ட கற்றறிந்த பெரியோர்களும் சோதிடர்களும் என்னை சௌபாக்கியவதியென்றும், எனக்குக் கணவனுடன் சாம் ராஜ்ய பட்டாபிஷேகம் நடக்குமென்றும் மொழிந்தனரே! இப்பொழுது அவையெல்லாம் வீணாயினவே!

ஐயோ! தேவேந்திரனை ஜெயித்த ராம லக்ஷ்மணர்களை மாயாவியான இந்திரஜித்து கபட யுத்தஞ் செய்து கொன்ற னனே! நான் திக்கற்றவளாயினேனே! ராமனது கண்ணில்

பட்ட பகைவன் எவ்வளவு மனோவேகமுடையவனாயினும் பிராணன்களோடு திரும்பிப்போக வல்லனல்லன். அப்படிப் பட்ட ராமனுங்கூட யுத்தத்தில் தம்பியும் தானுமாய் அடி யுண்டு தரையில் விழுந்துகிடக்கின்றனனே! ஆகையால் இது தெய்வத்தின் செயலேயன்றி வேறில்லை. ஐயோ! என்னு மாமியாரான கௌசலை இவ்விஷயத்தைக் கேட்டு எங்ஙனம் பொறுத்திருப்பள்?" என்று புலம்பினள்.

இங்ஙனம் புலம்புகின்ற சீதையை திரிசடை என்கிற ராக்ஷசி தேற்றத் தொடங்கி "அம்மே! நீ துக்கப்படவேண்டாம், ராம லக்ஷ்மணர்கள் இன்னும் இறந்துபோகவில்லை. அதற்குரிய அநுபவசித்தமான காரணங்களுங்கூடச் சொல்லு கிறேன் கேள். ராம லக்ஷ்மணர்கள் இறந்திருப்பார்களானால் வானரர்களின் முகங்கள் இங்ஙனம் கோபாவேசமுடையன வாகவும், சந்தோஷத்தினால் தெளிவுற்றவைகளாகவும் இருக்க மாட்டா. மற்றும் அவர்கள் பிராணன்களை இழந்திருப் பார்களாயின், இந்த புஷ்பகவிமானம் பரிசுத்தமாகையால் உன்னை இங்ஙனம் ஏற்றுக்கொண்டிராது. முக்கியனான பிரபு (ராமன்) இறந்து விட்டிருப்பானாயின், சைன்னியங்கள் யுத் தங்களை நடத்துபவனில்லாமல் தடுமாற்ற முற்றிருக்கும். இவ்வானர சேனையோ அங்ஙனம் புலப்படாமல் பரபரப் பின்றி பயமுறாமல் பலம் மிகப்பெற்று, பிழைத்திருக்கிறார்க ளாகையால் அந்த ராமலக்ஷ்மணர்களை மனவூக்கத்துடன் பாதுகாத்துக் கொண்டிருக்கின்றது.

சீதே! இவ்விருவரும் மூர்ச்சித்திருப்பினும் இவர்களின் முகக்காந்தியின் பெருக்கு சிறிதும் மாறாதிருக்கின்றது. இறந்தவர்களின் முகம் மிகவும் பயங்கரமாய் விகாரமாகக் காணப்படும். ஆகையால் இவர்கள் இறந்தார்களென்று நீ பிரமிக்க வேண்டாம். சீக்கிரத்தில் மூர்ச்சை தெளிந்து எழுந்து மிகுந்த வீரத்துடன் ராவணனைத் தொலைக்கப்

போகிறார்கள்." என்று கூறி அப்புஷ்பக விமானத்தைத் திருப்பி சீதையை மீண்டும் அசோகவனத்தில் கொண்டு விட்டனள்.

நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தொன்பது & ஐம்பதாவது ஸர்க்கம்

## ராமன் மூர்ச்சை தெளிந்து லக்ஷ்மணனைக் குறித்து வருந்துதலும், கருடன் வந்து நாகபாச விமோசனஞ் செய்தலும்.

பிறகு, ராமன் பாணபாசங்களால் கட்டுண்டிருப்பினும் தீரனும் பலவானுமாகையால் மூர்ச்சை தெளிந்து, பக்கத்தில் ரத்தத்தில் நனைந்து முகம் வாடப்பெற்றிருக்கிற லக்ஷ்மணனைக் கண்டு துக்கத்தையடக்க முடியாமல் "ஐயோ! என் தம்பி யுத்தத்தில் தோல்வியடைந்து தரையில் படுத்திருக்க, நான் இப்பொழுது காணலானேனே! இனி எனக்கு சீதையால் பிரயோஜனம் என்? என் பிராணனும் இனி எதற்கு? பூலோகத்தில் தேடினால் சீதைக்கு நிகரான பெண்மணியை சம்பாதித்துக்கொள்ளலாம். அன்றி, உபகாரம் செய்பவனும் யுத்தத்தில் வெல்ல முடியாதவனுமான லக்ஷ்மணனைப் போன்ற தம்பியை மாத்திரம் பெறமுடியாது. இவன் மரணம் அடைவானாயின், நான் இவ்வானரர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே பிராணனை விடப்போகிறேன். நான் அயோத்திக்குச் செல்வேனாயின் சுமித்திரைக்கு என்னவென்று சொல்லுவேன்? அவள் 'லக்ஷ்மணன் எங்கே?' என்று கேட்பின் நான் என்ன சொல்வேன்? ஐயோ! அவளுடைய பரிதாபத்தைக் கண்டு சகிக்க வல்லேனல்லேன். என்பொருட்டல்லவா லக்ஷ்மணன் உயிர்துறந்தாற்போல் மூர்ச்சித்திருக்கின்றனன்" என்று புலம்பினன்.

மீண்டும் ராமன் சுக்கிரீவனை நோக்கி "நண்பனே! நான் இப்பொழுது லக்ஷ்மணனுடன் யமபுரத்திற்குச் செல்லப் போகிறேனுகையால் விபீஷணனை ராக்ஷச ராஜனுகச் செய்யாது போயினன். நான் அவனை இங்ஙனம் அரசனுக்கு கிறேனென்று சொன்ன வார்த்தையும் பொய்யாகி என்னைத் தகித்துவிடும். சுக்கிரீவா! நீ இப்பொழுதே உன் சைன்னியங்களுடன் கிஷ்கிந்தைக்குச் செல்வாயாக. நான் இறந்து போனது தெரிந்தால் ராவணன் உன்னைத் துரத்தியடிப்பான் ஆகையால் நீ அங்கதன், நலன், கஜன், கவாக்ஷன், ஜாம்பவான், மைந்தன், துவிவிதன் முதலிய வானர சேனபதிகளோடு கிஷ்கிந்தைக்குச் செல்வாயாக. அவ்வானரோத்தமர்கள் என் பொருட்டு மிகவும் பயங்கரமான யுத்தம் செய்தனர். நான் மிகவும் அவர்களைப் பாராட்டி சந்தோஷிக்கின்றனன். நான் உனக்கு இதோ விடைகொடுக்கின்றேன்" என்றனன்.

அனைவரும் அங்ஙனம் ராமன் புலம்புவதைக் கண்டு துக்கத்தினுல் கண்கள் சிவக்கப் பெற்றுக் கண்ணீர்களைப் பெருக்கினர். அப்பொழுது விபீஷணன் கையில் கதையைப் பிடித்தவண்ணம் வானர சைன்னியத்தையெல்லாம் நிலை நிறுத்தி வேகமாக ராமனிருக்குமிடத்திற்கு வந்தனன். அவனைக்கண்ட வானரர்கள் இந்திரஜித்தென்று நினைத்து பயத்தினுல் நடுங்கி ஓடிப்போயினர். அப்பொழுது சுக்கிரீவன் அங்ஙனம் வானரர்கள் பயந்து ஓடுவதற்குக் காரணம் தெரியாமல் திகைத்தனன். பிறகு விபீஷணனுல் காரணம் தெரிந்துகொண்டு பக்கத்திலுள்ள ஜாம்பவானை நோக்கி "நீ சென்று ஓடுகிற வானரர்களைக் கூவியழைத்து 'வந்தவன் விபீஷணன்; இந்திரஜித்தன்று' என்று சொல்லி அழைத்து வருவாயாக" என்றனன். பிறகு ஜாம்பவானுல் அந்த வானரர்கள் பயம் நீங்கப்பெற்றுத் திரும்பி வந்தனர்.

அப்பால் விபீஷணன் ஜலம் கொண்டுவந்து ராமலக்ஷ்மணர்களின் கண்களைத் துடைத்து சோகத்தினால் மிகவும் வருந்தி "இந்த ராமலக்ஷ்மணர்களோ கபடமில்லாமல் பராக்கிரமத்தை நிறைவேற்றுபவர்கள். ஆகையால் துராத்துமாவான இந்திரஜித்து ராக்ஷசர்களுக்குரிய குடில புத்தியால் இவர்களை வஞ்சித்தனன். ஐயோ! நான் எவர்களை நம்பி உயர்வடையலாமென்று விரும்பினேனோ அப்படிப் பட்ட ராமலக்ஷ்மணர்கள் தேகத்தை விடுவதற்காகப் பெரு நித்திரையில் இருக்கின்றனர். எனக்கு ராஜ்ஜியம் பெற வேண்டுமென்ற விருப்பமும் போயிற்று. இனி பிழைத்திருந்தால் எனக்கு விபத்து நேரிடும். ராவணன் தன் கருத்து ஈடேறப் பெற்றனன்" என்று புலம்பினன்.

சுக்கிரீவன் விபீஷணனை அழுந்தக் கட்டிக்கொண்டு "தர்மங்களை உணர்ந்தவனே! நீ லங்கா ராஜ்ஜியம் பெறுவாய். ராவணன்து கருத்து நிறைவேறாது. ராமலக்ஷ்மணர்கள் இப்பொழுது சிறிது மூர்ச்சையடைந்திருக்கின்றனரன்றி வேறல்ல. சீக்கிரம் மூர்ச்சை தெளிந்தெழுந்து ராவணனை ராக்ஷசக் கூட்டங்களுடன் கொல்லப்போகின்றனர்" என்று தேறுதல் கூறினன்.

பிறகு சுஷேணன் சுக்கிரீவனை நோக்கி "முன்பு தேவாசுரர்களுக்கு நடந்த மகாயுத்தம் எனக்குத் தெரியும். அப்பொழுது அசுரர்களின் மாயையால் மறைந்து அடிக்கப் பட்ட தேவதைகளில் சிலர் பாணங்களால் பீடிக்கப்பட்டு மூர்ச்சையடைந்தனர். பிருகஸ்பதி மந்திரங்கள் நிறைந்த மிருத சஞ்சீவினி முதலிய வித்தைகளாலும் மூலிகைகளாலும் அவர்களுக்குச் சிகிச்சை செய்தனர். அந்த ஓஷதிகளைக் கொண்டுவரும்பொருட்டு சம்பாதி, பனஸன் முதலிய வானரர்கள் மிகுந்த வேகத்துடன் பாற்கடலுக்குச் செல்வார்களாக. பாற்கடலினிடையில் சந்திரமென்றும், துரோண

மென்றும் இரண்டு பர்வதங்களுண்டு. அவற்றில் தேவதை களால் வைத்துக் காப்பாற்றப்பட்ட சஞ்சீவிகரணி, விசல் லியகரணி என்கிற திவ்விய மூலிகைகளைக் கொண்டுவரும் பொருட்டு அனுமான் வேகமாகப் பறந்து செல்வானாக" என்றனன்.

இதற்குள் மின்னல்களோடு கூடின மேகங்களைப் பறக் கடிப்பதும், சமுத்திர ஜலங்களை உயரக்கிளம்பச் செய்வது மாகி பூமி முழுவதையும் நடுங்கச் செய்வதுபோன்ற ஓர் பெருங்காற்று வீசியது. அது கருடனுடைய சிறகுகளின் காற்று. அந்தச் சிறகுகளிலிருந்து கிளம்பின பெருங்காற்றி னால் லங்கையிலுள்ள பெரிய மரங்களெல்லாம் கிளைகள் முறியப்பெற்று வேர்களுடன் சமுத்திரத்தில் விழுந்தன. சர்ப்பங்களெல்லாம் நடுங்கின. சிறிதுநேரம் கழித்து மகா பலவானான கருடன் அங்கு வந்து தோன்றினன். அவனது வருகையைக்கண்ட ராமலக்ஷ்மணர்களைச் சுற்றிக்கொண் டிருந்த பாண ரூபங்களான ஸர்ப்பங்களெல்லாம் பயத்தினால் ஓடிப்போயின. கருடன் வானரர்களால் பூஜிக்கப்பெற்று சந்திரபிம்பம் போன்ற ராமலக்ஷ்மணர்களது முகங்களைத் தடவிக்கொடுத்தனன்.

இங்ஙனம் கருடனால் தடவப்பட்டவுடனே அவ்விருவ ருடைய தேகங்களிலுள்ள ரணங்களெல்லாம் உலர்ந்து, தேகங்களும் சீக்கிரத்தில் சிறந்த நிறமுடையனவாகி நிரு நிருப்புற்றவைகளுமாயின. உடனே அவர்களுக்கு சிறந்த தேஜஸ்ஸும், வீரியமும், சரீர பலமும், காந்தியும், உத்சாக மும், விவேகமும் முன்னைவிட இருமடங்கதிகமாக உண்டா யின. கருடன் அந்த ராம லக்ஷ்மணர்களை அன்புடன் தழுவி ஆலிங்கனஞ் செய்தனன்.

அப்பால் ராமன் கருடனை நோக்கி "உனது அருளினால் நாங்களிருவரும் இப்பொழுது இந்திரஜித்தினால் உண்டான

பெரிய கஷ்டத்தைத் தவிர்த்து, முன்போல் மிகுந்த பல முடையவர்களாயினம். உன்னைப் பார்க்கில் எனது தந்தை யான தசரத மகாராஜரையும் பாட்டனை அஜமகாராஜரையும் கண்டாற்போல என்மனம் மிகுதியும் தெளிவுற்றிருக்கின் றது. நல்ல அழகிய உருவமுடையவனுகி திவ்வியமான பூமாலைகளை யணிந்து, நல்ல சந்தனுதி வாசனைகளைப் பூசி, நிர்மலமான வஸ்திரங்களை உடுத்து உயர்ந்தழகிய ஆபரணங் களால் அலங்காரம்கொண்டிருக்கிற உன்னைப் பார்க்க ஆச்சரியமாய் இருக்கிறது. நீயார்?" என்று வினவினன்.

கருடன் மிகுந்த சந்தோஷத்துடன் கண்களில் நீர் பெருகப்பெற்று "ராமா! உனக்கு நண்பனும் பிரியமானவ னும், உனக்கு வெளியில் திரியும் பிராணன் போன்றவனு மான நான் கருடன் என்னும் பெயருடையவன். உங்களுக்கு உதவிசெய்யும்பொருட்டு இவ்விடம் வந்துளேன். மாயாவி யான இந்திரஜித்து பிரயோகித்த இந்த நாகபாச பந்தத்தை விடுவிப்பதற்கு தேவர்களும், அசுரர்களும், தானவர்களும், கந்தருவர்களும் மற்று எவரும் வல்லரல்லர். ராமா! நீயும் லக்ஷ்மணனும் பாக்கியமுடையவர். உங்களுக்கு யாதொரு பயமுமில்லை. உனக்கு நேர்ந்த இவ்விபத்தைக் கேள்விப் பட்டு உங்களிடத்திலுள்ள நட்பினுல் இங்குவந்து உங்களை நாகபாசக் கட்டினின்று விடுவித்தேன்.

வீரர்களே! இனி நீங்கள் ராக்ஷசர்களிடத்தில் அவதானத் துடன் யுத்தம் செய்யவேண்டும். அவர்கள் மாயச்செயல்களை யுடையவர்களாகையால் யுத்தத்தில் அவர்களைச் சிறிதும் நம்ப லாகாது. ராகவா! 'எனக்கும் உனக்கும் எப்படி நட்பு?' என் பதைத் தெரிந்துகொள்ள இப்பொழுது விரும்பாதே. நீ யுத்தத்தில் ராவணனைக்கொன்ற பிறகு என்னைத் தெரிந்து கொள்வாய். நான் சென்று வருகிறேன். விடைகொடுப்பா யாக" என்று கூறி நேயம் விளங்க ராமனை அணைத்துக்

கொண்டு அவ்வானரர்களுக்கிடையில் ராம லக்ஷ்மணர்களை வலம் செய்து வணங்கிவிட்டு வாயுவைப்போல் ஆகாயத்தில் கிளம்பிப் போயினன்.

பிறகு வானர வீரர்கள் ராம லக்ஷ்மணர்கள் வருத்தம் நீங்கிச் சுகமாயிருப்பதைக்கண்டு சந்தோஷத்தினால் சிம்ம நாதங்களைச் செய்து வால்களை உதறலாயினர். பேரிவாத்தியங்களை யடித்தனர். மிருதங்க வாத்தியங்களை முழக்கினர். சங்குகளை ஊதினர். இன்னும் பெரிய சத்தம் உண்டாகும்படி இரைச்சலிடுவதும் ராக்ஷசர்களுக்கு பயத்தை விளைவிப்பதுமாகி யுத்தம் செய்யத் தொடங்கி நானாவிதமான மரங்களைப் பிடுங்கிக் கையில் பிடித்துக்கொண்டு லங்கையின் வாசல்களைத் தகைந்தனர்.

ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஐம்பத்தோராவது & ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்

### ராவணனது ஆஞ்ஞையால் தூம்ராக்ஷன் யுத்தம் செய்ய வந்து அனுமானால் அடியுண்டு மாளுதல்.

வானரர்களது மிகவும் கம்பீரமான சிம்மநாதங்களையும் இரைச்சலையும் கேட்ட ராவணனும் ராக்ஷசர்களும் வியப்புற்றனர். ராமலக்ஷ்மணர்கள் நாகபாசத்தினால் கட்டுண்டதால் வானரவீரர்கள் வருத்தமுற்றிருக்கவேண்டியிருக்க, இங்ஙனம் மிகுந்த உத்ஸாகத்துடன் பேரிரைச்சலிடுவதைக்கேட்டு ராவணன் சந்தேகமடைந்து சில மந்திரிகளையனுப்பி அதன் காரணத்தை விவரமாகத் தெரிந்து கொண்டனன்.

ராவணன் ராம லக்ஷ்மணர்கள் மீண்டும் எழுந்திருந்து முன்னிருந்ததை விட கம்பீரமாக நடந்து கட்டுத்தறியை அறுத்துக்கொண்ட மத்தகஜங்கள் போல் உலாவுவதை தன்

மந்திரிகளின் மூலமாயறிந்து சிந்தையும் சோகமும் மிகவும் மேலெழப் பெற்று முகம் விலவிலக்கப்பெற்று "ஆ! என்ன ஆச்சரியம்! ஒருவராலும் விடுவிக்க முடியாத சிறந்த வரத்தின் மகிமையால் பிரயோகிக்கப்பட்ட இந்திரஜித்தின் நாக பாசங்களால் கட்டுண்டும் என் பகைவர் விடுவிக்கப்பட்டனரே! இனி ராக்ஷசர்களின் சைன்னியங்களுக்கெல்லாம் பிராண சந்தேகம் உண்டாமைப் போலவே எனக்குத் தோன்றுகிறது. முன்பு பலதடவைகளில் யுத்தத்தில் எனது பகைவர்களின் பிராணன்களைத் தவறுமல் போக்கடித்த அந்த ஸர்ப்ப பாணங்கள் கடைசியில் வீணாயினவே!" என்றனன்.

பிறகு ராவணன் சர்ப்பம்போல் பெருமூச்செறிந்து கொண்டு மிகுந்த பராக்கிரமமுடைய தூம்ராக்ஷன் என்னும் ராக்ஷசனைப்பார்த்து "நீ பெரிய ராக்ஷச சைன்னியத்தை அழைத்துக்கொண்டு சென்று ராமனையும் வானரர்களையும் கொன்று வருவாயாக" என்றனன்.

தூம்ராக்ஷனும் தாமதமின்றி கணக்கற்ற ராக்ஷச வீரர்களால் சூழப்பட்டுச் சிறந்த தேரிலேறி வானர சைன்னியங்களை நோக்கிச் சென்றனன். அவன் அநுமான் இருக்கிற மேற்கு வாயிலுக்குச் சென்றனன். அங்ஙனமவன் புறப்பட்டுச் செல்கையில் ஆகாயத்தில் திரியும் பறவைகள் பயங்கரமாக இரைச்சலிட்டன. ரதத்தின் நுனியில் மிகவும் பயங்கரமான ஓர் பெரிய கழுகு உட்கார்ந்து கத்தியது. ரத்தத்தினால் நனைந்த ஓர் பெரிய முண்டம் விகாரமான சப்தத்துடன் ரோதனம் செய்துகொண்டு தூம்ராக்ஷனுக்கெதிரில் தரையில் விழுந்தது. மேகம் ரத்தமழை பெய்தது. பூமி கிடுகிடுவென்று நடுக்கமுற்றது. அந்த தூம்ராக்ஷன் ராக்ஷசர்களுக்கு பயத்தை அறிவிப்பவைகளும் மகா கோரங்களுமான அந்த கெட்ட சகுனங்கள் உண்டாவதைக் கண்டு துக்கமுற்றனன். ராக்ஷசர்களெல்லாரும் துக்கத்தினால் ஒன்

றும் தோன்றுகிருந்தனர். தூம்ராக்ஷன் அச்சகுனங்களைப் பொருள் செய்யாமல் ராக்ஷசர் பலர் சூழ்ந்து வரப்பெற்று வானர சேனையை நெருங்கினன்.

பிறகு வானரர்கள் மரங்களைக்கொண்டும் ராக்ஷசாகள் சூலம் முதலிய ஆயுதங்களைக் கொண்டும் ஒருவரையொருவ பயங்கரமாக அடித்துக்கொண்டனர். ராக்ஷசர்கள் ஒன்று கூடி பயங்கரமான நானுவித பரிகங்களாலும் திரிசூலங்களா லும் நாற்புறத்திலும் வானரர்களை கண்டங்கண்டமாகச் செய் தனர். வானரர்கள் மரங்களையும் பெரிய கற்பாறைகளையும் மலைச்சிகரங்களையும் கொண்டு ராக்ஷசர்களையடித்துச் சாகும் படி விழுத்தள்ளினர்.

சில ராக்ஷசர்கள் வானரர்களால் அடிக்கப்பட்டு வாயால் ரத்தத்தைக் கக்கினர். சிலர் உயிர் நீத்தனர். வானரர்கள் ராக்ஷசர்களை மரங்களாலடித்துத் திரள் திரளாகக் குவித்த னர். சிலரைக் கற்களால் சூரணம் செய்தனர். சிலரைப் பற்களால் கடித்துக் கிழித்தனர். சிலரை முட்டிகளால் குத்தியும், கால்களால் உதைத்தும், பற்களால் கடித்தும், மரங்களால் அடித்தும் துன்புறுத்தினர். இதனுல் ராக்ஷசர் கள் வானரர்களுக்கு முன் நிற்கமுடியாமல் ஓடிப்போயினர்.

இவற்றைக் கண்ட தூம்ராக்ஷன் மிகுந்த கோபங் கொண்டு அளவற்ற பாணங்களைப் பிரயோகித்து வானரர் களை வாட்டினன்.

சில வானரர்கள் ராக்ஷசர்களால் அடியுண்டு பூமியில் விழுந்தனர். சிலர் ஈட்டியினுல் குத்தப்பட்டு குடல்கள் வெளிப்பட்டு இறந்தனர். சிலர் ரத்தத்தைப் பெருக்கிக் கொண்டு உயிர் துறந்தனர். சிலர் பலிஷ்டர்களான ராக்ஷசர் களால் துரத்தப்பட்டு யுத்தத்தில் அவர்களுக்கெதிரில் நிற்கமுடியாமல் ஓடிக் கண்ணுக்குப் புலப்படாமல் போயினர்.

தூம்ராக்ஷன் பாணங்களாகிய மழைகளைப் பெய்து வானரர்களை மூலைக்கு மூலை ஓடும்படி துரத்தினன்.

இப்படி வானரர்கள் பயந்தோடுவதைக் கண்ட அநுமான் மிகுந்த கோபத்துடன் ஓர் பெரிய சிலையைக் கையில் கொண்டு தூம்ராக்ஷனுடைய ரதத்தின்மேல் விழும்படி வீசி எறிந்தனன். அப்பெருஞ் சிலை வருவதற்குள் தூம்ராக்ஷன் கதையைக் கையில் பிடித்தவண்ணம் ரதத்தினின்றும் கீழே குதித்துவிட்டனன். அச்சிலை விழுந்த மாத்திரத்தில் அவனுடைய தேரும், சாரதியும், குதிரைகளும் நசுக்கப்பட்டு நாசமடைந்தன. பிறகு அநுமான் அடிப்பாகங்களோடும் கிளைகளோடும் கூடின மரங்களைப் பிடுங்கிக்கொண்டு ராக்ஷசர்களை அடித்தோட்டினன். அவற்றால் கணக்கற்ற ராக்ஷசர்கள் மடிந்தொழிந்தனர். கடைசியாக அவ்வாயு குமாரன் ஓர் பர்வத சிகரத்தைக் கொண்டு தூம்ராக்ஷன்மேல் எதிர்த்தனன். தூம்ராக்ஷன் தானும் ஒரு கதையைக் கையில் ஏந்தி சிம்மநாதஞ் செய்துகொண்டு அநுமானை எதிர்த்தனன். பிறகு அவன் கோபித்து பல ஆணிகளோடு கூடின அந்த கதையை அநுமான்மேல் வேகத்துடன் வீசி எறிந்தனன்; அக்கதையால் அநுமான் அடியுண்டபோதிலும், மிகுந்த பலமுடையவனாகையால் அவ்வடியைப் பொருள் செய்யாமல் தூம்ராக்ஷன்மேல் ஓர் பெரிய மலைச் சிகரத்தை எறிந்தனன். தூம்ராக்ஷன் அம்மலைச் சிகரத்தினால் நசுக்கப்பட்டு திடீரென்று பூமியில் விழுந்து உயிர் துறந்தனன். இதைக் கண்ட மற்ற ராக்ஷசர்கள் மிகவும் பயந்து லங்கைக்கு ஓடிப் போயினர்.

ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஐம்பத்துமூன்று & ஐம்பத்துநான்காவது ஸர்க்கம்

## வஜ்ஜிரதம்ஷ்ட்ரன் யுத்தம் செய்ய வருதலும், அவன் அங்கதனால் மாண்டொழிதலும்.

ராவணன் தூம்ராக்ஷன் மாண்டொழிந்ததைக் கேட்டு ஸர்ப்பம்போல் பெருமூச்செறிந்துகொண்டு சூரனும் மகாபலனுமான வஜ்ஜிரதம்ஷ்ட்ரனென்னும் ராக்ஷசனைப் பார்த்து "ராக்ஷசா! நீ கோடிக்கணக்கான ராக்ஷசர்களை யழைத்துக் கொண்டுசென்று ராமனையும் வானர வீரர்களையும் கொன்று வருவாயாக" என்று கட்டளையிட்டனன். உடனே வஜ்ஜிரதம்ஷ்ட்ரன் யானைகளோடும் குதிரைகளோடும் ஒட்டகங்களோடும் கழுதைகளோடும் துவஜங்களோடும் விளங்கப் பெற்ற அற்புதமான ரதங்களோடு கூடின பெரிய சைன்னியங்களோடு தானும் ஒரு பெரிய ரதத்தில் ஏறிக்கொண்டு யுத்தத்திற்குப் புறப்பட்டனன். அவன் தென்வாசற்படியினின்று அங்கதன் இருக்கிற இடத்திற்குச் செல்ல வெளிப்பட்டனன். அவன் புறப்படும்பொழுதே பலவிதமான கெட்ட சகுனங்கள் புலப்பட்டன. எனினும் அவன் தைரியத்தை விடாமல் யுத்தத்தில் உத்சாகமுடையவனாகவே சென்றனன்.

உடனே சிறிது நேரத்திற்கெல்லாம் வானரர்களும் ராக்ஷசர்களும் ஒருவர்மேல் ஒருவர் பாய்கையில் உடலும் கழுத்தும் முறியவும், ஸமஸ்த அவயவங்களும் ரத்தப் பெருக்கினால் நனையவும் பெற்றுத் தரையில் விழுந்தனர். யுத்தத்தில் பின்வாங்காத சூரர்களான சில ராக்ஷசர்கள் கத்தி, ஈட்டி, சூலம், கோடாலி முதலிய ஆயுதங்களைப் பிரயோகித்து வானரர்களை எதிர்த்தனர். வானரர்கள் மரங்களையும் சிலைகளையும் பிரயோகித்து ராக்ஷசர்களை துன்புறுத்தினர். மற்றும் அவர்களில் சிலர் ராக்ஷசர்களை உள்ளங் கையாலறைந்தும், கால்களாலுதைத்தும், முட்டியால் குத்தி

யும், மரங்களாலடித்தும், முழங்கால்களால் குமுக்கியும் துன் புறுத்தினர். இதைக்கண்ட வஜ்ஜிரதம்ஷ்ட்ரன் மிகுந்த கோபத்துடன் பயங்கரமான வில்லையெழுத்து வானர சைன் னியங்களின்மேல் பாண மழைகளைப் பெய்தனன். அப் பொழுது ராக்ஷசர்கள் வானரர்களின்மேல் அநேகமாயிரம் ஆயுதங்களை ஓயாமல் பெய்தனர். வஜ்ஜிரதம்ஷ்ட்ரன் ஒவ் வொரு அடியிலும் வானரர்களை எழுவரையும், எண்மரையும், ஒன்பதின்மரையும், ஐவரையுமாகப் பிளந்து துன்புறுத்தி னன். இங்ஙனம் வஜ்ஜிரதம்ஷ்ட்ரனால் பறக்கடிக்கப்பட்ட வானரர்கள் அங்கதனைச் சரணமடைந்தனர்.

உடனே அங்கதன் வஜ்ஜிரதம்ஷ்ட்ரனை எதிர்த்தனன். அந்த ராக்ஷசன் அங்கதனை மருமஸ்தானங்களில் ஆயிரம் பாணங்களை எய்து துன்புறுத்தினன். அங்கதன் அங்கங் கள் முழுவதும் ரத்தத்தினால் நனையப்பெற்று வஜ்ரதம்ஷ்ட் ரன்மேல் ஓர் பெரிய மரத்தை எறிந்தனன். அவ்வஜ்ஜிர தம்ஷ்ட்ரன் அம்மரத்தை பாணங்களால் பல துண்டங்களாகக் கண்டித்தனன். அங்கதன் அவனுடைய பராக்கிரமத்தைக் கண்டு ஓர் பெரிய பர்வதத்தை எடுத்து அவன்மேல் எறிந்து சிம்மநாதம் செய்தனன். அப்பர்வதம் தன்மேல் வந்து விழு வதற்கு முன் வஜ்ஜிரதம்ஷ்ட்ரன் பரபரப்பின்றித் தன்தேரி னின்று கீழே குதித்துவிட்டனன். அப்பர்வதம் விழுந்தத னால் அவனது தேர் சூரணமாகியது.

பிறகு வஜ்ஜிரதம்ஷ்ட்ரன் அங்கதனோடு வெகுநேரம் குத்துச்சண்டை செய்தனன். பிறகு இருவரும் மரங்களால் ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டனர். அப்பால் இரு வருக்கும் கத்திச் சண்டை நடந்தது. இங்ஙனம் நெடுநேரம் அவ்வானர ராக்ஷசர்கள் மிகவும் கோபமுற்று ஒருவரை யொருவர் வெல்ல விரும்பி நானாவிதமான மண்டலாதிகதி களில் பயங்கரமான யுத்தஞ் செய்துகொண்டு ஒருவரை

யொருவர் அடித்துக்கொண்டனர். பிறகு இருவரும் இளைப் படைந்து முழந்தாள்களை யூன்றித் தரையில் உட்கார்ந்தனர்.

அப்பால் அங்கதன் வேகமாக எழுந்து நன்கு தீட்டப் பட்டு பளபளவென்று விளங்குகின்ற கத்தியினுல் வஜ்ஜிர தம்ஷ்ட்ரனுடைய பெரிய தலையை வெட்டித்தள்ளினன். வஜ்ஜிரதம்ஷ்ட்ரன் மாண்டுபோனதைக் கண்ட ராக்ஷசர்கள் பயத்தினுல் லங்கைக்கு ஓடிப்போயினர்.

ஐம்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தைந்தாவது & ஐம்பத்தாறவது ஸர்க்கம்.

## அகம்பனனை அனுமான் கோல்லுதல்.

வஜ்ஜிரதம்ஷ்ட்ரன் அங்கதனுல் அடிபுண்டு மாண்டதைக் கேட்ட ராவணன் அகம்பனன் என்னுமரக்கனைப் பெரிய ராக்ஷச சைன்னியங்களுடன் சண்டைக்கனுப்பினன். தேவதைகளுக்கும் எப்படிப்பட்ட மகாயுத்தத்திலும் அசைக்க முடியாதவனுகையால் அவனுக்கு அகம்பனன் என்னும் பெயர் விளைந்தது. அவன் யுத்தஞ் செய்ய விரும்பி தேரி லேறிப் புறப்படுகையில் அவனது தேர்க் குதிரைகளுக்கு திடீரென்று சோர்வு உண்டாயிற்று. அவனது இடக்கண் துடித்தது; முகவொளி மழுங்கியது. அப்பொழுது கொடி தான பெருங்காற்று வீசியது. பறவைகள் பயங்கரமாகக் கத்தின. அவ்வகம்பனனும் அந்த கெட்ட சகுனங்களைப் பொருள் செய்யாமல் யுத்த பூமிக்குச் சென்றனன்.

பிறகு ராமன்நிமித்தமாகவும் ராவணன் நிமித்தமாக வும் பிராணன்களைவிட முயன்றிருக்கிற வானரர்களுக்கும் ராக்ஷசர்களுக்கும் மிகவும் பயங்கரமான யுத்தம் நடந்தது. வானரர்களும் ராக்ஷசர்களும் பாதங்களைப் பூமியில் உறைத்து உலாவுதலால் பூமியினின்று கிளம்பின தூள் பறந்து மிகவும்

பயங்கரமாகப் பத்துத்திசைகளையும் மறைத்துவிட்டது. இங்ஙனம் தூள் நிரம்புகையால் இருள் மூடுகையில் வானரர்கள் இன்னார் பகைவர் என்று தெரியாமல் மிகுதியும் கோபாவேசமுற்று வானரர்களையே அடித்தனர். அங்ஙனமே ராக்ஷசர்களும் ராக்ஷசர்களையே அடித்தனர். யுத்த பூமியெல்லாம் பிணவுடல்களால் நிறைந்தது.

குமுதன், நலன், மைந்தன், துவிவிதன் ஆகிய இந்நான்கு வானரயூதபதிகளும் ஒன்றுசேர்ந்து பெரிய மரங்களையும் மலைச் சிகரங்களையும் வீசியெறிந்து ராக்ஷசர்களைக் கூட்டங் கூட்டமாக அளவின்றிக் கொன்றனர். அகம்பனன் கோபத்தினல் உடம்பு தெரியாமல் வில்லை நாணேற்றி பாணங்களைப் பெய்து வானரர்களை மிகவும் துன்புறுத்தினன். வானரர்கள் அவ்வகம்பனனுக்கெதிரில் நின்று யுத்தம் செய்ய முடியாமல் ஓட்டமெடுத்தனர். இதைக்கண்ட அனுமான் மனம் பொறுக்க முடியாமல் அகம்பனனை யெதிர்த்து வந்தனன். இந்திரன் பர்வதத்தின்மேல் மழையைப் பொழிவதுபோல் அகம்பனன் அனுமான்மேல் பாணங்களைப் பெய்தனன். அனுமான் மிகுந்த பலவானுகையால் தன் தேகத்தில் விழுந்த கொடிய பாணங்களைப் பொருள் செய்யாமல் ஓர் பர்வதத்தைப் பிடுங்கி அகம்பனன்மேல் கிருகிருவென்று சுழற்றி யெறிந்தனன். அகம்பனன் சிறந்த பாணங்களைப் பிரயோகித்து அம்மலையை இருதுண்டங்களாகப்பிளந்தனன். இங்ஙனம் தன்னுல் எறியப்பட்ட மலை வீணனது கண்டு மிகவும் கோபங்கொண்டு ஓர் மாமரத்தைப் பிடுங்கிச் சுழற்றி அதனுல் யானைகளையும் யானைப்பாகர்களையும், தேர்களையும் தேர்வீரர்களையும் நாசம் செய்தனன். ராக்ஷசர்கள் அனுமானை எதிர்த்து நிற்க முடியாமல் பயந்து ஓடிப்போயினர்.

அகம்பனன் அதுகண்டு மிகுந்த கோபாவேசத்துடன் கொடிய பதினன்கு பாணங்களை எய்து அனுமானைத் துன்

புறத்தினன். அனுமான் பாணங்கள் பலவாறு தன் சரீரத்தில் பொத்துக்கொள்கையில், மரங்கள் முளைக்கப்பெற்ற பர்வதம் போல் புலப்பட்டனன். பிறகு அந்த அனுமான் மற்றொரு பெரிய மரத்தைப் பிடுங்கி மிகுந்த வேகத்தையேற்றுக்கொண்டு விரைந்தோடி அகம்பனனைத் தலையில் அடித்தனன். அவ்வடியைத் தாங்க முடியாமல் அகம்பனன் தரையில் விழுந்து மரணமடைந்தனன். பிறகு வானரர்களால் துரத்தப்பட்ட ராக்ஷசர்கள் மிகுந்த பயத்துடன் லங்கையை நோக்கி ஓடினர். வானரர்களால் மிகவும் கொண்டாடப்பெற்ற அனுமான் மதுகைடவர்களைக் கொன்ற விஷ்ணு தேவனைப்போல் சேனைகளின் நடுவில் வீர சோபையுடன் பிரகாசித்தனன். பின்னும் அந்த அனுமானை ஆகாயத்தில் கூடியிருந்த தேவதைகளனைவரும் நன்கு பூஜித்தனர்.

ஐம்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தேழாவது & ஐம்பத்தேட்டாவது ஸர்க்கம்

### பிரகஸ்தன் யுத்தம் செய்ய வருதலும், அவன் நீலனால் அடியுண்டு மாளுதலும்.

ராவணன் அகம்பனன் மரணமடைந்தானென்று கேட்டுச் சிறிது நேரம் சிந்தையிலாழ்ந்து பிறகு யுத்தத்தில் சமர்த்தனான பிரகஸ்தனை வரவழைத்து அவனுடைய வீரப்பிரதாபங்களை யெல்லாம் சொல்லி, அவனுக்கு யுத்தத்தில் நிச்சயமாக வெற்றி கிடைக்குமென்று தைரியம் கூறி அவனைப் போருக் கனுப்பினன். பிரகஸ்தன் ராவணனால் தானடைந்திருக்கும் ஐசுவரியங்களை யெல்லாம் நினைத்து அவனை நோக்கி "ராஜனே! உன் விஷயத்தில் நான் எதையும் செய்வேன். உனக்காக யுத்தமாகிய நெருப்பில் என் பிராணனை ஹோமஞ் செய்கிறேன்" என்றனன்.

பிரகஸ்தன் மிகுதியும் பெரிதாகிய ராக்ஷச சைன்னியத்தை சித்தம் செய்து யுத்தத்தின் பொருட்டுத் தேரின் மேலேறினன். ராக்ஷச வீரர்கள் விற்களைப்பிடித்துக் கவசங்களையணிந்து, ஜயத்தைக் கொடுக்கும் மந்திரங்களால் மந்திரிக்கப்பட்ட நானுவித புஷ்ப மாலைகளைத் தரித்து பிரகஸ்தனைப் பின் தொடர்ந்தனர். சேனுதிபதியான பிரகஸ்தன் புறப்பட்டவுடனே மேக சப்தங்கள் போன்ற பேரி வாத்திய கோஷங்களும், சங்கத்துவனிகளும் மிகுதியும் அதிகமாகச் செவிப்பட்டன. நராந்தகன், கும்பஹனு, மகாநாதன், சமுந்நதன் என்கிற பிரகஸ்தனுடைய மந்திரிகள் நால்வரும் அவனைச் சுற்றிக்கொண்டு சென்றனர். பிரகஸ்தன் வியூகங்களாக ஏற்படுத்தப்பட்டு அதி பயங்கரமாயிருக்கின்ற அப் பெரிய சைன்னியத்துடன் கூடிக் கிழக்கு வாசல் வழியாய் வெளிப்பட்டு வந்தனன்.

பிரகஸ்தன் புறப்படும்பொழுது லங்கையிலுள்ள சமஸ்த ஜந்துக்களும் விகாரமான சப்தத்துடன் கூச்சலிட்டன. மாமிசங்களையும் ரத்தங்களையும் ஆகாரமாகவுடைய பக்ஷிகள் மேகமில்லாத ஆகாயத்தில் சேர்ந்து அவனது தேரை இடமாகச் சுற்றின. நரிகள் வாயால் நெருப்பு ஜுவாலைகளைக் கக்கிக்கொண்டு பயங்கரமாக ஊளையிட்டன. ஆகாயத்திலிருந்து கொள்ளிக்கட்டைகள் விழுந்தன. மேகங்கள் தேரின்மேல் ரத்தமழையைப் பொழிந்தன. ஓர் பயங்கரமான கழுகு அவனது துவஜத்தின் (கொடியின்) நுனியில் தெற்கு முகமாக வந்து உட்கார்ந்து கொண்டு இரண்டு இறகுகளையும் மூக்கினுல் கீறிக்கொண்டிருந்தது. பிரகஸ்தனது தேரோட்டியின் கையிலிருந்த சாட்டைக்கோல் திடீரென்று நழுவித் தரையில் விழுந்தது. மேடுபள்ள மில்லாத சமமான பூமியிலேயே அவனது குதிரைகள் தடுக்கிவிழுந்தன. அப்பால் பிரகஸ்தன் ஜயம் பெறவேண்டுமென்கிற

எண்ணங்கொண்டு, சுக்கிரீவனது சைன்னியத்திற்கு எதிரே வந்து; விட்டில்பூச்சி சாகவேண்டி நெருப்பில் விழுவதுபோல் அவ்வானர சைன்னியத்தில் பிரவேசித்தனன்.

பிறகு ராமன் பிர்கஸ்தனது வீரம், குணம், ஐசுவரியம் முதலியவற்றை விபீஷணன் சொல்லக் கேட்டனன். அப்பொழுது ராக்ஷசர்கள் தரித்திருந்த கத்தி, சூலம், உலக்கை, கதை, கோடாலி முதலிய ஆயுதங்களும், விசித்திரங்களான விற்களும் மற்றும் பலவித ஆயுதங்களும் பிரகாசித்தன. வானர வீரர்களும் யுத்தஞ் செய்யும்பொருட்டு புஷ்பித்த மரங்களையும், அகன்று நீண்ட கற்களையும் பிடித்துக்கொண்டு நின்றனர்.

பிறகு அவ்வானரர்களும் ராக்ஷசர்களும் பலர் ஒருவரையொருவர் எதிர்த்துக்கிட்டி கல்மழைகளையும் அம்புமழைகளையும் பெய்துகொண்டு சண்டை செய்கையில் அவர்களுக்குள் மிகவும் பெரிய யுத்தம் நடந்தது. ராக்ஷசர்கள் சில வானரர்களைச் சூலங்களாலடித்தனர். சிலரைச் சக்கராயுதங்களினுலடித்தனர். சிலரை உலக்கைகளால் உருவழித்தனர். சிலரைக் கோடாலிகளால் பிளந்தனர். இங்ஙனம் ராக்ஷசர்களாலடியுண்ட வானரர்களில் சிலர் தரையில் வீழ்ந்தனர். சிலர் இருதயம் முறிந்து பிராணன்களை விட்டனர். சிலரை ராக்ஷசர்கள் கத்தியால் வெட்டுகையில் அவர்கள் துடிதுடித்துத் தரையில் விழுந்தனர். சில வானரர்கள் சூலங்களால் குத்தப்பட்டும் சிலர் கோடாலிகளினுல் பிளக்கப்பட்டும் மரணமடைந்தனர்.

அப்பொழுது சில வானரர்கள் மிகுந்த கோபாவேசத்துடன் நாற்புறத்திலும் ராக்ஷசர்களைக் கூட்டங் கூட்டமாக மரங்களாலும், மலைச்சிகரங்களாலுமடித்துத் தரையில் வீழ்த்தினர். பின்னுமவ்வானரர்கள் உள்ளங்கைகளாலும், முஷ்டிகளாலும், அறைந்து குத்துகையில், சிலராக்ஷசர்கள்

ண்களும் பற்களும் சிதறப் பெற்று வாயால் ரத்தத்தைக் கக்கினர். இங்ஙனம் அவ்விருதரத்தவர்களும் நானாவிதமான யுத்தங்களைச் செய்தனர்.

பிரகஸ்தனது நான்கு மந்திரிகளும் ஒன்று சேர்ந்து வானரர்களைத் துன்புறுத்தலாயினர். அதைக்கண்ட துவிவிதன் அவர்களில் ஒருவனை நராந்தகனைப் பர்வத சிகரத்தாலடித்துக் கொன்றனன். துர்முகன் ஸமுன்னதனென்னும் ராக்ஷசனை ஒரு மரத்தினாலடித்துக் கொன்றனன். ஜாம்பவானால் எறியப்பட்ட ஓர் பெரிய சிலையினால் மகாநாதன் என்பவன் நசுங்கி மாண்டனன். தாரன் ஓர் மரத்தினால் கும்பஹனுவின் தலையிலடித்துக் கொன்றனன்.

பிரகஸ்தன் இங்ஙனம் தனது நான்கு மந்திரிகளும் மாண்டொழிந்ததைக் கண்டு, பொறுக்க முடியாமல் வில்லில் பாணங்களைத் தொடுத்து வானர வீரர்களை வாட்டினன். அந்த யுத்தபூமியில் வானரர்களுடையவும் ராக்ஷசர்களுடையவும் பெரிய சரீரங்கள் முழுவதும் நிரம்பியிருக்கையால் அவை பர்வதம்போல் மிகவும் பயங்கரமாயிருந்தது. இன்னும் ரத்தவெள்ளமானது ஓர் பெரிய நதிபோல் ஓடியது.

பிரகஸ்தன் பாணங்களை எய்து வானரர்களை வாட்டுவதைக் கண்ட நீலன் (வானர சேனாதிபதி) ஓர் மரத்தைப் பிடுங்கி அதனால் பிரகஸ்தனை யடித்தனன். பலவானான பிரகஸ்தன் அம்மரத்தினாலடிபட்டுக் கோபம் மிகப்பெற்று சிம்மநாதம் செய்துகொண்டு நீலன்மேல் பாணமழைகளைப் பெய்தனன். நீலன் அந்த பாணங்களைத் தடுக்க முடியாதவனாகிக் கண்களை மூடிக்கொண்டு எல்லாவற்றையும் பொறுத்திருந்தனன். பிறகு திடீரென்று ஓர் பெரிய மரத்தினால் பிரகஸ்தனது குதிரைகளைக் கொன்றதுமல்லாமல் அவனது கையிலிருந்த பெரிய வில்லையும் பிடுங்கி ஒடித்துப் போட்ட

னன். உடனே பிரகஸ்தன் பெரியதொரு உலக்கையைக் கையிலேந்திக்கொண்டு தேரினின்றும் கீழே குதித்தனன். பிரகஸ்தன் அந்த உலக்கையால் நீலனை நெற்றியிலடிக்கையில் ரத்தம் பெருகிற்று. இங்ஙனம் தேகம் முழுவதும் ரத்தத்தினால் நனையப்பெற்ற நீலன் மிகுந்த கோபாவேசத்துடன் ஓர் பெரிய சிலையை எடுத்து பிரகஸ்தனது தலையின்மேல் எறிந்தனன். உடனே பிரகஸ்தனது தலை பல சுக்கல்களாகப் பிளந்துபோக அவன் தரையில் விழுந்து நசுக்குண்டு உயிர்விட்டனன்.

இதைக்கண்ட ராக்ஷச சைன்னியமெல்லாம் மனக்களிப்பற்று வருத்தத்துடன் லங்கையை நோக்கி ஓடின. பலசாலியும் ஜயசீலனுமான நீலன் மிகுந்த சந்தோஷத்துடன் ராமலக்ஷ்மணர்களருகே சென்று அவர்களால் மிகவும் கௌரவிக்கப்பட்டனன்.

ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம்

## ராவணன் தானேவந்து யுத்தம் செய்தலும், சக்தி ஆயுதத்தினால் லக்ஷ்மணனை மூர்ச்சிக்கச் செய்தலும்.

மகா பலவானான பிரகஸ்தன் நீலனால் கொல்லப்பட்டதைக்கேட்ட ராவணன் பகைவர்கள் மிகுந்த பலமுடையவர்கள் என்பதைத் தெரிந்து கொண்டு தானே நேரில் யுத்தஞ் செய்ய விரும்பி மிகவும் சூரர்களும் பலாட்டியர்களுமான கணக்கற்ற ராக்ஷசர்களால் சூழப்பட்ட அழகிய தேரின் மேலேறினன். உடனே அந்த ராக்ஷசாதிபதி லங்கையினின்று புறப்பட்டு பயங்கரமாயிருப்பதும் பெரிய சமுத்திரம்போலும் மேகம்போலும் மிகப் பெரிய கோஷம் உண்டாகப் பெற்றதுமான வானர சைன்னியத்தைக் கண்டனன்.

பிறகு விபீஷணன் ராவணனுடன் யுத்தத்தின் பொருட்டு வந்த சூரர்களான அகம்பனன், ராவணனது புதல்வனை இந்திரஜித்து, அதிகாயன், மகோதரன், பிசாசன், திரிசிரன், கும்பன், நராந்தகன் முதலிய ராக்ஷச வீரர்களின் புஜபல பராக்கிரமங்களையும் பெருமையையும் ராமனுக்கு எடுத்துக் கூறினன். கடைசியில் அழகிய தேரில் வீற்றிருப்பவனும் வெண்கொற்றக்குடையின்கீழ் பிரகாசிப்பவனுமான ராக்ஷச ராஜனை (ராவணனை) ராமன் கண்டு மிகவும் வியந்து "ஆ! இந்த ராவணன் சூரிய கிரணங்களைக் கண்ணெடுத்தும் பார்க்க முடியாததுபோன்ற எவ்வளவு காந்தியுடன் ஒளி விளங்கப்பெற்றுக் காணப்படுகின்றனன்! தேவதானவர்களில் எப்படிப்பட்டவருடைய தேகமும் இப்படிப்பட்ட காந்தியுடன் விளங்காது. இவனது போர்வீரர்களெல்லாரும் மலைபோன்ற உருவமுடையவராகி மகா தேஜஸ்விகளாயிருக்கின்றனர். இந்த ராக்ஷசராஜன் மிக விளக்கமுற்ற பயங்கர பராக்கிரமங்களையுடையவனாகி, சிறந்த தேகம் பொருந்தின கொடிய பூதங்களால் சூழப்பெற்ற யமனைப்போல் பிரகாசிக்கின்றனன். தெய்வாதீனமாய் இந்தப் பாபிஷ்டன் என் கண்களில் பட்டனன். இவன் சீதையை யபகரித்து எனக்கு விளைவித்த கோபத்தை இப்பொழுது இவன் மேல் விட்டு ஆற்றி விடுகிறேன்" என்றனன்.

உடனே ராவணன் வானர சைன்னியமாகிய சமுத்திரப் பிரவாகத்தினுட்புகுந்து மிக விசித்திரமாகத் திளைக்க ஆரம்பித்தனன். அந்த ராவணன் வில்லையும் பாணத்தையும் கையிற் கொண்டு யுத்தத்திற்காக மேல் விழுந்து வருவதைக் கண்ட சுக்கிரீவன், பெரியதொரு மலைச்சிகரத்தைப் பிடுங்கி எடுத்து அந்த ராவணன்மேல் வீசி எறிந்தனன். ராவணன் மிகக் கொடிய பாணங்களை எய்து அதைத் துண்டுதுண்டாகத் துண்டித்தனன். அன்றியும், பெரிய சர்ப்பத்தைப் போன்றதொரு

பாணத்தை வில்லில் தொடுத்து சுக்கிரீவனைக் கொல்லும் பொருட்டு அவன்மேல் எய்தனன். அந்த பாணம் சுக்கிரீவனைக்கிட்டி அவனைப் பிளந்தது. சுக்கிரீவன் அதனால் மிகவும் பீடிக்கப்பட்டு, மதிமயக்கமுற்றுக் கூச்சலிட்டுக்கொண்டு தரையில் வீழ்ந்தனன். இதைக் கண்ட ராக்ஷசர்கள் சந்தோஷித்து சிம்மநாதஞ் செய்தனர். பிறகு கொடிய கோரப் பற்களையுடைய கவாக்ஷன், கவயன், ருஷபன், ஜோதிர்முகன் முதலிய வானர வீரர்கள் தங்கள் சரீரத்தை வளரச்செய்து பெரிய மலைகளை எடுத்துக் கொண்டு ராவணன்மேல் எதிர்த்து வந்தனர்.

ராவணன் அவர்களால் எறியப்பட்ட பர்வதங்களையெல்லாம் கொடிய பாணங்களால் உடைத்து வீண் செய்ததுமல்லாமல் அவ்வானரோத்தமர்களையும் பொன்னால் இயற்றப்பெற்ற விசித்திரமான பிடியுடைய பாணங்களை நாட்டிப் பிளந்தனன். அவ்வானரர்கள் அங்ஙனம் துன்புறுத்தப்பட்டு ராவணனுடைய வேகத்தைப் பொறுக்க முடியாமல் தரையில் வீழ்ந்து தம்மைக் காப்பவர் எவரும் அருகிலில்லாமையால் மிகவும் உரக்கக் கூச்சலிட்டுக்கொண்டு ராமனைச் சரணமடைந்தனர்.

அப்பொழுது ராமன் கையில் வில்லைப்பிடித்து வானரர்களைக் காக்கும்பொருட்டுப் போயினன். லக்ஷ்மணன் அவனைத்தரித்துக் கைகுவித்த வண்ணம் "ராமா! மேன்மையான குணங்கள் பொருந்திய நீ இந்த துர்ப்புத்தியான ராவணனோடு யுத்தம் செய்யத் தகுந்தவனல்லை. உனது அடியனான நானிருக்கும்பொழுது நீ யுத்தஞ்செய்வது சரியல்ல. இதோ நான் சென்று பகைவனை சொற்பபொழுதில் முடித்து வருகிறேன்" என்று கூறி ராமனை வலம் செய்து வணங்கி விடைபெற்று யுத்தத்திற்குச் சென்றனன்.

இதைக் கண்ட அநுமான் "வாலியைச் செய்பவனை நானிருக்கும்போது அவனுக்கு என்னபயம்?" என்று ராவண

னது பாணங்களைத் தடுத்துக்கொண்டு அவன்மேல் எதிர்த்துச் சென்று சில ரோஷ வார்த்தைகளை மொழிந்தனன். அதைக் கேட்ட ராவணன் மனம் பொறுக்க முடியாமல் அனுமானை உள்ளங்கையால் மார்பிலறைந்தனன். அவ்வடியால் அனுமான் சிறிது நடுக்கமுற்றனன்றி மிகுந்த பலமுடையவனாகையால் நன்கு திடம் உண்டாகப் பெற்று மிகுந்த கோபத்துடன் தானும் அந்த ராவணனை உள்ளங்கையா லறைந்தனன். ராவணன் அவ்வடியால் மிகவும் நடுக்கமுற்றனன்.

பிறகு ராவணன் தெளிவுற்று அனுமானைப் பார்த்து "வானரா! நல்லது; எனக்கு நீ பராக்கிரமத்தினால் புகழத் தக்க பகைவனாய் இருக்கின்றனை. நீ எனக்கு விரோதியாயினும் உன் பராக்கிரமத்திற்கு நான் சந்தோஷிக்கிறேன்" என்றனன். இது கேட்ட அனுமான் "சீ! எனது பராக்கிரமம் பாழாய்ப் போகுமாக. இதென்ன வீரியம்? ராவணா! என்னாலடிக்கப்பட்டும் நீ சாகாமல் உயிருடனிருக்கின்றனையே! இப்படிப்பட்ட எனது வீரியம் எரிந்து போகுமாக" என்றனன்.

அப்பால் ராவணன் கோபத்தினால் கண்கள் சிவக்கப் பெற்று வலக்கையை கெட்டியாக மடக்கிப் பிடித்துக்கொண்டு வேகத்துடன் அனுமானது மார்பிலறைந்தனன். இங்ஙனம் ராவணனாலடிக்கப்பட்ட அனுமான் மிகவும் நடு நடுக்கமுற்று மூர்ச்சையாயினன். அந்த அனுமான் மூர்ச்சையடைந்தும் மிகுந்த பலவானாதலால் அப்பொழுதும் பிறரால் துன்புறுத்த முடியாதிருப்பதைக் கண்ட ராவணன் இவன் தெளிவு பெறுவானாயின் மீண்டும் தன்னைவிடாமல் வருத்துவானென்று எண்ணி சீக்கிரமாக அவ்விடத்தை விட்டகன்று சேனாதிபதியான நீலன்மேலெதிர்த்துச் சென்றனன்.

நீலன் தன்மேலெதிர்த்து வரும் ராவணனை பெரிய பெரிய மரங்களாலும் பர்வத சிகரங்களாலும் அடித்தனன்.

ராவணன் அவற்றையெல்லாம் சிறந்த பாணங்களால் தடுத்து நாசம் செய்ததன்றி நீலனை அப்படி இப்படி கை கால்களை யசைக்க வொட்டாமல் பாணங்களை யெய்து மிகவும் துன்பப் படுத்தினன். இங்ஙனம் மிகவும் வருத்தப்பட்ட நீலன் தனது உருவத்தைச் சுருக்கிக்கொண்டு ராவணனது துவஜத்தின் (கொடி) நுனிமேல் எழும்பிக் குதித்து சிம்மநாதஞ் செய் தனன். அப்பால் ராவணனுக்குக் குறி ஏற்படாதபடி துவஜத் தின் நுனியிலும், வில்லின் நுனியிலும், கிரீடத்தின் நுனி யிலும் சஞ்சரிக்கின்ற நீலனைப் பார்த்து ராம லக்ஷ்மணர்களும் அனுமானும் வியப்புற்றனர். வானரர்களெல்லாம் நீலனுடைய லாகவத்திற்கு மிகவும் வியப்புற்றனர். அங்ஙனம் துவஜத்தின் நுனியிலிருந்த நீலன்மேல் ராவணன் ஆக்கினேயாஸ்திரத் தைப் பிரயோகிக்க அதனால் நீலன் உடலெல்லாம் கொளுத் தப்பட்டுத் திடீரென்று துவஜத்தின் நுனியினின்றும் தரை யில் வீழ்ந்தனன். அந்த நீலன் அக்கினி தேவனது குமார னுகையால் அந்த ஆக்கினேயாஸ்திரத்தினல் கொளுத்தப் பட்டபோதிலும் சிறிதும் தாபமின்றி உயிரையிழக்காமல் பிராணனோடு இருந்தனன்.

பிறகு ராவணன் லக்ஷ்மணனை எதிர்த்தனன். லக்ஷ் மணன் அவனை நோக்கி "ராக்ஷச ராஜனே! ஜனசஞ்சார மில்லாத பிரதேசத்தில் சன்னியாசி வேடத்துடன் வந்து சீதையைத் திருடிக்கொண்டுவந்த உன் பராக்கிரமத்தைச் சீக்கிரம் காட்டுவாயாக" என்று கூறினன். உடனே ராவணன் மிகுந்த கோபாவேசமுற்று லக்ஷ்மணன்மேல் ஏழு கொடிய பாணங்களை எய்தனன். லக்ஷ்மணன் அவ்வேழு பாணங்களையும் தன்னுடைய பாணங்களால் கண்டித்தனன். இங்ஙனம் ராவணன் லக்ஷ்மணனைக் கொல்லும்பொருட்டு எய்த கணக்கற்ற பாணங்களையெல்லாம் லக்ஷ்மணன் அவ்வப் பொழுது சீக்கிரமாக பாணங்களைப் பிரயோகித்துக் கண்டித்

தனன். ராவணன் இங்ஙனம் தனது சகல பாணங்களேயும் லக்ஷ்மணன் விணுக்குவதைக் கண்டு அவனது பாணப் பிர யோக லாகவத்திற்கு மிகவும் வியந்தனன்.

பிறகு ராவணன் தனக்கு பிரமதேவன் கொடுத்ததும், பிரளய காலாக்கினிபோல் பிரகாசிப்பதுமாகிய ஓர் பாணத்தை லக்ஷ்மணனுடைய நெற்றியில் பிரயோகித்தனன். லக்ஷ் மணன் அந்த ராவண பாணத்திஞல் மிகவும் பீடிக்கப்பட்டு வில்லேத் தளர்ச்சியாகப் பிடித்துக்கொண்டு நடுங்கி மூர்ச்சித்து, மீளவும் சிறிது நேரத்தில் பிரக்ஞை தெளியப் பெற்று ராவணனது வில்லே ஒடித்தனன். பிறகு லக்ஷ்மணன் கூரான நுனிகளேயுடைய மூன்று பாணங்களால் ராவணனே அடித்த னன். அதஞல் ராவணன் நடுக்கமுற்று மூர்ச்சித்து மிக வருத்தத்துடன் மீளவும் பிரக்ஞை தெளியப் பெற்றனன். அந்த ராவணன், யுத்தத்தில் வில் ஒடிந்து பாணங்களாலடிக் கப்பட்டு உடம்பெல்லாம் பாணமயமாகி ரத்தங்களால் அபி ஷேகஞ் செய்யப் பெற்றவன்போல் ஈரமாகி, முன்பு தனக்கு பிரமதேவன் கொடுத்த சக்தியை எடுத்து லக்ஷ்மணன்மேல் விரைவாகப் பிரயோகித்தனன்.

லக்ஷ்மணன் உக்கிரமான பாணங்களால் அதை அடித் துத் தடுத்தனன். அந்த சக்தி அங்ஙனம் அடிக்கப்பட்டும் வேகம் குறையாமல் லக்ஷ்மணனது விசாலமான மார்பில் வந்து விழுந்தது. உடனே லக்ஷ்மணன் மிகவும் பரிதபித்து நடுங்கி மூர்ச்சித்தனன். ராவணன் இங்ஙனம் மூர்ச்சித்து விழுந்த லக்ஷ்மணனைத் தனது கைகளால் பிடித்துத் தூக்கிக் கொண்டு போகமுயன்றனன். ஆஞல் மானிட உருவந் தரித்து தானவர்களின் கர்வத்தை யடக்கவல்ல விஷ்ணு வின் அம்சமாகிய லக்ஷ்மணனே அவஞல் சிறிதும் அசைக்க முடியவில்லே. பிறகு அனுமான் ராவணனே எதிர்த்து வஜ் ஜிரம்போன்ற முட்டியால் அவனே மார்பில் அடித்தனன்.

அதனால் ராவணன் முழந்தாள்களை ஊன்றிக்கொண்டு ரதத்தினிடையில் வீழ்ந்து நடுக்கமுற்று கண், வாய், மூக்கு ஆகிய இவற்றிலிருந்து அளவின்றி ரத்தத்தைக் கக்கினன். இங்ஙனம் ராவணன் யுத்தத்தில் மூர்ச்சையடைந்திருப்பதைக் கண்டு வானரர்களும் ரிஷிகளும், தேவதைகளும் சந்தோஷத்தினால் பேராரவாரம் செய்தனர்.

அனுமான் தரையில் மூர்ச்சித்து விழுந்திருக்கும் லக்ஷ்மணனைக் கைகளால் எடுத்துக்கொண்டு ராமனது சமீபத்திற்குக் கொண்டுவந்தனன். அந்த லக்ஷ்மணன் விஷ்ணுவின் அம்சமுடையவனாகையால் ராவணனுக்கு அசைக்கவும் முடியாதவனாகி, மிகுந்த பக்தனாகிய அனுமானுக்கு லேசாகவும் இருந்தனன். அப்பால் அந்த சக்தியானது லக்ஷ்மணனை விட்டுத் திரும்பி ராவணனிடம் போய்ச் சேர்ந்தது. லக்ஷ்மணன் விஷ்ணுவின் அம்சமாகி நினைக்க முடியாத தன் ஸ்வரூபத்தை நினைத்தமையால் மூர்ச்சை தெளிந்து விரணங்களெல்லாம் ஆறப்பெற்றனன்.

பிறகு ராவணனும் மூர்ச்சை தெளிந்து கொடிய பாணங்களையும் பெரிய வில்லையும் எடுத்துக்கொண்டு ராமனை எதிர்த்து வந்தனன். விஷ்ணு தேவன் கருடன்மேல் ஆரோகிப்பதுபோல் ராமன் அனுமான் மேலேறிக்கொண்டு ராவணனை எதிர்த்தனன். ராமன் ராவணனை மிகுந்த கோபத்துடன் சில வீரவாக்கியங்களைக் கூறிக்கொண்டே எதிர்த்தனன். ராவணன் ராமனுக்கு வாகனமாயிருந்த அனுமானைக் கொடிய பாணங்களாலடித்தனன். அனுமான் இங்ஙனம் ராவணனது பாணங்களாலடிக்கப்பட்டும், அவன் இயற்கையாகவே மிகுந்த பலமுடையவனாகையால் அவனது தேஜஸ்ஸு இன்னுமதிகமாயிற்றேயன்றிச் சிறிதும் குறையவில்லை.

பிறகு ராமன் ராவணனுடைய ரதத்தை அடிக்கடி அணுகிச் சக்கரங்களோடும் குதிரைகளோடும், துவஜங்களோடும், சாரதியோடும், சமஸ்த ஆயுதங்களோடுங் கூட மேலான பாணங்களை விடுத்து நாசம் செய்தனன். மீண்டும் ராமன் வஜ்ஜிரத்தையும் இடியையும் நிகர்த்த பாணங்களால் ராவணனுடைய விசாலமான மார்பில் பலமுள்ளவளவும் அடித்தனன். ராவணன் ராம பாணத்தினலடியுண்டு அந்த பாதையைப் பொறுக்கமுடியாமல் மிகவும் வருந்தி நடு நடுங்கிக் கையிலிருந்த வில்லை நழுவவிட்டவண்ணம் கீழே விழுந்து மூர்ச்சித்தனன். ராமன் உடனே ஓர் அர்த்த சந்திர பாணத்தை யெடுத்து அதனால் அந்த ராவணனது கிரீடங்களை யுடைத்து அவனை மானபங்கஞ் செய்தனன்.

ராமன் இங்ஙனம் கிரீடங்கள் கண்டிக்கப்பெற்று விஷமில்லாத சர்ப்பம் போலவும், ஜ்வாலையில்லாத நெருப்புப் போலவும், ஒளியில்லாத சூரியனைப் போலவும் ஒளியற்றிருக்கிற ராவணனைப் பார்த்து "ராக்ஷசா! நீ மிகவும் பயங்கரமான காரியத்தைச் செய்தனை. மற்றும் என் பக்கத்திலுள்ள மேலான பல வீரர்களையு மடித்தனை. ஆகையால் நீ இளைப்புற்றிருக்கிறுயென்று நிச்சயித்து இப்பொழுதே பாணங்களாலடித்து உன்னைக் கொல்லாமல் விட்டனன். அரக்கர் தலைவனே! நீ இலங்கைக்குச் சென்று இளைப்பாறி மறுபடியும் ரதத்தின் மேலேறி வில்லைப்பிடித்துப் புறப்பட்டு வருவாயாக. இதோ நான் உனக்கு அனுமதி கொடுக்கிறேன். சென்று வருவாயாக. நீ மறுபடியும் வில்லை ஏந்தியிருக்கும் பொழுது என் பலத்தைக் காட்டுகிறேன், காண்பாய்" என்றனன்.

ராவணன் மிகுந்த அவமானத்துடன் கர்வம் தொலையப் பெற்று சந்தோஷத்தை இழந்து ராமன் சொன்னதைக் கேட்டு வெட்கமடைந்து விரைவாக லங்கையுள் பிரவேசித்த

னன். ராமன் லக்ஷ்மணனுடன் கூடி யுத்த பூமியில் விழுந்திருக்கிற வானரர்களின் தேகங்களிலுள்ள பாணங்களைப் பிடுங்கி அவர்களுடைய துன்பத்தைத் தீர்த்தனன். தேவர்களும், ரிஷிகளும் மற்றுமுள்ள சமஸ்த பூதங்களும் ராவணன் தோல்வியடைந்ததைக் கண்டு சந்தோஷமடைந்தனர்.

ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபதாவது ஸர்க்கம்

## ராவணன் கும்பகரணனை எழுப்பி யுத்தத்திற்கு அனுப்புதல்.

அப்பொழுது ராவணன் லங்காபுரத்தில் பிரவேசித்து ராம பாணங்களுக்குப் பயந்து வருந்தி கர்வத்தை இழந்து இந்திரியங்கள் கலங்கப்பெற்று பொன்மயமான சிம்மாசனத்தில் உட்கார்ந்து ராக்ஷசர்களைப் பார்த்து "தேவேந்திரனைப் போன்ற நான் கேவலம் ஒரு மானிடனால் தோல்வியடைந்தேனே! நான் செய்த அரிய பெரிய தவங்களெல்லாம் வீணையல்லவா? 'மனிதர்களால் உனக்கு பயமென்றறிவாய்' என்று முன்பு பிரமதேவன் மொழிந்த பயங்கரமான வாக்கியமானது இப்பொழுது எனக்குப் பலித்தது. அவனது வார்த்தை ஒருபோதும் வீணாகாது. நான் மனிதர்கள் அற்பரென்று நினைத்து அவர்களால் சாவில்லாதிருக்கும்படி வரம் வேண்டாமற்போயினேனே.

ராக்ஷசர்களே! முன்பு இக்ஷ்வாகு குலநாதனான அரணிய மகாராஜனை நான் கொன்றபொழுது அவன் என்னை நோக்கி 'ராக்ஷசாதமா! துர்ப்புத்தியுடையவனே! உன்னை உன் கூட்டத்தாருடன் நாசமடையச் செய்யவல்ல மகா புருஷன் ஒருவன் என் வமிசத்தில் பிறக்கப் போகின்றனன். இது நிச்சயம்' என்று பிரதிக்ஞை செய்தனன். அதன்படி அவன் குலத்தில் பிறந்த இந்த ராமன் இதோ என்னை யுத்தத்தில்

தோற்கடித்தனன். முன்பு நான் வேதவதி என்னும் பெண்ணை பலாத்காரமாகப் பிடித்து அவமதிக்கையில் அவள் என்னைச் சபித்தனள். அந்த வேதவதியே தன் சாபத்தை நிறைவேற்றும்பொருட்டு ஜனகனது புதல்வியாகிய சீதையாகப் பிறந்தனள். இன்னும் பார்வதியும், நந்திகேசுவரனும் ரம்பையும் வருணனது கன்னிகையான புஞ்சிகஸ்தலையும் தவமகிமையால் தாம் முன்பு எப்படி மொழிந்தனரோ அப்படியே ஆயிற்று. ஆயினும் ராக்ஷசர்களே! நீங்கள் அந்த சாபங்களையெல்லாம் மறந்து இப்பொழுது பகைவரை வெல்லும் விஷயத்தில் மனவூக்கமுற்றிருக்க வேண்டும். தேவதானவர்களின் கர்வத்தையடக்கும் தன்மையனை கும்பகாணன் பிரமசாபத்தினால் நித்திரைக்குட்பட்டிருக்கின்றனன். அவனை எழுப்புவீர்களாக” என்றனன்.

உடனே ராக்ஷசர்கள் கும்பகாணனது வீட்டுக்குப் போயினர். அவர்கள் பெரிய வாசற்படியையுடையதும், நாற்புறத்திலும் ஒன்றரை யோசனை விஸ்தாரமுடையதும், குகை போன்றதுமான கும்பகாணனது வீட்டிற்குப்போய் அவனுடைய மூச்சுக் காற்றுவேகத்தினால் பின் வாங்கும்படி தடுக்கப்பட்டு மிக வருத்தத்துடன் எதிர்கொண்டுபோய் மிகுந்த பிரயாசையுடன் அதனுள் பிரவேசித்தனர். அங்கு தரையில் விழுந்த பர்வதம்போல் கம்பீரமாகப் புலப்படுகின்றவனும் எழுப்ப முடியாதபடி கடுநித்திரையிலாழ்ந்திருப்பவனுமாகிய கும்பகாணனை அவர்களெல்லாரும் ஒன்று சேர்ந்து எழுப்பத் தொடங்கினர். மிகவும் பயங்கரமான மூக்குத் துவாரங்களையுடையவனும், பாதாளம்போல் அகன்று ஆழ்ந்த முகமுடையவனும், மாமிச ரத்தங்களின் நாற்றம் வீசப்பெற்றவனும், ராக்ஷசப் புலியுமான கும்பகாணனை ராக்ஷசர்கள் திருப்தி செய்விக்கக் கருதி அவனுக்கெதிரில் மேருபர்வதத்தைப்போன்ற மாமிசக் குவியல்களை

யும், பலவகை அன்னங்களையும் ராசிகளாகக் குவித்து வைத்தனர். பின்னும் ரத்தம் நிறைந்த குடங்களையும், பலவகை மதுபானங்களால் நிரப்பப்பட்ட குடங்களையும் வைத்தனர். அவனது தேகம் முழுதும் மேலான பரிமளம் வீசப்பெற்ற சந்தனக்குழம்பைப்பூசி, திவ்வியமான பூமாலைகளால் அவனை அலங்கரித்து, நல்ல வாசனையுடைய தூபங்களையிட்டு அந்த கும்பகரணனைப் புகழ்ந்தனர்.

பின்னும் அந்த ராக்ஷசர்கள் சங்கங்களை உரக்க ஊதினர்; அனைவருஞ் சேர்ந்து பெரிய கூச்சலிட்டனர். இன்னும் அவனை அடித்து இப்படியும் அப்படியும் பிடித்து அசைத்தனர். இங்ஙனம் செய்த பெரிய பயங்கரமான சப்தங்களால பக்ஷிகளும் பிராணிகளும் மிகவும் பயந்து திகில் மாறாமை யால் கபீரென்று தரையில் வீழ்ந்தன. ஆனால் கும்பகரணனோ சிறிதும் விழித்துக்கொள்ளவில்லை. அது கண்ட ராக்ஷசர்கள் இரும்புத் தடிகளையும் உலக்கைகளையும் கதைகளையும் எடுத்துக்கொண்டு கும்பகரணனை அடித்தனர். அந்த ராக்ஷசர்கள் மிகுந்த பலமுடையவராயினும், கும்பகரணனுடைய மூச்சுக் காற்றால் அவன் முன்னே நிற்க வல்லராகவில்லை. அப்பொழுதும் கும்பகரணன் கண் விழித்திலன். ஆகவே ராக்ஷசர்கள் வியப்படைந்து குதிரைகளையும் ஒட்டகங்களையும் கழுதைகளையும் யானைகளையும் தடி, கொரடா, மாவெட்டி இவற்றாலடித்துக் கும்பகரணன் மேலோட்டினர். பேரிகளையும், மிருதங்கங்களையும், சங்கங்களையும் தமது பலமுள்ள வளவும் வாசித்தனர். அப்பொழுதும் கும்பகரணன் எழுந்திருக்கவில்லை.

இதனால் மிகவும் களைக்கப் பெற்ற ராக்ஷசர்கள், சிலர் கும்பகரணனது தலை மயிர்களைப் பிடுங்கினர். சிலர் காதைக் கடித்தனர். மற்றுஞ் சிலர் அவனது காதுகளில் பல நூறு குடம் தண்ணீரைக் கொட்டினர். சிலர் இரும்புத் தடிகளா

லும் சம்மட்டிகளாலும் அவனுடைய தலையிலும் மார்பிலும் மற்றை அவயவங்களிலும் பலங்கொண்டமட்டும் அடித்தனர். அப்பொழுதும் கும்பகரணன் எழுந்திருக்கவில்லை. அப்பால் ஆயிரம் யானைகளை அவனது தேகத்தின்மேலோட்டித் துவைத்தனர். அப்பொழுது தான் கும்பகரணன் விழித்துக் கொண்டனன். அவனுக்கு அந்த ஆயிரம் யானைகளும் ஏறித் துவைப்பது எறும்பு முதலியன உடம்பில் ஊர்வதுபோல் உணர்ச்சிமாத்திரம் இருந்ததேயன்றி அவை மற்றொரு வருத் தத்தையும் விளைவிக்கவில்லை.

அவன் எழுந்தவுடன் பசியினாலும் அகாலத்தில் எழுப்பு கிறார்களே என்னும் வருத்தத்தினாலும் பீடிக்கப்பட்டு உடம்பை முறித்துக் கொண்டனன். குகைபோன்ற பெரிய வாயைத்திறந்து விகாரமாகக் கொட்டாவி விட்டனன். அவ னது பெரிய கண்கள் பிறர்க்குப் பீடையை விளைவிக்கின்றமை யால் சனி அங்காரகன் ஆகிய பெரிய கிரகங்களைப்போல் புலப்பட்டன. பிறகு கும்பகரணன் தனக்கு முன் வைத் திருக்கும் கடா மாமிசங்களையும், பன்றி மாமிசங்களையும் தின்று தாகத்தினால் வருந்தி ரத்தக் குடங்களையும் மதுபானக் குடங்களையும் காலி செய்தனன்.

பிறகு தன்னை அவ்விதம் அகாலத்தில் எழுப்பின காரணத்தினுண்மையை அந்த ராக்ஷசர்களால் தெரிந்து கொண்ட கும்பகரணன் தனதண்ணனாகிய ராவணன் யுத்தத் தில் ராமனால் தோல்வியடைந்ததை நினைத்து மிகுந்த கோபத்தினால் கண்கள் சுழலப்பெற்று யூபாக்ஷன் என்னு மரக்கனை நோக்கி “யூபாக்ஷ! நான் இப்பொழுதே சென்று சமஸ்த வானர சைன்னியங்களையும், ராம லக்ஷ்மணர் களையும் யுத்தத்தில் கொன்று அப்பால் ராவணனை வந்து பார்க்கிறேன். ராக்ஷசர்களுக்குத் திருப்தியுண்டாகும்படி

நானே ராம லக்ஷ்மணர்களது குருதியைப் பானஞ்செய்கிறேன்" என்றனன்.

இங்ஙனம் கர்வித்து ரோஷத்தினால் மொழிகின்ற கும்பகரணனது வார்த்தையைக் கேட்ட ராக்ஷசர்களில் முக்கியனான மஹோதரன் கைகளைக் குவித்து "மகாபாகுவே! நீ ராவணனிடம் வந்து அவன் சொல்வதைக்கேட்டு, குணதோஷங்களை யாலோசித்து அதன் பிறகு யுத்தத்திற்குச் செல்வாயாக." என்றுகூறி அவனை ராவணனது அரண்மனைக்கு அழைத்துச் சென்றனன். லங்கைக்குவெளியிலுள்ள வானரர்களும் சேனாதிபதிகளுங்கூட அளவிட முடியாத பெரிய உருவமுடையவனும் மிகவும் பயங்கரமான தோற்றமுடையவனுமான கும்பகரணன் ராஜமார்க்கத்தில் செல்லும்பொழுது அவனைக் கண்டு மிகவும் பயந்தனர். சிலர் வருந்தித் தரையில் விழுந்தனர். சிலர் 'ஓ' வென்றலறிய வண்ணம் ராமனைச் சரணமடைந்தனர். சிலர் பயத்தினால் பீடிக்கப்பட்டு திசைகளைக் குறித்து ஓடிப்போயினர். சிலர் தரையில் படுத்தனர்.

அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தோராவது ஸர்க்கம்

## விபீஷணன் கும்பகரணனுடைய விருத்தாந்தத்தை ராமனுக்குக் கூறுதல்.

ராமன் கிரீடந்தரித்துப் பெருந்தேகத்துடன் ராவணனது அரண்மனைக்குச் செல்கின்ற கும்பகரணனைக் கண்டு ஆச்சரியத்துடன் விபீஷணனை நோக்கி அவனது (கும்பகரணனது) பெயரையும் விருந்தாந்தங்களையும் நன்கு கூறும்படி வினவினன். விபீஷணன் ராமனைப் பார்த்து "ராமா! இவன் ராவணனது தம்பியான கும்பகரணனென்பவன். யுத்தத்தில் யமனையும் தேவேந்திரனையும் வென்றவன். உருவத்தின் உயர்த்தியும் பருமனுமாகிய அளவில் இவனைப்போன்ற

ராக்ஷசன் மற்றொருவனுமில்லை. ராமா! மகாபலவானான கும்பகர்ணன் கையில் சூலத்தை ஏந்தி அகன்ற கண்களுடன் யுத்தத்தின் முனையில் வந்து நிற்கையில் தேவதைகளும் இவனை யடிக்கமுடியாமல் 'இவன் உலகங்களை நாசம் செய்யும் காலனே' என்று பிரமித்து ஓடிப்போயினர். இவன் வரம் பெற்றமையால் மாத்திரமேயன்று, இயற்கையாகவும் மிகுந்த பலமுடையவன். இவன் பிறந்த உடனே மிகுந்த பலவானாகிப் பசியினால் வருந்திப் பலவாயிரம் பிரஜைகளைத் தின்றனன். இங்ஙனம் ஜனங்களையெல்லாம் பிடித்துத் தின்று கொண்டிருக்கையில் அவர்கள் பயத்தினால் பீடிக்கப்பட்டு தேவேந்திரனைச் சரணமடைந்தனர். உடனே இந்திரன் கோபமுற்றுத் தனது வஜ்ராயுதத்தினால் கும்பகர்ணனை யடித்தனன். அதனால் கும்பகர்ணன் சிறிது நேரம் வருத்த முற்றிருந்து உடனே கோபத்தினால் உரக்க இரைச்சலிட்டனன். பின்னும் அந்தக் கும்பகர்ணன் கோபத்தினால் ஐராவதத்தினுடைய (இந்திரனது யானை) தந்தத்தைப் பிடுங்கி இந்திரனுடைய மார்பிலடித்தனன். தேவேந்திரன் மிகவும் வருந்தி சமஸ்தப் பிரஜைகளுடன்கூடி பிரமதேவனையடைந்து கும்பகர்ணனால் ஏற்பட்ட பயத்தைக் கூறினன்.

ஜனங்களைத் தின்பதும் தேவதைகளை அவமதிப்பதும், ரிஷிகளின் ஆச்சிரமங்களை த்வம்ஸம் செய்வதும், பரஸ்திரீகளை யபகரிப்பதுமாகிய இவை முதலிய கும்பகர்ணனுடைய கொடிய செயல்களை யெல்லாம் கேட்ட பிரமதேவன் கும்பகர்ணனை அது முதல் செத்தாற்போல் படுத்துத் தூங்கும் படியாகச் சபித்துவிட்டனன். இதைக் கேட்ட ராவணன் பிரமதேவனை வணங்கி 'தேவ! நன்கு வளர்ந்து சுவர்ணம் போல் ரமணீயமாகிய ஓர் மரத்தை, அது பலிக்குங்காலத்தில் வெட்டிப் போடுவதுபோல் உமது பேரனான இவனை (கும்பகர்ணனை) இங்ஙனம் சபிப்பது யுக்தமன்று. ஆகையால் உமது

வார்த்தை பொய்யாகாமல் இவன் தூங்கிக்கொண்டே இருக்கட்டும். ஆயினும் இவன் தூங்குவதற்கும் விழித்துக்கொள்வதற்கும் ஒரு கால வரம்பையாவது ஏற்பாடு செய்ய வேண்டும்' என்றனன்.

பிரமதேவன் 'சரி' யென்று கூறி 'கும்பகரணன் ஆறு மாதங்களுக்குக் குறையாமல் தூங்குவதும், ஆறு மாதங்களுக் கொருநாள் விழித்துக்கொள்வதுமா யிருப்பான். விழித்துக் கொள்ளும் காலத்தில் பசித்து வாயைத் திறந்துகொண்டு பூமியில் திரிபவனாகி நெருப்புப்போல் உலகங்களை நாசம் செய்வான்' என்றனன். ராமா! இப்பொழுது ராவணன் உனது பராக்கிரமத்திற் கஞ்சி விசனமடைந்து தூங்கிக் கொண்டிருந்த கும்பகரணனை எழுப்பி விட்டனன். வானரர்கள் இப்பொழுதே இவனைக் கண்டு பயந்தோடுகின்றார்களே! இவன் கோபத்துடன் எதிர்ப்பானாயின் எப்படித் தடுப்பார்கள்? 'இது ராக்ஷசர்களால் மிக உன்னதமாக நிருமாணிக்கப்பட்ட ஒரு யந்திரமேயல்லது வேறொன்றுமன்று' என்று வானரர்களெல்லார்க்கும் சொல்லி அவர்களை பயமில்லாதவர்களா யிருக்கும்படி செய்யவேண்டும்" என்றனன்.

இவற்றைக் கேட்ட ராமன் மிகவும் ஆச்சரியப்பட்டு சேனாபதியான நீலனைப் பார்த்து "நீ போய் சமஸ்த சைன்னியங்களையும் வியூகங்களாக ஏற்படுத்தி லங்கையிலுள்ள வாசற்படிகளையும், நடமாடுமிடங்களையும் சாரங்களையும் ஆக்கிரமித்து நிற்பாயாக. யுத்தத்திற்கு வேண்டிய பர்வத சிகரங்களையும் பெரிய மரங்களையும் சிலைகளையும் இப்பொழுதே குவியல் குவியல்களாக சித்தப்படுத்தி வைப்பாயாக" என்றனன். நீலனும் அவ்வாஞ்ஞையைச் சிரமேற்கொண்டு அங்ஙனமே செய்தனன்.

அறுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

அறுபத்திரண்டாவது ஸர்க்கம்

ராவணன் தனக்கு ராமனால் விளைந்த ஆபத்தைக் கும்ப கரணனுக் கறிவித்து அதைத் தீர்க்கும்படி அவனைவேண்டுதல்.

கும்பகரணன் ராவணனது அரண்மனையில் பிரவேசித்து சிம்மாசனத்தி லுட்கார்ந்திருக்கும் ராவணனைக் கண்டு வணங் கினன். ராவணன் அவனை எடுத்துத் தழுவி அவனை யொரு ஆசனத்திலிருத்தினன். கும்பகரணன் ராவணனை நோக்கி "அண்ணா! நீ நித்திரை போய்க்கொண்டிருந்த என்னை இவ் வளவு ஆதரவுடன் ஏன் எழுப்பினை? உனக்கு எவனால் பய முண்டாகி யிருக்கிறது? எவன் இப்பொழுது என்னால் மரண மடைய விரும்புகின்றான்?" என்றனன்.

ராவணன் அவனை நோக்கி "கும்பகரணா! மகா பலவா னான ராமன் சுக்கிரீவனோடும் வானர சேனைகளோடுங் கூடி சமுத்திரத்தைத் தாண்டி இவ்விடம் வந்து நம்மை வேரோடு நாசம் செய்கின்றனன். மூல பலத்தையெல்லாம் பாழ் செய்கின்றனன். சமுத்திரம்போல் கரையில்லாத வானர சைன்னியங்களினால் லங்கையைச் சூழ்ந்துகொண்டு நம்மைத் துன்பப்படுத்துகின்றனன். தம்பி! இந்த துக்கத்தை என்ன வென்று சொல்லுவேன்? நமது ராக்ஷசர்களில் மேன்மையுற்ற வர் பலரும் வானரர்களால் யுத்தத்தில் கொல்லப்பட்டனர். நான் ஒருபொழுதாயினும் யுத்தத்தில் வானரவீரர்களில் ஒருவனாவது செத்து வானரசேனை சீர்குலைந்ததாகக்காணவே இல்லை. ஆகையால் நீ இப்பொழுது அவ்வானரர்களையெல் லாம் நாசம் செய்து லங்காபுரத்தைக் காப்பாயாக. எனது ஐசுவரியமெல்லாம் பாழாய் விட்டது. லங்கையிலுள்ள மேலான ராக்ஷசர்களெல்லாரும் மாண்டு இப்பொழுது சிறு வர்களும் கிழவர்களுமே மிகுந்திருக்கின்றனர். ராக்ஷச திலகனே! தேவாசுர யுத்தங்களில் நீ பலதடவைகளில் தேவதைகளைத் தனித்தனியே வென்றிருக்கின்றனை. அசுரர்

களையும் வென்றிருக்கின்றனே. உனது பராக்கிரமம் பயங்கரமாயிருக்குமல்லவா? ஆகையால் உன் வீரியத்தையெல்லாம் இப்பொழுது கைப்பற்றி உன் தேஜஸ்ஸினால் பகைவர் சேனைகளை அழிப்பாயாக. மஹாபாஹோ! நீ உனதண்ணனுக்காகப் பிறரால் செய்யமுடியாத இந்தக் காரியத்தை நிறைவேற்றுவாயாக" என்றனன்.

அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபத்துமூன்றாவது ஸர்க்கம்.

## இதமுரைத்த கும்பகரணனை ராவணன் கோபித்தலும், கும்பகரணன் அவனிஷ்டப்படி யுத்தஞ்செய்ய விரும்புதலும்.

ராவணன் புலம்பினாற்போல் மொழிந்த வார்த்தைகளைக் கேட்ட கும்பகரணன் சிரித்து "அண்ணா! முன்பு நாம் ஆலோசனை செய்த சமயத்தில் எந்த தோஷம் சம்பவிக்குமென்று நிச்சயித்தோமோ, அந்த தோஷம் இப்பொழுது விபீஷணன், மாலியவான் முதலியவர்களின் வார்த்தையைக் கேளாமையால் உனக்கு நேரிட்டது. மகா பாதகர்களுக்கு நரகத்தில் விழுவது தவறாமல் சம்பவிப்பது போல் சீதையைத் திருடி வந்தமையாகிற நீ செய்த பாப காரியத்தின் பலன் சீக்கிரமாகவே உனக்கு நேரிட்டது. நீ கேவலம் வீரிய கர்வத்தினால் சீதையை யபகரித்த இந்த காரியத்தை அபகரிப்பதற்கு முன்னமே 'நல்லதா? அன்று?' என்று ஆலோசிக்காமற் போயினை.

நீ உன் காரியங்களை முன்னதாகவே நன்கு ஆலோசித்துச் செய்திருந்தால் இங்ஙனம் துன்பமடைந்திருக்கமாட்டாய். ராக்ஷஸேச்வரா! நீ சாஸ்திரங்களில் சொன்னபடி தருமத்தையும், அர்த்தத்தையும் காமத்தையும் கைப்பற்றவில்லை. கேவலம் நீ காமத்தையே அனுசரித்துத் தகாத

காரியத்தைச் செய்தனை. மேலும் அக்காமத்தை அகாலத்தில் அனுசரித்தனை. எந்தக் காலத்திலும் கேவலம் காமத்தையே அனுசரிப்பவன் புருஷர்களில் கடைப்பட்டவனுவன். கீழ்ச் சொன்ன தருமம், அர்த்தம், காமம் (அறம், பொருள், இன்பம்) என்னும் மூன்றில் சிறந்ததான தருமத்தை நீ சிறிதும் கைப்பற்ருமல் தகாத காரியத்தில் தலையிட்டுக் கொண்டனை. உனது மந்திரிகளோவென்ருல் நீதி சாஸ்திரங்களைக் குருமுகமாகக் கேட்டறியாமல் வேஷத்தினுல் மாத்திரம் உனக்கு நன்மையை விரும்புபவர்கள்போல் உன் முக உல்லாசத்தின்பொருட்டு நீ கூறுகிறது மிகவும் சரியென்று தலையசைக்கிருர்கள். அவர்களது முகஸ்துதியான வசனங்களைக் கேட்டு நீ சிறிதும் ஆலோசனையின்றிப் பெரிய ஆபத்துக்குள்ளாயினை.

அண்ணு! இதுவிஷயத்தில் நமது தம்பியான விபீஷணன் யாது மொழிந்தானே அதுவே நமக்கு இப்பொழுது நன்மையாய் இருக்கிறது. ஆகையால் சீக்கிரம் சீதையை விட்டுவிடுவாயாக.'' என்றனன். இங்ஙனம் கும்பகரணன் கூறக்கேட்ட ராவணன் கோபித்துப் புருவத்தை நெறித்துக் கொண்டு "கும்பகரணு! சிறியவனுன நீ மூத்தவனுன எனக்குப் புத்தி புகட்டவேண்டாம். நீதிகாலம் கடந்துபோய் விட்டதாகையால் அந்த வார்த்தைகளால் என்ன பயன்? நீதியைக் கடந்த சமயத்திற்குத் தகுந்திருக்கிற பராக்கிரமத்தை உபயோகப்படுத்துவாயாக. அநீதியை நீதியாக பிரமித்தோ, மனத்தில் தெளிவு பிறவாமையாலோ, பல வீரியங்களால் விளைந்த கர்வத்தினுலோ செய்யவேண்டியதைச் செய்யாமற் போனேன். இப்பொழுது நீதியைப் பாராட்டுங்காலம் கடந்துபோயிற்ருகையால், அப்படிச்செய்யவில்லையே என்று அடிக்கடி சொல்வது வீணையாகும். உனக்கு என்னிடத்தில் நட்பு உளதாயின், உன் பராக்கிரமம்

உனக்குத் தெரிந்திருக்குமாயின் இப்பொழுது இந்த யுத்தம் செய்யவேண்டியது அவசியமென்று உனக்குத் தோன்றுமாயின், என் அபநீதியால் விளைந்த தோஷத்தை உன் பராக்கிரமத்தினால் சரிப்படுத்துவாயாக. நீதியினின்று நழுவித் தடுமாற்றமுற்றிருப்பவர்க்கு சகாயஞ் செய்யத் தெரிந்தவனே உறவினனாவான்'' என்றனன்.

இங்ஙனம் ராவணன் கோபத்தால் கூறின வசனங்களைக் கேட்டு கும்பகரணன் அவனை நல்ல வார்த்தைகளால் சமாதானம் செய்ய விரும்பி "ராக்ஷஸேச்வரா! உனக்கு மனவருத்தம் வேண்டாம். கோபத்தை விட்டு சமாதான மடைவாயாக. நீ எவன் பொருட்டு இங்ஙனம் பரிதபிக்கின்றாயோ அந்த ராமனையும் அவனது சைன்னியங்களையும் நான் இப்பொழுதே சென்று கொன்று விடுகிறேன். சாதாரண ஸ்நேகத்தைப்பற்றியும் விசேஷித்து அண்ணன் தம்பிகளென்கிற ஸ்நேகத்தைப் பற்றியும் நீ கோபமுற்றாவது சந்தோஷமுற்றாவது எப்படியிருப்பினும் உனக்கு நான் அவசியம் நன்மை சொல்லவேண்டு மாகையால் அதைச் சொல்லினேன். மிகுந்த ஸ்நேகமுடைய பந்துவுக்கு இப்படிப்பட்ட ஆபத்துக் காலத்தில் செய்யவேண்டியது பகைவர்களையழிக்கையே. அதை யுத்தத்தில் நடத்திக் காட்டுகிறேன்; காண்பாய். அண்ணா! இப்பொழுதே நான் யுத்தம் செய்து ராமனது தலையைத் துண்டித்துக்கொண்டு வருகையில் நீ கண்டு சுகமடைவாயாக. நான் ஒருவனே சென்று சமஸ்த வானர சைன்னியங்களையும் கொன்றுவிடுகிறேன்.

ராவணா! எனது பராக்கிரமம் உனக்குத் தெரியாதோ? நான் கோபித்துக் கண்களை விழித்துப் பார்ப்பேனாயின் தேவதைகளும் தரையில் வீழ்ந்துபோவார்கள். யமனையும் அடக்கிவிடுவேன். அக்கினி தேவனையும் விழுங்கிவிடுவேன். சூரியனையும் நக்ஷத்திரங்களுடன்கூட ஆகாயத்தினின்று

தரையில் விழத்தள்ளுவேன். சமுத்திரத்தை யெல்லாம் பானஞ் செய்வேன். பர்வதங்களைப் பொடியாக்கிவிடுவேன். பூமியைப் பிளப்பேன். இம்மூன்று லோகங்களுஞ் சேர்ந்து என் ஒருவேளை ஆகாரத்திற்கே போதாது. இனி ராமன் எனக்கு எம்மாத்திரம்? அவ்வானரர்களையெல்லாம் பிடித்துத் தின்றுவிடுகிறேன். நீ இஷ்டப்படி கிரீடித்துக்கொண்டிருப்பாயாக. உயர்ந்த மதுபானங்களைக் குடித்து மனக்கவலையை யொழிப்பாயாக. நான் இப்பொழுதே ராமனை யமபட்டணத்திற் கனுப்புவேன்; உடனே உனக்கு சீதை ஸ்வாதீனமாய் விடுவாள்" என்றனன்.

அறுபத்துமூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபத்துநான்காவது ஸர்க்கம்.

மகோதரன் கும்பகரணனை விரட்டுதல்.

கும்பகரணன் மொழிந்த வசனங்களைக் கேட்ட மகோதரன் "கும்பகரணா! நீ பெரிய குலத்தில் பிறந்தவனாயினும் உனது புத்தி அற்பமாக இருக்கின்றது. நீ மிகுந்த கர்வமுற்றவனாகையால் எந்தக் காரியத்திலும் செய்யவேண்டிய ஆலோசனை இன்னதென்று அறியவல்லனல்லை. நீ கூறியபடி நமதரசன் பராக்கிரம கர்வத்தினால் மேல்வரும் கெடுதிகளை ஆலோசியாமல் போகவில்லை. நியாய அநியாயங்களை அறியாமலும் போகவில்லை. (தருமத்தை விடவில்லை) நீ பாலியத்தின் கொழுப்பால் வெறும் துணிச்சலுடையவனாகி இங்ஙனம் அரசனை இகழ்ந்து கூறினையன்றி வேறில்லை. தருமத்திற்கு நல்ல பலனும் அதர்மத்திற்குக் கெட்ட பலனும் தவருதாகையால் சீதையை யபகரித்த அதர்மத்திற்கு இப்படிப்பட்ட பலன் உண்டாயிற்றென்று நீ கூறினையல்லவா? தர்ம அர்த்தகாமங்களுக்குத் தனித்தனியே அங்

தந்த பலன்கள் தவறுமென்று உள்ளபடி அறிவதற்கு உனக்குப் பிரமாணம் யாதிருக்கின்றது? ஒன்றுமே இல்லையல்லவா? நாம் செய்யும் கருமங்களில் புண்ணிய கருமங்களுக்கே நல்ல பலன்களென்றும், பாப கருமங்களுக்கே தீய பலன்களென்றும் திட்டமாகச் சொல்ல முடியாது. பாப கருமங்களுக்கும் நல்ல பலனே உண்டாகின்றது. அறம், பொருள், இன்பம், வீடு என்கிற இந்நான்கும் நன்மையையே விளைவிக்கின்றன. ஆயினும் அவற்றுள் அதர்மத்திற்கு ஒருகால் கெடுதியும் நேரிடுவதுண்டு. ஆகையால் தரும அதருமங்களுக்கு நன்மை தீமைகளிரண்டும் பலனாகுமேயன்றித் தீமையே பலனென்று சொல்வது யுக்தமன்று.

கும்பகருணா! தன் மனம்போனபடி கருமங்களை ஆசரிப்பவனும் மங்களகரமான நல்ல பலன்களைப் பெறுவதுண்டு. இங்ஙனம் சமஸ்த தருமங்களுக்கும் பலனில் நியதியில்லாமல் எல்லாவற்றிற்கும் எல்லாம் பலனாகுமென்கிற மதத்தைப் பற்றி, நமது மன்னவன் காமத்தை ஆசரித்து சுகம் பெறலாமென்று சீதையைக் கவருகையாகிற இந்தக் காரியத்தை மனத்தில் நன்கு ஆலோசித்தே செய்தனன். அதனை நாங்களும் செய்யத் தகுந்ததேயென்று சம்மதித்தனம். ஆதலால் பகைவர் விஷயத்தில் முன் ஆலோசனையின்றி காரியம் செய்துவிட்டதாக நீ நமதரசனை இடித்துக் கூறுவது சரியல்ல.

மலைபோன்ற உருவமுடையவனே! நீ யொருவனே சகாயமின்றி யுத்தத்திற்குப் புறப்படுகிறேனென்றுகூறி, அதற்குச் சாதகமாக உனது பல பராக்கிரமங்களை யெடுத்துரைத்தனையே. அது விஷயத்திலும் நீ சிறிதும் ஆலோசனையில்லாதவனே. எந்த ராமன் முன் ஜனஸ்தானத்தில் பதினாலாயிரம் ராக்ஷசர்களை ஒரு முகூர்த்த காலத்தில் கொன்றானோ அவனை நீ ஒருவனாகவே எப்படி ஜயிக்க வல்லவனாவாய்? நமது ராட்சச ஜாதியைச் சேர்ந்த அனைவரும் இப்பொழுதும்

ராமனது பேரைச் சொல்லினும் பயப்படுவதைக் காண்கிறா யல்லவா? ராமனை மிகவும் சீற்றங்கொண்டிருக்கிற சிம்ம மென்று அறியாமல், தூங்குகிற பாம்பை எழுப்புவதுபோல், உன்மேல் எதிர்க்கும்படி எழுப்ப விரும்புகின்றனை. யமனைப் போல் சகிக்க முடியாத பராக்கிரமமுடைய அந்த ராமனை எவன் தான் அணுக வல்லவன்? ராமனுக்கெதிரில் நிற்க இந்த நமது ராட்சச பலம் முழுதும் பிராண சந்தேகத்தை யடைகின்றது. இப்படியிருக்க நீ யொருவன் மாத்திரம் அவனை எதிர்த்துப் போவது எனக்குச் சிறிதும் ருசிக்கவில்லை" என்றனன்.

பிறகு அம்மகோதரன் ராவணனைப் பார்த்து "ராவணா! நீ என்னவோ சீதையைக் கைப்பற்றியாகி விட்டது. இன்னும் எதுக்காகப் பலவாறு பேசுகின்றனை? சீதை தானே உன்னிடம் வருவதற்கு நான் ஓர் உபாயம் கண்டு பிடித்திருக்கிறேன். அதாவது நானும் துவிஜிஹ்வனும், ஸம்ஹ்ராதியும்; கும்பகரணனும், விதர்த்தனுமாகிய நாங்கள் ஐவரும் ராமனைக் கொல்லும் பொருட்டுப் போகவேண்டுமென்று விளம்பரஞ் செய்வாயாக. அப்பால் நாங்கள் கஷ்டப்பட்டு ராமனோடு யுத்தஞ் செய்கிறோம். நாங்கள் அந்த ராம லட்சுமணர்களை யுத்தத்தில் கொன்று விடுவோமாயின் அப்பொழுது நமக்கு உபாயங்களால் சாதிக்கவேண்டியது ஒன்றுமில்லை. அப்படியில்லாமல் ராமன் ஜயிக்கமுடியாதவனாகி ஜீவித்திருப்பானாயின் இப்பொழுது ஆலோசித்த உபாயத்தைச் செய்வோமாக. நாங்கள் ராம பாணங்களால் எங்கள் தேகம் முழுதும் பிளவுண்டதாகச் செய்துகொண்டு ரத்தம் பெருகப் பெற்று ராமனோடு யுத்தஞ்செய்தோமென்று சீதைக்கு நம்பிக்கை உண்டாகும்பொருட்டு ராம நாமங்களோடு கூடின கொடிய பாணங்களோடு யுத்தத்தினின்று இவ்விடம் வருகிறோம். நாங்கள் அங்ஙனம் வந்து ராம லட்சுமணர்களைக் கொன்று தின்று

விட்டோமென்று சொல்லிக்கொண்டு உன் பாதங்களில் நமஸ்காரஞ் செய்கிறோம். அப்பொழுது நீ எங்கள் விருப்பங்களையெல்லாம் நிறைவேற்ற வேண்டும்.

ராஜனே! பிறகு நீ எங்களில் ஒருவனை யானையின்மேலேற்றி 'ராமலட்சுமணர்களும் வானரர்களும் மாண்டொழிந்தார்கள்' என்று பட்டணம் முழுவதும் விளம்பரஞ் செய்ய வேண்டும். எங்களுக்கு அளவற்ற ஐசுவரியங்களைக் கொடுக்க வேண்டும். பிறகு இந்த விஷயம் பட்டணம் முழுதும் நன்கு பரவி சீதைக்கும் எட்டிவிடும். நீ உடனே அவளிடஞ் சென்று அவளது வருத்தத்தை நீக்கி 'என்னிடத்தில் பிரீதி செய்வாய்' என்று ஏகாந்தத்தில் நல்ல வார்த்தைகளைச் சொல்லி சுவர்ணம் முதலிய தனங்களையும், ரத்னங்களையும் மற்றும் அவளுக்கிஷ்டமான மேலான பதார்த்தங்களையும் வேண்டியவளவு கொடுத்து அவளுக்கு ஆசையை மூட்டுவாயாக. ராஜனே! இந்தக் கபட உபாயத்தினால் சீதை பயமும் துக்கமும் உண்டாகப்பெற்று முன்பு உன்னை விரும்பாதிருப்பினும் நாதனில்லாமையால் இப்பொழுது உனக்கு மனைவியாவாள். இந்த உபாயத்தை நான் என் புத்தியினாலேயே நன்கு ஆலோசித்து நிச்சயித்தனன். நீ ராமனது கண்களில் படுவாயாயின் அனர்த்தமே விளையும். இந்த என் உபாயத்தினால் உனது கருத்து நிறைவேறக்கூடும். ஆகையால் யுத்தத்தின் பொருட்டு விருப்பங்கொள்ள வேணடாம்" என்றனன்.

அறுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

அறுபத்தைந்து & அறுபத்தாறவது ஸர்க்கம்

## கும்பகரணன் யுத்தஞ்செய்ய வருதலும், வானரர்கள் அஞ்சி ஓடுதலும்.

மகோதரன் இங்ஙனஞ் சொல்லுகையில் கும்பகரணன் 'இனி இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லவேண்டாம்;

ஜாக்கிரதை' என்று அவனை விரட்டி ராவணனைப் பார்த்து "இப்பொழுதே நான் சென்று பகைவர்களை நாசம்செய்து வருகிறேன். கவலையற்றிருப்பீராக" என்று கூறி பிறகு மகோதரனை நோக்கி "மதிகேடனே! உன்னைப் போன்றவருடைய வார்த்தைகளைக் கேட்பதனால் மன்னவன் இந்த ஆபத்தைப் பெற்றனன். நீங்கள் இம்மன்னவனை மேலுக்குவ நண்பனாகச் சொல்லிக்கொண்டிருப்பினும் உண்மையில் நீங்கள் இவனைப் பகைவனாகக் கொண்டிருக்கையால், இவனை இவன்போகும் வழிவிட்டு, இவனொருவனே மிகும்படி செய்தீர்கள். பொக்கசத்தையெல்லாம் பாழாக்கினீர்கள். சைன்னியத்தை யெல்லாம் நாசம் செய்தீர்கள். நீங்கள் செய்த அட்டூழியங்களை யெல்லாம் இந்த யுத்தத்தினால் சரிப்படுத்தும்பொருட்டு, பகைவர்களை ஜயிக்க முயன்று இதோ நான் யுத்த பூமிக்கு இப்பொழுதே போய்க்கொண்டிருக்கிறேன்" என்றனன்.

இங்ஙனம் கூறின கும்பகரணனை ராவணன் நோக்கி சிரித்துக்கொண்டே "இந்த மகோதரன் ராமனிடம் மிகவும் பயந்திருப்பதால் யுத்தத்தை விரும்பா திருக்கின்றனன். கும்பகரணா! எனக்கு உன்னைப்போன்ற நண்பனும் பலவானும் எவனுமில்லை. நீ போய் ஜயத்துடன் திரும்பிவருவாயாக" என்று விடைகொடுத்தனுப்பினன். அப்பொழுது ராவணன் திடீரென்று எழுந்து இடையிடையில் ரத்தினங்களிழைக்கப்பெற்ற ஒரு பொன்மாலையை கும்பகரணனுக்குக் கட்டினன். மற்றும் சிறந்த விலையுயர்ந்த ஆபரணங்களையணிவித்தனன். நறுமணம் கமழப்பெற்ற அழகிய மாலைகளை யவனுக்குச் சூட்டினன்.

உடனே கும்பகரணன் பொன் மயமான கவசத்தையணிந்து மிகவும் பயங்கரமான பெரியசூலத்தைக் கையி

லேந்தி யுத்தத்திற்குப் புறப்பட்டனன். லக்ஷக்கணக்கான ராக்ஷசர்கள், சூலங்களையும், கத்திகளையும், கூரான கண்டக் கோடாலிகளையும், கதைகளையும், உலக்கைகளையும் வீசி யெறியத் தகுந்தவைகளான பனைமரங்களின் அடிப்பாகங் களையும் ஏந்திக்கொண்டு கும்பகரணனைப் பின்சென்றனர்.

பிறகு அக்கும்பகரணன் நூறுவில்லளவு அகன்றதும், அறுநூறு வில்லளவு உயர்ந்ததும் வண்டியின் சக்கரங்களைப் போன்ற கண்களையுடையதும் பயங்கரமுமாகிய உருவத் தைத் தரித்து, எரிக்கப்பட்ட பர்வதம்போல் கறுத்தபெருஞ் சரீரமுடையவனுகி வானர சேனைகளைக் கிட்டினன். இங்ஙு னம் அவன் யுத்தஞ் செய்யச் சென்றுகொண்டிருக்கையில் பயங்கரமான கெட்ட சகுனங்கள் அவனுக்கு நாற்புறத்தி லும் புலப்பட்டன. பூமி சமுத்திரங்களோடும் காடுகளோ டும் கிடுகிடுவென்று நடுங்கிற்று. நரிகள் பயங்கரமான உருவத்துடன் வாயினுல் தீயை உமிழ்ந்துகொண்டு ஊளை யிட்டன. வழியில் கழுகுகள் மாலைபோல் வரிசையாகக் கூட்டங்கூடி அவன் தலைக்குமேல் ஆகாயத்தில் கிளம்பி வட்டமிட்டன. அவனுடைய இடதுகண் துடித்தது; இடதுகையும் நடுக்கமுற்றது. அப்பொழுது ஓர் கொள்ளிக் கட்டை எரிந்துகொண்டு பயங்கரமான ஒளியுடன் ஆகாயத் தினின்று விழுந்தது. சூரியன் ஒளியற்றவனுனன்.

கும்பகரணன் இவற்றை யெல்லாம் சிறிதும் பொருள் செய்யாமல், பர்வதம் போன்றவனுகையால், பாதங்களா லேயே மதிலைத் தாண்டி வானர சைன்னியங்களைக் கண்ட னன். அப்பொழுது அந்த வானரர்கள் மலைபோன்ற அவ்வரக்கனைக் கண்டு பயந்து காற்றினுலடியுண்ட மேகங்கள் போல் எல்லாத் திசைகளுக்கும் பறந்தோடினர். இதைக் கண்ட கும்பகரணன் சந்தோஷம் உள்ளடங்காமல் அடிக்கடி

சிம்மநாதஞ் செய்தனன். மேககர்ஜனை போன்ற அவனது சிம்மநாதத்தைக்கேட்டு, பலவானரர்கள் வேரற்ற மரங்கள் போல் தரையில் வீழ்ந்தனர். அனேக வானரர்கள் மூலைமூலை யாக ஓடத்தொடங்கினர்.

இங்ஙனம் பயந்து ஓடும் வானரர்களை அங்கதன்கண்டு சகிக்கமுடியாதவனாகி நலன் நீலன் கஜன் கவாக்ஷன் குமுதன் முதலியவர்களைப்பார்த்து "ஓ! வானர வீரர்களே! சற்று நின்று நான் சொல்லுவதைக் கேளுங்கள். இந்த ராக்ஷசன் யுத்தத்திற்கு ஏவப்பட்டவனல்லன். இது நமக்கு பயம் விளைக்கும்பொருட்டு ராக்ஷசர்களால் ஏற்படுத்தப்பட்ட ஓர் பெரிய மிரள்பொம்மையேயாகும். இதை நமது பராக்கிரமத்தினால் துவம்சம் செய்வோம். திரும்பி வாருங்கள்" என்றனன்.

உடனே வானரர்களனைவரும் சமாதானமடைந்து மலைகளையும் மரங்களையும் கைகளில் ஏந்திக்கொண்டுவந்து அவற்றால் கும்பகர்ணனை அடித்தனர். மிகுந்த பலவானான அக்கும்பகர்ணன் உயர்ந்த பர்வத சிகரங்களாலும், கற்களாலும், பெரிய மரங்களாலும் எவ்வளவு அடிக்கினும், அவற்றைப் பொருள் செய்யாமல் அசையாதிருந்தனன். கற்கள் முதலியவை கும்பகர்ணன் மேல்பட்டுப் பலசுக்கலாய் உடைந்தும், மரங்கள் முறிந்தும் தரையில் வீழ்ந்தன. பிறகு கும்பகர்ணன் மிகுந்த கோபங்கொண்டு அவ்வானர சைன்னியங்களை மிகமுயற்சியுடன் துன்புறுத்திப் பாழ் செய்தனன்.

வானர வீரர்கள் கும்பகர்ணனால் வீசி எறியப்பட்டு தேகம் முழுவதும் ரத்தத்தினால் நனைந்து நிலத்தில் விழுந்து பரிதவித்தனர். சில வானர வீரர்கள் பின் திரும்பிப் பாராமல் ஒருவர்மேலொருவர் தாண்டிகாலிட்டு ஓடத் தொடங்கினர். கும்பகர்ணனது அடிகளைப் பொறுக்கமுடியாத அவ்வானர வீரர்களில் சிலர் சமுத்திரத்தில் வீழ்ந்

தனர்; சிலர் ஆகாயத்தில் கிளம்பினர்; சிலர் முன்பு தாம் சமுத்திரத்தை தாண்டிவந்த சேது மார்க்கத்தில் ஓடத் தொடங்கினர். சிலர் பயத்தினால் முகம் விலவிலக்கப் பெற்று மேட்டுப் பூமிகளுக்கும் சிலர் பள்ளங்களுக்கும் ஓடிப் போயினர். சிலகரடிகள் மரங்களில் ஏறிக்கொண்டன. சில பர்வதங்களைப் பற்றின. சில சமுத்திரங்களில் வீழ்ந்து மூழ்கின; சில குகைகளையடைந்தன. சில வானரர்கள் மூர்ச்சையடைந்து செத்தாற்போல் தரையில் வீழ்ந்து கிடந்தனர்.

அங்கதன் தோல்வியடைந்து ஓடுகின்ற வானரர்களைக் கண்டு "ஓ வானர சிரேஷ்டர்களே! எதிரில்லாத பராக்கிரமமுடைய நீங்கள் ஆயுதத்தைத் துறந்து ஓடிப்போவீர்களாயின் உங்கள் மனைவிகளே உங்களைப் பரிகாசஞ் செய்வார்கள். மானத்துடன் பிழைக்கின்ற ஆண்களுக்கு அதுவே மரணமல்லவா? இதைக் காட்டிலும் வேறுமரணம் வேண்டுமோ? மிகவும் உயர்ந்த நற்குலத்தில் பிறந்த நீங்கள் யுத்தத்தில் இங்ஙனம் ஓடிப்போவது சரியோ? வானரர்களே! முன்பு நீங்கள் யுத்தம் ஆரம்பிக்குமுன் 'நாங்கள் அப்படிப்பட்டவர்; இப்படிப்பட்டவர்' என்று பலவாறாக உங்களை நீங்களே புகழ்ந்துகொண்டீர்களல்லவா? அளவிறந்து கம்பீரங்களான அந்தப் பிதற்றல்களெல்லாம் இப்பொழுது எங்குப்போயின? எவன் தோல்வியடைந்து உயிருடன் இருக்கின்றானோ அவனைப்பற்றி பயங்கொள்ளி யென்னும் அபவாதங்கள் பலவாறு ஜனங்கள் சொல்லச் செவிப்படுகின்றன. ஆகையால் வீரத்துடன் திரும்பி வருவீர்களாக. வயது அற்பமே யாகையால் எவரும் வெகுகாலம் பிழைத்திருக்கப்போகிறதில்லை. யுத்தத்தில் அடியுண்டு மாண்டு போகையால் எப்படிப்பட்டவருக்கும் பெறமுடியாத பிரமலோகத்தையாவது பெறுவோம்; அல்லது பகைவர்களைக்

கொன்று கீர்த்தியையாவது பெறுவோம். எரிகின்ற நெருப்பைப்பார்த்த பின் விட்டில் பூச்சி பிராணனுடன் திரும்பமுடியாதாப்போல், கும்பகரணன் ராமனைப் பார்த்த பின் பிராணனோடு திரும்பிப் போக வல்லனல்லன். நாம் இதுவரையில் நல்ல பெயரெடுத்து இன்று கும்பகரணனால் தோல்வியடைந்து ஓடிப்போய் பிராணன்களைப் பாதுகாத்துக் கொள்வோமாயின் நாம் இத்தனை நாள் சம்பாதித்த கீர்த்தி யெல்லாம் நசித்துப்போகும்" என்றனன்.

இதைக்கேட்ட ஓடுகின்ற வானரர்கள் உத்சாகமடைந்து மனதைத் திடப்படுத்திக்கொண்டு யுத்தத்திற்கு சித்தமா யிருந்தனர்.

அறுபத்தைந்து & அறுபத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தேழாவது ஸர்க்கம்

## கும்பகரணன் சுக்கிரீவனால் அவமானமடைந்து ராமனோடு யுத்தஞ் செய்து மாண்டுபோதல்.

பிறகு அவ்வானரர்கள் பெரியமரங்களையும், தாழ்வரை களையும் எடுத்துக்கொண்டு கும்பகரணனை மீண்டும் எதிர்த்து வந்தனர். ஆனால் கும்பகர்ணனுடைய ஒவ்வொரு அடிக்கும் வானரர்கள் துன்பத்தையடைந்து அவயவங்கள் தளர்ந்து எழுநூறும், எண்ணூறும் ஆயிரமுமாகத் தரையில் வீழ்ந்த னர். அக்கொடியவரக்கன் மிகவும் கோபித்து கருடன் சர்ப்பங்களைத் தின்பதுபோல் வானரர்களை எட்டும், பத்தும், பதினாலும் இருபதும் முப்பதுமாகக் கைகளால் பிடித்து வாயில் போட்டுத் தின்றுகொண்டே யுத்தரங்கத்தில் விளை யாடினன். ஆயினும் வானரர்கள் ஆங்காங்கு ஒன்ருகக்கூடி மரங்களையும் பர்வதங்களையும் கையில் ஏந்திக்கொண்டே யுத்தத்தின் முனையில் நின்றனர்.

ரதங்களில் நின்று சண்டை செய்கிற வீரர்களான ராக்ஷசர்கள் பிரளயகால யமன்களைப்போல் பாணங்களை யெய்து வானரர்களின் தலைகளை வேகமாக அறுத்துத் தள்ளி னர். வானரர்களும் பெரிய பெரிய மரங்களைப் பிடுங்கி அவற்றால் ரதங்களை முறித்துக் குதிரைகளையும் யானைகளை யும் ஒட்டகங்களையும் ராக்ஷசர்களையும் உருமாய்த்தனர். அனுமான் ஒரு பெரிய மலைச்சிகரத்தைக் கும்பகரணனது மார்பின்மேல் வீசி எறிந்தனன். அதனால் கும்பகரணன் வருந்தி மேதஸ்ஸும் ரத்தமும் பெருகி உடம்பெல்லாம் நனையப்பெற்றுக் கலக்கமுற்றனன். சற்றுநேரம் கழித்து கும்பகரணன் கொடிய சூலாயுதத்தைக் கிருகிருவென்று சுழற்றி அனுமானுடைய மார்பைப் பிளந்தனன். அதனால் அனுமான் மூர்ச்சையடைந்து வாயினால் ரத்தத்தைக் கக்கி வீழ்ந்தனன்.

வானரர்கள் வீசியெறியும் பர்வதங்களைக் கும்பகரணன் கையினால் சூரணம் செய்தனன்; அவர்களெறிந்த மரங்களை முறித்தனன். வானரர்கள் முட்டிகளாலும் பாதங்களாலும் அவனைத் தகைந்தனர். அந்த அடிகளையெல்லாம் அவன் வெறுமனே தொடுவதுபோல் நினைத்தானன்றி சிறிதும் வருந்தவில்லை. கும்பகரணன் ருஷபனை இரண்டு கைகளா லும் அழுந்தக் கட்டியிறுக்கினன். உடனே ருஷபன் வாயி னால் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு தரையில் வீழ்ந்தனன். பின்னுமந்த கும்பகரணன் யுத்தத்தில் முட்டியால் சரபனை யடித்து முழங்காலால் நீலனை இடித்து உள்ளங்கையால் கவாக்ஷனை அறைந்தனன். கந்தமாதனனைப் பாதத்தா லுதைத்தனன்.

பிறகு பல வானர வீரர்கள் மலைமேல் கிளம்பி உட் காருவதுபோல், கும்பகரணன்மேல் ஏறி உட்கார்ந்து அவ னைப் பற்களால் கடித்தனர். பிறகு அவனை நகங்களால் பீறி

வதும், முட்டிகளால் குத்துவதும், முழங்கால்களால் குமுக்கு வதுமாகிப் பலவாறு துன்புறுத்தினர். கும்பகரணன் பலவா ஞகையால் கருடன் பாம்பைத் தின்பதுபோல் வானரர்க ளெல்லோரையும் கையால் பிடித்துத் தின்னத் தொடங்கி னன். அங்ஙனம் அவன் வானரர்களைக் குகைபோன்ற வாயில் போட்டுக்கொண்டவுடனே அவர்கள் மூக்கின் துவா ரங்களினின்றும், காதுகளினின்றும் புறப்பட்டு வெளி வந்தனர். இதைக்கண்ட அப்பெரும்பூதம்போன்ற அரக்கன் கோபித்தவனுகி வானரர்களையெல்லாம் முறித்துத் தின்னத் தொடங்கினன். அவன் பிரளய காலாக்கினிபோல் ரௌத்தி ராகாரனுகி மெய்மறந்து பூமி முழுதும் ரத்த மாமிசங்களால் நனைத்துக்கொண்டு வானர சைன்னியங்களிடையில் விளை யாடினன்.

இதைக்கண்ட சுக்கிரீவன் மிகுந்த கோபத்துடன் கும்ப கரணனை எதிர்க்க விரும்பி வஜ்ஜிரமும் இடியும்போன்ற ஒரு பருவதத்தைக் கிருகிருவென்று சுழற்றி கும்பகரணனது மார்பில் விழும்படி அடித்தனன். ஆனால் அந்தப் பர்வதம் கும்பகரணனது மார்பில் பட்டுச் சூரணமாகியது. பிறகு கும்பகரணனுல் எறியப்பட்ட மிகவும் பெரிய இரும்பினுல் செய்யப்பட்ட சூலாயுதம் அனுமானுல் தடுக்கப்பட்டு ஒடிந்துபோயிற்று. கும்பகரணன் ஒரு பெரிய மலைச்சிகரத் தைப் பிடுங்கிக்கொண்டுவந்து சுக்கிரீவன்மேல் வீசி எறிந்த னன். அதனுலடியுண்ட சுக்கிரீவன் மூர்ச்சித்து யுத்த பூமி யில் வீழ்ந்தனன். அதுகண்டு ராக்ஷசர்களெல்லோரும் சந்தோஷமுற்று சிம்மநாதஞ் செய்தனர். வானரர்கள் மிக வும் துக்கித்தனர்.

உடனே கீழே மூர்ச்சித்து விழுந்து கிடந்த சுக்கிரீவ னைக் கும்பகரணன் கிட்டி அவனை எடுத்துக்கொண்டு

'இவனைக் கொண்டுபோனேனாயின் ராம லக்ஷ்மணர்களோடு கூடின இவ்வானர சைன்னியத்தையெல்லாம் பிடித்துக் கொண்டாற்போலவேயாகும்' என்று நினைத்து லங்கையை நோக்கி நடந்தனன். இதுகண்ட அனுமான் அப்பொழுதே சென்று சுக்கிரீவனை விடுவிக்கக்கூடிய சாமர்த்தியமுடையவனேயாயினும், அப்படிச் செய்யின் சுக்கிரீவனது கீர்த்தி பாழாய்விடுமென்றுகருதி வாளாவிருந்தனன். அனுமான் அந்த சுக்கிரீவன் தானே தன்னை விடுவித்துக்கொண்டு வந்து அவனது பராக்கிரமத்தை அனைவரும் காண வேண்டுமென்று வாளாவிருந்தனன். வானரர்களெல்லோரும் மிகவும் வருந்தி உத்சாகமிழந்தனர்.

பிறகு கும்பகர்ணன் லங்கையில் பிரவேசித்து ராஜ மார்க்கத்தில் சென்றுகொண்டிருக்கும் பொழுது ராக்ஷசர்கள் சந்தோஷத்தினால் கும்பகர்ணன்மீது புஷ்ப வர்ஷங்களையும் பன்னீர்த் துளிகளையும் பொழிந்தனர். இதனால் சுக்கிரீவன் மூர்ச்சைதெளிந்து கும்பகர்ணனுடைய மார்பில் இருந்து கொண்டு அவனை எவ்விதம் அவமானம் செய்து தப்பிப் போகலாமென்று எண்ணமிட்டுக்கொண்டிருந்தனன்.

பிறகு சுக்கிரீவன் திடீரென்று தனது கூரிய நகங்களால் கும்பகர்ணனுடைய காதுகளைப்பிறிப் பற்களால் மூக்கைக் கடித்துக்கொண்டு பக்கங்களிலுள்ள கன்னங்களையும் தோள்களையும் வயிற்றின் பக்கங்களையும் பாதங்களால் பிளந்தனன். கும்பகர்ணன் அங்ஙனம் சுக்கிரீவனால் மூக்கையும் காதையும் இழந்து மிகவும் கோபமுற்று சுக்கிரீவனைக் கிருகிருவென்று சுழற்றித் தரையில் போட்டுத் துவைத்தனன். இங்ஙனம் கும்பகர்ணன் துவைக்கினும், ராக்ஷசர்கள் பலவாறு புடைத்துக் கொண்டிருப்பினும், சுக்கிரீவன் அவற்றைப் பொருள்செய்யாமல் வேகமாக ஆகாயத்திற் கிளம்பி ராமனிடம் வந்து சேர்ந்தனன்.

சுக்கிரீவன் தப்பித்துக்கொண்டு போனவுடன் கும்பகரணன் காது மூக்குகளையிழந்து லங்கைக்குச் செல்ல வெட்கி மீண்டும் யுத்தஞ்செய்ய விரும்பி வானர சைன்னியங்களை நோக்கி வந்தனன். அவன் வேகமாக அந்த சைன்னியத்தில் புகுந்து மிகுந்த கோபத்துடன் வானரர்கள் கணக்கற்ற பர்வதங்களாலும் மரங்களாலும் அடிப்பினும் அவற்றைச் சிறிதும் பொருள் செய்யாமல் அளவற்ற வானரர்களைப் பிடித்துத் தின்று கொண்டிருந்தனன். இதனால் வானரர்கள் அவனுக்கு முன் நிற்கமுடியாமல் ராமனைச் சரணமடைந்தனர். அப்பெரும்பூதம் வானரர்கள் ஓடிக்கொண்டிருக்கையில் அவர்களைப் பின்தொடர்ந்து எழுநூறும் எண்ணூறும் முப்பது நூறுமாக இரண்டு கைகளாலும் இறுக்கிப் பிடித்துத் தின்று கொண்டே தொடர்ந்தோடியது.

பிறகு அக்கொடிய வரக்கன் ராமனை எதிர்த்து வந்தனன். ராமன் பயங்கரமும் கூரானவைகளுமான பாணங்களை அவனது மார்பில் நாட்டினன். அதனால் வருந்தின கும்பகரணனது வாயினின்றும் நெருப்புப்போன்ற ஜுவாலைகள் வெளிப்பட்டன. அவன் கையிலிருந்த பெரியகதை நழுவித் தரையில் விழுந்தது. அவனது கத்தி முதலிய ஆயுதங்கள் அனைத்தும் சிதறித் தரையில் வீழ்ந்தன. அப்பால் கும்பகரணன் தான் ஆயுதமில்லாதிருப்பதை யறிந்து முட்டிகளாலும் கால்களாலும் பெரிய யுத்தஞ் செய்தனன்.

பிறகு கும்பகரணன் ஓர் பர்வத சிகரத்தை யெடுத்து கிருகிருவென்று சுழற்றி ராமனைக் குறித்து வீசிஎறிந்தனன். ராமன் அதை ஏழு பாணங்களால் கண்டித்துச் சூரணமாக்கினன். உடனே லக்ஷ்மணனது விருப்பத்தின்படி கணக்கற்ற வானரர்கள் கும்பகரணன் மேல் ஏறிக்கொண்டனர். அவன் மிகவும் கோபமுற்று மதம் பிடித்த யானை மாவெட்டிக்காரர்

களை உதறுவது போல் அவ்வானரர்க ளெல்லோரையும் உதறிப் போட்டனன். இதைக்கண்ட ராமன் மேலான வில்லை யெடுத்துக் கொண்டு கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று கும்பகரணனை எதிர்த்து வந்தனன். அவன் அவ்வரக்கனை நோக்கி "ராக்ஷஸாதிபதீ! நீ இந்திரனை ஜயித்தோமென்று கர்வங்கொள்ள வேண்டாம். என்னை ராமனென்றறிவாயாக. நான் இந்திரனல்லேன். இன்னும் சிறிது நேரத்திற்குள்ளாக என்னால் உயிரை இழக்கப்போகிறாய்" என்றனன்.

இதைக்கேட்ட கும்பகரணன் ராமனை நோக்கி "நான் விராதனல்லேன்; கபந்தனுமல்லேன்; கரனுமல்லேன்; மாரீசனுமல்லேன்; வாலியுமல்லேன். நீ இவர்களைக் கொன்றோ மென்று கர்வங்கொள்ளவேண்டாம். என்னைக் கும்பகரணனென்று அறிவாயாக" என்று கூறி சிறந்த இரும்பினால் செய்யப்பட்ட ஓர் பெரிய கதாயுதத்தைச் சுழற்றினன். ராமன் வஜ்ஜிரத்தோடொத்த வேகமுடைய கூரான பாணங்களால் கும்பகரணனை அடித்தனன். கும்பகரணன் அங்ஙனம் அடிபட்டும் சிறிதும் கலக்கமுறவில்லை. வருத்தத்தையும் அடையவில்லை. எந்த பாணங்களால் முன்பு மேலான ஏழு ஸால மரங்கள் பிளக்கப்பெற்றனவோ, வாலியும் மாண்டு போயினனோ, அப்படிப்பட்ட பாணங்கள் இப்பொழுது கும்பகரணனது சரீரத்தில் சிறிதும் வருத்தம் விளைவிக்கவில்லை.

கும்பகரணன் பயங்கரமான இரும்புக் கதாயுதத்தைக் கிருகிருவென்று சுழற்றிய வண்ணம் ராம பாணங்களின் வேகத்தைத் தடுத்துக்கொண்டு வந்தனன். மீண்டும் அந்த கதாயுதத்தினால் வானர சைன்னியங்களை அடித்து விரட்டி ஓட்டினன். இது கண்ட ராமன் அஸ்திரங்களிற் சிறந்த வாயவ்யாஸ்திரத்தை யெடுத்து அந்த ராக்ஷஸன்மேல் பிரயோகித்தனன். அது இரும்பு கதாயுதத்தோடு கூடின அவனது

கையைத் துண்டித்தது. அவன் கையறுப்புண்டு பெருங் கோஷமாக இரைச்சலிட்டனன்.

பிறகு அவ்வரக்கன் இரண்டாவது கையினால் ஓர் மரத்தைப் பிடுங்கி எடுத்து ராமனை எதிர்த்து ஓடி வந்தனன். ராமன் தாமதியாமல் ஓர் விசித்திரமான பாணத்தை ஐந்திராஸ்திர (இந்திரனது அஸ்திரம்)த்தினால் அபிமந்திரித்து கும்பகரணனுடைய இரண்டாவது கையையும் அம்மரத்தோடு கூடவே துண்டித்தனன். மீண்டும் அந்த கும்பகரணன் இரைச்சலிட்டுக் கொண்டு தன்மேல் வேகமாக எதிர்த்து வருவதைக்கண்ட ராமன் தீக்ஷ்ணமான அர்த்த சந்திர பாணங்களால் அவனது இரண்டு கால்களையும் துண்டித்தனன். அப்பொழுதும் அக்கொடியவன் வாயைத் திறந்து கொண்டு அறுந்து விழுந்த துடைகளால் ராமன் மேல் வேகமாக எதிர்த்து வந்தனன். முடிவில் ராமன் வஜ்ஜிராயுதம் போலும் இடி போலும் மிகுந்த வேகமுடைய ஐந்திராஸ்திரத்தை மீண்டுமொருதரம் பிரயோகித்து அந்தக் கும்பகரணனுடைய தலையை அறுத்துத் தள்ளினன். பர்வதம்போன்ற அவனது தலை நிலத்தில் விழுகையில் அந்த அதிர்ச்சியினால், சய்யா கிருஹங்களும், பட்டணத்து வாசற்படிகளும், உயர்ந்த பிராகாரங்களும் முறிந்து தரையில் வீழ்ந்தன. பூமியும் பர்வதங்களும் நடுக்கமுற்றன. தேவதைகள் சந்தோஷத்தினால் பெரிய ஆரவாரத்துடன் சிம்மநாதஞ் செய்தனர். ஆகாயத்தில் நின்றிருந்த தேவர்களும், ரிஷிகளும், உரகர்களும், கருடர்களும், யக்ஷர்களும், கந்தருவர்களும் ராமனது பராக்கிரமத்தைக் கண்டு மிகவும் சந்தோஷித்தனர்.

பிறகு ராக்ஷசர்கள் தீரர்களாயினும், மகாபலமுடைய கும்பகரணன் மாண்டதற்கு மிகுதியும் வருந்தி அசுரர்கள் விஷ்ணுவைப் பார்த்து பயப்படுவதுபோல் ராமனைப் பார்த்து

பயந்து உரக்கக் கூச்சலிட்டனர். வானரர்களனைவரும் கும்பகர்ணன் மாண்டதைக் கண்டு மிகுந்த சந்தோஷத்துடன் விருத்திராசுரனைக் கொன்ற தேவேந்திரனைப்போல் கும்பகரணனைக் கொன்ற ராமனைச் சூழ்ந்து அவனைப் பூஜித்தனர்.

அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தெட்டாவது ஸர்க்கம்.

## ராவணன் கும்பகரணனை நினைத்துப் புலம்புதல்.

யுத்தத்தில் தோல்வியடைந்த ராக்ஷசர்கள் லங்கைக்குச் சென்று ராமபாணத்தினால் கும்பகரணன் மாண்டொழிந்தானென்று ராவணனுக்குச் சொல்லினர். இதைக் கேட்ட ராவணன் மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந்தனன். தேவாந்தகன் நராந்தகன், திரிசிரன், அதிகாயன் ஆகிய இவர்கள் சிற்றப்பன் மாண்டதை அறிந்து சோகத்தினால் வருந்திப் புலம்பி அழுதனர். மகோதரனும் மஹாபார்சுவனும் மத யானைபோன்ற கும்பகரணன் இறந்ததைக் கேட்டு துக்கத்தினால் பீடிக்கப் பெற்றனர்.

பிறகு ராவணன் மூர்ச்சை தெளிந்து கும்பகரணனை நினைத்து "ஆ! வீரனே! பகைவர்களின் கர்வத்தை அழிப்பவனே! கும்பகரணா! நீ தெய்வ கதியினால் என்னைவிட்டு இப்பொழுது யமலோகத்திற்குப் போயினையே! நான் எதைப் பற்றி தேவாசுரர்களுக்கும் பயப்படாதிருப்பேனோ அப்படிப் பட்ட எனது வலதுபுஜம் விழுந்துபோனமையால் (நீ பட்டுப் போனமையால்) நான் உயிருடனிருந்தும் இல்லாதவனாகவே ஆயினன். ஐயோ! கும்பகரணா! உனக்கு வஜ்ஜிராயுதத்தினடியும் இடியும் எப்பொழுதும் வருத்தம் விளைவிக்க வல்லவையாகமாட்டாவே. அப்படிப்பட்ட நீ எப்படி கேவலம் மானிடனான ராமனது பாணங்களால் பீடிக்கப் பெற்றுத்

தரையில் வீழ்ந்து உறங்குகின்றனை? அதோ ஆகாயத்தில் தேவர்களும் ரிஷிகளும் கூட்டங் கூடி நீ மாண்டமைபற்றி மிகவும் சந்தோஷமுற்றிருக்கின்றனரே! நீ மாண்டமையால் வானரர்களும் மிகுந்த தைரியமடைந்து நுழைய முடியாத லங்கையின் வாயிற்படிகளில் நுழைந்து பட்டணத்தை நாசம் செய்வார்களே. அந்தோ! இனி ராஜ்ஜியத்தினால் எனக்குப் பிரயோஜனமில்லை. இனி சீதையைக்கொண்டு நான் என்ன செய்யப்போகிறேன்? கும்பகரணனைப் பிரிந்தபின்பு எனக்குப் பிழைப்பதிலேயே இஷ்டமில்லை. நான் எனது தம்பியைக் கொன்ற ராமனை யுத்தத்தில் கொல்லாது போவேனேயாயின், எனது பிழைப்பு வீணேயாகும். அதைக் காட்டிலும் எனக்கு மரணமே நன்மை. இப்பொழுது என் தம்பி எவ்விடம் போயினனோ அங்கு நானும் செல்கிறேன். ஐயோ! கும்பகரணா! நீ மாண்டுபோயினையே! இனி நான் இந்திரனை எப்படி வெல்வேன்? புண்ணியாத்துமாவான விபீஷணன் என் க்ஷேமத்தை விரும்பிச்சொன்ன வார்த்தைகள் இப்பொழுது எனக்கு உண்மையாகவே தோன்றுகிறது. அவற்றை நான் முன்பு அறியாமையால் கேளாமற் போயினேன். நான் தருமவானான விபீஷணனைத் துரத்தினேனல்லவா? அந்தப் பாவகாரியத்தின் பலனே இப்பொழுது எனக்கு துக்கத்தை விளைக்கின்றதுபோலும்” என்று புலம்பி துக்கத்தைப் பொறுக்கமுடியாமல் வருத்தத்தின் மிகுதியால் மூர்ச்சித்து வீழ்ந்தனன்.

அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தோன்பதாவது ஸர்க்கம்

## ராவணன் அனுப்பின மகோதரன் முதலிய ராக்ஷசர்கள் யுத்தத்திற்கு வருதல்.

கும்பகரணனது மரணத்தினால் மிகவும் வருத்தமுற்றிருக்கும் ராவணனை அவனது மகனான திரிசிரன் அநேக

தைரியமொழிகளைக் கூறித் தேற்றினன். அப்பொழுது ராவணனது மற்ற குமாரர்களான தேவாந்தகன் நராந்தகன் அதிகாயன் முதலியவர்கள் மிகுந்த உத்சாகத்துடன் 'நான், நான்' என்று கர்ஜித்துக்கொண்டு யுத்தம் செய்யத் தயாராக விருந்தனர். அந்த ராவணனது மைந்தர்கள் அனைவரும் மாயையில் கைதேர்ந்தவர்; தேவதைகளுடைய கர்வத்தையும் அடக்கும் தன்மையர்; சிறந்த பலமும் பரந்த புகழுமுடைய வர். உயர்ந்த வரங்கள்பெற்றுச் சிறந்த சாஸ்திர ஞான முடையவர். அப்படிப்பட்ட வீரர்களான தனது புதல்வர் களை ராவணன் அணைத்துச் சிறந்த பூஷணங்களால் அலங் கரித்து மேலான ஆசீர்வாதங்களால் உத்சாகப்படுத்தி யுத்தத் திற்கு அனுப்பினன். அவர்களுக்குத் துணையாகத் தனது உடன்பிறந்தவர்களான மகோதரனையும் மகா பார்சுவனையும் அனுப்பினன். உடனே ராவணன் குமாரர்கள் நான்கு பேர் களும் அந்த மகோதர மகாபார்சுவர்களுடன் ராவணனை வணங்கி மிகுந்த உத்சாகத்துடன் யுத்தத்திற்குப் புறப் பட்டனர்.

மகோதரன் சுதர்சனமென்னும் சிறந்த யானையின்மேல் ஏறிச்சென்றனன். ராவணனது புத்திரனான திரிசிரன் தன் மூன்று தலைகளிலும் மூன்று கிரீடங்களையணிந்து மேலான ரதத்தில் ஏறிச் சென்றனன். அதிகாயன் தேவதைகளால் சூழப்பட்ட தேவேந்திரன்போல் ராக்ஷசர்களால் சூழப்பட் டுச் சிறந்த அலங்காரஞ் செய்யப்பெற்ற தேரில் ஏறிச்சென்ற னன். நராந்தகன் இந்திரனது குதிரைபோல் தோன்று வதும் பொன் பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டதும் மனோ வேகமுடையதுமான வெளுத்த குதிரையின்மேலேறிச் சென்றனன். பின்னுமவன் சக்தியென்னுமாயுதத்தைத் தரித்து வேலாயுதம் பிடித்த சுப்ரமணியனைப்போல் பிர காசித்தனன். தேவதைகள் நிகரில்லாத சைன்னியங்களால்

சூழப்பட்டு அமராவதியினின்று புறப்படுவதுபோல் அந்த ராக்ஷசர்கள் அளவிறந்த சைன்னியங்களால் சூழப்பட்டு லங்கையினின்று புறப்பட்டனர். அவர்கள் 'பகைவர்களையாயினும் ஜயிக்கவேண்டும் அல்லது அவர்களால் மரணத்தையாவது அடையவேண்டும்' என்று நிச்சயித்துக்கொண்டு புறப்பட்டனர். அவர்கள் மிகுந்த செருக்கினால் பயங்கரமான ஸிம்மநாதங்களைச் செய்துகொண்டு பளபளப்பான ஆயுதங்களையேந்தி வானர சேனைகளை நோக்கிச் சென்றனர். வானர வீரர்கள் தங்களை நோக்கிவரும் ராக்ஷச சைன்னியங்களைக்கண்டு தமது பராக்கிரமத்தை வெளியிட அவகாசம் கிடைத்ததென்று பெரிய மலைகளை ஏந்திக்கொண்டு அவர்களை எதிர்க்கத் தயாராயிருந்தனர். பின்னும் அவ்வானர வீரர்கள் பயங்கரமான ராக்ஷச சேனையில் புகுந்து பர்வதங்களைக் கைகளில் ஏந்திச் சிகரங்களோடுகூடின மலைகள்போல் உலாவினர். அவர்களிற் சிலர் பெரிய அடிபாகத்தையுடைய மரங்களைப் பிடுங்கி ஏந்திக்கொண்டு பெருங் கோபாவேசத்துடன் ஆகாயத்திலிருந்தும் பூமியிலிருந்தும் ராக்ஷசர்களையெதிர்த்து பயங்கரமான யுத்தஞ் செய்தனர். ராக்ஷசர்கள் வானரர்மேல் எவ்வளவு கூரான பாணங்களைப் பிரயோகிப்பினும், வானரர்கள் அவற்றை மலைகளாலும் கற்களாலும் தடுத்து ராக்ஷசர்கள்மேல் மரங்களையும் சிலைகளையும் நிகரில்லாதபடி மழை பெய்தாற்போல் பெய்தனர்.

சில வானரர்கள் ராக்ஷசர்களைக் கற்களாலடித்துச் சூரணம் செய்தனர். சிலர் ராக்ஷச வீரர்கள்மீது தபீலென்று குதித்துப் புடைக்கலாயினர். யானைமேலும் குதிரைமேலும் உட்கார்ந்திருப்பவரை அங்ஙனமே மேல்விழுந்து துன்புறுத்தினர். அந்த யுத்தத்தில் ராக்ஷசர்கள் குந்து வரிசைகளால் கண்மண்டை பிதுங்கி வெளித்தோற்றவும் பெற்று இங்குமங்கும் திரிந்து தரையில் விழுந்து இரைச்சலிட்டனர்.

ராக்ஷசர்களும் கொடிய பாணங்களால் வானரர்களைப் பிளந்தனர். சூலங்களாலும் இரும்புத் தடிகளாலும், கத்திகளாலும், ஈட்டிகளாலும் வானரர்களைக் கொன்றனர். பிறகு ஒரு முகூர்த்த காலத்தில் அந்த யுத்தபூமி முழுவதும் வானரர்களும் ராக்ஷசர்களும் ஒருவர்மேல் ஒருவர் பிரயோகித்த பர்வதங்களாலும் கத்திகளாலும் மறைக்கப்பட்டு ரத்த வெள்ளத்தினால் நிறைந்தது. அந்த யுத்தபூமியில் ராக்ஷசர் வானரர்களால் அடிக்கப்பட்டு, கவசங்கள் முறியப்பெற்று, கத்தியால் வெட்டுண்ட மரங்கள் ரசத்தைப் பெருக்குவது போல் ரத்தத்தைப் பெருக்கினர். சில வானரர்கள் யுத்தத்தில் ரதத்தினால் ரதத்தையும், யானையால் யானையையும், குதிரையால் குதிரையையும் அடித்துக்கொன்றனர். ராக்ஷசர்கள் பல பல பாணங்களை யெய்து வானரர்கள் போடுகிற மரங்களையும் கற்களையும் தடுத்தனர். யுத்தத்தில் சிதறியிருக்கின்ற மலைச்சிகரங்களும் முறிந்திருக்கின்ற மரங்களும் மாண்டுபோன வானர ராக்ஷசர்களும் நிறைந்திருக்கையால் பூமி நடந்துபோக முடியாதிருந்தது. அந்த யுத்தத்தில் வானரர்கள் சந்தோஷத்தினால் வளர்ந்து வருவதையும், ராக்ஷசர்கள் பலம் குறைந்து கீழ் விழுவதையும் பார்த்து மகரிஷிகளும் தேவதைகளும் சந்தோஷத்தினால் இரைச்சலிட்டனர்.

அப்பொழுது நராந்தகன் ஒப்பற்ற தன் குதிரையின் மீதேறிக்கொண்டு கூரான சக்தியெனும் ஆயுதத்தை ஏந்தி வானர சைன்னியத்தில் மிகுந்த ஆத்திரத்துடன் புகுந்து ஜ்வலிக்கின்ற தனது ஈட்டியினால் எழாயிரம் வானரர்களைப் பிளந்து கொன்றனன். இங்ஙனம் அவன் ஒருவனாகவே ஒரு க்ஷணநேரத்தில் மேலான வானர சேனையை அடித்துக் கலங்கச் செய்தனன். பின்னுமவன் ஜ்வலிக்கின்ற கூரான ஈட்டியைப் பிடித்துக்கொண்டு யுத்தத்தின் முனையில் காட்டுத்

தீ காட்டைக் கொளுத்துவதுபோல் வானர ஸைன்னியங்களை மிகவும் துன்புறுத்தினன். வானரர்கள் மரங்களையாவது மலைகளையாவது பெயர்த்தெடுத்துப் போடுவதற்குள்ளாகவே நராந்தகனுடைய ஈட்டியாலடிக்கப்பட்டு வஜ்ஜிரத்தினால் அறுக்கப்பட்ட மலைகளைப்போல் தரையில் வீழ்ந்தனர். அவனது பாரக்கிரமத்தினால் வானரர்கள் ஓடவும் நிற்கவும் இப்படி அப்படி அசையவும் வல்லமையற்றிருந்தனர்.

இதைக்கண்ட சுக்கிரீவன் பொறுக்க முடியாமல் அங்கதனை நோக்கி நராந்தகனைக் கொல்லுமாறு கட்டளையிட்டனன். உடனே அங்கதன் யாதொரு ஆயுதமுமின்றி நராந்தகனை அணுகி 'ராக்ஷசா! இதோ என்மீது உனது ஈட்டியை எறி, பார்ப்போம்' என்றனன். நராந்தகன் மிகுந்த கோபத்துடன் ஜ்வலிக்கின்ற தனது ஈட்டியை கிருகிருவென்று சுழற்றி அங்கதன்மீது எறிந்தனன். அது அவனது மார்பில் பட்டு முறிந்து தரையில் வீழ்ந்தது. உடனே அங்கதன் தனது உள்ளங்கையால் நராந்தகனது குதிரையின் தலையிலடித்தனன். அதனால் அம்மேலான குதிரை கண்விழி பிதுங்கி நாக்கு வெளிப்பட்டுத் தரையில் வீழ்ந்தது.

இதனால் மிகுந்த கோபங்கொண்ட நராந்தகன் தனது கைமுஷ்டியினால் அங்கதன் தலையின்மேல் அடித்தனன். அதனால் அங்கதன் தலை பிளக்கப்பெற்று மிகவும் உஷ்ணமான ரத்தத்தை வெள்ளமாகப் பெருக்கிக்கொண்டு மூர்ச்சையடைந்தனன். சிறிது நேரத்தில் அங்கதன் பிரக்கினை தெளிந்தெழுந்து நராந்தகனுடைய பலத்திற்கு ஆச்சரியமுற்றுத் தனது கைப்பிடியினால் நராந்தகனுடைய மார்பில் ஓங்கி அடித்தனன். அதனால் நராந்தகன் மார்பு முறியப்பெற்று பர்வதம்போல் தரையில் வீழ்ந்து உயிரை விட்டனன். இதுகண்டு ஆகாயத்திலுள்ள தேவதைகளும் மகரிஷி

களும் சந்தோஷத்தினால் இரைச்சலிட்டனர். ராமன் அங்கத னுடைய வீரச் செயலுக்கு மெச்சினன்.

அறுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபதாவது ஸர்க்கம்

### அனுமான் தேவாந்தகனையும் திரிசிரனையும், நீலன் மகோதரனையும், ருஷபன் மகா பார்சுவனையும் கொல்லுதல்.

நராந்தகன் மாண்டதைக் கண்டு தேவாந்தகனும் திரிசிர னும் மகோதரனும் கூச்சலிட்டனர். அவர்கள் மூவரும் அங்கதன்மேல் மிகுந்த ரோஷத்துடன் எதிர்த்துச் சென்ற னர். அங்கதன் பெருங்கிளைகள் அமைந்த ஓர் மரத்தைப் பிடுங்கி தேவாந்தகன்மேல் வீசி எறிந்தனன்.

திரிசிரன் அதுகண்டு சர்ப்பம்போன்ற பாணங்களால் அம்மரத்தைப் பிளந்தனன். அங்கதன் தானெறிந்த மரம் விறுனதைக்கண்டு ஆகாயத்திற் கிளம்பிக் கணக்கற்ற மலைச் சிகரங்களையும் மரங்களையும் அந்த ராக்ஷசர்கள் மீது மழை போல் பொழிந்தனன். திரிசிரனும் தேவாந்தகனும் கொடிய பாணங்களை யெய்து அவற்றையெல்லாம் தடுத்தனர்.

அப்பொழுது மகோதரன் மிகுந்த கோபாவேசத்துடன் வஜ்ரம்போன்ற தோமரத்தினால் அங்கதனுடைய மார்பி லடித்தனன். தேவாந்தகனும் திரிசிரனும் பின்னும் விடா மல் பாண மழைகளைப் பெய்துகொண்டேயிருந்தனர். இங்ங னம் மூன்று ராக்ஷசர்களும் ஒரே காலத்தில் அங்கதனை எதிர்த்தபோதிலும் அவன் சிறந்த பராக்கிரமமும் பலமு முடையவனுகையால் சிறிதும் வருத்தமுறவில்லை. உடனே அங்கதன் தனது உள்ளங்கையினால் அம்மகோதரன் வீற் றிருந்த யானையைத் தலையில் அடித்தனன். அக்கணமே அது கண்கள் பிதுங்கி ரத்தத்தைப் பெருக்கிக்கொண்டு

கீழே விழுந்து உயிர் துறந்தது. அங்கதன் அத்தும்பியின் தந்தங்களைப் பிடுங்கி அவற்றால் அவ்வரக்கர்களை அடித்தனன். இதனால் அவர்கள் காற்றினலசைக்கப்பட்ட மரத்தைப் போல் அவயவங்களெல்லாம் விலவிலக்கப்பெற்று ரத்தத்தைக் கக்கினர்.

மீண்டுமவ்வரக்கர்கள் மூர்ச்சை தெளிந்தெழுந்து அங்கதன்மேல் கணக்கற்ற கூரிய பாணங்களை யெய்தனர். அச்சமயம் அனுமானும் நீலனும் அங்கதனுக்கு உதவி புரிய ஓடிவந்தனர். அனுமான் மிகுந்த ஆத்திரத்துடன் மேற்கிளம்பி வஜ்ஜிரம்போன்ற தனது முஷ்டியினால் தேவாந்தகனைத் தலையிலடித்தனன். அதனால் தேவாந்தகன் தலை உடைந்து பற்களும் கண்களும் வெளித்தோன்றவும் நாக்குத் தொங்கவும்பெற்று உயிரிழந்து தரையில் வீழ்ந்தனன்.

இதைக்கண்ட திரிசிரன் அனுமானைக் கூரான பாணங்களால் பிளந்தனன். அனுமான் மிகுந்த கோபத்துடன் மிகவும் பெரிய பர்வதங்களையும் மரங்களையும் அவன்மேல் எறிந்துகொண்டே யிருந்தனன். ஆயினும் திரிசிரன் தனது கூரான பாணங்களால் அவற்றை யெல்லாம் தடுத்துப்பொடி செய்தனன். பின்னும் அத்திரிசிரன் அனுமான்மேல் சக்தி யென்னும் பயங்கரமான ஆயுதத்தை வீசி எறிந்தனன். அது தன்மேல் படுவதற்கு முன்னமே அனுமான் அதைப் பிடித்து முறித்து சிம்மநாதஞ் செய்தனன். உடனே திரிசிரன் மிகுந்த ரோஷத்துடன் கத்தியையெடுத்து விசாலமான அனுமானுடைய மார்பிலடித்தனன். அனுமான் அக்கத்தியாலடிக்கப்பட்டும் சிறிதும் வருந்தாமல் அவனைத் தன் உள்ளங்கையால் மார்பில் அறைந்தனன். அதனால் அவ்வரக்கன் மூர்ச்சித்து ஆயுதம் நழுவப்பெற்று பூமியில் வீழ்ந்தனன். உடனே அனுமான் அவனது கையிலிருந்த கத்தி

யைப் பிடுங்கிக்கொண்டு ராக்ஷசர்கள் பயமுறும்படி சிம்ம நாதஞ் செய்தனன்.

திரிசிரன் சீக்கிரம் கிளம்பி யெழுந்து அனுமானைத் தானும் முஷ்டியினால் புடைத்தனன். அனுமான் அதைச் சிறிதும் லக்ஷியம் செய்யாமல் அவனைக் கிரீடத்துடன் கெட்டியாகப்பிடித்து கூரான அவனது கத்தியால் அவனது மூன்று தலைகளையும் வெட்டினன். அதே சமயத்தில் நீலன் ஓர் பர்வதத்தைப் பிடுங்கி மஹோதரனுடைய தலையிலடித்த னன். மஹோதரன் அதனால் உடல் நசுங்கப்பெற்று ஆவி துறந்தனன்.

இவற்றையெல்லாம் கண்ட மகாபார்சுவன் மிகவும் பொறுக்கமுடியாத கோபாவேசத்துடன் கையில் கதையை ஏந்திக்கொண்டு வானர சேனாதிபதியான ருஷபனை எதிர்த் தனன். ருஷபன் அவனது கதையால் மார்பிலடிக்கப்பட்டு மிகவும் தடுமாற்றமுற்று மிதமல்லாத ரத்தத்தைப் பெருக் கினன். சிறிது நேரத்தில் அந்த ருஷபன் மூர்ச்சை தெளிந்தெழுந்து மிகுந்த ஆத்திரத்துடன் மகாபார்சுவனை எதிர்த்தோடி அவனது கையிலிருந்த பயங்கரமான கதை யைப் பிடுங்கி அதைக் கிருகிருவென்று சுழற்றி அம் மகா பார்சுவன் மேலெறிந்தனன். அடுத்த நிமிடமே அவ்வரக் கன் கண்கள் சிதறி, பலம் தொலைந்து ஆயுளும் முடியப் பெற்று பூமியில் வீழ்ந்தனன்.

இங்ஙனம் ராவணனது புத்திரர்களும் தம்பிமார்களும் மாண்டொழிந்ததைக்கண்ட ராக்ஷச சைன்னியங்கள் மிகவும் பயந்து ஓடிப்போயின.

எழுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்தோராவது ஸர்க்கம்.

## அதிகாயனை லக்ஷ்மணன் கொல்லுதல்.

இவற்றையெல்லாம் கண்ட அதிகாயனென்னும் ராவணன் மகன் மிகவும் கோபமுற்று ஓடுகிற சைன்னியங்களைத் திருப்பி உத்சாகப்படுத்தி வானரர்களை நோக்கி எதிர்த்து வந்தனன். அவனது வில்லின் நாண் சப்தத்தையும் அவன் செய்த சிம்மநாதத்தையும் கேட்ட சமஸ்த வானரர்களும் பயந்து நடுங்கினர். அவனது பெருஞ் சரீரத்தைக் கண்ட வானரர்கள் 'கும்பகர்ணனே மீளவும் எழுந்து வந்தான்' என்று பயத்தினால் வருந்தி ஒருவரை யொருவர் பற்றினர். சிலர் பயந்து மூலைக்கொருவராக ஓடினர். சிலர் லக்ஷ்மணனிடம் அடைக்கலம் புகுந்தனர்.

இங்ஙனம் பெருத்த சரீரத்துடன் உயர்ந்த ரதத்தின் மீதேறி வரும் பயங்கரமான உருவமுடைய அதிகாயனை ராமன் கண்டு ஆச்சரியமடைந்து வானரர்களுக்கு நல்ல வார்த்தை சொல்லிப் பயத்தைப்போக்கி அவன் யார் என்று விபீஷணனை வினவினன்.

விபீஷணன் ராமனை நோக்கி "ராமா! இவன் ராவணனது புதல்வனான அதிகாயன் என்பவன்; யுத்தத்தில் ராவணனைப்போன்றவன். ராவணனுக்குத் தான்யமாலினியிடம் பிறந்தவன். இவனது புஜபலத்தைப்பற்றியே லங்காபுரி நிர்ப்பயமாயிருக்கின்றது. இந்த அதிகாயன் மேலான தவஞ்செய்து பிரமதேவனை ஆராதித்து திவ்வியாஸ்திரங்களைப் பெற்றுப் பகைவர்களை வென்றனன். இவனுக்கு பிரமதேவன் தேவாசுரர்களால் சாவில்லாமையையும் திவ்வியமான இந்தக் கவசத்தையும், சூரியன்போல் ஜ்வலிக்கின்ற இந்த ரதத்தையும் ஈந்தனன்.

ராமா! இவ்வதிகாயன் நூறுதடவைகள் தேவதானவர்களைத் தோற்கச் செய்து ராக்ஷசர்களைக் காப்பாற்றியிருக்கின்றனன். இவன் யக்ஷர்களை உருமாய்த்தவன், இந்திரனுடைய வஜ்ஜிராயுதத்தையும் ஸ்தம்பிக்கச்செய்தவன்; வருணனுடைய பாசாயுதத்தை வீண் செய்தவன்; ஆகையால் இப்படிப்பட்ட புஜபல பராக்கிரமமுடைய இவ்வதிகாயன் வானர சைன்னியங்களைக் கொல்வதற்கு முன்னமே வெற்றிகொள்வதற்கு முயல்வாயாக" என்றனன்.

பிறகு அதிகாயன் வானர சேனையில் புகுந்து வில்லினுடைய நாணை ஒலிப்பித்துப் பலவாறு சிம்மநாதஞ் செய்தனன். இவனை வானர வீரர்களான குமுதன், துவிவிதன், மைந்தன், நீலன், சரபன் முதலியோர் மரங்களையும் பர்வத சிகரங்களையும் கையில் ஏந்திக்கொண்டு ஒரே தடவையில் எதிர்த்தனர். அதிகாயன் அவர்கள் எறிந்த பர்வதங்களையும் மரங்களையும் கூரான பாணங்களால் தடுத்துப் பொடியாக்கினன். வானரர்கள் அவ்வதிகாயனுடைய அம்புமழைகளினால் பீடிக்கப்பட்டு தேகம் முழுவதும் ரத்தமயமாகி யுத்தத்தில் அவனை ஒன்றும் செய்ய முடியாமல் திகைத்தனர்.

அப்பொழுது அதிகாயன் யௌவனத்தின் கொழுப்பினால் ராமனிடஞ் சென்று "இதோ நான் வில்லும் அம்பும் பிடித்து யுத்தத்திற்கு நின்றிருக்கின்றேன். அற்பனை எவனோடாயினும் யுத்தஞ் செய்யேன். உங்களில் யுத்தஞ் செய்ய உத்சாகமுடையவன் சீக்கிரம் எனக்கு யுத்தம் கொடுப்பானாக" என்றனன். லக்ஷ்மணன் இதைக் கேட்டு பொறுக்க முடியாமல் கோபித்துக் கையில் வில்லை ஏந்தி அவனை எதிர்த்துச் சென்றனன்.

அதிகாயன் தன்னை நோக்கி எதிர்த்து வருகிற லக்ஷ்மணனைக் கண்டு "லக்ஷ்மணா! நீ ஒன்றுந் தெரியாத சிறியவன்; யுத்தத்தில் கைதேர்ந்தவனல்லை. யமனைப்போன்ற

என்னை எதிர்த்து என் வீணில் உயிரிழக்கின்றனை? உன துயிரின்மேல் உனக்கு விருப்பமில்லையாயின் நிற்பாய்" என்றனன்.

லக்ஷ்மணன் அவனது ரோஷமும் கர்வமுமுற்ற வார்த்தைகளைக் கேட்டு மிகவும் கோபங்கொண்டு அவனை நோக்கி "துர்ப்புத்தி! ஏன் வீணில் வாயினால் பிதற்றுகின்றனை? தற்புகழ்ச்சியால் நீ சூரனாகமாட்டாய். என்னைப் பாலனென்று இகழ்ந்து கூறிய உனக்கு இப்பொழுதே யமனுலகுக்கு வழிகாட்டுகிறேன்" என்றனன். உடனே அதிகாயன் ஒப்பற்ற கூர்மை பொருந்திய பாணங்களை லக்ஷ்மணன்மேல் பிரயோகித்தனன். லக்ஷ்மணன் அவன்விட்ட எல்லா பாணங்களையும் தனது மேலான பாணங்களால் கண்டித்தனன். பின்னுமவன் ஓர் தீக்ஷ்ணமான பாணத்தை அதிகாயனுடைய நெற்றியின்மேல் பாயும்படி குறிபார்த்துப் பிரயோகித்தனன். அதனால் அதிகாயன் நெற்றியில் பாணம் பொத்தப்பெற்று ரத்தத்தினால் நனைந்து மிகவும் துடித்தனன்.

பிறகு அதிகாயன் லக்ஷ்மணனது பராக்கிரமத்தை நினைத்து சற்று ஆலோசித்து, பின் கூரான ஏழு பாணங்களை லக்ஷ்மணன்மேல் பிரயோகித்தனன். லக்ஷ்மணன் சிறிதும் தாமதமின்றி அவன் விடுத்த பாணங்களையெல்லாம் தன்னுடைய பாணங்களால் தடுத்தனன். இங்ஙனம் இருவரும் தோல்வி வெற்றி இரண்டுமில்லாமல் ஒருவரை யொருவர் எதிர்த்துப் பயங்கரமான யுத்தஞ் செய்தனர். அப்பால் அதிகாயன்மேல் லக்ஷ்மணன் மேலான பாணங்களை ஆயிரம் ஆயிரமாகப் பிரயோகித்தனன். அவ்வதிகாயன் பிளக்க முடியாத கவசத்தை யணிந்திருக்கையால் லக்ஷ்மணன் அவன்மேல் விடுத்த சமஸ்த பாணங்களும் அவனது கவசத்திற்பட்டு நுனியிலுள்ள ஆணிகளெல்லாம் முறியப்பெற்று பூமியில் வீழ்ந்தன.

பிறகு அதிகாயன் கொடிய சர்ப்பம் போன்ற உருவமுடைய ஓர்பாணத்தை லக்ஷ்மணன்மேல் பிரயோகிக்க அது லக்ஷ்மணனது மருமத்தில் பொத்துக்கொண்டமையால் ஒரு முகூர்த்த காலம் மூர்ச்சை யடைந்தனன். அப்பால் சிறிது நேரத்தில் மூர்ச்சை தெளிந்து சிறந்த நான்கு பாணங்களால் அவ்வதிகாயனுடைய குதிரைகளையும் சாரதியையும் கொன்றனன். லக்ஷ்மணன் எவ்வளவோ பிரயாசப்பட்டுச் சிறந்த பாணங்களை மழைபோல் பொழிந்தும் யுத்தத்தில் அதிகாயனை எள்ளளவும் வருந்தச்செய்ய வல்லனாகவில்லை.

அச்சமயம் வாயு தேவன் லக்ஷ்மணனிடம் வந்து 'இவ்வதிகாயன் பிரமதேவனிடம் வரம்பெற்றுப் பிளக்க முடியாத கவசம் தரித்திருக்கின்றனன். பிரமாஸ்திரத்தினாலன்றி மற்ற எந்த பாணத்தினாலும் இவனைக்கொல்ல முடியாது' என்றனன். உடனே லக்ஷ்மணன் ஓர்மேலான பாணத்தை பிரமாஸ்திர மந்திரத்தினால் அபிமந்திரித்து அதிகாயன்மேல் பிரயோகித்தனன். அதிகாயன் தன்னை நோக்கிவரும் பிரமாஸ்திரத்தை எதிர்த்துப் பல பாணங்களால் அடித்தனன். அப்படி அடிப்பினும் கருடனைப்போன்ற வேகமுடைய அப்பாணம் அவற்றையெல்லாம்தள்ளி அதிகாயனைச் சமீபித்தது. அப்பொழுது அவன் சிறிதும் மனங் கலங்கப் பெறுமல் சக்திகளாலும் கதைகளாலும் கோடாலிகளாலும் சூலங்களாலும் அதைஅடித்தனன். பிரமாஸ்திரமானது அவற்றையெல்லாம் லக்ஷியஞ் செய்யாது மிஞ்சி நெருப்புப்போல் பிரகாசித்துக்கொண்டு சென்று அவ்வதிகாயனுடைய தலையை அறுத்துப்போட்டது.

இது கண்ட எல்லா ராக்ஷசர்களும் வருத்தமுற்றுத் தீனர்களாகி பயத்தினால் வானரர்களுடைய அடிகளால் இளைப்புற்றுப் பொறுக்க முடியாமல் விகாரமான குரலுடன்

உரக்கக் கூச்சலிட்டுக் கொண்டே லங்கையை நோக்கி ஓடினர். வானரர்களெல்லாரும் மிகுந்த சந்தோஷத்துடன் லக்ஷ்மணனைக் கொண்டாடிப் பூஜித்தனர்

எழுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்திரண்டாவது ஸர்க்கம்.

### ராவணன் புத்திர சோகத்தினால் வருந்தி அந்தப்புரத்திற்குப் போதல்.

ராவணன் சிறந்த பராக்கிரமசாலியான அதிகாயன் லக்ஷ்மணனால் கொல்லப்பட்டதைக் கேட்டுத் திகிலடைந்து 'ஆ! இதென்ன ஆச்சரியம்! ஆயுதம் பிடித்தவர்களனைவரினும் சிறந்தவர்களும் நல்ல வில்லாளிகளுமான தூம்ராக்ஷனும் அகம்பனனும் பிரகஸ்தனும் கும்பகரணனும் அதிகாயனும் மாண்டார்களே! இவர்கள் இதுவரை எப்பொழுதும் பகைவர்களால் தோல்வியடைந்ததில்லை. ராமனது ஆற்றல் உண்மையில் ஒப்புயர்வற்றதென்றே தோன்றுகிறது. மகாபலவான்களும் சூரர்களுமான அநேக ராக்ஷசர்களை எளிதில் முடித்த ராமனை நினைக்கில் சற்று பயமாகவே தோன்றுகிறது. இந்திரஜித்து வரங்களால் அடையப்பட்ட திவ்விய பாணங்களால் ராம லக்ஷ்மணர்களைக் கட்டினன். அந்த பந்தனத்தை விடுவிக்க தேவதைகளுக்காவது அசுரர்களுக்காவது மற்ற எவர்களுக்காவது எள்ளளவும் சாத்தியமன்று. அப்படிப்பட்ட பந்தனத்தினின்றும் அவர்கள் விடுபட்டனரே!

ஈதென்ன மாயம்? எனக்கொன்றும் தோன்றவில்லையே! இப்பொழுது அந்த ராம லக்ஷ்மணர்களைக் கொல்லவல்லவன் இவ்விலங்கையில் எவனுமிருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. ராமனது பராக்கிரமத்தினால் ராக்ஷசர்கள் உருமாய்ந்துபோயினரே! ஆ! ஆ! ராமன் எப்படிப்பட்ட பலமுடையவன்! அவனது அஸ்திரபலம் எவ்வளவு பெரிது!

வீரனான அந்த ராமனை ஒருவிதக் கெடுதலுமில்லாத நாராயணனாகவே நினைக்கிறேன். ஓ! ராக்ஷசர்களே! நீங்கள் சிறிதும் ஏமாறுதலின்றி உங்களையும் இப்பட்டணத்தையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள். வானரர்கள் தானேயென்று பகைவர்களை சாமானியமாக எண்ணவேண்டாம்!' என்று ராக்ஷசர்களுக்குக் கட்டளையிட்டனன். பிறகு ராவணன் துக்கத்தினால் வருந்தித் தன் அரண்மனைக்குச் சென்று மாண்டொழிந்த புத்திரர்களை நினைத்துக்கொண்டு நெடுமூச்செறிந்துகொண்டிருந்தனன்.

எழுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்து மூன்றுவது ஸர்க்கம்.

### இந்திரஜித்து ராவணனை சமாதானப்படுத்தி பிரமாஸ்திரத்தினால் ராம லக்ஷ்மணர்களையும் வானரர்களையும் மூர்ச்சிக்கச் செய்தல்.

இங்ஙனம் புத்திர சோகத்தினால் வருந்தி மூர்ச்சையடைந்த ராவணனை அவனது புத்திரர்களிற் சிறந்தவனான இந்திரஜித்து மூர்ச்சை தெளியும்படி செய்து "தந்தையே! நான் பிழைத்திருக்கும்போது நீ இங்ஙனம் துக்கப்படலாகாது. உன் பகைவர்களை இதோ ஒரு நொடிப்பொழுதில் தொலைத்து வருகிறேன்" என்று தேற்றி அவனிடம் விடைபெற்றுக்கொண்டு உயர்ந்த கழுதைகள் பூட்டப்பெற்ற ரதத்தில் ஏறி யுத்தரங்கத்திற்குச் சென்றனன். அவனைத் தொடர்ந்து மிகுந்த சூரர்களும் பராக்கிரம சாலிகளுமான பயங்கர உருவமுள்ள ராக்ஷச வீரர்கள் அநேகர் இரும்புத் தடி கதை கோடாலி சூலம் கத்தி முதலிய ஆயுதங்களைத் தரித்து வேகமாகச் சென்றனர். இங்ஙனம் மிகுந்த தைரியத்துடனும் உத்சாகத்துடனும் யுத்தத்திற்குப்புறப்படும் இந்திரஜித்தைக் கண்ட ராவணன் "புதல்வனே! உன்னையெதிர்ப்ப

வன் மூன்று உலகங்களிலுமில்லை. நீ தேவேந்திரனையும் வென்றவனல்லவா? இனி உன்னை யெதிர்த்துவரும் மானிடனான ராமன் எவ்வளவு? நீ எவ்விதத்திலும் ராமனைக் கொன்று வருவாய்'' என்றனன்.

உடனே இந்திரஜித்து யுத்தபூமியை யடைந்து திவ்விய ரதம் பெறுதற்கு ஓமஞ்செய்ய முயன்று சுற்றிலும் ராக்ஷசர்களைக் காவல் வைத்தனன். பின்னுமவன் சிறந்த மந்திரங்களைக் கிரமப்படி உச்சரித்து நெருப்பில் ஓமஞ்செய்தனன். மற்றுமவன் சாஸ்திரங்களில் சொல்லியபடி கறுத்த நிறமுடையதும் உயிருடன் இருப்பதுமான ஓர் ஆட்டின் கழுத்தை வெட்டி ஓமஞ்செய்தனன். உடனே அவ்வக்கினியினின்று அக்கினிதேவன் மானிட உருவத்துடன் அழகான சுவர்ண ஆபரணங்களையணிந்து இந்திரஜித்து ஓமஞ்செய்த அவிஸ்ஸைப் பெற்றுக்கொண்டனன். அப்பொழுது இந்திரஜித்து அந்த ஓமாக்கினியினின்று பிரமாஸ்திரத்தைப் பெற்றனன். பின்னுமவன் அவ்வக்கினியினின்று மேலான வில்லையும் பாணங்களையும் கத்தியையும் ரதத்தையும் குதிரையையும் சாரதியையும் பெற்று ஆகாயத்தில் சென்று ஒருவர்க்கும் புலப்படாது மறைந்தனன்.

அப்பால் ராக்ஷச சைன்னியங்கள் யுத்த விருப்பத்தினால் கர்ஜ்ஜித்துக்கொண்டு புறப்பட்டன. ராக்ஷசர்கள் சிறந்த பாணங்களாலும் தோமரங்களாலும் மாவெட்டிகளாலும் வானரர்களை அடித்தனர். இந்திரஜித்து மேலேயிருந்து நாளீக பாணங்களாலும் கதைகளாலும் உலக்கைகளாலும் வானரர்களைத் துன்பப்படுத்தினன். அவன் ஒவ்வொரு பாணத்தினால் ஒன்பதும் ஐந்தும் ஏழுமாக வானரர்களை வாட்டிக் கொன்றுகொண்டிருந்தனன்.

வானரர்கள் பாணங்களால் பிடிக்கப்பட்டு தேகம் பிளக்கப்பெற்று தைரியத்தை இழந்து வருந்தி ரத்த வெள்ளத்தில்

நிலைந்து பறந்தோடிப்போயினர். சிலர் பூமியில் விழுந்திறந்தனர். வானரர்கள் இந்திரஜித்தின் மேல் மரங்களையும் மலைகளையும் எவ்வளவு எறிந்த போதிலும் அவன் பாணங்களால் அவற்றையெல்லாம் தகர்த்தனன். பின்னும் அவ்விந்திரஜித்துப் பதினெட்டு பாணங்களால் கந்தமாதனனை அடித்து, தூரத்திலிருக்கும் நீலனை ஒன்பது பாணங்களால் துன்புறுத்தினன். பின்னும் அவன் ஏழு பாணங்களால் ஜாம்பவானையும் பலபாணங்களால் சுக்கிரீவனையும் ருஷபனையும் அங்கதனையும் அடித்து மூர்ச்சிக்கச் செய்தனன். அவனது மேலான பாணங்களால் வானர சேனைகளெல்லாம் கலங்கி வருந்தி மூர்ச்சித்து ரத்த வெள்ளத்தில் மிதந்து சேஷ்டையற்றிருந்தன.

இந்திரஜித்து மிகுந்த மனக்களிப்புடன் ஆகாயத்தில் சென்று கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்து கறுத்த மேகம் மழையைப் பொழிவது போல் பாணங்களைப் பெய்தனன். வானரர்கள் அவனது பாணங்களால் சரீரம் பிளக்கப்பெற்று விகாரமான குரலுடன் கூச்சலிட்டுக்கொண்டு பூமியில் விழுந்தனர். இந்திரஜித்து, அனுமான் சுக்கிரீவன் அங்கதன் நீலன் ஜாம்பவான் கஜன் கவாக்ஷன் முதலிய ஸமஸ்த வானர சேனாதிபதிகளையும் பிரமாஸ்திரமந்திரத்தினால் அபிமந்திரிக்கப்பட்ட ஈட்டிகளாலும் சூலங்களாலும் கொடிய பாணங்களாலும் மிகவும் துன்புறுத்தினன்.

ராமன் இங்ஙனம் அமர்புரிகின்ற இந்திரஜித்தைக் குறித்து லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! இந்திரஜித்து பிரமதேவன் கொடுத்த வர மகிமையினால் ஆகாயத்தில் மறைந்து பயங்கரமான வானர சைன்னியங்களை விழுத்தள்ளி இதோ நம்மையும் எதிர்த்து வருகின்றனன். இங்ஙனம் தேகத்தைக் காட்டாமலே மறைந்து பாணங்களை யெய்கின்ற இவனைக் கொல்வதெப்படி? இப்பொழுது இவன் பிரமாஸ்

திரப் பிரயோகஞ்செய்து நம்மனைவரையும் மூர்ச்சிக்கச் செய்து வெற்றிக் கொடியுடன் லங்கைக்குச் செல்லப்போகின்ருன். இது நிச்சயம்" என்றனன்.

இங்ஙனம் ராமன் சொல்லி வாய் மூடுமுன் அவ்விந்திர ஜித்து பிரமாஸ்திரத்தைப் பிரயோகித்து அனைவரையும் வீழ்ந்து மூர்ச்சிக்கச் செய்து மிகுந்த சந்தோஷத்துடன் லங்காபுரிக்குச் சென்றனன்.

எழுபத்து மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்து நான்காவது ஸர்க்கம்

## அனுமான் கொண்டுவந்த ஓஷதியின் (மூலிகை) வாசனையை மோந்து ராம லக்ஷ்மணர்களும் மற்றுமுள்ள அனைவரும் மூர்ச்சை தெளிதல்

மூர்ச்சை யுற்றிருக்கும் வானரவீரர்களையும் ராம லக்ஷ்மணர்களையும் கண்ட மற்ற வானரர்கள் பயத்தினுல் வருந்தி ஒன்றும் தோன்றப்பெருமலிருந்தனர். அப்பொழுது விபீஷணன் அவர்களை நோக்கி "நீங்கள் எள்ளளவும் பயப்பட வேண்டாம். பிரமதேவன் இவ்விந்திரஜித்திற்கு வீணுகாத வேகமுடைய இப்பிரமாஸ்திரத்தைக் கொடுத்தனன். அப் பிரமதேவனை கௌரவிக்கும் பொருட்டு ராமலக்ஷ்மணர்கள் வருந்தினுற் போலிருக்கின்ருர்களே யன்றி வேறில்லை." என்று தேறுதல் மொழிகளைக் கூறினன்.

அனுமான் பிரமாஸ்திரத்தைக் கௌரவிக்கும் பொருட்டு ஒரு முகூர்த்தகாலம் கட்டுண்டிருந்து உடனே விடுவித்துக்கொண்டு விபீஷணனையணுகி, "மிகவும் பலிஷ்டர்களான வானரவீரர்கள் இப்பொழுது அடிபட்டிருக்கின்றனர். இனி எவரெவர் உயிருடனிருக்கின்றனரோ அவர்களை சமாதானப்படுத்துவோம்." என்றனன். உடனே அவ்விருவரும்

அன்றிரவு குறைக்கொள்ளிகளைக் கையில் எடுத்துக்கொண்டு யுத்த பூமியில் வானரவீரர்களைத் தேடிக்கொண்டு திரிந்தனர். இந்திரஜித்து அன்று மாலை ஆறு நாழிகையில் பலிஷ்டர்களான அறுபதினாயிரங் கோடி வானரர்களைக் கொன்று வீழ்த்தியதைக் கண்டு அவர்கள் மிகவும் வருந்தி ஜாம்பவானைத் தேடிக் கண்டு பிடித்தனர்.

ஜாம்பவான் கொடிய பாணங்களால் பீடிக்கப்பட்டு கண் பார்வை குன்றி விபீஷணனை நோக்கி "ராக்ஷஸோத்தமா! அனுமான் உயிரோடிருக்கின்றனா?" என்று ஆதரத்துடன் கேட்டனன். விபீஷணன் அவனைப்பார்த்து "பெரியோனே! ராம லக்ஷ்மணர்களைப்பற்றியாவது சுக்கிரீவ மகாராஜனைப் பற்றியாவது நீ சிறிதும் கவலை கொள்ளாமல் அனுமானைப் பற்றி வினவுவதேன்?" என்று கேட்டனன். அதற்கு ஜாம்பவான் "விபீஷணா! அனுமான் ஒருவன் மாத்திரம் பிழைத்திருப்பானாயின் மற்றைய சைன்னியங்களெல்லாம் மாண்டுபோயினும் ராம லக்ஷ்மணர்கள் ஆபத்துக்குள்ளாயினும் நமக்கு எள்ளளவும் பயமில்லை. அந்த அனுமான் இறந்துபோயிருப்பானாயின் நாமனைவரும் பிழைத்திருப்பினும் செத்தாற்போலவே. இப்பொழுது நமது பிழைப்பெல்லாம் அனுமான் ஒருவனைப்பற்றியே இருக்கின்றது; ஆகவே அவனைப்பற்றி விசாரித்தேன்" என்றனன்.

அப்பொழுது அனுமான் ஜாம்பவானை வணங்கி நின்றனன். அந்த அனுமானை ஜாம்பவான் மிகுந்த ஆதரத்துடன் நோக்கி "வானர சிம்மனே! நீ சமுத்திரத்திற்கு மிகவும் அருகான ஆகாயத்தில் வெகுதூரஞ் சென்று இமய மலையை அடைந்து அதன் உயர்ந்த சிகரத்திலுள்ள மிருதஸஞ்சீவினி (மரணமடைந்தவர்களைப் பிழைக்கச் செய்யும்) ஔஷதியையும் விசல்யகரணியையும் (உயிர் வந்தபின்பு எழுந்துலாவும்படியான சக்தியைக் கொடுக்கும் மூலிகை),

ஸாவர்ணியகரணி (நோய்கள் நீர்ந்தபின் புண்களில் உண்டான நிறமாற்றத்தைப் போக்கி பழையபடியே செய்யும் மூலிகை)யையும், ஸந்தானகரணியையும் (பாதை நீங்கியபின் சர்மத்தைப் பழையபடி ஒன்றோடொன்று ஸந்திக்கச் செய்யும் மருந்து) எடுத்துக்கொண்டு சீக்கிரமாய் வருவாயாக. இதனால் மாண்டுபோன வானர வீரர்களுக்கும் காயம்பட்டுப் பரிதவிக்கும் வீரர்களுக்கும் ராமலக்ஷ்மணர்களுக்கும் மற்றுமுள்ள அனைவர்க்கும் உயிர்ப் பிச்சையளிக்கலாம்." என்றனன்.

உடனே அனுமான் சிறிதும் தாமதமின்றி பலத்தின் மிகுதியால் நிறைந்து வளர்ந்தனன். அந்த அனுமான் தேகத்தை மிகவும் வளர்த்தி திரிகூடமலையின் நுனியில் குதித்து ஆகாயத்தில் கிளம்பினன். அம்மலை அனுமானுடைய பாதங்களால் துவைக்கப்பட்டு கிடுகிடுவென்று நடுங்கியது. அதிலுள்ள மரங்கள் அனுமானது வேகத்தினால் நெருப்புண்டாகப்பெற்று எரியலாயின. அதன் சிகரங்களும் சூரணமாயின. அம்மலையின் தாழ் வரையே யுத்த பூமியாகையால் அதிலுள்ள வானரர்கள் நிற்க முடியாமல் திகைத்தனர். அந்த ராத்திரியில் அனுமானது வேகத்தினால் லங்காபுரி ஜனங்களெல்லாரும் திகிலடையவும், பெரிய வாசல்கள் அசையவும், வீடுகளும் கோபுரங்களும் முறிந்து விழவும் பெற்று நர்த்தனஞ் செய்வதுபோலிருந்தது.

பிறகு அனுமான் அந்தப் பர்வதத்திலிருந்து அருவிகள் நிறைந்த மலய பர்வதத்தில் குதித்தனன். அவன் பாதங்களால் அம்மலையைத் துவைத்துக்கொண்டு பயங்கரமான வடவாக்கினி போன்ற வாயைத்திறந்து ராக்ஷசர்களைப் பயப்படுத்தும் பொருட்டு உரக்க இரைச்சலிட்டனன். அவனது இடிபோன்ற பயங்கரமான கர்ஜனையைக் கேட்டு லங்கையிலுள்ள ராக்ஷசர்களெல்லாரும் பயந்து இப்படி அப்படி அசையவும் வல்லமை யற்றிருந்தனர். அனுமான் பிறகு

அம்மலையிலிருந்து மிகுந்த வேகத்துடன் ஆகாயத்தில் கிளம்பிச்சென்றனன். அவனது தொடை வேகத்தினால் வேரறுந்து கிளம்பின மரங்களும் கற்களும் அந்தத் திரிகூட பர்வதத்தில் எப்பொழுதும் வாஸம் செய்கிற அற்ப வானரர்களும் அவனோடு கூடவே வெகு தூரம் இழுக்கப்பட்டுச் சென்று அப்பால் வேகம் குறையப்பெற்று ஜலத்தில் வீழ்ந்தன.

பிறகு அனுமான் விஷ்ணுதேவன் கையினால் பிரயோகிக்கப்பட்ட ஸுதர்சன சக்கரம்போல் மிகுந்த வேகத்துடன் காடு, மலை, நதி, பட்டணம் முதலியவற்றைக்கடந்து சென்று இமய மலையை யடைந்தனன். அனுமான் அங்கு தேவதைகளும் மகரிஷிகளும் உலாவும் பெரிய ஆச்சிரமங்களைக் கண்டனன். பின்னும் அவன் பிரமதேவனது வீட்டையும், கைலாசத்தையும், இந்திரன் தவஞ்செய்த ஆச்சிரமங்களையும், சிவன் விளையாடும் இடத்தையும், குபேரனது வாசஸ்தானத்தையும், பூமியினின்று பாதாளத்தில் புகும் துவாரத்தையும் கண்டனன்.

பிறகு அனுமான் அம்மலையின் சிகரத்தையடைந்து ஜாம்பவான் சொன்ன மூலிகைகளைத் தேடினன். அந்த ஔஷதிகள் அவனது கண்களுக்குத் தெரியாமல் மறைந்தன. அதனால் அனுமான் மிகுந்த கோபமடைந்து அப்பர்வதத்தைப்பார்த்து "பர்வதராஜனே! நீ ராமனிடம் கூடவா இவ்வனம் சிறிதும் தயையில்லாதிருக்கின்றனை? இப்பொழுது உன்னை என் கைபலத்தினால் வருத்திக் கீழே சிதறி விழும்படி செய்கிறேன் பார்" என்று கூறிக்கொண்டே அம்மலைச் சிகரத்தை வேகமாகப் பிடுங்கி எடுத்துக்கொண்டு கருடனைப்போல் பயங்கரமான வேகத்துடன் ஆகாயத்தில் கிளம்பி, லங்கையை நோக்கிச் சென்றனன்.

வானரர்கள் அனுமான் மலைச்சிகரத்தோடு வருவதைக் கண்டு சந்தோஷத்தினால் உரக்கக் கூச்சலிட்டனர். அனு

மான் வானர சேனையின் இடையில் இறங்கி விபீஷணனை அணைத்துக்கொண்டனன். அப்பொழுது ராம லக்ஷ்மணர்களும் உயிரிழந்த அறுபதினுபிரங் கோடி வானரர்களும் அனுமான் கொண்டு வந்த ஔஷதிகளின் வாசனையை மோந்து தேகத்திலுள்ள ஸமஸ்த நோய்களும் நீங்கப்பெற்று இரவில் உறங்கினவர் காலையில் தூக்கந் தெளிந்து எழுந்திருப்பது போல் சுகமாக எழுந்தனர். அதுவரை முன்பு இறந்துபோன எல்லா வானரர்களும் அந்த ஔஷதிகளின் காற்று மேல்பட்டவுடன் உயிர் உண்டாகப்பெற்று சுகமாக எழுந்தனர்.

லங்கையில் வானரர்களும் ராக்ஷசர்களும் யுத்தஞ் செய்யத் தொடங்கினது முதல், ராக்ஷசர்கள் இத்தனைபேர் மாண்டார்களென்று எவர்க்கும் கணக்கு தெரியாதிருக்கும் பொருட்டு ராவணனது கட்டளையினால் யுத்தத்தில் அடிபட்டு மாண்டுபோன ராக்ஷசர்கள் அனைவரையும் அவ்வப்பொழுதே சமுத்திரத்தில் போட்டுக்கொண்டிருந்தனர். ஆகையால் மாண்டுபோன ராக்ஷசர்களும் அந்த ஔஷதிகளினால் பிழைத்தெழுந்திருக்க முடியாமல் போயிற்று. பிறகு அனுமான் அந்த ஔஷதி பர்வதத்தை வேகமாக இமய மலையில் கொண்டு சேர்த்து மீளவும் ராமனிடம் வந்து சேர்ந்தனன்.

எழுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்தைந்தாவது ஸர்க்கம்

### ராவணன் கும்ப நிகும்பாதிகளை யனுப்புதலும், வானரர்களுக்கும் ராக்ஷசர்களுக்கும் துமுலயுத்தமும்.

பிறகு வானரர்கள் மிகுந்த உத்ஸாகங்கொண்டு சுக்கிரீவனது கட்டளைப்படி அவ்விரவின் பின் யாமத்தில் குறைக்

கொள்ளிகளையெடுத்துக்கொண்டு லங்கையை வளைத்துக் கொண்டு காவல்புரியும் ராக்ஷசர்களைத் துரத்தினர். பின்னு மவர்கள் மிகுந்த சந்தோஷத்துடன் சிம்மநாதஞ் செய்து கொண்டு பட்டணத்து வாசல்படிகளிலும் கோட்டையின் நுனிகளில் இயற்றப்பட்ட மாளிகைகளிலும், பெரிய வீதி களிலுள்ள மாளிகைகளிலும் நெருப்பு வைத்தனர். அதனால் லங்கையிலுள்ள சகல ஐசுவரியங்கள் நிறைந்த வீடுகளும், ஆயுதங்கள் நிறைந்த சாலைகளும், வஸ்திரங்கள் நகைகள் முதலியவைகளும், நவரத்தினங்களினாலும் பசும் பொன்னி னாலும் இயற்றப்பட்ட சிறந்த மாளிகைகளும், கோபுரங் களும், திண்ணைகளும் நெருப்புக்கு இரையாயின. ஜனங்க ளெல்லோரும் அல்லோலப்பட்டு செய்வதின்னதென்று அறி யாமல் திகைத்து வருந்தினர்.

அப்பொழுது விமானங்களில் படுத்துத் தூங்கிக்கொண் டிருந்த சிறந்த மாதர்கள் தேகத்தில் நெருப்புப்பட்டவுடனே அவயவங்களிலுள்ள ஆபரணங்களையெல்லாம் கழற்றி எறிந்து 'ஹா! ஹா!!' என்று உரக்கக் கூச்சலிட்டனர். லங்கை முழுவதும் அங்ஙனம் நெருப்புப் பற்றி எரியும் போது சிவந்த ஜுவாலைகளோடுகூடின அதன் பிரதி பிம்பம் ஜலங்களில் தோற்றப்பெற்ற அந்த சமுத்திரம், சிவந்த ஜல முடைய சமுத்திரம்போல் பிரகாசித்தது. ராக்ஷசர்கள் ஓலென்று அலறியவண்ணம் வெளிவரும்போது அவர்களை வானரர்கள் எதிர்த்தனர். அவர்களது இரைச்சல் மிகுந்த பரிதாபமாக விருந்தது; பத்து யோசனை தூரம் செவிப்பட் டது. வானரர்களின் உத்சாக சப்தங்களும், ராக்ஷசர்களின் துக்க சப்தங்களும் பத்துத் திசைகளிலும் சமுத்திரத்திலும் பூமியிலும், பிரதித்துவனி உண்டாகும்படி நிரம்பி வளர்ந்தன.

அப்பொழுது ராமன் சிறந்த வில்லினின்று மேலான பாணங்களைவிட்டு கைலாச சிகரம்போன்ற லங்கையின்

வாயிற்படிகளை இடித்துத் தள்ளினன். அவனது வில்லின் நாண் ஒலியினால் ஸமஸ்த ராக்ஷசர்களும் நடுங்கினர். ராவணன் அதுகண்டு மிகுதியும் கோபமுற்று கும்பகர்ணனின் புதல்வர்களான கும்பன், நிகும்பன் ஆகிய இருவர்களையும் பல ராக்ஷசர்களுடன் கூட்டி யுத்தத்திற்கு அனுப்பினன். ராவணனது கட்டளைப்படி யூபாக்ஷனும், சோணிதாக்ஷனும் பிரஜங்கனும், கம்பனும், கும்ப நிகும்பர்களோடு புறப் பட்டுப் போயினர்.

அந்த ராக்ஷசவீரர்களனைவரும் ஜ்வலிக்கின்ற ஆயுதங் களைத் தரித்து அடிக்கடி ஸிம்மநாதங்களைச் செய்துகொண்டு வானர சைன்னியங்களை நோக்கிச் சென்றனர். அந்த ராக்ஷச சைன்னியம் பயங்கரமான இரும்பாயுதங்களைத் தரித்து பயங்கரமான நான்குவித சேனைகளாலும் நிரம்பப்பெற்றிருந் தது. அந்த ராக்ஷச சைன்னியம் வேகமாகக் கிளம்பிப் பாய்ந்துகொண்டு, விட்டில்கள் அக்கினியை எதிர்ப்பதுபோல் வானர சேனையின்மேல் எதிர்த்துச் சென்றது. வானரவீரர் கள் யுத்தஞ் செய்ய விருப்பமுற்று வெறிபிடித்தாற்போல் கிளம்பி மரங்களாலும் மலைகளாலும் முஷ்டிகளாலும் ராக்ஷ சர்களை அடித்துக்கொண்டிருந்தனர். ராக்ஷசர்களும் வான ரர்களின் தலைகளைத் திடீர்திடீரென்று கூரான கத்திகளால் அறுத்துக்கொண்டிருந்தனர். இரண்டு சைன்னியங்களி லுள்ளவர்களும் ஒருவர்க்கொருவர் வீரமொழிகளைச் சொல் லிக்கொண்டு பயங்கரமான யுத்தஞ்செய்தனர். வானரர்கள் தலைமயிர்கள் உதிர்ந்து வஸ்திரங்கள் தொலைந்து கவசங்கள் தூள்களாகிக் கலக்கமுற்றிருக்கிற ராக்ஷச சைன்னியத்தைப் பற்றிச் சுற்றிலும் தகைந்து நின்றனர்.

எழுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்தாறுவது ஸர்க்கம்.

## கம்பன், பிரஜங்கன், சோணிதாக்ஷன், யூபாக்ஷன் கும்பன் இவர்கள் மாண்டுபோதல்.

அந்த பயங்கரமான யுத்தத்தில் அங்கதன் கம்பனை எதிர்த்தனன். கம்பன் சீறிச் சிவந்து அங்கதனைக் கதையால் அடித்தனன். அதனால் அங்கதன் வருந்தித் துடித்துப் பூமியில் வீழ்ந்தனன். பிறகு சிறிது நேரத்தில் அங்கதன் தெளிவுபெற்று மிகுந்த கோபத்துடன் மலைச் சிகரத்தைப் பிடுங்கிக் கம்பனுடைய மார்பில் அடிக்கையில் அவன் மரணமடைந்து பூமியில் வீழ்ந்தனன். இதைக்கண்ட சோணிதாக்ஷன் மிகுந்த ஆத்திரத்துடன் கொடிய பாணங்களை அங்கதன்மேல் பிரயோகித்தனன். அங்கதன் அந்த பாணங்களால் தேகம் முழுவதும் துளைக்கப்பெற்று சோணிதாக்ஷனுடைய உயர்ந்த ரதத்தையும் வில்லையும் முறித்துப் பொடிசெய்தனன்.

அப்பொழுது சோணிதாக்ஷன் கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பினன். அங்கதனும் ஆகாயத்தில் கிளம்பி அவனுடைய கத்தியைப் பிடுங்கிக்கொண்டு அவனது தோளில் ஓர் வெட்டு வெட்டினன். இதனால் அச்சோணிதாக்ஷன் மரணமடையவில்லை.

பிறகு அங்கதன், மைந்தன், துவிவிதன் ஆகிய மூன்று வானர வீரர்களும் முறையே பிரஜங்கன், யூபாக்ஷன், சோணிதாக்ஷன் ஆகிய மூன்று ராக்ஷசர்களோடு போர் புரிந்தனர். அவ்வானரர்கள் யுத்தத்தில் மரங்களைப் பிடுங்கி வீசியெறிகையில், பிரஜங்கன் கத்தியினால் அவற்றை யெல்லாம் வெட்டித் துண்டித்தனன். அவ்வானரர்கள் ராக்ஷசர்களுடைய ரதங்கள்மேலும் குதிரைகள்மேலும் மரங்களையும் மலைகளையும் வீசியெறிகையில், யூபாக்ஷன் சிறந்த பாணங்களால்

அவற்றைக் கண்டித்தனன். துவிவிதனும் மைந்தனும் தன் மேல் பிடுங்கி யெறிகிற மரங்களை சோணிதாக்ஷன் கதையி ணுல் இடையிலேயே முறித்துவிட்டனன்.

பிரஜங்களை அங்கதன் ஆச்சா மாத்திஞல் அடித்தனன். கத்தி யேந்தின அவனது புஜத்தை முட்டியால் இடித்தனன். பிரஜங்கன் மிகுந்த கோபத்துடன் தன் கைப்பிடியிஞல் அங் கதனுடைய நெற்றியில் வேகமாக அடித்தனன். அதஞல் அங்கதன் சிறிது நேரம் மூர்ச்சித்துத் துடித்தனன். பிறகு பிரக்கினை தெளிந்து கத்தியிஞல் பிரஜங்கனுடைய தலையை வெட்டி யெறிந்தனன்.

யூபாக்ஷன் இங்ஙனம் தனது சிற்றப்பஞகிய பிரஜங் கன் மாண்டதைக்கண்டு கண்களில் நிரம்பவும் நீர்ததும்பப் பெற்றுக் கையில் கத்தியை ஏந்தி துவிவிதன்மேல் எதிர்த் துச் சென்றனன். துவிவிதன் அவனை உள்ளங்கையால் மார்பில் அறைந்து பிடித்துக்கொண்டனன். இதைக்கண்ட சோணிதாக்ஷன் கடுங்கோபங் கொண்டு கதையின் நுனியால் துவிவிதனது மார்பிலடித்தனன். அதற்கு துவிவிதன் மிக வும் வருந்தி அச்சோணிதாக்ஷனுடைய கதையைப் பிடுங் கிக்கொண்டனன். இதனிடையில் மைந்தன் யூபாக்ஷனது மார்பில் உள்ளங்கையால் அடித்தனன்.

அந்த துவிவிதன் நகங்களால் சோணிதாக்ஷனுடைய முகத்தை முழுவதும் கீறி வேகமாகப் பிடித்துக் கிருகிரு வென்று சுழற்றிக் தரையில் அறைந்து அவனுடலைப் பிசைந்து பிண்டமாக்கினன். மைந்தன் மிகவும் கோபித்து யூபாக்ஷனை இரண்டு கைகளாலும் பிடித்துத் துன்புறுத்து கையில் அவன் மாண்டு பூமியில் வீழ்ந்தனன். இதைக்கண்ட ராக்ஷசப்படைகள் மிகவும் பயந்து கும்பனை யடைந்தது. கும்பன் அந்த ராக்ஷசர்களுக்கு நல்ல வார்த்தை சொல்லி சமாதானப்படுத்தி உற்சாகத்தை யுண்டுபண்ணினன்.

பிறகு கும்பன் மிகவும் மனவூக்கமுற்று வில்லை யேந்திக் கருநாகம் போன்று உடலைப் பிளக்கும்படியான பாணங்களைப் பிரயோகித்து மைந்தனையும் துவிவிதனையும் மருமஸ்தானங்களில் அடித்து அவர்களைத் துடிதுடித்து பூமியில் மூர்ச்சித்து விழும்படி செய்தனன். பின்னுமக் கும்பன் கொடிய பாணங்களால் அங்கதனை வாட்டினன். அதனால் அங்கதன் மிகவும் வருந்தி வாயினின்று ரத்தம் பெருக, கண்கள்மூடி உரக்கக் கூச்சலிட்டுக்கொண்டே மூர்ச்சித்து விழுந்தனன்.

இதைக் கேள்வியுற்ற ராமன் வருத்தமுற்று அங்கதனுக்கு சகாயமாக ஜாம்பவான் முதலிய பலிஷ்டர்களை யனுப்பினன். அவ் வானர வீரர்கள் மிகுந்த கோபத்துடன் அங்கதனைப் பாதுகாக்க விரும்பி மரங்களையும் கற்களையும் கணக்கில்லாமல் கும்பன்மேல் வீசியெறிந்தனர். கும்பன் சிறிதும் அவற்றைப் பொருள் செய்யாமல் பாணங்களால் அவற்றைத் தடுத்தனன். மீண்டுமவன் கணக்கற்ற விஷம்போன்ற கொடிய பாணங்களால் வானரர்களைத் துன்புறுத்தினன்.

இவற்றை யெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த சுக்கிரீவன் கும்பனது பராக்கிரமத்திற்கு மெச்சி அவனை நோக்கி "கும்பா! உனது வீரியம் மெச்சத் தகுந்ததாயிருக்கிறது. உன் பெரிய தந்தையான ராவணன் வரம்பெற்றிருக்கிற மகிமையால் தேவதானவர்களையும் லக்ஷியம் செய்யாமல் வென்றனன். உன் தந்தை கும்பகரணன் தன் சரீர பலத்தினலேயே தேவாசுரர்களை வென்றனன். நீயோ இவ்விரண்டு பலங்களாலும் அவர்களை வெற்றிகொள்பவனாய் விளங்குகின்றனை. அதனால் யுத்தத்தில் பயங்கரமான பராக்கிரமமுடைய வானர வீரர்களையும் வீழத்தள்ளினை. வீரனே! பலரோடு போராடி இளைப்புற்றிருக்கிறாயாகையால் உன்னை நான் இப்பொழுது கொல்ல விரும்பவில்லை. ஆகையால் நீ

சிறிது நேரம் இளைப்பாற்றிக்கொண்டு என் பலத்தைக் காண்பாயாக" என்றனன்.

இதுகேட்டு மிகுந்த ரோஷங்கொண்ட கும்பன் சுக்கிரீவனை இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டனன். பிறகு இருவர்க்கும் பயங்கரமான மல்லயுத்தம் நடந்தது. அவர்களது பாதங்களின் உதைத்தலால் பூமி அழுங்கிற்று. சமுத்திரம் அலைகள் மேலெழப் பெற்று மிகவும் கலக்கமுற்றது. பிறகு சுக்கிரீவன் கும்பனை மேலே தூக்கி சமுத்திரத்தின் அடித் தரையைப் பார்க்கும்படி வேகமாக சமுத்திரத்தில் வீசியெறிந்தனன். அப்பொழுது கும்பன் சமுத்திரத்தில் விழுகையால் அதன் ஜலப்பிரவாகம் விந்திய மந்தர பர்வதங்கள்போல் மேற்கிளம்பி நாற்புறத்திலும் பொங்கி பெருகத் தொடங்கிற்று.

பிறகு கும்பன் எழுந்து சுக்கிரீவனிடம் ஓடிவந்து வஜ்ஜிரம்போன்ற வேகமுடைய தன் முஷ்டியினால் அவன் மார்பில் புடைத்தனன். அதனால் சுக்கிரீவனது மார்பின் தோல் உரிந்து குருதி வெள்ளம் பெருகிற்று. சுக்கிரீவன் மிகுந்த கோபாவேசத்துடன் விரல்களை மடக்கி வஜ்ஜிரம் போன்ற தனது முஷ்டியினால் கும்பனுடைய மார்பில் அடித்தனன். அதனால் கும்பன் மிகுதியும் பீடிக்கப்பட்டு அவயவங்களெல்லாம் விலவிலக்கப் பெற்று உயிரையிழந்து பூமியில் வீழ்ந்தனன். ராக்ஷசர்கள் மிகுந்த பயத்தினால் உடல் நடுங்கினர்.

எழுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்தேழாவது ஸர்க்கம்.

## நிகும்பனை அனுமான் கொல்லுதல்.

நிகும்பன் தனதண்ணனை கும்பனை சுக்கிரீவன் முடித்ததைக் கண்டு கடுங்கோபத்தினால் கண்கள் சிவந்து இந்திர

னது வஜ்ஜிராயுதம்போன்று மிக பயங்கரமான ஓர் பரிகத்தை யெடுத்துக் கிருகிருவென்று சுழற்றினன். அதனுலுண்டான காற்றின் வேகத்தினுல் ஆவகம் முதலிய ஸப்தவாயுக்களின் மண்டலம் பிளவுண்டது. பின்னும் அதன் வேகத்தினுல் அளகாபுரியும், அமராவதி நகரமும், சந்திரன், நக்ஷத்திரங் கள், கிரகங்கள் இவற்றுடன் விளங்கும் ஆகாயமும் சலித்து நடுக்கமுற்றது. அப்பொழுது வானரர்களும் ராக்ஷசர்களும் பயந்து இப்படி அப்படி அசையவும் வல்லமையற்றிருந்தனர்.

சிறந்த பலவானுன அனுமான் ஒருவன் மாத்திரம் தன தகன்ற மார்பை மிகவும் வளர்த்திக் காண்பித்துக்கொண்டு அவனுக்கெதிரே வந்து நின்றனன். நிகும்பன் சூரிய மண் டலம்போல் தகதகவென்று விளங்குகிற அந்தப் பரிகத்தை அனுமானுடைய மார்பில் எறிந்தனன். அந்தப் பரிகம் அனு மானது மார்பில்பட்டு நூறு துணுக்கைகளாகச் சிதறிக்கிளம்பி ஆகாயத்தில் நூறு குறைக்கொள்ளிகள்போல் விளங்கி பூமி யில் வீழ்ந்தது.

அனுமான் அதனுல் சிறிது நடுக்கமுற்று மிகுந்த கோபா வேசத்துடன் தனது கைமுஷ்டியினுல் வேகமாக நிகும்ப னது மார்பில் குத்தினன். அதனுல் நிகும்பன் மிகவும் கலங்கி மார்பு தோலுரியப் பெற்று ரத்தத்தை ஆறுகப் பெருக்கினன். பிறகு நிகும்பன் வேகமாக அனுமானைப் பிடித்துக்கொண்டனன். இதைக் கண்டு ராக்ஷசர்களெல் லோரும் சந்தோஷத்தினுல் பயங்கரமாகக் கூச்சலிட்டனர். உடனே அனுமான் நிகும்பனிடமிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு அவனைத் தரையில் விழும்படி தள்ளிக் குமுக்கினன். பின்னும் அனுமான் வேகமாக மேல்கிளம்பி அவன் மார்பில் கபீலென்று குதித்தனன். பிறகு அனுமான் நிகும்பனது கழுத்தைப் பிடித்துத் திருகிப் பிடுங்கிப்போட்டனன். நிகும்பன் உரக்க இரைச்சலிட்டுக்கொண்டே மரணமடைந்த

னன். இதைக் கண்ட மகராக்ஷன் ராமனை நோக்கி எதிர்த்தோடி வந்தனன்.

எழுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்தெட்டு & எழுபத்தொன்பதாவது ஸர்க்கம்.

### மகராக்ஷன் யுத்தஞ்செய்து ராமனால் கொல்லப்படுதல்.

கரனது குமாரனான அந்த மகராக்ஷன் ராவணனது ஆஞ்ஞையால் பலவான்களான ராக்ஷச வீரர்கள் பின் தொடரப்பெற்று ராமனை நோக்கி வந்தனன். அப்பொழுது அம்மகராக்ஷன் தேர்ப்பாகனது கையினின்று சாட்டை நழுவிக் கீழ்விழுந்தது. அவனது துவஜம் (கொடி) திடீரென்று பூமியில் விழுந்தது. அவனது தேர்க் குதிரைகள் தழுதழுத்த பாதங்களோடு நடந்து கண்களில் நீரைப் பெருக்கிக்கொண்டே சென்றன. காற்று தூசிகளோடுகூடிப் பயங்கரமாக வீசிற்று. மகராக்ஷன் அந்தக் கெட்ட சகுனங்களையெல்லாம் பொருள் செய்யாமல் நாற்புறத்திலும் பலவாயிரம் பேரி வாத்தியங்கள் முழங்க, சங்குகள் ஒலிக்கப் பெருஞ் சேனையுடன் யுத்த பூமியை நோக்கிச் சென்றனன்.

அப்பொழுது நடந்த யுத்தம் மிகவும் பயங்கரமாக விருந்தது. வானரர்களும் ராக்ஷசர்களும் மரங்களையும் கற்களையும் சூலங்களையும் பரிகங்களையும் பிரயோகித்து ஒருவரை யொருவர் அடித்தனர். மகராக்ஷனது பாணங்களால் வானரர்கள் பிடிக்கப்பட்டு மனம் தழுதழுக்கப்பெற்று பயத்தினால் வருந்தி ஓடினர். ராக்ஷசர்கள் மிகுந்த சந்தோஷத்தினால் சிம்மநாதங்களைச் செய்துகொண்டு வானரர்களைத் துரத்தியடித்தனர்.

இதைக்கண்ட ராமன் மனம் பொறாமல் மழை பொழிவது போல் பாணங்களைப்பெய்து அந்த ராக்ஷசர்களை வாட்டி

னன். மகராக்ஷன் மிகுந்த கோபத்துடன் ராமனைப் பார்த்து "ராமா! நீ முன்பு தண்டகாரணியத்தில் எனது தந்தையைக் கொன்றுயல்லவா? அப்பகைதீர இன்று உன்னைக் கொன்று ராக்ஷசர்களுக்கு திருப்தியை உண்டு பண்ணப் போகிறேன். எந்த யுத்தத்தில் உனக்குப் பழக்க மதிகமோ அந்த யுத்தத்தையே என்னுடன் செய்வாயாக." என்றனன்.

இதைக்கேட்ட ராமன் உரக்கச் சிரித்துக்கொண்டே அவனைப் பார்த்து "அடா! ராக்ஷசனே! ஏன் வீணுப் வாயால் பிதற்றுகின்றனை? நானொருவனே தண்டகாரணியத்தில் பதினாலாயிரம் ராக்ஷசர்களையும் உன் தந்தையையும் திரிசிரனை யும் தூஷணனையும் கொன்றேன். பாபிஷ்டனே! கழுகு களும் நரிகளும் இப்போது இதோ உன் மாமிசங்களை ஆசை தீரும்படி தின்னப் போகின்றன காண்" என்றனன்.

அப்பொழுது மகராக்ஷன் கோபித்து ராமன் மேல் பாணங்களை விடுத்தனன். ராமன் அவற்றை யெல்லாம் தனது பாணங்களால் துண்டித்து வீழ்த்தினன். அவர் களுக்கு நடந்த சண்டை மிகவும் பயங்கரமாகவும் ஆச்சரிய மாகவும் இருந்தது. ஆகாயத்தில் தேவதைகளும் தானவர் களும் கந்தருவர்களும் கின்னரர்களும் மகரிஷிகளும் இச் சண்டையைக் காணவந்து நின்றனர். அவர்களது சண்டை மேன்மேலும் வளர்ந்து கொண்டே சென்றது. யுத்தரங்கம் முழுவதும் பாணங்களால் மறைக்கப்பட்டது. இங்ஙனம் ஒருவர்க்கொருவர் தோல்வி வெற்றியின்றி வெகு நேரம் சண்டை செய்தனர்.

பிறகு ராமன் தனது மேலான பாணங்களால் மகராக்ஷ னது குதிரைகளையும் தேரையும் சாரதியையும் நாசஞ் செய்த னன். உடனே அக்கொடிய ராக்ஷசன் கீழே குதித்து பிரளய காலாக்கினிபோல் ஜ்வலிக்கின்ற சூலாயுதத்தைச்

சுழற்றி ராமன் மேல் வீசி யெறிந்தனன். அச்சூலம் ராம பாணத்தினால் தகர்ப்புண்டு பூமியில் விழுந்தது. இதைக் கண்ட மகராக்ஷன் மிகுந்த கோபாவேசத்துடன் தன் முஷ்டியைத் தூக்கி ராமனையடிக்க ஓடிவந்தனன். ராமன் சிரித்துக் கொண்டே ஓர் ஆக்கினேயாஸ்திரத்தை அவ்வரக்கன் மீது பிரயோகித்தனன். அதனால் அவன் மார்பு பிளக்கப்பெற்றுத் தரையில் விழுந்து மரணமடைந்தனன். ராக்ஷசர்களெல்லாரும் ராம பாணத்தினால் பீடிக்கப்பட்டு லங்காபுரிக்கு ஓடிப்போயினர்.

எழுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பதாவது ஸர்க்கம்

### இந்திரஜித்து மீளவும் யுத்தத்திற்கு வந்து ராமன் முதலியோரை வருந்தச் செய்தலும், ராமன் அவனைக் கொல்ல உபாயம் சிந்தித்தலும்.

மகராக்ஷன் முதலியோர் மாண்டதைக்கேட்டு ராவணன் மிகுதியும் கோபாவேசமுற்றுப் பற்களைக் கடகடவென்று கடித்துத் தன் புதல்வனை இந்திரஜித்தை யுத்தத்திற்குச்செல்லும்படி வேண்டிக்கொண்டனன். இந்திரஜித்து தனக்கு வெற்றி யுண்டாகும் பொருட்டு யாகங்கள் செய்யுமிடத்திற்குப் போய் அங்கு அக்கினியில் விதிப்படி ஓமஞ் செய்தனன். அப்பொழுது அக்கினிதேவன் உருவத்துடன் மேல்கிளம்பித் தானே அந்த ஹவிஸ்ஸை வாங்கிக் கொண்டனன்.

இங்ஙனம் இந்திரஜித்து அக்கினியில் ஓமஞ்செய்து தேவதானவ ராக்ஷசர்களுக்குத் தர்ப்பணமும் நடத்தி அந்த ஓமத்தினால் மறையும்சக்தி வாய்ந்த ரதத்தைப் பெற்று அதில் ஏறிக்கொண்டனன். அம்மேலான ரதம் நான்கு குதிரைகள் பூட்டப்பெற்றுக்கொடிய பாணங்களால் நிறைந்து

நாணேற்றிய பெரிய வில்லுடன் கூடி மிகவும் பளப
வென்று பிரகாசித்துக் கொண்டிருந்தது. மிருந்த ப
முடைய அவ்விந்திரஜித்து சூரியன் போல் பிரகாசிப்பது
மறையும் சக்தியுடையதுமான அம்மேலான ரதத்தினலுட
பிரமாஸ்திரத்தாலும் பாதுகாக்கப்பட்டு எப்படிப்பட்டவர்
கும் எதிர்க்க முடியாதவனுயிருந்தனன்.

அவன் அளவற்ற வீர மொழிகளைச் சொல்லிக்கொண்
யுத்தரங்கத்தை யடைந்து வில்லை நாணேற்றி மேகம் மழை
பெய்வதுபோல் பாண தாரைகளை ஓயாமல் பெய்து யுத்தபூ
முழுவதும் நிறைத்தனன். அவன் ரதத்தோடு கூட ஆகா
மார்க்கத்தை யடைந்து கண்ணுக்குப் புலப்படாமல் ராம லக்
மணர்களைக் கொடிய பாணங்களால் வருத்தினன்.

ராம லக்ஷ்மணர்கள் ஒப்புயர்வற்ற திவ்வியாஸ்திர
களைக் கணக்கின்றி ஆகாயத்தை நோக்கி எவ்வளவு பிரயோ
கித்தபோதிலும் அவை ஒன்றாவது இந்திரஜித்தின் மீது
படவேயில்லை. அவ்விந்திரஜித்து ஆகாயத்தை மறைக்கும்
பொருட்டுப் புகையால் விளையும்படியான இருட்டை
உண்டாக்கி, முன்னமே பனியினல் இருள்மூடப்பெற்ற
திசைகளை யெல்லாம் அடையாளம் தெரியாதபடி மறைத்து
விட்டனன்.

அங்ஙனம் இந்திரஜித்து எதிரின்றி சஞ்சரிக்கும்
பொழுது, அவன் பாணம் பிரயோகிக்கையில் நாணும் கையும்
உறைவதாலுண்டான சப்தமாவது, தேர்ச்சக்கரத்தின் அடி
யோசையாவது, குதிரைகளின் குளம்படி ஓசையாவது சிறி
தும் செவிப்படவில்லை. அவன் உருவமும் சிறிதும் புலப்பட
வில்லை. அவன் பெரிய மேகங்கள் கனமாக மூடிக்கொள்ளும்
பொழுது விளையும் இருட்டில் மழைபெய்வதுபோல், கேவலம்
இரும்பினற் செய்யப்பட்ட பாணங்களை அற்புதமாக பிர
யோகித்தனன். அவன் வரம்பெற்ற பலச்செருக்கினல்

மிருதியும் விஞ்சி யுத்தத்தில் கோபித்து ராமனது ஸமஸ்த அவயவங்களையும் தீக்ஷணமான பாணங்களால் துளைத்தனன்.

ராம லக்ஷ்மணர்கள் அங்ஙனம் அவனது பாணங்களால் அடிபுண்டிருப்பினும் அசையாமல் தாங்களும் பாணங்களைத் தொடுத்து பிரயோகித்தனர். அவை மிகுந்த வேகத்துடன் இந்திரஜித்தின்மேல் பட்டு அவனது மருமங்களைப் பிளந்து ரத்தம்பட்டு நனைந்து பூமியில் வீழ்ந்தன. மீண்டும் ராம லக்ஷ்மணர்கள் மேலான பாணங்களைவிட்டு இந்திரஜித்தின் பாணங்களைத் துண்டித்தனர். அவர்கள், இந்திரஜித்து கண்ணுக்குப் புலப்படாமையால், அவன் எவ்விடத்தினின்று தம்மேல் பாணங்களை விடுகின்றனனோ, அந்தத் திக்கில் உயர்ந்த அஸ்திரங்களை பிரயோகித்தனர்.

இந்திரஜித்து வெகு வேகத்துடன் பாணங்களைத் தொடுத்துவிடும் சாமர்த்தியமுடையவனாகையால் மாயையைக் கைப்பற்றி ஓரிடத்தில் நிற்காமல் தேருடன் எல்லாத் திசைகளிலும் திரிந்துகொண்டு எதிரிகளின் பாணங்களில் அகப்படாமல், ராம லக்ஷ்மணர்களைக் கொடிய பாணங்களால் வருந்தச் செய்தனன். அப்பொழுது அவனது பாணங்களால் பீடிக்கப்பட்டு உயிரையிழந்து யுத்தபூமியில் அனேகமாயிரம் வானரர்கள் வீழ்ந்திருந்தனர்.

அப்பொழுது லக்ஷ்மணன் மிகுந்த கோபங்கொண்டு ராமனைப் பார்த்து "நான் இப்பொழுது பிரமாஸ்திரப் பிரயோகஞ் செய்து சமஸ்த ராக்ஷசர்களையும் கொன்று விடுகிறேன்" என்றனன். ராமன் அவனை நோக்கி "ஒருவன் நிமித்தமாக இப்பூமண்டலத்திலுள்ள ராக்ஷசர்கள் எல்லோரையும் கொல்வது யுக்தமன்று. லக்ஷ்மணா! இவ்விந்திரஜித்தைக் கொல்வதற்கு வேண்டிய பிரயத்தனத்தைச் செய்வோமாக. இவன் சுவர்க்கத்துக்குப் போயினும், பாதாளம் செல்லினும், ஆகாயத்தில் கிளம்பினும், இன்னும் எந்த

உலகம் சென்றபோதிலும் எனது திவ்வியாஸ்திரங்களால் பிளக்கப்பட்டு நிச்சயமாக உயிரிழக்கப் போகின்றனன்' என்றனன். இங்ஙனம் ராமன் இந்திரஜித்தை விரைவில் கொல்வதற்கு வேண்டிய உபாயத்தை ஆலோசித்துக்கொண்டிருந்தனன்.

எண்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

எண்பத்தோராவது ஸர்க்கம்

## இந்திரஜித்து அனுமான் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது மாயா சீதையைச் சேதித்தல்.

மீளவும் இந்திரஜித்து ராக்ஷசப்படைகளால் சூழப்பட்டு லங்கையின் மேற்கு வாசலினின்று வெளிப்பட்டு வந்தனன். அவன் ராமலக்ஷ்மணர்களை மயக்க எண்ணங்கொண்டு மாயையினால் சீதையைப்போல் ஓர் உருவம் செய்து அதை ஓர் தேரில் வைத்து வானர சைன்னியங்களுக்கெதிரில் அவ்வுருவத்தைக் கொல்ல முயன்றனன். இதைக் கண்ட அனுமான் முதலிய வானரர்கள் அவ்வுருவத்தை உண்மையான சீதையே என்று நினைத்து வருந்தினர். உடனே அவ்வானரர்கள் மனம் பொறுக்கமுடியாமல் அவனை எதிர்த்துச்சென்றனர். அப்பொழுது அவ்விந்திரஜித்து அம் மாயாசீதையின் தலையைப்பற்றிக் கத்தியினால் வெட்ட முயன்றனன். மாயையினால் அந்த ரதத்தில் நிருமிக்கப்பட்ட சீதையைப்போன்ற அப்பெண்ணுருவம் 'ராமா! ராமா!' என்று கூச்சலிட்டது.

அனுமான் சீதையின் தலை மயிர்களை இந்திரஜித்து பிடித்துக்கொண்டதைக் கண்டு, தீனனாகிக் கண்களினின்று நீரைப் பெருக்கினன். அவன் இந்திரஜித்தை நோக்கி "அடா துர்ப்புத்தீ! மன இரக்கம் இல்லாதவனே! நீ பிரமரிஷி வம்சத்தில் பிறந்தவனாயிருந்தும் ராக்ஷசயோனியிற் சேர்ந்தவனானதால் உனக்கு இவ்வித கெடுமதி உண்டா

பிற்று. உனக்கு ஸ்திரீவதை அடுக்குமா? மகா பதிவிரதை யான சீதையை இங்ஙனம் மயிரைப் பிடித்திழுக்கின்றனையே! நீ பாழாய்ப் போவாய். இவள் எவ்விதத்திலும் உனக்கு எள்ளளவும் அபராதம் செய்தவளன்று. அப்படிப்பட்ட வளைக் கொல்ல விரும்புகின்றனையே! இவளைக்கொன்று நீ எவ்விதத்திலும் பிழைத்திருக்கமாட்டாய். உன்னை இப் பொழுதே யமபுரிக்கனுப்புகிறேன்" என்று கூறிக்கொண்டு கல், மரம் முதலியவற்றை ஏந்திக்கொண்டு அவன்மேல் எதிர்த்துச் சென்றனன்.

அப்பொழுது இந்திரஜித்து அநுமானை நோக்கி "எவ ளுக்காக சுக்கிரீவனும் நீயும் ராமனும் இந்த லங்கைக்கு வந் தீர்களோ, அந்த சீதையை இப்பொழுது நீ பார்த்துக்கொண் டிருக்கும் பொழுதே கொன்றுவிடுகிறேன். இந்த சீதையை முன்னம் கொன்று அப்பால் ராம லக்ஷ்மணர்களையும் உன்னை யும் சுக்கிரீவனையும் துன்மார்க்கனை விபீஷணனையும் கொன்றுவிடுகிறேன். அடே! குரங்கே! நீ ஸ்திரீகளைக் கொல்லலாகாதென்று மொழிந்தனையே! அதற்கு மறுமொழி கூறுகிறேன் கேள். பகைவர்க்கு எது வருத்தத்தை விளைக் குமோ, அது எப்படிப்பட்டதாயினும் அவசியம் செய்யத் தக்கதே. ஆகையால் சீதையைக்கொல்வது உங்களுக்கு வருத்தம் விளைப்பதாகையால் செய்யத்தகுந்ததே" என்று கூறிக்கொண்டே ஓலமிட்டழுகின்ற அம் மாயா சீதையைக் கத்தியால் வெட்டி வீழ்த்தினன்.

இங்ஙனம் இந்திரஜித்து சீதையைக் கொன்று மிகுந்த சந்தோஷம் அடைந்தவன்போல் உரத்த சிம்மநாதஞ் செய்த தைக்கண்ட வானரர்கள் மிகவும் வருந்தி முன்பின் பாராமல் ஓடிப்போகத் தொடங்கினர்.

எண்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்திரண்டாவது ஸர்க்கம்.

### அனுமான் ராக்ஷசர்களைக் கொன்று சீதையின் மரணத்தை ராமனுக்கு அறிவிக்கச் செல்லுதலும், இந்திரஜித்து நிகும்பிலையில் ஓமஞ்செய்தலும்.

இங்ஙனம் இந்திரஜித்துக்குப் பயந்து ஓடுகின்ற வானரர்களை அனுமான் நல்வார்த்தைகளால் தேற்றி மீண்டும் அவர்களைக் கூட்டிக்கொண்டு ராக்ஷசர்கள்மேல் எதிர்த்துச் சென்றனன். அனுமான் ஒரு பக்கத்தில் கோபமும் ஒருபக்கத்தில் சோகமும் மேலெழப்பெற்று இந்திரஜித்தின் ரதத்தின்மேல் ஓர் பெரிய கல்லை எடுத்து எறிந்தனன். இந்திரஜித்தின் சாரதி வெகு திறமையுடன் தேரை லகுவாய்த் திருப்பி அக்கல் ரதத்தின்மேல் படவொட்டாமல் செய்தனன். ஆயினும் அச்சிலை கீழ் விழுகையில் அதன்கீழ் ராக்ஷசர்கள் அகப்பட்டு மிகவும் நசுங்கிப் பாழாயினர். வானரர்கள் கணக்கில்லாத மரங்களையும் பர்வதங்களையும் பெருமழையாக ராக்ஷசர்மேல் பொழிந்தனர். அதனால் எண்ணிறந்த ராக்ஷசர்கள் உயிரிழந்தனர்.

இதைக் கண்ட இந்திரஜித்து மிகுந்த ரோஷத்தினால் வில்லை நாணேற்றிக் கொடிய பாணங்களைவிடுத்து வானரர்களை வாட்டினன். ஆயினும் வானரர்கள் அடிக்கடி மலைகளையும் மரங்களையுமெறிந்து அரக்கர்களைக் கொன்றுகொண்டேயிருந்தனர். அப்பொழுது அனுமான் வானரர்களை நோக்கி "நமக்கு இப்பொழுது இவ்வரக்கர்களைக் கொன்று சாதிக்க வேண்டிய தொன்றுமில்லை. நாம் ராமனுக்குதவி செய்ய விரும்பி எவள் நிமித்தமாக யுத்தம் செய்தோமோ அந்த ஜனகராஜன்புதல்வி கொல்லப்பட்டனள். ஆகையால் இந்திரஜித்து சீதையைக் கொன்ற இவ்விஷயத்தை ராமனுக்கும் சுக்கிரீவனுக்கும் அறிவித்து, அவர்கள் இதற்கு எந்த பரிகாரம் செய்ய உத்தரவிடுகிறார்களோ அதையே நாம் செய்வோம்" என்றனன்.

உடனே அனுமான் வானரர்களை யழைத்துக்கொண்டு மெல்ல மெல்ல ராமனிடஞ் சென்றனன். இந்திரஜித்து அனுமான் ராமனிடஞ் செல்வதைக் கண்டு தானும் ஓமஞ் செய்யவிரும்பி நிகும்பிலையென்னும் தேவாலயத்திற்குப் போயினன். அவன் அங்குச் சென்று அக்கினியில் விதிப்படி ஓமஞ் செய்தனன். அவன் செய்த ரத்தமாமிச ஓமத்தினால் திருப்தியடைந்த அக்கினிதேவன் எழுந்து மிகவும் உஷ்ணமாக எரிகின்ற ஜ்வாலைகள் சூழப்பெற்று சந்தியா காலத்துச் சூரியனைப்போல் புலப்பட்டனன்.

எண்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

### சீதை மாண்டதைக் கேட்ட ராமன் துக்கித்தலும், லக்ஷ்மணன் சமாதானங் கூறுதலும்.

ராமன் ராக்ஷசர்களுக்கும் வானரர்களுக்கும் நடக்கிற யுத்தத்தில் உண்டான மிகப்பெரிய ஆயுதங்களின் சப்தத்தைக்கேட்டு ஜாம்பவானை நோக்கி 'நீ உன் சேனைகளுடன் சென்று அனுமானுக்கு விரைவில் உதவி செய்வாயாக' என்றனன். உடனே அக்கரடியரசன் தனது சேனைகளுடன் அனுமானிருக்கும் மேற்கு வாசலுக்குப் போயினன். அப்பொழுது அனுமானையும் வானரர்களையும் நடுவழியிலேயே ஜாம்பவான் கண்டு திகைத்தனன். அனுமான் அக்கரடி சைன்னியங்களையும் திருப்பிக்கொண்டு ராமனிடம் வந்து சேர்ந்து கண்களில் நீர்பெருகநின்று இந்திரஜித்து சீதையைக் கொன்றுவிட்டானென்று கூறினன்.

இதைக்கேட்ட ராமன் சோகத்தின் மிகுதியால் மூர்ச்சித்து வேரற்ற மரம்போல் தரையில் சாய்ந்தனன். பிறகு

வானரர்கள் ராமனை மூர்ச்சைதெளியும்பொருட்டு தாமரையு நெய்தலும் நிறைந்து மணங்கமழப்பெற்ற தண்ணீரை வே மாகத் தெளித்து நனைத்தனர்.

அப்பொழுது லக்ஷ்மணன் ராமனை அணைத்து "பெ யோனே! நீ பிதிர்வாக்கிய பரிபாலனம் முதலிய சிறந்த த மங்களை அனுஷ்டிப்பவன். இந்திரியங்களை வென்றவன் இப்படிப்பட்ட உன்னையும் தருமம் ரக்ஷிக்கமுடியாதிருக் கின்றது. உண்மையில் தருமம் என்பது இருந்தாலல்லவா அது உன்னை ரக்ஷிக்கப்போகிறது? அது அடியோடு இல்லை அப்படியே அதர்மமும் சுகங்களைப் போக்கடிக்கவேண்டிய தாயினும் அதுவும் உலகில் இல்லையாகையால் ராவணனத சுகங்களைத் தடுக்காதிருக்கின்றது. 'தர்மமும் அதர்மமும் இல்லையென்பதற்கு பிரமாணம் என்?' என்னில் அது பிரத்தி யக்ஷமுமன்று அனுமானமுமன்று. எப்படியெனில் அசை வனவும் அசையாதவையுமாகிய பதார்த்தங்கள் எப்படி பிரத்தியக்ஷமாகத் தெரிகின்றனவோ, அப்படி தர்மமும் அதர்மமும் பிரத்தியக்ஷமாகத் தெரிபவையன்று. பிரத்தி யக்ஷசித்தமாயின் தர்மமும் அதர்மமும் அசையும் பொருளாக வாவது அசையாத பொருளாகவாவது புலப்படவேண்டும். அங்ஙனம் புலப்படாமையால் அவை பிரத்தியக்ஷங்களன்று.

மேலும் அவை பிரத்தியக்ஷமாயின் உன்னைப்போன்ற தார்மிகனுக்கு ஆபத்தே நேர அவகாசமில்லை. அதர்மம் அப்படியே உளதாயின் ராவணனைப்போன்ற அதார்மிகனுக்கு சுகமேவிளைய இடமில்லை. மேலும் தர்மம் சுகத்தை விளைக் கக்கூடியது. அதர்மம் துக்கத்தை விளைக்கக்கூடியது. இவையிரண்டும் அனுமானமாயின் தர்மிஷ்டனான உனக்கு விசனமும் அதர்மிஷ்டனான ராவணனுக்கு சுகமும் நேர்ந் திருக்கக்கூடாது. இவற்றைக் கண்டால் தருமம் துக்கத்தை யும் அதர்மம் சுகத்தையும் தருவதுபோல் தோன்றுகிறது.

இங்ஙனம் தர்ம அதர்மங்கள் தந்தமக்கு விபரீதமான பலன்களைக்கொடுத்தலால் சுகத்தைப்பற்றி தருமம் உளதென்றும் துக்கத்தைப்பற்றி அதருமம் உளதென்றும் அனுமானத்தினால் நிச்சயிக்க முடியாது.

ராமா! தருமம் என்கிற வஸ்து உளதாயின் தர்மிஷ்டனான உனக்கு இத்தகைய துன்பம் நேரிடாது. அது இல்லாததேயாகவேண்டும். இங்ஙனம் அந்த அபூர்வமென்னும் தருமத்திற்கு உன்னிடத்தில் உண்டாகவேண்டிய சுகமென்னும் காரியம் உண்டாகாமையால் அது உண்டென்றே கற்பிக்கலாகாது. 'ஒருபொருளும் அதன் காரியம் புலப்படாமை மாத்திரத்தினால் இல்லையென்பதாக நிச்சயிக்கலாகாது. ஏனெனில், அப்பொழுது இந்திரியங்களுக்குப் புலப்படாதவையெல்லாம் இல்லையென்ன வேண்டிவரும். அங்ஙனம் இல்லையென்ன லாகாதல்லவா? மற்றும், ஒவ்வொரு பொருளுக்கும் சஹகாரியும் உண்டு. அந்த சஹகாரிகூடாத பக்ஷத்தில் அந்தப்பொருளுக்கு விளையவேண்டிய காரியம் உண்டாகாது. இங்கு தருமத்திற்கு சஹகாரி பௌருஷம். அந்த பௌருஷத்தைச் செய்யாமையால் அந்த தருமத்தின் காரியமாகிய சுகம் உண்டாகவில்லை' என்று கூறும்பக்ஷத்தில், அப்படி உதவியை எதிர்பாராமல் காரியஞ்செய்யும் திறமையற்றதும் உதவியையே எதிர்பார்ப்பதுமாகிய தருமம் காரியத்தை விளைவிப்பதில் பௌருஷத்தை விரும்புகின்றதாயின், தருமந்தானே பலன் கொடுக்கும் என்கிற நியதியில்லாமையால், அதையே முக்கியமாகப் பணியலாகாதென்று என் அபிப்பிராயம். மற்றும் காரியம் சாதிக்கிற விஷயத்தில் பௌருஷத்தைக் காட்டிலும் தருமம் குறைந்ததாயின் தருமத்தை முக்கியமாகக்கொள்ளாமல், இப்பொழுது தருமத்தில் எப்படி யிருக்கிறாயோ அங்ஙனமே பௌருஷத்திலும் இருப்பாயாக.

உலகில் சத்தியஞ் சொல்லுவது தருமமென்பார்கள். அப்படியாயின் நம் தந்தை உனக்குப் பட்டம் கட்டுகிறேனென்று சொல்லித் தவறினமையால் சத்தியத்தைத் தவிர்ந்தனன். மூத்த குமாரனும் குணசாலியுமான உன்னை வனஞ் செல்லும்படி ஆஞ்ஞாபித்த தசரதனைக் கட்டிப்போடியதாயிருந்தது. நீயோ பிதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்வேனென்று பிரதிக்கினை செய்தவன். அதன்படி தந்தை முதலிற் சொன்னவாறு பட்டங்கட்டிக்கொண்டு அவனை சத்தியம் தவறாதிருக்கும்படி ஏன் கட்டுப்படுத்தவில்லை? நீ பிதுர்வாக்கிய பரிபாலனம் செய்வதாக பிரதிக்கினை பண்ணி அதன்படி சமஸ்த ஜனங்களுக்கும் எதிரில் ராமனுக்குப் பட்டம் கட்டுகிறேனென்று முதலில் சொன்ன தந்தையின் வசனம் சத்தியமாகும்படி பரிபாலிக்கவேண்டியதாய் இருந்தும், அதைவிட்டு அவன் அடவிக்குப்போவென்ன, பின்னிட்ட வசனத்தை மாத்திரம் சத்தியமாகும்படி காப்பாற்றினையாகையால், சத்தியத்தையுங்கூடச் சிறிது காப்பாற்றியும் சிறிது காப்பாற்றாமலும் போயினை யென்று தேறுகின்றது.

ராமா! தருமமும் அதருமமும் உண்மையில் இருந்தபோதிலும் தருமத்தையே அனுஷ்டிக்க வேண்டுமென்றாவது, அதருமத்தையே அனுஷ்டிக்க வேண்டுமென்றாவது நியதியில்லை. காலத்திற்குத் தக்கபடி இரண்டையும் அனுஷ்டிக்கலாகும். அந்தந்த காலத்திற்குத் தக்கபடி மனம்போனவாறு இரண்டையுஞ் செய்வதே தருமமென்று என் அபிப்பிராயம்.

தருமத்திற்கு மூலகாரணம் அர்த்தம் (செல்வம்.) உனக்கு ராஜ்ஜியம் நேர்ந்திருக்கும்பொழுது அதைத்துறந்தாயாகையால் ராஜ்ஜிய ரூபமான அர்த்தத்தைப் பாழ்செய்துகொண்டனை. மூலமான அர்த்தத்தைப் பாழ் செய்கையில் தருமம் எங்கிருந்து நேரப்போகிறது? அர்த்தமில்லாமல்

தேஜஸ்ஸும் குறையப்பெற்ற புருஷன் எந்தக் காரியஞ் செய்யினும் அவையெல்லாம் வீணேயாகும். அர்த்தமில்லாமையால் தருமம் விளையாமை மாத்திரமன்று; தோஷமும் சம்பவிக்கும். எப்படியெனில் பணத்தைப் போக்கடித்துக் கொண்டவன் முன்பு பணமிருக்கும்பொழுது சுகமாய் வளர்ந்தவனுகையால், செல்வம் போனபின்பு வருத்தங்களைப் பொறுக்க முடியாமல் சுகங்களையனுபவிக்க விரும்பி, சுகத்திற்கு சாதகமான பணத்தை சம்பாதிக்கும் பொருட்டுக் களவு முதலிய பாபங்களைச் செய்ய ஆரம்பிக்கின்றனன். அதனுல் அவனுக்கு தோஷமும்கூட ஏற்படுகின்றது.

ராமா! எவனுக்குப் பணம் உண்டோ, அவனே ஆண்மையுடையவன்; அவனே தருமசீலன்; அவனே பராக்கிரமசாலி; அவனே பண்டிதன்! பணமில்லாதவன் பராக்கிரமசாலியேயாயினும், பயங்கொள்ளியாகவே எண்ணப்படுவான். பணமுடையவனுக்கே அனைவரும் நண்பர்களாவர். தரித்திரனை நண்பர்களும் கைவிடுவர். பணமுடையவனே அதிர்ஷ்டசாலி; அவனே குணசீலன். தரித்திரனுக்குக் குணங்கள் இருப்பினும் விளக்கமுரு.

வீரனே! அப்பொழுது ராஜ்ஜியத்தையும் அதன்மூலமான அர்த்தத்தையும் (செல்வத்தையும்) கைவிட்டனையே! அவற்றைவிடும்படி உனக்கு புத்தி ஏன் உண்டாயிற்றோ எனக்குத் தெரியவில்லை. எவனுக்குப் பணம் உண்டோ, அவனுக்கு தரும காம பிரயோஜனங்களும் மற்றுமுள்ள அனைத்தும் அனுகூலமாக சித்திக்கும். தனமில்லாதவன் நன்மையைப் பெறவிரும்பி பணம் சம்பாதிக்கும்பொருட்டு எவ்வளவு பிரயத்தனஞ் செய்யினும், நன்மையைப் பெறுவது முடியாத காரியம்.

ராமா! சந்தோஷம், காமம், கருவம், தருமம், கோபம், சாந்தி ஆகிய இவையெல்லாம் பணமிருக்கும்பொழுது தான்

பிரகாசிக்கும். செல்வத்தையிழந்த உனக்கு இனி சுகம் எப்படி உண்டாகும்? ராமா! நீ தந்தையின் வார்த்தையில் தவறாமல் நின்று ஊரைவிட்டு வனத்தில் வாசஞ் செய்பவனாயினை. இங்ஙனம் நீ தருமத்திற்குக் காரணமான ராஜ்ஜியத்தைத் துறந்தமையால் உனது உயிரினும் மேலான சீதையை ராவணன் பறித்துக்கொண்டு போயினன். வீரனே! நடந்தது நடந்துவிட்டது. இனி உனக்குப் பிரியம் செய்வதற்கே பிறந்திருக்கிற யான் இதோ ஒரு நொடிப்பொழுதில் ராவணனையும் லங்காபுரத்தையும் பாழ் செய்து விடுகிறேன். இங்ஙனம் இந்திரஜித்தினால் நேர்ந்த இப்பெரிய துக்கத்தை நான் போக்கடிக்கிறேன். ஆகையால் நீ எழுந்திருப்பாயாக. மிகுந்த புத்தியுடைய உன்னைப் பரமாத்துமாவென்று ஏன் அறியாமலிருக்கின்றனை?'' என்றனன்.

எண்பத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

### எண்பத்துநான்காவது ஸர்க்கம்

## விபீஷணன் ராமனைத் தேற்றி இந்திரஜித்தைக் கொல்லும் பொருட்டு லக்ஷ்மணனை அனுப்ப வேண்டுதல்.

இங்ஙனம் ராமன் துக்கத்தினால் மெய்மறந்து இருப்பதையும் வானரர்களெல்லோரும் கண்ணீர்ப் பெருக்கினால் கண்கலங்கப்பெற்றிருப்பதையும் கண்ட விபீஷணன் காரணம் இன்னதென்று தெரியாமல் 'இதுவென்?' என்று வினவினன். லக்ஷ்மணன் சுருக்கமாக 'விபீஷணா! ராமன் இப்பொழுது இந்திரஜித்து சீதையைக் கொன்றானென்று அனுமான் சொல்லக்கேட்டு துக்கத்தைப் பொறுக்க முடியாமல் மூர்ச்சையடைந்தான்' என்றனன். விபீஷணன் விஷயமெல்லாம் தனக்குத் தெரிந்திருக்கையால் "லக்ஷ்மணா! அனுமான் சொன்னது சிறிதும் நிஜமன்று என்று எனக்குத் தோன்றுகிறது. சமுத்திரத்தை உலர்த்துவது எப்படி அஸாத்

தியமோ அங்ஙனமே சீதையைக் கொன்றனென்பது எவ் விதத்திலும் நம்பத்தகுந்ததன்று. அது சம்பாவிதமேயன்று. துர்ப்புத்தியான ராவணனுடைய அபிப்பிராயம் எனக்குத் தெரியும், சீதையை அவன் கொல்லவே மாட்டான். நான் நன்மையை விரும்பி சீதையை ராமனுக்குக் கொடுப்பா யென்று எவ்வளவு வேண்டிக்கொள்ளினும், ராவணன் அந்த வார்த்தையைக் கேட்கவேயில்லை. அங்ஙனம் சீதையை விடுதற்கே சம்மதிக்காதவன் கொல்ல சம்மதிப்பானே! சீதையை மற்றொருவன் கண்ணினால் பார்க்கவும் விடமாட் டான். ஆகையால் சீதையை இந்திரஜித்து எங்ஙனம் கொல்லுவான்?

ராமா! இந்திரஜித்து வானரர்களை மோசஞ் செய்து நிகும்பிலையென்னும் தேவாலயத்திற்குப் போயிருக்கின்ற னன். அவன் நிகும்பிலையில் விக்கினமில்லாமல் ஓமஞ்செய்து திரும்பி வருவானாயின், தேவதைகளும் தானவர்களும் கூடி எதிர்த்து வரினும், அவனை யுத்தத்தில் வெல்லமுடியாது. அவன் அங்ஙனம் நிகும்பிலையில் ஓமஞ்செய்யும்பொழுது வானரர்கள் வந்து ஓமஞ்செய்யவொட்டாமல் தடுப்பார் களென்று நினைத்து அங்ஙனம் அவர்கள் வராதிருக்குமாறு இம்மாயையைப் பிரயோகித்தானன்றி வேறில்லை. ஆகை யால் சோகத்தைத் துறந்து தைரியத்தைக் கைப்பற்றுவா யாக. இப்பொழுதே என்னையும் வானர வீரர்களையும் லக்ஷ் மணனுடன் கூட்டி நிகும்பிலைக்கு அனுப்புவாயாக. இப் பொழுது சிறிதும் காலதாமதம் செய்யலாகாது. இப் பொழுதே லக்ஷ்மணன் தன் கொடிய பாணங்களைச் செலுத்தி அவனது ஓமத்திற்கு இடையூறு செய்வானாயின் பிரமதேவ னின் வரத்தின்படி அவன் சீக்கிரம் கொல்லப்படுவான். சீக்கிரம் லக்ஷ்மணனை அனுப்புவாயாக. தேவேந்திரன் வஜ்ஜிராயுதத்தைப் பிரயோகிப்பதுபோல் லக்ஷ்மணன்

பாணங்களைப் பிரயோகித்து இந்திரஜித்தைக் கொல்லப் போகின்றனன்" என்றனன்.

எண்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று

---

## எண்பத்தைந்தாவது ஸர்க்கம்

### ராமன் விபீஷணாதிகளுடன் லக்ஷ்மணனை நிகும்பிலைக்கு அனுப்புதல்.

ராமன் மிகுதியும் சோகத்தினால் வருந்தியிருக்கையால் விபீஷணன் சொன்ன சொற்கள் அவனுக்கு நன்கு விளங்கவில்லை. ஆகையால் ராமன் விபீஷணனைப் பார்த்து மீண்டும் ஒரு தரம் அவன் சொன்ன விஷயத்தைக் கூறும்படி வேண்டினன்.

அப்பொழுது விபீஷணன் ராமனை நோக்கி "மகா பராக்கிரமசாலியே! நீ கூறியபடியே நான் சைன்னியங்களை நன்கு வகுத்து நாற்புறத்திலும் தனித்தனியே இருக்கும்படி ஏற்படுத்தினேன். ராமா! நீ காரணமில்லாமல் இங்ஙனம் பரிதபித்துக் கொண்டிருக்கையால் எங்களுடைய மனமும் பரிதபிக்கின்றது. இப்பொழுது உனது துக்கத்திற்குக் காரணம் பொய்யே யாகையால் அதற்காக உன் சோகத்தைத் துறப்பாயாக. நீ இங்ஙனம் சிந்தையில் ஆழ்ந்திருத்தல் பகைவர்களுக்கு சந்தோஷத்தை வளர்க்குமாகையால் அதைத் துறந்து சந்தோஷத்தை யேற்றுக்கொண்டு யுத்தப் பிரயத்தனம் செய்வாயாக.

வீரனே! இப்பொழுது இந்திரஜித்து நிகும்பிலையில் ஓமஞ் செய்கின்றனன். அவன் ஓம காரியத்தைப் பூர்த்தி செய்து அங்கிருந்து வருவானாயின் நாமெல்லோரும் மாண்டு போனோமென்று நினைப்பாயாக. பிறகு அவனை தேவாசுரர்கள் ஒன்றுகூடினும் வெல்வதரிது. பிரமதேவன் இந்திர

ஜித்துக்கு நீ நிகும்பிலையில் ஓமஞ்செய்ய முயன்று ஓமம் பூர்த்தியடையாமலிருக்கும்பொழுது எந்தப்பகைவன் உன்னை எதிர்கொண்டு துன்புறுத்துவானோ, அவனே உன்னைக் கொல்லுவான்; மற்று எவனும் உன்னைக்கொல்ல வல்லவனல்லன். என்று வரங்கொடுத்தனன். ஆகையால் இப்பொழுதே எங்களை லக்ஷ்மணனுடன் கூட்டி இந்திரஜித்தை எதிர்க்கும்படி கட்டளை இடுவாயாக. லக்ஷ்மணன் அவனது ஓமம் நிறைவேறுவதற்கு முன்னமே அவனை எதிர்ப்பானுபின் அவன் லக்ஷ்மணனது கையினால் நிச்சயமாக மாண்டுபோவான். இந்திரஜித்து மாண்டொழிந்தானுயின் ராவணனும் அவனைச் சேர்ந்தவர்களும் மாண்டார்களென்றே நினைப்பாயாக" என்றனன்.

ராமன் மாயாவியான இந்திரஜித்தின் மாயச்செயல்களையறிந்து லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! நீவிபீஷணன் கூறியபடி ஸமஸ்தவானரர்களையும் சுக்கிரீவன், அனுமான், ஜாம்பவான் இவர்களையும் அழைத்துக்கொண்டு நிகும்பிலைக்குச்சென்று இந்திரஜித்தைத் துன்பப்படுத்துவாயாக" என்று கட்டளையிட்டனன். உடனே லக்ஷ்மணன் ராமனை வணங்கி வில்லைத்தரித்து நிகும்பிலைக்குச் சென்றனன். விபீஷணனும் அநேகமாயிரம் வானரர்களும் அவனைப் பின்பற்றினர்.

எண்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்தாறவது ஸர்க்கம்

### ராமனது கட்டளையினால் நிகும்பிலைக்குச் சென்ற லட்சுமணுதிகள் இந்திரஜித்தின் சேனைகளைப் பங்கப்படுத்துதல்.

பிறகு லக்ஷ்மணனும் வானரர்களும் நிகும்பிலையையடைந்தனர். லக்ஷ்மணன் விபீஷணனது சொல்படி இந்திர

ஜித்து ஓமகாரியங்களை முடிப்பதற்கு முன்னமேயே அவன் மீது பாண மழையை அளவில்லாமல் பெய்தனன். வானரர்களும் கரடிகளும் ஒன்றுகூடி ராக்ஷசசேனையின் மீது எதிர்த்துச் சென்றனர். அப்பொழுது வானரர்களுக்கும் ராக்ஷசர்களுக்கும் விளைந்த யுத்தத்தினால் லங்காபுரம் முழுவதும் பிரதித்துவனி உண்டாகப் பெற்றது. வானரர்கள் மரங்களையும், பெரிய மலைகளையும் கற்களையும் கணக்கில்லாமல் ராக்ஷசர்கள் மீதெறிந்து துன்புறுத்தினர்.

அப்பொழுது இந்திரஜித்து தனது சைன்னியம் பகைவர்களால் பீடிக்கப்பட்டு வருத்த முற்றிருப்பதைக் கண்டு, அந்த ஓமம் நிறைவேறுவதற்கு முன்னமே எழுந்து ரதத்தின் மீதேறி கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று வானர சேனைகளை நோக்கி வந்தனன். அப்பொழுது அனுமான் மிகப் பெரிய ஓர் மரத்தைப் பிடுங்கி அதனால் ராக்ஷச சைன்னியங்களை பிரளய காலாக்கினிபோல் தகித்து மூர்ச்சிக்கும்படி செய்தனன். பின்னுமவன் அநேகமாயிரம் ராக்ஷச வீரர்களைக் கொன்றனன்.

இதைக் கண்ட இந்திரஜித்து அவனமீது கோபங்கொண்டு அனுமானது தலையில் பாணங்களையும் கத்திகளையும் பட்டயங்களையும் கண்டகோடாலிகளையும் பெய்தனன். அனுமான் அவ்வாயுதங்களெல்லாவற்றையும் பொறுத்து மிகுந்த கோபாவேசத்துடன் "துர்ப்புத்தி! நீ ராவணனுடைய புதல்வனல்லவா? நீ சூரனையின் எதிரில் நின்று யுத்தஞ் செய்வாய். இப்பொழுது என்னெதிரில் வந்த நீ மீளவும் பிழைத்துப் போக வல்லனல்லை" என்றனன்.

அப்பொழுது விபீஷணன் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! ராவணன் வயிற்றில் பிறந்து இந்திரனையும் வென்று புகழ் பெற்றவனாகிய இவ்விந்திரஜித்து இதோ வில்லை யேந்தி

அனுமானைக் கொல்ல விரும்புகின்றனன். ஆகையால் நீ தாமதமின்றி பிராணனை உடனே முடிக்கவல்ல பாணங்களைப் பெய்து இந்திரஜித்தைக் கொல்வாயாக" என்றனன்.

எண்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

எண்பத்தேழாவது ஸர்க்கம்.

## விபீஷணன் இந்திரஜித்தின் மர்மங்களை லக்ஷ்மணனுக்குக் கூறுவதைக்கேட்ட இந்திரஜித்து அவனைப் பழித்தலும் விபீஷணன் அவனுக்குப் பதில் கூறுதலும்.

உடனே விபீஷணன் லக்ஷ்மணனை யழைத்துக்கொண்டு சிறிதுதூரஞ் சென்று ஓர் பெரிய வனத்தில் நுழைந்து அங்கு இந்திரஜித்து ஓமஞ் செய்யுமிடத்தை அவனுக்குக் காட்டினன். பிறகு விபீஷணன் லக்ஷ்மணனை நோக்கி "அதோ தெரியும் ஆலமரத்தின்கீழ் தான் இந்திரஜித்து பூதங்களுக்குப் பலி கொடுத்து அதன் பிறகு யுத்தத்திற்கு வருவான். பிறகு அவன் எவர் கண்ணுக்கும் புலப்படாதவனாகி மேலான பாணங்களால் பகைவர்களைக் கொல்வான். அவன் ஆலமரத்தின் கீழ் வருவானாயின் பிறகு தேர் குதிரை சாரதிகளோடு கண்ணுக்குப் புலப்படாதவனாவான். ஆகையால் அவன் ஆலமரத்தை யடைவதற்கு முன்னமே அவனைக் கொடிய பாணங்களால் முடிப்பாயாக" என்றனன்.

அப்பொழுது லக்ஷ்மணன் ஆலமரத்தினருகில் விசித்திரமான வில்லை ஒலிப்பித்துக்கொண்டு, அதுவரை தோல்வியென்பதே அறியாதவனாகிய இந்திரஜித்தை நோக்கி "ராக்ஷசா! உன்னை யுத்தத்திற்கு அழைக்கின்றேன். எனக்கு மாயை செய்யாமல் சரியான யுத்தம் கொடுப்பாயாக" என்றனன். இந்திரஜித்து லக்ஷ்மணனருகில் விபீஷணன் இருப்பதைக்கண்டு அவனை நோக்கி "விபீஷணா! நீ ராக்ஷசனாயிருந்

தும் எனக்குச் சிற்றப்பனாய் இருந்தும் என் விஷயத்தில் இங்ஙனம் துரோகம் செய்யலாமா? துர்ப்புத்தி! நீ உனது பந்து ஜனங்களைத் துறந்து பிறனுக்கு அடிமையாயினை உலகிலுள்ளவர்களுக்கு நீ நிந்திக்கத் தகுந்தவனாயினை. உன் புத்தி அற்பமாகையால் பந்துக்களைவிட்டு பகைவருக்கு அடிமையாயினை. பிறர் குணமுடையவரேனும், தம்முடைய வர் குணமில்லாதவர்களேனும், குணமுடைய அன்னியனை விட குணமில்லாத தம்மினத்தவரே மேலானவர். எப்பொழு தும் அன்னியன் அன்னியனேயன்றி தம்முடையவனாகமாட் டானென்பதை அறிந்திலை.

விபீஷணா! எவன் தன்பக்ஷத்தில் சேர்ந்தவனைத் துறந்து பிறர்பக்ஷத்தை அடுப்பானோ, அவன் தன்பக்ஷத்தி லுள்ளவர் அனைவரும் முடிந்தபின்பு தானும் அந்த அன்னி யர்களினால் கொல்லப்படுவான். ராக்ஷசனே! எனது ஓமம் விக்கினம் அடையும்படி லக்ஷ்மணனை ஆலமரத்தின் கீழ்க் கொண்டு சேர்த்தனையே! இப்படிப்பட்ட தயையில்லாமை உன் னைத் தவிர மற்று எவனுக்கும் உண்டாகாது" என்றனன்.

இந்திரஜித்து இங்ஙனஞ் சொல்லக்கேட்ட விபீஷணன், "அடா! இந்திரஜித்தே! நான் ராக்ஷச குலத்தில் பிறந்தவ னாயினும் எனது குணம் ராக்ஷசர்களைப்போல் கொடியதா யிருப்பதன்று. குரூரமான காரியத்தையும், பிறரைத் துன் புறுத்துவதையும், அதருமத்தையும் செய்ய எனக்கு விருப்ப மில்லாமையால் அத்தகைய குணங்களையுடைய உங்களைத் துறந்தேன். மேலும் நல்ல வார்த்தைகளைச் சொல்லும்போது ராவணன் என்னை தம்பியென்றும் நினையாமல் 'சீ போ!' என்று துரத்தினனல்லவா? துஷ்டர்களுடைய சகவாசம் கூடாதல்லவா? பிறரைத் துன்புறுத்தல், அன்னியர் தனத் தைப் பறித்தல், பரதாரங்களைப் புணர்தல் ஆகிய இத்தகைய துராசாரங்களை யுடையவனை உடனே உதறிவிடவேண்டு

மென்று பெரியோர்கள் கூறுகிறபடியால் நான் ராவணனைத் துறந்தேன். மகரிஷிகளைத் துன்புறுத்தலும் சமஸ்த தேவதைகளோடும் கலகம் வைத்துக்கொள்ளுதலும் கருவமும் நீடித்த கோபமுங்கொண்ட ராவணனை நான் துறந்தது முற்றிலும் நியாயமாகும்.

ராக்ஷச ராஜ குமாரா! கருவமுடையவனும் அறியாதவனும் துஷ்டனுமான நீயும் உன் தந்தையும் இனி சீக்கிரத்தில் மரணமடையப் போகிறீர்கள். நீ எமனது பாசக்கயிற்றில் அகப்பட்டுக் கொண்டிருக்கின்றனை. ஆகையால் நீ மரணமடைவதற்குள் என்னை என்னென்ன சொல்ல வேண்டுமென்று உனக்கு விருப்பமோ அங்ஙனமெல்லாம் சொல்லுவாயாக. இப்பொழுது நீ லக்ஷ்மணனோடு எதிர்த்து யுத்தஞ் செய்வாயாக. நீ முயன்ற பலத்தையெல்லாம் காட்டுவாயாக. உனக்குள்ள சமஸ்த ஆயுதங்களையும் சமஸ்த பாணங்களையும் பிரயோகித்துச் செலவழிப்பாயாக. நீ எது செய்யினும் இப்பொழுது லக்ஷ்மணனது பாணங்களால் அடிபட்டு நீயும் உனது சைன்னியங்களும் எவ்விதத்திலும் பிராணன்களைத் தப்பித்துக்கொண்டு போகமுடியாது" என்றனன்.

எண்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

எண்பத்தெட்டு & எண்பத்தொன்பதாவது ஸர்க்கம்

## லக்ஷ்மணனும் இந்திரஜித்தும் வீரப்பேச்சுக்களைப் பேசி ஒருவர்க்கொருவர் பாணப் பிரயோகஞ் செய்தல்.

அப்பொழுது இந்திரஜித்து மிகுந்த கோபாவேசத்துடன், அநுமானுடைய தோள்மேல் உட்கார்ந்து உதய பருவதத்தின்மேலிருக்கும் சூரியனைப்போல் ஜ்வலிக்கின்ற லக்ஷ்மணனை நோக்கி "இப்பொழுது யுத்தத்தில் ஆகாயத்தினின்று பெய்யும் மழைபோன்ற எனது பாணவர்ஷத்தை

உங்களால் தடுக்க முடியுமானால் தடுக்கலாம்; ஒருகை பார்ப்போம். இப்பொழுது எனது பாணங்கள் பஞ்சுக் குவியலை நெருப்பு எரிப்பதுபோல் உங்கள் சரீரங்களை எளிதில் கொளுத்தப்போகின்றன. நீங்கள் சீக்கிரத்தில் யமலோகத்தை யடையப் போகிறீர்கள்.

லக்ஷ்மணா! என்னெதிரில் யுத்தத்தில் நிற்க வல்லவன் எவன்? முன்பு ராத்திரி யுத்தத்தில் உங்களிருவரையும் உங்களைச் சேர்ந்தவர்களையும் எனது நிகரற்ற பாணங்களால் மூர்ச்சித்து பூமியில் விழும்படி செய்தேனல்லவா? அப்படிப் பட்ட என்னுடன் மீளவும் யுத்தஞ் செய்ய வந்தனையே! நீ அதை மறந்து விட்டனையோ? அல்லது உனக்கு மரண காலம் சமீபித்ததோ? என்று நினைக்கிறேன்" என்றனன்.

இதைக்கேட்ட லக்ஷ்மணன் கோபித்து அவனை நோக்கி "ராக்ஷசா! நீ எல்லா வகையிலும் பிரயோஜன மற்றவன். எங்களை ஜயிப்பது எப்படிப்பட்டவனுக்கும் சாத்தியமன்று. உன்னால் செய்யக்கூடாத இது விஷயத்தைப்பற்றி வெறும் வார்த்தைகளைமாத்திரஞ் சொல்லி அவ்வளவில் பிரயோசனம் கைகூடப் பெற்றதாக நினைக்கின்றனை. அன்று ராத்திரி யுத்தத்தில் நீ எங்களுக்குப் புலப்படாமல் திருடனைப்போல் யுத்தஞ் செய்தனையே! இது வீரர்கள் ஆசரிக்கும் மார்க்கமோ? ராக்ஷசா! இப்பொழுது உனக்குள்ள பராக்கிரமத்தை முழுவதும் காட்டுவாயாக. வீண் வார்த்தைகளால் உன்னை நீயே புகழ்ந்துகொள்ளுகின்றனை, ஏன்?" என்றனன்.

இதைக்கேட்ட இந்திரஜித்து மிகுந்த கோபங்கொண்டு பயங்கரமான வில்லை இழுத்துக் கொடிய பாணங்களை விடுத்து லக்ஷ்மணனை வருந்தச் செய்தனன். லக்ஷ்மணன் அவயவங்கள் முழுவதும் பாணங்களால் பொத்தப்பெற்று ரத்தத்தில் நனைந்து புகையில்லாத நெருப்புப்போல் பிரகாசித்தனன்.

தனது பாணங்களால் லக்ஷ்மணன் மிகவும் பீடிக்கப்படுவதைக் கண்ட இந்திரஜித்து மிகுந்த சந்தோஷத்துடன் உரக்க சிம்ம நாதஞ் செய்துகொண்டு லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! எனது பாணங்கள் எப்படியிருக்கின்றன? சீக்கிரத்தில் தலை வெட்டுண்ட உன்னை ராமன் காணப்போகின்றனன்" என்று கண்டவாறு பிதற்றினன்.

லக்ஷ்மணன் இந்திரஜித்தை நோக்கி "ராக்ஷசா! ஏன் வீணில் நீயே உன்னைப் புகழ்ந்துகொள்ளுகின்றனை? நீ கூறுவது உண்மையென்று நம்பும்படியான காரியத்தைச் செய்து காட்டுவாயாக. உன்னைப்போல் எனக்குத் தற்புகழ்ச்சியாகப் பேசுதற்கு விருப்பமில்லை" என்று கூறி தீக்ஷணங்களும் சிறந்த வேகமுடையவைகளுமான ஐந்து பாணங்களை இந்திரஜித்தின் மார்பின்மேல் பிரயோகித்தனன். அவற்றால் இந்திரஜித்து அடியுண்டு வருந்தினன்.

பிறகு அவ்விருவருக்கும் மிகவும் பயங்கரமான துமுல யுத்தம் நடந்தது. அப்பால் லக்ஷ்மணன் சிறிதும் சலியாமல் வஜ்ஜிராயுதம்போல் கடினமாகப் பாயும் தன்மையுள்ள பாணங்களை இந்திரஜித்தின்மீது கணக்கின்றி விடுத்தனன். அதனால் இந்திரஜித்து வருந்தி இந்திரியங்களெல்லாம் கலங்கப் பெற்றுச் சிறிது நேரம் மூர்ச்சித்திருந்தனன்.

பிறகு இந்திரஜித்து மூர்ச்சை தெளிந்தெழுந்து மிகுந்த கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று ஏழுபாணங்களால் லக்ஷ்மணனையும் பத்து பாணங்களால் அனுமானையும் அடித்தனன். அவ்விந்திரஜித்து லக்ஷ்மணன்மீது மகத்தான கோபங்கொண்டு அவனை நூறுபாணங்களால் அடித்தனன். லக்ஷ்மணன் அவற்றைச் சிறிதும் பொருள்படுத்தாமல் மிகுந்த உத்சாகத்துடன் கொடிய பாணங்களை அவன்மீது மழைபோல் பெய்தனன். அதனால் இந்திரஜித்தின் கவசங்

கள் பொடியாகிக் கீழே விழுந்தன. அவன் சரீரம் முழுவதும் புண்பட்டு, நாராசபாணங்கள் பொத்தப்பெற்றிருக்கையால் அவ்விந்திரஜித்து மரங்கள் நிரம்பவும் முளைக்கப்பெற்ற பர்வதம்போல் புலப்பட்டனன். பிறகு அவ்விந்திரஜித்து மிகுந்த ரோஷத்துடன் லக்ஷ்மணன்மீது ஆயிரம் பாணங்களைப் பிரயோகித்து அவனுடைய கவசத்தை முறித்தனன்.

இங்ஙனம் அவ்விருவரும் ஒருவர் செய்ததற்கு மற்றொருவர் பிரதி செய்து கொண்டு ஒருவர் மேல் ஒருவர் எதிர்த்து ஸமஸ்த அவயவங்களும் பாணங்களால் பிளவுண்டு, தேகமுழுவதும் ரத்தம் பெருகப்பெற்று, அடிக்கடி நெடுமூச்செறிந்துகொண்டு தமுலமாக யுத்தஞ் செய்தனர். ஆகாயத்தில் பிரளயகாலத்து நீலமேகங்கள் விடாமழை பெய்வதுபோல் அவ்விருவரும் பயங்கரமான பெருஞ் சப்தத்துடன் ஒருவர் மேலொருவர் பயங்கரமான பாண மழைகளைப் பெய்பவராகிப் போராடிக் கொண்டிருக்கையில் காலம் கடந்ததேயன்றி, அவ்விருவர்க்கும் தோல்வியாவது இளைப்பாவது சிறிதும் உண்டாகவில்லை. இருவரும் ஒப்பற்ற வீரர்களும் சிறந்த வில்லாளிகளுமாகையால் ஒருவர்க்கொருவர் தோல்வி கெலிப்பின்றி சளைக்காமல் வெகுநேரம் பயங்கரமான யுத்தஞ் செய்தனர். அவர்களது விற்களின் நாணொலியானது ஜனங்களை நடுநடுங்கச் செய்துகொண்டு இடி விழுந்தாற்போல் மிகவும் பயங்கரமாய் இருந்தது. மிகுதியும் பாணங்களால் சூழப்பட்டு ரத்தம் பெருகி நனைந்திருக்கின்ற அவ்வீரர்களின் ஸமஸ்த அவயவங்களும் ஜ்வலிக்கின்ற நெருப்புப்போல் பிரகாசித்தன. அவர்கள் எவ்வளவு நேரம் யுத்தஞ் செய்யினும் அவர்களுக்கு யுத்தத்தின்மேல் வெறுப்பாவது இளைப்பாவது சிறிதும் உண்டாகவில்லை.

எண்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## தொண்ணூறவது ஸர்க்கம்

## லக்ஷ்மணன் இந்திரஜித்தின் சாரதியையும் குதிரைகளையும் முடித்தல்

அப்பொழுது விபீஷணன் தானும் யுத்தஞ்செய்ய விரும்பி ஓர் பெரிய வில்லைவளைத்து ராக்ஷசர்களின் மேல் மேலான பாணங்களைப் பிரயோகித்தனன். அவை நெருப்புப் போல் ஜ்வலித்துக்கொண்டு குறி தவருமல் ராக்ஷசர் மேல் பட்டு இடிகள் பெரிய மலைகளைப் பிளப்பதுபோல் அவர்களைப் பிளந்தன. அவன் அடிக்கடி வானர வீரர்களை உத்சாகப் படுத்த விரும்பி "ஓ வானரர்களே! ராவணனுக்கு இப் பொழுது இவ்விந்திரஜித்து ஒருவனே பரமகதியா யிருக் கின்றனன். ராவணனது சமஸ்த சைன்னியங்களும் மாண் டொழிந்து இவனொருவனே மிகுந்திருக்கின்றனன். இவன் மாண்டொழிந்தானுகில் பிறகு ராவணன் ஒருவன் தவிர மற்றை அவன் பலமெல்லாம் மாண்டாற்போலவே. பலத் திஞல் மிகவும் கொழுத்து எதிர்த்து வந்த பிரகஸ்தன், நிகும்பன், கும்பகரணன், கும்பன், தூம்ராக்ஷன், ஜம்புமாலி; மகாபார்சுவன், வஜ்ஜிரதம்ஷ்ட்ரன் முதலியவர்களெல்லாம் உங்களால் கொல்லப்பட்டனர். இப்பொழுது இவனொரு வனே மிகுதி. நான் இவனைக் கொல்லவல்லனே யாயினும் இவன் எனதண்ணன் மகனுதலால் புதல்வனைப்போன்ற இவனைக் கொல்வது யுக்தமன்று. ஆகையால் இவனை லக்ஷ் மணனே கொல்லப்போகின்றனன். வானரர்களே! நீங்க ளெல்லாரும் ஒன்றுகூடி இவ்விந்திரஜித்துக்கு உதவியாக வருகின்ற ராக்ஷசர்களைக் கொல்வீர்களாக" என்றனன்.

உடனே வானரர்கள் மிகுந்த உத்சாகங்கொண்டு சந் தோஷத்தின் மிகுதியினுல் வால்களையசைத்தனர். உடனே அவ்வானரர்களும் கரடிகளும் சிலைகளால் ராக்ஷசர்களை யடித்து நகங்களினுலும் தந்தங்களினுலும் அவர்களைத் துன்

புறத்தினர். ராக்ஷசர்களும் வானரர்களைக் கொடிய பாணங் களாலும் கத்தி, ஈட்டி, கோடாலி, தோமரம் முதலியவற்று லும் அடித்தனர். அவர்களுக்குள் நடந்த யுத்தம் தேவாசுர யுத்தம்போல் மிகவும் பயங்கரமாக விருந்தது.

இந்திரஜித்து விபீஷணனுக்கு மேலான யுத்தங் கொடுத்து மீளவும் லக்ஷ்மணனையே எதிர்த்துப் போயினன். மிகுந்த பலசாலிகளான அவ்விருவரும் வருஷ ருதுவில் சந்திர சூரியர்கள் மேகங்களால் மறைந்திருப்பதுபோல், பாணக்கூட்டங்களால் அடிக்கடி மறைந்திருந்தனர். அங்கு, அவ்விருவரும் போர்செய்யும்பொழுது அவர்களது ஹஸ்த லாவகத்தினால், அம்பறாத்தூணியினின்று பாணங்களை யெடுப்பதாவது, வில்லில் பாணத்தைத் தொடுப்பதாவது, வில்லை இடம் வலங்களில் மாற்றிப் பிடித்துக்கொள்வதாவது, நாணை இழுப்பதாவது எதுவும் எள்ளளவும் புலப்படவில்லை. அவ்விருவரும் கணக்கில்லாத பாணங்களை ஒருவர்மேல் ஒருவர் விட்டுக்கொண்டிருக்கையால் திக்குக்களும், விதிக்குக்களும் ஆகாயமும் பாணங்களால் நிறைந்து இருள்மூடினாற் போ லிருந்தது.

அப்பொழுது ரத்த வெள்ளங்கள் பெரிய நதிகள்போல் அனேகமாயிரம் பிரவகித்தன. மாமிசத்தை ஆகாரமாக வுடைய பயங்கரமான ஜந்துக்கள் செவிபிளக்கக் கூச்சலிட்டுக் கொண்டே வந்தன. அப்பொழுது பயத்தினால் காற்றும் வீசாதிருந்தது. நெருப்பும் எரியவில்லை. மகரிஷிகள் திகி லடைந்து 'உலகங்களுக்கு மங்களம் உண்டாகுமாக' என்று மொழிந்தனர். முன்பு யுத்தம்பார்க்க அவ்விடம் வந்திருந்த கந்தருவர்களும் சாரணர்களும் மிகவும் பயங்கரமான அந்த யுத்தத்தைப் பார்க்கமுடியாமல் வேறிடத்திற்குப் போயினர்.

பிறகு லக்ஷ்மணன் இந்திரஜித்தினது தேர்க்குதிரை களை சிறந்த நான்கு பாணங்களால் அடித்தனன். பின்னும்

கொடிய விஷமுடைய ஓர் பாணத்தினால் அவனது தேர் ஓட்டியின் தலையை யறுத்துத் தள்ளினன். இந்திரஜித்து மிகுந்த சாமர்த்தியமுடைய தனது சாரதி மாண்டுபோகை யால் தானே தேரையும் ஓட்டிக்கொண்டு வில்லைப்பிடித்து யுத்தஞ் செய்தனன். அவன் அங்ஙனம் தானொருவனாகவே ஒரு கையால் தேரைச் செலுத்திக்கொண்டு மற்றொரு கையால் பாணப் பிரயோகஞ் செய்ததைக் கண்டு அனைவரும் ஆச்சரியமுற்றனர்.

இந்திரஜித்து தேரோட்டும் சமயத்தில் லக்ஷ்மணன் அவனைக் கொடிய பாணங்களாலடித்தனன். அவன் வில்லைப் பிடிக்கும் சமயத்தில் அவனது குதிரைகளை பாணங்களால் வாட்டினன். இதனால் இந்திரஜித்து வருத்தமுற்றுத் திகைக்கலாயினன். அப்பொழுது, பிரமாதி, சரபன், ரபஸன், கந்தமாதனன் முதலிய நான்கு வானர வீரர்களும் இந்திரஜித்தின் ரதத்தில் பூட்டின மேலான குதிரைகளின் மேல் மிகுந்த வேகத்துடன் கிளம்பிப் பாய்ந்தனர். மலை போன்ற உருவமுடைய அவ்வீரர்கள் அக்குதிரைகளின் மீது விழுந்ததும் அவை சகிக்கமுடியாமல் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு அவயவங்கள் முறியப்பெற்று உயிரையிழந் தன. பின்னுமவ்வீரர்கள் அங்ஙனமே இந்திரஜித்தின் தேரையும் முறித்துத் தள்ளினர். உடனே இந்திரஜித்து தேரினின்று கீழேகுதித்துப் பூமியில் நின்றுகொண்டு பாணங் களைப் பெய்துகொண்டே லக்ஷ்மணனை எதிர்த்தனன். லக்ஷ் மணன் வெகு எளிதில் அவன்விட்ட பாணங்களைத் தனது மேலான பாணங்களால் தடுத்து சிம்மநாதஞ்செய்தனன்.

தொண்ணூறாவது ஸர்க்கம் முற்றிற்று.

## தொண்ணூற்றோராவது ஸர்க்கம்.

## இந்திரஜித்து மாண்டொழிதல்.

பிறகு இந்திரஜித்தும் லக்ஷ்மணனும் ஒருவரை யொருவர் ஜயிக்க விரும்பி பாணங்களால் ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டனர். ஆனால் இந்திரஜித்து தேரில்லாமல் யுத்தஞ் செய்யமுடியாமையால் திடீரென்று வானரர்களுக்குத் தெரியாமல் வஞ்சித்து ரதங்கொண்டுவரும் பொருட்டு லங்கைக்குச் சென்றனன். சீக்கிரத்தில் அவன் மேலான அழகிய ரதத்தில் உட்கார்ந்துகொண்டு பல ராக்ஷசர்களால் சூழப்பட்டு லங்கையினின்றும் வெளிப்பட்டு வந்தனன். அவன் அங்ஙனம் தங்களனைவரையும் வஞ்சித்து லங்கைக்குச் சென்று ரதத்திலேறிக்கொண்டு வந்ததைப்பற்றி லக்ஷ்மணனும் விபீஷணனும் ஆச்சரிய மடைந்தனர்.

இந்திரஜித்து மிகவும் கோபாவேசமுற்று யுத்தத்தில் கொடிய பாணங்களைச் செலுத்தி வானரர்களை நூறு நூறாகவும் ஆயிரமாயிரமாகவும் விழத்தள்ளினன். வானரர்கள் பொறுக்கமுடியாமல் லக்ஷ்மணனைச் சரணமடைந்தனர். பிறகு லக்ஷ்மணன் ஒளியுள்ள கூரியபாணத்தினால் அவ்விந்திரஜித்தின் கைவில்லைக் கண்டித்தனன். பிறகு அவன் வேறுவில்லை யெடுத்துக்கொண்டபோது அதையும் லக்ஷ்மணன் துண்டித்தனன். பிறகு லக்ஷ்மணன் அவ்விந்திரஜித்தினது மார்பில் உயிரை மாய்க்கும் சக்திவாய்ந்த ஐந்து பாணங்களைப் பிரயோகித்துத் துன்புறுத்தினன். இந்திரஜித்து அதனால் கவசங்கள் முறியப்பெற்று, வாயினின்று குருதியைக் கக்கிக்கொண்டு மற்றொரு வில்லை ஏந்தி மழைபெய்வது போல் லக்ஷ்மணன்மீது பாணங்களைப் பொழிந்தனன்.

லக்ஷ்மணன் சிறிதும் தாமதமின்றி மேலான பாணங்களைச் செலுத்தி இந்திரஜித்தின் பாணங்களைத் தடுத்துத் தனது அற்புதமான சாமர்த்தியத்தைக் காட்டினன். பின்னு

மவன் மும்மூன்று பாணங்களைவிட்டு ஒவ்வொரு ராக்ஷசனை யும் துன்புறுத்தியதுமன்றி ஒப்பற்ற பல பாணங்களால் இந்திரஜித்தை அடித்து வருத்தமுறச் செய்தனன். நான்கு பாணங்களால் இந்திரஜித்தின் சாரதியின் தலையை அறுத் துத் தள்ளினன். அப்பொழுது சாரதியில்லாதுபோயினும் இந்திரஜித்தினது குதிரைகள் பழக்கத்தின் மிகுதியால் சிறிதும் கலக்கமடையாமல் மண்டல நடைகளில் ரதத்தை இழுத்துக்கொண்டு உலாவின. அது பார்க்க மிகவும் ஆச் சரியமாகவிருந்தது. மீண்டும் லக்ஷ்மணன் சிறந்த பாணங் களால் அக்குதிரைகளை யடித்தனன். அப்பொழுது இந்திர ஜித்து மிகுந்த கோபத்துடன் லக்ஷ்மணனைப் பத்து பாணங் களால் அடித்தனன். அவை வேகமாக லக்ஷ்மணனது கவசத் தில் பட்டு முறிந்து நாசமடைந்தன.

இந்திரஜித்து, லக்ஷ்மணன் பிளக்கமுடியாத கவசமணிந் திருப்பதை யறிந்து அவனை மூன்று பாணங்களால் நெற்றியி லடித்தனன். இங்ஙனம் அவ்விருவரும் ஒருவரையொருவர் ஜயிக்க விரும்பித் தங்கள் தங்கள் முழுத்திறமையையுங்காட்டி ஒப்பற்ற யுத்தஞ்செய்தனர். அப்பொழுது இந்திரஜித்து விபீஷணனை மூன்று பாணங்களால் நெற்றியிலடித்து வருந் தச்செய்தனன். விபீஷணன் கோபங்கொண்டு தனது கதை யினால் இந்திரஜித்தின் சாரதியையும் குதிரைகளையும் அடித் துக்கொன்றனன். இந்திரஜித்து உடனே பூமியில் குதித்து சக்தியென்ற ஆயுதத்தை யெடுத்து விபீஷணன்மேல் பிர யோகித்தனன். லக்ஷ்மணன் அதைக்கண்டு சீக்கிரத்தில் அது விபீஷணனை அணுகுவதற்குமுன் இடையிலேயே கொடிய பாணங்களால் சேதிக்கையில் அச்சக்தி பத்துத் துணுக்கைகளாகித் தரையில் வீழ்ந்தது.

இதுகண்ட இந்திரஜித்து தாங்கமுடியாத கோபாவேசங் கொண்டு தனக்கு யமன் கொடுத்த மேலான பாணத்தை

லக்ஷ்மணன்மேல் பிரயோகித்தனன். இங்ஙனம் நேருமென்பதை முன்னமே யறிந்த குபேரன் லக்ஷ்மணனுக்கு ஓ: உயர்ந்த பாணத்தைக் கொடுத்திருந்தனன். லக்ஷ்மணன் அட பொழுது அந்தக் குபேரன் கொடுத்த பாணத்தைவிட்டு இந்திரஜித்தின் பாணத்தைத் தடுத்தனன். பயங்கரமான அவ்விரண்டு பாணங்களும் ஒன்றின்மீது ஒன்று பாய்ந்து உராய்ந்துபெரிய சப்தஞ்செய்துகொண்டு நூறுசுக்கல்களாக முறிந்து பூமியில் வீழ்ந்தன.

பிறகு லக்ஷ்மணன் வருணாஸ்திரத்தைவிட அதை இந் திரஜித்து ரௌத்திராஸ்திரத்தினால் தடுத்தனன். இந்திர ஜித்து ஆக்கினேயாஸ்திரத்தைப் பிரயோகிக்க அதை லக்ஷ் மணன் சூரியாஸ்திரத்தினால் தடுத்தனன். பிறகு இந்திர ஜித்து ஆஸுராஸ்திரத்தைவிட அதை லக்ஷ்மணன் மகேச் வராஸ்திரத்தினால் தடுத்தனன். பிறகு லக்ஷ்மணன் ஓர் மேலான பாணத்தையெடுத்துத் தொடுத்து அதை ஐந்திராஸ் திர மந்திரத்தினால் அபிமந்திரித்து 'ஓ பாணமே! ராமன் சத்தியமும் தருமமும் சிறந்தபராக்கிரமமும் உடையவனாயின் நீ இவ்விந்திரஜித்தைக் கொல்லுவாயாக' என்று கூறி அதை இந்திரஜித்தின்மேல் விடுத்தனன். அவ்வுயர்ந்த பாணம் இந்திரஜித்தின் தலையைத் துண்டித்து உடலினின்றும் பூமி யில் விழத்தள்ளியது. இங்ஙனம் மாயாவியான இந்திர ஜித்து கவசத்தோடும் தலைப்பாகையோடும் வில்லோடும் நாச மடைந்து வேகமாகப் பூமியில் வீழ்ந்தனன். இதைக்கண்ட விபீஷணனும் வானரர்களும் சந்தோஷத்தினால் இரைச்ச லிட்டனர்.

ஆகாயத்தில் தேவதைகளும் மகரிஷிகளும் கந்தருவர் களும் அப்சரஸ்ஸுகளும் சந்தோஷமுற்று நாற்புறத்திலும் கூச்சலிட்டனர். இந்திரஜித்து மாண்டபின் வானரர்கள் ராக்ஷசர்களைப் பிடித்துத் துன்புறுத்துகையில் அவ்வரக்கர்

கள் பொறுக்கமுடியாமல் ஆயுதங்களையெறிந்து லங்கைக்கு ஓடிச் சென்றனர்.

இங்ஙனம் வானரர்களால் பயங்கரமாகப் பீடிக்கப்பட்ட சில ராக்ஷசர்கள் சமுத்திரத்தில் வீழ்ந்தனர்; சிலர் திசைகளைப் பற்றி ஓடினர்; சிலர் மலைகளில் மறைந்தனர். மற்றுமுள்ளவர் ஒருவரேனும் அங்கு நிற்காமல் ஓடிப்போயினர். இந்திரஜித்து இறந்தவுடனே உலகத்தில் பற்பல பீடைகளும் ஒடுங்கின. சூரியன் நன்றாக வெயில் காய்ந்தனன். தேவதைகளும் இந்திரனும் சந்தோஷமடைந்தனர். ஆகாயத்தில் தேவதுந்துபி வாத்தியங்கள் செவிப்பட்டன. தேவதைகள் புஷ்ப மழைகளைப் பொழிந்து லக்ஷ்மணனைப் புகழ்ந்தனர். ஜலமெல்லாம் தெளிவடைந்தது. திசைகளெல்லாம் தெளிவு பெற்றன.

பிறகு வானரர்கள் நிகரில்லாத பராக்கிரமமுடைய அவ்விந்திரஜித்து யுத்தத்தில் மாண்டதைக் கண்டு சந்தோஷமுற்று லக்ஷ்மணனைக் கொண்டாடினர். பின்னுமவர்கள் சிம்மநாதங்களைச் செய்துகொண்டு பலவாறு இரைச்சலிடுவதும் கர்ஜிப்பதுமாகி லக்ஷ்மணனைச் சூழ்ந்து பணிந்திருந்தனர்.

தொண்ணூற்றொராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தொண்ணூற்றிரண்டாவது ஸர்க்கம்.

## லக்ஷ்மணன் முதலியோர் ராமனிடஞ் செல்லுதலும் ராமன் அவர்களைக் கொண்டாடுதலும்.

லக்ஷ்மணன் அவயவங்களெல்லாம் ரத்தத்தில் நனைந்திருந்தபோதிலும் யுத்தத்தில் இந்திரனையும்வென்ற தீரனை இந்திரஜித்தைக் கொன்றனுகையால் மிகுந்த சந்தோஷத்துடன் ஜாம்பவான், அனுமான் முதலிய வானரர்களையழைத்துக்கொண்டு யுத்தஞ் செய்த ஓய்ச்சலால் விபீஷணனையும்

அனுமானையும் ஊன்றிக்கொண்டு சீக்கிரமாக ராமனும் சுக்கிரீவனும் இருக்குமிடத்திற்குச் சென்றனன். லக்ஷ்மணன் ராமனை வலஞ்செய்து வணங்கி பயங்கரமான பராக்கிரமமுடைய இந்திரஜித்தைக் கொன்ற விதத்தைக் கூறினன்.

ராமன் இவ்வார்த்தையைக் கேட்டவுடன் நிகரில்லாத சந்தோஷமடைந்து "லக்ஷ்மணா! நீ ஒருவராலும் சாதிக்க முடியாத மிகப் பெரிய காரியஞ் செய்தனை. நல்லது. நல்லது, உனது அரிய செய்கையைப்பற்றி நான் மிகவும் சந்தோஷிக்கின்றனன். இப்பொழுது இந்திரஜித்து மாண்டமையால் இனி நாம் ராவணனையும் கூடக் கொன்று வெற்றியடைந்தாற் போலவே யென்று நிச்சயிப்பாயாக" என்றனன்.

அப்பொழுது ராமன் வீரிய லக்ஷ்மீவிலாசம் வளரப் பெற்ற லக்ஷ்மணனை உச்சிமோந்து கட்டியணைத்து மடியில் உட்காரவைத்துக் கொண்டனன். லக்ஷ்மணன் சரீரம் முழுவதும் ரத்த காயங்களினால் பீடிக்கப்பட்டிருப்பதைக் கண்டு ராமன் பரிதபித்து நெடுமூச்செறிந்து அப்புண்களின் பாதையைப் போக்கும்பொருட்டு விரைவுடன் அவன் மேனி முழுவதும் நன்றாகத் தடவிக்கொடுத்து "லக்ஷ்மணா! உனது வீரத்தை என்னவென்று புகழ்வேன்? எப்பொழுதும் தோல்வியென்பதே அறியா இந்திரனையும் வென்ற இந்திரஜித்தை நீ கொன்றாயாகையால் எனக்கு மிகவும் உதவி செய்தவனாயினை. இனி ராவணனுடைய வலது புஜத்தைச் சேதித்தாற்போலவே யாகும். ஏனெனில் இந்திரஜித்தே ராவணனுக்கு மேலான துணையாயிருந்தனன். லக்ஷ்மணா! நீ ஒருவராலும் வெல்லமுடியா இந்திரஜித்தைக் கொன்றமையால், இனி யெனக்கு சீதையையும் ராஜ்ஜியத்தையும் பெறுவது சிறிதும் வருத்தமன்று" என்றனன்.

பிறகு ராமன் சுஷேணனை நோக்கி "நீ சிறந்த வைத்தியனாகையால் சரீரம் முழுவதும் ரத்த காயங்களினால் நிறையப்

பெற்ற லக்ஷ்மணனுக்கும் விபீஷணனுக்கும் தகுந்த சிகிச்சை செய்வாயாக. மற்றும் யுத்தத்தில் எவரெவர் பாணங்கள் பொத்துத் துளைக்கப் பெற்றுப் புண்பட்டிருக்கின்றனரோ அவர்களெல்லார்க்கும் சீக்கிரத்தில் பிரயத்தனப்பட்டு சிகிச்சை செய்வாயாக'' என்றனன்.

உடனே சுஷேணன் லக்ஷ்மணனுக்கு மூக்கில் ஓர் பெரிய ஔஷதியை வைத்து வாசனை காண்பித்தனன். லக்ஷ்மணன் அம்மூலிகையை மோந்தவுடனே அவனது சரீரத்தில் பொத்துக்கொண்டிருந்த சல்லியங்களெல்லாம் தொலைந்து வேதனையும் தீர்ந்து ரணங்களெல்லாம் உலர்ந்துபோயின. பிறகு சுஷேணன் ராமனது கட்டளைப்படி விபீஷணனுக்கும் மற்றுமுள்ள வானரர்களுக்கும் அச்சிறந்த மூலிகையின் உதவியினால் ஒரு க்ஷணநேரத்தில் புண்களை ஆற்றி பாதையைப் போக்கினன். அவர்களெல்லாரும் ஸமஸ்த பாதைகளும் தீர்ந்து தன்னிலைமை பெற்று எப்பொழுதும்போல் சந்தோஷமுற்றிருந்தனர்.

**தொண்ணூற்றிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## தொண்ணூற்று மூன்றாவது ஸர்க்கம்

### ராவணன் இந்திரஜித்து மாண்டதைக் கேட்டுப் புலம்புதலும், சீதையைத் துன்புறுத்த முயன்ற ராவணனை ஸுபார்சுவன் என்னும் மந்திரி தடுத்தலும்.

இங்ஙனம் விபீஷணனது உதவியினால் லக்ஷ்மணன் இந்திரஜித்தை முடித்த செய்தியைக் கேட்ட ராவணன் பெருமூர்ச்சையடைந்தனன். பிறகு வெகு நேரங்கழித்து ராவணன் தெளிவு பெற்றுப் புத்திர சோகத்தினால் பீடிக்கப்பட்டு தீனனாகி "ஹா! எனது அருமைக் குமாரா! ராக்ஷசப் படைகளில் சிறந்தவனே! தேவேந்திரனையும் எளிதில் வென்ற நீ கடைசியில் மானிடனான லக்ஷ்மணனால் எப்படி கொல்லப்

பட்டனை? என்னப்பனே! நீ கோபமுறுவாயாயின், காலனை யும், மந்தரபர்வதத்தின் சிகரத்தையுங்கூடப் பிளந்துவிடு வாயே! நீண்ட புஜங்களையுடையவனே! நீ யுத்தத்தில் வீரத் துடன் எதிர்த்து மரணமடைந்தாயாதலின் நீ வீரசுவர்க் கத்தையே அடைவாய். எவன் தன் எஜமானனுக்காக மரண மடைவானோ அவன் சுவர்க்கமடைவானாகையால் நான் உன்னைப்பற்றி சோகிக்கவேண்டிய அவசியமில்லை,

ஆ! வீரர்களிற் சிறந்தவனே! இப்பொழுது நீ கொல்லப் பட்டாயென்று கேள்விப்பட்டு, தேவதைகளும், திக்குப்பாலர் களும், ரிஷிகளும் சிறிதும் பயமின்றி சுகமாக உறங்குவார் கள். ஐயோ! இப்பொழுது மூன்று உலகங்களும், வனங்க ளோடுகூடின சமஸ்த பூமண்டலமும் ஓர் இந்திரஜித்து இல் லாமையால் எனக்குச் சூன்னியமாகத் தோன்றுகின்றனவே! இனி என் அந்தப்புரத்திலுள்ள ராக்ஷச ஸ்திரீகளின் புலம் பல்களை நான் எங்ஙனம் சகிப்பேன்?

பகைவர்களைத் தபிக்கச் செய்பவனே! நீ இளவரசுப் பட்டத்தையும், லங்கையையும் ராக்ஷசர்களையும் அன்னையை யும் என்னையும் மனைவியையும் ஆக எங்கள் எல்லோரையும் விட்டு எங்குப்போயினை? வீரனே! நான் இறந்தபின் நீ எனக்கு மரணச் சடங்குகளை நடத்தவேண்டியிருக்க விபரீதமாக அதை நான் உனக்குச் செய்யும்படி நேர்ந்ததே!" என்று புலம்பினன்.

இயற்கையாகவே கோபகுணமுடைய ராவணன் தன தருமை மகன் இறந்தமையால் மிகுந்த கோபமுற்றபோது அவனது முகத்தினின்று புகையோடு கூடின நெருப்பு வெளிப்பட்டது. அந்த ராவணன் அடக்க முடியாத கோபங் கொண்டு சிறிது ஆலோசனை செய்து சீதையைக் கொன்று விடவேண்டுமென்று தீர்மானித்தனன். அப்பொழுது கோபத்

தினால் சிவந்த அவனது கண்களினின்று நெருப்புப் பொறிக ளோடு கூடி கண்ணீர்கள் பெருகின!

அவன் பற்களைக் கடகடவென்று கடித்துக்கொண்டு மிகவும் கோபித்து எந்தெந்த திசையை நோக்கினானோ, அந்தந்த திக்கிலுள்ள ராக்ஷசர்கள் பயந்து அவனெதிரில் படாமல் கம்பங்களின் மறைவில் மறைந்து கொண்டனர். அந்த ராவணன் மிகுந்த உரத்த குரலில் ராக்ஷசர்களை நோக்கி "எனது தவப்பெருக்கினாலும், பிரம்மதேவனது அருளினா லும், எனக்கு எப்பொழுதும் தேவதைகளிடத்திலாவது அசுரர்களிடத்திலாவது சிறிதும் பயம் இல்லை. எனக்கு பிரமதேவன் கொடுத்த கவசம் இந்திரனது வஜ்ஜிராயுதத் தினால் அடிக்கப் பெறினும் பிளவுறாது. அந்த கவசத்தை இப்பொழுது நான் தரித்துக்கொண்டு யுத்தத்திற்குப் போகை யில் என்னை எவன் எதிர்ப்பவன்? முன்பு நான் தேவாசுரர் களுடன் யுத்தஞ் செய்கையில், பிரமதேவன் அருள்புரிந்து எனக்கு பாணத்தோடு கூடின பெரியவில்லைக் கொடுத்தா னல்லவா? அந்த பயங்கரமான வில்லை இப்பொழுதே ராம லக்ஷ்மணர்களைக் கொல்லும்பொருட்டுப் பல வாத்தியகோஷங் களுடன் எடுத்துக்கொண்டு வருவீர்களாக" என்றனன்.

பின்னுமவன் கோபத்தால் துடித்து ராக்ஷசர்களை நோக்கி "ஓ ராக்ஷசர்களே! எனதருமைக் குமாரனான இந்திர ஜித்து ஏதோ ஒரு மாயையினால் சீதையைக் கொல்வதாகப் பொய்யுருவத்தை வெட்டினன். நான் அவனையே பின்பற்றி அவன் பொய்யாகச் செய்ததை நிஜமாகவே செய்துவிடு கிறேன்" என்றனன்.

உடனே ராவணன் கூரான கத்தியைக் கையிலெடுத்துக் கொண்டு, புத்திர சோகத்தினால் மனது மிகவும் தத்தளிக் கப்பெற்று, மனைவிகளும் மந்திரிகளும் தன்னைச் சூழ்ந்துவர சீதையிருக்குமிடத்திற்கு வேகமாகச் சென்றனன். அப்

பொழுது அவனது நன்மையை விரும்பும் நண்பர்கள் வேண்டாமென்று எவ்வளவு தடுத்தபோதிலும், நிற்காமல், ஆகாயத்தில் அங்காரகன் கோபித்து ரோகிணியின்மேல் எதிர்த்துப்போவதுபோல் சீதையைக் குறித்துப் போயினன்.

இங்ஙனம் பளபளப்பான கத்தியை ஏந்தி எவர் தடுத்தும் கேளாமல் தன்மேல் எதிர்த்து வருகின்ற ராவணனைக் கண்ட சீதை மிகவும் பயந்து, துக்காவேசத்தினால் புலம்பி "ஐயோ! நான் இந்த பாபிஷ்டனது கருத்திற் கிணங்காமையால் கோபமும் மோகமும் மிகவும் மேலெழுப்பெற்று இதோ என்னைக் கொல்ல வருகின்றனன். இது நிச்சயம். அல்லது இவன் இந்தக் கத்தியுடன் வருவதைக் கண்டால் அந்த ராம லக்ஷ்மணர்களை என் நிமித்தமாக இந்தக் கத்தியால் முடித்து இவ்விடம் வருகின்றானோ என்னவோ?

ஐயோ! என் நிமித்தமாக அந்த ராஜ குமாரர்களுக்கு இப்படி நாசம் உண்டாயிற்றே! நான் இப்படிப்பட்ட பாபிஷ்டையா? அல்லது துஷ்டனான ராவணன் புத்திர சோகத்தினால் இளைப்புற்றிருக்கையால், ராம லக்ஷ்மணர்களைக் கொல்ல முடியாமல் அக்கோபத்தை என்மேல் காட்டி என்னையே கொல்லப் போகின்றானோ? என்னவோ? ஆலோசனையற்றவளாகையால் நான் அப்பொழுதே அனுமானது வார்த்தையைக் கேளாமல் போயினேனே. எவ்வித நிலைமைக்கும் இடமில்லாத நான் அவனது தோளின்மீது உட்கார்ந்துகொண்டு போயிருப்பேனாகில் என தன்பனின் மடியைச் சேர்ந்திருப்பேனாகையால் இப்பொழுது இங்ஙனம் துக்கப்படாதிருப்பேனல்லவா?

ஐயோ! ராமன் உண்மையில் ராவணனால் கொல்லப்பட்டிருப்பானாகில் இதைக்கேட்டு கௌசலை சிறிதும் சகியாமல் உயிரை நிச்சயமாக விட்டுவிடுவாள். சீ! அந்த கூனி மந்தரை பாழாய்ப் போவாளாக. அவளாலன்றோ கௌச

லைக்கு இத்தகைய வருத்தம் நேர்ந்தது. அவள் பாழாய் விடுவாளாக" என்று புலம்பினள். அப்பொழுது அவளை நோக்கி வேகமாக வந்த ராவணனைப்பார்த்து புத்தியிற் சிறந்த சுபார்சுவன் என்னும் மந்திரி "ராவணா! நீயோ குபேரனது தம்பி; வேதங்களை ஓதி உணர்ந்தவன். இப்படிப்பட்ட நீ கோபத்திற்குள்பட்டு எங்ஙனம் பெண்கொலை செய்ய மனந் துணிந்தனை? சிறந்த சூரனும் பராக்கிரமசாலியுமான நீ இவ்வழகிய ஸீதையைக் கொல்வது சிறிதும் தகாது. நீ இந்தக் கோபத்தை எங்களோடு கூட வந்து ராமனிடத்தி லேயே காட்டுவாயாக. ராமனை வென்று ஸீதையை யடைவதே மேலானது. அதைவிட்டு வெறுமனே ஸீதையைக் கொல்வதால் உனக்கென்ன பிரயோஜனம்?" என்றனன். ராவணன் அவன் கூறியது முற்றிலும் நியாயமென்பதை யுணர்ந்து தன் வீட்டிற்குப் போயினன்.

தொண்ணூற்று மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## தொண்ணூற்று நான்காவது ஸர்க்கம்.

## மூலபலத்தை ராமன் நாசஞ்செய்தல்.

ராவணன் சபாமண்டபத்தில் பிரவேசித்து ஸிம்மாசனத்திலுட்கார்ந்து புத்திர சோகத்தினால் வருந்தி இளைப்புற்றனன். அவன் அங்குக் கூடியிருந்த எல்லா ராக்ஷச வீரர்களுக்கும் கைகூப்பி நல்ல வார்த்தைகளால் உத்சாகப்படுத்தினன். அவன் அவர்களை நோக்கி "ஓ ராக்ஷசர்களே! நீங்களெல்லோரும் ஸமஸ்தமான யானைகள், குதிரைகள், தேர்கள், காலாட்கள் முதலிய நான்குவித சைன்னியங்களோடுகூடி ராமன்மீது பாணமழைகளை ஏராளமாகப் பெய்து அவனைக் கொல்வீர்களாக. அங்ஙனம் உங்களால் அந்த ராமனைக் கொல்லமுடியாத பக்ஷத்தில் இன்று பெரிய யுத்தஞ்செய்து கொடிய பாணங்களால் அவனது சரீரத்தைப் பிளப்பீர்களாக.

அதனால் பலங்குறையப் பெற்றிருக்குமவனை நாளைய தினம் நான் கொன்றுவிடுகிறேன்'' என்றனன்.

உடனே அவ்வரக்கரனைவரும் மிகுந்த ஆரவாரத்துடன் வேகமுடைய தேர்களில் ஏறிக்கொண்டு அளவற்ற சேனா வீரர்களால் சூழப்பட்டு அநேகவிதமான ஆயுதங்களை ஏந்தி வானரர்களை எதிர்த்துச் சென்றனர்.

அப்பொழுது அந்த வானரர்களும் ராக்ஷசர்களும் யுத்தத்தில் ஒருவர்மேலொருவர் விசித்திரமான கதைகளையும் ஈட்டிகளையும் கத்திகளையும் கண்டக்கோடாலிகளையும் கற்களையும் மரங்களையும் வீசியெறிந்து பயங்கரமான யுத்தஞ் செய்தனர். அப்பொழுது ரத்த வெள்ளம் நிறைந்த நதிகள் ஓடின. அதில் இங்குமங்கும் யானைகளும் தேர்களும் கரைகளாகவும், குதிரைகள் மீன்களாகவும், கொடிகள் வெள்ளத்திலடித்துக் கொண்டுவரும் மரங்களாகவும், சரீரங்கள் தெப்பங்களாகவும் புலப்பட்டன.

வானரர்கள் ராக்ஷசர்களின் தலைமயிர்களையும் காதுகளையும் நெற்றிகளையும், மூக்குகளையும் கூரான பற்களால் கடித்தும், நகங்களால் பீறியும் அறுத்துப் போட்டனர். ராக்ஷசர்களும் வானரர்களைப் பெரிய கதைகளாலடித்தும், ஈட்டிகளால் குத்தியும், கத்திகளால் வெட்டியும் கோடாலிகளால் பிளந்தும் துன்புறுத்தினர். ராக்ஷசர்கள் அங்ஙனம் வானரர்களை அடித்துக்கொல்லும்போது அவ்வானரர்கள் பொறுக்க முடியாமல் ராமனைச் சரணமடைந்தனர்.

பிறகு ராமன் அழகிய வில்லை வளைத்துக் கொடிய பாணங்களைக் கணக்கில்லாமல் ராக்ஷசர்மீது பெய்தனன். அப்பயங்கரமான பாணங்களால் அவ்வரக்கர் மிகவும் பீடிக்கப்பட்டு ராமனை அணுகவும் முடியாமல் தவித்தனர். காட்டில் பெருங்காற்று வீசும்பொழுது, கிளைகள் அசைவது மரங்கள் முறிவது முதலிய அதன் காரியங்கள் புலப்படுமேயன்றி

அந்தக்காற்று புலப்படாததுபோல், ராமன் ராக்ஷச ஸேனையில் புகுந்து பாணங்களைப் பிரயோகிக்கையில், ராக்ஷசர்களுக்கு அவனுடைய சஞ்சார லாகவத்தினால் பெரும் சைன்னியம் பறந்தோடுவது பெரிய ரதங்கள் முறிவது முதலிய அவனது காரியங்கள் புலப்பட்டனவேயன்றி காரியங்களைச் செய்கிற அவன் எள்ளளவும் புலப்படவேயில்லை. தமது சரீரங்களை ராமன் பாணங்களா லடித்துக்கொண்டிருக்கையில் அந்த அடிகளைப்பற்றி ராமனை அனுமானித்தார்களேயன்றி அவனைக் கண்ணாரக் கண்டவரல்லர்.

இங்ஙனம் ராமன் மிகுந்த கோபத்துடன் இங்குமங்கும் ராக்ஷச சைன்னியத்தில் திரிந்து பகைவர்களைக் கொல்லுகையில், அவன் மின்னல்போல் எங்குப் புலப்படுவானோ, அவ்விடத்திலிருக்கும் ராக்ஷசனை ராமனாகப் பிரமித்து 'இதோ ராமன்' என்று இரைச்சலிட்டுக் கொண்டு அந்த ராக்ஷசர்கள் ராமனிருந்த இடத்திலிருக்கும் ஒற்றுமையைக் கொண்டு ஒருவரையொருவர் ராமனாக பிரமித்துக் கோபித்தவராகித் தம்மையே ஒருவர்க்கொருவர் கொன்று கொண்டிருந்தனர். அவர்கள்பயத்தின் மிகுதியால் யுத்தத்தில் ராமனொருவனையே அனேகமாயிரம் ராமர்களாகப் பார்த்தனர்.

ராமன் மண்டலாகாரமான (வட்ட வடிவமான) கதி விசேஷங்களில் திரியும்பொழுது, அவனது வில்லின் பொன்மயமான நுனியுங்கூடச் சுழன்றுகொண்டிருக்கையில், கிருகிருவென்று சுழற்றப்பட்ட குறைக்கொள்ளியின் வட்டம்போல், ஒரே ரேகையாகப் புலப்பட்டுக்கொண்டிருந்ததேயன்றி ராமன் சிறிதும் புலப்படவில்லை. அப்பொழுது ராமன் சுதர்சன சக்கரம் சுழல்வதுபோல் புலப்பட்டுக் கணக்கற்ற ராக்ஷசர்களைக் கொன்றனன்.

வாயுவோடொத்த வேகமுடைய ஏழுகோடியே இருபத்தொன்பது லக்ஷம் ரதங்களும், மிகுந்த பலம் கொண்ட

13,12,20000 யானைகளும், 10,20,60000 குதிரைகளும், 145,80,00,000 காலாட்படைகளும் கொண்ட ராக்ஷசர்களின் இந்த சதுரங்க பலத்தை ராமன் அக்கினி ஜ்வாலைகள்போன்ற பாணங்களால் மூன்றேமுக்கால் நாழிகைக்குள் ஒருவனாகவே நாசஞ் செய்தனன். மிகுந்த ராக்ஷசர்கள் பொறுக்க முடியாமல் பயந்து லங்கைக்கு ஓடிச் சென்றனர். அப்பொழுது அந்த யுத்த பூமியானது பிணங்களால் நிறைந்து சிவபிரான் வாசஞ் செய்யும் சுடுகாடுபோல் விளங்கி பார்க்க வெகு பயங்கரமாக இருந்தது.

அப்பொழுது தேவதைகளும் கந்தருவர்களும், சித்தர்களும் மகரிஷிகளும் ராமன் செய்த அற்புதமான செயலைக் கண்டு 'நல்லது நல்லது' என்று கொண்டாடினர். சுக்கிரீவன், விபீஷணன், அனுமான், ஜாம்பவான், மைந்தன், துவிவிதன் முதலியவர்களைப் பார்த்து ராமன் "இங்ஙனம் மூலபலத்தையெல்லாம் க்ஷணத்திற்குள் முடித்தமை மாயையினாலன்று. இது பாணங்களைச் செலுத்தும் சக்தியாலேயே ஆயிற்று. இத்தகைய சக்தி எனக்கும், சங்கார காலத்தில் சிவனுக்கும் மாத்திரமே உளதன்றி மற்று எவனுக்கும் உண்டாகாது" என்றனன்.

தொண்ணூற்று நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றைந்தாவது ஸர்க்கம்

## ராக்ஷச ஸ்திரீகளின் புலம்பல்.

இங்ஙனம் மூலபல சைன்னியங்களெல்லாம் ஒரு முகூர்த்த காலத்திற்குள் ராமனால் எளிதில் நாசமடைந்ததைக் கேட்ட லங்கையிலுள்ள ராக்ஷசர்களனைவரும் ராக்ஷச ஸ்திரீகளோடு கூடி தீனர்களாகிச் சிந்தையில் மூழ்கினர். யுத்தத்தில் ராமனால் கணவன்மார்களும், புத்திரர்களும், உறவினர்களும் மாண்டு விழப்பெற்ற ராக்ஷச ஸ்திரீகள் ஒரு

வரை யொருவர் கட்டிக்கொண்டு துக்கத்தினால் வருந்தி இங்ஙனம் புலம்பினர்.

"ஐயோ! படுபாவி சூர்ப்பணகை ஏன் ராமனை விரும்பினள்? குரூபியும் ராக்ஷஸியுமான அவள், அழகும் குணமும் பொருந்திய ராமனை எங்ஙனம் நெஞ்சால் நினைக்கலாகும்? அவளாலல்லவா கரதூஷணன் முதலிய பதினாலாயிரம் ராக்ஷசர்களும் மாண்டொழிந்தனர். அக்கொடிய சூர்ப்பணகையினாலல்லவா ராவணன் ராமனோடு விரோதம் வைத்துக்கொண்டனன்! ராவணன் தன் மரணத்திற்காகவே சீதையைக் கொண்டு வந்தனனேயன்றி ஜனகராஜன் புதல்வியான சீதை ஒருகாலும் அவனுக்கு வசப்படுபவளன்று. ஆ! ராமனது பராக்கிரமம் எங்கே? விராதன், கபந்தன், கரன், தூஷணன், திரிசிரன் முதலிய எதிர்க்க முடியாத ராக்ஷசர்களையும் ராமன் எளிதில் கொன்றனனல்லவா? அப்படிப்பட்டவனுக்கு இந்த ராவணன் எம்மாத்திரம்? ஆகையால் இப்பொழுது ராமனே ஜயிப்பானென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆ! ராவணனையும் வென்ற வாலியையுமல்லவா ராமன் கொன்றனன். அது ஒன்றே ராமனது வெற்றிக்குச் சிறந்த சான்றாகும்.

ஐயோ! தருமவானான விபீஷணனது வார்த்தைகளை ராவணன் கேளாமற்போயினனே! அவனது வார்த்தைகளைக்கேட்டிருந்தால் இப்பொழுது இத்தகைய ஆபத்து நேராதிருக்குமே! ஹா! இதென்ன பேதைமை! ஒருவர்க்கும் எதிர்க்கமுடியாதவர்களான கும்பகரணன் அதிகாயன் இந்திரஜித்து ஆகிய இவர்கள் மாண்டதைக் கண்டும் இன்னும் ராவணனுக்கு ராமனது மகிமை தெரியாதிருக்கின்றதே! ஐயோ! ஐயோ!! யுத்தத்தில் என் கணவன் மாண்டனனே! புதல்வன் மாண்டனனே! உடன் தோன்றல் தொலைந்தனனே!" என்று லங்காபுரத்திலுள்ள ராக்ஷசர்களின் வீடுகள்தோறும் அழுகுரல் செவிப்பட்டுக் கொண்டிருந்தது.

பின்னும் அந்த ராக்ஷச ஸ்திரீகள் "இந்த ராமன் உண்மையில் சாமானிய மானிடனன்று. சிவனோ, விஷ்ணுவோ, இந்திரனோ யமனோ இம்மானிட உடல்தாங்கி நம்மை நாசஞ்செய்ய வந்திருக்கின்றனன். இனி நமக்கும் நிச்சயமாக மரணம் சம்பவிக்கப்போகிறது. இப்பொழுது ராமனிடம் அகப்பட்ட நம்மை இம்மூவுலகிலும் எவரும் காக்க வல்லரல்லர் என்பது நிச்சயம். ராவணனும் இனி மரணமடையப் போகின்றனன். ராவணன் தனக்கு தேவதைகளாலும், தானவர்களாலும், மிருகங்களினாலும் பறவை ஊர்வன மற்று எவைகளினாலும் மரணமுண்டாகாதபடிக்கு பிரமதேவனிடம் வரம்பெற்றனையன்றி மனிதனால் மரணம்கூடாதென்னும் வரத்தைப்பெறவில்லை. ஆகையால் மானிடனான ராமன் ராவணனை நிச்சயமாகக் கொல்லப்போகின்றனன்.

ராவணனது துன்பங்களைப் பொறுக்கமுடியாத தேவதைகளும் ரிஷிகளும் பிரமதேவனைச் சரணமடைந்தனர். பிரமதேவனும் சிவபெருமானும் தேவதைகளுக்கு அருள்புரிந்து ராக்ஷசர்களையும் ராவணனையும் நாசஞ் செய்யும்பொருட்டு ஓர் பெண்மணியைப் பிறப்பித்தனர். அவளே சீதையாவள். ஐயோ! நாமனைவரும் சீக்கிரத்தில் ராம பாணங்களுக்கிரையாகி மாளப்போகிறோம். நம்மை இவ்விபத்தினின்றும் காப்பவர் எவருமில்லை. விபீஷணன் ராமனையடைந்து நல்ல காரியஞ் செய்தனன்" என்று புலம்பி ஒருவரையொருவர் கைகளால் அணைத்துக்கொண்டு மிகவும் பயத்தினால் பிடிக்கப்பட்டு மார்பிலறைந்து கொண்டு அலறி அழுதனர்.

தொண்ணூற்றைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

தொண்ணூற்றறுவது ஸர்க்கம்.

## ராவணன் வானரர்களோடு யுத்தஞ் செய்தல்.

அங்ஙனம் லங்காபுரியில் வீடுகள்தோறும் ராக்ஷச ஸ்திரீகள் வருந்தி மன இரக்கம் உண்டாகும்படி புலம்பின சப்தம் ராவணனுக்குச் செவிப்பட்டது. உடனே அவன் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று பற்களால் உதட்டைக் கடித்து ராக்ஷசர்களுக்கும் கண்ணெடுத்துப் பார்க்க முடியாமல் பயங்கரமான உருவமுடையவனாயினன். அந்த ராவணன் அருகிலிருந்த ராக்ஷசர்களை யதட்டி சீக்கிரம் யுத்தத்திற்கு சைன்னியங்களைத் தயாராக்கும்படி கட்டளையிட்டனன். உடனே அப்பயங்கர உருவமுள்ள ராக்ஷசர்கள் ஏராளமான காலாட்களும், குதிரைகளும், யானைகளும் தேர்களும் அடங்கின சேனைகளைந் தயாரித்து யுத்த பூமியை நோக்கிச் சென்றனர்.

அப்பொழுது ராவணன் அருகில் நின்ற மகோதரன், மகாபார்சுவன், விரூபாக்ஷன் (இவர்கள் முன்னமே மாண்டு போன ராக்ஷசர்களல்லர், இவர்கள் வேறு மந்திரிகள்) முதலியோரை நோக்கி "இதோ என்னுடைய சாமர்த்தியத்தைப் பாருங்கள். இப்பொழுதே எனது சிறந்த வில்லினின்றும் வெளிப்படும் பாணங்களால் அந்த ராம லக்ஷ்மணர்களைக் கொன்று இதற்கு முன் அவர்களால் கரன், கும்பகரணன், பிரகஸ்தன், இந்திரஜித்து ஆகிய இவர்கள் கொல்லப்பட்டதற்கு பதில் செய்கிறேன். ஒரு நொடிப்பொழுதில் வானர சைன்னியங்களைச் சிதற அடிக்கப்போகிறேன். வானரர்கள் நூறு நூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும் உயிரிழக்கப்போகின்றனர். யுத்தத்தில் எவனோவனுக்குக் கணவர்களும் சகோதரர்களும், புத்திரர்களும் மாண்டார்களோ, அப்படிப்பட்ட ராக்ஷச ஸ்திரீகளனைவர்க்கும், இப்பொழுது பகைவர்களைக்

கொன்று கண்ணீரைத் துடைத்துவிடுகிறேன். சீக்கிரமாக எனது ரதத்தை அலங்கரிப்பீர்களாக. வேகமாக எனது வில்லைக் கொண்டு வருவீர்களாக. மற்றும் இப்பொழுது மிகுந்திருக்கும் ராக்ஷசர்களெல்லோரும் என்னைப் பின் தொடர்ந்து வருவார்களாக'' என்றனன்.

உடனே பயங்கரமான உருவமுடைய ராக்ஷசர்கள் கத்தி, சூலம், உலக்கை, ஈட்டி, வாள், கோடாலி முதலிய பயங்கரமான இருப்பு ஆயுதங்களை ஏந்திக்கொண்டு வேகமாகப் புறப்பட்டனர். ராவணன் சிறந்தழகிய ரதத்தில் ஏறிக்கொண்டு ராக்ஷசர்களால் சூழப்பட்டு பலத்தின் மிகுதியால் பூமியைப் பிளப்பவன்போல் வேகமாகப் புறப்பட்டனன். அப்பொழுது மகாபார்சுவனும் மகோதரனும் தூர்த்தர்ஷனும் விரூபாக்ஷனும் தேரில் ஏறி ராவணனைப் பின்பற்றினர்.

ராவணன் யுத்த பூமியை நோக்கி வேகமாகப் புறப்பட்டுச் சென்றனன். அப்பொழுது சூரியன் ஒளிமழுங்கினன். திசைகளெல்லாம் இருள்மூடப் பெற்றன. பயங்கரமான பக்ஷிகள் இரைச்சலிட்டன. பூமியும் நடுக்கமுற்றது. மேகம் ரத்தத்தைப் பொழிந்தது. தேர்க்குதிரைகள் வழியில் தடுக்கிவிழுந்தன. ராவணனுடைய துவஜத்தின் (கொடியின்) நுனியில் ஓர் பெரியகழுகு வந்து உட்கார்ந்தது. நரிகள் விகாரமாக ஊளையிட்டன. ராவணனுக்கு இடதுகண் துடித்தது; இடக்கை நடுக்கமுற்றது; முகம் நிறம் மாறப்பெற்றது. இங்ஙனம் ராவணன் வடக்குவாசல் வழியாக யுத்தத்திற்குப் புறப்படும்பொழுது அவனுக்கு மரணத்தை அறிவிக்கும்படியான கெட்ட சகுனங்கள் உண்டாயின. இடிவிழுந்தாற்போல் பெரிய சத்தத்துடன் ஆகாயத்தினின்று குறைக்கொள்ளி விழுந்தது. ராவணன் இவற்றையெல்லாம் சிறிதும் பொருள் செய்யாமல் மரணமடைய வேண்டிய காலம் நெருங்கியதால் யுத்த பூமியை அடைந்தனன்.

ராவணன் கோபித்து வானர சேனையில் நுழைந்து கொடிய பாணங்களை விடுத்து பயங்கரமான யுத்தஞ் செய்தனன். ராவணன் சில வானரர்களைத் தலையறுத்து, சிலரை மார்பிலடித்து, மற்றுஞ் சிலரைக் காதுகளைக்கிழித்து மூர்ச்சை யடையும்படி செய்தனன். ராவணன் கோபித்து எங்கெந்தப் பக்கம் வேகமாக எதிர்த்தனனோ அங்குள்ள வானரர்களெல்லாரும் அவனுடைய பாணங்களைப் பொறுக்க முடியாமல் ஓடிப்போயினர்.

தொண்ணூற்றாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றேழாவது ஸர்க்கம்.

## சுக்கிரீவன் விருபாக்ஷனைக் கொல்லுதல்.

காற்று பெரிய மேகங்களைப் பறக்கடிப்பதுபோல் அந்த யுத்தத்தில் ராவணன் வானர சைன்னியங்களைத் துன்புறுத்திக்கொண்டே போயினன். யுத்தபூமி யெங்கும் வானரர்களின் பிணங்கள் கும்பல் கும்பலாக நிறைந்தது. இவற்றை யெல்லாம் கண்ட சுக்கிரீவன் சுஷேணனை சேனைகளுக்குக் காவல் வைத்து விட்டு பெரிய மரங்களைப் பிடுங்கி எடுத்துக் கொண்டு ராக்ஷசர்களை எதிர்த்துக் கொன்றனன். காடுகளில் மேகம் கல்மழையைப் பெய்வது போல் சுக்கிரீவன் ராக்ஷச சேனைகள் மீது மலைகளை மிதமின்றிப் பொழிந்தனன். இதனால் பல ராக்ஷசர்கள் தலை சுக்கல் சுக்கல்களாக முறியப் பெற்று வஜ்ஜிரத்தினால் பிளக்கப்பட்ட மலைகளைப்போல் அப்போதே தரையில் வீழ்ந்தனர்.

அப்பொழுது இவற்றையெல்லாம் கண்டு பொறுக்க முடியாத விருபாக்ஷன் ஓர் பெரிய யானையின்மீது ஏறிக்கொண்டு சுக்கிரீவனை நோக்கி எதிர்த்து வந்தனன். அப்பொழுது சுக்கிரீவன் மிகவும் பெரிய ஓர் மரத்தைப் பிடுங்கி அதனால் விரு

பாக்ஷன் ஏறி வந்த யானையின் முகத்திலடித்தனன். அதனால் அந்த யானை தலை பிளக்கப்பட்டு கர்ஜித்துக்கொண்டே கீழே விழுந்தது

உடனே விருபாக்ஷன் கீழே குதித்துக் கையில் கத்தியைப் பிடித்து சுக்கிரீவனை நோக்கி ஓடி வந்தனன். அப்பொழுது சுக்கிரீவன் விசாலமாயிருக்கிற ஓர் பெருஞ்சிலையை எடுத்து அந்த ராக்ஷசன் மீது எறிந்தனன். விருபாக்ஷன் சற்றுப்பக்கத்தில் ஒதுங்கித் தப்பித்துக்கொண்டு கத்தியினால் சுக்கிரீவனை யடித்தனன். அதனால் சுக்கிரீவன் சிறிதுநேரம் மூர்ச்சையடைந்தாற்போ விருந்து திடீரென்றெழுந்து விருபாக்ஷனைத் தனது முஷ்டியால் மார்பில் குத்தினன். விருபாக்ஷன் கோபங்கொண்டு தன் கத்தியினால் சுக்கிரீவனது கவசம் தூள் தூளாகும்படி அடித்தனன்.

சுக்கிரீவன் மிகுந்த ரோஷத்துடன் அவ்விருபாக்ஷன் சற்று ஏமாந்திருந்த சமயம்பார்த்து அவனது நெற்றியிலும் பின்மேல் தனது பெரிய உள்ளங்கையா லறைந்தனன். அதனால் விருபாக்ஷன் அருவியினின்று ஜலம் பெருகுவது போல் நவத்துவாரங்களினின்றும் ரத்தவெள்ளம் பெருகப்பெற்று பூமியில் வீழ்ந்தனன்.

அப்பொழுது வானர, ராக்ஷச சைன்னியங்களாகிய சமுத்திரங்களிரண்டும் யுத்தத்தில் ஒன்றோடொன்று எதிர்த்துக் கரையைக் கடந்து வந்து ஒன்றோடொன்று மோதிக் கொள்ளுகின்ற இரண்டு பெரிய சமுத்திரங்கள் போல் மிகவும் பயங்கரமாக இரைச்சலிட்டன. விருபாக்ஷன் முடிந்தமையால் வானரர்கள் சந்தோஷமும் ராக்ஷசர்கள் கோப துக்கங்களும் கொண்டனர்.

தொண்ணூற்றேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## தொண்ணூற்றெட்டாவது ஸர்க்கம்.

## சுக்கிரீவன் மகோதரனைக் கொல்லுதல்.

இங்ஙனம் விருபாக்ஷன் மாண்டதையும் ராக்ஷச சைன்னியம் குறைவதையுங் கண்ட ராவணன் தனக்கு தெய்வம் விபரீதமாயிருப்பதை ஆராய்ந்து மிகவும் வருந்தி அருகேயிருந்த மகோதரனைப்பார்த்து "வீரனே! இப்படிப்பட்ட கஷ்ட காலத்தில் உன்னொருவனை நம்பியே நான் ஜயிப்பேன் என்கிற ஆசை கொண்டிருக்கிறேன். ஆகையால் பகைவர் சைன்னியங்களைக் கொன்று உன் பராக்கிரமத்தைக் காட்டுவாயாக. நீ யஜமானனுடைய சோற்றைத்தின்ற கடனைத் தீர்த்துக்கொள்வதற்கு இதுவே தருந்த சமயம். ஆகையால் நன்கு போராடுவாயாக" என்றனன்.

அம்மகோதரன் தன் பிரபுவின் கட்டளையைச் சிரசாவகித்து மிகுந்த கோபத்துடன் வானரர்களின்மேல் கணக்கில்லாத பாணங்களைவிட்டு அவர்களின் கால்களையும் கைகளையும் துடைகளையும் துண்டித்தனன். அப்பால் வானரர்கள் அனைவரும் ராக்ஷசர்களால் மிகவும் பீடிக்கப்பட்டுச் சிலர் பத்துத்திசைகளையும் பற்றி ஓடிப்போயினர்; சிலர் சுக்கிரீவனை யடைந்தனர்.

இதைக்கண்ட சுக்கிரீவன் பொறுக்க முடியாமல் மகோதரன் மேல் எதிர்த்துச் சென்றனன். சுக்கிரீவன் எறிந்த மலைகளையும், மரங்களையும் மகோதரன் எளிதில் கொடிய பாணங்களை விடுத்து விழத்தள்ளினன். பிறகு சுக்கிரீவன் கோபங்கொண்டு கீழே விழுந்து கிடந்த ஓர் பரிகத்தை எடுத்து அதைக் கிருகிருவென்று வேகமாகச் சுழற்றி மகோதரனுடைய குதிரைகளை விழத் தள்ளினன். உடனே மகோதரன் ரதத்தினின்றும் கீழே குதித்து தனது கதையைச் சுழற்றி சுக்கிரீவன் மேல் எறிந்தனன். சுக்கிரீவன்

ஓர் பரிகத்தை யெறிந்து அக்கதையைத் தடுத்துக் கீழே முறிந்து விழும்படி செய்தனன்.

இங்ஙனம் அவ்விருவரும் ஒருவரையொருவர் ஆயுதங்களால் அடித்தபின் ஆயுதமில்லாமையால் முஷ்டிகளால் யுத்தஞ் செய்யத் தலைப்பட்டனர். வெகுநேரம் சளைக்காமல் முஷ்டி யுத்தஞ்செய்தபின் மகோதரன் கீழே விழுந்துகிடந்த ஓர் கத்தியையும் கேடயத்தையும் எடுத்துக்கொண்டனன். சுக்கிரீவனும் அங்ஙனமே தரையில் வீழ்ந்திருந்த மற்றொரு கத்தியையுங் கேடயத்தையும் எடுத்துக்கொண்டனன்.

அவ்விருவரும் கோபாவேசமுற்று ஒருவரையொருவர் வெல்லவிரும்பி விரைந்த நடையுடன் இடமும் வலமுமாக மண்டலகதிகளில் திரிந்து போராடினர். அப்பொழுது மகோதரன் கத்தி குறிதவறி சுக்கிரீவன் கையிலிருக்கும் கேடயத்தில் படும்படி போட்டனன். அப்பால் அவன் கேடயத்தில் பாய்ந்திருக்கும் கத்தியை இழுத்துக்கொண்டிருக்கையில், சுக்கிரீவன் அம்மகோதரனுடைய தலையை வெட்டி வீழ்த்தினன். இதைக்கண்ட ராவணனது சைன்னியங்கள் பயந்து ஓடிப்போயின. சுக்கிரீவன் வீரலக்ஷ்மி விளங்கப்பெற்று சிம்மநாதஞ் செய்ததைக்கண்டு ராமன் சந்தோஷமுற்றனன். வானரர்கள் உத்சாகமடைந்தனர்.

தொண்ணூற்றெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றொன்பதாவது ஸர்க்கம்.

### ராவணனுடைய மந்திரியான மகாபார்சுவனை அங்கதன் கொல்லுதல்.

மகோதரன் மாண்டதைக்கண்ட மகாபார்சுவன் கோபத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று அங்கதனது சைன்னியத்தில் புகுந்து பாணங்களால் கலக்கினன். காற்று பழத்தைக்

காம்பினின்றும் விழுத்தள்ளுவதுபோல், அம் மகாபார்சுவன் சிறந்த வானரவீரர்களின் தலைகளைச்சரீரங்களினின்று பாணங்களால் விழுத்தள்ளினன். வானரர்கள் சிறிதும் பொறுக்க முடியாமல் யுத்தத்தில் விருப்பமின்றி மூர்ச்சையுற்றவராயினர்.

இதைக்கண்ட அங்கதன் சகியாமல் கீழேகிடந்த மிகவும் பெரிய ஓர் இரும்புத்தடியை எடுத்து மகாபார்சுவன் மேல்வீசி எறிந்தனன். அந்த அடியால் அவன் சாரதியும் தானும் தெளிவற்று மூர்ச்சித்தவராகி ரதத்தினின்று பூமியில் வீழ்ந்தனர். அப்பொழுது கவாக்ஷனும் ஜாம்பவானும் ஓர் பெரிய சிலையை எடுத்துக்கொண்டுவந்து மகாபார்சுவனது குதிரைகளைக்கொன்று அவனது ரதத்தையும் முறித்துவிட்டனர்.

மகாபார்சுவன் சிறிது நேரத்தில் மூர்ச்சைதெளிந்தெழுந்து கொடிய பாணங்களைவிட்டு அங்கதனை வருந்தச்செய்தனன். பின்னுமவன் கவாக்ஷன்மேல் பலபாணங்களையும் ஜாம்பவான் மேல் மூன்று பாணங்களையும் செலுத்தித் துன்புறுத்தினன். அங்கதன் சிறிதும் பொறுக்கமுடியாமல் மிகுந்த கோபாவேசத்துடன் ஓர் பெரிய இரும்புத் தடியையெடுத்து கிருகிருவென்று வேகமாகச் சுழற்றி மகாபார்சுவன் மேல் விழும்படி வீசி எறிந்தனன். அதனால் அவ்வரக்கனது கைவில்லும் தலைப்பாகையும் கீழே விழுந்தன. பின்னும் அங்கதன் வேகமாக அவனைக்கிட்டி அவனது காதடியில் உள்ளங்கையா லறைந்தனன்.

இதனால் கோபங்கொண்ட மகாபார்சுவன் ஓர்கடினமான கண்டக்கோடாலியை எடுத்து அதை அங்கதனுடைய மார்பில் விழும்படி வீசியெறிந்தனன். அங்கதன் மிகுந்த சாமர்த்தியசாலியாகையால் மிகுந்த லாகவத்தினால் அந்த கோடாலிக்குத் தப்பித்துக்கொண்டனன். பிறகு அங்கதன் தனது

கைமுஷ்டியினால் அம்மகாபார்சுவனுடைய இருதயத்தில் பலங்கொண்டமட்டும் அடித்தனன். அதனால் அவ்வரக்கனது இருதயம் வெடித்து அவன் பிராணனையிழந்து பூமியில் விழுந்தனன். உடனே ராக்ஷசப்படைகள் கலங்கி ஓடத் தலைப்பட்டன.

அப்பொழுது ராவணனுக்கு மிகுந்த கோபம் உண்டாயிற்று. வானரர்கள் சந்தோஷத்தின் மிகுதியினால் சிம்மநாதஞ் செய்தனர். அங்ஙனமே தேவேந்திரனும் தேவதைகளும் சந்தோஷத்தினால் பெருங்கோஷமிட்டனர்.

தொண்ணூற்றொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூறாவது ஸர்க்கம்.

## ராம ராவண யுத்தாரம்பம்.

தனக்குதவியாயிருந்த விரூபாக்ஷன், மஹோதரன், மகாபார்சுவன் முதலியோர் மாண்டொழிந்ததைக் கண்ட ராவணன் மிகுந்த கோபாவேசங்கொண்டு ராமன்மேல் எதிர்த்துச் சென்றனன். அவன் மிகவும் பயங்கரமான தாமஸாஸ்திரத்தைப் பிரயோகித்து நாற்புறத்திலும் வானரர்களைக் கொளுத்தித் துன்புறுத்தினன். வானரர்கள் அதைப் பொறுக்க முடியாமல் தோல்வியடைந்து ஓடினர்.

ராம லக்ஷ்மணர் இதைக்கண்டு சகிக்க முடியாமல் ராவணனை நோக்கிச் சென்றனர். அப்பொழுது லக்ஷ்மணன் சிறந்த வில்லை வளைத்துக் கொடிய பாணங்களை ராவணன் மேல்பிரயோகித்தனன். ராவணன் ஆகாயத்திலேயே பாணங்களை விடுத்து அவற்றைத் தடுத்தனன். ராவணன் தன் கைவேகத்தைக் காட்டத் தொடங்கி லக்ஷ்மணனது பாணங்களில் ஒரு பாணத்திற்கு ஒரு பாணத்தையும், மூன்றுக்கு மூன்றையும், பத்துக்குப் பத்தையும் தொடுத்து இங்ஙனம் அவன் பாணங்களெல்லாவற்றையும் பதில் பாணங்களை விடுத்

துத் தடுத்தனன். பிறகு ராவணன் லக்ஷ்மணனைச் சிறிதும் பொருள் செய்யாமல் ராமன்மேல் பாண மழைகளைப் பொழிந்தனன். ராமன் அவற்றையெல்லாம் கொடிய பல பாணங்களால் துண்டித்தனன்.

பிறகு அந்த ராம ராவணர்கள் ஒருவர்க்கொருவர் பாணங்களைத் தடுத்துக்கொண்டு வெகுநேரம் இடமும் வலமுமான மண்டல கதிகளில் திரிந்து கொண்டே யுத்தஞ் செய்தனர். அப்பொழுது ஆகாயம் முழுவதும் பாணங்களால் நிரப்பப்பட்டது. ஸமஸ்த பூதங்களும் நடுநடுங்கின. அவ்விருவரும் சிறந்த வில்லாளிகளும் அஸ்திரங்களை அறிந்தவர்களுமாதலால் ஒருவர்க்கொருவர் வெற்றி தோல்வியின்றி வெகுநேரம் பயங்கரமாக யுத்தஞ்செய்தனர். பிறகு ராவணன் ராமனது நெற்றியில் கொடிய நாராசபாணங்களை விடுத்தனன். ராமன் அதற்கு வருந்தாமல் ரௌத்திராஸ்திரத்தையெடுத்து ராவணன்மேல் பிரயோகித்தனன். அது ராவணனது கவசத்தின்மேல் பட்டமையால் ராவணனுக்குச் சிறிதும் வருத்தம் விளைவிக்கவில்லை. பிறகு ராமன் சிறந்த ஓர் பாணத்தால் ராவணனை நெற்றியிலடித்தனன். ஆனால் அது தன்னிடம் வருவதற்கு முன்பே தனது கொடிய பாணங்களால் அதைத் தடுத்தனன்.

உடனே ராவணன் கோபத்துடன் அசுராஸ்திரத்தை அபிமந்திரித்து ராமன் மேல் பிரயோகித்தனன். அவ்வஸ்திரத்திலிருந்து சிம்மம், புலி, காகம், கழுகு, பருந்து, நரி, செந்நாய் இவைகளைப்போன்ற உருவமுடைய கொடிய பாணங்கள் புறப்பட்டன. ராமன் அவ்வஸ்திரத்தை ஆக்கினேயாஸ்திரத்தினால் எளிதில் தடுத்து நாசஞ் செய்தனன். இதைக் கண்ட சுக்கிரீவனும் வானரர்களும் வியப்புற்றனர்.

நூறாவது ஸர்க்கம் முற்றிற்று.

நூற்றோராவது ஸர்க்கம்.

## ராவணன் லக்ஷ்மணனைச் சக்தியினாலடித்தல்.

ராவணன் தனது அஸுராஸ்திரம் வீணானமை கண்டு மற்றொரு அஸ்திரத்தை ராமன் மேல் விடுத்தனன். அவ்வஸ்திரத்தினின்று வஜ்ஜிராயுதம் போன்ற சூலங்களும், கதைகளும், உலக்கைகளும், பலவகை இரும்புத் தடிகளும் பயங்கரமாகிப் பெருவேகத்துடன் புறப்பட்டன. ராமன் அவ்வஸ்திரத்தை காந்தர்வாஸ்திரத்தினால் தடுத்து நாசஞ் செய்தனன். பிறகு ராவணன் ஸௌராஸ்திரத்தை பிரயோகித்தனன். ராமன் அதைச்சிறந்த ஒரு பாணத்தினால் கண்டித்தனன். இங்ஙனம் தனது பாணங்களெல்லாம் வீணானது கண்ட ராவணன் மிகுந்த கோபங்கொண்டு வேறு பத்து பாணங்களை ராமனது மர்ம ஸ்தானங்களில் விடுத்துத் துன்புறுத்தினன்.

ராவணனது பாணங்கள் தேகத்தில் பொத்துக்கொள்ளினும், ராமன் மகா தேஜஸ்வியாதலால் சிறிதும் சலிக்கவில்லை. பிறகு ராமன் மிகவும் கோபமுற்று ராவணனது அவயவங்களெல்லாவற்றிலும் பல பாணங்களை விடுத்துத்துன்புறுத்தினன். இதற்குள் லக்ஷ்மணன் ராவணனது துவஜத்தை (கொடியை) ஏழு பாணங்களால் முறித்துத் தள்ளினன். ஒரு பாணத்தினால் ராவணனது சாரதியின் தலையை அறுத்தனன்; ஐந்து பாணங்களால் ராவணனது கைவில்லை முறித்தனன்.

அப்பொழுது விபீஷணன் கதையினால் ராவணனது தேர்க்குதிரைகளை அடித்துக் கொன்றனன். உடனே ராவணன் தேரினின்றும் கீழே குதித்து மிகுந்த கோபத்துடன் விபீஷணன் மேல் சக்தியாயுதத்தைப் பிரயோகித்தனன். லக்ஷ்மணன் அந்த சக்தி விபீஷணனை அணுகுவதற்கு முன்

அதை மூன்று பாணங்களால் சேதித்தனன். அச்சக்தி மூன்று துண்டங்களாக ஒடிந்து நெருப்புப்பொறிகள் பறக்கப்பெற்று ஜ்வலித்துக்கொண்டு ஆகாயத்தினின்று பெரிய குறைக்கொள்ளி போல் பூமியில் வீழ்ந்தது.

இங்ஙனம் விபீஷணனை லக்ஷ்மணன் காப்பாற்றியதைக் கண்ட ராவணன் தனது கோபத்தை லக்ஷ்மணன் மேல் ஏறிட்டு "லக்ஷ்மணா! நீ பலத்தினால் கர்வங்கொண்டு விபீஷணனைத் தப்புவித்தனை. ஆகையால் இனி அவனை விட்டு இதோ இம் மகாசக்தியை உன்மேல் விடுகிறேன்காண். இது வரை எத்தனையோ பேர்களைக் கொன்று ரத்தக்கறை அடையாளமாகப் பெற்ற இவ்வாயுதத்தினால் நீ இப்பொழுது யமனுலகையடையப் போகிறாய்" என்று சொல்லிக்கொண்டே யமனுக்குங்கூட அணுக முடியாத மிகவும் பயங்கரமான ஓர் மகா சக்தியை லக்ஷ்மணன் மேல் விடுத்தனன்.

அந்தச்சக்தி யமனுடைய மாயையால் நிருமிக்கப்பட்டது. எப்படிப்பட்ட பகைவர்களின் மீது பிரயோகிக்கினும் வீணாகாமல் அவர்களை நிச்சயமாக முடிக்கவல்லது. அப்படிப்பட்ட மகாசக்தி லக்ஷ்மணன் மேல் எதிர்த்து வருவதைக் கண்ட ராமன் அதன்மேல் சில பாணங்களை விடுத்து 'லக்ஷ்மணனுக்கு க்ஷேமம் உண்டாகுக' என்று தம்பிக்கு ஆசி கூறினன். அச்சக்தி எப்படிப்பட்டவரையும் பஸ்மஞ் செய்யவல்லதாயினும் அதன் வலிமை ராமன் வீண் செய்கை பால் அது லக்ஷ்மணனுடைய மார்பில் வெறுமனே வந்து விழுந்தது. ஆயினும் அச்சக்தி லக்ஷ்மணனது மார்பில் ஆழமாகப் பாய்ந்ததால் அவன் மார்பு பிளக்கப்பெற்று பூமியில் வீழ்ந்தனன்.

இதைக்கண்ட ராமன் கண்களில் நீர் ததும்ப வருத்தமுற்றபோதிலும், அதை வெளிக்குக் காட்டாமல் கோபத்தை ஏறிட்டுக்கொண்டு அச்சக்தி ஆயுதத்தை எடுத்து முறித்துப்

போட்டனன். அச்சமயம் ராவணன் மேன்மேலும் கொடிய பாணங்களை விடுத்து ராமனைத் துன்புறுத்தினன். ராமன் அவற்றைச் சிறிதும் பொருள் செய்யாமல் லக்ஷ்மணனை யணைத்துக்கொண்டு சுக்கிரீவன் முதலிய வானரர்களைப் பார்த்து "வானரோத்தமர்களே! நீங்கள் சற்றுநேரம் லக்ஷ்மணனைச் சூழ்ந்து காத்துக்கொண்டிருப்பீர்களாக. எனது பராக்கிரமத்தை உபயோகப்படுத்தும்படியான காலம் இதோ வந்துவிட்டது. இனி ராவணனைத் தவறாமல் கொல்லவேண்டும். வானரர்களே! உங்களெதிரில் சத்தியமாக பிரதிக்ஞை செய்கிறேன். சீக்கிரத்தில் நீங்கள் உலகத்தில் ராவணனாவது ராமனாவது இல்லாதிருக்கக் காண்பீர்கள். ராஜ்ஜியம் கை சோருதல், வனவாசஞ் செய்தல், சீதை பிறரால் தொடப்படுதல், அவள் ராக்ஷசர் கையிலகப்பட்டு வருந்தமுறுதல், இந்த லக்ஷ்மணன் மூர்ச்சை யடைந்திருத்தல் ஆகிய இவற்றையெல்லாம் இப்பொழுது யுத்தத்தில் ராவணனைக் கொன்று போக்கடித்துக்கொள்ளுகிறேன்.

ஓ வானர வீரர்களே! நீங்கள் மலைகளின் நுனிகளில் சுகமாக உட்கார்ந்துகொண்டு எனக்கும் ராவணனுக்கும் இதோ நடக்கப்போகிற யுத்தத்தைக் காண்பீர்களாக. தேவதைகளும் ரிஷிகளும் கந்தருவர்களும் சாரணர்களும் மற்றும் மூன்று உலகங்களிலுள்ளவர்களும் இப்பொழுது எனது பராக்கிரமத்தைக் காண்பார்களாக. உலகத்திலுள்ளவர்களும் தேவதைகளும் கூட்டமாகச் சேர்ந்து இப்பொழுது யுத்தம் நடந்த விதத்தை பூமி உள்ளவரையிலும் என்றும் உலகத்தில் சொல்லிக்கொண்டிருக்குமாறு செய்யக்கூடிய பராக்கிரம காரியத்தை இதோ செய்து காட்டுகிறேன் காண்மின்" என்றனன்.

உடனே ராமன் யுத்தத்தில் மனவூக்கம் மிகப்பெற்று மேலான பொன்னால் விளங்கும் கொடிய பாணங்களைப்

பெய்து ராவணனைத் துன்புறுத்தினன். ராமனும் ராவண னும் ஒருவர்மேலொருவர் பிரயோகிக்கும் பாணங்கள் ஒன்றோ டொன்று அடித்துக்கொள்கையில் விளைந்த சப்தமானது இன்னது இனையதென்றறியகில்லாமல் பெருங் கோஷமாகக் கிளம்பிற்று. ராமன் பாணங்களை மழை பெய்வதுபோல் ராவ ணன்மேல் ஓயாமல் பெய்கையில், ராவணன் அடியுண்டு மிகவும் பீடிக்கப்பட்டு அஞ்சி வாயுவினாலடிக்கப்பட்ட மேகம் போல் ஓடினன்.

நூற்றோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிரண்டாவது ஸர்க்கம்

### ராமன் லக்ஷ்மணனைக் குறித்துப் புலம்புதலும், லக்ஷ்மணன் நோயற்று எழுந்திருத்தலும்.

அப்பொழுது ராமன் சுஷேணனை நோக்கி "எனக்குப் பிராணனைக் காட்டிலும் பிரியமானவனும் ஒப்பற்ற வீரனு மான லக்ஷ்மணன் ராவணனாலடியுண்டு இதோ ரத்தத்தில் மூழ்கி பூமியில் விழுந்து புரளுகின்றனன். இனி எனக்கு யுத்தஞ் செய்ய சக்தி எப்படி யுண்டாகும்? என் தம்பி மரண மடைவானாயின் எனக்கு பிராணன் எதுக்கு? சுகந்தான் எதற்கு?

ஐயோ! என்னெதிரிலேயே என் தம்பி இக்கதிக்குள் ளானமையால் என் பராக்கிரமம் வெட்கமுற்றாற்போல் பின் வாங்குகின்றதே! வில் கையில் நிற்காமல் நழுவுகின்றது. பாணங்கள் கை சோருகின்றன. கண்கள் நீர் ததும்பப்பெற் றிருக்கையால் ஒன்றும் புலப்படவில்லை. எனதவயவங்கள் விலவிலத்து ஒன்றும் செய்யக்கூடாதிருக்கின்றன. இனி என் உயிரின்மீது எனக்காசையில்லை" என்றனன்.

இங்ஙனம் ராமன் லக்ஷ்மணன் மருமத்திலடியுண்டு நெடு மூச்செறிந்துகொண்டிருப்பதைக் கண்டு சோகத்தினால்

புலம்பி ஒன்றும் தோன்றாதிருந்தனன். மீண்டுமவன் "ஐயோ எனக்கு இனி யுத்தத்திலாவது சீதையினாலாவது ராஜ்ஜியத்திலாவது என்ன பிரயோஜனம்? உலகத்தில் ஒருவனுக்கு தேசங்கள்தோறும் வேண்டிய மனைவிகள் அகப்படுவார்கள். வேண்டிய உறவினர்களும் அகப்படுவார்கள். கூடப்பிறந்தவனான தம்பி அகப்படும்படியான தேசம் மாத்திரம் எங்கும் கிடையாது." என்று கூறிப் புலம்பினன்.

இங்ஙனம் புலம்புகின்ற ராமனை நோக்கி சுஷேணன் "நீண்ட கைகளையுடையவனே! லக்ஷ்மணன் இப்பொழுது மரணமடையவில்லை. ஏனெனில் அவனது முகம் விகாரமடையவில்லை; நிறமும் மாறவில்லை; காந்தியும் குறையவில்லை. இவனது உள்ளங்கைகள் செந்தாமரைபோல் சிவந்திருக்கின்றன. கண்கள் மிகவும் தெளிந்திருக்கின்றன. இவனது இருதயம் இதோ அடித்துக்கொண்டிருக்கின்றது. ஆகையால் நீ வருத்தமுறவேண்டாம்" என்று கூறி, பின்னையும் அனுமானை நோக்கி "வீரனே! நீ முன் கொணர்ந்த இமயமலைச் சிகரத்திலுள்ள விசல்யகரணி, ஸாவர்ண்யகரணி, சந்தானகரணி முதலிய திவ்விய ஔஷதிகளை லக்ஷ்மணனைப் பிழைப்பிக்கும்பொருட்டு சீக்கிரத்தில் கொண்டு வருவாயாக" என்றனன்.

உடனே அனுமான் மிகுந்த வேகத்துடன் அந்த ஔஷதி பர்வதத்திற்குச் சென்று அம்மூலிகைகளைத் தேடினன். அவை யவனுக்கு அடையாளம் தெரியாமையால் அம்மலையையே பெயர்த்து எடுத்துக்கொண்டு ஆகாய வழியாய் வந்தனன். அவனைக் கண்ட வானரர்கள் மிகுந்த சந்தோஷமுற்றுக் கூச்சலிட்டனர். சுஷேணன் அச்சிறந்த மூலிகைகளைப் பிடுங்கி எடுத்துக் கசக்கி லக்ஷ்மணனுடைய மூக்கில் பிழிந்தனன். அடுத்த நிமிஷத்தில் லக்ஷ்மணன் சல்லியங்க

ளெல்லாம் தொலையப் பெற்றுச் சிறிதும் நோயின்றிச் சீக்கிர மாக பூமியினின்று எழுந்தனன்.

அப்பொழுது ராமன் மிகுந்த சந்தோஷத்துடன் லக்ஷ்மணனைக் கட்டியணைத்து "லக்ஷ்மணா! மரணமடைந்த நீ எனது பாக்கியவசத்தினால் பிழைத்தெழுந்தனை. நீ மரணமடைவாயாயின் எனக்கு என் உயிராலும் சீதையினாலும் யுத்தத்தினாலும் என்ன பிரயோஜனம்?" என்றனன். லக்ஷ்மணன் "ராமா! உன் பராக்கிரமம் எப்பொழுதும் பொய்யாகாது. அப்படிப்பட்ட நீ முன்பு ராவணனைக் கொன்று விபீஷணனுக்கு லங்கையைக் கொடுப்பதாக பிரதிக்கினை செய்துவிட்டு இப்பொழுது பலமில்லாதவன்போல் இங்ஙனஞ் சொல்லத்தகாது. நல்ல புருஷர்கள் தாம் செய்த பிரதிக்கினையைத் தவறமாட்டார்களல்லவா? தோஷமற்றவனே! என் நிமித்தமாக நீ சீதாதேவியையும் வெற்றியையும் விரும்பாதிருந்தது போதும். இனி சீக்கிரமாக ராவணனைக் கொன்று உன் பிரதிக்கினையை நிறைவேற்றுவாயாக. இன்று சூரியன் அஸ்தமிப்பதற்குள் ராவணன் மரணமடைய வேண்டுமென்று நான் விரும்புகிறேன்" என்றனன்.

நூற்றிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்று மூன்றாவது ஸர்க்கம்.

## ராமனுக்கும் ராவணனுக்கும் யுத்தம்.

இங்ஙனம் லக்ஷ்மணன் சொன்ன வார்த்தைகளைக்கேட்ட ராமன் வில்லையெடுத்து நாணேற்றி ராவணன்மேல் பயங்கரமான பாணங்களைப் பிரயோகித்தனன். இதற்குள் ராவணன் மற்றொரு ரதத்தின் மேலேறி மேகம் தாரை தாரையாய் மழை பெய்வதுபோல் பயங்கரமான பாணங்களை விடுத்து ராமனைத் துன்புறுத்தினன்.

அப்பொழுது ராமன் பூமியின்மேல் நின்றும், ராவணன் ரதத்தின்மேலிருந்தும் யுத்தஞ் செய்வது சரியல்லவென்று நினைத்த தேவேந்திரன் தனது சாரதியான மாதலியை யழைத்து ராமனுக்குத் தனது மேலான ரதத்தைக் கொண்டு போகும்படி கட்டளையிட்டனன். நவரத்தினங்களால் இழைக்கப்பட்டவைகளும் வெளுத்த சாமரங்களோடுகூடி சூரியன்போல் பிரகாசிப்பவைகளும் பச்சிலை நிறமுடையவைகளுமான சிறந்த குதிரைகள் பூட்டப்பெற்றதும் வைடூரிய மணிகளிழைக்கப்பட்ட ஏர்க்கால்களையுடையதுமான அம் மேலான ரதத்தை இந்திரனுடைய சாரதியான மாதலி சீக்கிரமாக சுவர்க்கலோகத்திலிருந்து ராமனிடம் ஓட்டிக்கொண்டு வந்தனன்.

அம்மாதலி ராமனை நோக்கி "காகுத்தனே! உனக்கு வெற்றியுண்டாகும் பொருட்டு தேவேந்திரன் இந்த ரதத்தை யனுப்பினன். மற்றும் பெரிதான இந்த இந்திர தனுசையும், இம்மேலான கவசத்தையும், சூரியனையொத்த இந்த பாணங்களையும், விரோதிகளை உருமாய்க்கவல்ல இச்சக்தியையும் தேவேந்திரன் உனக்குக் கொடுத்தனன். மகாராஜனே! முன்பு தேவேந்திரன் இந்த ரதத்தில் ஏறிக்கொண்டு தானவர்களை நாசஞ் செய்ததுபோல் நீ இப்பொழுது என்னை சாரதியாகக்கொண்டு இந்தத் தேரில் ஏறி ராவணனைக் கொல்வாயாக" என்றனன்.

இதைக்கேட்ட ராமன் மிகுந்த சந்தோஷத்துடன் அந்த ரதத்தை வலம்வந்து வணங்கி அதில் ஏறிக்கொண்டனன். அப்பால் ராமனுக்கும் ராவணனுக்கும் காண்போர்களுக்கு ஆச்சரியத்தையும் மயிர்க் கூச்சலையும் விளைக்கும்படியான பயங்கரமான யுத்தம் நடந்தது. ராவணன் விடுத்த ஒவ்வொரு அஸ்திரத்தையும் ராமன் எளிதில் தனது பாணத்தினால் கண்டித்தனன். பிறகு ராவணன் கோபமுற்று ராக்ஷ

சாஸ்திரத்தைப் பிரயோகித்தனன். அப்பாணத்தினின்று கொடிய விஷமுடைய சர்ப்பங்கள் வாயைத் திறந்துகொண்டு எரிகிற நெருப்புகளைக் கக்கிக்கொண்டு ராமனை நோக்கிவந்தன. ராமன் சிறிதும் பின் வாங்காமல் ஒப்பற்ற கருடாஸ்திரத்தை விடுத்தனன். அதினின்றும் மிகப் பெரிய கருடப் பறவைகள் கிளம்பி ராவணனது பாணங்களையெல்லாம் உருமாய்த்தன.

ராவணன் இங்ஙனம் தனது அஸ்திரம் வீணானமை கண்டு கோபித்து ஆயிரம் பாணங்களால் ராமனையடித்து வருந்தச் செய்து மற்றும் பல பாணங்களால் சாரதியான மாதலியையும் குதிரைகளையும் துன்புறுத்தினன். பின்னும் அவ்விந்திரனது தேரின் துவஜத்தை (கொடியை) சேதித்தனன். தேவதைகளும் கந்தருவர்களும் தானவர்களும் சாரணர்களும் ராவணன் செய்த அப்பெருஞ் செயலைக் கண்டு வருத்தமுற்றனர். சித்தர்களும் மகரிஷிகளும் சாரணர்களும் வானர வீரர்களும் விபீஷணனும் ராமன் வருந்துவதைக் கண்டு மிகவும் வருத்தமுற்றனர்.

அப்பொழுது ஆகாயத்தில் புதன் ரோகிணி நக்ஷத்திரத்தை ஆக்கிரமித்து நின்றனன். சமுத்திரம் புகைசூழப் பெற்ற அலைகளையுடையதாகி சூரியனைத் தொடுவதுபோன்று மேற் கிளம்பியது. சூரியனும் காந்தி குறைந்து கத்தியைப் போல் கறுத்து தூமகேதுவுடன்கூடி மிகக்கொடியனாகப் புலப்பட்டனன். ஆகாயத்தில் இக்ஷ்வாகு வமிசத்தாசரது நக்ஷத்திரமான விசாக நக்ஷத்திரத்தை அங்காரகன் பீடித்தனன். யுத்தத்தில் ராவணன் மிகவும் வளர்ந்து ராமனை இங்ஙனம் அடக்கிக்கொண்டிருக்கையில், ராமனுக்கு வில்லில் பாணங்களைத் தொடுக்கவும் முடியாமலிருந்தது. முன்னமே கோபித்துக்கொண்டிருந்த ராமன் புருவத்தை நெறித்து மிகுந்த கோபாவேசமடைந்தனன்.

நூற்று மூன்றுவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்று நான்காவது ஸர்க்கம்.

## ராமன் ராவணனது குதிரை முதலியவற்றைத் துன்புறுத்தல்.

அங்ஙனம் கோபாவேசமுற்ற ராமனது முகத்தைக் கண்டு சமஸ்த பூதங்களும் பயந்தன. பூமியும் நடுக்கமுற்றது. நதிகளும் சமுத்திரமும் கலக்கமுற்றன. மலைகள் ஆடின. ஆகாயத்தில் மேகங்களும் பறவைகளும் அபசகுனமான சப்தங்களைச் செய்துகொண்டு கூச்சலிட்டன. ராவணனுக்கும் பயம் உண்டாயிற்று. அப்பொழுது அவ்விருவருக்கும் நடந்த பயங்கரமான யுத்தத்தை தேவதைகளும் கந்தருவர்களும் தானவர்களும் தைத்தியர்களும் கருடர்களும் விமானங்களிலிருந்து ஆகாயத்தினின்று பார்த்துக்கொண்டிருந்தனர்.

அப்பொழுது ஆகாயத்தில் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த அசுரர்கள் தேவதைகளிடத்திலுள்ள துவேஷத்தினால் ராமனுக்கு ஜயங்கூடாதென்று பிடிவாதங்கொண்டு ராவணனைப் பார்த்து "ராவணா! உனக்கு வெற்றியுண்டாகுக" என்றனர். தேவதைகள் ராமனைப் பார்த்து "நீ ஜயிப்பாயாக" என்றனர்.

அப்பொழுது ராவணன் பயங்கரமான ஓர் சூலாயுதத்தை யெடுத்துக்கொண்டனன். அது பெரியமலைச் சிகரம்போன்ற இரும்பாணிகளால் நிறைந்து கூரிய நுனியுடன்கூடி ஜ்வலித்துக்கொண்டிருக்கையால் புகையோடுகூடின அக்கினி ஜ்வாலை போன்று சிவனது சூலாயுதத்தையும் விஞ்சி யமனுக்குங்கூட அணுக முடியாமல் சமஸ்த பூதங்களுக்கும் திகில் விளைப்பதுமாகி வாளைப்போல் அறுப்பதும் கத்தியைப்போல் வெட்டுவதுமாய் விளக்கமுற்றிருந்தது. ராவணன் அச்சூலாயுதத்தைக் கையிலேந்தி சிம்மநாதஞ் செய்து ராமனைப் பார்த்து "ராமா உனக்காக ரோஷத்தினால் நான் இப்பொழுது எடுத்த இச்சூலம் இப்பொழுதே உன்னையும் உன் தம்பியையும் முடிக்கப்போகின்றது. நீ இதுவரை சூரர்களான ராக்ஷசர்களைக்

கொன்றதற்குப் பதில் இப்பொழுதே செய்துவிடுகிறேன்" என்று சொல்லிக்கொண்டே அச்சூலாயுதத்தை ராமன்மேல் எறிந்தனன்.

அம்மகா சூலம் அக்கினியைக் குபீர் குபீர் என்று கக்கிக் கொண்டே ராமனை நோக்கி வந்துகொண்டிருக்கையில் ராமன் மேலான பாணங்களால் அதைத் தடுத்தனன். ஆயினும், ராமன் விடுத்த பாணங்கள் ராவணனது சூலத்தின் மேல் பட்டு அக்கினியில் குதித்த விட்டில்கள்போல் பஸ்மமாயின. இங்ஙனம் தனது பாணங்கள் வீணானது கண்டு ராமன் கோபங்கொண்டு, தனக்கு மாதலி கொண்டுவந்து கொடுத்த தேவேந்திரனால் நிருமிக்கப்பட்ட மகாசக்தியை எடுத்துச் சுழற்றி விடுத்தனன். அம்மகா சக்தி ராவணனது சூலத்தில் பட்டு அதை முறித்துவிட்டு ஒளியற்று பூமியில் விழுந்தது.

பிறகு ராமன் மிகுந்த உத்சாகத்துடன் கொடிய பாணங்கள் பலவற்றைவிடுத்து ராவணனது குதிரைகளைத் துன்புறுத்தினன். பின்னும் ராவணனது மார்பில் பல பாணங்களையும் நெற்றியில் மூன்று பாணங்களையும் விடுத்துத் துன்புறுத்தினன். அப்பொழுது ராவணன் சமஸ்த அவயவங்களிலும் ராம பாணங்களால் பிளக்கப்பட்டு வருந்தவும், ரத்தத்தினால் சரீரம் நனையவும் பெற்றுப் புஷ்பித்த அசோக மரம்போல் பிரகாசித்தனன்.

நூற்று நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றைந்தாவது ஸர்க்கம்.

### ராமன் ராவணனை பாணங்களால் விலவிலக்கச் செய்தலும், அவனது சாரதி ரதத்தை அப்புறங்கொண்டு போதலும்

ராவணன் மிகுந்த வருத்தமும் கோபமுமடைந்து வில்லை இழுத்து பாணங்களை நிரம்பவிடுத்து ராமனது தேகம் முழு

வதும் நிறைத்து ராமனைத் துன்புறுத்தினன். அதனால் ராமன் சிறிது நடுக்கமுற்று அப்பாணங்களை யெல்லாம் தனது பாணங்களால் தடுத்துக்கொண்டே யிருந்தனன். பிறகு ராவணன் தனது கைவேகம் விளங்க ராமனது மார்பில் அனேகமாயிரம் பாணங்களை பிரயோகித்தனன். அப்பொழுது ராமன் தேகமெல்லாம் ரத்தத்தினால் நனையப் பெற்று அடவியில் புஷ்பித்த ஓர் பலாசமரம்போல் புலப்பட்டனன்.

அப்பொழுது ராமன் ராவணனை நோக்கி "ராக்ஷசா எனது மனைவியை நான் அருகில் இல்லாதிருக்கையில் எனக்குத் தெரியாதபடி திருடிக்கொண்டு வந்தனையே! நீயும் ஒரு பராக்கிரமசாலியா? அடா வெட்கங்கெட்டவனே! நீயும் ஒரு சூரனா? குபேரனுக்குத் தம்பியும் சிறந்த வரபலங்களுமுள்ள நீ புருஷனைப் பிரிந்திருக்கும் ஸ்திரீயைத் திருடி வந்தனையல்லவா? அதனால் விளையும்படியான பலனை இப்பொழுது அனுபவிப்பாயாக. ஆண்மையில்லாதவனே! நீ என் முன்னிலையில் சீதையைக் கொண்டுபோக முயன்றிருப்பாயாயின் அப்பொழுதே என் பாணங்களால் அடியுண்டு உனதுடன் பிறந்தவனான கரனைக் கண்டிருப்பாய். அடா துர்ப்புத்தி! இதோ எனதுபாணங்களால் இப்போதே நீ தலைகளறுப்புண்டு யமபுரத்திற்குச் செல்லப்போகின்றனை. உனதுடலைக் கழுகுகளும் நரிகளும் தின்னப்போகின்றன" என்று கூறிக்கொண்டே ராவணன்மேல் பாண மழைகளைப் பெய்தனன். ராமனுக்கு அப்பொழுது வீரியமும் பலமும் உத்சாகமும் திவ்வியாஸ்திர பலமும் யுத்தத்தில் இருமடங்கதிகமாய் வளர்ந்தன. அவனுக்கு சமஸ்தமான திவ்வியாஸ்திரங்களும் பிரத்தியக்ஷமாகத் தோன்றின.

இத்தகைய சுபசகுனங்கள் நேர்ந்தமைபற்றி ராமன் மிகுந்த சந்தோஷமும் உத்சாகமும் அடைந்து ராவணனை

மிதமின்றித் துன்புறுத்தினன். வானரர்கள் எறியும் கற்குவியல்களாலும் ராமனுடைய பாண மழைகளாலும் அடியுண்ட ராவணன் ஏதும் தோற்றப்பெறுமல் மனதில் தடுமாற்றமுற்றனன். அப்பொழுது ராவணனுக்கு மரணகாலம் சமீபிக்கையால் அவன் பாணங்களை பிரயோகஞ் செய்து ராமனது வீரியத்தை பதில் செய்து தடுக்காமலே இருந்தனன். மற்றும் ராவணன் விடுத்த பாணங்களும் ஆயுதங்களும் அடிக்கடி தடுக்கப்பட்டு வீணாயின. ராவணன் இத்தகைய ஆபத்தான நிலைமையிலிருப்பதைக் கண்ட அவனது தேர்ப்பாகன் யுத்த பூமியினின்று தேரை மெதுவாக அப்புறங்கொண்டுபோயினன்.

நூற்றைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றாறவது ஸர்க்கம்.

## ராவணன் மனந்தெளிந்து சாரதியை விரட்டுதலும், மீண்டும் யுத்தஞ் செய்தலும்.

சிறிது நேரஞ்சென்று ராவணன் மனந்தெளிந்து கோபாவேசமுற்று சாரதியைப் பார்த்து "அடா துர்ப்புத்தீ! என்னை அற்பனைப் போலும் பயங்கொள்ளியைப் போலும் அலக்ஷியஞ்செய்து எனதபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ளாமல் உன் மனப்போக்கின்படி என் ரதத்தை பகைவர்களினிடமிருந்து ஏன் அப்புறம் ஓட்டிக்கொண்டு வந்தனை? மதிகேடனே! நான் வெகுகாலமாக சம்பாதித்த என் கீர்த்தியையும் வீரியத்தையும் 'ராவணன் யுத்தத்தில் ஓடிப்போக மாட்டான்' என்று எல்லார்க்கும் என்னிடமுண்டாயிருக்கும் நம்பிக்கையையும் நீ இப்பொழுது நாசஞ் செய்தனையே! மிகுந்த பராக்கிரமமுடைய என்னை பகைவர் பார்த்துக்கொண்டிருக்கையில் உபயோக மற்றவனாகச் செய்தனை.

துர்ப்புத்தி! நீ இங்ஙனம் மதிமயக்கங்கொண்டு தேரை அப்புறங் கொண்டுவந்ததைக் கண்டால், பகைவன் உனக்கு ஏதோ லஞ்சங்கொடுத்து உன்னைத் தன் வசஞ்செய்து கொண்டானென்று எனக்குத் தோன்றுகிறது. நீ செய்த இது நற்காரியமன்று. நீ உண்மையில் என்னிடத்தில் எஜமான விசுவாசமுடையவனுயின், பகைவன் என்மேல் விழுந்து வருவதற்கு முன்னம், ரதத்தை வேகமாகத் திருப்பி யுத்தத்திற்கு எதிர்முகமாக ஓட்டிக்கொண்டு போவாயாக" என்று படபடத்துக் கூறினன்.

ராவணன் புத்தியில்லாமல் அங்ஙனஞ் சொல்லுகையில் புத்திசாலியான அவனது சாரதி அவனை சமாதானப்படுத்த விரும்பி "நான் பயந்தவனல்லேன், மூடனுமன்று, லஞ்சம் வாங்கிக்கொண்டு பகைவருக் குட்பட்டவனுமல்லேன். ஏமாறியிருப்பவனுமல்லேன். உன்னிடத்தில் விசுவாசமில்லாதவனுமல்லேன். உனக்கு நன்மை செய்யக் கருதியே நான் தேரை ஓட்டி வந்தேன். இதைப்பற்றி நீ என்னைக் கோபிப்பது யுக்தமன்று.

வீரனே! நீ வெகுநேரம் யுத்தம் செய்தமையால் களைத்துப்போயிருந்தனை. நீ உத்சாகமற்றிருந்ததுமன்றி இந்த தேர்க் குதிரைகளும் மிகவும் இளைப்புற்றுச் சோர்ந்திருந்தன. நமக்கு எந்தெந்த சகுனங்கள் விளைகின்றனவோ அவையெல்லாம் விபரீதமாகவே எனக்குத் தோற்றுகின்றன. வீரனே! உனக்கும் இக்குதிரைகளுக்கும் இளைப்பாறுதல் உண்டாகும் பொருட்டு, சாரதி செய்யவேண்டிய கடமையை நான் செய்தேன். பிரபூ! நான் இங்ஙனஞ் செய்தது உன்னிடத்திலுள்ள நட்பின் மிகுதியாலன்றி வேறல்ல. பகைவர்களை யழிப்பவனே! நீ இப்பொழுது கட்டளையிடுவாயாக. நீ கூறியபடி செய்யச் சித்தமாயிருக்கிறேன்" என்றனன்.

இதைக்கேட்ட ராவணன் கோபந் தெளிந்து சந்தோஷ மடைந்து சாரதியைப் பலவாறு கொண்டாடி யுத்தஞ் செய்ய விரும்பி "சாரதி! தேரை ராமனுக்கு எதிர்முகமாக ஓட்டுவா பாக. யுத்தத்தில் ராவணன் பகைவனைக் கொல்லாமல் திரும்பி வரமாட்டான்" என்றனன். ராவணன் இங்ஙனஞ் சொல்லி அவனிடத்தில் சந்தோஷமுற்று அவனுக்கு அழகும் விலையுயர்ந்ததுமான ஓர் கைவளையைக் கொடுத்தனன். அடுத்த நிமிஷத்தில் சாரதி ராவணனது தேரை ராமனுக்கு எதிரில் கொண்டுவந்து நிறுத்தினன்.

நூற்றாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றேழாவது ஸர்க்கம்

## அகஸ்தியர் ராமனுக்கு ஆதித்தியஹ்ருதயம் உபதேசித்தல்.

பிறகு யுத்தத்தைப் பார்க்கும்பொருட்டு தேவதைகளோடு கூட வந்திருந்த அகஸ்திய முனிவர் ராமனையணுகி "ராமா! இதோ உனக்கு ஆதித்திய ஹ்ருதயமென்னும் ஸ்தோத்திரத்தை உபதேசிக்கிறேன். குழந்தாய்! அதைக் கொண்டு நீ யுத்தத்தில் சமஸ்த சத்துருக்களையும் ஜயிப்பாய். அது எப்படிப்பட்டவர்க்கும் புண்ணியத்தை வளரச் செய்வது; சகல பகைவர்களையும் நாசஞ்செய்வது; வெற்றியை விளைவிப்பது; அழிவில்லாத பயனைக் கொடுப்பதுமன்றி எல்லா நன்மைகளுக்கும் சாதனமாய் இருப்பது.

மனோவியாதிகளையும் தேக வியாதிகளையும் தொலைத்து ஆயுளை மேன்மேலும் வளரச் செய்யவல்லதான இந்த தோத்திரத்தைக் கேட்பாயாக. சுவர்ணத்தைப்போல் சிவந்த கிரணங்களையுடையவனும், தேவாசுரர்களால் நமஸ்கரிக்கப்பட்டவனும் சிறந்த தேஜஸ்ஸையுடையவனும், சந்திர

சூரியர்களுக்கும் ஒளியைக் கொடுப்பவனும், எல்லா உயிர்களுக்கும் ரக்ஷகனுமான பரம புருஷனை இம்மகா ஸ்தோத்திரத்தினால் பூஜித்து சந்தோஷப் படுத்துவாயாக.

ஏனெனில் சூரிய மண்டலத்தினிடையில் இருக்கின்ற இப்புருஷன் எல்லா தேவதைகளுக்கும் ஆத்துமாவாய் இருப்பவன். எல்லாஉலகங்களையும் காப்பாற்றுபவன். இவன் எல்லா உலகங்களையும் சரீரமாகவுடைய பரமாத்துமாவாகையால் இவனே பிரமன், விஷ்ணு, சிவன், குமாரன், பிரஜாபதிகள், இந்திரன், குபேரன், யமன், சந்திரன், வருணன், பிதிர் தேவதைகள், அஷ்டவசுக்கள், வாயு, அக்கினி முதலியவர்களுக்கும் மற்றுமுள்ள எல்லா பிராணிகளுக்கும் பிராணவாயுவும் வஸந்தாதி ருதுக்களையுண்டுபண்ணும் பிரபாகரனுமாவான்.

"நீ அதிதிக்குப் பிள்ளையாகப் பிறந்த சகல ஜகத்துக்கும் ரக்ஷகனான பிரபு. உலகத்தையெல்லாம் படைப்பவன்; ஜனங்களைச் செயல்களில் தூண்டுமவன்; உலகத்திலுள்ள அசையும் பொருள்களுக்கும் அசையாத பொருள்களுக்கும் அந்தராத்துமாவாக இருப்பவன். உலகின் உபகாரத்திற்காக சூரியனாகி வெளிச்சங் கொடுத்துக்கொண்டு ஆகாயத்தில் உலாவுகின்றனை. நீ மழை பெய்து லோகங்களையெல்லாம் போஷிப்பவன்; சிறந்த கிரணங்களையும் பொன்போன்ற நிறத்தையும் சுவர்ண மயமான ரேதஸ்ஸையுமுடையவன். பகலில் பிராணிகளின் சேஷ்டையை நடத்துமவன்; பச்சைக் குதிரைகளமைந்தவன்; ஆயிரங் கிரணங்களையுடையவன்; ஏழு குதிரைகளையுடையவன்; மிகுந்த பிரகாசத்தினால் இருளை நீக்கி சுகத்தை விளைப்பவன். படைத்தல், காத்தல், அழித்தல் இம்மூன்றையும் நீயே செய்பவன்; பிராணிகளிடத்தில் இரக்கமுடையவன்; சங்காரத்தில் விளைகிற துக்கங்களினால் வருந்துமவர்களுக்குக் குளிர்ந்து இளைப்பாறு

மிடமாய் இருப்பவன்; அவர்களது விரோதிகளைத் தொலைத்து க்ஷேமத்தை யுண்டுபண்ணுமவன்; இங்ஙனம் சிறந்த உபகாரஞ் செய்பவனாதலால் அனைவராலும் புகழப் படுந் தன்மையன்; பகலில் அக்கினியை உள்ளே உடையவன்; அதிதியின் பிள்ளையாய்ப் பிறந்தவன்; சாயங்காலத்தில் அஸ்தமிக்கும் தன்மையன்; பனியைப் போக்குமவன்; நீ ஆகாயத்திற்கு நாயகன் (பரமாகாசமெனப்படுகிற பரமபதத்திற்கு நாதன்) நான்கு வேதங்களின் கரையறிந்தவன்; ஆகாயமார்க்கத்தில் மிகுந்த வேகமாகச் செல்பவன்; தக்ஷிணாயனத்தில் விந்தியத்தின் வழியாய் சஞ்சரிப்பவன்; வெயில் காயுந்தன்மையன்; உதிக்கும்பொழுது பொன் நிறமுடையவன்; நடுப்பகலில் அனைவரையும் தபிக்கச் செய்பவன்; வியாகரணம் முதலிய சகல சாஸ்திரங்களையும் நடப்பித்தவன்; அனைவரும் சம்சாரத்தை அனுபவிப்பதற்குக் காரணமாய் இருப்பவன்; நக்ஷத்திரங்கள், கிரகங்கள், தாரகைகள் இவற்றிற்கு அதிபதி. நீ உலகத்தையெல்லாம் நிலைநிறுத்தும் தன்மையன்; நீ அக்கினி முதலிய ஒளிகளைக் காட்டிலும் சிறந்த ஒளியுடையவன்; நீ பன்னிருமூர்த்திகளையுடையவன். இப்படிப்பட்ட உனக்கு வணக்கம். உதயகிரியிலுள்ள உனக்கு வணக்கம். அஸ்தமய பர்வதத்தைச் சேர்ந்த உனக்கு வணக்கம். சோதிமயமான பதார்த்தங்களுக்கும் பகலுக்கும் அதிபதியான உனக்கு வணக்கம். வெற்றியையும் க்ஷேமத்தையும் விளைவிப்பவனான உனக்கு வணக்கம். பச்சைக் குதிரைகளையும் ஆயிரம் கிரணங்களையுமுடைய ஆதித்தியனுக்கு வணக்கம். தன்னைப் பற்றாதவர்களுக்கு பயங்கரமாய் இருக்கிற உனக்கு வணக்கம். பிராணிகளைப் பலவாறு தூண்டுகிற உனக்கு வணக்கம். நிகரில்லாத வேகமுடைய உனக்கு அடிக்கடி வணக்கம். தாமரை மலர்களை மலரச்செய்யு முனக்கு வணக்கம். படைத்தல் காத்தல் அழித்தல் இவற்றைச்செய்

பவரான பிரமன், விஷ்ணு, சிவன் இவர்களுக்கு பிரபுவான உனக்கு வணக்கம். பிரம ருத்திரர்களை எப்படிப்பட்ட ஆபத்திலும் கைவிடாமல் பாதுகாத்து வருகிற உனக்கு வணக்கம்.

ஆதித்தியன் எனப்படுகிற சூரியனாகிற தேஜஸ்ஸை நியமிக்கிற உனக்கு வணக்கம். தன்னைப்பற்றினாருடைய பகைவர்களை யழிக்கவல்ல உனக்கு வணக்கம். அளவிட முடியாத சொரூபத்தையுடைய உனக்கு வணக்கம். ஜீவன்களைப் போல் புண்ணிய பாபங்களுக்குத் தகுந்தபடி சுகதுக்கங்கள் அனுபவிப்பதின்றி எப்பொழுதும் ஒளி குன்றாமல் விளங்கும் உனக்கு வணக்கம். அக்கினியின் மூலமாய் யாகங்களில் ஹவிஸ்ஸைப் பெறுகிற உனக்கு வணக்கம். தன்னைப்பற்றினாருடைய அஞ்ஞானமாகிற அந்தகாரத்தைப் போக்குந்தன்மையுடைய உனக்கு வணக்கம். ஜனங்கள் செய்கிற புண்ணிய பாப கருமங்களுக்கு சாக்ஷியாயிருக்கிற உனக்கு வணக்கம்.

இவனே மகா பிரளயத்தில் உலகத்தை நாசஞ்செய்பவன், மீளவும் அதை உண்டாக்கிப் பாதுகாப்பவன். இவன் கிரணங்களால் உலரச்செய்து மழையைப்பெய்து வெயிலைக் காய்ந்து சகல பிராணிகளும் உறங்கும்போதும் அவற்றில் உள்ளுறைந்து நிலை நின்று விழித்துக்கொண்டிருப்பான். வேதங்களும் யாகங்களும் யாகங்களின் பயனும் இவனே.

ராமா! எவ்வித கஷ்டங்கள் வந்தபோதிலும் எவன் இந்த தோத்திரத்தைச் சொல்வானோ அவன் கெடுதியில்லாமல் சுகம் பெறுவான். உன் மனதை நிலை நிறுத்தி தேவ தேவனும் ஜகந்நாதனுமான இந்த தேவனை இதனால் பூஜிப்பாயாக. இந்த தோத்திரத்தை மூன்று தரம் ஜபிப்பாயாயின் யுத்தங்களில் வெற்றி பெறுவாய். நீண்ட கைகளையுடையவனே! இக்கணமே நீ ராவணனைக் கொல்வாய்" என்றனர். இங்ஙனம் அகஸ்தியர் மொழிந்து தான் வந்த வழியே போயினார்.

அப்பொழுது ராமன் மிகவும் சந்தோஷமுற்றுப் பரிசுத்தமான மனதுடன் ஆதித்திய ஹிருதய ஸ்தோத்திரத்தை மூன்றுதரம் ஜபித்து ஆசமனஞ்செய்து வீரியம் மிகப்பெற்று வில்லை ஏந்தித் தீரனாக யுத்தத்திற்கு நின்றனன். உடனே ராமனது ஸ்தோத்திரத்தினால் சந்தோஷமடைந்த ஆதித்தியன் ஆகாயத்திலுள்ள தேவக் கூட்டங்களிடையில் நின்று "சீக்கிரம் ராவணனைக் கொல்வாயாக" என்று ராமனுக்குச் சொல்லினன்.

நூற்றேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றெட்டாவது ஸர்க்கம்.

## ராவணனுக்கு மரணத்தை அறிவிக்கும்படியான அவசகுனங்கள் தோற்றுதல்.

அப்பொழுது ராவணனது சாரதி மிகுந்த உத்சாகத்துடன் தேரை ராமனுக்கு எதிர்முகமாக ஓட்டிக்கொண்டு வந்தனன். அப்பொழுது ராமன் இந்திர சாரதியான மாதலியை நோக்கி "மாதலி! அதோ ராவணனது ரதம் வேகமாக வருகின்றது பார். அந்த ராவணன் மிகுந்த வேகத்துடன் அப்பிரதக்ஷிணமாக வருகின்றானாகையால் அவன் இன்று யுத்தத்தில் மரணமடைவது நிச்சயமென்று தோன்றுகிறது. ஆகையால் நீ ஏமாறுதலின்றி நமது ரதத்தை அப்பிரதக்ஷிணகதியின்றி, பகைவனுக் கெதிர்முகமாக ஓட்டிச் செல்வாயாக. நீ ஊக்கத்துடன் ஜாக்கிரதையாக ரதத்தைச் செலுத்துவாயாக. சீக்கிரத்தில் இவனை முடித்துவிடுகிறேன்" என்று மொழிந்தனன். மாதலியும் அங்ஙனமே மனவூக்கத்துடன் ரதத்தைச் செலுத்தினன்.

அப்பால் ராவணன் தன் ரதத்திற்கு எதிர்முகமாக வந்து நின்ற ராமனைப் பாணங்களாலடித்தனன். ராமன் மாதலி கொணர்ந்து கொடுத்த இந்திரனது வில்லையும் சூரியன்

போன்ற பாணங்களையும் எடுத்துக்கொண்டனன். அப்பொழுது அவ்விருவர்க்கும் மிகவும் பயங்கரமான யுத்தம் நடந்தது. அச்சமயம் ராவணனுக்குத் தோல்வியை விளைவிப்பனவான பல கெட்ட சகுனங்கள் தோன்றின.

ராவணனது ரதத்தின் மேல் மேகங்கள் ரத்தமழையைப் பொழிந்தன. உஷ்ணமான சுழற்காற்றுக்கள் அவனது ரதத்தைச் சுற்றி அப்பிரதக்ஷிணமாக வீசின. பெரிய கழுகுகள் ராவணனது ரதம் எவ்வெப்படிபோகுமோ அந்த மார்க்கத்தை யெல்லாம் தொடர்ந்து சென்றன. இடிகளுடன் கூடிப் பெருங்கொள்ளிகள் பேரிரைச்சலுடன் ஆகாயத்தினின்றும் விழுந்தன. ராவணன் எங்கே இருந்தானே! அந்த இடத்தில் பூமி நடுங்கிற்று. நரிகள் கழுகுகளால் பின்தொடரப்பெற்று வாயில் நெருப்பைக் கக்கிக்கொண்டு ராவணனது முகத்தைப்பார்த்து விரைந்து அவசகுனமாக ஊளையிட்டன. யுத்தத்தில் காற்று கிளம்பி ராவணனுக்குக் கண்கள் தெரியாதபடி தூள்களை இறைத்துக்கொண்டு பிரதிகூலமாக வீசிற்று. மேககர்ஜனை யில்லாமலே ராவணனது சைன்னியம் முழுவதிலும் பயங்கரமான சத்தத்துடன் கூடின உல்காசனி யென்னும் சில இடிகள் வீழ்ந்தன. திசைகள் முழுமையும் இருள் மூடப்பெற்றன. சாரிகை என்னும் பறவைகள் பயங்கரமாகக் கூச்சலிட்டுக்கொண்டு ராவணனுடைய ரதத்தின்மேல் கூட்டங் கூட்டமாய் வீழ்ந்தன. ராவணனது குதிரைகள் பின்புறங்களினின்று நெருப்புப் பொறிகளையும் கண்களினின்று நீர்களையும் பெருக்கின. இங்ஙனம் ராவணனுக்கு பயங்கரமும் குரூரமுமான கெட்ட சகுனங்கள் தோன்றின.

ராமனுக்கு வெற்றியை விளைவிக்கக்கூடிய சுபமான சகுனங்கள் தோன்றின. அதனால் ராமன் மிகுதியும்

சந்தோஷமடைந்து உத்சாகத்துடன் யுத்தத்தில் அதிகமாகப் பராக்கிரமத்தைக் காட்டத் தொடங்கினன்.

நூற்றெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்றென்பதாவது ஸர்க்கம்.

ராமன் ராவணனது துவஜத்தைச் சேதித்தல்.

அப்பால் அந்த ராம ராவணர்களிருவருக்கும் எல்லா உலகங்களுக்கும் பயத்தை விளைவிக்கக்கூடிய பயங்கரமான யுத்தம் நடந்தது. அவ்விருதிறத்து சேனாஜனங்களும் கைகளில் பலவகை ஆயுதங்களைத் தரித்து யுத்தஞ்செய்ய முயன்றும், அவ்விருவர்க்கும் நடந்துகொண்டிருக்கிற அம் மகாயுத்தத்தைப் பார்த்து புத்தியில் மிகவும் ஆச்சரியமடைந்து ஒருவர்மேலொருவர் எதிர்க்காமல் அதையே பார்த்துக்கொண்டிருந்தனர். ராக்ஷசர்களின் சைன்னியம் ராவணனையும் வானர சைன்னியங்கள் ராமனையும் பார்த்துக் கொண்டு ஆச்சரியத்தினால் கண்ணிமை கொட்டுதலையும் மறந்து அசையாதிருக்கையால் சித்திரத்தில் எழுதப் பட்டவைபோல் புலப்பட்டன.

அப்பொழுது ராமன் தனக்கு தப்பாமல் வெற்றி உண்டாகுமென்றும், ராவணன் தனக்கு தப்பாமல் மரணம் நேருமென்றும் தம்தமக்குத் தோன்றின சகுனங்களினால் நன்கு நிச்சயித்துக்கொண்டு தைரியத்தைக் கைப்பற்றித் தமது பராக்கிரமங்களை யெல்லாம் காண்பித்தனர். அப்பால் ராவணன் ராமனது தேரின் துவஜத்தின்மேல் பாணங்களை விடுத்தனன். அது தேவேந்திரனுடைய ரதசக்தியால் அடியுண்டு அதிலுள்ள துவஜத்தின்மேல் படாமலே பூமியில் வீழ்ந்தன. உடனே ராமன் ஒப்பற்ற ஓர் கொடிய பாணத்தை ராவணனது துவஜத்தின்மீது விடுத்து அதைத் தவறாமல் முறித்துக் கீழே விழத்தள்ளினன்.

ராவணன் மிகவுங் கோபங்கொண்டு ராமனது தேர்க் குதிரைகளை ஜ்வலிக்கின்ற பாணங்களாலடித்துத் துன்புறுத்தினன். ஆயினும் அப்பச்சைக் குதிரைகள் அவற்றாற் சிறிதும் வருத்தமுறாமல் சுகமாகவே நடந்து சென்றன. இதைக்கண்ட ராவணன் சிறிதும் பொறுக்கமுடியாமல் கதைகளையும் இரும்புத்தடிகளையும் உலக்கைகளையும் மலைச்சிகரங்களையும் மரங்களையும் சூலங்களையும் கண்டக்கோடாலிகளையும் ராமன்மேல் ஓயாமல் பிரயோகித்தனன். அவை ஒன்றும் தவறாமல் ராமனது பாணங்களால் தடுக்கப்பட்டு வீணாயினவேயன்றி ராமனை யணுகவேயில்லை.

அப்பால் ராவணன் மனம் தாளாமல் கோடிக்கணக்கான கூர்மைபொருந்திய பாணங்களை ராமன்மேல் ஓயாமல் பொழிந்தனன். ராமன் மிக எளிதில் அவற்றை யெல்லாம் அப்பொழுதைக்கப்பொழுது தனது வேகமான பாணங்களை விடுத்துத் தடுத்துச் சிதைத்தனன். இங்ஙனம் அவ்விருவரும் ஒருவர்மேலொருவர் விடுத்த பாணக்கூட்டங்கள் ஆகாயம் முழுவதும் நிறைந்து இருளை உண்டாக்கியது. ஒரு முகூர்த்த காலம் மயிர்க்கூச்சல் உண்டாகும்படி அவ்விருவர்க்கும் அற்புதமான துமுலயுத்தம் நடந்தது. அப்பொழுது ராவணன் தனது தேரின் துவஜம் ராமபாணத்தினால் முறிந்தமைபற்றிக் கோபாவேசமுற்றனன்.

நூற்றொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பத்தாவது ஸர்க்கம்.

### மேன்மேலும் முளைக்கின்ற ராவணன் தலைகளை ராமன் நூற்றொருதடவை துண்டித்தல்.

அங்ஙனம் அந்த ராம ராவணர்களிருவரும் கணக்கற்ற பாணங்களை ஓயாமல் விட்டுக்கொண்டிருக்கையில் அவர்

களுடைய ரதங்களிரண்டும் யுத்த பூமியில் விடாமழை பெய்யும் மேகங்கள்போல் விளங்கின. அப்பொழுது அவ்விருவர் ரதங்களும் ஒன்றுக்கொன்று ஏர்க்கால் ஏர்க்காலோடும், குதிரைகளின்முகம் குதிரைகளின் முகத்தோடும் பதாகைகள் பதாகைகளோடும் கலந்திருக்கும்படி நின்றன. அப்பால் ராமன் நான்கு கொடிய பாணங்களைத்தொடுத்து ராவணனது குதிரைகள் நான்கையும் அப்புறம்போகத் துரத்தினன்.

ராவணன் கோபங்கொண்டு கொடிய பாணங்களால் சாரதியான மாதலியை அடித்தனன். அம்மாதலி அதனுல் சிறிதும் மோகத்தையாவது நோயையாவது அடையவில்லை. ராமன் அங்ஙனம் மாதலியை யடித்ததற்கு ராவணன்மேல் கோபித்து கணக்கற்ற பாணங்களை விடுத்து ராவணனைத் தன்னெதிரில் நிற்கவொட்டாமல் சிறிது அப்புறம் தொலையச் செய்தனன்.

அப்பொழுது அவ்விருவர்க்கும் நடந்த பயங்கரமான யுத்தத்தின் காரணமாக ஏழுசமுத்திரங்களும் கலக்கமுற்றன. பாதாளத்தில் வசிக்கும் உரகர்களும் (நாகர்கள்) தானவர்களும் மிகவும் திகிலடைந்தனர். பூமியெல்லாம் நடுக்கமுற்றது. சூரியனும் ஒளிமழுங்கினன். காற்றும் வீசவில்லை. அப்பொழுது தேவதைகளும் ரிஷிகளும் "பசுக்களுக்கும் பிராமணர்களுக்கும் க்ஷேமம் உண்டாகுக. உலகங்கள் நித்தியமாய் இருக்குமாக. ராமன் ராவணனைக்கொல்வானுக." என்று ஜபம் செய்தனர். பின்னுமவர்கள் அம்மகாயுத்தத்தைக்கண்டு "ஆ! இந்த ராம ராவண யுத்தத்திற்கு நிகராயிருப்பது இந்த ராமராவண யுத்தமேயன்றி வேறில்லை" என்றுகூறி அந்த யுத்தத்தையே பார்த்துக்கொண்டிருந்தனர்.

அப்பொழுது ராமன் கோபித்து கொடிய சர்ப்பம் போன்றதும் கத்திபோன்ற நுனியுடையதுமான பாணத்தை வில்லில் தொடுத்து ஒளியுடன் விளங்குகின்ற குண்டலங்கள்

திகழப்பெற்ற ராவணனது தலையைத் துண்டித்தனன். அப்பொழுது அந்த தலை பூமியில் விழுகையில் மூன்று உலகங்களும் கண்டன. அந்தத் தலையைப்போலவே மற்றொரு தலை ராவணனுக்கு முளைத்தது. ராமன் மீண்டும் அந்தத் தலையைத்துண்டித்தனன். மறுபடியும் மற்றொருதலை ராவணனுக்கு முளைத்தது. அதையும் ராமன் வஜ்ரப்போன்ற பாணங்களால் துண்டித்தனன். இங்ஙனம் தலைகள் ஒன்றைப் போலவே மற்றொன்று புலப்படுவதாகி முளைத்துக்கொண்டிருக்கையில் நூற்றொரு தலைகளை ராமன் நூற்றொருதடவைகள் துண்டிக்கினும் ராவணனது பிராணன் நசிக்குமென்கிற நிச்சயம் சிறிதும் தோன்றவில்லை.

அப்பொழுது ராமன் "ஆ! எந்த பாணங்களால் மாரீசனையும் கர தூஷணர்களையும் விராதனையும் கபந்தனையும் கொன்றேனோ, யுத்தத்தில் எப்பொழுதும் வீணாகாத அப்படிப்பட்ட மேலான பாணங்கள் இப்பொழுது ராவணனிடத்தில் அற்ப சக்தியுடையனவாகி வீணாகுவதற்குக் காரணம் என்னவோ தெரியவில்லை." என்று சிந்தித்து வருத்தமுற்றனன்.

அப்பொழுது ராவணன் ராமன்மேல் கதைகளையும் உலக்கைகளையும் எறிந்து துன்புறுத்தினன். அங்ஙனம் ராமராவணர்கள் திரிகூட பர்வத சிகரத்தின் நுனியில் ஒருவர்மேலொருவர் பாய்ந்து கோபத்தினால் ரதங்களோடு கூட ஆகாயத்திற்குக் கிளம்பியும் பூமிக்குக்குதித்தும் போராடிக்கொண்டிருக்கையில் அந்த யுத்தம் காண்போர்க்கு மயிர்க் கூச்சலை விளைவித்து பயங்கரமாகி இரவும் பகலும் ஓயாமல் நடந்தது. இரவிலாவது பகலிலாவது ஒருமுகூர்த்தமாயினும் ஒரு க்ஷணமாயினும் அவர்களது யுத்தம் சிறிதும் ஓயவில்லை.

நூற்றுப் பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்றுப் பதினோராவது ஸர்க்கம்.

## ராமன் பிரமாஸ்திரத்தினல் ராவணனைக் கொல்லுதல்.

அப்பொழுது மாதலி ராமனைப் பார்த்து "வீரனே! ராவணன் மானிடனல் கொல்லப்படுவானென்று தேவதைகள் மொழிந்த காலம் இதோ வந்தது. ஆகையால் இவனைப் பிரமாஸ்திரத்தைப் பிரயோகித்துக் கொல்லுவாயாக" என்றனன். உடனே ராமன் தகதகவென்று ஜ்வலிப்பதும் மூச்செறிகின்ற சர்ப்பம்போல் புலப்படுவதுமான அந்த திவ்விபாஸ்திரத்தை எடுத்துக்கொண்டனன். அகஸ்திய முனிவன் முதலில் பிரமதேவனல் தன்னிடம் கொடுக்கப்பட்டதும் யுத்தத்தில் வீரைகாததுமான அம்மகா பாணத்தை ராமனுக்குக் கொடுத்தனன். இது பிரமதேவனல் முன்பு இந்திரனுக்காக நிருமிக்கப்பட்டது. இதன் இறகுகளில் வாயுதேவனும் நுனியில் சூரியாக்கினிகளும் அதிதேவதைகளாக விருப்பார்கள். அந்த பாணம் பலவகை ராக்ஷசர்களின் ரத்தத்தில் நனைந்து ரத்தக்கறைகள் படியப்பெற்றதும் மிக பயங்கரமாய் இருப்பதும் வஜ்ஜிராயுதம் போல் மிகவும் திடமாகிப் பலவகைக் கபட யுத்தங்களையும் அடக்கும் தன்மையுள்ளது. அது வானர வீரர்களுக்கு சந்தோஷத்தையும் ராக்ஷசர்களுக்கு விநாசத்தையும் விளைவிப்பதும் அழகு பொருந்தி விசித்திரங்களும் பலவகையுமான கருடப்பறவையின் இறகுகள் கட்டப்பெற்றதுமாய் இருந்தது

ராமன் அந்த மேலான பாணத்தையெடுத்து விதியின்படி அபிமந்திரித்து வில்லில் தொடுத்தனன். ராமன் அதை வில்லில் தொடுக்கையில் எல்லா பூதங்களும் திகிலடைந்தன. பூமியும் நடுக்கமுற்றது. அப்போது ராமன் மிகுந்த மனவூக்கத்துடன் வில்லைக் காதளவும் இழுத்து ராவணன்மேல் பிரயோகித்தனன். அந்த திவ்வியாஸ்திரம் இந்திரனது வஜ்ஜிராயுதம்போலும் பிரளயகாலத்து யமன்போலும் தடுக்க முடி

யாததாகி ராவணனுடைய மார்பில் பாய்ந்து அவனுடைய இருதயத்தைப் பிளந்தது. பின்னும் அது ராவணனது பிராணனைப் பறித்துக்கொண்டு ரத்தம்பட்டு நனைந்து வெளிப் புறப்பட்டு பூமியில் பிரவேசித்தது. அது மீளவும் ராமனது அம்பறுத்தூணிக்கு வந்து சேர்ந்தது.

ராவணனது கை வில் நழுவியது. ராவணன் வஜ்ஜிராயுதத்தினால் அடியுண்டு மாண்ட விருத்திராசுரன்போல் பூமியில் வீழ்ந்தனன். இங்ஙனம் ராவணன் முடிந்தமையால் ராக்ஷசர்கள் பயந்து நான்கு திசைகளிலும் ஓடினர். வானரர்களால் பின் துரத்தப்பட்ட அவ்வரக்கர்கள் மிகுந்த பயத்துடன் காண்போர்க்குக் கருணையை விளைக்கின்ற முகமுடையவராகி லங்கையை நோக்கி ஓடினர்.

அப்பால் வானரர்கள் ராமனது வெற்றியைக் கொண்டாடி மிகுந்த சந்தோஷத்துடன் சிம்மநாதங்களைச் செய்தனர். ஆகாயத்தில் மங்களகரமான தேவதுந்துபி வாத்தியம் முழங்கிற்று. அங்குக் காற்று திவ்வியமான வாசனையுடன் சுகமாக வீசிற்று. ஆகாயத்திலிருந்து ராமனுடைய ரதத்தின்மேல் அழகிய புஷ்ப மழையானது முழுவதும் சிதறி வீழ்ந்தது. தேவதைகளெல்லாரும் கலக்கமற்றுத் தெளிவு பெற்றனர். ஆகாயம் நிர்மலமாகி பூமியும் நடுக்கமற்று காற்றும் சுகமாக வீசியது. சூரியனும் மிகுந்த ஒளியுடன் பிரகாசித்தனன்.

பிறகு சுக்கிரீவன் விபீஷணன் முதலியோர் ஜாம்பவான் முதலிய நண்பர்களுடனும் லக்ஷ்மணனுடனும் கூடி ஜயலக்ஷ்மியுடன் மனோகரமாய் விளங்குகிற ராமனைத் தகுந்த வகைகளால் பூஜித்தனர். ஆகாயத்தில் தேவதைகளும் மகரிஷிகளும் ராமனை 'நல்லது, நல்லது' என்று கூறிக் கொண்டாடினர். ராமன் யுத்தத்தில் விரோதியைக் கொன்று தன் பிரதிக்ஞையை நிறைவேற்றினன். லக்ஷ்மணன், வானர

சைன்னியங்களால் சூழப்பெற்று தேவகணங்களால் சூழப் பட்ட தேவேந்திரனைப்போல் பிரகாசித்தனன்.

நூற்றுப் பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப் பன்னிரண்டாவது ஸர்க்கம்.

### ராவணனைப்பற்றி வருந்துகிற விபீஷணனை ராமன் சமாதானப் படுத்துதல்.

அங்ஙனம் யுத்தத்தில் ராமபாணத்தினால் பிராணனை யிழந்த ராவணனைக் கண்டு விபீஷணன் வருத்தத்தினால் புலம்பத் தொடங்கி "வீரனே! சகல சாஸ்திரங்களையும் கற் றுணர்ந்தவனே! நீ ஏன் இங்ஙனம் பூமியில் விழுந்துகிடக் கின்றனை? நான் முன் உனக்கு எடுத்துரைத்த நல்ல வார்த்தை களை நீ கேட்காமல் போனதாலல்லவா உனக்கு இப்பொழுது இக்கதி நேர்ந்தது. உனது மந்திரிகளும் நண்பர்களும் கொழுப்பினால் சிறிதும் ராமனை லக்ஷியம் செய்யாமல் உனக் குத் தகுந்த புத்தி சொல்லாமல் போனதனாலல்லவா அவர்க ளுக்கும் உனக்கும் விநாசம் ஏற்பட்டது. ஐயோ! மிகுந்த பல முடையவன் போயினன். ஆயுதம் பிடித்தவர்களனைவரினும் மேன்மையுற்ற ராவணன் போயினன். வீரர்களில் சிறந்த எனதண்ணன் தரையில் வீழ்கையால் சூரியனே பூமியில் விழுந்தாற்போலிருக்கிறது. சந்திரன் இருட்டில் மூழ்கினாற் போலிருக்கின்றது. அக்கினி அணைந்தாற்போலாயிற்று. இணையில்லாத பராக்கிரமமுடைய இவ்வீரன் இறந்த பிறகு இப்பிரபஞ்சத்தில் என்ன மிகுந்திருக்கின்றது? எல்லாம் சூனியமாகவே தோன்றுகிறது.

ஐயோ! ராவணனென்னும் மதயானை ராமனென்னும் சிம்மத்தினால் கொன்று வீழ்த்தப்பட்டது. ராவணனென் னும் காளை ராமனென்னும் புலியால் அடிபுண்டு மாண்டது"

என்று புலம்பினன். இங்ஙனம் வருத்தத்தினால் புலம்புகின்ற விபீஷணனைப் பார்த்து ராமன் "இந்த ராவணன் பராக்கிரமத்தைக் காட்டாமல் யுத்தத்தில் பயங்கொள்ளி போல் நாசம் அடையவில்லை. சிறந்த வீரத்தன்மையுடனும் உத்சாகத்துடனும் இவன் சண்டை செய்து உயிர் துறந்தனன். இங்ஙனம் மாண்ட அவன் வீரசுவர்க்கம் அடைந்தானாகையால் அவனைப்பற்றி துக்கிப்பது சரியல்ல. இவ்விஷயம் சாஸ்திரத்தில் நன்கு கூறப்பட்டிருக்கின்றது.

வீரனாயிருப்பவன் யுத்தத்தில் பகைவர்களையாவது கொல்வான். பகைவர்களால் தானாவது மாண்டுபோவான். அவனுக்கு இரண்டும் சமமே. விபீஷணா! ஆகையால் நீ க்ஷத்திரிய தருமத்தை ஆலோசித்து இங்ஙனம் யுத்தத்தில் வீரத்துடன் எதிர்த்து மாண்டு வீரசுவர்க்கமடைந்த உனதண்ணனைப்பற்றி துக்கப்படாமல், இனிமேல் நடக்கவேண்டிய காரியத்தைக் குறித்து ஆலோசிப்பாயாக" என்றனன்.

இங்ஙனம் ராமன் கூறக்கேட்ட விபீஷணன் ராமனை நோக்கி "ராவணன் இதற்குமுன் பலதடவை தேவேந்திரனை எதிர்த்தும் தோல்வியடைந்தவனல்லனாகையால் மகாவீரன். இவன் பல தருமங்களைச் செய்து குருதேவதாதிகளை நன்கு பூஜித்தவன். எல்லா சுகங்களையும் அனுபவித்து நண்பர்களுக்கு அளவற்ற ஐசுவரியங்களைக் கொடுத்தவன். பகைவர்களைத் தவறாமல் அடக்கும் தன்மையன். மற்றும் இவன் அக்கினியில் தவறாமல் ஓமத்தை நிறைவேற்றி சிறந்த தவங்களைச் செய்து வேதாந்தங்களையெல்லாம் நன்கறிந்தவன். இப்படிப்பட்ட மேலான பாராக்கிரமங்களையுடைய இவனது மரணச் சடங்குகளை உனது அருள் பெற்றுச் செய்ய விரும்புகிறேன்" என்றனன்.

இங்ஙனம் விபீஷணன் மன இரக்கம் உண்டாகும்படி சொல்லுகையில் ராமன் 'மரணம் வரையிலுமே விரோதம்

இருக்குமேயல்லது அதன் பிறகு விரோதமிருக்க நியாய மில்லை; நாம் எதிர்பார்த்தது நிறைவேறிவிட்டதாகையால் இனி இவனுக்கு மரணச்சடங்குகளை நடத்துவாயாக. இவன் எப்படி உனக்கு உடன் பிறந்தவனோ, அப்படியே எனக்கும் உடன் பிறந்தவனன்றி வேறல்லன்' என்றனன்.

நூற்றுப் பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப் பதின்மூன்று & நூற்றுப் பதினான்காவது ஸர்க்கம்.

## ராவணனது மனைவிகள் புலம்புதலும், விபீஷணன் ராவணனுக்கு தகனச்சடங்கு செய்தலும்.

ராம பாணத்தினால் ராவணன் மாண்டொழிந்ததைக் கேட்ட ராவணனது மனைவிமார்கள் சோகத்தினால் வருந்தி பூமியில் விழுந்து புரண்டு தலைமயிர்களை விரித்துக் கன்றுகளை யிழந்த பசுக்கள்போல் துக்கத்தினால் புலம்பிக்கொண்டு அந்தப்புரத்தினின்று புறப்பட்டனர். அவர்கள் பயங்கர மான யுத்த பூமியில் நுழைந்து களிற்றையிழந்த பிடிகளைப் போல் கதறியவண்ணம் யுத்த பூமி முழுவதும் ராவணனைத் தேடித்திரிந்தனர். பிறகு ராவணனது உடலைக் கண்டு மிகவும் பரிதபித்தனர்.

அவர்களில் ஒருத்தி பிரீதியின் மிகுதியினால் ராவணனை யணைத்துக்கொண்டு ரோதனஞ்செய்தனள். மற்றொருத்தி அவனது பாதங்களில் நன்றாக விழ்ந்தும் வேறொருத்தி அவன் கழுத்தை ஆலிங்கனஞ் செய்து கொண்டும் புலம்பினர். ஒருத்தி ராவணனது முகத்தை யெடுத்து மடிமீதிருத்தி அதை உற்றுப் பார்த்து பன்னீர்களால் தாமரை மலரை நனைப்பதுபோல் கண்ணீர்களால் அதை நனைத்துக்கொண்டே ரோதனஞ் செய்தனர்.

பின்னும் அவர்கள் "ஐயோ! எவனுக்கு தேவேந்திரனும் யமனும் குபேரனும் பயந்து நடுங்கினரோ, அப்படிப் பட்ட வீரன் இதோ அடிபட்டு பூமியில் வீழ்ந்திருக்கின்றனே! தேவதைகளிடமிருந்தாவது அசுரர்களிடமிருந்தாவது எவன் இதுவரை பயம் என்பதை அறியானோ அப்படிப் பட்ட சூரன் கேவலம் ஓர் மானிடனால் கொல்லப்பட்டனனே! இதென்ன ஆச்சரியம்!" என்று புலம்பினர்.

பின்னுமந்த ராக்ஷச ஸ்திரீகள் அவனை நோக்கி "ஐயோ! உனக்கு நல்லது சொன்ன விபீஷணன் முதலியோருடைய வார்த்தைகளைக் கேளாமல் போயினையே! நீ சீதையை ராமனுக்குத் திருப்பிக் கொடுத்திருப்பாயாயின் இப்பொழுது ராக்ஷசர்களுக்கும் உனக்கும் இத்தகைய துன்பம் விளையாதிருக்குமல்லவா? ஐயோ! ராக்ஷசோத்தமனே! இதெல்லாம் நீ மனம் போனபடி செய்த காரியங்களால் நீயே வரவழைத்துக் கொண்டனையன்றி வேறில்லை. எல்லாம் தெய்வச் செயலேயன்றி வேறில்லை" என்று புலம்பி பின்னும் ராவணனது பராக்கிரமங்களைப் பற்றியும் கூறி அழுதனர்.

பிறகு ராவணனுக்கு மிகவும் பிரியமாயிருப்பவளும் மூத்தமனைவியுமான மண்டோதரி ராவணனைக்கண்டு "ஐயோ! மகா பாக்கியமுடையவனே! நீ கோபித்துக் கண் சிவக்கப் பெறின் உன்னெதிரில் நிற்பதற்கு தேவேந்திரனும் ரிஷிகளும் கந்தருவர்களும் திகில் படுவது வெளிச்சமேயல்லவா? இப்படிப்பட்ட சூரனை உன்னை கேவலம் மானிடனை ராமன் கொல்ல நேர்ந்ததே! ராஜனே! இதற்கு நீ வெட்கமுறுமலிருக்கின்றனையே! அந்த ராமன் கேவலம் மானிடனல்லனென்று நிச்சயமாகத் தோன்றுகின்றது.

எவர்க்கும் புக முடியாத இவ்விலங்கைக்கு அணைகட்டி வந்தபொழுதே நான் ராமன் கேவலம் மானிடனல்லனென்று நினைத்தேன். அப்படியில்லையாயின் யமனே உன்னைக் கொல்

லும் பொருட்டு அளவில்லாத ரூபலாவண்யங்கள் நிறைந்த சீதையென்னும் மாயையைச் செய்து மானிட ரூபம் தரித்து உன்னை எதிர்த்து வந்திருப்பான். சிறந்த பலசாலியும் லக்ஷ்மிக்கு நாதனும் சங்கு சக்கரம் கதை வாள் முதலிய ஆயுதங்களைத் தரித்தவனுமான பரம புருஷனே தான் ராமனாக வந்திருக்க வேண்டும். அன்றி இந்திரன் முதலிய மற்று எவரும் உன்னைச் சிறிதும் எதிர்த்துவரக் கூடியவரல்லர்.

ஐயோ! ராக்ஷசர் தலைவனே! விஷ்ணுதேவனே தேவதைகளுக்கு உதவி செய்யும்பொருட்டு ராமனாகப்பிறந்து உன்னைக் கொன்றனன். இதுவே நிச்சயம். நீ முன்பு இந்திரியங்களையடக்கி மூன்று உலகங்களையும் வென்றனை. இப்பொழுது அந்த இந்திரியங்கள் முன்பு நீ அவற்றை வென்ற வைரத்தை நினைத்து உன்னை வென்றனவோ என்னும்படி இந்திரியங்களுக்குட்பட்டு நீ மனம் போனபடியெல்லாம் செய்த பாப காரியங்களின் பயனே இது. 'ராமனுக்கு நண்பனாக இருப்பாயாக, அவனிடம் பகை வேண்டாம்' என்று நான் உனக்குப் பலதடவை சொல்லியும் நீ கேளாமற் போயினையே! துர்ப்புத்தி! நீ சீதையிடம் ஆசை கொண்டது தப்பிதமே! அதற்குத் தகுந்த தண்டனையைப் பெற்றனை. நீ உன் சொத்தான என்னைக் குறைவாக நினைத்து பூஜிக்கத் தகுந்த சீதையைச் சிறையில் வைத்தனையே! என் பிரபூ! சீதையின் சிறந்த பதிவிரதா தருமத்தினால் நீ இப்பொழுது நாசமடைந்தனை. இது நிச்சயம்.

விபீஷணன் ராமனையடைந்து நன்மை செய்தானாகையால் சுகம் பெற்றனன். நீயோ பாபஞ்செய்தாயாகையால் நாசமடைந்தனை. சீதை குலத்திலும் ரூபத்திலும் கல்வியிலும் என்னைக்காட்டிலும் மேற்பட்டவளன்று; என்னோடொத்தவளுமன்று. அப்படிப்பட்ட என்னை அலக்ஷியஞ் செய்து அந்த பதிவிரதையை நீ விரும்பியதால் நாசமடைந்

தனே. சீதை இனி வருத்தம் நீங்கி ராமனுடன் கூடி சுகமாக விளையாடப்போகின்றனள். அற்ப புண்ணியஞ் செய்த நானோ இங்ஙனம் விதவையாகி கரையற்ற துக்கசாகரத்தில் விழுந்தவளாயினேன். ஐயோ! என் நாதனே! நீ மரணமடைய நான் முட்டாக்கிட வேண்டும் நிலைமை நேர்ந்ததே! இத்தகைய கேடு சம்பவிக்குமென்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லையே!

'என் தந்தையான மயன் தானவர்களுக்கு அரசன். என் கணவன் ராக்ஷசர்களுக்கெல்லாம் நாதன். என் புதல்வன் இந்திரனையும் வென்ற வீரன்' என்று நான் கர்வம் கொண்டிருந்தேனே! கடைசியில் என்கதி இப்படி ஆயிற்றே! ஐயோ! அரக்கர்கோனே! நீ எமனுக்கும் எமனாய் இருப்பவனல்லவா? உன்னைப்போன்ற சூரனை ராமன் எங்ஙனம் கொல்ல நேர்ந்தது? ஆகையால் நீ மரணமடைந்தது எனக்குக் கனவுபோல் தோன்றுகின்றது. மூன்று உலகங்களுக்கும் பெரும் பயத்தை விளைவிப்பவனும், சமஸ்தலோக பாலர்களையும் வென்று, கைலாசபர்வதத்தை அசக்கிப் பார்வதியை வருத்தமுறச் செய்து, பலத்தினால் செருக்குற்றவரை அடக்கிப் பராக்கிரமத்தைப் பத்துத் திசைகளிலும் பரப்பின சூரனல்லவா நீ. ஆ! இப்படிப்பட்ட பிரபாவமுடைய என் நாதன் மரணமடைந்தும் நான் இன்னும் பிராணனை வைத்துக்கொண்டிருக்கிறேனே! நான் கடினமான இருதயமுடையவள்.

என்னப்பனே! என்னைவிட்டு நீ மாத்திரம் சுவர்க்கஞ் செல்வது சரியோ? உன்னைவிட்டு நான் அரைக்கணமும் பிரியேன். ஆகையால் என்னையும் உன்னுடன் அழைத்துச் செல்வாயாக. ராஜனே! எனக்குப் பதிலளிக்காமலிருக்கின்றனையே! இதுவென்? ராக்ஷசேசாத்தமா! நீ முன்பு குலமடந்தையர் பலரை அவர்களது கணவன்மார்களைக்கொன்று

விதவைகளாகச் செய்தனையே! அவர்களது கடுஞ்சாபத்தினால் நீ இங்ஙனம் பாழாயினை. பலத்திலும் பராக்கிரமத்திலும் கீர்த்திபெற்ற மகாசூரனாகிய நீ யுத்தகத்தில் மரணமடைந்த தற்கு நான் வருந்தவேண்டிய அவசியமேயில்லை. ஆயினும் பெண்ணாகையால் உன்னைப் பிரிந்தமையால் விளையும் துக்கம் பொறுக்கமுடியாமையால் என்னைக் குறித்தே மிக வருந்து கின்றேன்.

ஐயோ! ராக்ஷச ராஜனே! நீ மாண்டமையால் பயமற்று சூரிய கிரணங்கள் இப்பொழுது லங்கையினுள் பிரவேசித் தன. ஆ! வஜ்ஜிராயுதம்போன்ற உனது இரும்புத்தடி ராம பாணங்களால் ஆயிரம் துணுக்கைகளாகத் துண்டிக்கப் பெற்று இதோ பூமியில் விழுந்திருக்கின்றதே! நீ அன்புக் கிடமான பெண்மணியைப்போல் யுத்தபூமியை அணைத்துக் கொண்டு பூமியில் விழுந்திருக்கின்றனையே! அன்புக்கிடமல் லாதவளைப்போல் என்னை மாத்திரம் துறந்து என்னுடன் பேசவும் விரும்பாதிருக்கின்றனையே! இதுவென்!" என்று புலம்பி மூர்ச்சையடைந்தனள்.

இங்ஙனம் ராவணனது மார்பில் விழுந்து மூர்ச்சை யடைந்த மண்டோதரியை அவளது சக்களத்திகள் மூர்ச்சை தெளிவித்துத் தேற்றினர். அப்பொழுது ராமன் விபீஷ ணனை நோக்கி "இந்த ஸ்திரீகளெல்லாரையும் பட்டணத் திற்குத் திருப்பி யனுப்பிவிட்டு அண்ணனுக்கு பிரேத காரி யங்களை நடத்துவாயாக." என்றனன்.

அப்பொழுது விபீஷணன் சிறிது ஆலோசித்து ராமன் தன் வார்த்தையைத் தள்ளமுடியாமல் அங்ஙனம் மொழிந் தனன் என்று நினைத்து, அவனை அனுமதி கொடுப்பா னாயின் அப்பொழுதே செய்வேனன்றி மற்றொருவிதஞ் செய்யேனென்று நிச்சயித்து, ராமனது அபிப்பிராயத்தை அனுசரிக்கும்பொருட்டு "ராமா! இந்த ராவணன் தருமங்

களையும் விரதங்களையும் துறந்தவன். பிராணிகளைத் துன்பப் படுத்தும் கொடுந்தன்மையுடையவன்; மற்றும் பரஸ்திரீ களைப் புணர்தலே பணியாயிருப்பவன்; மேலும் இவன் எனது சகோதரனின் உருவந்தரித்த பகைவனேயன்றி வேறல்லன். ஆகையால் இவனுக்கு தகனச்சடங்கு செய்ய நான் விரும்பவில்லை" என்றனன்.

ராமன் விபீஷணனை நோக்கி "ராக்ஷஸேச்வரா! உனது மகிமையினாலேயே எனக்கு இந்த வெற்றி உண்டாயிற்று. ஆகையால் நான் உனக்கு நன்மையையே செய்யக்கடமைப் பட்டவன். ராவணனுக்கு மரணச் சடங்குகள் செய்தல் எனக்கு விருப்பமானது; உனக்கும் நன்மையானது. ஆகை யால் அதைச் செய்வாயாக. இந்த ராவணன் அதர்மமும் அசத்தியமும் உடையவனென்பது உண்மையே. தோஷங்கள் உடையவனாயினும் குணங்கள் பலவும் அமைந்தவன். சிறந்த பராக்கிரமமுடைய சூரன். மேலும் எப்படிப்பட்ட விரோதமும் அவன் இருக்கும்வரையில் செய்தானேயன்றி இறந்தபின் இனி ஒரு விரோதமும் செய்யமுடியாதல்லவா? அன்றியும் நமது எண்ணம் நிறைவேறியது. ஆகையால் விபீஷணா! இவன் பாபிஷ்டனானாலும் சாஸ்திரங்களிற் சொல் லிய விதியின்படி தகனச்சடங்கு செய்யத்தகுந்தவனே. இவ னுக்கு அதைச் செய்வாயாக" என்றனன்.

பிறகு விபீஷணன் ஸ்திரீகளையனுப்பிவிட்டு ராவண னுக்கு மரணச் சடங்குகளை நிறைவேற்றினன். ருத்விக்கு கள் மக்மகம், வெட்டிவேர் முதலிய வாசனை திரவியங்களோடு சந்தனக் கட்டைகளால் சிதையடுக்கி அதன்மேல் வெளுத்த மயிரையுடைய மான்தோலை விரித்து வேதங்களிற் சொல்லிய கிரமத்தின்படி ராவணனை அதில் கிடத்தி பிரேத காரியங் களை நடத்திவைத்தனர். அப்பொழுது அந்த ராவணனுக்கு பித்ருமேத ஸம்ஸ்காரத்தைக் கிரமப்படியே முடித்தனர்.

விபீஷணன் மந்திரங்களைச் சொல்லிக்கொண்டே ராவண னுக்கு அக்கினி பிரதானஞ் செய்தனன். பிறகு விபீஷணன் ராவணனுக்கு ஜலதர்ப்பணாதிகளைச் செய்து, ராவணனது ஸ்திரீகளுக்கு பலவாறு நன்மொழிகளைச் சொல்லி பட்டணத் திற்கு அழைத்துக்கொண்டுபோயினன். பிறகு விபீஷ ணன் ராமனிடம் வந்து வணக்கத்துடன் பணிந்து நின் றனன்.

நூற்றுப் பதினான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப் பதினைந்தாவது ஸர்க்கம்.

## விபீஷணனுக்குப் பட்டங்கட்டுதல்.

அந்த மகாயுத்தத்தைப் பார்க்க வந்திருந்த தேவதைகளும் கந்தருவர்களும் ராவணன் மாண்டபின் தம்தமது விமானங் களில் ஏறிக்கொண்டு ராமனைப் புகழ்ந்துகொண்டே தந்தமது இடங்களுக்குச் சென்றனர். ராமன் மாதலியை மிகவும் கௌரவித்து இந்திரனது ரதத்தைக்கொண்டு போகும்படி அனுமதி கொடுத்தனன். மாதலியும் தேரின்மேலேறி தேவ லோகத்திற்குச் சென்றனன்.

பிறகு ராமன் தனக்கு இவ்வளவு வெற்றியும் சுக்கிரீவ னது உதவியால் விளைந்ததுபற்றி மிகுந்த சந்தோஷத்துடன் சுக்கிரீவனை யணைத்துக்கொண்டு வானரர்களால் பூஜிக்கப் பெற்று லக்ஷ்மணனை நோக்கி "நல்லியற்கையுடையவனே! என்னிடத்தில் மிகுந்த பிரீதியுடையவனும் எனக்குச் சிறந்த உபகாரஞ் செய்தவனுமான இவ்விபீஷணனுக்கு முன்பு லங்கைக்குச் சென்று பட்டாபிஷேகம் நடத்துவாயாக. பிறகு மற்ற காரியங்களை கவனிக்கலாம்" என்றனன்.

அப்பால் லக்ஷ்மணனது கட்டளைப்படி வானரர்கள் பொற்கலங்களில் சமுத்திரங்களிலிருந்து நீர்கொண்டு வந்த

னர். பிறகு லக்ஷ்மணன் விபீஷணனை ஸிம்மாசனத்தில் உட்காரவைத்து அந்த பரிசுத்த நீரினால் அபிஷேகஞ் செய்து வேதங்களிற் சொன்ன விதிபின்படி சமஸ்த ராக்ஷசர்களினிடையில் விபீஷணனுக்கு பட்டாபிஷேகம் நடத்தினன். பிறகு விபீஷணன் ராமன் கொடுத்த பெரிய ராஜ்ஜியத்தைப் பெற்று ஜனங்களை யெல்லாம் குளிர்ந்த வாக்கியங்களினால் சமாதானப்படுத்தி மீண்டும் ராமனிடம் வந்து சேர்ந்தனன். விபீஷணன் ராம லக்ஷ்மணர்களுக்கு மங்களத்தை விளைவிக்கும்படியான மஞ்சள் முதலிய மங்களகரமான திரவியங்களை யெல்லாம் கொண்டு சமர்ப்பித்தனன்.

அப்பால் ராமன் தனது பக்கத்தில் கைகளைக் குவித்துப் பணிந்திருக்கின்ற அனுமானைப்பார்த்து "நல்லியற்கையுடையவனே! நீ மகாராஜனான விபீஷணனது அனுமதியைப் பெற்று ராவணனது வீட்டில் பிரவேசித்து நமது வெற்றியை சீதைக்கு அறிவித்து அவளுக்கு சந்தோஷத்தை விளைத்து அவள் மொழியும் சமாசாரத்தைத் தெரிந்துகொண்டு திரும்பி வருவாயாக" என்றனன்.

நூற்றுப் பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்றுப் பதினாறாவது ஸர்க்கம்.

## அனுமான் சீதையிடஞ் சென்று ராமனது வெற்றியை அறிவித்து அவளுடையமொழிகளைக்கேட்டு ராமனிடம்வருதல்

உடனே அனுமான் வேகமாக இலங்கையினுள் பிரவேசித்து ராவணனது வீட்டில் புகுந்து அங்கு வருத்தத்துடன் ராக்ஷசிகளினிடையில் வீற்றிருந்த சீதைக்கு வணக்கம்செய்து அசையாமல் வணக்கத்துடன் நின்றனன். பிறகு அனுமான் சீதையை நோக்கி "தேவீ! ராமனும் லக்ஷ்மணனும் சுக்கிரீவனும் விபீஷணனும் வானர சைன்னியங்களும் க்ஷேமமாய்

விளங்குகின்றனர். சீதே! ராமன் ராவணனைக்கொன்று சந்தோஷமுற்று உன்னிடம் இங்ஙனம் சொல்லும்படி கூறினன். 'தேவீ! கற்பின் முறைமையை நன்கறிந்தவளே! என் பாக்கியத்தினல் நீ ஜீவித்திருக்கின்றனை. நீ இல்லாத பக்ஷத்தில் நான் ஜயித்தது வீணேயாய்விடும். சீதே! எனது பராக்கிரமத்தினல் நான் ராவணனைக் கொன்றேன். இனி நீ வருத்தம் தவிர்ந்து சுகமாயிருப்பாயாக. வைதேகி! உன் பொருட்டு நான் உண்ணாது உறங்காது ஒலிகடலை ஊடறுத்து ராவணனைக் கொன்று லங்கையில் விபீஷணனுக்குப் பட்டங் கட்டிவிட்டேன். இனி லங்கை முழுதும் நமது விபீஷண னுக்கு உட்பட்டதாகையால் நீ சொந்த வீட்டில் இருப்பது போலவே யன்றி சிறையிலில்லை யென்று அறிவாயாக. விபீஷணனும் உன்னைக்காண விருப்புற்றிருக்கின்ற ணகையால் 'இதோ வருவான்' என்று கூறும்படி சொல்லினன்'' என்று விண்ணப்பம் செய்தனன்.

உடனே சீதை மிகுந்த சந்தோஷத்துடன் எழுந்து சந்தோஷப் பெருக்கினல் வார்த்தைகள் தழதழக்கப்பெற்று "ஆ அனுமானே! எனக்கு இத்தகைய சந்தோஷமான சமாசாரத்தைக்கொண்டு வந்த உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்? உனக்குக் கொடுக்கக்கூடிய பரிசு பூமியிலாவது சுவர்க்க பாதாளங்களிலாவது இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. வெள்ளியாவது பொன்னவது நானவித ரத்தினங்களாவது மூன்று உலகங்களுக்கும் அரசனயிருத்தலாவது இவையெல்லாம் நீ சொன்ன நல்ல சமாசாரத்திற்கு நிகர் என்று மொழியவும் தகுந்தவையல்ல'' என்றனள்.

இங்ஙனம் கூறின சீதையை அனுமான் கைகுவித்து வணங்கி "நீ கணவனுக்கு நன்மை செய்வதிலேயே மனவூக்கமுடையவள். கணவன் வெற்றி பெற வேண்டுமென்ற விருப்பமுற்றிருப்பவள். நட்பு விளங்கப்பெற்ற இப்படிப்

பட்ட வார்த்தையை மொழிவது உனக்கே தகுமன்றி மற்றொருத்திக்கும் தகாது. எனக்கு மறுமொழி கூறத்தகுந்த நல்வார்த்தை உனக்குத் தோற்றவில்லையென்றனையே! இங்ஙனம் நீ மொழிந்த வார்த்தை ‘என் வார்த்தை மிதமில்லாத சந்தோஷத்தை விளைவிப்பது’ என்னும் பெருங்கருத்தை அறிவிக்கின்றது. இப்படிப்பட்ட உன் வார்த்தையொன்றே பலவகையான ரத்தினங்களைக் காட்டிலும் மேலானது. அதுவன்றி தேவேந்திர பதவியைக் காட்டிலும் விசேஷித்திருப்பது. இத்தகைய வார்த்தையைக் கேட்ட மாத்திரத்திலேயே, நீ எனக்குக் கொடுக்கத்தகுந்ததே இல்லை யென்ற மேன்மையான வஸ்துக்களை யெல்லாம் பெற்றாற் போலவே ஆயிற்று. ராமன் வெற்றி பெற்றிருப்பதைக் காணப்பெற்றமையே எனக்கு தேவராஜ்ஜியம் முதலிய அதிசயங்களெல்லாம் பெற்றாற்போலாயிற்று.” என்றனன்.

சீதை அனுமானை நோக்கி “வானரோத்தமனே! சிறந்த பலமும், பராக்கிரமமும், திறனும், பொறுமையும், தைரியமும், வணக்கமும், சிறந்த நீதி ஒழுக்கமும் ஆகிய இவை முதலிய சிறந்த நற்குணங்களும் உன்னையடைந்தே மிகுதியும் சோபிக்கின்றன. பேசுவதில் வல்லவனை உன்னைப்போல் இனிமையாகப் பேச எவனுக்கும் முடியாது. நீ உலகத்திலுள்ள என்னைப் போன்றவர்களுக்கு நற்பிழைப்பை விளைவிப்பவனா யிருக்கின்றனை” என்றனள்.

அப்பொழுது அனுமான் சீதையை வணக்கத்துடன் நோக்கி “தேவீ! உனக்கு நல்ல சமாசாரம் கொண்டு வந்த எனக்கு ஒரு வரம் கொடுக்கும்படி வேண்டுகிறேன். அதாவது முன்பு இந்த பயங்கரஉருவமுடைய ராக்ஷசிகள் உன்னை விரட்டி துன்பப்படுத்தினார்களல்லவா? இப்பொழுது இவர்களை அக்கொடுஞ் செயலுக்காக தண்டிக்க வேண்டுமென்று விரும்புகிறேன். நீ அதற்கு அனுமதி கொடுக்கவேண்டும்.

இந்த ராக்ஷஸிகளை பூமியில் விழத்தள்ளி முட்டிகளால் குத்தியும் உள்ளங்கைகளால் அறைந்தும் கால்களால் உதைத்தும் பற்களால் கடித்தும், தலைமயிர்களைப் பிச்சிப் பிடுங்கியும், கூரிய நகங்களால் பீறியும், கைகளால் புடைத்தும் என் கோபம் உள்ளவளவு இங்ஙனம் பலவகைகளில் கொல்ல விரும்புகின்றேன். தேவீ! உனக்குத் தீங்கிழைத்த இவ்வரக்கிகளை என்னிஷ்டப்படி தண்டிக்க உத்தரவு கொடுப்பாயாக" என்றனன்.

சீதை இங்ஙனம் ஆத்திரத்துடன் கூறின அனுமானை நோக்கி "அனுமானே! இவர்கள் அரசனைப்பணிந்து பிழைக்கும் வேலைக்காரிகள். ராவணனது இஷ்டப்படி நடக்காவிடில் இவர்கள் தண்டனைக்குள்ளாவார்களாகையால் அவன் சொற்படி கேட்டனர். ஆகையால் இப்படிப்பட்ட வேலைக்காரிகளிடத்தில் உன்னைப்போன்றவன் கோபமுறுவது எள்ளளவும் சரியல்ல. முன்பிறப்பில் நான் செய்த தீவினையின் பயனாக நான் ராவணனது இந்த வேலைக்காரிகளால் விரட்டப்பட்டேனன்றி வேறன்று. ராவணனது கட்டளையினால் இவர்கள் என்னை முன்பு துன்புறுத்தினரேயன்றி தமது சொந்த விருப்பத்தினாலன்று. ஆகையால் நாம் இதைத் தப்பாகக்கொள்ளலாகாது.

வானரா! அங்ஙனமல்லாமல் இவர்கள் தாமாகவே பிழை செய்திருப்பினும் நாம்இவர்களை மன்னிக்கவேண்டும். இதற்கு உதாரணமாக ஒரு கதையும் கூறுகிறேன் கேள். ஒரு வேட்டைக்காரன் புலி துரத்தப்பெற்று ஒரு மரத்தின்மேல் ஏறிக்கொண்டனன். அம்மரத்தில் முன்னமேயே ஓர் கரடி இருந்தது. மரத்தின் கீழிருந்த புலி கரடியைப்பார்த்து 'காட்டிலுள்ள நம்மனைவருக்கும் இவன் விரோதியாதலால் இவனைக் கீழே தள்ளிவிடு' என்றது. கரடி 'நானிருந்தவிடத்திற்கு வந்த இவனை விழத்தள்ளேன். அப்படிச் செய்தல் தருமத்

திற்கு விரோதமாகும்' என்று கூறித் தூங்கிவிட்டது. அப்பால் புலி அவ்வேட்டைக்காரனைப் பார்த்து 'உன்னைக் கொல்லாமல் விடுகிறேன். தூங்குகின்ற அக்கரடியைக் கீழே தள்ளிவிடு' என்ன, அவன் அதற்குச் சம்மதித்துக் கரடியைக் கீழே தள்ளினன். அக்கரடி பழக்கத்தினால் மற்றொரு கிளையைப் பிடித்துக்கொண்டு கீழே விழாமல் தப்பித்துக் கொண்டது. அப்பால் புலி கரடியை நோக்கி 'உனக்கு இவன் அபராதஞ் செய்தானகையால் இப்பொழுதாவது அவனைக் கீழே தள்ளிவிடு' என்று அடிக்கடி வேண்டிக்கொள்ளினும் கரடி 'இவன் ஒரு தடவையன்றி இன்னும் பல தடவை எனக்கு அபராதஞ் செய்பினும் நான் இவனுக்குத் தீங் கிழைக்க நெஞ்சிலும் நினையேன்' என்று கூறி அவனைக் காப் பாற்றியதென்று பெரியோர் கூறுவர்.

அநுமானே! பெரியவனாயிருப்பவன் பாபிஷ்டனாயினும், கொல்லத்தகுந்தவனாயினும் அவர்களிடத்தில் தயையைக் காட்டவேண்டும். 'இப்படியாயின் குற்றஞ் செய்தவர்களை தண்டிக்காதிருக்கவேண்டிவருமே' என்னில் உலகத்தில் குற் றஞ்செய்யாதவன் எவனுமேயில்லை. ராக்ஷசர்கள் உலகத் திற்கு துன்பத்தையே விளைவித்தபோதிலும் அது அவர்க ளுக்கு ஜாதியைப்பற்றி வந்ததாகையால் அவர்களுக்கு தண் டனை விதிப்பது சிறிதும் தகாது" என்றனள்.

இங்ஙனம் சீதை கூறக்கேட்ட அநுமான் சீதையைப் பார்த்து "அடிபணிந்தவர்களைக் காப்பாற்றுவதே விரதமாகப் பெற்ற ராமனுக்கு நீயே ஏற்கத்தகுந்த தர்மபத்தினியாவாய்; தேவி! எனக்கு மறுமொழி கூறியனுப்புவாயாக. நான் ராம னிடம் செல்லப்போகின்றேன்" என்றனன். சீதை 'வானரோத்தமனே! நான் என் பிராணநாதனான ராமனைக்காண விரும்புகிறேன்' என்றனள். உடனே அநுமான் சீதையை நோக்கி "சீதே! சசீதேவி அசுரர்களைக்கொன்று திரும்பிய

தேவேந்திரனைக் காண்பதுபோல் ராக்ஷசர்களைக் கொன்றொழித்த ராமனை நீ நிச்சயமாகக் காண்பாய்" என்று கூறி விட்டு ராமனிடம் சென்றனன்.

நூற்றுப்பதினாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்றுப்பதினேழாவது ஸர்க்கம்.

## விபீஷணன் சீதையை ராமனிடம் அழைத்துக்கொண்டு வருதல்.

அனுமான் ராமனிடஞ் சென்று 'ராமா! சீதை உனது வெற்றியைக் கேட்டுத் தாங்கமுடியாத சந்தோஷமடைந்து உன்னையும் லக்ஷ்மணனையும் காணவிரும்புகின்றனள்' என்றனன். ராமன் சிறிது கண்ணீர் பெருகப்பெற்று 'வெகுகாலமாக ராவணனது வீட்டிலிருந்த சீதையை நான் ஏற்றுக் கொள்ளின் எனக்கு உலகப்பழி நேரும். தோஷமில்லாத அப்பெண்மணியைத் துறந்தால் பாபம் உண்டாகும். இதற்கென் செய்வது?' என்று சிறிது நேரம் சிந்தித்து அருகில் நின்ற விபீஷணனை நோக்கி 'ராக்ஷச ராஜனே! நீ சீதையைத் தலைமுழுகுவித்து மேலான ஆடையாபரணங்களை யணியச் செய்து இவ்விடம் சீக்கிரமாக அழைத்துக்கொண்டு வருவாயாக' என்றனன்.

அங்ஙனமே விபீஷணன் லங்கையில் பிரவேசித்து அந்தப்புரத்தில் நுழைந்து மடந்தையரைக்கொண்டு சீதைக்கு ஸ்நானம் செய்வித்து உயர்ந்த பீதாம்பரங்களையும் ஆபரணங்களையும் அணிவித்து, மேலான சந்தனம் புஷ்பம் இவற்றால் அலங்கரித்து பல்லக்கின்மேலேற்றிப் பல ராக்ஷசர்கள் சூழ்ந்து பாதுகாத்து வரச் செய்து ராமனிடம் அழைத்துக்கொண்டு வந்தனன். அங்ஙனம் ராவணனது வீட்டில் வெகு நாள் இருந்த சீதை வந்தாளென்று கேள்விப்பட்ட

வுடனே, ராமனுக்கு, ராவணனைக் கொன்று சீதையை வர வழைத்தமையால் சந்தோஷமும், நெடுநாள் ராவணன் வீட்டில் இருந்தனளே யென்று வருத்தமும் அதைப் பற்றிய ரோஷமும் ஆகிய இம்மூன்றும் உண்டாயின. சிறிது நேரம் ராமன் சாதகபாதகங்களை ஆலோசித்து விபீஷணனை நோக்கி 'சீக்கிரமாக சீதையை என் அருகில் அழைத்துக்கொண்டு வருவாயாக' என்றனன்.

உடனே விபீஷணன் சீதையைப் புருஷர்கள் காணக் கூடாதென்று எண்ணி அங்கிருந்த ஜனங்களையும் வானரர்களையும் காடிகளையும் அப்புறம் போகும்படி தகுந்த வேலையாட்களை நியமித்தனன். உடனே சமஸ்தமான ஜனங்களும் வானரர்களும் பிரம்புகளாலும் தடிகளாலும் அதட்டப்பட்டு கூட்டங் கூட்டமாக அப்புறஞ் சென்றுகொண்டிருந்தனர். இதைக் கண்ட ராமன் அவர்களிடத்துள்ள பிரீதியால் விபீஷணனை வெறுப்புடன் நோக்கி "நீ ஏன் இவர்களைத் துரத்துகின்றனை? இவர்களெல்லாரும் என்னுடையவர்களேயன்றி வேறல்லர். இதை நிறுத்துவாயாக. ஸ்திரீகளுக்கு மறைவு, வீடுகளும் வஸ்திரங்களும் கோட்டைகளும் திரைகளுமன்று. மற்றும் ஜனங்களை இவ்வாறு ஒதுக்குவது முதலிய ராஜமரியாதைகளுமன்று. நல்லொழுக்கமே அவர்களுக்கு மறைவு ஆகும். இஷ்ட ஜனங்களைப் பிரிந்திருத்தல் முதலிய விசனங்களிலும், ராஜ்ஜியக் கலக்கம் முதலிய ஆபத்துகளிலும், யுத்த பூமிகளிலும், சுயம்வரங்களிலும், யாகத்திலும், விவாகத்திலும் பெண்டிர் பிறர்க்குப் புலப்படுவது தோஷமன்று. இப்பொழுது சீதை யுத்த பூமியிலிருக்கின்றனள். மேலும் மகத்தான கஷ்டத்தில் அகப்பட்டிருக்கின்றனள். மேலும் என்னுடனும் கூடியிருக்கின்றனள். ஆகையால் இவளைப் பிறர் பார்க்கில் சிறிதும் தோஷமில்லை. சீதையை என்னிடம் அழைத்து வருவாயாக" என்றனன்.

ராமன் இங்ஙனஞ் சொல்லுகையில் விபீஷணன் 'ஸீதை பெருங் கஷ்டத்தில் ஆழ்ந்திருக்கிறாள்' என்ற அவனது வசனத்தைக் கேட்டு மனத்தில் சங்கையுற்று ஸீதையை ராமனிடம் அழைத்துக்கொண்டு வந்தனன். பிறகு லக்ஷ்மணனும் சுக்கிரீவனும் அனுமானும் அங்ஙனம் ராமனுடைய வார்த்தையில் ஸீதையைப் பற்றின அன்புதோற்றியிருப்பதைக்கண்டு மிகவும் துக்கித்திருந்தனர். ஸீதை விபீஷணன் பின் தொடரப் பெற்று வெட்கத்தினால் அங்கங்களை ஒடுக்கிக்கொண்டு ராமன் சமீபத்திற்குச் சென்றனள். அவள் ஜனக்கூட்டத்தினிடையிலிருக்கையால் வஸ்திரத்தினால் முகத்தை மறைத்துக்கொண்டு 'ஆரிய புத்திரா!' என்று மொழிந்து ரோதனஞ் செய்தனள். வெகுகாலம் காணுதிருந்த கணவனுடைய முகத்தைக் கண்டு வருத்தத்தைத் துறந்து மிகவும் சந்தோஷம் அடைந்தனள்.

நூற்றுப் பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப் பதினெட்டாவது ஸர்க்கம்.

## ராமன் ஸீதையைக் குறித்து கோபமான வசனங்களைப் பேசுதல்

ராமன் அங்ஙனம் தன் பக்கத்தில் வெட்கத்தினால் வணங்கி நின்றிருக்கும் ஸீதையைக் கண்டவுடனே கோபத்தினால் பேசத் தொடங்கி "மங்கள ஸ்வபாவமுடையவளே! இப்பொழுது ராவணனைக் கொன்று உன்னை அடைந்தேன். பகைவன் செய்த அவமானத்திற்கு பதில் செய்து முடித்து எனது பராக்கிரமத்தைக் காட்ட இங்ஙனம் செய்தேனேயன்றி உன்னைப் பெறுதற்காகச் செய்த பிரயத்தனம் ஒன்றுமே இல்லை. நான் இல்லாதபொழுது சபலமான மனமுடைய ராவணன் உன்னை யபகரித்துக்கொண்டு போயினன். இங்ஙனம் உன்னைப்பற்றி எனக்கு தெய்வாதீனமாய் வந்த

அவமானத்தை எனது பராக்கிரமத்தினால் நான் போக்கடித்துக்கொண்டேன். அனுமான் செய்த சிறந்த அரிய காரியங்களும், சுக்கிரீவனது பிரயத்தனமும், விபீஷணனது பிரயாசங்களும் எனக்குண்டான அவமானத்தைப் போக்கடித்தமையால் சபலமாயிற்று" என்றனன்.

இங்ஙனம் ராமன் மிகவும் கடினமாகவும் நிராசையாகவும் அம்மொழிகளைச் சொல்லுகையில் சீதை மான் பேடை போல் மலர்ந்த கண்களுடன் மிகவும் கலங்கிக் கண்ணீர் பெருக்கிக்கொண்டிருந்தனள். அப்பொழுது ராமன் பின்னும் அதிகமான கோபத்துடன் சீதையை நேரே பார்க்கவிரும்பாமல் கண் பார்வைகளைக் குறுக்கேகவிழ்த்து "சீதே! அன்னியர் வீட்டில் நீ வாசம் செய்தமையால் உன் நடத்தையைக் குறித்து எனக்கு சந்தேகம் உண்டாயிருக்கிறது. ஆகையால் நான் உன்னைக் கண்களால் பார்க்கவும் விரும்புகின்றிலேன். இனி எனக்கு உன்னால் ஆகவேண்டிய காரியம் எதுவும் இல்லை. இதோ உனக்கு அனுமதி கொடுத்தேன். பத்துத் திசைகளில் உனக்கிஷ்டமான விடத்திற்குச் செல்லலாம். நற்குலத்தில் பிறந்து சிறந்த தருமங்களை ஆசரிக்கும் தன்மையுடைய புருஷன் எவன்தான் பிறன் வீட்டில் வெகு காலம் இருந்த தன் காதலியை மனவிருப்பத்துடன் மீளவும் கைப்பற்றுவான்? இத்தனை காலம் ராவணனோடிருந்து இப்பொழுது நழுவி வந்தனை; காமவிகாரமுற்ற அவனுடைய கொடிய பார்வைகளுக் குட்பட்டிருந்தனை. இப்படிப்பட்ட உன்னை நான் மீளவும் எப்படிக் கைப்பற்றுவேன்? என் குலத்தின் கீர்த்திக்காக உன்னை மீட்டேனேயன்றி வேறில்லை.

சீதே! ஆகையால் உன்னிடத்தில் எனக்குச் சிறிதும் விருப்பமில்லை. இது நான் புத்தியில் நன்றாக நிச்சயித்துக் கொண்டு சொன்ன வார்த்தையேயன்றி வேறன்று. ஆகையால் சீதே! நீ உன் விருப்பப்படி லக்ஷ்மணனிடத்திலாவது

பரதனிடத்திலாவது புத்தியைச் செலுத்துவாயாக. அல்லது சுக்கிரீவனிடத்திலாவது விபீஷணனிடத்திலாவது மற்றும் உனக்கு எப்படி சுகம் என்று தோற்றுகிறதோ, அப்படியாவது இருக்க மனம் வைப்பாயாக.

சீதே! ராவணன் மேலான வனப்புவாய்ந்த உன்னைப் பார்த்துக்கொண்டே வெகுகாலம் பொறுத்து வெறுமனேயிருப்பானோ? வெறுமனே இருந்திருக்கமாட்டான்'' என்று கோபமாகப் பேசினன். இதைக் கேட்ட சீதை மனம் தாளப்பொறுமல், கிடுகிடுவென்று நடுங்கிக் கண்ணீர் பெருக்கி துக்கசாகரத்தில் ஆழ்ந்தனள்.

நூற்றுப் பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

## சீதை அக்கினி பிரவேசம் செய்தல்.

அப்பொழுது சீதை தழுதழுத்த உரைகளை மெல்ல மெல்ல மொழியத் தொடங்கி "வீரனே! என்னைக் குறித்து ஏன் இப்படிப்பட்ட தகாத வார்த்தைகள் பேசுகின்றனை? இது நீ சொல்வதற்கும் நான்கேட்பதற்கும் தகுமா? நீண்ட கைகளையுடையவனே! பிரபூ! நான் நீ கூறுகின்றபடி எள்ளளவும் தோஷமுடையவளன்று. உனக்காக எனது நன்னடத்தையின்மேல் ஆணையிடுகின்றேன். என் சுபாவம் உனக்குத் தெரிந்திருப்பினும் ராவணனுடைய சரீரம் என் மேல்பட்ட தோஷம் இருக்கின்றதாகையால் 'உன்னைத் துறப்பேன்' என்னில், அப்பொழுது நான் திக்கற்றவளா யிருந்தபடியால் அவனது சரீரம் என்மேல்படும்படி நேர்ந்தது. ஆயினும் அதில் என் மனவிருப்பத்தோடு செய்த பிசகு ஒன்றுமில்லை; அது தெய்வ சங்கல்பத்தினுல் நேர்ந்தது. என்னை விடுவித்துக்கொள்ள நான் அப்பொழுது சக்தியற்றவளா யிருந்தேன். என்னுடன் வெகுகாலம் வளர்ந்து

களித்து விளையாடின உனக்கு எனது சுபாவம் தெரியாமல் போனதேனோ?

வீரனே! என்னைத் தேடுவதற்காக அனுமானை யனுப்பின பொழுதே நீ என்னைத் துறந்திருப்பாயாயின் நீ என்னைக் கைவிட்டாயென்று தெரிந்து அந்த அனுமான் முன்னிலையிலேயே பிராணனை விட்டிருப்பேன். பிறகு உனக்கும் உனது நண்பர்களுக்கும் பிராண சங்கடத்தில் உயிரைப் பிடித்துக்கொண்டு இவ்வளவு யுத்தஞ்செய்து வீணாகக் கஷ்டம் நேர்ந்திராதிருக்குமல்லவா?

நரசிம்மனே! நீ அற்பனாகிய ஓர் மனிதனைப்போல் என்னைக் கேவலமாகப் பேசினாயேயன்றி தோஷமற்ற எனது நடத்தையைக் கணிசிக்கவில்லை. நான் ஜனகனுக்குப் பிறந்ததாக வியாஜமேயன்றி உண்மையில் பூமியினின்றுமே பிறந்தவள். இப்படிப்பட்ட எனது மேலான பிறப்பையும், எனது சிறந்த ஒழுக்கங்களையும் சிறிதும் நினையாமல், அக்கினி சாக்ஷியாக மணந்துகொண்ட என்னை வெறுக்கின்றனை; இது நியாயமோ?" என்றனள்.

சீதை இங்ஙனம் புலம்பி மனக்களிப்பற்று லக்ஷ்மணனைப் பார்த்து "லக்ஷ்மணா! எனக்குச் சிதை ஏற்படுத்துவாயாக. அதில் விழுந்து பிராணனை விட்டுவிடுகிறேன். வீண் அபவாதத்தினால் வருந்தி உயிரைவைத்திருக்க எனக்குச் சிறிதும் விருப்பமில்லை. எனது கற்புக்குரிய குணங்களில் சிறிதும் பிரீதியடையாமல் கணவன் என்னைப் பெரிய ஜனக் கூட்டம் நிறைந்த சபையில் இகழ்ந்து கூறும்போது எனது கணவனுக்கு நம்பிக்கை விளைவிப்பதற்குரிய கதி எனக்கு அக்கினியில் விழுதலைத் தவிர வேறில்லை" என்றனள்.

லக்ஷ்மணன் மிகுந்த வருத்தத்துடன் ராமனது முகத்தை நோக்கி அவனது முகக்குறிப்பால் சீதை கூறியது

அவனுக்கு விருப்பமென்பதைத் தெரிந்துகொண்டு உடனே சிதை ஏற்படுத்தினன். அப்பால் சீதை ராமனது மேனியை கண்களால் பருகிக்கொண்டே அவனை வலம் செய்து பிராமணர்களுக்கும் தேவதைகளுக்கும் வணக்கம் செய்து ஜ்வலிக்கின்ற நெருப்பின் அருகிற்சென்று கைகளைக் குவித்து "எனது மனம் எப்பொழுதும் ராமனைத் தவிர வேறு புருஷனிடம் செல்லாதிருக்குமாயின் இப்பொழுது உலகங்களுக்கெல்லாம் சாக்ஷியான இவ்வக்கினி தேவன் என்னை எல்லா விதத்திலும் பாதுகாப்பானாக. நான் சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் சகல தருமங்களையு மறிந்த ராமனுக்கு விரோதமாக நடவாதிருப்பேனாயின் அக்கினி தேவன் என்னைக் காப்பானாக. சூரியனும், வாயுவும், திசைகளும் சந்திரனும் பகலும் இரவும் காலை மாலை சந்திகளும் மற்றுமுள்ளவரும் என்னை நன்னடத்தை யுடையவளாகவே நினைப்பார்களாயின் அக்கினி தேவன் என்னைப் பாதுகாப்பானாக" என்று கூறிக்கொண்டே எரிகின்ற அக்கினியை வலம் வந்து அதில் குதித்தனள். அப்பொழுது அங்குக் கூட்டங்கூடின ஜனங்கள் குழந்தை முதல் கிழவர் வரையிலும் சீதை நெருப்பில் பிரவேசித்ததைக்கண்டு கூச்சலிட்டனர். மற்றும் ஸ்வர்க்கத்திலும் பூலோகத்திலும் பாதாளத்திலும் உள்ள தேவதைகளும் தானவர்களும் கந்தருவர்களும் அக்கினியில் விழுகின்ற சீதையைக் கண்டு 'ஹா! ஹா!' என்று கூச்சலிட்டனர்.

நூற்றுப்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்றிருபதாவது ஸர்க்கம்.

## பிரமாதி தேவதைகள் ராமனைத் தோத்திரஞ் செய்தல்.

அப்பொழுது குபேரனும் யமனும், தேவேந்திரனும், முக்கண்ணனான சிவனும், பிரமதேவனும் சூரியன்போன்ற

விமானங்களிலேறிக்கொண்டு ராமனை யடைந்தனர். பிறகு பிரமன் முதலிய அம்மேலான தேவதைகள் கைகுவித்த வண்ணம் ராமனைப்பார்த்து "ராமா! நீ எல்லா உலகங்களுக்கும் ரக்ஷகனான புருஷோத்தமனல்லவா? இங்ஙனம் எல்லா மறிந்த நீ சீதை அக்கினியில் விழுகையில் ஏதும் தெரியாதவன்போல் வாளாகிடப்பதேனோ? மும்மூர்த்திகளினும் மேலான உன்னை நீ ஏன் அறியாதிருக்கின்றனை? நீ முழுமுதற் கடவுளென்பது உனக்கேன் தெரியவில்லை? நீயே கருமம் அழிப்பு அளிப்பு முதலியவற்றைச் செய்பவன். நீ இஷ்டப்படி காரியஞ் செய்யவல்லவனேயன்றி உன்னை நியமிப்பவன் மற்றொருவனுமில்லை.

பரந்தாமனே! உனக்கு அச்வினீ தேவதைகள் செவிகள்; சூரியசந்திரர்கள் கண்கள். நீ ஆதியந்தமில்லாதவன். இங்ஙனம் எல்லாமறிந்தவனும், எல்லாவற்றையும் நிறைவேற்ற வல்லவனும் சர்வேச்வரனுமான நீ ஒன்றும் தெரியா ஓர் கேவல மானிடனைப்போல் சீதை அக்கினியில் விழக்கண்டும் ஏன் வாளாவிருக்கின்றனை?" என்று வினவினர்.

இங்ஙனம் பிரமாதி தேவதைகள் வினவுகையில் ராமன் அவர்களைப் பார்த்து, "நான் தசரதகுமாரனான ராமன் என்றே (மானிடனென்றே) என்னை நினைத்துக்கொண்டிருக்கின்றேன். நான் எவனோ? எவருடையவனோ? எதற்காக வந்தேனோ? அந்த விவரத்தையெல்லாம் பகவானாகிய பிரமதேவன் சொல்லவேண்டும்" என்றனன்.

அப்பொழுது பிரமதேவன் ராமனைப் பார்த்து "ராமா! உண்மையான பராக்கிரமமுடையவனே! நீ சர்வ உலகங்களுக்கும் ரக்ஷகனான நாராயணன். நீ உலகங்களை யெல்லாம் படைப்பது முதலிய காரியங்களை விளையாட்டிற்காக நிறைவேற்றிக்கொண்டிருக்கிறாய். நீ எப்பொழுதும் மகாலக்ஷ்மியோ டிணைபிரியாதிருப்பவன். சுதர்சனமென்னும்

சக்ராயுதத்தைத் தரிப்பவன்; எல்லார்க்கும் மேற்பட்டவன்; பூமியைக் கோட்டினால் எடுத்துக்காப்பாற்றிய ஆதிவராக மூர்த்தி; இதற்குமுன்பிருந்த பகைவர்களையும் இனிமேல் வரும் பகைவர்களையும் ஜயிப்பவன். ராமா! நீ வேதங்களின் பொருளாகிய பரப்பிரம்மம். பிறப்பு, இறப்பு, பிணி முதலியவை இல்லாதவன். நீயே உலகங்களை யெல்லாம் ரக்ஷிப்பவன். நீ உனது நான்கு புஜங்களால் ஒரே தடவையில் நான்கு புருஷார்த்தங்களையும் (அறம், பொருள், இன்பம், வீடு) கொடுப்பவன். நீயே எப்படிப்பட்டவராலும் வெல்லமுடியாத புருஷோத்தமன்; நீயே சங்கு, சக்கரம், தண்டு, வாள், வில் முதலிய ஆயுதங்களை ஏந்திய விஷ்ணு தேவன்.

ராமா! நீயே இந்திரனுக்குத் தம்பியாகப் பிறந்தவன்; வேதங்களைக்கவர்ந்த மதுவென்னும் அசுரனைத் தொலைத்தவன் நீயே; வேதங்களின் பொருளாய் இருப்பவன் நீயே. நீ மூன்று உலகங்களுக்கும் ஆதிதேவனன்றோ? நீ நித்தியர்களுக்கும் முக்தர்களுக்கும் உன்னோடொத்த சுகத்தைக் கொடுப்பவன்;உன்னைப்பற்றினவர் விரும்புவதற்கு முன்னமே அவர்களை ரக்ஷிப்பதற்குப் பிறப்பவன். பிரணவத்தின் பொருளும் யஜ்ஞஸ்வரூபியும் நீயே. நீ ஆயிரம் தலைகளையும் கண்களையும் தோள்களையும் பாதங்களையும் உடையவன். நீயே சகல உலகங்களையும் தரிப்பவன். பிரளய காலத்தில் இவ்வுலக ஜீவராசிகள் நாசமடையாவண்ணம் நீ அவற்றை வயிற்றில் வைத்துக் காப்பாற்றுபவன்.

ராமா! நான் உனக்கு மார்பு. சரஸ்வதிதேவி உனக்கு நாக்கு. பிரபூ! தேவதைகள் பரப்பிரமமாகிய உன் சரீரத்தின் ரோமங்கள்போல் உன்னைப் பிரியாதிருப்பர். நீ இமை மூடுவது ராத்திரியாம். இமைதிறப்பது பகலாம். ஆயிரஞ் சொல்லியென்? நீ இல்லாதது ஒன்றுமேயில்லை.

உலகங்களெல்லாம் உனக்குச் சரீரம். நீயே மூவுலகளந்தவன். சீதை மகாலக்ஷ்மி. நீ மகாவிஷ்ணு; எங்கும் நிறைந்த பரம்பொருள். இனி கிருஷ்ணாவதாரம் செய்யப்போகிறவனும் நீயே. ராவணனைக் கொல்லும்பொருட்டு மானிட உருவங்கொண்டு நீ இப்பூமியில் பிறந்தனை. ராமா! உன் காரியம் முடிந்துவிட்டது. இனி உனதிருப்பிடமான வைகுண்ட லோகத்திற்கு எழுந்தருள்வாயாக. உன்னைத் துதிப்பவர் எவரும் மேலான பதவியை நிச்சயமாக அடைவர்" என்றனன்.

நூற்றிருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிருபத்தோராவது ஸர்க்கம்.

### அக்கினி புருஷன் சீதையின் நடத்தையைப் புகழ்ந்து அவளை ராமனுக்குக் கொடுத்தல்.

இங்ஙனம் பிரமதேவன் ராமனைப் பார்த்துக் கூறுவதைக் கேட்டு அக்கினி தேவன் சீதாதேவியைத் துடையிலிட்டுக் கொண்டு சிதையினின்று திடீரென்று கிளம்பி வந்தனன். அவன் ராமனைப் பார்த்து "ராமா! என்னிடத்தில் பிரவேசித்த சீதை மிகுந்த பரிசுத்தையாகையால் இதோ இருக்கின்றனள். உன் மனைவியிடம் ஒரு தோஷமும் இல்லையென்று உனக்குத் தெரிந்தும் உனது ஒழுக்கத்திற்கு ஒரு குறையும் வாராதிருக்கும்பொருட்டு அக்கினியில் புகுவித்தனை. நீ எவ்வளவு அசகாய சூரனே! இந்த சீதை சிறந்த பதிவிரதை. ராவணன் பணம், பொன், ஆபரணங்கள் முதலிய பலவற்றையும் கொடுக்கிறேனென்று பலவாறு பேராசையை உண்டு பண்ணினும், கொல்லுவேன் வெட்டுவேனென்று எவ்வளவு விரட்டினும் இவள் அவற்றை எள்ளளவும் பொருள் செய்யாமல் மனத்தையெல்லாம் உன்னிடத்திலேயே வைத்து உன்னை தியானஞ் செய்துகொண்டிருந்தனள். ராமா! பரிசுத்தமான

மனமுடையவளும் பாபத்தை அறியாதவளுமான இப்பெண் மணியை ஏற்றுக்கொள்ளுவாயாக. என் வார்த்தைக்கு மறு மொழி கூறலாகாது. நான் உனக்குக் கட்டளையிடுகிறேன்" என்றனன்.

பிறகு ராமன் மிகுந்த மனக்களிப்புடன் அக்கினிதேவனைப் பார்த்து "சீதை தோஷமற்றவள் என்பது எனக்கு நன்கு தெரியும். ஆயினும் நான் அவளைப் பரிசோதிக்காமல் ஏற்றுக்கொள்ளில் உலகோர்கள் என்னைக் குறித்து 'ராமன் மூடத்தனமும் காமப்பித்தும் உடையவன். வெகுகாலம் ராவணனது வீட்டிலிருந்த சீதையை அவன் காமவெறியினால் கொண்டானாகையால் மானங்கெட்டவன்' என்று நிந்திப்பார்களாகையால் நான் சீதையின் பதிவிரதா தருமத்தை உலகோர்க்குக் காட்டவும், உண்மையை வெளியிடவும் சீதையை அக்கினியில் விழும்போது தடுக்காமலிருந்தேன்.

'இப்படிப்பட்ட அழகியைப் பார்த்து ராவணன் வெறுமனே இருப்பானோ' என்னில் இப்பெண்மணி தனது தேஜஸினால் (ஒளியினால்) நன்கு பாதுகாக்கப்பட்டிருப்பவள். சமுத்திரம் கரையைத்தாண்டமுடியாதிருப்பதுபோல் அவன் சீதையை அணுகுவதற்கு சிறிதும் வல்லனல்லன். அவன் மனத்தினாலும் கூட இப்பெண்மணியை அணுக வல்லனல்லன். எரிகின்ற அக்கினி ஜ்வாலையை எவன் தொடுவான்?

எப்படி சூரியனது ஒளி அவனைவிட்டு வேறுபட்டிராதோ அதுபோல் சீதை எனக்குச் சிறிதும் வேறு பட்டவளல்லள். மூவுலகங்களிலும் எல்லோரிலும் பரிசுத்தையான இந்த சீதையை என்னால் விடமுடியாது" என்று கூறிக்கொண்டே அந்த பிரமாதிதேவர்கள் தான்செய்த காரியத்தைப் புகழ்ந்து கொண்டிருக்கையில் சீதையுடன் சேர்ந்து ஆனந்தம் அடைந்தனன்.

நூற்றிருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்றிருபத்திரண்டாவது ஸர்க்கம்.

### சிவன் ராமனைப் புகழ்தலும் ராமன் தசரதனைக் காணுதலும்.

அப்பொழுது சிவன் சுபமான வார்த்தைகளைச் சொல்லத்தொடங்கி ராமனைப் பார்த்து "புண்டரீகாக்ஷனே! பகைவர்களை யழிப்பவனே! எங்கள் பாக்கிய வசத்தினால் நீ ராவணனைக் கொன்று அவனால் உலகங்களுக்கு ஏற்பட்டிருந்த பயத்தைப் போக்கினை. நீ அயோத்திக்குச் சென்று உன் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற பரதனைத் தேற்றி கௌசலை முதலிய தாய்மார்களையும் வணங்கி ராஜ்ஜியத்தைப் பெற்று வமிசவிருத்தி செய்து அச்வமேதஞ் செய்து நிகரில்லாத புகழைப் பெற்று பிராமணர்களுக்கு வேண்டிய தனங்களைக் கொடுத்து அப்பால் வைகுந்தம்போய்ச் சேருவாயாக. ராமா! இதோ உன் தந்தையான தசரத மகாராஜன் விமானத்தில் வீற்றிருக்கின்றனன். இவன் உன்னால் அசத்தியத்தைக் கடந்து இந்திரலோகஞ் சேர்ந்தனன். நீயும் லக்ஷ்மணனும் இவனை வணங்குவீர்களாக" என்றனன்.

மகாதேவன் இங்ஙனஞ் சொன்னதைக் கேட்டு ராமனும் லக்ஷ்மணனும் விமானத்திலிருக்கும் தந்தைக்கு வணக்கம் செய்தனர். அப்பொழுது விமானத்தில் சிறந்த ஆசனத்தில் வீற்றிருந்த தசரத மகாராஜன் தனக்கு பிராணனைக் காட்டிலும் பிரியமுள்ள புத்திரனை ராமனைக் கண்டு மிகுந்த சந்தோஷத்துடன் தனது தொடையில் உட்காரவைத்துக் கொண்டு புஜங்களால் அணைத்து, "ராமா! உன்னைப் பிரிந்தமையால் எனக்கு இந்த சுவர்க்கமும் பெருமையாயிராதிருக்கின்றது. உன்னை ஊரைவிட்டுத் துரத்துவதற்குக் கைகேயி என்னென்ன வார்த்தைகள் மொழிந்தனளோ அவையெல்லாம் மறக்காமல் என் மனத்திலேயே பொத்துக்கொண்டு என்னை வருத்திக்கொண்டே யிருக்கின்றன. இப்பொழுது நீயும்

லக்ஷ்மணனும் க்ஷேமமாய் இருப்பதைக் கண்டு உங்களை யணைத்த பின்பு வருத்தம் நீங்கி மகிழ்வுற்றேன்.

புருஷோத்தமா! முன்பு அஷ்டாவக்கிர மகரிஷி தனது தகப்பனை ஜனகமகாராஜனது சபையில் வாதத்தினால் கடைத்தேற்றினாற்போல் நற்புதல்வனான நீ சத்தியமென்கிற பாசத்தினால் கட்டுண்டிருந்த என்னை அசத்திய தோஷத்தினின்றும் விடுவித்துக் கடைத்தேற்றினை. உனது பிரதிக்கினையின்படி பதினான்கு வருடம் வனவாசஞ் செய்தனை. ஆகையால் சீக்கிரம் அயோத்திக்குச் சென்று ராஜ்ஜியத்தில் பட்டாபிஷேகங்கொண்டு நிலைபெற்று நீயும் உன் தம்பிகளும் நீண்ட ஆயுளுடன் கூடி சுகமாய் இருப்பீர்களாக" என்றனன்.

அப்பொழுது ராமன் அஞ்சலி செய்து "தந்தையே! நீ 'ராமனைக் காட்டுக் கனுப்புவாயாயின் உன்னையும் உன் புதல்வனையும் துறப்பேன்' என்று கைகேயியிடம் சபதஞ் செய்தனையே! இப்பொழுது அந்தக் கைகேயியிடத்திலும் பரதனிடத்திலும் தயைபுரிந்து இச்சாபம் அவர்களைத் தீண்டாதிருக்கும்படி அருள் செய்வாயாக" என்றனன். பிறகு தசரதன் ராமனைப் பார்த்து "நல்லது அப்படியே ஆகுக" என்று கூறி லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! நீ ராமனுக்கும் சீதைக்கும் சிறந்த பணிவிடைகளைச் செய்து மேலான கீர்த்தியைப் பெற்றனை. எல்லா தேவதைகளாலும் பிரமருத்திராதிகளாலும் பூஜிக்கப்படும் பரப்பிரம்மமே இந்த ராமனென்று இப்பொழுது தெரிந்துகொண்டாயாகையால் இவனுக்கும் சீதைக்கும் இனியும் பணிவிடை செய்து மேலான பயனைப் பெறுவாயாக" என்றனன்.

பிறகு தசரதன் சீதாதேவியைப் பார்த்து "சீதே! இந்த ராமன் உனது பரிசுத்தமான நடத்தையை உலகோர்களுக்குக் காட்டும் வண்ணம் உன்னை வெறுத்ததற்காக நீ கோபம்

செய்யலாகாது. அழகிய புருவங்களையுடையவளே! கணவனுக்குப் பணிவிடை செய்யும் விஷயத்தைப்பற்றி நான் உனக்குச் சொல்லவேண்டியதொன்றுமில்லை. ஆயினும் நான் மாமனுகையால் சொல்லுகிறேன் கேள். இந்த ராமனே உனக்கு மேலான தெய்வம்" என்றுகூறி சுவர்க்கலோகமடைந்தனன்.

நூற்றிருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்றிருபத்துமூன்றுவது ஸர்க்கம்

தேவேந்திரனுடைய அருளினுல் மாண்ட வானரர்களெல்லோரும் பிழைத்தெழுந்திருத்தல்.

பிறகு தேவேந்திரன் ராமனை நோக்கி "ராமா! நீ ராவணனைக் கொன்று எங்கள் கஷ்டத்தை நீக்கினபடியால் நாங்கள் மிகவும் சந்தோஷமடைந்தனம். ஆகையால் பிரதி உபகாரமாக நீ எங்களிடம் என்ன விரும்புகின்றனையோ அதை மொழிவாயாக" என்றனன். ராமன் தானும் தம்பியான லக்ஷ்மணனும், மனைவியான சீதையுமாக அஞ்சலி செய்து "தேவராஜனே! எனக்காகப் பராக்கிரமத்தை நிறைவேற்றி யுத்தத்தில் மாண்டு யமலோகம் சென்ற வானரர்களனைவரும் மீளவும் பிழைத்தெழுந்திருக்கும்படி செய்வாயாக. வானரர்களும் கரடிகளும் சிறிதும் வருத்தமின்றிப் புண்களுமில்லாமல் முன்போலவே சிறந்த பராக்கிரமசாலிகளாயிருக்கும்படி அருள்புரிய வேண்டுகிறேன். வானரர்கள் வசிக்குமிடங்களில் காலமல்லாத காலங்களிலும் முக்கியமான காய் கிழங்குகள் விளையவேண்டும். நதிகள் நிர்மலமான ஜலங்களுடன் விளக்கமுற்றிருக்கவேண்டும். இந்த வரத்தையே நான் வேண்டுகின்றேன்" என்றனன்.

இங்ஙனம் வேண்டிக்கொண்ட ராமனை இந்திரன் நோக்கி "ரகுகுல ராமா! நீ வேண்டுகின்ற இவ்வரம் மிகவும் பெரியது.

ஆயினும் நான் முதலில் ஒன்று சொல்லிப் பிறகு மற்றொன்றை இதுவரையில் சொன்னதேயில்லையாகையால் நீ வேண்டிக்கொண்டபடியே ஆகுக. ராக்ஷசர்களால் யுத்தத்தில் கால் கை தலை முதலியவை அறுப்புண்டு மாண்டு கொண்டை முசுக்களும் கரடிகளும் குரங்குகளும் மீளவும் எவ்வித வருத்தமும் காயமுமின்றி உறங்கியெழுந்திருப்பது போல் எழுந்திருப்பார்களாக. மேலான வில்லாளியே! இவ் வானரர்கள் வசிக்குமிடங்களில் அகாலத்திலும் மரங்கள் பலவகைப் புஷ்பங்களால் அழகாகி நல்ல பழங்கள் உண்டாகப் பெற்றிருக்கும். நதிகளும் தெளிந்த வெள்ளமுடையனவாகவிருக்கும்" என்றனன்.

பிறகு மரணமடைந்த வானரவீரர்கள் அனைவரும் தூங்கியெழுந்தாற்போல் பிழைத்தெழுந்தனர். அவர்கள் மிகுந்த சந்தோஷத்துடன் வந்து ராமனுக்கு வணக்கம் செய்தனர். அப்பால் எல்லா தேவதைகளும் ராமலக்ஷ்மணர்களிடம் விடைபெற்று தேவலோகத்திற்குச் சென்றனர். ராமலக்ஷ்மணர்களிருவரும் அந்த மேன்மையுடைய தேவதைகளனைவர்க்கும் வணக்கம் செய்து வானரர்களெல்லோரையும் விடுதிகளில் இளைப்பாறும்படி கட்டளையிட்டனர்.

நூற்றிருபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்றிருபத்து நான்காவது ஸர்க்கம்.

## விபீஷணன் ராமனை லங்கைக்கு வரும்படி வேண்டுதலும் ராமன் வரமுடியாதென்று கூறுதலும்.

பிரமாதி தேவர்கள் தம் தம் இடங்களுக்குச் சென்ற பின் அன்றிரவெல்லாம் ராமன் லங்கையில் இருந்து சுகமாகத் தூங்கி விடியற்காலத்தில் விழித்துக் கொள்ளுகையில் விபீஷணன் வந்து ராமனை வணங்கி "ஜயசீலனே! ஸ்நானத்திற்குத்

தகுந்த தீர்த்தமும் அணிந்துகொள்ள வஸ்திரங்களும் ஆபரணங்களும் திவ்வியமான சந்தனங்களும் நானுவித புஷ்பமாலைகளும் கொண்டுவந்திருக்கின்றேன். நன்கு அலங்காரஞ் செய்யத் தகுந்த பெண்மணிகள் இதோ வந்திருக்கின்றனர். உன்னை உபசாரத்துடன் நன்கு ஸ்நானஞ் செய்விப்பார்கள். நீ எனக்கருள் செய்யும்பொருட்டு அவற்றை ஏற்றுக்கொள்வாயாக" என்றனன்.

ராமன் விபீஷணனைப் பார்த்து "சுக்கிரீவன் முதலிய வீரர்களை மாத்திரமே நீ ஸ்நானத்தின்பொருட்டு அழைப்பாயாக. இளம்பருவத்தினனுன பரதன் என்பொருட்டு தாபஸ தருமங்களை ஆசரித்துக்கொண்டு வருத்தமுற்றிருக்கின்றனன். மற்றும் பதினன்கு வருஷம் கழித்து நான் திரும்பி வாராமற் போவேனுயின் அக்கினியில் குதித்து விடுவதாக பிரதிக்கினை செய்திருக்கின்றனன். அவன் பிரதிக்கினை தவறுபவனன்று. அவனில்லாமல் நான் எப்படி ஸ்நானஞ்செய்து சிறந்த ஆடையாபரணங்களை அணிவேன்? என்பொருட்டு சிறந்த தவ ஒழுக்கத்தை மேற்கொண்டு பிராணனையும் விடச் சித்தமாயிருக்கும் பரதனில்லாமல் நான் ஸ்நானம் முதலியவை செய்வது யுக்தமன்றுகையால் நான் சீக்கிரமாக என் பட்டணத்திற்குச் செல்கிறேன்" என்றனன்.

இங்ஙனம் ராமன் கூறியதைக் கேட்ட விபீஷணன் "ராமா! ஒரே தினத்தில் உன்னை அயோத்தியில் கொண்டு போய்ச் சேர்த்துவிடுகிறேன். எனதண்ணனுன குபேரனை ராவணன் யுத்தத்தில் வென்று அவனது புஷ்பகம் என்னும் விமானத்தைக் கைக்கொண்டனன். அவ்விமானம் நினைத்த விடத்திற்கு வெகு சீக்கிரமாகவே செல்லவல்லது. இதைக் குபேரன் வரினும் கொடாமல் நீ ஏறிக்கொண்டுபோகும் பொருட்டு பத்திரமாக வைத்திருக்கின்றேன். அதில் நீ ஏறிக்கொண்டு எவ்விதமான கவலையுமின்றி அயோத்தியை

அடையலாம். ராமா! நீ ஸ்நானஞ் செய்யாமற் போயினும் போகுக. நீ எல்லாமறிந்தவனுதலின் உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. உனக்கு என்னிடத்தில் அருள்செய்ய விருப்பமுளதாயின், என் பக்தி முதலிய குணங்கள் உன் மனதில் பட்டிருக்குமாயின், என்னிடத்தில் உனக்கு நட்பு உளதாயின் இரண்டொரு நாள் நீயும் லக்ஷ்மணனும் சீதையும் இங்குத் தங்கி நான் செய்யும் பூஜையை ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்றனன்.

அப்பொழுது ராமன் அனைவர்க்கும் கேட்கும்படி விபீஷணனை நோக்கி "நல்லியற்கையுடையவனே! நீ செய்த உதவி, யுத்தத்தில் நீ நிறைவேற்றின வீரச்செயல்கள், சிறப்புற்றதான உனது பக்தி ஆகிய இவற்றால் எல்லா விதத்திலும் நான் பூஜை செய்யப்பெற்றேன். விபீஷணு! எனக்காகப் புஷ்பக விமானத்தைச் சீக்கிரம் வரவழைப்பாயாக. நான் வனவாசஞ் செய்யவந்து பதினன்கு வருஷமாய் விட்டது. ஆகையால் நான் சீக்கிரம் அயோத்திக்குச் செல்லாவிடின் பரதன் அக்கினியில் குதித்து உயிர் விடுவான். ஆகையால் என்மேல் கோபம் கொள்ளாமல் எனக்கு அனுமதிகொடுப்பாயாக" என்றனன்.

இங்ஙனம் ராமன் மொழிந்ததைக் கேட்டு விபீஷணன் போய்ச் சீக்கிரமாக பொன்மயமான அவ்விமானத்தை எடுத்துக்கொண்டு திரும்பி வந்தனன். (அவ்விமானத்தின் மேன்மை அமைப்பு முதலியவற்றை சுந்தரகாண்டத்தில் கண்டுகொள்க.)

நூற்றிருபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்றிருபத்தைந்தாவது ஸர்க்கம்.

## ராமன் புஷ்பக விமானத்தில் அனைவரோடுங்கூடி ஏறிக்கொண்டு அயோத்திக்குப் புறப்படுதல்.

பிறகு ராமன் விபீஷணனை நோக்கி "ராக்ஷச ராஜனே! கஷ்டப்பட்டு சாதிக்கத் தகுந்த இந்தக் காரியத்தை யெல்லாம் தகுந்தபடி பிரயத்தனப்பட்டு சாதித்தவர் வானரர்களாவர். ஆகையால் நீ நானாவித ரத்தினங்களையும் வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் கொடுத்து இவர்களை சன்மானம் செய்வாயாக. தங்கள் பிராணன்களைச் சிறிதும் பொருள் செய்யாமல் சிறந்த பராக்கிரமத்தைக்காட்டி இவ்வானரர்கள் யுத்தஞ் செய்தமையால்தான் இதுவரையில் தேவதைகளுக்கும் ஜயிக்கமுடியாதிருந்த இந்த லங்கையை நாம் ஜயித்தோம். இந்த லங்காராஜ்ஜியம் இவர்களாலேயே உனக்குக் கிடைத்ததென்று அறிவாயாக. ஆகையால் நீ செய்ந்நன்றி மறவாமல் இவ்வானரர்களுக்கு யதேஷ்டமாக தனங்களைக் கொடுத்துப் பரிசளிப்பாயாக" என்றனன்.

விபீஷணன் அங்ஙனமே அவ் வானரர்களனைவர்க்கும் அவரவரது கௌரவத்திற்குத் தகுந்தபடி ரத்தினங்களையும் தனங்களையும் யதேஷ்டமாகக்கொடுத்து அவர்களை சந்தோஷப்படுத்தினன். பிறகு ராமன் சீதையை மடியில் எடுத்துக் கொண்டு லக்ஷ்மணன் தன்வில்லை எடுத்துப் பின்தொடர்ந்து வரப்பெற்று மேலான அப்புஷ்பக விமானத்தில் ஏறிக்கொண்டனன். பிறகு ராமன் எல்லா வானரர்களையும் சுக்கிரீவன் விபீஷணன் இவர்களையும் பார்த்து "வானரோத்தமர்களே! நீங்கள் எனது காரியத்தை நிறைவேற்றினீர்கள். உங்களனைவர்க்கும் விடைகொடுத்தேன். உங்களிஷ்டப்படி உங்களிருப்பிடம் செல்வீர்களாக.

சுக்கிரீவா! நல்ல மனமுடைய நண்பன் செய்யவேண்டிய காரியமனைத்தையும் நீ எனக்குச் செய்தனை. நீ விரைவில்

## ராமன் எல்லாருடனும் விமானத்திற் புறப்படல்

உன் சேனைகளுடன்கூடி கிஷ்கிந்தைக்குச் சென்று சுகமாயிருப்பாயாக. விபீஷணா! நான் கொடுத்த உன் சொந்த ராஜ்ஜியத்தை யனுபவித்துக்கொண்டு ராவணனைப்போல் பிறருடைய ராஜ்ஜியங்களைக் கவர நினையாமல் லங்கையில் சுகமாயிருப்பாயாக. நான் அயோத்திக்குச் செல்கின்றேனாகையால் எனக்கு எல்லீரும் அனுமதி கொடுக்கும்படி வேண்டுகிறேன்" என்றனன்.

ராமன் இங்ஙனஞ் சொல்லுகையில் சுக்கிரீவன் முதலிய வானரர்களும் விபீஷணனும் அஞ்சலி செய்த வண்ணம் ராமனைப்பார்த்து "நாங்களும் உன்னுடன் அயோத்திக்கு வர விரும்புகிறோம். அங்கு தேசங்களுக்குச் சிறிதும் துன்பம் உண்டாகாதபடி வனங்களிலும் நகரங்களிலும் மனவூக்கத்துடன் உலாவி உனது பட்டாபிஷேக வைபவத்தைக் கண்டு களித்து கௌசலைக்கு வணக்கஞ்செய்து விரைவாகவே எங்களிருப்பிடங்களுக்குத் திரும்பி விடுகின்றனம்" என்றனர்.

ராமன் மிகுந்த சந்தோஷத்துடன் அக்கருத்துக் கிசைந்தனன். உடனே விபீஷணனும் அவனது மந்திரிகளும் விமானத்தில் ஏறிக்கொண்டனர். பிறகு சுக்கிரீவன் அனுமான் முதலிய எல்லா வானரசைன்னியங்களும் ஏறிக்கொண்டனர். அந்தப் புஷ்பக விமானம் எத்தனை பேருக்கும் இடங்கொடுக்க வல்லதாகையால் அவ்வானரர்களும் ராக்ஷசர்களும் அனைவரும் சிறிதும் நெருக்கமின்றி அதில் சுகமாக உட்கார்ந்து கொண்டனர். பிறகு ராமன் புறப்படும்படி அனுமதி கொடுக்கையில் அச்சிறந்த புஷ்பக விமானம் ஆகாயத்திற் கிளம்பியது.

நூற்றிருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

நூற்றிருபத்தாறுவது ஸர்க்கம்.

## ராமன் சீதைக்கு வழியிலுள்ள விசேஷங்களைச் சொல்லுதலும் கிஷ்கிந்தையினின்று சுக்கிரீவன் முதலிய வானரர் மனைவிகளை சீதையின் வேண்டுகோளால் அழைத்துக்கொண்டு பரத்துவாசாச்சிரமத்திற்குப் போதலும்.

பிறகு அப்புஷ்பக விமானம் மிகுந்த வாயுவேகத்துடன் ஆகாயத்தில் பறந்து சென்று கொண்டிருக்கும்போது ராமன் சீதையைப் பார்த்து "ஜானகி! இதோ திரிகூட பர்வதத்தின் நுனியில் விளங்கும் லங்காநகரத்தைக் காண்பாயாக. இது விசுவகர்மாவினால் இயற்றப்பெற்றது. அதோ அந்த யுத்த பூமியைப்பார். அதில் மாமிசங்களும் ரத்தங்களும் நிறைந்து சேறாயிருக்கின்றது. அந்தவிடத்தில் தான் நான் ராவணனைக் கொன்றேன். இதோ இந்தவிடத்தில் கும்பகரணன் அடியுண்டு மாண்டு போயினன். இந்தவிடத்தில் தூம்ராக்ஷனும் வித்தியுன்மாலியும் இறந்தனர். இங்கு லக்ஷ்மணன் இந்திரசித்தைக் கொன்றனன். அழகான முகமுடையவளே! இதோ இந்த விசாலமான சமுத்திரத்தில் உன்னிமித்தமாக நலனைக்கொண்டு ஆச்சரியமாக நிருமிக்கப்பட்ட பெரிய அணையைப் பார். இது ஒருவராலும் செய்ய முடியாத காரியம்.

சீதே! முன்பு அனுமான் சமுத்திரத்தைத் தாண்டும் பொழுது அவனுக்கு இளைப்பாறும்பொருட்டு இடங்கொடுத்த மைநாக பர்வதத்தைக் காண்பாயாக. இதோ இந்த இடத்தில் தான் நான் சமுத்திர ராஜனைச் சீறி முடிக்க எண்ணங் கொண்டேன். பிறகு சமுத்திரராஜன் அருள்புரிந்த இடம் இதுவேயாகும். இவ்விடத்தில் தான் விபீஷணன் வந்து என்னிடஞ் சேர்ந்தனன். சீதே! இதோ சுக்கிரீவனது பட்டணமான அழகிய கிஷ்கிந்தா நகரத்தைக் காண்பாயாக. இங்கு தான் நான் வாலியைக்கொன்றேன்" என்றனன்.

அப்பொழுது சீதை வணக்கத்துடன் ராமனை நோக்கி "ராமா! சுக்கிரீவனுடைய தாரை முதலிய அருமைக் காதலிகளையும் மற்ற வானரோத்தமரது மனைவிமார்களையும் அழைத்துக்கொண்டே நாம் அயோத்திக்குப் போகவேண்டுமென்று நான் விரும்புகிறேன்" என்றனள். ராமன் அவ்வண்ணமே விமானத்தைக் கீழேநிறுத்தி சுக்கிரீவனுக்கு அவ்விஷயத்தை அறிவித்தனன். சுக்கிரீவனது ஆஞ்ஞையால் தாரை முதலிய அவனது மனைவிகளும் மற்றுமுள்ள எல்லா வானரர்களின் மனைவிமார்களும் மிகுந்த உத்சாகத்துடனும் சந்தோஷத்துடனும் வந்து விமானத்தில் ஏறிக்கொண்டனர்.

பிறகு விமானமானது ராமனது உத்தரவின்படி வேகமாகக் கிளம்பிச் செல்லும்போது ராமன் சீதையை மீளவும் நோக்கி "சீதே! இதோ இந்த ருசியமூக பர்வதத்தில் தான் எனக்கும் சுக்கிரீவனுக்கும் நட்பு ஏற்பட்டது. விசித்திரமான பம்பையென்கிற குளம் அதோ இருக்கிறது பார். இங்கு நான் உன் பிரிவினால் விளைந்த பெருந்துயரத்தைப் பொறுக்கமுடியாமல் புலம்பினன். இக்குளத்தின் கரையில் தான் நான் தருமஞ் செய்யும் தன்மையளான சபரியைக் கண்டேன். இங்கு நான் மிகவும் பயங்கரமான உருவமுடைய கபந்தனைக் கொன்றேன்.

சீதே! அதோ அந்தப்பெரிய ஆலமரத்தின்கீழே தான் ஜடாயுவுக்கும் ராவணனுக்கும் பெரிய யுத்தம் நடந்தது. அதோ நாம் முன் வசித்த அழகிய பர்ண சாலையைப் பார். இதோ கோதாவரி நதியையும் அகஸ்தியரது ஆச்சிரமத்தையும் காண்பாயாக அதோ சுதீக்ஷ்ணர் சரபங்கர் முதலியோரது ஆச்சிரமங்கள் விளங்குவதைக் காணாய். இவ்விடத்தில் தான் நான் பெருஞ் சரீரமுடைய விராதனைக் கொன்றேன். இதோ அத்திரி முனிவனின் ஆச்சிரமம் இருப்பதைக் காண்

பாயாக. இங்கு நீ முன்பு சிறந்த பதிவிரதையான அநசூயா தேவியைக் கண்டனை.

சீதே! இதோ சித்திரகூடம் வந்து விட்டது. இவ்விடத்தில் தான் முன்பு பரதன் வந்து என்னை ராஜ்ஜியத்தைப் பெற்றுக்கொள்ளும்படி வேண்டினன். இதோ அழகிய நிர்மலமான ஜலத்தையுடைய கங்கை ஓடுகின்றது பார். அதோ தெரிவது சிருங்கிபேரபுரம். அதில்தான் குகன் வசிக்கின்றனன். அதோ தெரிவது பரத்துவாசருடைய ஆச்சிரமம். அதோ நமது ராஜதானியான அயோத்திமாநகர் தெரிகின்றது பார். இப்பொழுது நீ சுகமாகத் திரும்பி வந்தாயாகையால் அந்நகரத்திற்கு வணக்கம் செய்வாயாக" என்றனன்.

பிறகு சுக்கிரீவனும் விபீஷணனும் மற்றுமுள்ள வானரர்களனைவரும் தேவேந்திரனுடைய அமராவதிபோல் அழகாக விளங்கும் அயோத்தியாபுரத்தைக் கண்டனர்.

நூற்றிருபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிருபத்தேழாவது ஸர்க்கம்

### ராமன் பரத்துவாசரது ஆச்சிரமத்தில் தங்குதலும், அம்முனிவர் வழியெங்கும் செழிப்பாயிருக்கும்படி வரங்கொடுத்தலும்.

ராமன் சரியாகப் பதினன்கு வருஷங்கள் நிரம்புகையில் சித்திரை மாதம் சுக்கிலபட்சம் பஞ்சமியினன்று பரத்துவாசரது ஆச்சிரமஞ் சேர்ந்து சிறந்த தவ ஒழுக்கமுடைய அம்முனிவரை வணங்கினன். ராமன் அம்முனிவரை நோக்கி "தபோதனரே! அயோத்தியாநகரம் செழிப்பாகவும் க்ஷேமமாகவும் இருக்கிற சமாசாரத்தைக் கேட்டிருப்பீரா? பரதன் க்ஷேமமாக ராஜ்ஜிய பரிபாலனஞ் செய்து வருகின்றனா? தாய்மார்கள் அனைவரும் க்ஷேமமாக இருக்கிறார்களா?" என்று வினவினன்.

பரத்துவாச முனிவர் ராமன் க்ஷேமமாகத் திரும்பி வந்து சேர்ந்ததற்கு மிகுந்த சந்தோஷமடைந்து புன்னகையுடன் அவனைப் பார்த்து "ராமா! பரதன் தூள் படிந்த உடம்புடன் சடைகள் தரித்து உன் பாதுகைகளை முன்னிட்டு ஜனங்களைப் பாதுகாப்பவனாகி உனது வரவை ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றனன். உனது வீட்டில் உள்ளோர் அனைவரும் க்ஷேமமே. சிறந்த பராக்கிரமமுடையவனே! நீ முன்பு கொடியவளான கைகேயியின் கடுஞ் சொற் கேட்டு ஈன்றெடுத்த தாயரையும் இராச்சியத்தையும் துறந்து கானகமே மிக விரும்பிச் சென்றபோது உன்னைப்பார்க்கையில் எனக்கு மனவருத்தமாயிருந்தது. இப்பொழுதோவென்னில் நீ விரோதிகளைத் தொலைத்து நண்பர்களுடன் க்ஷேமமாக வந்ததைபற்றி எனக்கு மிகவும் சந்தோஷமுண்டாகிறது. ராமா! நீ பதினான்கு வருடங்களுக்கு முன் இங்கிருந்து சென்றதுமுதல் ராவணனைக் கொன்றவரையிலும் நடந்த சகல விருத்தாந்தங்களையும் நான் என் தவமகிமையால் அறிந்திருக்கின்றேன். ராமா! நீ இன்று நான் செய்கிற ஆராதனையை ஏற்றுக்கொண்டு நாளையதினம் அயோத்திக்குச் செல்வாயாக" என்றனர்.

ராமனும் அக்கருத்துக்கிசைந்து அம்முனிவரை நோக்கி "தபோநிதியே! நான் அயோத்திக்குப் போகும் வழியில் மரங்களெல்லாம் அல்லாத காலத்திலும் பலன் கொடுப்பனவாகி தேனைப் பெருக்கிக்கொண்டிருக்க வேண்டும். பழங்கள் அமுதினுமினிய ருசியுடையவையாகிப் பலவாறு செழித்திருக்கவேண்டும்" என்று வரம் வேண்டிக்கொண்டனன். அம்முனிவர் 'அங்ஙனமேயாகுக' என்றதும் அங்குள்ள மரங்களெல்லாம் சுவர்க்கத்திலுள்ள கற்பக விருக்ஷங்கள் போல் எல்லாக் காலங்களிலும் செழிப்புற்றிருந்தன. அப்பொழுது வானரர்கள் அயோத்திக்குப் போகும் வழியில்

எந்தப்பக்கம் பார்க்கினும் மூன்று யோசனை தூரம் வரையில் பலியாதிருந்த மரங்களும் பலித்தன. புஷ்பிக்காத மரங்களெல்லாம் புஷ்பித்தன. உலர்ந்துபோன மரங்களெல்லாம் நிரம்பவும் பூக்களும் காய்களும் பழங்களும் நிறைந்து தேனைப் பெருக்கின. அப்பால் அவ்வானரர்கள் மிகுந்த சந்தோஷமடைந்து இனிமையான பலவித பழங்களை யதேஷ்டமாகத் தின்று சுவர்க்க வாஸிகளைப்போல் ஆனந்த மடைந்தனர்.

நூற்றிருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிருபத்தெட்டாவது ஸர்க்கம்

## குகனுக்கும் பரதனுக்கும் அனுமான் ராமனது வருகையை அறிவித்தல்.

பிறகு ராமன் அனுமானை நோக்கி "அயோத்தி சென்று அரண்மனையில் எனது தாய் முதலியோருடைய க்ஷேமங்களைத் தெரிந்துகொள்வாயாக. சிருங்கிபேரபுரத்திற்குச் சென்று எனது உயிர் நண்பனான குகனுக்கு நான் சொன்னதாக என் க்ஷேமத்தை அவனுக்குச் சொல்வாயாக. பிறகு பரதனிடஞ்சென்று எனது க்ஷேமத்தை யவனுக்கும் தெரிவிப்பாயாக. நான் வனவாசம் தீர்ந்து தந்தையின் வார்த்தையை நிறைவேற்றி சீதையோடும் லக்ஷ்மணனோடும் க்ஷேமமாக வந்திருக்கின்றேனென்று அவனுக்குச் சொல்லுவாயாக. மற்றும் நான் சீதையைப் பிரிந்ததுமுதல் ராவணனைக் கொன்றவரையில் நடந்த விருத்தாந்தங்களனைத்தையும் அவனுக்கு விரிவாகக் கூறுவாயாக. பிறகு பிரமருத்திராதி தேவர்கள் வந்தமையும் சிவனது அருளால் எனக்குத் தந்தையுடன் சம்பாஷணை நேர்ந்ததையும் அவனுக்குக் கொஞ்சங் கொஞ்சமாகச் சொல்லுவாயாக.

வானரோத்தமனே! இவ்விருத்தாந்தங்களைப் பரதன் கேட்கும்போது அவனுக்கு எவ்விதமான முகஜாடை தோற்றுமோ, எனது விஷயமாக அவனது மனக்கருத்து எவ்வண்ணம் புலப்படுகிறதோ அவற்றையெல்லாம் நீ ஊக்கத்துடன் தெரிந்துகொள்ள வேண்டும். ஏனெனில் ஒருக்கால் அவன் ராஜ்ஜியத்தை விரும்புவானாயின் சிறிதும் குறைவில்லாமல் இப்பூமண்டலத்தையெல்லாம் அவனே ஆண்டு வருவானாக. ஆகையால் அவனது மனக்கருத்தையறிந்துகொண்டு நான் வெகுதூரம் கடந்து வருவதற்கு முன்னமே விரைந்து வரவேண்டும். அவன் ராஜ்ஜியத்தில் விருப்பமுற்றிருப்பானாயின் நீ சீக்கிரம் இவ்விடம் வந்து சேரவேண்டும். அவன் ராஜ்ஜியத்தை விரும்பாதிருக்கும்பட்சத்தில் நீ திரும்பி வரவேண்டாம்'' என்றனன்.

உடனே அனுமான் மானிட ரூபந்தரித்து மிகுந்த வேகத்துடன் ஆகாயத்தில் கிளம்பி சிருங்கிபேரபுரத்தையடைந்து குகனைக்கண்டு "வேடர்களுக்கு அரசனே! ராமன் சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் க்ஷேமமாகத் திரும்பி வந்து பரத்துவாசரது ஆச்சிரமத்தில் தங்கியிருக்கின்றனன். அவன் உனக்கு தனது க்ஷேமத்தைச் சொல்லச் சொல்லினன். நீ சீக்கிரம் அவனைக் காண்பாய்'' என்று மொழிந்து மீண்டும் வேகத்துடன் ஆகாயத்திற் கிளம்பி வெகு விரைவில் நந்தி கிராமத்தையடைந்தனன்.

அயோத்திக்கு இரண்டு நாழிகை வழி தூரத்திலுள்ள ஆச்சிரமத்தில் மரவுரியையும் மான் தோலையும் வஸ்திரமாகத் தரித்து இளைத்த சரீரத்துடன் தவவேடம் பூண்டிருந்த பரதன் ராமனது வருகையை ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருப்பதை அனுமான் கண்டனன். அப்பரதன் சடைகளைத் தரித்து ராமனைப் பிரிந்த சோகத்தினால் இளைத்து இந்திரியங்களையடக்கிக் காய்கிழங்குகளைத் தின்று தவ ஒழுக்கங்

களிற் சிறந்த முனிவர்களைப்போல் விளங்கினன். மற்றும் அப்பரதன் ராமன் கொடுத்த பாதுகைகளை முன்னிட்டு அரசாட்சி புரிந்து ஜனங்களுக்கு ஒருவிதமான குறைவு மில்லாமல் க்ஷேமமாய் இருக்கும்படி காப்பாற்றிக்கொண் டிருந்தனன். மந்திரிகளும் புரோகிதர்களும் மிகுந்த மன வூக்கத்துடன் காஷாய வஸ்திரம் தரித்து அவனைப் பணிந் திருந்தனர்.

இங்ஙனம் தருமமே உருவங்கொண்டாற்போல் பிரகாசிக் கின்ற அப்பரதனைக் கண்டு அஞ்சலிசெய்து "ராஜ குமாரா! நீ எவனைக் குறித்து இங்ஙனம் வருந்துகின்றனையோ அந்த ராமன் தன் க்ஷேமத்தை உனக்குச் சொல்லும்பொருட்டு என்னை அனுப்பினன். தேவா! ராமன் ராவணன் முதலிய ராக்ஷசர்களைக் கொன்று சீதையை மீட்டுக்கொண்டு மனக் கருத்து நிறைவேறப் பெற்று பலிஷ்டர்களான நண்பர்க ளுடன் இதோ வந்து கொண்டிருக்கின்றனன். ராமன் சீதை யுடனும் லக்ஷ்மணனுடனும் கூடி இதோ சமீபத்தில் வந்து விட்டனர்" என்றனன்.

இங்ஙனம் அனுமான் சொல்லுகையில் பரதன் சந்தோ ஷத்தை அடக்க முடியாமல் திடீரென்று தரையில் வீழ்ந்து மூர்ச்சையடைந்தனன். ராமன் வருகின்றானென்ற வார்த் தைக்கே இப்படியாயின், இனி ராமனே திடீரென்று வருவா னாயின் எப்படியாகுமோ? பிறகு பரதன் பரபரப்புடன் எழுந்து அனுமானை அணைத்துச் சோகத்தைத் துறந்து ஆனந்தக் கண்ணீரினால் அவனது தேகத்தையெல்லாம் நனைத்தனன்.

பரதன் அனுமானை நோக்கி "நல்லியற்கையுடையவனே! நீ என்னிடம் தயை உண்டாகப்பெற்று இவ்விடம் வந்த தேவதையோ? மானிடனோ? தெரியவில்லை. இத்தகைய

இனிமையான பேச்சுக்களைப் பேசி எனக்கு ஆனந்தத்தை விளைத்த உனக்குப் பரிசாக லக்ஷம் பசுக்களையும் சிறப்புள்ள நூறு கிராமங்களையும், நற்குலத்திலுதித்த பதினாறு அழகிய கன்னிகைகளையும் கொடுக்கின்றேன்" என்றனன்.

நூற்றிருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிருபத்தொன்பது & நூற்றுமுப்பதாவது ஸர்க்கம்.

## அனுமான் பரதனுக்கு ராமனது விருத்தாந்தங்களைக் கூறுதலும், பரதன் பட்டணத்தை அலங்கரிக்கும் படி ஆஞ்ஞை செய்து ராமனிடம் செல்லுதலும்.

மீண்டும் அப்பரதன் அனுமானை நோக்கி "ராமனுக்கும் வானரர்களுக்கும் எங்ஙனம் நட்பு நேர்ந்தது? எதற்காக உண்டாயிற்று? உள்ளபடியே எனக்கு மொழிவாயாக" என்று வினவினன். அனுமான் அப்பரதனை நோக்கி "ராஜ குமாரா! நீ சித்திரகூடம் வந்து பாதுகைகளைப் பெற்றுக் கொண்டுபோன பின் ராமன் சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் மிகப் பெரிய தண்டகாரணியஞ் சென்றனர். அவர்கள் அங்ஙனஞ் சென்றுகொண்டிருக்கும்போது விராதனென்னும் அரக்கன் அவர்களை எதிர்த்து வந்தனன். அவர்கள் அவனைக் கொன்று சரபங்க முனிவரது ஆச்சிரமத்திற்குச் சென்றனர். சரபங்க முனிவர் சரீரத்தைத் துறந்து தேவலோகத்துக்குச் சென்ற பின் ராமன் அங்குள்ள முனிவர் அனைவர்க்கும் வணக்கம் செய்து ஜனஸ்தானம்போய்ச் சேர்ந்தனன்" என்று, ராமன் சீதையைப் பிரிந்தது முதல் ராவணனைக் கொன்று பிரமருத்திராதி தேவதைகளால் தோத்திரஞ் செய்யப் பெற்றது முதலிய சகல விருத்தாந்தங்களையும் விரிவாக விரித்துரைத்தனன்.

பிறகு அனுமான் ராமன் தன் சகல நண்பர்களுடனும் புஷ்பக விமானத்தில் ஏறிக்கொண்டு கங்கைக்கரையிலுள்ள

பரத்துவாசரது ஆச்சிரமத்தில் வந்திறங்கியிருக்கிற செய்தியைப் பரதனுக்குத் தெரிவித்தனன். பரதன் அனுமான் சொன்ன ராமனது வரலாற்றையெல்லாங் கேட்டு மிகுந்த சந்தோஷமடைந்தனன்.

பரதன் சத்துருக்கனனை நோக்கி "பரிசுத்தரான புருஷர்கள் சமஸ்த தேவதைகளையும் பூஜித்து, பட்டணத்திலுள்ள நாற்சந்தி மண்டபங்களையெல்லாம் நல்ல கந்தங்களாலும் பூமாலைகளாலும் வாத்தியங்களோடு அலங்கரிப்பார்களாக. துதி பாடகர்களும், பட்டணத்திலுள்ள வைதாளிகர்களனைவரும், வேசிக்கூட்டங்களும் சந்திரன் போன்ற ராமனது முகத்தைப் பார்க்கப் புறப்படுவார்களாக" என்றனன். சத்துருக்கனன் உடனே கூலிக்காரர்கள் பலரையும் வரவழைத்து, நந்திக் கிராமத்திலிருந்து அயோத்தி நகர் வரையிலும் பள்ளங்களில் மண்ணிட்டுத் தூர்த்தும் மேடுகளையழித்து ஒழுங்குபடுத்தியும் பூமியெல்லாம் மேடு பள்ளங்களில்லாமல் சமமாகச் செய்யும்படி கட்டளையிட்டனன்.

பின்னும் அச் சத்துருக்கனன் அப் பணியாளர்களை நோக்கி "நீங்கள் பாதை முழுவதும் பனிபோல் குளிர்ந்த தண்ணீரால் நனைத்து பொரிகளையும் புஷ்பங்களையும் இறைப்பீர்களாக. ராஜ மார்க்கங்களில் துவஜங்களை எடுத்துக் கட்டுவீர்களாக. வரிசை வரிசையாகப் புஷ்ப சரங்களைக் கட்டித் தாமரை நெய்தல் முதலிய விடுதிப் புஷ்பங்களை இறைத்துப் பட்டணத்தை அலங்காரம் செய்வீர்களாக" என்று ஆஞ்ஞாபித்தனன்.

பிறகு அரச மனைவிமார்களும் மந்திரிகளும் சேனாஜனங்களும் பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் சேரிகளிலிருக்கும் பிரமுகர்களும் மற்றுமுள்ள ஜனக்கூட்டங்களும் ராமனைப் பார்க்கப் புறப்பட்டனர். மந்திரிகள் பொன் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட பெரிய யானைகளின்மேல் ஏறிக்

கொண்டு புறப்பட்டனர். சில ராஜ புருஷர்கள் சிறந்த ரதங் களிலும் சிலர் மேலான குதிரைகளிலும் ஏறிக்கொண்டு புறப் பட்டனர். அநேகமாயிரம் காலாட்கள் சூழ்ந்து வரப்பெற்று வீரர்கள் புறப்பட்டனர். தசரதனது மனைவிமார்களனைவ ரும் தண்டிகைகளின் மேலேறிப் புறப்பட்டனர். பிறகு விரைவில் அயோத்தியிலுள்ளவர் அனைவரும் நந்திக் கிராமம் வந்து சேர்ந்தனர்.

அப்பால் பரதன் நான்கு விதமான சேனைகள் சூழப் பெற்று சங்கம் பேரி முதலிய வாத்தியங்கள் முழங்க ராமனது பாதுகைகளைத் தலையில் தரித்து வெண் கொற்றக் குடையை யும் வெண்சாமரங்களையும் ஏந்திக்கொண்டு சுமந்திரன் முத லிய மந்திரிகளோடு ராமனை எதிர் கொள்ளப்போயினன்.

அப்பொழுது பரதன் அநுமானை நோக்கி "உனக்கு வானரர்களுக்கு இயற்கையாகவே உண்டாயிருக்கும் சஞ்சல புத்தி நேராதல்லவா? அதனால் வெறுமனே ராமன் வருகிறு னென்று சொல்லிவிட்டனையோவென்று சந்தேகிக்கிறேன். ஏனெனில் ராமன் இன்னும் புலப்படவில்லையே! அவன் தூரத்திலிருப்பினும் அவனுக்கு முன்னே வரும் வானரர் களாவது புலப்படவேண்டுமே!" என்று வினவினன்.

பரதன் இங்ஙனஞ் சொல்லுகையில் அநுமான் அவ னைப் பார்த்து "பரத்துவாசரது அருளினால் மரங்களெல்லாம் எப்பொழுதும் பழமும் பூவும் காயும் நிறைந்து தேனைப் பெருக்கிக்கொண்டிருக்கின்றன. வானரர்கள் அவற்றைப் பற்றி சந்தோஷமுற்றிருக்கின்றனர். பரதா! பின்னும் தேவேந்திரன் ராமனுக்கு வானரர்களிருக்குமிடத்தில் மரங் கள் எல்லாக் காலத்திலும் பலிப்பனவாய் இருக்கும்படி வரங்கொடுத்தனன். அங்ஙனமே பரத்துவாச முனிவர் ராமனுக்கும் அவனது சேனைகளுக்கும் மேலான விருந்துண வைக் கொடுத்தனர்.

ராமனது தம்பியே! இதோ வானரர்கள் சந்தோஷத்துடன் செய்யும் கோலாகல சப்தம் கர்ணாமிருதமாகச் செவிப்படுகின்றது. அதோ மேல் கிளம்பிப் புலப்படுகின்ற தூள்களைக் காண்பாய். அதோ தூரத்தில் சந்திரன்போல் நிர்மலமான புஷ்பக விமானம் புலப்படுகின்றது. பிரமதேவன் நிருமித்த இந்த திவ்விய விமானத்தை ராமன் ராவணனைக் கொன்று பெற்றனன். இது மனோ வேகத்துடன் போகுந் தன்மையுடையது. இதில் ராம லக்ஷ்மணர்களும் சீதா தேவியும் சுக்கிரீவனும் விபீஷணனும் உட்கார்ந்திருக்கின்றனர்" என்றனன்.

அப்பால் 'இதோ ராமன் வந்தான்' என்றவுடனே அனைவரும் சந்தோஷம் வளரப்பெற்றுச் செய்த கோலாகல சப்தம் ஆகாயத்தை அளாவி நின்றது. அனைவரும் வாகனங்களினின்று இறங்கித் தரையில் நின்று கொண்டு ஆகாயத்தில் சந்திரன்போல் புஷ்பக விமானத்தில் விளங்குகின்ற ராமச்சந்திரனைக் கண்டனர். பிறகு பரதன் சந்தோஷத்துடன் ராமனுக்கு எதிரே நின்று கைகளைக் கூப்பி 'ராமன் தான் சொன்னபடி பதினான்கு வருடங்கள் கழித்து மீண்டும் அயோத்திக்கு எழுந்தருளினான்' என்று கூறி அவனைக் கொண்டாடினன்.

அப்பால் புஷ்பக விமானம் ராமனது கட்டளையினால் பூமியில் இறங்கியது. ராமன் பரதனையெடுத்துத் தன் துடையில் உட்காரவைத்து அவனை மிகுந்த சந்தோஷத்துடன் அழுந்தக்கட்டி அணைத்தனன். பிறகு பரதன் தனக்கு வணக்கம் செய்த லக்ஷ்மணனைக் கௌரவித்துத் தான் சீதா தேவியை வணங்கித் தனது பேரையும் சொல்லினன். பிறகு பரதன், சுக்கிரீவன், ஜாம்பவான், அங்கதன், நீலன், கஜன், கவாக்ஷன் முதலிய வானர வீரர்களை ஆலிங்கனஞ்செய்து கௌரவித்தனன். மீண்டும் அப்பரதன் சுக்கிரீ

வனை ஆலிங்கனஞ்செய்து 'சுக்கிரீவா! நீ எங்கள் நால்வர்க்கும் ஐந்தாவது உடன்தோன்றல் ஆயினை. உலகில் உன்னைப் போன்ற சிறந்த நண்பன் எவர்க்கும் கிடைத்தலரிது' என்று கூறிப் பிறகு விபீஷணனைப் பார்த்து 'எமது பாக்கியவசத்தினால் நீ ராமனுக்கு உதவிபுரிந்து செய்ய முடியாத காரியத்தைச் செய்தனை' என்றனன்.

அப்பொழுது சத்துருக்கனன் ராம லக்ஷ்மணர்களுக்கும் சீதைக்கும் பணிவுடன் வணக்கம் செய்தனன். பிறகு ராமன் சோகத்தினால் மிகவும் இளைத்துப் புலம்பிக்கொண்டிருந்த தன் தாயான கௌசலையிடஞ்சென்று அவளைத் தேற்றி அவளது வருத்தம் தீரும்படி பாதங்களைப் பிடித்துக் கொண்டு வணக்கம் செய்தனன். ராமன் சுமித்திரைக்கும் கைகேயிக்கும் மற்றுமுள்ள தாய்மார்களுக்கும் வணக்கம் செய்து புரோகிதரான வசிஷ்டரிடஞ் சென்று அவரை வணங்கினன்.

பட்டணத்து ஜனங்களெல்லாம் ராமனைப் பார்த்து "நீண்ட கைகளையுடையவனே! ராமச்சந்திரா! நின்வரவு நல்வரவாகுக" என்றனர். பிறகுபரதன் முன்பு தன்னிடம் ராமன் கொடுத்திருந்த பாதுகைகளை ராமனது பாதங்களில் தானே தொடுத்தனன். அப்பொழுது பரதன் ராமனைப் பார்த்து "ராமா! நான் வைப்பாக ரக்ஷித்துக்கொண்டிருந்த இந்த ராஜ்ஜியத்தை இதோ உனக்கு ஒப்புவித்து விட்டேன். நீ மீளவும் வந்து அயோத்திக்கு அரசனாய் இருக்கக்காண்கிறேனாகையால் என் ஜன்மம் பயன்பெற்றது. இப்பொழுதே என் கருத்தெல்லாம் நிறைவேறிற்று. நீ பொக்கசத்தையும் தானிய சாலைகளையும் பட்டணத்தையும் சைன்னியங்களையும் பார்த்துக்கொள்வாயாக. உன் பிரபாவத்தினால் அனைத்தும் நீ போகும்பொழுது இருந்ததைவிட இப்பொழுது பத்துமடங்கு அதிகமாய் விருத்தி அடைந்திருக்கின்றது" என்றனன்.

இங்ஙனம் பரதன் கூறும்பொழுது அவனுக்கு அண்ணனிடம் இருக்கும் மிகுந்த பக்தியைக் கண்ட விபீஷணனும் வானரர்களும் தமது வம்சத்திலுள்ளவர்க்கு அத்தகைய உடன்பிறந்தவர்கள் இல்லாமைக்கு மிகவும் வருந்திக் கண்ணீர் பெருக்கினர். பிறகு ராமன் சந்தோஷத்துடன் பரதனைத் தன் மடிமேல் உட்காரவைத்துக்கொண்டு சைன்னியத்துடன்கூட அந்தப் புஷ்பக விமானத்தின் வழியாகவே பரதனது ஆச்சிரமமாகிய நந்திக் கிராமத்திற்குப் போயினன். பிறகு ராமன் சைன்னியங்களும் தானுமாகப் புஷ்பக விமானத்தினின்று பூமியில் இறங்கினன்.

பிறகு ராமன் அவ்விமானத்தை நோக்கி 'இனி நீ குபேரனுக்கு வாகனமாய் இருப்பாயாக. உனக்கு விடைகொடுத்தேன், போவாய்' என்றதும் அம்மேலான விமானம் வடதிசை வழியாகச்சென்று குபேரனது மாளிகையை அடைந்தது. அப்பால் ராமன் தேவேந்திரன் பிருகஸ்பதியின் பாதங்களில் வணங்குவதுபோல் புரோகிதரான வசிஷ்டரது பாதங்களைப் பிடித்துக்கொண்டு வணங்கி அவரும் தானுமாக அழகான ஆசனங்களில் தனித்தனியே ஒரே காலத்தில் உட்கார்ந்தனர்.

நூற்றுமுப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுமுப்பத்தோராவது ஸர்க்கம்.

## ஸ்ரீ ராம பட்டாபிஷேக சன்னகம்.

அப்பொழுது பரதன் ராமனை நோக்கி "ராமா! நீ ராஜ்ஜியத்தைத் துறந்து வனவாசஞ்செய்துவந்து எனது தாயை சந்தோஷப்படுத்தினை. பிறகு இந்த ராஜ்ஜியத்தை எனக்குச் சித்திரகூடத்தில் கொடுத்தனை. இதோ நான் நீ கொடுத்த ராஜ்ஜியத்தை உன்னிடத்திலேயே கொடுத்து அந்தப் பாரத்தைத் தீர்த்துக்கொண்டேன். எனக்கு ராஜ்ஜி

யத்தில் விருப்பமுளதென்று நீ எள்ளளவும் நினைக்கவேண்டாம். இந்த ராஜ்ஜிய பாரத்தைத் தாங்க உன்னலல்லாமல் மற்றொருவராலும் முடியாது. நக்ஷத்திரமண்டலம் எவ்வளவு காலம் உலாவுமோ, பூமி எவ்வளவு காலம் நிலைநின்றிருக்குமோ, அவ்வளவு காலம் நீ இந்த சமஸ்த ராஜ்ஜியங்களுக்கும் பிரபுவாய் இருப்பாயாக. இனி எக் காலத்திலும் நான் இந்த ராஜ்ஜியத்தை விரும்பமாட்டேன்" என்றனன்.

பட்டாபிஷேகத்தின் பொருட்டு வெகுவிரைவாகவும் சுகமாகவும் வபனம் செய்யவல்ல நாவிதர்கள் சத்துருக்கனால் கட்டளையிடப்பெற்று ராமனுக்கும் பரதனுக்கும் சத்துருக்கனனுக்கும் முகமயிர்களைக் களைந்தனர். முதலில் பரதனும் பிறகு லக்ஷ்மணனும் அதன் பிறகு சுக்கிரீவனும் விபீஷணனும் ஸ்னானஞ் செய்தனர். பின்பு ராமன் சடைகளை விடுத்துத் தலைமயிர்களைச் சீர்திருத்திக்கொண்டு ஸ்னானஞ் செய்து நானாவகைப் புஷ்பங்கள் கோக்கப்பெற்று விசித்திரமான புஷ்ப சரங்களாலும், நல்ல வாசனை கமழ்கின்ற கர்ப்பூரம் கஸ்தூரி குங்குமப்பூ முதலியவை கலந்த சந்தனத்தினாலும் அலங்கரித்து உயர்ந்த பீதாம்பரத்தை யுடுத்து மிகுந்த ஒளியுடன் பிரகாசமுற்று சிம்மாசனத்தில் உட்கார்ந்தனன். சத்துருக்கனன் ராமனுக்கும் பரதனுக்கும் லக்ஷ்மணனுக்கும் ஆரம் தோள்வளை முதலிய ஆபரணங்களைப் பூட்டுவித்து அலங்காரம் செய்வித்தனன்.

பிறகு தசரதனுடைய மனைவிகள் நல்ல மனத்துடன் எல்லோரும் ஒன்று சேர்ந்து சீதாதேவிக்குத் தாமே தம் கைகளால் அலங்காரஞ் செய்தனர். பிறகு சத்துருக்கனனது ஆஞ்ஞையால் சுமந்திரனென்னும் சாரதி மேலான அழகிய ரதத்தில் சிறந்த குதிரைகளைப் பூட்டிக்கொண்டு வந்தனன். ராமன் சூரிய மண்டலம்போல் விளக்கமுற்று அவ்வழகிய ரதத்தில் ஏறிக்கொண்டனன். சுக்கிரீவன் முதலிய வானரர்

களும் அவர்களது மனைவிகளும் மேலான ஆபரணங்களை யணிந்து அயோத்தியா புரியைப் பார்க்க விருப்ப முற்றுட போயினர். தசரதனது மந்திரிகள் முன்னமே அயோத்திக் குச்சென்று வசிஷ்டரின் விருப்பத்தின்படி ராமனது பட் டாபிஷேகத்திற்கு வேண்டிய மங்கள திரவியங்களை சித்தட் படுத்தினர்.

தேவேந்திரன் பச்சைக்குதிரைகள் பூட்டின ரதத்தில் ஏறிக்கொண்டு அயோத்திக்கு வந்தனன். பரதன் குதிரை களின் கயிற்றைப்பிடித்து ராமனுக்கு சாரத்தியஞ் செய்த னன் (தேரோட்டினன்). லக்ஷ்மணன் முன்னே நின்று ராம னது தலையின்மேல் விசிறியால் வீசிக்கொண்டு வெண்சாமரத் தையும் எடுத்து வீசினன். விபீஷணன் மற்றொரு வெண் சாமரத்தை எடுத்து வீசினன். அப்பொழுது ஆகாயத்தில் ரிஷிகளும் தேவதைகளும் ராமன் செய்த வீரச்செயல்களைப் புகழ்ந்து கொண்டாடின சப்தமானது செவியில் பட்டுக் கொண்டிருந்தது. சுக்கிரீவன் சத்துருஞ்ஜயமென்னும் பட் டத்து யானையின்மீதேறிச் சென்றனன். வானரர்கள் மானிட உருவம் தரித்து அழகிய ஆடையாபரணங்களால் அலங்காரஞ் செய்து கொண்டு ஒன்பதினாயிரம் யானைகளின் மேல் ஏறிப் போயினர். ஸமஸ்த வாத்தியங்களும் ஒலித்தன.

அப்பொழுது அயோத்தியிலிருந்து ராமனது பட்டாபி ஷேகத்தைக்குறித்து ஆலோசித்துக்கொண்டு மீண்டும் ராமனை எதிர்கொள்ள வந்த மந்திரிகள் ராமனை 'ஜயவிஜயீபவ' என்று ஆசீர்வதித்து அவனைப் பின்தொடர்ந்து போயினர். மந்திரி களும் பிராமணர்களும் ஜனங்களும் சூழப்பெற்ற ராமன் நக்ஷத்திரங்கள் சூழ்ந்த சந்திரன் போல் ஒளிப்பெருக்குடன் மிகவும் பிரகாசித்தனன். அப்பொழுது நானாவித வாத்தியக் காரர்களும் தாளமிடுபவர்களும் பாடகர்களும் முன்னே நடந் தனர். மற்றும் மஞ்சள் தடவின அக்ஷதைகள் தரித்த

வர்களும் ராமனுக்கு முன்னே போயினர். அப்பொழுது ராமன் சுக்கிரீவனுக்குத் தன்னிடத்திலுள்ள சிநேகத்தை யும் அனுமானது வீரச்செயல்களேயும் ராக்ஷசர்களுக்குள்ள பல விசேஷத்தையும் விபீஷணன் தன்னைச் சரணம் அடைந் ததையும் மந்திரிகளுக்குச் சொல்லிக்கொண்டே அயோத்தியா புரத்தில் வானரர்களோடு கூடப் பிரவேசித்தனன்.

பிறகு தந்தையின் மாளிகையில் நுழைந்து கௌசலேக் கும் சுமித்திரைக்கும் கைகேயிக்கும் வணக்கம் செய்து பரதனை நோக்கி "முத்துக்களும் வைடூரிய மணிகளும் இழைக் கப்பெற்று மேன்மை தங்கிய எனது பெரிய மாளிகையை அதன் அந்தப்புர உத்தியான வனத்தோடு கூட சுக்கிரீவ னுக்கு விடுதியாகக் கொடுப்பாயாக" என்றனன். பரதன் அங்ஙனமே சுக்கிரீவனது கையைப்பிடித்து அழைத்துக் கொண்டு போய் ராமனது மாளிகையில் விட்டனன்.

சுக்கிரீவன் அதில் சுகமாகப் பிரவேசித்த பின் பரத னின் வேண்டுகோளின்படி வானரர்களை நோக்கி "வானரர் களே! நீங்கள் நாளைய உதயத்திற்குள் நான்கு சமுத்திரங் களினின்றும் புண்ணிய நதிகளினின்றும் ஜலங்களே நிறைத்து இந்தக் கலசங்களைக்கொண்டு இவ்விடம் வந்து எங்களை எதிர் பார்த்திருக்கவேண்டும்" என்று கட்டளையிட்டனன். உடனே மலைபோன்ற உருவமுடைய அவ்வானரர்கள் கருடனைப் போல் வேகத்துடன் ஆகாயத்தில் கிளம்பிச்சென்றனர்.

அப்பால் ஜாம்பவானும் அனுமானும் வேகதர்சியும் ருஷபனும் கலசங்களில் நீரை நிறைத்துக்கொண்டு வந்த னர். அந்நால்வரும் ஐந்தாறு நதிகளினின்றும் ஜலங் கொண்டு வந்தனர். பிறகு சுஷேணன் கிழக்கு சமுத்திரத்தி னின்றும் ருஷபன் தெற்கு சமுத்திரத்தினின்றும் கவயன் மேற்கு சமுத்திரத்தினின்றும் நலன் வடக்கு சமுத்திரத்தி

னின்றும் நவரத்தின மயமான பொற்கலசங்களில் நீர் கொண்டு வந்தனர். அப்பால் வஸிஷ்டர் பிராமணர்களோடு கூடி ஸீதையுடன் ராமனை ரத்தின மயமான பீடத்தில் உட்கார வைத்தனர்.

---

## ஸ்ரீராம பட்டாபிஷேகம்

பிறகு அஷ்டவசுக்கள் தேவேந்திரனுக்கு அபிஷேகஞ் செய்வதுபோல் வஸிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, காச்சியபர், காத்தியாயனர், ஸுயஜ்ஞர், கௌதமர், விஜயர் ஆகிய இவ்வெட்டுபேர்களும் தெளிந்து நன்மணங் கமழப்பெற்ற நீரினால் ராமனுக்கு அபிஷேகஞ் செய்தனர். பிறகு வஸிஷ்டர் மிகுந்த சந்தோஷத்துடன் முதலில் ருத்விக்குகளைக்கொண்டும் பின்பு பிராமணர்களைக் கொண்டும் அதன் பிறகு கன்னிகைப் பெண்களைக்கொண்டும் பிறகு மந்திரிகள் பட்டணத்து ஜனங்கள் போர்வீரர்கள் ஆகிய இவர்களைக் கொண்டும் ராமனுக்கு அபிஷேகஞ் செய்வித்தனர். வஸிஷ்டாதிகளால் அழைக்கப்பெற்ற உலகபாலகர்கள் நால்வரும் மற்றுமுள்ள தேவதைகளனைவரும் ஒன்று சேர்ந்து ஆகாயத்தில் வந்து நிறைந்து திவ்வியமான ஸமஸ்த ஓஷதி ரஸங்களாலும் ராமனுக்கு அபிஷேகஞ் செய்தனர்.

பிறகு மனுச் சக்கரவர்த்தி முதலான சூரிய வம்சத்து அரசர்கள் அணிந்து வந்ததும் பிரமதேவனால் நிருமிக்கப்பட்டதும் ரத்தின மயமுமான நீண்ட அழகிய கிரீடத்தை வஸிஷ்டரும் ருத்விக்குகளும் ரிஷிகளும் ராமன் திருமுடியில் வைத்து மற்றும் பலவகை ஆபரணங்களை ராமனுக்குப் பூட்டினர்.

அப்பொழுது சத்துருக்கனன் ராமனுக்கு அழகான வெண் கொற்றக்குடை பிடித்தனன். சுக்கிரீவன் வெண் சாமரை வீசினன். விபீஷணன் மற்றொரு சாமரத்தை

வீசினன். வாயுதேவன் தேவேந்திரனால் தூண்டப்பெற்று ஜ்வலிப்பதும் நூறு கமலங்களையுடையதுமான பொன் மாலையைக் கொண்டுவந்து ராமனுக்குக் கொடுத்தனன். பின்னுமவ்வாயுதேவன் ராமனுக்கு இந்திரனது விருப்பத்தின்படி சமஸ்த ரத்தினங்களோடு கூடியதும் இடையில் நாயகமணியால் அலங்காரமுற்றதுமாகிய ஓர் முத்துமாலையைக் கொடுத்தனன். அப்பொழுது தேவதைகளும் கந்தருவர்களும் சங்கீதாலாபத்தினால் பாடினர். அப்ஸர ஸ்திரீகள் ஆடினர். ஸ்ரீராகவனுடைய பட்டாபிஷேக மஹோத்ஸவத்தில் பூமியில் சமஸ்த பயிர்களும் நன்கு பலித்து க்ஷேமமாய் இருந்தது. மரங்கள் காயும் பழமும் நிறைந்து விளங்கின. புஷ்பங்கள் மேலான வாசனைகளை வீசின.

ராமன் முதலில் பிராமணர்களுக்கு லக்ஷ குதிரைகளையும் புதிதாக ஈன்ற லக்ஷம் பசுக்களையும் நூறு எருதுகளையும் கொடுத்தனன். மீளவும் ராமன் முப்பதுகோடி பொன் நாணயங்களையும் மற்றும் பலவகையான விலையுயர்ந்த ஆடையாபரணங்களையும் பிராமணர்களுக்குக் கொடுத்தனன். பிறகு ராமன் சூரிய கிரணங்கள்போல் ஜ்வலிப்பதும் நிறைய ரத்தினங்கள் இழைக்கப்பெற்றதுமான சுவர்ணஹாரத்தை சுக்கிரீவனுக்குக் கொடுத்தனன்; அங்கதனுக்கு வஜ்ரமணிகளும் வைடூரிய மணிகளும் இழைக்கப்பெற்ற அற்புதமான தோள்வளைகளைக் கொடுத்தனன். ராமன் சீதைக்கு மேலான ரத்தினங்களோடு கூடிச் சந்திரக்கிரணம்போல் நிகுநிகுப்புடன் பிரகாசிப்பதும் இணையற்றதுமான ஓர் முக்தாரத்தை (அனுமானுக்குக் கொடுக்கலாமென்னும் நினைவுடன்) கொடுத்தனன்.

அப்பால் சீதை ராமனது கருத்தையறிந்து திவ்வியமான இரண்டு வஸ்திரங்களையும் ராமன் தனக்குக் கொடுத்த முத்துமாலையையும் அனுமானுக்குக் கொடுத்தனள். அனு

மான் வெண்மையான அந்த ஹாரத்தை யணிந்து பிரகாசித்த னன். பிறகு ராமன் சமஸ்தமான வானரர்களுக்கும் அவ ரவர் மேன்மைக்குத் தகுந்தபடி வஸ்திரங்களையும் ஆபரணங் களையும் கொடுத்து கௌரவித்தனன். அப்பால் விபீஷண னுக்கும் சுக்கிரீவனுக்கும் அனுமானுக்கும் ஜாம்பவானுக்கும் மற்றுமுள்ள வானர வீரர்களுக்கும் ராமன் அவரவர்களுக் குத் தகுந்தபடி யதேஷ்டமான ரத்தினம் முதலிய வஸ்துக் களைக் கொடுக்கையில் எல்லோரும் மனதில் மிகுந்த திருப்தி யும் சந்தோஷமும் அடைந்து தம் தமது இடங்களுக்குப் போயினர். வானரர்கள் ராமனிடம் விடைபெற்றுக் கிஷ்கிந் தைக்குச் சென்றனர்.

விபீஷணன் ராமனால் மிகவும் பூஜிக்கப்பெற்று இக்ஷு வாகு வமிசத்தரசர்களின் குலதனமாகிய ஸ்ரீரங்க விமானத் தைப்பெற்று லங்கைக்குப் போயினன். பிறகு ராமன் பகை வர்களைக் கொன்று பெரும் புகழ்பெற்று சமஸ்த ராஜ்ஜியங் களையும் சந்தோஷத்துடன் பாதுகாத்தனன். அப்பால் ராமன் லக்ஷ்மணனை இளவரசுப் பட்டம் கட்டிக்கொள்ளு மாறு எவ்வளவோ சொல்லினும் அவன் அதை ஏற்றுக் கொள்ள விரும்பவில்லையாதலால் பரதனை இளவரசுப் பட்டத் தில் அபிஷேகஞ் செய்தனன்.

ராமன் பௌண்டரீகம் அச்வமேதம் வாஜபேயம் ஆகிய இந்த யாகங்களையும் மற்றும் பலவகை யாகங்களையும் பல தடவை நடத்திப் பதினாயிரம் ஆண்டுகள் ராஜ்ஜியபாரம் செய்து நூறு அச்வமேத யாகங்களைச் செய்தனன். ராமன் ராஜ்ஜியத்தை ஆண்டு வரும்பொழுது ஸ்திரீகளில் விதவை களே கிடையாது. துஷ்ட மிருகங்களாலுண்டாகும் பயமா வது வியாதிகளினாலேற்படும் பயமாவது எள்ளளவும் உண் டாகவில்லை. எவர்க்கும் எவ்வித கஷ்டமும் நேர்ந்ததில்லை. உலகில் திருடர் என்பவரே கிடையாது. வயது சென்ற

தந்தை முதலியவர் பிழைத்திருக்க இளைஞர் மரணமடைவது மில்லை. சமஸ்த ஜனங்களும் தருமத்தில் மிகவும் மனவூக்க முற்றிருந்தனர். ஜனங்கள் ஒருவர்க்கொருவர் விரோத மின்றிச் சுகமாக வாழ்ந்தனர். ஜனங்கள் சந்தானங்கள் குறையறப் பெற்று ரோகமின்றி வருத்தத்தை அறியாமல் புஷ்டியும் துஷ்டியும் அமைந்து பலவாயிரமாண்டுகள் ஜீவித் திருந்தனர். அவர்கள் எப்பொழுதும் 'ராமன் ராமன் ராமன்' என்று ராமனது வரலாற்றையே சொல்லிக்கொண் டிருந்தமையால் ஜகமனைத்திலும் எவ்விடத்திலும் ராம மய மாகவே இருந்தது. மேகங்கள் காலந்தவறாமல் மழை பெய்துகொண்டிருந்தன. காற்று சுகமாக வீசிக்கொண் டிருந்தது. பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் சூத்திரர் களும் பேராசையில்லாமல் அவரவர்க்கேற்பட்ட கருமங்களைத் தவறாமல் செய்தனர். இங்ஙனம் ராமன் தம்பிகளோடு கூடிப் பதினோராயிரம் வருஷங்கள் ராஜ்ஜியபரிபாலனஞ்செய்தனன்.

காவியங்களனைத்திலும் உயர்ந்த இந்த ராமாயணம் முன்பு வால்மீகி ரிஷியால் இயற்றப்பெற்றது. ஆகை யால் இது தனத்தைக் கொடுப்பதும் புகழை விளைப்பதும் ஆயுளை வளரச்செய்வதுமாய் இருக்கும். அரசர்களுக்கு வெற்றியைக் கொடுக்கும். இது வேதத்தின் பொருளைத் தெளிய உரைப்பது; இதை எவன் வாசிப்பானோ, அல்லது கேட்பானோ அவன் சமஸ்த பாபங்களினின்றும் விடுபடு வான். ஸ்திரீகள் ராமாயணத்தைக் கேட்பார்களாயின் நீண்ட ஆயுளையுடைய நல்ல புத்திரர்களைப் பெறுவர். இந்த ராமா யணத்தைக் கேட்பவர் எவரும் ஆயுள் வளரப்பெற்றுச் சுக மாக இருப்பர். தேசாந்தரம் போயிருப்பவன் அந்த தேசாந் தரவாசம் தீரப்பெற்று மீளவும் பந்துக்களுடன் சேர்ந்து சுகம்பெறுவான்; இவ்வுலகத்திலேயே ராமனது அருளால் விரும்பின வரங்களை யெல்லாம் பெற்றுச் சுகமடைவான்.

இந்த ராமாயணத்தைக் கேட்கின் சமஸ்த தேவதைகளும் பிரீதி அடைவார்கள். மற்றும் வீடுகளில் விக்கினம் செய்யும் பூதங்களும் சாந்தமாய் இருக்கும். அரசன் இந்த ராமாயணத்தைக் கேட்பானுயின் இப்பூமண்டலத்தை யெல்லாம் ஜயிப்பான். இந்த ராமாயணத்தை க்ஷத்திரியர்கள் எப்பொழுதும் தலை பூமியில்பட வணங்கி பிராமணன் மூலமாகக் கேட்கவேண்டும். அதனால் அவர்களுக்கு ஐசுவரியமும் நல்ல மக்கட்பேறும் தப்பாமல் விளையும். இந்த ராமாயணத்தை சம்பூர்ணமாகக் கேட்பவனிடத்திலும் வாசிப்பவனிடத்திலும் ராமன் எப்பொழுதும் பிரீதியுற்றிருப்பான். ராமன் ஆதிதேவனுன நாராயணன் எனப்படும் விஷ்ணுவாகையால் அவன் பிரீதி அடைவானுயின் அதற்குமேல் குறையென்? ஆகையால் அவன் ஆரோக்கியத்தையும் கிடைத்தற்கரிய மோக்ஷத்தையும் கொடுப்பான்.

இந்தச் சுபமான காவியத்தைக் கேட்பவன் குடும்ப விருத்தியையும் தனதான்னிய விருத்தியையும் சிறந்த மடந்தையர்களையும் மேலான சுகங்களையும்பெறுவான். ராமாயணத்தைக்கேட்பதால் பிதிர்தேவதைகளும் திருப்தி அடைவார்கள். மற்றும் எவர்கள் இந்த ராமனது திவ்விய சரித்திரத்தைப் பிறரைக்கொண்டு எழுதுவிப்பார்களோ, தாமும் எழுதுவார்களோ, அவர் இவ்வுலகத்தில் சமஸ்த ஐசுவரியங்களும் நிறைந்து அனைவராலும் பூஜிக்கப்பெற்று சமஸ்த போகங்களையும் அனுபவித்து ஸ்ரீ வைகுண்டத்தில் திரும்பி வருதல் இல்லாமல் சுகமாக வசித்திருப்பார்கள்.

---

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பில்

**யுத்த காண்டம்**

முற்றுப்பெற்றது.

ஸ்ரீ ராமபிரான் திருவடிகளே சரணம்.

ஸ்ரீராமபிரான் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமத் வால்மீகி ராமாயண மொழிபெயர்ப்பில்

# உத்தர காண்டம்

---

## முதல் ஸர்க்கம்

### ராமன் முனிவர்களை அரக்கர் பெருமையை எடுத்துரைக்குமாறு வினவியது.

ஸ்ரீ ராமபிரான் வெல்லுதற்கரிய ராவணன் முதலியோரைக் கொன்று அயோத்தியில் பட்டாபிஷேகம் கண்டருளியவளவில், முனிவர்கள் அனைவரும் ராமலக்ஷ்மணர்களைக் கொண்டாடும் பொருட்டு ராமனது சபைக்கு வந்தனர். அம்முனிவர்கள் யாவரெனில் கீழ்த்திசையிலுள்ளவர்களான கௌசிகர், யவக்கிரீதர், கார்க்கியர், காலவர் முதலியோரும், தென்திசையிலுள்ளவர்களான ஆத்திரேயர், நமுசி, அகஸ்தியர், அத்திரி முதலியோரும், மேலைத் திசையிலுள்ளவர்களான மிருகண்டு, தௌமியர், கௌஷீயர் முதலியோரும், வடதிசையிலுள்ள வசிஷ்டர், காசிபர், அத்திரி, விசுவாமித்திரர், கௌதமர், ஜமதக்கினி, பாரத்துவாசர் முதலியோருமாகிய பலருமாவர்.

மேற்கூறிய முனிவர் குழாம் வருவதுகண்ட ராமபிரான், ஆசனத்தினின்று மெழுந்து, வணங்கிய தலையனாய் நல்வரவுகொண்டாடி அவர்களை பக்தியுடன் உபசரித்துப் பொன்மயமான சிறந்த ஆசனங்களில் அவர்களை வீற்றிருக்கச் செய்தனன். பிறகு ராமன் அம்முனிவர்களின் க்ஷேமங்களைப்பற்றி வினவ, அவர்கள் அவனை நோக்கி "ரகுகுல திலகனே! உனது குடைநிழலில் தங்கிய எமக்கு யாதொரு குறையுமில்லை. நீ ராவணனைக் கொன்று ஜயசீலனாய் சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் மீண்டும் அயோத்திக்கு வந்து மகுடம் புனைந்தது எமது பாக்கிய விசேஷமேயாகும். உன்னை இங்ஙனம் தாய்மார்களுடனும், சகோதரர்களுடனும் ஒன்று சேர

மறுபடி என்று காண்போமென நாங்கள் பேராவல் கொண்டிருந்தோம். ராமா! எங்கள் ஆவல் நிறைவேறிற்று.

ராமா! மிகப் பயங்கரமான தோற்றமுடைய கொடியவரக்கர்களை நீ தொலைத்து எங்கள் வருத்தம் நீக்கினை. தேவர்களாலும் வெல்வதற்கரிய ராவணனை யெதிர்த்து யுத்தஞ் செய்து வெற்றியடைந்தனை. ஹா! ராவணனென்றால் எங்களுக்கு எவ்வளவு பயம் தெரியுமா? இவை யாவும் ஒருபுறமிருக்க, காலாந்தகனுக்கொப்பான இந்திரஜித்தை எதிர்த்து வெற்றிகொண்டதே எங்களுக்கு மிகப்பெருவியப்பாகத் தோன்றுகிறது. பெரிய மாயாவியான அவன் யுத்தத்தில் எவராலும் வெல்வதற்கரியன். அத்தகைய வீரன் வதையுண்ட வரலாற்றைக் கேட்கையில்தான் எமக்கு அதிகமான ஆச்சரியமுண்டாகின்றது. மாயாவிகளான பல ராக்ஷசர்களைக் கொன்று அனைவர்க்கும் அபயமளித்து நீ வெற்றி வீரனாக விளங்குவது யாம்பெற்ற பெரும் பாக்கியமேயன்றி வேறல்ல'' என்று கூறினர்.

இங்ஙனம் முனிவர்கள் கூறக்கேட்ட ராமன் அவர்களை நோக்கி "தவ ஒழுக்கத்திற் சிறந்த பெரியோர்களே! சிறந்த பராக்கிரமசாலிகளான கும்பகரணனும் ராவணனுமிருக்க, அவர்களைவிட்டு நீங்கள் இந்திரஜித்தை இங்ஙனம் சிலாகிப்பது யாது காரணம்? மகோதரன், பிரகஸ்தன், விரூபாக்ஷன், அதிகாயன், திரிசிரன் முதலிய சிறந்த வில்லாளிகளைவிட்டு இந்திரஜித்தை இங்ஙனம் நீங்கள் கொண்டாடுவதின் காரணமென்ன? அவனது வலிமை, பராக்கிரமம், முதலியவை எப்படிப்பட்டவை? ராவணனைவிட அவன் எப்படி ஏற்றமுடையவன்? அவன் தேவேந்திரனையும் வென்றவனன்றோ? இங்ஙனம் தந்தையினும் மேம்பட்டவனாகி அவன் தேவேந்திரனையும் வெல்லவல்லவனானது எங்ஙனம்? வரங்கள் பெற்றது எங்ஙனம்? இவை யாவும் அடியேனுக்கு விளங்க அருளிச்செய்ய வேண்டுகின்றேன்'' என்றனன்.

முதல் ஸர்க்கம் முற்றிற்று.

## இரண்டாவது ஸர்க்கம்.

## அகத்தியர் அரக்கர் வரலாறு கூறத் தொடங்கியது.

ராமன் இவ்வாறு வினவியது கேட்ட அகத்திய முனிவர் அவனை நோக்கி "ராகவா! இந்திரஜித்தினது வரலாறு கூறுவதற்குமுன் ராவணனது குலம், பிறப்பு, அவன் பெற்ற வரங்கள் முதலியவற்றைக் கூறுகிறேன் கேள். முன் கிருதயுகத்தில் பிரமதேவனுக்குப் புலஸ்தியர் என்கிற ஒரு முனிவர் பிறந்தனர். சிறந்த ஞானம், ஒழுக்கம் இவற்றையுடைய அவர் தமது நற்குண நற்செய்கைகளால் அனைவர்க்கும் விரும்பத் தக்கவராயினர். அவர் மேருமலைச் சாரலில் திருணபிந்து என்னும் முனிவரின் ஆச்சிரமத்தருகே குடிபுகுந்து ஐம்பொறிகளையுமடக்கி வேதமோதுதலே தொழிலாகக் கொண்டு தவம்புரியலாயினர்.

அக்காலையில், தேவ கன்னிகைகள், நாக கன்னிகைகள், ராஜரிஷி கன்னிகைகள் ஆகிய பலரும் அவ்வாச்சிரமத் தருகே சென்று, ஆடுவதும் பாடுவதும், வீணை முதலிய வாத்தியங்கள் வாசிப்பதுமாய் அம்முனிவரது தவத்திற்கு இடையூறு விளைவிப்பவராயினர். இதுகண்ட புலஸ்திய முனிவர் மிகச்சினந்து 'இவ்விடத்து எவரேனும் இனி எனக்குக் கட்புலனுவார்களாயின், அவர்கள் உடனே கருவுற்றவராவார்கள்' எனச் சபித்தனர். உடனே அவ்வழகிய கன்னிகைகள் அவரது சாபத்திற்கு அஞ்சினவர்களாகிப் பிறகு அவ்விடம் செல்லாதொழிந்தனர்.

இச்சாபத்தை யறியாத திருணபிந்து முனிவரின் மகள் வழக்கம்போல் அச்சமின்றி அவ்வாச்சிரமம் சென்று விளையாடலாயினள். அவள் புலஸ்திய முனிவரின் வேதகோஷத்தைச் செவியுற்று அவரைக் கண்டமையால் அவர் சாபமிட்டபடி அவள் கருத்தரித்து அது வெளியே விளங்க உடல் வெளுத்தவளாயினள். அது கண்டு அக் கன்னிகை நடுங்கினவளாகி தந்தையின் ஆச்சிரமஞ் சென்று நின்றனள். அம்முனிவர் அவளது மேனியின் வேறுபாட்டைக் கண்டு அவளை அதன் காரணம் கேட்க அவள் ஒன்றும் தெரியாமல் திகைத்தனள். திருணபிந்து

தன் யோக திருஷ்டியால் கண்டு அது புலஸ்திய முனிவரின் சாபத்தினால் விளைந்த விபரீதமெனத் தேர்ந்து, அப்பொழுதே அம்மகளை அம்முனிவரிடமழைத்துச் சென்று அவரை நோக்கி "முனிவரே! இவள் தேவரீருக்குப் பணிவிடை செய்ய விருப்ப முற்று வந்திருக்கின்றனள். ஆகையால் இவளை ஏற்றுக் கொள்ளவேண்டுகிறேன்" என்றனர்.

திருணபிந்து முனிவர் சொன்ன தருமமான வார்த்தையைக் கேட்ட புலஸ்தியர் அவர் கருத்திற்கிசைந்து விதி முறைப்படி அக்கன்னிகையை விவாகம் செய்துகொண்டனர். அப்பெண் மணியும் புலஸ்திய முனிவருக்குப் பிரீதியுண்டாகுமாறு செய்து கொண்டு அவரது ஆச்சிரமத்திலேயே வசித்து வந்தனள். அவளது சீலத்தினாலும் பணிவிடைகளாலும் மிகவும் சந்தோஷ மடைந்த அம்முனிவர் அவளை நோக்கி "ஓ சுந்தரி! உனது நல் லொழுக்கங்களினால் நான் சந்தோஷமடைந்தேன். ஆதலின் இரண்டு குலத்தையும் விளங்கச் செய்பவனாய் எனக்கு இணையான பெருமையுடையோனான ஒரு புத்திரன் உனக்குப் பிறக்குமாறு அருள்புரிகிறேன். நான் வேதமோதியதைக் கேட்டது காரண மாக உன் உதரத்தில் தோன்றியவனாதலின் அப்புதல்வனுக்கு விச்சிரவஸ் என்று பெயர் பிரசித்தமாகக் கடவது" என்றனர். அங்ஙனமே அப்பெண்மணி மூவுலகங்களிலும் பேரும் புகழும் பெற்ற அருந்தவத்தோனான விச்சிரவஸ் என்னும் புதல்வனைப் பெற்றனள். அந்த விச்சிரவஸனும் வேதமோதி தந்தையைப் போல் தவ ஒழுக்கத்தில் நோக்கமுடையவனாயினன்.

இரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

### மூன்றாவது ஸர்க்கம்.

## குபேரன் இலங்கையில் குடிபுகுந்து தனாதிபதியானது.

விச்சிரவஸ்ஸின் சிறந்த ஒழுக்கங்களைக் கண்ட பரத்துவாச முனிவர் தெய்வப் பெண்போன்ற வடிவழகு வாய்ந்த தம் மகளை அவருக்குக் கன்னிகாதானஞ் செய்தனர். விச்சிரவச முனிவ

ரும் பிரஜாவிருத்திசெய்ய வேண்டுமென்ற கருத்துடன் அப்பெண் மணியை விதிப்படி மணஞ்செய்துகொண்டு மிக்க மகிழ்ச்சியுடன் அவளுடன்கூடி வாழ்ந்தனர். அக்காலையில் அவருக்கு அப்பெண் மணியினிடத்து சிறந்த புத்திரன் ஒருவன் பிறந்தனன். அவனது பிறந்த காலத்து கிரகஸ்திதியை ஆராய்ந்துணர்ந்த அவனது பாட்டனாரான புலஸ்தியர் 'இவன் பிற்காலத்துத் தனதிபதியாகிக் குபேரன் எனப் பெயர் பெறுவான்' எனத்தேர்ந்து, மிகுந்த சந்தோஷத்துடன் அவனுக்கு அப்பொழுது 'வைச்சிரவணன்' என நாமகரணஞ் செய்தனர். அந்த வைச்சிரவணன் (குபேரன்) அத் தபோவனத்திலேயே வளர்ந்து வந்தனன்.

பிறகு வைச்சிரவணன் ஐம்பொறிகளையுமடக்கி அதிகமான நியமமுடையவனாகி, சிலகாலம் நீரே ஆகாரமாகவும், சிலகாலம் வாயுவே பக்ஷணமாகவும் கொண்டு தவஞ்செய்து பின்னர் ஆகாரமின்றி வெகுகாலம் தவஞ்செய்தனன். அவனது கொடிய தவத்தைக் கண்ட பிரமதேவன் அவனுக்குக் காட்சியளித்து "குழந்தாய்! நீ லோகபாலகர்களுள் ஒருவனாகித் தனரக்ஷகனாகக் கடவாய். இந்திரன், யமன், வருணன் ஆகிய மூவருடன் நீ நான்காவது திக்குப்பாலகனாகி, நிதிகளுக்கு (செல்வத்திற்கு) ஈசனாகக்கடவை. இதோ புஷ்பகமென்கிற அற்புதமான விமானமிருக்கின்றது. இதனை நீ வாகனமாகப்பெற்று தேவர்களுக்கு சமமாகக்கடவாய். உனக்கு மங்கள முண்டாகுக" என்று கூறித் தன்னிருப்பிடம் சென்றனர்.

அப்பால் வைச்சிரவணன் தந்தையிடஞ்சென்று கைகூப்பிய வண்ணம் "ஸ்வாமி! அடியேன் அருந்தவம் புரிந்து பிரமதேவனிடமிருந்து இஷ்டமான வரம் பெற்றனன். ஆயினும் அடியேனுக்கு இருப்பிடமின்னதென்பதை அவர் கூறவில்லையாதலின் தேவரீரே அதைக் கூறியருளவேண்டும்" என்றனன்.

விச்சிரவச முனிவர் தம் புத்திரனை நோக்கி "குழந்தாய்! தென்கடற்கரையில் திரிகூட மென்னும் பருவதம் ஒன்றுண்டு. அம்மலையினுச்சியில் தேவேந்திரனது அமராவதிப் பட்டணம் போன்ற விசாலமான நகரமொன்று உளது. இலங்கையெனப்

பெயர்பெற்ற அந்நகரம் இராக்கதர்கள் வசிக்கும்பொருட்டு விசுவ கர்மாவினால் வெகு அழகாக நிருமிக்கப்பட்டது. நீ அந்த இலங்காபுரி சேர்ந்து சுகமாக வாழலாம். பொன் மதில் சூழ்ந்து வைடூரியம் முதலிய ரத்தினங்களிழைக்கப்பெற்ற தோரணவாயிலையுடையதாய், யந்திர ரூபங்களான சஸ்திரங்கள் நிறைந்து ரமணீயமான அந்நகரத்தை இராக்கதர்கள் முன்பு விஷ்ணுவிடம் அஞ்சி அகங்குலைந்தவராகி விட்டு ஓடிப்போயினர். இராக்கதர் அனைவரும் பாதாள லோகம் போய்ச்சேர்ந்தமையால் இப்பொழுது இலங்காபுரி சூனியமாய் இருக்கின்றது. ஆகையால் நீ அவ்விடஞ்சென்று சுகமாக வசிப்பாயாக'' என்றனர்.

உடனே வைச்சிரவணன் மிக்க மகிழ்ச்சிகொண்டவர்களான அநேகமாயிரம் நைருதர்களுடனே, திரிகூட சிகரத்திலுள்ள இலங்காபுரியிற் குடிபுகுந்து வசிக்கலாயினன். சீக்கிரத்தில் அவனுக்கு அவ்விடத்தில் சகலவிதமான ஐசுவரியங்களும் யதேஷ்டமாக உண்டாயின. தனேச்வரனான வைச்சிரவணன் இங்ஙனம் கடலாற்சூழப்பெற்ற இலங்காபுரியில் நைருதர்கள் அனைவர்க்கும் அதிபதியாய்க் களிப்புற்று வாழ்ந்து வருகையில், அடிக்கடி புஷ்பக விமானத்திலேறி தேவர்களும் கந்தருவர்களும் போற்றிப் புகழவும், அப்ஸரஸ்திரீகள் ஆடிப்பாடி அழகு செய்யவும், கிரணங்கள் சூழப்பெற்ற கதிரவனென விளங்குகின்றவனாகி அடிக்கடி பெற்றோரை யடிபணிந்து அகமகிழச் செய்துகொண்டு சுகமாய் இருந்தனன்'' என்று கூறினர்.

மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## நான்காவது ஸர்க்கம்.

### அகத்தியர் அரக்கர் வரலாறு கூறுதல்

இங்ஙனம் அகத்தியர் கூறக்கேட்ட ராமன் அவரை நோக்கி "தபோதனரே! நான் இதுவரை புலஸ்திய வம்சத்தினின்றுமே அரக்கர்கள் உற்பத்தியாயினரென்று நினைத்திருந்தேன். இப்பொழுது வேறுவிதமாகவும் இராக்கதர்கள் உண்டாயினரெனத்

தேவரீர் கூறக்கேட்கிறேன். இராவணன், கும்பகாணன் முதலிய வர்களைவிட அவ்விராக்கதர்கள் அதிகமான ஆற்றல் உடையவர்களோ? அவர்களனைவர்க்கும் மூலபுருஷன் யாவன்? அவனது ஆற்றல் எத்தன்மையது? என்ன அபராதஞ் செய்து அவ்விராக்கதர்கள் விஷ்ணுவினல் ஓட்டப்பட்டனர்?'' என்று வினவினன்.

அகத்தியர் ராமனை நோக்கி "ரகுநந்தன! ஆதிகாலத்தில் ஸ்ரீமகாவிஷ்ணுவினது நாபீகமலத்தினின்று முண்டான பிரமதேவர் முதலில் தண்ணீரைப் படைத்து, அதைப்பாதுகாத்தற் பொருட்டு அனேகம் பிராணிகளைப் படைத்தனர். அங்ஙனம் படைக்கப்பட்ட பிராணிகள் மிகுந்த பசிதாகமுடையனவாகித் தம்மைப்படைத்த பிரமதேவனிடம் மிகுந்த வணக்கத்துடன் சென்று "பிதாமகரே! நாங்கள் செய்யவேண்டிய தொழில் யாது?'' என வினவினர். பிரமதேவர் அவர்களைநோக்கிப் புன்னகையுடனே 'பிராணிகாள்! நீவிர் இந்த ஜலத்தை ரக்ஷிக்கக் கடவீர்' என்று கூறினர். அதுகேட்டு அவர்களில் பசியில்லாத சிலர் 'ரக்ஷிக்கிறோம்' என்று கூறினர்; பசிகொண்ட சிலர் 'பக்ஷிக்கிறோம்' என்று கூறினர். அதனைச் செவியுற்ற நான்முகக் கடவுள் 'உங்களில் எவர் ரக்ஷிக்கிறோ மென்றனரோ, அவர்கள் ராக்ஷசர்களாகுக; எவர்கள் பக்ஷிக்கிறோமென்றனரோ அவர்கள் யக்ஷராகுக' என மொழிந்தனர், அவர்களும் அங்ஙனமே யாயினர்.

அந்த ராக்ஷசர்களில் ஹேதி, பிரஹேதி என இரண்டு சகோதரர்களிருந்தனர். அவர்களில் பிரஹேதி என்பவன் சிறந்த தருமிஷ்டனாகித் தவ ஒழுக்கத்தை மேற்கொண்டனன். ஹேதி என்பவனோ இல்வாழ்க்கையை விரும்பி யமனது சகோதரியான பயை என்னும் மிக பயங்கர உருவமுள்ள கன்னிகையைத்தானே கடிமணம் செய்து கொண்டனன். அந்த ஹேதியென்னும் ராக்ஷச ராஜனுக்குப் பயையினிடத்தில் வித்யுத்கேசன் என்கிற புத்திரன் பிறந்தனன். அந்த வித்யுத்கேசன் யௌவன வயது அடைந்தவளவில் சந்தியின் மகளான சாலகடங்கடையென்பவளை மணந்து இல்வாழ்க்கை நடத்தினன். அங்ஙனம் சிலநாள் செல்லுகையில்

அப்பெண்மணி கர்ப்பவதியாகி மின்னல் போன்ற மேனியுள்ள ஒரு புதல்வனைப் பெற்றனள்.

இங்ஙனம் பிள்ளை பெற்ற பின்னர் அவள் வித்யுத்கேச னுடனே காலங்கழிக்க விரும்பி அக்குழந்தையை மந்தர மலைச் சாரலில் விட்டு மறந்து கணவனுடனே கூடி விநோதமாகக் காலங்கழித்தனள். அப்பொழுது அவளால் விடப்பட்ட சிசு சரத்கால மேகம்போன்ற சோதியுடையதாகி வாயில் விரலைவைத்துக்கொண்டு அழத்தொடங்கியது. அச்சமயம் ஆகாயத்தில் இடபாரூடராய் பார்வதி தேவியுடன் சென்று கொண்டிருந்த பரமசிவன் அக்குழந்தையின் அழுகுரலைக் கேட்டு அதனிடம் கருணை கூர்ந்து அக்குழந்தையின் தாயாருக்கு அப்பொழுது என்ன வயதோ, அதே வயது அக்குழந்தைக்கு அந்த நிமிஷமே வருமாறும், தேவர்கள் போன்று அம்மகன் என்றும் மரணமில்லாதிருக்குமாறும், அனுக்கிரகித்து, பார்வதியின் பிரீதி நிமித்தமாக ஆகாயத்தில் எழுந்து செல்லவல்ல பட்டணமும் ஒன்று அளித்தனர். அப்பொழுது பார்வதீ தேவி, இராக்ஷச ஸ்திரீகள் கருத்தரித்த உடனே கர்ப்பம் முற்றிப் பிரசவ முண்டாகவும், பிரசவித்த போழ்தே குழந்தை தாயினது வயதுக்குச்சரியான வயதுள்ளதாகவும் வேண்டுமென அரக்கர்கட்கு வரமீந்தனள். சுகேசன் எனப்பெயர் பெற்ற அவ்விராக்கதன் இங்ஙனம் சிவபெருமானது அருள்பெற்று, அதனால் அகங்கரித்தவனாகி வானவீதியில் எழுந்து செல்லும் தனது நகரத்துடனே தேவராஜனென யதேச்சையாய் எங்கும் சஞ்சரிக்கலாயினன்.

நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐந்தாவது ஸர்க்கம்.

## சுகேசனது மக்கள் வரம்பெற்றது.

"சுகேசன் என்னும் இராக்கதன் சிவபெருமானிடம் இவ்வாறு விசேஷ வரம் பெற்றதைக் கேள்வியுற்ற கிராமணி என்கிற கந்தருவன், அழகிற்சிறந்த தேவவதி என்னும் தன் மகளை

அவனுக்கு விதிப்படி விவாகஞ்செய்து கொடுத்தனன். ஓ ராகவா! அந்த சுகேசன் தேவவதியுடன் கூடி வாழுநாளில் தேவவதி கருத்தரித்து மூன்று மைந்தர்களைப் பெற்றனள். அம்மூவரும் மாலியவான் சுமாலி மாலியெனப் பெயர் பெற்றவர்களாகி அனல் போன்ற காந்தியும் சிறந்த பெருமையும் கீர்த்தியும் பெற்று ஒருவராலும் வெல்லமுடியாத பராக்கிரமசாலிகளாய் விளங்கினர்.

பிறகு அம்மூவரும் மேருமலைக்குச் சென்று கொடிய தவஞ்செய்யலாயினர். சத்தியம், சமம், தபம் முதலான சற்குணங்களை மேற்கொண்டு மூவுலகங்களும் அஞ்சி நடுங்குமாறு அவ்வரக்கர் மூவரும் அருந்தவம் புரிதல் கண்ட நான்முகக் கடவுள் அவர்கட்குப் பிரத்தியக்ஷமாயினர். அப்பொழுது அம்மூவரும் மிகுந்த பக்தியுடன் அக்கடவுளை வணங்கி 'ஸ்வாமி! நாங்களியற்றிய தவத்தினால் தேவரீர் திருப்தியடைந்தவராயின், நாங்கள் எவராலும் வெல்வதற்கரியராயும், பகைவரை வெல்ல வல்லவராயும், சிரஞ்சீவிகளாயும், மிகுந்த பராக்கிரமமுடையவர்களாயும், ஒருவர்க்கொருவர் அன்பு மாறாதவராயும் விளங்கும்படி வரமளிக்க வேண்டும்' என வேண்டினர். 'அவ்வாறே யாகுக' எனப் பிரமதேவர் அவர்களுக்கு அருள்புரிந்து தம் உலகஞ்சென்றனர்.

ஓ ராமா! அந்த நிசாசரர்கள் அனைவரும் இங்ஙனம் வரம் பெற்ற பின்னர், எவரிடத்தும் அச்சமொழிந்தவராகி, தேவர்கள் அசுரர்கள் ஆகிய அனைவரையும் துன்புறுத்தத் தொடங்கினர். அவர்களால் வதையுண்ட தேவர்கள், சாரணர்கள், முனிவர்கள் ஆகிய அனைவரும் தம்மைக் காப்பவர் எவருமின்றி வருந்தலாயினர்.

பிறகு அவ்வரக்கர்கள் சிற்பிகளிற் சிறந்த விசுவகர்மாவை விளித்து, தங்களுக்கு தேவேந்திரனது மாளிகையைப்போன்ற அழகான மாளிகையொன்று நிருமிக்கும்படி விதித்தனர். அது கேட்ட விசுவகர்மாவானவன் அவர்களை நோக்கி "இராக்கதர்காள்! தென்கடற்கரையில் திரிகூட மென்கிற மலைச் சிகரத்தில் தேவேந்திரனது கட்டளையினால் இலங்கையென்னும் அற்புதமான

நகரமொன்று யான் நிருமித்திருக்கின்றேன். அது தேவேந்திரனுடைய அமராவதி நகரம்போன்றது; பறவைகளும் உட்புகுவதற்கு அரியதாகச் சுற்றிலும் ஈட்டிகள் நாட்டப்பெற்றது; முப்பது யோசனை அகலமும் நூறு யோசனை நீளமுமுள்ளது' பொன்மயமான மதிலால் சூழப்பட்டு சுவர்ணமயமான தோரணவாயிலையுடையது. அமராவதிப் பட்டணத்தில் சகல தேவர்களுடனும் தேவேந்திரன் வசிப்பதுபோல அவ்விலங்காபுரியிலே இராக்கதர்களுடன் கூடி நீங்கள் வாசஞ் செய்வீர்களாக'' என்று கூறினன். அங்ஙனமே அவ்விராக்கதத் தலைவர்கள் மிகுந்த மகிழ்ச்சியுடன் ஆயிரக்கணக்கான பரிவாரங்களுடன் இலங்காபுரியிற் குடிபுகுந்து வசிக்கலாயினர்.

இது இங்ஙனமிருக்க நருமதையென்னும் ஓர் கந்தருவ ஸ்திரீ அழகிற்சிறந்த தனது மூன்று கன்னிகைகளை மூன்று ராக்ஷசர்களுக்கும் முறையே மூத்தவனுக்கு மூத்தவளெனக் கன்னிகாதானஞ் செய்து கொடுத்தனள். அவர்கள் தம் தம் மனைவிகளுடன் இனிது வாழ்ந்து வருகையில் மூத்தவனான மாலியவானுக்கு அவனுடைய மனையாட்டியான சுந்தரியென்பவளிடத்தில் வஜ்ஜிரமுஷ்டி, விரூபாக்ஷன், துர்முகன், யஜ்ஞகோபன், மத்தன், உன்மத்தன் என்கிற புதல்வர்களும் அநலையென்று பெயருள்ள ஒரு மகளும் பிறந்தனர்.

சுமாலியின் மனைவியான கேதுமதி யென்பவள் பிரகஸ்தன், அகம்பனன், விகடன், தூம்ிராக்ஷன், தண்டன், சுபாரிசன், காசகர்ணன் என்கிற புதல்வர்களையும் ராகை, புஷ்போத்கடை, நகைமுகமுடையளான கைகசி, கும்பீனசி என்கிற கன்னிகைகளையும் பெற்றனள்.

மாலிக்கு அவன் மனையாட்டியான வசுதை யென்பவளிடத்தில் அநிலன், அனலன், அரன், சம்பாதியென்னும் நான்கு புதல்வர் பிறந்தனர்; இந்நால்வரே விபீஷணனுடைய அமைச்சர்களாவர்.

இவ்வாறு பல மக்களைப் பெற்றபின்னர் அவ்வரக்கர் மூவரும் தமக்குள்ள சௌரியத்தினால் செருக்குற்றவர்களாகித் தமது புதல்வர்களுடன் கூடித் தேவர்களையும் முனிவர்களையும் துன்

புறுத்தலாயினர். தாம் பெற்ற வரத்தின் மகிமையால் அகங்கார மதிகரித்து யாகங்கள் முதலிய நற்காரியங்களுக்கு இடையூறுகள் செய்யலாயினர்.

ஐந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஆறுவது ஸர்க்கம்.

## தேவர்களுக்குத் திருமால் அபயமளித்தது.

"ராமா! இங்ஙனம், அரக்கர்களால் துன்புறுத்தப்பட்ட தேவர்களும் முனிவர்களும் அஞ்சி நடுங்கிப் பரமசிவனைச் சரணமடைந்தனர். சிவபிரான் சுகேசனிடம் அபிமானமுடையவனாகி அவர்களை நோக்கி 'தேவர்காள்! அவ்வரக்கர்களைவெல்ல யான் வல்லவனல்லேன். ஆதலின் ஸ்ரீ மகாவிஷ்ணுவைச் சரணமடைவீர்களாக. எனக்கும் பிரபுவான அவரே அவ்விராக்கதர்களை வெல்லவல்லவர்' என்று கூறினர்.

அதனைச் செவியுற்ற தேவர்கள் ஸ்ரீ மகா விஷ்ணுவை அடைந்து அத்தேவனை அடிபணிந்து தாங்கள் சுகேசனது மக்களால் படும் துயரங்களை எடுத்துக் கூறித் தங்களை ரக்ஷிக்கும்படி வேண்டினர். நாராயணமூர்த்தி அஞ்சி வந்து முறையிட்ட தேவர்களுக்கு 'அஞ்சேல்' என்று அபயமளித்து 'தேவர்களே! யான் அவ்வரக்கர்களை அதஞ்செய்து உங்களைக் காப்பாற்றுகிறேன்; நீவிர் இனி இக்கவலை யொழிக' என அருள் செய்தனர். தேவர்கள் அனைவரும் அகமகிழ்ந்து அக்கடவுளைப் பலவாறு போற்றிப் புகழ்ந்து தம்மிடஞ் சென்றனர்.

இங்ஙனம் விஷ்ணு தேவன் தேவர்களுக்கு அபயமளித்த வரலாற்றைக் கேள்வியுற்ற மாலியவான் தன் தம்பிமார்களை நோக்கி 'தம்பிமார்களே! நம்மால் துன்புறுத்தப்பட்ட தேவர்களுக்கு ஸ்ரீமந் நாராயணமூர்த்தி அபயமளித்து நம்மை வதைப்பதாகப் பிரதிக்கினை செய்திருக்கின்றனன். இந்த நாராயணன் சாமானியமானவனல்லன்; இரணிய கசிபு முதலிய தேவ பகைவர்களை உருமாய்த்தவன். நமுசி, காலநேமி, மகாவீரனான சங்கிராதன், மாயாவியான ராதேயன், தார்மிகனான லோகபாலன் ஆகிய இவர்

களும் மகாபலிஷ்டர்களான தைத்தியர்களும் தானவர்களு மாகிய அனைவரும் அவனால் அடியுண்டு மாண்டொழிந்தனர். இவர்களனைவரும் நூறு யாகம் செய்தவர்கள்; மாயையுணர்ந்த சூரர்கள்; எல்லா அஸ்திரங்களிலும் வல்லமை பெற்றவர்கள். இத்தகைய சிறந்த வீரர்களெல்லாம் நாராயணனால் நூற்றுக் கணக்காகவும் ஆயிரக் கணக்காகவும் அதஞ் செய்யப்பட்டனர். ஆகையால் நாராயணனை வெல்வது அருமையான காரியமாகும். அவனே நம்மை வதைக்க விருப்புற்றிருக்கின்றனன். ஆதலின் இதனை ஆய்ந்துணர்ந்து இப்பொழுது யாம் செய்யத் தகுவது இன்னதெனச் சிந்தித்துத் தெளிவீர்களாக' எனக் கூறினன்.

மாலியவான் இவ்வண்ணம் மொழிந்தது கேட்டு மாலியும் சுமாலியுமாகிய இருவரும் அவனை நோக்கி 'அண்ணா! நாம் வேதங்களனைத்தையும் ஓதியுணர்ந்து மேலான வரங்கள் பெற்றுளோம்; அழியாத ஆயுளும் பெற்று சிறந்த தருமங்களும் செய்திருக்கின்றோம். எவராலும் கலக்கவொண்ணாத தேவ சேனையான சாகரத்தைக் கலக்கி வெற்றிகொண்ட நமக்கும் மரண பயமுண்டாகுமோ? அந்த நாராயணனோ, ருத்திரனோ, யமனோ — எல்லோரும் நம்மை எதிர்த்து எதிரே நிற்க அஞ்சுவார்களே! ஓ ராக்ஷசேச்வர! விஷ்ணுதேவனுக்கு நம்மிடம் துவேஷமுண்டாக ஒரு காரணமும் காணப்படவில்லை. தேவதைகளின் தூண்டுதலினாலேயே அக்கடவுளின் மனம் மாறுபட்டிருக்கின்றது. ஆகையால் நாம் சேனைகளுடன் புறப்பட்டு அத்தேவர்களையே எதிர்த்து வதைசெய்யப் பாடுபடுவோம்' என்றனர்.

இவ்வண்ணம் ஆலோசனை செய்துகொண்டு மகாபலிஷ்டர்களான அவ்விராக்கதர்கள் போர்க்குப் பறையறைந்து சகல சேனைகளும் சூழப் புறப்பட்டு தேவலோகத்திற்குச் சென்றனர். அச்சமயம் அரக்கர்கட்கு விநாசம் விளைவதற்கு அறிகுறியாய் அநேக உற்பாதங்கள் (கெட்ட சகுனங்கள்) உண்டாகத் தொடங்கின. மேகங்கள் ரத்தமழையைப் பொழிந்தன; கடல் கரைபுரண்டு பெருக்கெடுக்கலாயிற்று; மிகப் பெரிய மலைகள் சலிக்கலாயின; குள்ள நரிகள் அனைவரும் அஞ்சுமாறு ஊளையிடலாயின.

ஆகாயத்தினின்றும் பயங்கரமான கொள்ளிக்கட்டைகள் விழுந்தன. வானத்தில் பல கழுகுகள் கொள்ளியை வாயினால் உமிழ்ந்துகொண்டு அரக்கர்களின் தலைக்கு நேராக, எரியினாலாகிய சக்கரமென வானத்தில் வட்டமிட்டுப் பறந்தன. காகங்கள் கோரமாகக் கூவின; பூனைகள் குறுக்கிட்டன.

இங்ஙனம் அனேகமான அபசகுனங்கள் உண்டாகையிலும் அவ்விராக்கதர்கள் சௌரியத்தினால் செருக்குற்று, அவற்றை ஒரு பொருட்டாக மதியாது வெற்றியை வேண்டி மேககர்ஜனை போன்ற பெருஞ்சத்தத்துடனே தேவலோகஞ் சென்றனர்.

இச்செய்தியை நாராயணன் தேவ தூதர்களால் கேட்டுணர்ந்து அரக்கர்களை வதைக்க விரும்பி, கோடி சூரியப்பிரகாசமான திவ்விய கவசமணிந்து, அளவற்ற அம்புகள் நிறைந்த அம்பறாத்தூணிகளைத் தரித்து, சங்கு, சக்கரம், தண்டு, வாள் முதலிய பஞ்சாயுதங்களும் பூண்டு பொன்மலைபோல் விளங்கும் கருடன் மீதேறி வெகு விரைவாக அரக்கர் சேனையினருகே சென்றனர். அப்பொழுது புள்ளரசின் சிறகு வீசிய வேகத்தினாலுண்டான காற்று தாக்கி அவ்வரக்கர் படை, சிலைகள் சிதறிய மலைபோன்று சற்றுச் சலனமுற்றது. ஆயினும் அவ் வரக்கர்கள் உற்சாகமடைந்து, பற்பல விதமான பகழிகளாலும் மிகச்சிறந்த படைக்கலங்களாலும் மாதவனைச் சூழ்ந்துகொண்டு பலவாறு துன்புறுத்தலாயினர்.

**ஆறுவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## ஏழாவது ஸர்க்கம்.

## அரக்கர்கள் திருமாலிடம் அடியுண்டது.

மேகங்கள் மிகப்பெரிய மலைமீது மழை பொழியுமாறுபோல் இராக்கதர்களாகிய மேகங்கள் நாராயணனாகிய நீலமலை மீது சரவருஷம் வருஷிக்கலாயின. அரக்கர் விட்ட பகழிகள் பரமபுருஷனிடம் புகுந்தது. பிரளய காலத்தில் பிராணிகள் அவர் உடலில் புகுவதுபோல் தோன்றியது. அவ்விராக்கதர்களால்

இங்ஙனம் அடியுண்ட அச்சுதன் சார்ங்கமென்னும் தனது வில்லை வளைத்து வஜ்ஜிராயுதத்திற் கொப்பான கணைகளைத் தொடுத்து அவ்வரக்கர்களை நூறு நூருகவும் ஆயிரமாயிரமாகவும் வதைத்துப் பறக்கடித்துப் பாஞ்சசன்னிய மென்கிற தனது சங்கத்தை ஊதி பெருங்கோஷ முண்டாக்கினன். அச் சங்கத் துவனி கேட்ட அரக்கர் அரணியத்தில் சிங்கத்தினது கர்ஜனையைக்கேட்ட மதயானைகளென அஞ்சி நடுங்கினர்.

இங்ஙனம் நாராயணனது சார்ங்கத்தினின்றும் கிளம்பின வாளிகளால் பிளக்கப்பட்ட இராக்கதர்கள் வஜ்ஜிராயுதத்தினுல் வெட்டுண்டவர்களெனப் பூமியில் வீழ்ந்தனர். அச்சமயம் விஷ்ணுதேவனின் பாஞ்ச சன்னிய மென்னும் சங்கின்பேரொலியும் அவனது சார்ங்க வில்லின் நாணொலியும் அரக்கர்களின் கூச்சலினுலுண்டான பெருஞ்சத்தத்தை யடக்கி விட்டன. அச்சுதனின் வில்லினின்று ஒன்று நூருயிரமாகக் கிளம்பின வாளிகள் அரக்கர்களது கரங்களையும் சிரங்களையும் அமோகமாக அறுத்துத் தள்ளின.

அங்ஙனம் அம்புகளை விடுத்த விஷ்ணு மூர்த்தியினுல் அவ்விராக்கதர்கள் மிகவும் வெருட்டப்பட்டவர்களாகி எல்லா பக்கங்களிலும் அஞ்சியோடலாயினர். அநேகர் அடியுண்டு மண்மீது மடிந்தனர். மிகுந்த அரக்கர் படை அகங்குலைந்து இலங்காபுரியை நோக்கி ஓடலாயின.

இதுகண்டு அரக்கர் தலைவனுன சுமாலி ஓடுகின்ற அரக்கர்களை உத்சாகப்படுத்தி மிகுந்த கோபாவேசத்துடன் விஷ்ணுவை நோக்கி எதிர்த்தோடி வந்தனன். உடனே அச்சுதன் அவனது தேர்ப்பாகனுடைய முடியை அறுத்துத் தள்ளினன். தேரோட்டியில்லாத தேர்க்குதிரைகளுடன் சுமாலி யாதும் தோன்ருது மயங்கி நின்றனன்.

இங்ஙனம் சுமாலி தவிப்பதைக்கண்ட மாலி யென்பவன் தேரேறி விஷ்ணுவின் மேல் வாளி மழை பொழிந்தனன். அவன் ஆயிரமாயிரமாக அம்புகளைப் பொழிகையிலும், ஜிதேந்திரியன் (இந்திரியங்களை வென்றவன்) துன்பங்களால் சிறிதும் சலியாதது

போல விஷ்ணு தேவர் அவற்றால் சிறிதும் கலக்கமுற்றனரல்லர். அவர் வஜ்ஜிராயுதமும் மின்னலுமென விளங்கும் அமோகமான அம்புகளை அவன் மீது பொழிந்து அவனை மயங்கச்செய்தனர்.

பிறகு மாலி பெரியதொரு கதாயுதத்தை யேந்தி விஷ்ணு மூர்த்தியை யணுகி அவரது வாகனமான கருடனை அக்கதையினால் முகத்தில் மோதினன். மாலியினால் இங்ஙனம் புடைபட்ட பக்ஷிராஜன் மிகத்துன்புற்று அவ்வேதனைக்கு ஆற்றாதவனாகி விஷ்ணுவைப் போர்க்களத்தினின்றும் பின்புறம் கொண்டு சென்றனன். இதுகண்ட அரக்கர் குழாம் ஆனந்தக் கூச்சலிட்டன.

உடனே ஜனார்த்தனன் கோபங்கொண்டு குறுக்காகத்திரும்பி அம்மாலியின்மீது தனது சக்கராயுதத்தைப் பிரயோகித்தனன். அனேகமாயிரஞ் சூரியர்களுக்கொப்பான அச்சக்கராயுதம் மாலியினது முடியை அறுத்துத் தள்ளியது. இதுகண்ட தேவர்கள் ஆனந்தத்தினால் ஆரவாரித்தனர்.

மாலி இவ்வாறு மாதவனால் மடிந்தது கண்டு அவனது சகோதரர்களான சுமாலி மாலியவான் என்னுமிருவரும் சோகத்தினால் தவிப்புண்டவர்களாகி இலங்காபுரிக்கே திரும்பி ஓடலாயினர். இதற்குள் புள்ளரசன் விடாய் தீர்ந்து மிக்க சினங்கொண்டு முன்போலவே தனது இறகுகளினின்றுமுண்டாகும் காற்றின் வேகத்தினால் அரக்கர்களை அடித்தோட்டினன். அக்காலையில் அவ்விராக்கத சேனை, குடைகளொடியவும், அத்திரங்களொழியவும், குடல்கள் வெளிப்பட்டு அச்சத்தினால் கண்களை வெருள வெருள விழித்துக்கொண்டு பெருங்கூச்சலுடன் அதிவேகமாய் ஓடின. விஷ்ணுதேவனின் கூரியவாளிகளினாலடியுண்ட அரக்கர்கள் நசுங்குண்ட சரீரமுடையவர்களாய் வரைகளென விண்ணிடை நின்று மண்ணில் விழலாயினர். இங்ஙனம் அச்சுதனால் அடிபுண்ட நிசாசரர்கள் ஓயாது தரையில்வந்து வீழ்வது நீலமலைகள் மடிந்து மண்மீது வீழ்வதெனத் தோன்றியது.

ஏழாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எட்டாவது ஸர்க்கம்.

## அரக்கர் தோல்வியுற்றுப் பாதாளம் புகுதல்.

'ராமா! அப்பொழுது மாலியவான் விசையாகத் திரும்பிவந்து கோபத்தினால் கண்கள் சிவந்து விஷ்ணு தேவனை நோக்கி 'அடே! சார்ங்க மேந்தும் தடக்கையனே! நீ க்ஷத்திரிய தருமத்தை அறியாயோ? போர்புரிய விருப்பமின்றிப் பயந்தோடு கின்ற எங்களை யெதிர்த்து அதஞ்செய்கின்றனையே! உனக்குப் போர்புரிய விருப்பமுளதாயின், உன்பலத்தை என்னிடம் காட்டுவாயாக' என்றனன்.

மாலியவான் இங்ஙனம் கூறித் தன்கையிலிருந்த சக்தியென் னும் ஆயுதத்தை அரியினது உரத்தை நோக்கி விடுத்தனன். அவ்வேலாயுதம் மாதவனது மார்பில் புதைந்து மேகத்தி னிடையே தோன்றிய மின்னலெனை விளங்கியது. தாமரைக் கண்ணன் அச்சக்தியை தன் மார்பினின்றும் பிடுங்கி மாலியவான் மீது விடுத்தனன். அவ்வேலாயுதம் அதிக உக்கிரத்துடன் அவ் விராக்கதனை நோக்கிச்சென்று அவனது விசாலமான மார்பில் மலைமுடியி விடிவிழுவதுபோல் வேகமாய்ப் பாய்ந்தது. அதனு லவன் கவசம் பிளந்து உடல் புண்பட்டு மூர்ச்சையடைந்தனன்.

ஆயினும் அவ்விராக்கதன் சீக்கிரம் ஆயாசம் தீர்ந்து மறு படி யெழுந்து மற்றொரு சூலாயுதத்தை யெடுத்து விஷ்ணுவி னது மார்பை நோக்கி விடுத்தனன். அதுவன்றி அவ்வரக்கன் மாதவனின் மார்பினிடையே தனதுகைத்தலத்தினால் மோதி யடித்தனன். பின்னுமக்கொடியவன் கருடனையும் ஓர் அறை யறைந்தனன்.

கருடபகவான் மிகுந்த சினங்கொண்டு தனது பக்ஷங்களை (இறக்கைகளை) வீசிப்பெருங்காற்றுண்டாக்கி அதனால் அவ்விராக் கதனை, பெருங்காற்றடிக்கையில் உலர்ந்த சருகுகள் படும்பாடு படச் செய்தனன். பக்ஷிராஜனது பக்ஷவாதத்தினால் சுமாலியும் மாலியவானும் மிகவும் நலிவுற்று வெட்கித் தலைகுனிந்து தமது சேனைகளுடன் இலங்கையை நோக்கி ஓடிச்சென்றனர்.

ஓ கமலலோசன! இங்ஙனம் விஷ்ணு தேவனால் தோல்வியுற்ற அரக்கர்குழாங்கள் அஞ்சி அகங்குலைந்து இலங்காபுரியையொழித்துப் பாதாள லோகத்தில் தங்கள் மனைவிகளுடன் கூடிப் புகுந்து வசிக்கலாயினர். ரகுவீரனே! உன்னால் வதையுண்ட புலஸ்திய வமிசத்து இராக்கதரான இராவணன் முதலியோரை விட சுமாலி, மாலியவான் மாலி முதலான முன்னிராக்கதர்கள் மிகவும் அதிகமான புஜபல பராக்கிரமமுடையவர்களாய் இருந்தனர்.

தேவதைகளுக்கு விரோதியான இராக்கதர்களை வதைக்க வல்லவர் சாக்ஷாத் விஷ்ணுதேவரேயொழிய மற்றொருவருமிலர். ராமா! நான்கு கைகளையுடைய அந்த நாராயணனே நீ என்பதை நாங்களறிவோம். நீ அரக்கர்களை வதைக்கும் பொருட்டே ராமனாகத் திருவவதாரம் செய்தனை. இவ்வண்ணமே ஏற்ற தருணங்களில், தருமத்தை நிலைநிறுத்தவும், அடியார்களிடத்து அருள் புரிந்து அவர்களைப் பாதுகாக்கவும் பகைவர்களை வதைக்கவும் நீ அவதாரம் செய்கின்றனை. ஓ ரகுகுல திலகனே! சுமாலியென்னும் இராக்கதன் விஷ்ணுவினிடம் வெருண்டவனாகிப் பாதாள லோகத்தில் குடி புகுந்த வளவில் இலங்காபுரி சூன்யமானமையால் அதில் தனேசுவரனான குபேரன் தனது பரிவாரங்களுடன் வசிக்கலாயினன். இனி இராவணனது பிறப்பு வளர்ப்பையும் அவனது புத்திரனது வரலாறுகளையும் கேட்பாயாக.

எட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது ஸர்க்கம்.

## கைகஸிக்கு மக்கள் தோன்றுதல்.

"இவ்வாறு சிலகாலஞ் செல்லுகையில் சுமாலியென்னுமிராக்கதன் ஒருசமயம் பாதாள லோகத்தைவிட்டுத் தன் அழகிய மகளுடன் பூலோகத்திற்குவந்து விநோதமாகச் சஞ்சரிக்கலாயினன். அச்சமயம் குபேரன் விநோதமாகப் புஷ்பக விமானத்திலேறித் தனது தந்தையான விச்சிரவச முனிவரைத் தரிசிக்கச்

சென்றனன். அதுகண்டு சுமாலி மிகுந்த பொறுமையடைந்து இனித் தான் தலையெடுப்பதெங்ஙனம்? என்று ஆலோசித்துத் தனது அழகிற் சிறந்த மகளான கைகஸியை நோக்கி "என்செல்வப் புதல்வி! நீ இப்பொழுது கன்னிப்பருவம் நீங்கிக் கணவனை அடையும் காலத்தை உடையளாயிருக்கின்றனை. ஆகையால் நீ பிரமதேவர் குலத்தில் தோன்றிய புலஸ்திய முனிவரது மைந்தரான விச்சிரவசமுனிவரை நண்ணி அவரைச் சுயம்வரமாக வரித்துக்கொள்வாயாக. அவரது அநுக்கிரகத்தினால் இந்த தனேச்வரனைப்போன்ற பெருமையுடையவர்களும், சூரியனுக்குச் சமமான சோதிபெற்றவர்களுமான புதல்வர்கள் உனக்குப் பிறப்பார்கள். அவர்களால் இராக்கதர்களுடைய கஷ்டம் நீங்கும்" என்றனன்.

உடனே அம்மகள் தந்தையின் சொற்படி அங்ஙனமே புறப்பட்டு விச்சிரவஸ முனிவரது ஆச்சிரமத்தை யடைந்தனள். அச்சமயம் அக்கினி ஹோத்திரம் (அழலோம்புதல்) செய்யும் உக்கிரமான வேலையென்பதைக் கருத்திற்கொள்ளாது அம்மடமகள் முழுமதிபோன்ற முகமுடையவளாக மிகச் சோதியான வடிவழகுடனே அம்முனிவர்க்கெதிரில் சென்றனள்.

விச்சிரவஸ முனிவர் அவளது வரலாற்றையும் அவள் தன்னிடம் வந்த காரணத்தையும் அவளே கூறக் கேட்டு "கல்யாணி! உன்னிஷ்டப்படி உனக்குப் புத்திரபாக்கியம் உண்டாகத் தடையில்லை. ஆயினும் நீ என்னிடம் வந்த வேளை மிகவும் உக்கிரமான ஆசுர வேளையாதலின் அதற்கேற்றபடி கொடிய செய்கையும், பயங்கரமான நினைப்பும், பயங்கரமான தோற்றமும், கொடியவர்களிடத்தில் அன்புடையவர்களுமான ராக்ஷசர்கள் உனக்குப் பிறப்பார்கள்" என்றனர்.

இதுகேட்ட கைகஸி அவரைப் பணிந்து 'தபோதனரே! சிறந்த பிரமவித்தான தேவரீரிடத்தில் அடியேன் தீயொழுக்கமுடையோரான புதல்வர்களை வேண்டினேனில்லையே! அடியாளிடம் அருள்புரிக' என வேண்டிக்கொண்டனள். விச்சிரவஸ முனிவர் மனமிரங்கி மீண்டுமவளை நோக்கி 'இந்துமுகி! உனது

கடைசி குமாரன் ஒருவன் மாத்திரம் எனது குலத்திற்கேற்ற தரும புத்தியும் நல்லொழுக்கமும் உடையவனாக விருப்பான்' என்றனர்.

ஓ ரகுநந்தன! சில காலஞ் சென்றபின் அக்கைகஸி விகார மான தோற்றமுடையவர்களான ராவணன், கும்பகரணன் என்னும் அரக்கர்களையும் சூர்ப்பணகை யென்கிற அரக்கியையும் பெற்றனள். அவர்கள் உற்பவித்த வேளையில் குள்ள நரிகள் அனலைக் கக்கி கோரமாக ஊளையிட்டன. கொடிய பறவைகள் இடமாக வட்டமிட்டுக்கொண்டு எங்கும் சஞ்சரித்தன. வானத்தினின்றும் குருதிமழை பொழிந்தது. எரிகொள்ளிகள் ஆகாயத்தினின்றும் வீழ்ந்தன. பூமி முழுவதும் நடுக்க முற்றது. காற்று மிகவும் கொடுமையாக வீசியது. கலங்காத கடலும் கலக்கமுற்றது. ராவணன் பத்துத் தலைகளுடனும் இருபது புஜங்களுடனும் பிறந்தமைபற்றி அவனது பிதா அவனுக்கு 'தசக்கிரீவன்' என்று நாமகரணஞ் செய்தனர். தரு மாத்துமாவான விபீஷணன் கைகஸியின் கடைசி குமாரனுவான். அவன் பிறந்தவளவில் பூமாரி பொழிந்தது. வானவர் விண்ணிடையே துந்துபி முழங்கினர்.

தசக்கிரீவனும் கும்பகரணனும் சிறந்த பராக்கிரமசாலிகளாய் அவ்வனத்தினிடையே வளர்ந்தனர். கும்பகரணன் மிகவும் மதங்கொண்டவனுகி ரிஷிகளையும் மானிடர்களையும் பிடித்துப் புசித்துக்கொண்டு எங்கும் திரிந்தனன். விபீஷணன் வேதத்தை நன்கு ஓதி உபவாஸத்தினுல் இந்திரிய நிக்கிரஹஞ் செய்து தருமத்திலேயே நிலை கொண்டிருந்தனன்.

இங்ஙனமிருக்க ஒருநாள் குபேரன் புஷ்பகவிமானத்திலேறித் தந்தையை தரிசிக்குமாறு அவ்விடம் வந்தனன். ஜோதிமயமாய் விளங்குகின்ற அவனைக் கண்ணுற்ற கைகஸி தன் மகனுன தசக்கிரீவனை நோக்கி 'செல்வப்புதல்வ! உன் சகோதரனுன இக்குபேரனைக் கண்ணுற்றனையா? இவன் எவ்வளவு பெருமை பெற்று விளங்குகின்றான்! நீயும் இவனைப்போல் செல்வமும் பாக்கியமும் பெற முயல்வாயாக' என்றனள்.

உடனே தசக்கிரீவன், 'அப்படியே ஆகுக' வென்று அன்னையிடம் கூறி, தவம்புரிந்து வேண்டிய வரங்களைப்பெற மனவுறுதி கொண்டு, செயற்கரிய செய்கைகளைச் செய்தல் வேண்டுமென்ற விருப்பமுடையவனாகித் தனது தம்பிமார்களுடன் கோகர்ண க்ஷேத்திரஞ் சேர்ந்து பிரமதேவனைக்குறித்துத் தவம் செய்யலாயினன்" என்று கூறினர்.

ஒன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று

## பத்தாவது ஸர்க்கம்.

## தசக்கிரீவன் முதலியோர்க்குப் பிரமதேவன் வரமளித்தது.

இங்ஙனம் அகத்தியர் சொல்லக்கேட்ட ராமசந்திரன் அவரை நோக்கி "முனிவரே! அவ்வரக்கர் எவ்விதமான தவம் புரிந்தனர்?" என்று வினவ அகத்தியர் கூறலாயினர். "ஓ ராமா! அவர்களில் கும்பகர்ணன் அறநெறி தவறாது கோடையில் பஞ்சாக்கினி மத்தியில் (ஐந்து அக்கினி:-சுற்றி நாற்புறமும் தீ வளர்த்தி மேலே சூரியன் எரிய இவற்றினிடையே) நின்று தவம் புரிந்தனன். பெருமழையிலும் இருந்தவிடம் விட்டசையாமல் வீராசனங்கொண்டு (வலது காலை இடது தொடைமீது போட்டுக்கொண்டு உட்காருதல்) வீற்றிருந்தனன். சீதள காலத்தில் நீரினிடையே நின்று தவம் புரிந்தனன். இங்ஙனம் பதினாயிரமாண்டுகள் சென்றன.

தருமாத்மாவான விபீஷணன் மிகப்புனிதனாய் ஒரே காலில் ஊன்றி நின்று ஐயாயிரமாண்டுகள் அருந்தவமியற்றினன். மீண்டுமவன் ஈசுவரத்தியானத்திலேயே மனத்தைச்செலுத்தி மற்றுமோர் ஐயாயிர வருஷம் கழித்தனன்.

தசக்கிரீவனும் ஆகாரத்தையொழித்து வாயுபக்ஷணஞ்செய்து பதினாயிரமாண்டு விரதங்கொண்டிருந்தனன். அக்காலையில் அவன் ஒவ்வோராயிரமாண்டு கழிகையிலும் தனது தலைகளில் ஒவ்வொன்றை அக்கினியில் ஓமஞ்செய்து வந்தனன். இவ்விதமாக ஒன்பதினாயிரம் ஆண்டுகள் செல்ல அவனது ஒன்பது முடிகள் அக்கினியில் ஓமஞ்செய்யப்பட்டன. பிறகு பத்தாவது ஆயிரமாண்டு சென்றதும் அவன் தனது பத்தாவது தலையையும் ஆஹுதி

செய்ய ஆவல் கொண்டிருக்கும்பொழுது, பிரமதேவன் மிகுந்த சந்தோஷமுடையவனாகி ஸமஸ்த தேவர்களுடன் அவன் முன் தோன்றி 'ஓ பத்துத்தலையனே! உன் தவத்தினால் திருப்தியடைந்தேன்; வேண்டிய வரங்களைக் கேட்பாயாக' என்றனன்.

அதுகேட்ட தசக்கிரீவன் அக்கடவுளை வணங்கி 'தேவ! யான் மரணமின்றி அமரனாக வரம் வேண்டுகிறேன்' என்றனன். கலைமகள் நாதன் அதுகேட்டு அவனை நோக்கி 'தசானனா! அங்ஙனம் என்றும் மரணமின்றி அமரனாயிருக்கை யியலாதன்றோ? ஆதலின் ஈதொழிய வேறு வரம் வேண்டுக' என்றனர்.

ராவணன் நான்முகனை வணங்கி 'ஸ்வாமி! கருடர், நாகர், யக்ஷர், தைத்தியர், தானவர், ராக்ஷசர், தேவர்கள் ஆகிய இவர்களனைவரிடத்தும் எனக்கு என்றும் மரணமில்லாதிருக்க வரமளிக்க வேண்டுகிறேன். தேவனே! எனக்கு மற்ற பிராணிகளிடத்துச் சிறிது மச்சமில்லை' என வேண்டினன்.

பிரமதேவர் 'அங்ஙனமே ஆகுக' என்று ராவணனுக்கு வரமளித்து மீண்டுமவனை நோக்கி 'ஓ தசக்கிரீவா! முன்போல் உனது தலைகள் பத்தும் உனக்கு உண்டாகக்கடவன. நீ எச்சமயங்களில் எந்தெந்த விதமாக உருவமெடுக்க வேண்டுகின்றனையோ அவ்வப்பொழுது அந்தந்த உருவம் உனக்கு எனது அருளினால் உண்டாகும்' என்று மொழிந்து விபீஷணனை அணுகி 'குழந்தாய்! நீ விரும்பிய வரத்தை வேண்டுக' என்றனர்.

விபீஷணன் அந்நாமகள் கேள்வனை வணங்கி 'ஓ ஸ்வாமி! நான் எவ்விதமான ஆபத்தை யடைகையிலும் எனது மனம் தருமத்திலேயே நிலை கொண்டிருக்குமாறு அருள்புரிக. அன்றியும் அப்பியாசமின்றியே பிரமாஸ்திரம் எனக்கு விளங்கும் வண்ணம் அருள்புரிய வேண்டும்' என வேண்டினன்.

திசைமுகன் புன்னகையுடன் அவ்விபீஷணனை நோக்கி 'தருமசீல! நீ வேண்டியவரம் அருளினேன். பின்னும் நீ என்றும் சிரஞ்சீவியாய் இருக்கக்கடவை' என்று வரமளித்து கும்பகாணனிடம் சென்றனன்.

அச்சமயம் தேவர்களனைவரும் நான்முகனைக் கைகூப்பி வணங்கி 'தேவ! கும்பகரணனுக்கு தேவரீர் வரங்கொடாதொழிய வேண்டும். துர்ப்புத்தியான இவன் எல்லா உலகங்களையும் நடுக்கமுறச் செய்கின்றனன். இவன் நந்தவனத்தில் ஏழு அப்சர ஸ்திரீகளையும் தேவேந்திரனது வேலையாட்களில் பதின் மரையும் பிடித்துப் புசித்தனன். இங்ஙனம் அனேக முனிவர்களை யும் மானிடர்களையும் புசித்திருக்கின்றான். இவன் வரம்பெறு தற்கு முன்னரே இத்தகைய செயல்கள் செய்தவனாதலின் இனி வரம்பெற்றபின்பு மூவுலகங்களையும் பக்ஷித்து விடுவானென்பதில் ஐயமில்லை. ஆதலின் அறிவிற் சிறந்த மேலோய்! வரமென்கிற வியாஜத்தினால் இவனுக்கு மயக்கத்தைத் தந்தருள்வீர்' என்று வேண்டினர்.

அக்கருத்துக்கிசைந்த படைப்புக் கடவுள் வாணியை யழைத்து 'நீ கும்பகரணனது நாவில் தங்கி நமக்கு விருப்பமான மொழியாக அவனது வாயினின்று வெளிவருக' என்றனர். அங் ஙனமே அவ்வயன் மனைவி கும்பகரணனது வாயில் அமைந்தனள்.

பிறகு பிரமதேவர் கும்பகரணனை நோக்கி 'அரக்கனே! உனக்கு வேண்டிய வரம்யாது?' என வினவினர். கும்பகரணன் 'ஹே தேவ! யான் பலவாண்டுகள் ஒருதன்மையாகத் துயில் கொள்ள விரும்புகிறேன்' என வேண்டினன். பிரமதேவர் 'அப்படியே ஆகுக' வென்று உரைத்து தேவர்களுடன் தன்னிருப் பிடம் சென்றனர். சரஸ்வதி தேவியும் அவ்விராக்கதனை விட்டுச் சென்றனள்.

பிற்பால் கும்பகரணனுக்குத் தன் நினைவு வந்தவுடன் மிகுந்த துக்கமுடையனாகி 'ஆ! சிறந்த வரங்கேட்க விருப்பங் கொண்டிருந்த என்வாயினின்று ஏன் இத்தகைய சொல் வெளி வந்தது? ஆ! இது தேவர்கள் செய்த சூழ்ச்சியென எண்ணு கிறேன்' எனச் சிந்தித்து வருந்தலாயினன். பிறகு அம்மூன்று சகோதரர்களும் தந்தையின் ஆச்சிரமமடைந்து சுகமாக வசித்து வந்தனர்.

பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## பதினோராவது ஸர்க்கம்.

## இராவணாதியர் இலங்கையில் குடிபுகுதல்.

இங்ஙனம் ராவணன் முதலியோர் மேலான வரம்பெற்ற செய்தியைக் கேட்ட சுமாலி, தான்கொண்டிருந்த அச்சத்தை யொழித்துத் தனது மந்திரிகளான மாரீசன், பிரகஸ்தன், விரூபாக்ஷன், மகோதரன் என்னுமிராக்கதர்களுடன் பாதாள லோகத்தைவிட்டுப் புறப்பட்டு, அநேக மிராக்கதர் புடைசூழ தசக்கிரீவனிடஞ்சென்று அவனை யாலிங்கனஞ் செய்துகொண்டு இங்ஙனம் கூறலாயினன்.

"குழந்தாய்! நாங்கள் இதுவரை விஷ்ணுதேவனுக்கஞ்சிப் பாதாளத்தில் பதுங்கிக்கிடந்தோம். இனி நீ பெற்ற வரங்களின் மகிமையால் அவ்வச்சம் தொலைந்து உன்னைக் காணவந்துளோம். குபேரன் இப்பொழுது வசிக்கும் இலங்காபுரி ஆதியில் நம்முடையது. ஆகையால் நீ எவ்விதத்திலேனும் அந்நகரத்தை உனது சகோதரனை குபேரனிடமிருந்து கைப்பற்றவேண்டும். அப்பொழுதே எங்கள் மனோரதம் பூர்த்தியாகும். குழந்தாய்! இவ்விலங்காபுரிக்கு நீயே இனி அதிபதியாகப் போகிறாய். சிதைந்து போன அரக்கர் குலமும் உன்னால் விருத்தியடைய வேண்டியிருக்கிறது. மகா பலிஷ்டனான நீயே எங்களனைவர்க்கும் இனி பிரபுவாய் இருக்கப்போகின்றனை" என்றனன்.

இங்ஙனம் பாட்டன் கூறக் கேட்ட ராவணன் அவனை நோக்கி 'தாதா! நீ இங்ஙனம் கூறுவது நியாயமன்று. எனக்கு மூத்தோனான தனாதிபதி எனக்கு குருவைப்போன்றவனன்றோ? அவனை எதிர்ப்பது எனக்குத்தகாது' என மறுத்துக்கூறினன்.

அப்பால் சிலகாலஞ் சென்றபின்னர் பிரகஸ்தன் என்கிற இராக்கதன் ராவணனிடஞ்சென்று 'தசக்கிரீவ! நீ உனது பாட்டனது பேச்சை மறுப்பது சரியன்று. சூரர்களுக்குச் சகோதரன் என்கிற பரிவு ஒருபொழுதுமில்லை. அதற்கொரு திருஷ்டாந்தம் கூறுகிறேன் கேள். முன் அதிதி, திதி என்னுமிரண்டு சகோதரிகள் கசியபபிரஜாபதியை மணந்தனர். மிகவு மன்னி

யோன்னியமுடைய அவ்விரு சகோதரிகளுள் அதிதியென்பவள் தேவதைகளேயும், திதியென்பவள் அசுரர்களேயும் பெற்றனர். முதலில் தருமஸ்வபாவர்களான அசுரர்களே இம்மூவுலகாட்சியும் கைக்கொண்டு சிறப்புற்று விளங்கினர்,

அப்பால் விஷ்ணுதேவனுல் அமரில் அசுரர்கள் வெல்லப்பட்டு அழிவற்றதான இம்மூவுலகாட்சி தேவர் வசமாக்கப்பட்டது. தேவாசுரர்களே முன்னம் இத்தகைய விபரீதம் செய்திருக்கின்றனர். நீ யொருவனே இவ்விபரீதம் செய்வதாக நினைத்தல் வேண்டாம். ஆதலின் அண்ணன் என்கிற பக்தி பாராட்டாமல் நான் சொல்லும் நல்ல வசனத்தைக் கேட்பாயாக' என்றனன்.

பிறகு ராவணன் சற்று ஆலோசித்து அப்பிரகஸ்தனது கருத்துக்கிசைந்தவனுகி அவனேயே குபேரனிடம் தூதனுப்பினன். அவ்வரக்கன் தனதிபதியிடஞ் சென்று "தனதிபதியே! உனது தம்பியான தசக்கிரீவன் என்னே இங்கு அனுப்பினன். அவன் உன்னிடம் கூறும்படி சொல்லியனுப்பிய வார்த்தைகளேக் கேட்பாயாக. இவ்விலங்காபுரி மகா பராக்கிரமசாலிகளான சுமாலி முதலான இராக்கதர்களால் அனுபவிக்கப்பட்டதன்றே! ஆதலின் இதை தசக்கிரீவனுக்கு இப்பொழுது நீ கொடுத்து விடுவாயாக" என்றனன்.

பிரகஸ்தன் புகன்ற வார்த்தையைக் கேட்ட குபேரன் அவனே நோக்கி 'பிரகஸ்த! இவ்விலங்காநகரம் முன்பு எவருமின்றிச் சூன்னியமாயிருந்ததுபற்றி எனது தந்தை இதை எனக்கு வாசஸ்தானமாக அளித்தனர். நீ தசக்கிரீவனிடஞ் சென்று யான் சொல்லியதாகச் சொல்லுக. நகரமோ, ராஜ்ஜியமோ என்னுடையது யாது உளதோ அஃது அவனுடையதுமன்றே? அவனுக்கும் எனக்குமுள்ள ராஜ்ஜியமும் செல்வமும் அவிபக்தமேயல்லவா? ஆதலின் இவ்விராஜ்ஜியத்தை அவனும் தடையின்றி அனுபவிக்கலாம் என்று கூறுக' என உரைத்து அவனே அனுப்பிவிட்டனன்.

பிறகு குபேரன் தனது தந்தையை அடைந்து ராவணன் சொல்லியனுப்பிய செய்தியை அவரிடம் விண்ணப்பஞ் செய்

தனன். விச்சிரவஸ முனிவர் அவனை நோக்கி 'புத்திர! இது விஷயமாக தசக்கிரீவன் என்னிடத்திலும் கூறினன். யான் பலவாறு நல்லது கூறியும் அம்மதிகேடன் செவி சாய்க்கவில்லை. அக்கொடியவன் தான் பெற்ற வரங்களின் மகிமையால் மதிமயக் கங்கொண்டவனுகி பெரியோர் சிறியோரென்பதை உணரா திருக்கின்றனன்.

குழந்தாய்! நான் சொல்வதைக் கேள். நீ இலங்கையை விட்டு கைலாசகிரியிற் சென்று வாசஞ் செய்வாயாக. அங்கு நதிகளிற் சிறந்த மந்தாகினி அழகாகப் பெருக்கெடுத்தோடு கின்றது. அதில் சூரியன்போன்ற சோதியுள்ள பொற்றாமரை களும் பலவகை மணமுள்ள மனோகரமான புஷ்பச் செடிகளும் இருக்கின்றன. அவ்விடத்தில் தேவர்கள், கந்தருவர், அப்சரப் பெண்கள், உரகர், கின்னரர் முதலியோர் எப்பொழுதும் வந்து விளையாடிக்கொண்டிருக்கின்றனர். தசக்கிரீவன் மேலான வரம் பெற்றுச் செருக்குற்றிருக்கின்றுனுதலின் அவ்விராக்கதனுடன் உனக்குப் பிணக்கு வேண்டாம்' என்றனர்.

குபேரன் அங்ஙனமே தந்தையின் சொற்படி தன் சகல பரி வாரங்களுடன் கைலைமலை சேர்ந்து வசிக்கலாயினன். உடனே ராவணன் தம்பிமார்களுடனும் எல்லா ராக்ஷசர்களுடனும் இலங்காபுரியிற் பிரவேசித்து சகல ராக்ஷசர்களாலும் ராக்ஷச அரச னுய் அபிஷேகஞ் செய்யப்பெற்று வாழ்ந்தனன்.

பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது ஸர்க்கம்

## இராவணுதியர் மணஞ்செய்து கொள்ளுதலும் ராவணனுக்கு மேகநாதனேன்கிற புதல்வன் பிறத்தலும்.

பிறகு ராவணன் தனது தங்கையான சூர்ப்பணகையை, காலகையென்பவளுடைய மகனை வித்யுஜ்ஜிஹ்வனென்னும் தானவனுக்கு இல்லாளாகக் கொடுத்துச் சிந்தை யொழிந்திருந்த னன். ஒருநாள் அவன் வேட்டையாடச் சென்றபொழுது அவ்

விராக்கதன் திதியினுடைய மகனான மயன் என்பவனைக் கண்டனன். ஒரு ஒப்பற்ற அழகு வாய்ந்த கன்னிகையுடனே அம்மயன் அவ்விடத்துத் திரிவது கண்ட தசக்கிரீவன் அவனை நோக்கி 'நிர்மானுஷ்யமான இவ்வனத்தில் நீ மான்விழிபோன்ற விழிகளையுடைய இக்கன்னிகையுடன் திரிவதேன்?' என்று வினவினன்.

மயன் ராவணனை நோக்கி "ஹேமா (பொன்னுருவமமைந்தவள்) என்னும் அப்சரப்பெண் எனது மனைவியாவள். என் பெயர் மயன். யான் அக் கட்டழகியுடன் ஐந்நூறுண்டுகள் வாழ்ந்தேன். ஏதோ ஒரு தேவகாரியத்தின் நிமித்தம் அவள் என்னைவிட்டுப் பிரிந்து சென்றனள். பதினன்கு வருடங்களாகியும் இன்னும் திரும்பி வரவில்லை. இக்கன்னிகை எனக்கு அந்த ஹேமாவிடம் பிறந்தவள். இன்னும் மாயாவி, துந்துபி என்னும் பெயருள்ள இரண்டு புதல்வர்களும் எனக்குண்டு. இவளுக்குத் தக்க கணவனைத் தேடித் திரிகின்றேன். இதுவே எனது வரலாறு. நீர் யார்? உமது வரலாறு யாது?" என்று வினவினன்.

அப்பால் ராவணன் தான் இன்னனென்பதையும் தனது வரலாறுகளையும் மயனிடம் கூறினன். அதுகேட்ட மயன் மிகுந்த சந்தோஷத்துடன் தனது மகளை மனைவியாக ஏற்றுக்கொள்ளும்படி ராவணனை வேண்டினன். அங்ஙனமே ராவணன் அப்சரஸ்திரீயின் வயிற்றில் பிறந்தவளும் மந்தோதரி என்று பெயர் பெற்றவளுமான அக்கன்னிகையை மிகுந்த சந்தோஷத்துடன் அவ்விடத்திலேயே தீ வளர்த்தி விதிப்படி மணம் புரிந்து கொண்டனன்.

பிறகு மயன் ராவணனுக்குத் தான் தவப்பெருமையால் பெற்ற அற்புதமான ஒரு சக்தியையும் அளித்தனன். அந்த சக்தியையே ராவணன் லக்ஷ்மணன்மீது எறிந்தது. லங்கேச்வரன் பிறகு தன் மனைவியுடன் தனது நகரஞ் சேர்ந்து தனது தம்பிமார்களுக்கும் விவாகத்தை முடித்தனன். வைரோசனனுடைய பெண் வயிற்றுப் பேத்தியான வஜ்ஜ்ரஜ்வாலை யென்பவளைக் கும்பகரணனுக்கும், சைலூஷனென்கிற கந்தருவ ராஜனது மகளான சரமையென்பவளை விபீஷணனுக்கும் மணம் செய்வித்தனன்.

இங்ஙனம் அவ்விராக்கதர்கள் மணஞ்செய்துகொண்டு தம் தம் மனைவிகளுடன் நந்தவனத்தில் கந்தருவர்களென்ன, மேலான இன்பங்களை நுகர்ந்து வந்தனர். அக்காலையில் மந்தோதரி மேகநாதனென்கிற ஓர் மகனைப் பெற்றனள். அவனையே நாம் இந்திரஜித்தென வழங்குகின்றோம். அவன் பிறந்தவளவில் அழுதகுரல் மேகத்தொனி போன்று மிகக்கொடிதாயிருந்தது பற்றி ராவணன் அவனுக்கு மேகநாதன் என நாமகரணஞ் செய்தனன், ஓ ராமா! அந்த ராவண குமாரன் தாதிமார்களால் நன்கு போஷிக்கப் பட்டவனுகி நெருப்பிலிட்ட நெய்யாகுதி போல் மேன்மேலும் விருத்தியடையலாயினன். அது கண்ட அவனது பெற்றோர் மிக்க மகிழ்ச்சி கொண்டனர்.

**பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

**பதின்மூன்றவது ஸர்க்கம்.**

## ராவணனது கொடுஞ்செயலும் குபேரன் அவனுக்கு நற்புத்தி புகட்டுமாறு தூது அனுப்பினதும்.

இவ்வாறு சிலகாலஞ் செல்லுகையில் பிரமனது வரத்தின்படி கும்பகாணனை மிகக்கொடிய நித்திரையணுகியது. சிறந்த சிற்பிகளால் நிருமிக்கப்பட்டு ஒருயோசனை அகலமும் இரண்டுயோசனை நீளமுமுள்ள அழகான மேரு மலையின் குகைபோன்ற ஒரு பெரிய மாளிகையில் அக்கும்பகாணன் அநேகமாயிர மாண்டுகள் மெய் மறந்து உறங்கலாயினன். அவன் இடையில் கண் விழிக்கவே யில்லை.

கும்பகாணன் இவ்வாறு பெருந்துயில் கொண்ட ளவில் தசக்கிரீவன் தேவர்கள், ரிஷிகள், யக்ஷர், கந்தருவர் முதலியோரை கண்டபடி துன்புறுத்தலாயினன். விசித்திரமான நந்தவனங்களை யழித்து, ஆறுகளைக்கலக்கி மரங்களை முறித்து, மலைகளைப் பிளந்தனன்.

இத்தகைய ராவணனது அட்டூழியங்களைக் கேள்வியுற்ற குபேரன், தம்பியென்கிற அன்பினுல் அவனது நலத்தைக்கருதித்

தூதன் ஒருவனை இலங்கைக்கு அனுப்பினன். அத்தூதன் ராவணனிடஞ்சென்று "ராவணா! உனதண்ணனான தனதிபதி என்னை இங்கு அனுப்பினன். அவன் உன்னிடம் சொல்லவேண்டிய செய்தியைக்கேளாய். அவன் சொன்னதாவது:—

'அடா என் தம்பி! இனி நீ நன்னெறியில் நிலைகொண்டு நிற்பாயாக. நீ செய்துவரும் பாபச்செயல்களைக் கேட்டு மிகவும் வருந்துகிறேன். உன்னால் நமது குலத்திற்கே மிகக்கேடு உண்டாகும்போலிருக்கிறது. தேவர்கள் உன் செருக்கையடக்க மிக்க முயற்சி கொண்டிருக்கின்றனர். ஓ ராக்ஷசாதிப! நீ என்னைப் பலவாறு நிராகரித்தனை. அங்ஙனம் நீ அபராதஞ் செய்தவனேயாயினும், பாலனாதலால் பந்துக்களால் ரக்ஷிக்கத் தகுந்தவனேயாகின்றனை.

தசக்கிரீவ! நான் சிவனது அநுக்கிரகத்தை வேண்டி இமயமலை சென்று ஐம்பொறிகளை யடக்கி கேதார விரதமென்கிற நோன்பைச் சிலகாலமாக அனுட்டித்தேன். அச்சமயம் அங்கெழுந்தருளிய உமாமகேசுவரரைக்கண்டு அவரது பாரிசத்தினின்ற உமாதேவியிடம் தற்செயலாய் எனது இடது கண்ணைச்செலுத்தினேன். அப்பொழுது ருத்திராணி ஒப்பில்லாத உருவமெடுத்து நின்றனள். அவளை யான் கண்ணுற்றவளவில் அத்தேவியாரது திவ்வியப்பிரபாவத்தினால் எனது இடது கண் எரிக்கப்பட்டு ஒளி மழுங்கியது.

பிறகு யான் அம்மலையின் மற்றொரு புறஞ்சென்று மௌனமாய் எண்ணூறு வருஷ காலம் கொடியவிரதம் பூண்டிருந்தேன்; அந்நியமம் முடிந்தபின் மகேச்வரர் மகிழ்ச்சி கொண்டு பிரஸன்னராகி 'தனதிபனே! நீ இயற்றிய தவம் மிகக்கொடுமையானது, அதனால் நான் திருப்தியடைந்தேன் ஆகையால், இனி நீ எனக்கு நண்பனாவாய். தேவியின் பிரபாவத்தினால் உனது இடதுகண் எரிக்கப்பட்டதன்றோ? அதுபற்றி நீ வருந்தாதே. அது காரணமாக ஏகாக்ஷி பிங்களன் என்பது உனக்கு என்றும் ஒரு சிறப்பான நாமதேயமாகக் கடவது.' என்று வரமருளினர். இங்ஙனம் நான் சங்கரனிடம் அவரது நட்பையும் அருளையும் பெற்று வந்த வள

வில் நீ பாபத்தொழில் புரியத்துணிந்ததைக் கேள்வியுற்று மனம் புண்படப்பெற்றேன். நீ இனியாவது கேடு விளைக்கும் அதரும மான செய்கைகளை விட்டு விடுவாயாக' என்று உனக்குத் தெரி விக்குமாறு என்னை அனுப்பினன்'' என்று கூறினன்.

இதனைச் செவியுற்ற தசக்கிரீவன் கோபமூண்டு கண்கள் சிவந்து கைபிசைந்து அத்தூதனை நோக்கி "அடே தூத! என்ன தைரியங்கொண்டு அக்குபேரன் உன்னை இங்கனுப்பினன்? நீ எங் ஙனம் அச்சமின்றி இத்தகைய பேச்சை என் முன் பகர்ந்தனை? இனி நீயும் உன்னையேவிய அத் தனதிபனும் உயிரோடிருக்கப் போவதில்லை. ஹே மூட! அக் குபேரன் சிவனுக்குச் சகாவாயி னதை ஒரு பெருமையாக எடுத்துரைத்தனையே! அது ஒரு பெருமையாகக் கொள்ளத் தக்கதன்று. நீ கூறினவற்றையும் நான் ஏற்றுக்கொள்ளமாட்டேன். அக்குபேரனையும் மற்றுமுள்ள லோக பாலகர்களையும் இதோ நமனுலக மனுப்பிவிடுகிறேன்பார்'' என்று அறைந்து கொண்டே ராவணன் கத்தியைக் கையில் எடுத்து அத்தூதனை ஒரே வீச்சாக வீசிக்கொன்றனன். பிறகு அந்த இலங்கை வேந்தன் மூவுலகங்களையும் வெல்ல விருப்பங் கொண்டு ஸமஸ்த ராக்ஷசப்படைகளுடன் முதலில் குபேரனிருக்கு மிடத்திற்குச் சென்றனன்.

பதின்மூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினான்காவது ஸர்க்கம்.

## யக்ஷ ராக்ஷச யுத்தம்.

பிறகு குபேரனது பரிவாரங்களான யக்ஷர்கள் அவனுடைய வருகையைத் தம் அரசனுக்கறிவித்தனர். உடனே குபேரனும் போர்க்கோலம் பூண்டு ராக்ஷசர்களை யெதிர்த்தனன். இயக்கர் எதிர்த்துப் போர் தொடுத்த வளவில், ராவணனது அமைச்சர்கள் மிகத்துன்புற்று வருந்தினர். யக்ஷர்களுக்கும் ராக்ஷசர்களுக்கும் மிகவும் பயங்கரமான யுத்தம் நடந்தது. யக்ஷர்கள், கதைகள் உலக்கைகள் கத்திகள் சக்திகள் தோமரங்கள் முதலிய படைக்

கலங்களை அரக்கர்மீது பிரயோகித்தனர். பின்னும் மேகம் மழை பொழிவது போல இயக்கர்கள் பல சஸ்திரங்களைப் பொழிகை யிலும், துராத்துமாவான ராவணன் அவற்றைச் சிறிதும் பொருட் படுத்தாமல் கால தண்டத்திற்கொப்பான கதையொன்றைக் கையிலேந்தி யக்ஷசேனையில் புகுந்து, உலர்ந்த விறகுகளைக் காற் றுடன் கூடிய நெருப்பு எரிப்பது போல் யக்ஷர்களை அடித்து யம லோக மனுப்பலாயினன்.

அது கண்டு அவனுடைய மந்திரிகளான மகோதரன் சுகன் முதலியோர் மிகுந்த உத்சாகத்துடன் யக்ஷர்களை வெருட்டியடித் தனர். இதனால் யக்ஷர்கள் அனேகர் மாள, மிகுந்தவர் இருந்த விடம் தெரியாமல் ஓடிப்போயினர். பிறகு தசக்கிரீவன் துணிவு கொண்டு சுவர்ணத்தினாலும் வைடூரியத்தினாலும் வேலைப்பாடு கள் செய்துள்ள விசித்திரமான தோரணவாயிலில் நுழைந்து வாயில் காப்போனான சூரியபானு வென்பவனைக் கொன்று குபேர னது பட்டணத்தில் புகுந்தனன். இயக்கர்களனைவரும் பெரும் பீதியுடையவர்களாகி உயிரைக்காக்கவேண்டி நதிகளிலும் குகை களிலும் ஓடியொளித்தனர்.

பதினான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினைந்தாவது ஸர்க்கம்.

## தசக்கிரீவன் குபேரனை வென்று புஷ்பகத்தைக் கைக்கொண்டது.

இதைக் கண்ணுற்ற தனாதிபதியான குபேரன் தனது சேனா பதியான மாணிபத்திரனென்னும் யக்ஷனுடன் நாலாயிரம் யக்ஷர் களைக் கூட்டி ராவணனை வென்றுவரும்படி அனுப்பினன். அந்த யக்ஷர்கள் மிகுந்த உக்கிரத்துடன் கதை, உலக்கை, தோமரம், வாள் முதலிய படைக்கலங்களால் அரக்கர்களையடித்து உபத்திர விக்கலாயினர். அக்கொடிய யுத்தத்தை தேவர்களும் கந்தருவர் களும் முனிவரும் கண்டு மிக்க வியப்புற்றனர்.

ஏ ராம! யக்ஷர்களது தரும யுத்தம் எங்கே? அரக்கரது மாயப்போர் எங்கே? பிரகஸ்தன், மகோதரன் மாரீசன் இம்மூவ

ரும் நிமிஷ காலத்தில் அனேகமாயிரம் யக்ஷர்களைக் கொன்று வீழ்த்தினர். தூமிராக்ஷன் மாணிபத்திரனுடன் வெகுநேரம் கதா யுத்தம் செய்தனன். பிறகு மாணிபத்திரன் தசக்கிரீவனால் மிகவும் அடியுண்டு வருந்தினன்.

அச்சமயம் குபேரன் கையில் கதையை ஏந்தி சுக்கிரன், பிரோஷ்டபதன் என்னும் மந்திரிகளும், சங்கநிதித் தலைவன், பதுமநிதித்தலைவன் ஆகிய இவர்களும் சூழ்ந்துவர அங்குத் தோன்றினன். அவன் அகம்பாவம் பிடித்த தசக்கிரீவனை நோக்கி 'அடா புத்தி கெட்டவனே! யானுரைத்த நல்ல வசனத்தை ஏற்றுக் கொள்ளாது ஏன் இவ்வாறு அறநெறி தவறி ஒழுகுகின்றனை? இதன் பயன் விளையுங்காலத்து நீ நரகத்து வீழ்ந்தபின் இதனையுணர்வாய்.

தசக்கிரீவ! ராஜ்ஜியம், தனம், சவுக்கியம் இவை தருமத்தினாலேயே விளைகின்றவை. அதருமத்தினால் பாவமும் துக்கமுமே விளையும். துர்ப்புத்தியுடையோர்க்குப் பெரியோரது நற்போதனையின்றி சுயமே நற்புத்தி தோன்றாது. நீ இங்ஙனம் கணக்கற்ற தீய செயல்களைச் செய்கின்றமையால் கொடு நரகில் வீழ்ந்தழியப்போகின்றனை' என்று கூறி, மாரீசன் முதலிய அவனது அமைச்சர்களனைவரையும் உறுதியாகப் புடைத்துப் புறங்காட்டி ஓடச் செய்தனன்.

ராமா! பிறகு அந்த தசக்கிரீவனும் குபேரனும் சிறிதும் சோராமலும் சலியாமலும் அதிக கோபத்துடன் ஒருவரையொருவர் புடைத்துப் பெரும்போர் இயற்றினர். அச்சமயம் இராக்கதர் தலைவன் அரக்கர்கட்குரியதான மாயையிற்புகுந்து இயக்கர்களையொழிக்குமாறு, வேங்கை, வராகம், மேகம், மலை, மரம், மகோததியெனப் பல வுருவமெடுத்தனன்; இயக்கனாகவும் தைத்தியனாகவும் தோற்றினன். தசக்கிரீவன் இங்ஙனம் பற்பல வுருவங்களைப் பெற்று மயக்கினனேயன்றி, தான் கட்புலனாகவில்லை. ராமா! பத்துத் தலையோன் அதன் பிறகு கதாயுதத்தில் மகத்தான ஒரு அஸ்திரத்தை மூட்டித் தனதிபதியினது முடியில் மோதினன். அதனால் அடியுண்ட அளவில் அவன் மிகச் சோர்ந்து குருதி

வெள்ளம் பெருகியோட, அடியற்ற மரமென வேதனையுற்று வீழ்ந்தனன். அது கண்டு அருகிலிருந்த பதுமநிதி முதலான நிதி தேவதைகள் அவனையுடனே யெடுத்து நந்தவனத்திற் கொண்டு போய்க் களை தீர்த்தனர்.

உடனே அரக்கர் தலைவன் இங்ஙனம் குபேரனைவென்றதற் கறிகுறியாக அவனது ஒப்பற்ற புஷ்பக விமானத்தைக் கைப் பற்றிக்கொண்டு மிகுந்த சந்தோஷத்துடன் அதன் மீதேறிக் கொண்டு கைலாயத்தினின்று இறங்கினன்.

பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினாறவது ஸர்க்கம்.

## ராவணன் நந்திதேவரது சாபம் பெறுதலும் கைலைமலையைப் பெயர்த்தலும்.

“பிறகு ராவணன் புஷ்பகவிமானத்தி லேறிக்கொண்டு முருகக் கடவுள் உற்பவித்தவிடமான சரவணத்தைக் (நாணல் காட்டைக்) காணவிரும்பி அவ்விடஞ்சென்றனன். அவன் அதைக் கண்டு வியப்புற்று அவ்விமானத்துடன் அம்மலைமீதேறினன். ஆங்கு மிக ரமணீயமான ஒரு உத்தியான வனம் காணப்பட்டது. ராகவா! அவ்விடத்து அப்புஷ்பக விமானம் அப்பால் செல்ல முடியாமல் திடீரென்று நின்றுவிட்டது. இஷ்டமானபடி செல்ல வல்ல விமானம் அங்ஙனம் தடைபட்டது கண்டு அவ்வரக்கர் தலைவன் அதன் காரணத்தைப்பற்றிச் சிந்திக்கலாயினன். அச் சமயம் சிவனது வாயில்காப்போரான நந்திதேவர் அங்குத் தோன்றி அவ்வரக்கனை நோக்கி ‘ஓ தசக்கிரீவா! இம்மலை சாக்ஷாத் சங்கரபகவானது இருப்பிடம். இங்கு எவரும் விமானமேறிச் செல்லலாகாது. அக்கடவுளது மகிமையினால் உனது விமானம் தடைபட்டது. சீக்கிரம் அப்புறம் செல்வாயாக’ என்றனர்.

அது கேட்ட தசக்கிரீவன் கோபத்தினால் கண்கள் சிவக்கப் புஷ்பகத்தினின்று மிறங்கி ‘அடே! சங்கரனென்பவன் யாரடா?’ எனக் கதறி அந்த நந்திதேவரது முகம் வானர முகமாயிருத்தல்

கண்டு அவரை யிகழ்ந்து பெருநகை செய்தனன். இதுகண்ட நந்திதேவர் மிகுந்த கோபங்கொண்டு 'அடா! தசானன! வானர ரூபியான என்னை நீ இங்ஙனம் இகழ்ந்தமையால் என்னைப்போன்ற உருவமும் வீரிய பராக்கிரமங்களுமுடையோரான வானரர்கள் உன் குலத்தை நாசஞ் செய்யப் பிறக்கப்போகின்றனர்; அவர்கள் பயங்கரமான தோற்றமுடையவர்களாய் மிக்க வலிகொண்டு நகங்களும் பற்களுமே படைக்கலங்களாகக் கொண்டு உனது செருக்கையும் கொழுப்பையு மடக்கப்போகின்றனர். அன்றியும் தேவர்களின் வேண்டுகோளால் ஸ்ரீ மகாவிஷ்ணு தசரதனுக்கு மகனாகத் தோன்றி மானிட உருக்கொண்டு உன்னை மாய்க்கப் போகின்றனர்' என்று சாபமிட்டனர்.

தசக்கிரீவன் அச்சாபத்தைச் சிறிதும் லக்ஷியம் செய்யாமல், தனது வலிமையையே மேலாக மதித்து அக்கைலைமலை யருகிற் சென்று 'எனது விமானத்தைத்தடை செய்தது இம்மலையே யாதலால் இதை வேரோடு பிடுங்கி யெறிவேன்' என்று கூறி அம்மலை யின்கீழ்த் தன்கைகளைக்கொடுத்து அதனையசைத்தனன். உடனே அம்மலை கலகலவென்று ஆடியது. அதனால் அங்கிருந்த சிவனது பிரதம கணங்கள் நடுநடுங்கினர். உமாதேவியும் ஆட்டமுற்று அஞ்சித் தம் கணவனை யாலிங்கனஞ் செய்துகொண்டனள்.

ஹே ராமா! அதுகண்டு சங்கரபகவான் தமது திருவடிப் பெருவிரலினால் அம்மலையை யழுத்தினர். அவ்வளவில் அதனடியி லிருந்த அரக்கனது புஜங்கள் நன்றாக நசுக்குண்டன. அதனால் அவ்விராக்கதன் மூவுலகங்களும் அஞ்சி நடுங்குமாறு ஒரு பெருங் கூச்சலிட்டனன். அதுயுகாந்த காலத்தில் உண்டாகும் இடி முழக் கமோவென அனைவரும் மயக்குற்றனர். இந்திராதி தேவர்களும் மயங்கி வழிதுறை தெரியாது தடுமாறினர். கடல்களும் கலக்க முற்றன. சைலங்களும் சலிக்கலாயின.

இங்ஙனம் வீரிடுகின்ற தசாநநனை நோக்கி அவனது மந்திரி கள் 'அரக்கர் பெருமானே! இப்பொழுது உனக்குற்ற துயரம் உமாபதியான சிவபிரானையன்றி எவராலும் தீர்க்கடவதன்று, ஆதலின் அப்பெருமானை நீ எத்தித்தொழுது சரணமடைக' என்ற

னர். அதுகேட்ட தசக்கிரீவன் அவ்வெருத்துக் கொடியோனை சாம கானம் பண்ணிப் பலவாறு தோத்திரஞ் செய்தனன். இங்ஙனம் அவன் அழுது புலம்பி ஆயிரவருஷங்கள் சிவனை சாமகானத்தினால் துதித்தனன். பிறகு மகாதேவர் அவ்வரக்கன்மீது அருள்கூர்ந்து அத்துயரினின்றும் அவனை விடுவித்து 'தசக்கிரீவா! உனது வீரி யத்தையும் சாமர்த்தியத்தையும் கண்டு நான் மகிழ்ந்தேன். நீ இம்மலையின் கீழ் கைகளகப்பட்டுக் கொண்ட வருத்தத்தினால் பயங்கரமாகப் பெருங்கூச்சலிட்டதாலும், அது கேட்டு மூவுலகங் களும் பெருங்கூச்சலானதாலும் இன்று முதல் உனக்கு ராவண னென்றே பெயர் வழங்கக்கடவது. இனி நீ விரும்பிய விடஞ்செல் லுக?' என்று விடை கொடுத்தனர்.

லங்கேச்வரன் இங்ஙனம் மொழிந்த சிவபிரானை வணங்கி 'தேவ! அருட்கடலே!எனக்கு நீண்டவாளையும் ஒருசஸ்திரத்தை யும் தந்தருள வேண்டும்?' என வேண்டிக்கொண்டனன். அம்முக் கண் மூர்த்தி ராவணனுக்கு சந்திரகாசமெனப் பெயர் பெற்ற ஒரு கத்தியைத்தந்து அவன் வேண்டிய வாளின் குறைவையும் கொடுத்து அவனை நோக்கி 'நீ இந்த வாளை அவமதிக்கலாகாது. அவமதித்தனையாகில் இது மறுபடி என்னிடமே வந்து சேர்ந்து விடும்' என மொழிந்தனர்.

பிறகு ராவணன் சிவனிடம் விடை பெற்றுப் புஷ்பகவிமா னத்திலேறி இப்பூமண்டலம் முழுவதும் சஞ்சரிக்கலாயினன். அவ் வாறு செய்கையில் ஆங்காங்குள்ள சிறந்த வீரியமுடையோரான க்ஷத்திரியர்களைத் துன்புறுத்தியவாறே சென்றனன். சிறந்த சூரர்களும் பலிஷ்டர்களுமான பல க்ஷத்திரியர்கள் அவனுக்குக் கீழ்ப்படியாதவர்களாகித் தம் பரிவாரங்களுடன் அவனால் நாச மடைந்தனர்.

பதினாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

## பதினேழாவது ஸர்க்கம்

## வேதவதி ராவணனைச் சபித்துத் தீக்குளித்தது.

"ராமா! இங்ஙனம் ராவணன் உலக சஞ்சாரஞ் செய்து கொண்டு இமயமலைத் தடஞ் சேர்ந்தனன். ஆங்கு தேவமகளிர் போன்ற வடிவழகுடையளான ஓர் கன்னிகை தவவேடம் பூண்டு தவம் புரிந்துகொண்டிருந்தனள். அவளைக்கண்ட ராவணன் காமத்தினால் மோகித்து 'கட்டழகியே! நீ யாவள்? நீ ஏன் தவம் புரிந்து பருவத்தைப் பாழாக்கிக் கொள்கின்றனை? கண்மணி! நீ யாருடைய மகள்? உன்னைக் கை பிடிப்பவனன்றோ உலகத்தில் புண்ணியசாலி. இவை யாவும் எனக்கு விளங்கக் கூறுவாயாக' என்று வினவினன்.

அக்கன்னிகை விதிப்படி அவ்வரக்கனுக்கு அதிதி பூஜை செய்து 'ஐயா! எனது தந்தை பிருகஸ்பதியின் குமாரரான குசத்துவஜர் எனப் பெயர்பூண்டு சிறந்த பிரமரிஷியாய் விளங்கினர். அவர் வேதமோதுகையில் அவரது வாக்கினின்றும் ஓர் கன்னிகையாக யான் பிறந்தனன். அதனால் எனக்கு வேதவதியென்று பெயர் உண்டாகியது. எனது பேரழகைக் கண்டு தேவர், கந்தருவர், யக்ஷர், ராக்ஷசர், பன்னகர் ஆகிய பலரும் என் தந்தையிடம் என்னை மணமகளாக வரிக்க வந்தனர். எனது பிதா என்னை விஷ்ணுதேவனுக்கன்றி மற்றெவர்க்கும் கொடுக்க விரும்பாமையினால் என்னை அவர்கள் ஒருவர்க்கும் அளித்திலர்; அதுகேட்டு 'தம்பு' வென்னும் அசுரர் தலைவன் கோபமூண்டு இரவில் நித்திரை செய்துகொண்டிருந்த எனது தந்தையைக் கொன்று விட்டனன். பிறகு யான் தந்தையின் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதே கடமையாகக் கொண்டு நாராயணனையே நாயகனாக வரிக்க விரும்பி அத்தேவனைக் குறித்து இங்குத் தவம் செய்கின்றேன். ஓ ராக்ஷச ராஜனே! உன்னை யான் அறிவேன். என் தவ மகிமையால் மூவுலகில் நடக்கும் விஷயங்களையும் அறிவேன். அவ்விஷ்ணு தேவனே எனக்குக் கணவன். ஆதலின் நீ உடனே இவ்விடம்விட்டு அப்புறஞ் செல்லுக' என உரைத்தனள்.

அதுகேட்டு ராவணன் பஞ்ச பாணனால் பீடிக்கப்பட்டவனாகி விமானத்தினின்றும் இறங்கி வந்து 'ஹே சுந்தரி! நீ இங்ஙனம் கூறுவது உசிதமன்று. அச்சமும் அழகும் அமைந்த உத்தமி! நீ கூறின விஷ்ணுதேவன் வீரியத்திலாயினும், தவத்திலாயினும், போகத்திலாயினும், வலிமையிலாயினும் எனக்கு இணையாகான். ஆகையால் லங்கேச்வரனான என்னை நீ மணந்து சகல போகங்களையும் அனுபவிக்கக்கடவை' என்றனன்.

வேதவதி அவனுக்குப் பின்னும் சில புத்திமதிகளைக் கூற அக்கொடியோன் கருப்புவில்லோனது பாதையினால் அச்சமின்றித் தன் கையினால் அக்கன்னிகையினது கூந்தலைப் பற்றி இழுத்தனன். உடனே வேதவதி தன் உடலைவிடத் துணிந்து தீமூட்டி அவனை நோக்கி 'அடா பாதகா! நீ இங்ஙனமென்னைத் தீண்டிய பிறகு இவ்வுடலை வைத்திருக்க நான் விரும்பவில்லை. நீ பார்த்திருக்கையிலேயே தீக்குளிக்கின்றேன். யான் மறு ஜன்மத்தில் அயோநிஜையாய் பூமிதேவிக்குப் புதல்வியாகப் பிறந்து உன்னையும் உன் குலத்தையும் நாசம் செய்கிறேன் பார்' என மொழிந்து ஓங்கி எரிகின்ற அக்கினியிற் பிரவேசித்தனள்.

ஓ ராமா! அந்தப் பெண்கள்நாயகமே ஜனகராஜனது புதல்வியும் உனது இல்லாளுமான சீதாதேவியாவள். அவள் பிரதிக்ஞை செய்தபடி இந்த ஜன்மத்தில் ராவணனும் அவனுடைய குலத்தவரும் மடிவதற்கு மூலகாரணமாயினள்.

பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## பதினெட்டாவது ஸர்க்கம்.

## ராவணன் மருத்தனை வென்றது.

"ரகுநந்தன! வேதவதி அக்கினிப் பிரவேசஞ் செய்தவுடன் ராவணன் புஷ்பகவிமானத்திலேறி நிலவுலகம் முழுதும் சஞ்சரிக்கலாயினன். அக்காலையில் மருத்தன் என்னும் ஓரரசன் உசீரபீஜமென்னும் க்ஷேத்திரத்தையடைந்து, தேவதைகளுடன் கூடி யாகஞ் செய்து கொண்டிருந்தனன். பிருகஸ்பதியின் ஸகோதர

ரான சம்வர்த்தரென்கிற பிரமரிஷி யாகம் செய்வித்து வந்தனர். நற்செயலாய் ஆங்குவந்த ராவணனைக் கண்ட தேவர்களனை வரும் பீதி யடைந்து விலங்குகளாகவும் பறவைகளாகவும் வேற்றுடம்பெடுத்து மறைந்தனர். இந்திரன் மயிலாகவும், யம தருமன் காக்கையாகவும் தனதிபதி ஓந்தியாகவும், வருணன், அன்னப் பறவையாகவும் மாறினர். இங்ஙனம் மற்ற தேவர் களும் தம் தமக்கு இஷ்டமான வடிவமாக மாறுவேடம் பூண்ட வளவில் அந்த ராக்ஷசராஜன் யாக சாலையில் புகுந்து மருத்தனை நோக்கி 'நீ என்னுடன் சண்டை செய்கின்றனையா? அல்லது தோற்றேனென்று ஒப்புக்கொண்டு வணங்குகின்றனையா?' என வினவினன்.

அது கேட்டு மருத்தன் 'அடே ராவணா! நீ அண்ணனைப் புடைத்து வாகனத்தைக் கைக்கொண்ட பாதகனல்லவா? மூடா! ஓடாதே! நில்! எனது கொடிய கணைகளால் இன்றே உன்னை யம லோகமனுப்பி விடுகின்றேன்' என்று கூறி ராவணனை எதிர்த்து நின்றனன்.

அப்பொழுது அவ்வரசனது புரோகிதரான மகரிஷி மருத் தனை நோக்கி 'வேந்தனே! நீ இப்பொழுது தொடங்கியிருப்பது மஹேச்வர யாகம். இதை நீ பூர்த்தி செய்யாதொழியின் உன் குலம் நசித்துப்போகும். யாகதீக்ஷை கொண்டவர்க்குப் போர் புரிதலும் கோபமும் கூடுமோ? அன்றியும் போரில் வெற்றிகொள் வது சந்தேகமேயன்றோ? இவ்வரக்கனும் வெல்வதற்கரியன்' என உரைத்தனர்.

உடனே மருத்தராஜன் குரு வாக்கியத்தில் மதிப்பு வைத்து அம்பையும் வில்லையும் எறிந்து வேள்வி புரியலாயினன். ராவணன் அதுகண்டு அவன் தோல்வியடைந்தானென வெண்ணி ஆனந்த மடைந்தவனாகி அங்கு யாகத்திற்காக வந்திருந்த ரிஷிகளையெல் லாம் கடித்துப்புசித்து அவர்களது உதிரத்தைப்பருகி அவ்விடம் விட்டகன்றனன்.

பிறகு இந்திரன் முதலிய தேவர்கள் தாம் பெற்றிருந்த வேற்றுருவை விட்டு நிஜமான தேவரூபம் பெற்று எவரெவர் தந்

தெந்த ஜந்துவாக வேஷமெடுத்து ராவணனிடமிருந்து தப்பிப் பிழைத்தனரோ அவரவர் அந்தந்த ஜந்துவினிடத்தில் அன்பு கூர்ந்து அவற்றிற்கு வரமளிக்கலாயினர்.

இந்திரன் மயிலை நோக்கி 'இனி நீ பாம்புகளுக்கு அஞ்ச வேண்டியதில்லை. உனது தோகையில் அழகான அநேகம் பீலிக் கண்கள் உண்டாகும். என் பிரீதிக்கடையாளமாக யான் மழை பொழிகையில் நீ மிக்க மகிழ்ச்சி கொண்டு களிப்புறுவாயாக' என வரமளித்தனன்.

பிறகு தருமராஜன் (யமன்) அங்கிருந்த ஓர் காக்கையை நோக்கி 'வாயஸமே! உலகத்தில் பிராணிகள் பற்பல விதமான ரோகங்களால் பீடிக்கப்படுகின்றனரல்லவா? இனி எனதருளி னால் அந்நோய் உனக்கு உண்டாவதில்லை. எனது வரத்தினால் மிருத்யுவினாலும் உனக்கு பயமில்லை. மானிடர்கள் எவ்வளவு காலம் உன்னைக் கொல்லாதிருக்கின்றனரோ, அவ்வளவு காலம் நீ பிராண பயமின்றி வாழ்வாய். மரித்து எனது நாட்டில் வந்து சேர்ந்திருக்கின்ற இந்த மானிடர்கள் பசியினால் பெருந்துன்பமுற் றுத் தவிக்கையில், நீ புசிப்பாயானால் அவர்கள் தம் பந்துக்க ளுடனே திருப்தியடைந்தவராவர்கள்' என வரமளித்தனன்.

வருணன் அன்னப் பறவையை நோக்கி 'உனக்குச் சந்திர மண்டலம் போலவும், நீரின் நுரை போலவும் மிக மனோகரமாய் நிர்மலமான வெண்மை நிறம் உண்டாகும். எனது சரீரமான தடா கம் முதலிய நீர் நிலைகளையடைந்து நீ மிக்க மகிழ்ச்சியும் அழகும் பெற்று விளங்குவாயாக' என வரமளித்தனன்.

அப்பால் வைச்சிரவணன் ஓந்தியை நோக்கி 'உனது தேகம் முழுமையும் பொன்னிறமாகக் கடவது. உனது முடி பொன் னுடனே கூடியதாகி என்றும் அழியாதிருக்கும்' என உரைத்த னன். இங்ஙனம் சகல தேவர்களும் அந்தந்த பிராணிகளுக்கு வர மளித்து தங்கள் தங்களிருப்பிடஞ் சேர்ந்தனர்.

பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

# அநரணிய ராஜனுக்கும் ராவணனுக்கும் யுத்தம்

## பத்தொன்பதாவது ஸர்க்கம்

### ராவணன் அநரணிய ராஜனது சாபம் பெறல்.

பிறகு ராவணன் பின்னும் போர்புரிய விருப்பமுற்றவனாகி உலகிலுள்ள பற்பல புஜபராக்கிரமமுடைய அரசர்களையணுகிப் போருக்கழைத்தனன். சிறந்த நீதிமான்களும் மகா பலசாலிகளுமான அவ்வரசர்களனைவரும் ஒன்றுகூடி ஆலோசித்து எதிரியான ராவணன் பெற்றிருக்கும் வரத்தினது வலிமையுணர்ந்து இஃது நமக்குக் காலமன்றெனநிச்சயித்து ராவணனை நோக்கி 'அரக்கனே! நாங்கள் உன்னால் வெல்லப்பட்டோமென்று ஒப்புக்கொள்ளுகிறோம்' என்றனர். இங்ஙனம் மகாரதனான துஷ்யந்தன், காதி, கயன் புரூரவன் முதலிய சக்கரவர்த்திகள் கூறியதைக்கேட்ட அரக்கர் கோன் மகிழ்ச்சியுடன் அயோத்தியை நோக்கிச்சென்று அங்கு அரசபுரிந்துவந்த அநரணிய ராஜனைப்போருக்கழைத்தனன்.

அதுகேட்ட அநரணியராஜன் மிகுந்தகோபங்கொண்டு 'துஷ்டனே! ஓடாதே! நில்! இதோ உன்னை இப்பொழுதே நமனுலகமனுப்பி விடுகிறேன்' எனக்கூறி லக்ஷம் யானைகளும், நியுதம் குதிரைகளும், அநேகமாயிரம் தேர்களும் புடைசூழ அளவற்றகாலாட்களுடன் கூடி ராவணனை எதிர்த்தனன். அப்பொழுது ராக்ஷசராஜனுக்கும் அநரணிய மகாராஜனுக்கும் அற்புதமான கொடிய யுத்தம் நடந்தது. ராவணனால் அநரணிய ராஜனது சேனைகள் யாவும் அக்கினியில் ஓமம் செய்யப்பட்ட ஹவிஸ்ஸைப்போல நாசமுறலாயின.

இதைக்கண்ட அநராதிபன் சிறந்த வில்லைக் கையிலேந்தி நாணொலி செய்து அரக்கர் சேனையைக் கண்டதுண்டம் செய்தனன். அவ்வளவில் மாரீசன், சுகன், சாரணன், பிரகஸ்தன் முதலிய ராவணனது அமைச்சர்கள் சிங்கத்தைக் கண்ட மான் போல் அஞ்சி ஓடிப்போயினர். பின்னும் அவ்வேந்தர்சிகாமணி ராவணன்மீது நூற்றுக்கணக்கான பாண மழைகளைப் பொழிந்தனன். அவற்றால் அவ்வரக்கர்கோன் சிறிதும் கலக்கமடையவில்லை. அவை அவனை யணுவளவேனும் ஊறுபடுத்தினவல்ல.

ஆயினும் அந்த நசக்கிரீவன் மிகுந்த கோபங்கொண்டு அநரண்ய ராஜனை முடிமேல் ஓங்கி ஓரறை அறைந்தனன். அதனாலவன் உடல் சோர்ந்து நடுக்குற்று இடியுண்ட மரம்போலத் தேரினின்று விழுந்தனன். இதைக்கண்ட ராவணன் நகைத்து அவனை ஏளனஞ் செய்தனன்.

அநரண்யராஜன் குற்றுயிராய்த்துடித்துக்கொண்டே 'அடே ராக்ஷச! யான் போர்புரிகையில் சற்றுப் பராமுகமாய் இருந்த பொழுது நீ என்னைப் புடைத்துத் தள்ளினை. பின்னும் நீ என்னை ஏளனஞ் செய்தமையால் மிக்க மேன்மைபெற்றதான எனது இக்ஷ்வாகு வமிசத்தில் தசாத மகாராஜனுக்கு மகனும் ராமனென்று பெயருடைய ஒரு மகானுபாவன் பிறக்கப் போகின்றனன். அவனால் நீ நிச்சயமாகக் கொல்லப்படுவாய்' எனச் சாபமிட்டு உயிர்விட்டனன். அச்சமயம் தேவ துந்துபி முழங்கியது. வானத்தினின்று பூமாரிபொழிந்தது. அநரண்யன் உயிர் நீத்தது கண்டு ராக்ஷசராஜன் அப்புறமெழுந்து சென்றனன்.

பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபதாவது ஸர்க்கம்

## ராவணனும் நாரதரும் யமலோகஞ் செல்லுதல்.

"ராவணன் இங்ஙனம் மதங்கொண்டு திரிகையில் நாரத முனிவர் அவனையணுகி 'ராவண! அசுரர்களை ஸ்ரீ மகாவிஷ்ணு வதை செய்வதுபோல் நீ கந்தருவர் உரகர் முதலியோர்களை வென்று வருவதைக் கண்ட யான் வியப்புற்றவனாயினேன். ஆயினும் நீ இவ்வுலகத்தவர்களைக் கொல்வதுதான் எனக்கு வியப்பாய் இருக்கிறது. இவ்வுலகத்தவர் எப்பொழுது மிருத்தியுவுக்கு வசமாயினரோ அப்பொழுதே அவர்கள் வதைக்கப்பட்டனரன்றோ? தானே அழியுமியல்பினதும், விதியினால் வெல்லப்பட்டதும், பிணிபசி மூப்புத் துன்பங்களுக்கு இடமாகித் தவிப்பதுமான இவ்வுலகத்தை நீ வீணாக வருத்துவதால் யாது பயன்? ஆதலின் லங்கேச்வர! இவ்வுலகத்துப் பிராணிகளைக் கொண்டு

செல்லும் யமதருமராஜனைத் தண்டிப்பாயாயின் இவ்வுலகமனைத்தும் உன்னால் வெல்லப்பட்டதாகும்' என்றனர்.

நாரதர் இங்ஙனம் கூறக்கேட்ட லங்காதிபன் அம்முனிவரை வணங்கி 'முனிவரே! மூவுலகங்களையும் வெல்ல விருப்புற்ற நான் முதலில் இம்மண்ணுலகத்தை ஜயித்து, பிறகு பாதாளலோகத்தை வென்று அப்பால் தேவர்களையு மதமாக்கி சகல ரசங்களுக்கும் ஆலயமான கடலையும் அமுதமெழுமாறு கடைவேன். யுத்தப் பிரியனான யான் அதிகோபத்துடனே லோகபாலகர்கள் நால்வரையும் வெற்றி கொள்வதாக முன்னமே பிரதிக்ஞை செய்திருக்கிறேன். தேவரீர் நியமனப்படி இதோ இப்பொழுதே சகல பிராணிகளையும் நலிகின்ற யமனையும் மரணமடையச் செய்கிறேன்' என்று அகங்காரத்துடன் கூறித் தனது மந்திரிகளுடன் தென்திசை நோக்கிச் சென்றனன்.

பிறகு நாரத பகவான் தனக்குள் 'தருமநெறி தவறாமல் அவரவர் செய்யும் புண்ணிய பாவங்களுக்கு சாக்ஷியாய் அவரவரை ஆயுள் முடிவில் கொண்டுபோகின்ற காலமூர்த்தியைக் கண்டவளவில் மூவுலகங்களும் அஞ்சியோடுமன்றோ? மூவுலகங்களையும் வெற்றிகொண்டிருக்கும் யமதருமராஜனை ராவணன் எங்ஙனம் வெல்லப்போகிறான்? கால மூர்த்தியே எல்லாவற்றிற்கும் சாதனமாயிருக்க அக்கால மூர்த்தியையும் வெல்லவல்ல உபாயம் இவனிடத்தில் யாது இருக்கின்றது? இதனைக் கண்டறிய எனக்கு மிகுந்த ஆவலாய் இருக்கின்றமையால் அவர்களது யுத்தத்தைக் கண்டு களிப்படைவேன்' எனத் தீர்மானித்து ராவணனுக்கு முன்னதாக இவ்விஷயத்தை யமனிடம் தெரிவிக்க விரும்பி வெகு சீக்கிரத்தில் யமபுரம் போய்ச் சேர்ந்தனர்.

இருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## இருபத்தோராவது ஸர்க்கம்.

## ராவணனுக்கும் யமகிங்கரர்களுக்கும் யுத்தம்.

"நாரத முனிவர் யமதருமனிடம் ராவணனது வரபலத்தையும் வீரத்தையும் கூறி அவன் யமனுடன் போர்புரிய வருவதையும் தெரிவித்தனர். அச்சமயம் அவ்விடமெங்கும் புஷ்பகவிமானத்தினது காந்தியினால் சோதியாக விளங்குமாறு செய்துகொண்டு ராவணன் அருகே வந்து சேர்ந்தனன். அவன் யமபுரத்தில் பாபஞ்செய்தவர்கள் கொடிய நரகவேதனைகளை யனுபவிக்கக் கண்டனன். பயங்கரமான ரூபமுடைய யமனது வேலையாட்கள் மிகவும் உக்கிரமாகப் பிராணிகளை வருத்தி வதைப்பதைக் கண்டனன். அந்த வேதனை பொறுக்கமாட்டாது பலர் பெருங் கூச்சலிட்டனர்; சிலர் பரிதாபமாகப் புலம்பினர். இவ்வாறு நூற்றுக் கணக்காயும் ஆயிரக் கணக்காயும் நரகவேதனை யனுபவிக்கின்ற பிராணிகளை ராவணன் கண்டனன். பின்னுமவன் புண்ணியாத்மாக்கள் பெருமகிழ்ச்சியுடன் இன்பமனுபவித்துக் கொண்டிருப்பதையும் கண்டனன். அப்புண்ணிய சீலரில் கோதானஞ்செய்தவர்கள் பசுவின் பால் முதலியவற்றை யருந்தி அகமகிழ்ந்தனர். அன்னதானஞ் செய்தவர்கள் அன்னத்தை வயிறார உண்டு களித்தனர். கிருகதானஞ் செய்தவர்கள் அற்புதமான மாடமாளிகைகளிற் குடிபுகுந்து களித்திருந்தனர். இங்ஙனம் மற்றும் பற்பல தருமங்கள் செய்தவர்கள் பலரும் தம் தம் தருமங்களுக்கேற்றவாறு அவற்றின் நற்பயனைப் பெற்றுப் பேரானந்தமடைந்து விளங்கினர்.

இவற்றையெல்லாம் கண்ணுற்ற ராவணன், தாம் செய்த தீவினையினால் தவிக்கின்ற பலரிடத்திலும் பரிதாபமுற்றுத் தனது பராக்கிரமத்தினால் அவர்களனைவரையும் அந்நரகத்தினின்று விடுவித்து ஓடிப்போகச் செய்தனன். இங்ஙனம் அவனால் விடுவிக்கப் பெற்ற அந்தப் பிராணிகள் ஒரு முகூர்த்தகாலம் சுகமுற்று மகிழ்ந்திருந்தனர். அதுகண்ட யமனது கிங்கரர்கள் கோபங் கொண்டவராகி ராவணனை யெதிர்த்தனர். அவர்கள் மிகுந்த வேகத்துடன் பிராஸம், பரிகம், சூலம், சக்தி, தோமரம், முஸலம்

முதலான பல படைக்கலங்களைப் பதினாயிரக் கணக்காய் புஷ்பக விமானத்தின் மீதெறிந்து நாசஞ்செய்ய முயன்றனர். ஆனால் தேவநிர்மிதமான அவ்விமானம் பிரமதேவனது மகிமையால் சிறிதும் சேதமுறாது சோதிபெற்று விளங்கியது.

பிறகு சிறந்த பலமுடையவர்களான யமனது வேலையாட்கள் பதினாயிரக் கணக்காக வந்து மரங்களையும் மலைகளையும் சூலம் முதலிய படைகளையும் ராவணன்மீதும் அவனது அமைச்சர் மீதும் பொழியலாயினர். ராவணனும் அவனது மந்திரிமார்களும், பற்பல சஸ்திரங்களால் யமகிங்கரர்களை வாட்டினர்.

யமனது வேலையாட்கள் ராவணன்மீது சூலங்களை மழை பொழிவதுபோல் பொழிந்தமையால் அவ்வரக்கன் உடம்பு முழுமையும் அவற்றால் நொறுக்கப்பட்டு உதிர வெள்ளம் வழிந்தோட புஷ்பக விமானத்தினிடையே நிரம்பப் பூத்த அசோக மரமென விளங்கினன். அந்த லங்கேசன் கோபத்தினால் கண்கள் சிவக்கப் பெற்று அமோகமான பாணங்களை மந்திர பூர்வகமாக ஜபித்து யமனது சேனைகளின்மேல் பொழிந்தனன். அவை மிகப் பயங்கரமாக அவர்கள்மீது வந்து வீழ்கையிலும் அந்த யமபடர்கள் சிறிதும் சளைக்காமல் மேகங்கள் மலையைச் சூழ்ந்துகொள்வது போல் அவ்விராவணனைச் சூழ்ந்துகொண்டு பிண்டி, பாலம், சூலம் முதலான படைக்கலங்களைவிடுத்து அவனைத் திக்குமுக்காடச் செய்தனர். அதனால் ராக்ஷசராஜன் கவசம்பிளந்து உதிரம் ஆறாய்ப் பெருகப் புஷ்பக விமானத்தினின்றும் மூர்ச்சித்துக் கீழே விழுந்தனன்.

ஆயினும் ஒரு முகூர்த்த காலத்தில் ராவணன் மூர்ச்சை தெளிந்தெழுந்து மிகுந்த கோபத்துடன் பாசுபதாஸ்திரத்தை அபிமந்திரித்து முப்புரமெரித்த மகாதேவன் விடுத்தவண்ணம் அக்கணையை விடுத்தனன். கொடிய விலங்குகள் பின்தொடர்ந்து செல்ல நாற்புறமும் சுவாலைகளை வீசிக்கொண்டு சென்ற அக்கணையானது யமனது சைன்னியங்கள் முழுமையும் எரிக்கலாயிற்று. அதனால் எரிக்கப்பட்ட அச்சேனை வீரர்கள் காட்டுத் தீயினால் கொளுத்தப்பட்ட மரங்களெனப் போர்க்களத்து மடிந்து

வீழ்ந்தனர். அதுகண்ட ராக்ஷச ராஜனும் அவனது அமைச்சர்களும் ஆனந்தமதிகரித்து ஆரவாரஞ் செய்தனர்.

**இருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## இருபத்திரண்டாவது ஸர்க்கம்.

### ராவணனுக்கும் தருமராஜனுக்கும் யுத்தம் நடந்தவிதமும் பிரமதேவன் ராவணனை வேண்டிக்கொண்டதும்.

"ராமா! இவ்வண்ணம் தனது சேனைகள் தோல்வியுற்றதைக் கேட்ட யமதருமன் கோபத்தினால் கண்கள் சிவக்க அழகிய ரதத்திலேறிச் சண்டைக்குப் புறப்பட்டனன். பாசமும் இருப்புலக்கையும் கைக்கொண்டு மிருத்யுதேவன் அவன் முன்னே நின்றனன். என்றும் நாசமுறாத இவ்வுலகமனைத்தையும் சங்காரஞ் செய்பவன் அந்த மிருத்யு தேவனே யன்றோ? யமனது காலதண்டமானது புருஷ ரூபந்தரித்து நெருப்புப்போல் ஜ்வலித்துக்கொண்டு அவனது பக்கத்தில் நின்றது. அவனைச் சுற்றிலும் காலபாசங்கள் இடைவெளியின்றி அடர்ந்து நின்றன. முத்கரமென்னும், இருப்புத்தடியும் உருவமெடுத்து வந்து நின்றது. அனைத்துலகங்களும் அஞ்சுமாறு காலமூர்த்தி இங்ஙனம் கோபங்கொண்டதுகண்டு தேவர்கள் மூன்றுஉலகங்களும் அழிந்தனவோ வெனவெண்ணினர்.

இவ்வாறு மிக பயங்கரமான தோற்றத்துடன் மிருத்யுதேவன் தேரேறி வரக்கண்ட ராவணனது மந்திரிகள் அறிவழிந்து, அச்சமேலீட்டால் திசைகள்தோறு மோடலாயினர். ராவணனோ அந்த காலனைக்கண்டு சிறிதும் அச்சமுறவில்லை. யமன் ராவணனையணுகி மிகுந்த கோபத்துடன் அவன்மீது சக்தி தோமரம் என்னும் ஆயுதங்களை விடுத்து அவனது மர்மஸ்தானங்களைப் பிளக்கலாயினன். அதனால் ராவணன் சிறிதும் சலிப்புறாதவனாகி யமனது ரதத்தின்மீது மேகம் மழைபொழியுமாறு சரமாரி பொழியலாயினன். அப்போது காலமூர்த்தி கொடியகணைகளைத் தொடுத்து ராவணனது மார்பில் விடுக்க அவற்றால்

அவன் பீடிக்கப்பட்டு மிகவருந்தி அதற்கொன்றும் பதில் செய்யத் தோன்றாது தவித்தனன்.

இங்ஙனம் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் வெற்றியை வேண்டினவர்களாய் போர்முகத்தில் பின்வாங்காது வெற்றி தோல்வியின்றி ஏழுநாள்வரை யுத்தஞ் செய்தனர். அப்பொழுது உலகத்திற்கு யுகாந்தகாலம் வந்துவிட்டதோவெனத் தோற்றியது. அக்காலையில் அரக்கர் தலைவன் மிருத்யுவின் மீது நான்கு பாணங்களும் சாரதியின்மீது ஏழு அம்புகளும் விடுத்து யமன் மீது ஆயிரக்கணக்கான சரங்களைப் பொழிந்து அவனது மர்மஸ்தானங்களைத் தொளைக்கலாயினன். அதுகண்டு யமன் மிகுதியாகக் கோபங்கொள்ள அவனது வாயினின்றும் புகையுடனே ஜ்வாலைகளை மாலைமாலையாக வீசிக்கொண்டு கோபாக்கினி வெளிக்கிளம்பியது.

உடனே யமன் கோபத்தினால் கண்கள் சிவந்து என்றும் வீண்போகாத காலதண்டத்தைக் கையிலெடுத்துச் சுழற்றினன். எல்லாப் பிராணிகளும் யமதண்டத்தைக் கண்டவளவில் பிராணன்களை யிழப்பார்களென்றால் அதுமேலே பட்டபோழ்து கேட்கவேண்டுமோ? அதனை மேலே தாக்கினால் விளையும் தீமையை யாம் என்னென்று சொல்லக்கூடும்? அத்தண்டத்தைக் காலமூர்த்தி யெடுத்தளவில் அஃது அரக்கனை உடனே எரிப்பதெனஅக்னி ஜ்வாலைகளை நாற்புறமும் வீசிக்கொண்டு விளங்கியது. அதுகண்டு அப்போர்க்களத்திலுள்ளோர் அனைவரும் அஞ்சி ஓடிப்போயினர். தண்டமும் கையுமாகநின்ற யமனைக் கண்டு தேவர்களனைவரும் கலக்கமுற்றனர்.

அச்சமயம் பிரமதேவன் யமனிடம் வந்து 'காலமூர்த்தியே! நீ உனது தண்டத்தினால் இவ்வரக்கனைக் கொல்லா தொழிக. ஏனெனில் தேவாயுதங்களால் மரணமுண்டாகாதென யான் இவனுக்கு வரமளித்திருக்கின்றேன். உரைத்தமொழியை நீ பொய்யாகச்செய்யலாகாது. உனது தண்டம் நிச்சயமாய் ஸமஸ்த உலகங்களையும் நாசமாக்கும்பொருட்டு ஆதியில் என்னால் படைக்கப்பட்டது. இது தாக்கினால் பின் ஒருமுகூர்த்த காலமாயினும்

எவனும் ஜீவித்திரான். இது தாக்கிய பின்னர் இவ்வரக்கன் இறந்தாலும், இறவாதொழிந்தாலும் இரு வகையிலும் என்வாக்குப் பொய்யாகும்படி நேரிடுகின்றதாதலின் இதனை ராவணன் மீது எறியாது அவனைவிட்டுவிடுக. உலகங்களையெல்லா முற்று நோக்கி என்னையும் சத்தியவானுக்குக' என்று வேண்டினன்.

அதனைச் செவியுற்ற தருமராஜன் அக்கடவுள் கூறியது நியாயமென்று தேர்ந்து தண்டத்தை வைத்து அவ்வரக்கன் கண்ணிற் புலப்படாது போர்க்களத்தைவிட்டு மறைந்துபோயினன். அதுகண்ட தசக்கிரீவன் யமனை ஜயித்துவிட்டேனெனக் கூச்சலிட்டுக்கொண்டு புஷ்பகவிமானத்தின் மீதேறி யமலோகத்தினின்று வெளியே சென்றனன்.

இருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்து மூன்றாவது ஸர்க்கம்.

## ராவணன் நிவாதகவசருடன் நேசங்கொண்டதும் வருணபுத்திரர்களை வென்றதும்.

பிறகு ராவணன் தனது அமைச்சர்களுடன் பாதாளலோகஞ் செல்ல விரும்பி சமுத்திரத்திற் புகுந்து முதலில் வாசுகியினால் பரிபாலிக்கப்பட்ட போகவதி யென்னும் பட்டணத்தைச் சேர்ந்தனன். அவன் அங்குள்ள நாகர்களை வென்று வசப்படுத்திக்கொண்டு, நிவாதகவசரென்னும் தைத்தியர்கள் வசிக்கின்ற மணிமதி என்கிற பட்டணத்தை யடைந்தனன். மிகுந்த பராக்கிரமமும் பலமுங்கொண்ட அத்தைத்தியர்களுக்கும் ராவணனுக்கும் வெற்றி தோல்வியின்றி ஓராண்டளவும் மிகவும் பயங்கரமான யுத்தம் நடந்தது.

அச்சமயம் பிரமதேவர் அங்குத்தோன்றி நிவாதகவசர்களை நோக்கி 'இந்த ராவணன் தேவாசுரர்களாலும் போரில் வெல்வதற்குரியனல்லன். ஆதலின் நீங்கள் தேவாசுரர்களுடன் கூடி வந்து எதிர்த்தபோதிலும் இவனை வெல்ல வல்லவராகமாட்டீர். இவனுடன் நீவிர் நட்புச்செய்து கொள்வதே நலமென்று எனக்குத் தோன்றுகிறது' என்றனர்.

உதற்குட்பட்டு ராவணனும் நிவாதகவசர்களுடன் அக்கினி சாக்ஷியாக நட்புச்செய்துகொண்டு அவர்களிடம் மிகுந்த பிரீதியுடையவனாயினன். பிறகு அவன் அவ்விடத்திலேயே ஓராண்டளவும் தங்கி தைத்தியர்களுக்குரிய நூறுமாயைகளையும் நன்கு கற்றுணர்ந்து வருணனது நகரத்தைத் தேடிக்கொண்டு அப்பாதாள லோகத்திலேயே சுற்றித் திரிந்தனன். பிறகு காலகேயர்கள் வசிக்குமிடமான அச்மநகரமென்னும் பட்டணஞ் சென்று அங்குள்ள பலசாலிகளான காலகேயர்களைக்கொன்று சூர்ப்பணகையின் கணவனான வித்யுஜ்ஜிஹ்வனையும் கத்தியால் வெட்டிக்கொன்றனன். பிறகு நானூறு தைத்தியர்களை ஒரு முகூர்த்தகாலத்தில் மாய்த்தனன்.

பிறகு ராவணன் வருணனது வாசஸ்தானத்தையடைந்து இடைவிடாது பால் சொரிகின்ற தெய்வத்தன்மை பொருந்திய சுரபியென்னும் பசுவையுங் கண்டனன். அதன் பால் பெருகியே பாற்கடல் உண்டாகியது. இந்த சுரபியின் கன்றே சிவனுக்கு வாகனமாயிருக்கின்ற ரிஷபமாகும். அதன் பால் பெருக்கினாலாகிய பாற்கடலினின்றுமே சந்திரன் பிறந்தனன். 'பேநபர்' என்னும் மேன்மை பெற்ற மகரிஷிகள் அதன் நுரையை அருந்தியே உயிர் வாழ்கின்றனர். தேவர்களுக்கு உணவான அமிர்தமும் அதினின்றுமே உண்டாயது. இத்தகைய பிரசித்திபெற்ற அற்புதமான தெய்வப் பசுவை ராவணன் வலம் வந்து வணங்கி உள்ளே சென்றனன்.

ராவணன் அம்மாளிகையின் வாயிலுள் சேனாவீரர்களை வதைத்துத் தானும் அடிபுண்டு வருணனை யுத்தஞ்செய்ய வரும்படி அவர்களிடம் சொல்லியனுப்பினன். அதுகேட்ட வருணனது புத்திரர்களும் பௌத்திரர்களும் மிக்க கோபங்கொண்டவர்களாகி சிறந்த தேர்களின்மீதேறி சேனைகள் புடைசூழப் புறப்பட்டு ராவணனை வந்தெதிர்த்தனர். ஒரு நொடிப்பொழுதில் வருணனது படைகள் யாவும் அடிபட்டு மடிந்தன; வருண புத்திரர்களும் அரக்கர் எய்த அம்புகளாலடிபுண்டு ஆற்றாதவர்களாயினர்.

பிறகு அவ்வருண குமாரர்கள் தேர்ந்து மிகுந்த கோபத்துடன் ராவணனை யெதிர்த்து வஜ்ஜிராயுதத்திற் கொப்பான கொடிய கணைகளை விடுத்து மேகம் மழைபொழிந்து மலையைப் பிளப்பதுபோல் அவனைப் பிளந்தனர். அதுகண்ட தசக்கிரீவன் கோபங்கொண்டு பிரளய காலாக்கினியென வெழுந்து பயங்கரமான பாணங்களைப் பொழிந்து அவர்களது மருமஸ்தானங்களைப் பிளந்தனன். அதனாலவர்கள் தரையில் வீழ்ந்து மூர்ச்சித்து வருந்தினர். அங்கிருந்த ஏவலாட்கள் அக்குமாரர்களை யெடுத்துத் தம் மாளிகையிற்கொண்டு சேர்த்தனர்.

அப்பால் அரக்கர் தலைவன் அவர்களை நோக்கி 'நீவிர் உங்கள் தலைவனான வருணனை என்னுடன் போர்புரிய அனுப்புங்கள்' என, வருணனது மந்திரியான பிரகஸனென்பவன் 'வருணதேவர் சங்கீதங் கேட்க வருணலோகஞ் சென்றிருக்கின்றனர். எம்மரசன் வெளியே சென்றிருக்கையில் நீர் ஏன் வீணாக இங்குவந்து வருந்துகின்றீர். இங்குள்ள வருண குமாரர்களை நீர் வெற்றிகொண்டீரல்லவா?' என்றனன். அது கேட்ட ராவணன் தன் வெற்றி விளங்கப் பறைசாற்றி அப்புறஞ் சென்றனன்.

இருபத்துமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்துநான்காவது ஸர்க்கம்

## * மகாபலியினிடம் இராவணன் அவமானமடைந்ததும் அவனிடம் உண்மையுரை கேட்டலும்.

பிறகு ராவணன் அப்பாதாள லோகத்தில் திரிந்து சுவர்ண மயமான ஸ்தம்பங்கள் நாட்டி, வைரக்கற்களாலும் படிகக் கற்களாலும் படிகளிட்டு வைடூரியத்தினால் தோரணங்கள் கட்டி முத்து மாலைகள் தொங்கவிட்டு பற்பல மணிகளாலும் அலங்கரிக்கப்பட்டு தேவேந்திர பவனம்போல் விசித்திரமாக விளங்குகின்ற மகாபலியினது மாளிகையைக் கண்டு அதில் நுழைந்தனன்.

---

* இதுமுதல் ஐந்து ஸர்க்கங்கள் அதிகபாடமென்பர்.

அம்மாளிகையின் வாயிலில் அஞ்சன மலைபோன்ற மேனியும் முடியில் கிரீடமும் விளங்கப்பெற்ற ஒரு பயங்கரமான புருஷனை ராவணன் கண்டனன். மிகவும் பெரிய உருவத்துடன் உலக்கையும் கையுமாக வழியை மறித்துக்கொண்டு நின்ற அப்புருஷனைக் கண்ட ராவணன் சற்றுப் பின்னிடைந்து திகைத்துச் சிந்திக்கலாயினன். அப்பொழுது அவ்வீர புருஷன் அவனை நோக்கி 'அரக்கனே! நீ இவ்விடம் வந்த காரணம் யாது? உனக்கு அதிதி பூஜையாக யுத்தம் அளிக்கின்றேன். நீ என்னுடன் அமராடுகின்றனையா?' என வினவினன்.

அதுகேட்ட ராவணன் அப்புருஷனை நோக்கி 'பேசத் திறமையற்ற பெரியோனே! இவ்வீட்டிலிருக்கும் மாவலியுடன் நான் யுத்தஞ்செய்ய விரும்புகிறேனாதலின் என்னை உள்ளே விடுவாயாக' என்று சொல்ல அவ்வீரன் 'ராக்ஷச! அம்மகாபலி சிறந்த தருமஞ்செய்து அதன்பயனாகப் பெருங்கீர்த்தியும் காந்தியும் பெற்றவன். சிறந்த புஜபலமுள்ள அப் பராக்கிரமசாலியுடன் உனக்குப் போர்புரிய விருப்பமாயின் அங்ஙனே செய்க' எனக்கூறி அவனை உள்ளே விட்டனன்.

உள்ளே சென்ற தசாநநன் சூரியனெனச் சோதிருருவாகிக் கண்ணெடுத்துப் பார்க்கவும் அசாத்தியனான தானவ ராஜனைக் கண்டனன். அம்மகாபலி ராவணனைக் கண்டதும் பெருநகை கொண்டு அவனைக் கைப்பிடித்து மடிமீது உட்காருவித்துக் கொண்டு 'தசக்கிரீவ! நீ என்னிடம் வேண்டுவது யாது? தடையின்றித் தருகிறேன்' என்றனன். அதுகேட்ட ராவணன் 'பலிச்சக்கரவர்த்தியே! முன்பு விஷ்ணுதேவன் உன்னைக் கட்டிக் காவல் செய்ததாக நான் கேள்விப்பட்டேன். அச்சிறையினின்று உன்னை யான் விடுவிக்க வந்துளேன்' என்று கூறினன்.

இங்ஙனம் ராவணன் கூறக்கேட்ட மாவலி குலுங்க நகைத்து 'ராவணா! நீ யாரிடமிருந்து என்னை விடுவிப்பதாக உரைத்தனையோ அவனை யார் என்று நினைத்தனை? கார்வண்ண மேனியனான ஒரு புருஷன் இம்மாளிகையின் வாயிலில் காவல் புரிகின்றனனல்லவா? மகாபலிஷ்டனான இவன் பல தானவேந்திரர்களையும்

வலியிற் சிறந்த அசுரர்கள் பலரையும் எளிதில் கொன்றவன் இவனாலேயே யானும் இவ்வாறு சிறை செய்யப்பட்டேன் ஏ ராவணா! இப்புருஷனை வஞ்சித்து வெல்லவல்ல வல்லவன் இவ்வுலகில் எவனுமில்லை. இவனை நீ யாரென்று நினைக்கின்றனை கருமம், அழிப்பு, அளிப்பு என்னும் மூவகைச்செயல்களுக்கும் மூல கர்த்தாவான ஜகந்நாதன் என்பதை நீ அறிவாயாக. ஆதலின் அம்மகா விஷ்ணுவை வணங்கி வந்த வழியே செல்வாயாக' என உரைத்து மறுபடியும் அவனை நோக்கி 'அரக்கனே! நீ வலிமை வாய்ந்தவனாயின் அதோ ஒரு சக்கரம் அக்கினிபோல் எரிந்து கொண்டு அற்புதமாக விளங்குகின்றதன்றோ? நீ சென்று அதைக் கையிலெடுத்துக்கொண்டு என் பக்கலில் வந்து சேருக' என்றனன்.

ராவணன் செருக்குற்றவனாகி அச்சக்கரத்தையணுகி அதையெடுக்க முயன்றனன். ஆனால் அதை யசைக்கவும் முடியவில்லை. அது கண்டு அவன் வெட்கமடைந்தவனாகித் தன் வலியெல்லாம் கொண்டு மறுபடியும் அதனை யெடுக்க முயன்ற வளவில் அவன் உடலெல்லாம் உதிரவெள்ளம் பெருக வேரற்ற மரமென மண் மீது வீழ்ந்தனன். அதுகண்ட அவனது மந்திரிமார்கள் 'ஹா! ஹா!!' வெனப் பெருங்கூச்சலிட்டனர்.

பிறகு ஒரு முகூர்த்தகாலங் கழித்து மூர்ச்சை தெளிந்த ராவணன் வெட்கத்தினால் ஒன்றும் தோன்றாது தலை குனிந்து நின்றனன். அப்பொழுது மகாபலி அவனை நோக்கி 'அரக்கர் பெருமானே! நீ எடுக்கமுயன்ற இந்த மணிகுண்டலம் எனது மூதாதையான இரணியகசிபுவினது காதணியாம். அவனிறந்தவுடன் இஃது இவ்விடம் வந்து வீழ்ந்தது. மற்றொரு மணிகுண்டலம் இமமலைத் தாழ்வரையில் வீழ்ந்துகிடக்கிறது. அவர் யுத்தஞ் செய்கையில் அவரது மணிமகுடம் சேதிதேசத்தருகே போய் வீழ்ந்தது.

பத்துத் தலையனே! அந்த இரணியகசிபு எவரும் பெறுதற் கரியனவான சிறந்த வரங்களைப்பெற்று மூவுலகங்களையும் வென்றவன். அவன் பிரகலாதனென் தனது மகனிடத்துத் தீங்கு செய்

தமையால் விஷ்ணுதேவன் நரசிங்க உருக்கொண்டு தனது கூரிய நகங்களால் அவனைக் கிழித்துக் கொன்றனன். அப்பரம புருஷனே எனது மாளிகை வாயிலில் காவல்புரிகின்றனன். அவனது பெருமையும் புகழும் ஒருவராலும் வருணிக்கத் தக்கதன்று. ஜகத்காரண பூதனும் ஆதியந்த மில்லாதவனுமான அப்பரம புருஷனுடைய பிரபாவங்களை இன்னும் பகர்கின்றேன் கேள்' என்று சொல்லி விஷ்ணுதேவனின் மகத்துவங்களை ஒருவாறு கூறி முடித்தனன்.

இவைகளையெல்லாம் கேட்ட ராவணன் கோபத்தினால் கண்கள் சிவந்து ஆயுதபாணியாய் வெளியே சென்றனன். ராமா! அது கண்டு வாயிலில் காவலிருந்த புருஷனான விஷ்ணுதேவன் பிரமனது வரத்தை வீணாக்கலாகாதென்று கருதி ராவணனைக் கொல்ல அது சமயமல்லவென்று தேர்ந்து மறைந்தருளினன். ராவணன் அம்மகாபுருஷனை அங்குக் காணாமையால் ஆனந்த கோஷஞ் செய்துகொண்டு வந்தவழியே திரும்பிச் சென்றனன்.

இருபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தைந்தாவது ஸர்க்கம்.

## ராவணன் சூரியனை வெற்றி கொண்டது.

பிறகு ராவணன் புஷ்பகவிமான மேறி சூரியலோகத்திற்குச் சென்று சூரிய தேவனைக் கண்டனன். அரக்கர்கோன் தனது மந்திரியான பிரகஸ்தனை விளித்து 'நீ இம்மார்த்தாண்டனிடஞ் சென்று,—ராவணன் உன்னுடன் அமர்புரியவேண்டி இதோ வந்திருக்கின்றனன். தைரியமிருப்பின் போர்புரிய விரைக. அங்ஙனமில்லையாயின் தோற்றேனென்றாயினும் துணிந்து கூறுக—என்று அறிவித்து அவனது கருத்தையறிந்து வருக' என்று கட்டளையிட்டனன். பிரகஸ்தன் சூரியபகவானிடஞ் சென்று அங்ஙனமே கூறினன். அதுகேட்ட கதிரவன் நன்கு ஆலோசனை செய்து தனது வாயிற்காப்போனான தண்டியென்பவனை நோக்கி 'சேவக! நீ உடனே எழுந்துசென்று ராவணனை யெதிர்த்து

வெற்றி பெறினும் பெறுக. அது முடியாதாயின் நான் வெல்லப்பட்டேன் என்றாயினும் உரை செய்க. உனக்கு எது தோன்றுகின்றதோ அதைச் செய்க. எனக்கு வீண் பொழுது போக்க, நேரமில்லை' என்று கட்டளையிட்டனன்.

தண்டி ராவணனிடஞ் சென்று சூரியன் சொன்னவற்றை விளங்கக் கூறினன். அதுகேட்ட ராக்ஷச ராஜன் தான் வெற்றி கொண்டதாக வெண்ணி ஜயகோஷஞ் செய்து கொண்டு எழுந்து சென்றனன்.

இருபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தாறுவது ஸர்க்கம்.

## ராவணன் சந்திரலோகஞ் செல்லுகையில் இடை வழியில் மாந்தாதாவுடன் போர் புரிந்தது.

ராவணன் அன்றிரவை அம்மேரு மலையிற்றானே சுகமாகக் கழித்து மறுநாள் சந்திரலோகஞ் சென்றனன். அச்சமயம் அவ்வழியில் புண்ணியசீலர்களான பாக்கியவான்கள் நறுமணப்பூமாலைகளையும் சிறந்த ஆடையாபரணங்களையு மணிந்து திவ்வியமான விமானங்களி லேறிக்கொண்டு சென்று கொண்டிருந்தனர். அவர்கள் ஒவ்வொருவரையும் கண்டு தசக்கிரீவன் மிகவும் ஆச்சரியமடைந்தனன். அச்சமயம் ஆங்கு ஒரு முனிவர் தோன்ற அவ்வரக்கர்கோன் அவரை நோக்கி 'ஸ்வாமி! இவர்கள் யாவர்? என்றும் யுத்தத்தை வேண்டுகின்ற எனக்கு யுத்த தானங்கொடுப்பவன் இவர்களில் யாவன்?' என்று வினவினன்.

அம்முனிவர் அவனை நோக்கி 'அரக்கர் பெருமானே! இப்புண்ணியசீலர்கள் சுவர்க்கம் வேண்டிச் செல்பவர்களேயன்றிப் போர் வேண்டுபவரல்லர். ஆயினும் இவர்களில் மாந்தாதா வென்று பிரசித்தி பெற்ற ஓர் அரசனுளன். அவன் சிறந்த பராக்கிரமசாலி யாதலின் அவனே உன்னுடன் எதிர்த்துப் போர் புரிய வல்லவன்' என்றனர்.

உடனே அவ்விராக்கதன் சுவர்க்கலோகஞ் சென்று கொண்டிருந்த மாந்தாதா வென்னு மரசனை மறித்து 'நீ என்னுடனே யுத்தஞ்செய்ய வருக' என வேண்டினன். பிறகு அவ்விருவர்க்கும் அகோரமான யுத்தம் நடந்தது. முடிவில் ராவணன் பிரமாஸ்திரத்தைக் கைக்கொள்ள, மாந்தாதா பாசுபதாஸ்திரத்தை எடுத்துக்கொண்டனன். அவ்விரண்டு அஸ்திரங்களையும் கண்ட சராசரங்கள் அஞ்சி நடுங்கின. இதுவன்றி விண்ணவர்களும் நடுக்கமுற்றனர். அனைத்துலகங்களும் நாசமடையுங்காலமென்று அனைவரும் பீதியடைந்தனர். இவ்விஷயங்களை ஞான திருஷ்டியால் கண்ட புலஸ்தியர், காலவர் என்னும் இரண்டு ரிஷிகளும் உடனே அவ்விடஞ்சென்று அயோத்திக் கரசனை மாந்தாதாவை அப்புறம் விலக்கி இனிய மொழிகள் பல புகன்று ராக்ஷச ராஜனையும் சாந்தப்படுத்தினர். அப்பால் நரபதியும் ராக்ஷச பதியுமான அவ்விருவரும் நட்புச்செய்து கொள்ளுமாறு அவர்களுக்கு நற்புத்தி புகட்டி அகமகிழ்ந்தவர்களாய் அம்முனிவர்கள் தத்தமிருப்பிடம் போய்ச் சேர்ந்தனர்.

இருபத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தேழாவது ஸர்க்கம்.

## ராவணன் சந்திரனேடு அமர்புரியத்தொடங்கியதும் திசைமுகன் தோன்றி அவனை சமாதானப்படுத்தியதும்.

அப்பால் ராக்ஷச ராஜன் மிகுந்த சந்தோஷத்துடன் புஷ்பக விமானத்திலேறி நூறு யோசனை தூரம் ஆகாய மார்க்கத்திற் சென்று சந்திரமண்டலத்தை யடைந்தனன், தசக்கிரீவன் தன்னிடம் அணுகியது கண்டு தாராபதி அதற்கு ஆற்றுதவனாகித் தனது சீத கிரணங்களால் அவனை உபத்திரவிக்கலாயினன். சந்திர கிரணங்களின் சீத பாதை பொறுக்கமாட்டாது ராவணனது அமைச்சர்கள் மிகத்துன்ப முற்றனர்.

அது கண்டு ராவணன் சீற்றமுற்று விற்பிடித்து நாராச பாணங்களைத் தொடுத்து விடுத்து நிசாபதியைப் புடைக்கத்

தொடங்கினன். நான்முகக்கடவுள் இச்செய்தியைக் கேள்வியுற்றுச் சரேலெனச் சந்திரலோகஞ்சேர்ந்து ராவணனை நல்வார்த்தையாக வாழ்த்தி 'தசக்கிரீவ! விச்சிரவசனது வயிற்றிற் பிறந்த நீ தாராபதியை இங்ஙனம் துன்புறுத்தலாகுமோ? எல்லா வுலகங்களுக்கும் இதங்கருதியன்றோ இந்தக் குமுத நண்பன் தனது குளிர்ந்த கிரணங்களை வீசிக்கொண்டு விளங்குகின்றனன். ஆனையால் உனது செயலைத்தவிர்த்து நான் இப்பொழுது உனக்கு உடதேசிக்க விரும்பும் மேலான மந்திரத்தைக் கேட்பாயாக. இம்மந்திரத்தை என்றும் மறவாது மனத்திற் கொண்டிருப்பவனுக்கு ம்ருத்யு பயம் எந்நாளுமில்லது' என்று கூறினர்.

இங்ஙனம் அயன் உரை செய்த மொழியைக்கேட்ட தசக்கிரீவன் கூப்பிய கையனாய் அவரை நோக்கி 'தேவ! தேவரீரது திருவுள்ளப்படியே நடக்கச் சித்தமாய் இருக்கிறேன். அடியேனுக்கு அம்மந்திரத்தை உபதேசித்தருள்க. அதனை ஜெபித்து அடியேன் எல்லாத் தேவர்களிடத்தும் அச்சமொழிந்தவனாவேன்.' எனக்கூறினன்.

பிரமதேவன் ராக்ஷச ராஜனை நோக்கி 'அரக்கர்கோனே! இவ்வரிய மந்திரம் பிராணனுக்கு அபாயம் நேரிடும்வேளையிலேயே உபயோகிக்கத்தக்கது. அக்ஷமாலையைக் கையில் பிடித்துக்கொண்டு இதை ஜபித்தல் வேண்டும். வாயினால் உரைத்தவளவிலே போரில் வெற்றி விளைக்கவல்லதான இம்மந்திரத்தைக் கேட்பாயாக' என்றுகூறி மகாதேவனுடைய அஷ்டோத்தர சதநாம (நூற்றெட்டுப் பெயர்களடங்கிய) மந்திர ஸ்தோத்திரத்தை உபதேசித்தனர்.

இருபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தெட்டாவது ஸர்க்கம்.

### ராவணன் பாதாள லோகத்தில் அவமானமடைந்தது.

"பிறகு சிலநாள் சென்றபின் ராவணன் மறுபடியும் தனது மந்திரிமார்களுடன் வெளிப்பட்டு மேற்கு சமுத்திரஞ் சென்று

னன். ஆங்கு ஒரு திவில் கபிலரூபியான நாராயணன் அக்கினிக் கோப்பான உருவமுடையவனாய், சுவர்ணத்தை நிகர்த்த மேனி யுடன்கூடி துணைவர் எவருமின்றித் தனியே உயரவெழுந்த ஊழித்தீயெனத் தோற்றினன். ஒமகுண்டத்தினிடையே அக் கினிஹோத்திரமெனத் தோற்றிய அவ்விஷ்ணுதேவனை நோக்கி தசக்கிரீவன் 'என்னுடன் அமராடவருக' எனவேண்டியழைத்து, சூலம், சக்தி, தோமரம் முதலிய படைக்கலங்களைக்கொண்டு அட்டஹாசஞ் செய்தனன்.

அதுகண்டு அப்பரம புருஷன் சிறிதும் கலக்கமுறாதவனாகி அவ்வரக்கனை நோக்கி 'ராக்ஷச ராஜனே! துர்ப்புத்தியுடையோனே! உனது போர்விருப்பை இதோ சாந்தப் படுத்துகிறேன்' என்று கூறி அவ்வரக்கர் தலைவனை மெல்ல விளையாட்டெனவே கையி னால் ஒரு அடி அடித்தனன். அவ்வடியைத் தாங்கமுடியாது ராவணன் கீழே வீழ்ந்தனன். பிறகு வேதசொரூபியான அக் கடவுள் மற்ற இராக்கதர்களை யதட்டி ஓடச்செய்து, சலிக்கும் சைலமென நடந்து பாதாளலோகம் புகுந்தனர்.

சிறிது நேரஞ் சென்றதும் மூர்ச்சை தெளிந்தெழுந்த தசக்கிரீவன் அஞ்சியோடிய பிரகஸ்தன், சுகன், சாரணன் முத லான அமைச்சர்களை அருகேயழைத்து 'இங்கு நின்ற மனிதன் எவ்விடஞ் சென்றனன்? விரைவிற் கூறுக' எனக் கதறினன். அமைச்சர்கள் உண்மையைக் கூறியதும் துர்ப்புத்தியுடைய ராவ ணன் கூரிய கத்தியொன்றைக்கொண்டு தானும் பாதாளலோகம் புகுந்து சென்றனன். அங்கு அவன் நீலமலைபோன்ற மேனியராக விளங்கும் பலபுருஷர்களைக் கண்ணுற்றனன். அவர்கள் ஹாரம், கேயூரம், கணையாழி முதலான மிகச்சிறந்த திருவாபரணங்கள் அணிந்து, செம்மலர்மாலைகள் சூட்டிச் செஞ்சாந்துபூசி நர்த்தனஞ் செய்து கொண்டிருந்தனர். மூன்றுகோடி மகாநுபாவர்களான அவர்களைக்கண்டு தசானனன் வியந்து வாயிலிலேயே நின்றனன்.

முன் மகா புருஷனான விஷ்ணுதேவன் வெளியில் எங்ஙனம் தோன்றினனோ, அவ்வாறே இவர்களனைவரும் அதே நிறமும்

அதே வலியும் அதே ஒளியுமுடையோராயிருந்தனர். அனைவரும் நான்கு கைகளையுடையவர்களாய் உற்சாகமுடன் இருந்தனர். ராவணன் பிறகு தான் பிரமதேவனிடம் பெற்ற வரத்தின் பெருமையால் கலக்கமற்றவனாகி அங்கிருந்து அப்பால் விரைந்து சென்றனன். ஆங்கு ஆயிரம் பணங்களையுடைய ஆதிசேஷன் மீது கௌஸ்துப மணி மார்பில் துலங்க திவ்வியமான ஆபரணங்களணிந்த பரமபுருஷனை ராவணன் கண்டனன். அப்புருஷனது பாரிசத்தில் திவ்வியமான ஆடையாபரணங்களணிந்து அதிமனோகரமான புன்னகைகொண்டு ஒரு பெண்மணி அலங்காரமாக விளங்கினள். அந்தத் திரிலோக சுந்தரியைக் கண்ணுற்றவளவில் இலங்கையரசன் மதியிழந்து மன்மதன் வசப்பட்டவனாகி அவ்வுத்தமியைக்கைப்பற்ற எண்ணி அருகே சென்றனன். அவனது கெடுமதி புணர்ந்து பாம்பணைமேற் பள்ளிகொண்டிருந்த பரமபுருஷன் அவ்வரக்கர்கோனை நோக்கிக் குலுங்க நகைத்தனன். ராவணன் அம்மகாநுபாவனது தேஜஸ்வினால் தகிக்கப்பட்டவனாகி அவனது மூச்சுக் காற்றினால் மேலெழும்பப்பட்டு அடியற்ற மரமென மண் மீது வீழ்ந்தனன்.

ஒரு முகூர்த்தகாலஞ் சென்றபின் ராவணன் மூர்ச்சை தெளிந்தெழுந்து அப்புருஷனிடம் அஞ்சி அகங்குலைந்து 'ஹே! தேவ! இத்துணைச் சிறப்புற்ற சௌரியமும் சோதியுமுடையரான தேவரீர் யாவர்? திருவுள்ள மிரங்கி உரை செய்தருள்க' என வேண்டினன். திருமால் அவனை நோக்கி 'அரக்கனே! நீ இன்றே என் கையில் வதைபட்டு மரிக்க விரும்புகின்றனையா?' எனக் கேட்டனர். தசக்கிரீவன் அக்கடவுளை நோக்கி 'சுவாமி! நான் பிரமதேவனிடம் பெற்ற வரத்தின் பெருமையால் மிருத்யுவசமாயினனல்லேன். எனக்கு இணையான ஒருவன் தேவர்களிலும் இதுவரை ஜனித்தவனல்லன்; இனி பிறக்கப்போகின்றவனுமிலன். ஆதலின் எனக்கு எவராலும் மரணம் நேரிடாது. ஆயினும் ஒருக்கால் எனக்கு மரணம் என்பது ஒன்று நேருமாயின் அது தேவரீராலேயே நேருமேயன்றி மற்றெவராலும் கிடைத்தற்கரிது. தேவரீரால் அடியேனுக்கு மரணம் நேரிடுமாயின் அஃது

எனக்குப் புகழும் பெருமையுமாகும்' என இவ்வாறு மொழிந்தனன்.

அப்பொழுது ராவணன அககடவுளது திருமேனியில் மூவுலகங்களும், ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்திரர்கள், மருத்துக்கள், அசுவினி தேவர்கள், சித்தர்கள், பித்ருக்கள், யமன், குபேரன், கடல்கள், மலைகள், அக்கினிகள், வேதங்கள், கிரகங்கள், நட்சத்திரங்கள், சந்திர சூரியர்கள், முனிவர்கள், கருடன், தைத்தியர், தானவர், இராக்கதர் முதலியவர்களும் சூக்ஷம ரூபங்களாகவிருப்பதைக் கண்டு அப்பெருமான் சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியே யென்றும் ஆங்கு அவன்கண்ட மூன்றுகோடி புருஷர்களும் நித்தியசூரிகள் என்றும் தேர்ந்து உடனே இலங்கைக்குத் திரும்பினன்'' என்று அகத்திய முனிவர் கூறியதும் ராமன் ஆச்சரியப்பட்டனன்.

இருபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## இருபத்தொன்பதாவது ஸர்க்கம்

## ராவணன் பலவழகிய பெண்களைக்கொண்டு சென்றது.

மீண்டும் அகத்திய முனிவர் ராமனை நோக்கி "ரகுநந்தனே! அப்பால் ராவணன் வெளிப்பட்டு வருகையில் இடைவழியில் கண்களில் கட்டழகிகளான கன்னிகைகளேனும், பருவமடைந்த பெண்மணிகளேனும் புலப்படுவாராயின் உடனே அவன் அவர்களது பந்து ஜனங்களைக் கொன்று அவ்வனிதைகளைத் தன் விமானத்திலேற்றித் தன் வசமாக்கிக் கொள்வான். இங்ஙனம் இராக்கத ராஜன் நாக கன்னிகைகள், ராக்ஷச கன்னிகைகள், அசுர கன்னிகைகள், மனுஷ்ய கன்னிகைகள், யக்ஷ கன்னிகைகள், தானவ கன்னிகைகள் ஆகிய பல சுந்தரிகளைத் தன் விமானத்தில் அநேகமாகச் சேர்த்துக் கொண்டனன். அக்கன்னிகைகளனைவரும் அவ்விமானத்தில் நூற்றுக்கணக்காகக் கூட்டம் கூடிக் கதறலாயினர்.

சிங்கத்தினிடஞ் சிக்கிய மான் குட்டிகள் போல தசக்கிரீவனிடம் அகப்பட்டுக் கொண்ட அவ்விள மங்கையர்கள் யாதும் தோன்றாது சோகத்தினால் சிந்தை கலங்கியவர்களாகி 'ஆ! ஐயோ ஈதென்ன அநியாயம்? இக்கொடியோன் பரஸ்திரீகளைப் பிடித்துக் கெடுக்க விரும்புகின்றானாதலின் இப்பாவிக்குப் பெண் மூலமாகவே மரணம் நேரிடுமாக' எனக்கொடிய சாபமிட்டனர். அதைக்கேட்டு ராவணன் சிறிதும் லட்சியம் செய்யாமல் அவர்களது பரிதாபமான புலம்பலுக்கும் மனமிரங்காது அவர்களுடனே இலங்காபுரி போய்ச் சேர்ந்தனன்.

இலங்கையில் ராவணன் பிரவேசித்த உடனே அவனது தங்கையான சூர்ப்பணகை ஓடோடியும் வந்து கண்ணீர் தாரை தாரையாகப்பெருக 'அரக்கர் தலைவனே! நீ பலசாலியெனச்செருக்குற்று காலகேயர் எனப் பெயர் பெற்ற பதினாலாயிரம் தைத்தியர்களைக் கொலைபுரிந்ததுமன்றி எனக்குப் பிராணனிலும் பிரியனான எனது கணவனையும் கொலை செய்தனையே! ஐயோ! இனி என்கதியென்ன? கொஞ்சமேனும் தங்கையின் புருஷன் எனப் பாராது நீ அவரைக் கொலைசெய்து வெட்கமுறாதிருக்கின்றனையே!' எனப் புலம்பினள்.

ராவணன் அவளை நோக்கி 'எனது செல்வத்தங்காய்! இஃது என்னால் விளைந்ததன்று; விதிவசத்தினால் நேர்ந்து விட்டது. நடந்ததைப்பற்றி வருந்துவதில் யாது பயன்? ஆதலின் நான் சொல்வதைக் கேட்பாயாக. உனது சிற்றன்னைமகனும் அரைச் சகோதரனுமான கரனிடஞ் சேர்ந்து வாழ்வாயாக. அவ்விராக்கதன் உனது கட்டளைக்கு எப்பொழுதும் கீழ்ப்படிந்து நடப்பான். அவனைப் பதினாலாயிரம் ராக்ஷசர்களுக்குத் தலைவனாக்கி ஜனஸ்தானத்தில் அரசு செலுத்தும்படி நியமிக்கிறேன். நீ அவனுடன் சென்று சுயேச்சையாய்த் திரிந்து வாழக்கடவாயாக' என்று கூறி அங்ஙனமே ஏற்பாடு செய்தனன். உடனே கரன் பயங்கரமான உருவமுடையவர்களும் சிறந்த பலசாலிகளுமான பதினாலாயிரம் அரக்கர்களுடனே தண்டகாவனஞ் சேர்ந்து ஆங்கு ஜனஸ்தானமேற்படுத்திக் கொண்டு எதிர்ப்பவர் எவருமின்றி அரசு செலுத்தி

வந்தனன். சூர்ப்பணகையும் சோகந்தீர்ந்து அங்குச்சென்று இனி தாக வாழ்ந்து வந்தனள்.

இருபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

முப்பதாவது ஸர்க்கம்.

## மேகநாதனது தவப் பெருமையும் ராவணன் மது வென்பவனுடன் நட்புக் கொள்ளுதலும்.

"பிறகு ராவணன் ஒருநாள் இலங்காபுரத்திலுள்ள உத்தியான வனமாகிய நிகும்பிலை என்கிற அழகிய சோலைக்குள் தன் அமைச்சர்களுடன் சென்றனன். ஆங்கு யூபஸ்தம்பங்கள் நாட்டி வேதிகைகள் அமைத்து யாகசாலை ஒன்று அற்புதமாக நிருமிக்கப் பட்டிருந்தது. அவ்விடத்து அவனது மகனுன மேகநாதன் கிருஷ்ணுஜிந (மான் தோல்)மும் கமண்டலமும் சிகையும் தண்டமும் தரித்து தீக்ஷிதனுய் விளங்கினன். அக்குமாரனைக் கண்ணுற்று ராவணன் அவனையணைத்து முத்தமிட்டு 'மகனே! ஈதென்ன காரியஞ் செய்யத் துணிந்தனை? என்னிடம் உண்மையைக் கூறுக' என வினவினன்.

அதுகேட்டு வேள்வி செய்வித்தற் பொருட்டு ஆங்கு வந்திருந்த தவப்பெருமை பெற்ற சுக்கிராசாரியர் கூறலாயினர். 'ராக்ஷசராஜனே! உன் அருமைப் புதல்வன் ஏழு யாகங்கள் மிகவும் விஸ்தாரமாக இயற்றினன். அவை அக்கினிஷ்டோமம், அச்வமேதம், பகுசுவர்ணகம், ராஜசூயம், கோமேதம், வைஷ்ணவம், மாஹேச்வரம் என்பனவாம். எவர்க்கும் செய்தற்கரியதான மாஹேச்வர யாகத்தில் உனது புத்திரன் சிவபிரானிடமிருந்து அளவற்ற வரங்கள் பெற்றனன். அதனுலிவன் மண்ணுலகத்தும் விண்ணுலகத்தும் வேண்டியவாறு செல்லவல்லதும் என்றும் அழியாததுமான திவ்வியமான ஒரு ரதமும், அம்புகள் நிறைந்த அக்ஷயமான அம்பறுத் தூணிகளும், எவராலும் வெல்வதற்கரியதான வில்லும், எதிரிகளை அதஞ்செய்யும் அற்புதமான அஸ்திரமும், தாமஸியென்னும் ஒரு மாயையும் பெற்றனன். போரில் இம்

மாயையைப் பிரயோகித்தவளவில் பேரிருள் ஒன்று உண்டாகி இவனுள்ளவிடம் இன்னதெனத் தேவாசுரர்களுக்கும் அறிதற்கரியதாகும். ஹே தசக்கிரீவா! இனி உன் மைந்தனைத் தேவாசுரர்கள் ஒன்றுகூடி யெதிர்ப்பினும் வெல்ல முடியாது' என்று கூறினர். ராவணன் அது கேட்டு மிகுந்த சந்தோஷங்கொண்டு மேகநாதனை மறுபடியும் தழுவி முத்தமிட்டு அவனுடன் அரண்மனைபோய்ச் சேர்ந்தனன்.

அச்சமயம் தருமாத்துமாவான விபீஷணன், ராவணனை நோக்கி 'அண்ணா! நீர் செய்துவரும் தீய காரியங்களைக் கண்டு பெரியோர் நம்மையிகழ்ந்துரைக்கின்றனரே! ஐயோ! நீர் கொண்டு வந்த கன்னியர்களின் உற்றார் உறவினரை நீர் அதஞ்செய்து தானே அபகரித்தது? இப்பாவத்தின் பயனாக உமது அரைச் சகோதரியான (சிறிய தாயாரின்மகள்) கும்பீநஸியை மதுவென்னுமிராக்கதன் அபகரித்துக் கொண்டுபோயினன்' என்றனன்.

இதுகேட்ட ராவணன் கோபத்தினால் கண்கள் சிவந்து 'இக்கணமே எனது தேரைக் கொண்டுவந்து நிறுத்துங்கள். சூரர்களான சேனா வீரர்களனைவரும் போர்க்கோலங்கொண்டெழுங்கள். எனது சகோதரனை கும்பகரணனையும் எழுப்புங்கள். யான் அனைவருடனும் கூடிச்சென்று மதுவென்னும் மதிகேடனை அமரில் அதஞ்செய்து அதே கோலமாய் தேவலோகஞ்சென்று தேவர்களையும் தேவேந்திரனையும் வென்று செருக்குற்று எங்கும் சஞ்சரிப்பேன்' என்று அகங்கரித்துக் கூறினன்.

உடனே அலையாருங் கடல்போல் முழங்கு மரக்கர் சேனை ராவணனைப் பின்பற்றியது. வெகு சீக்கிரத்தில் ராவணன் மதுபுரம்போய்ச் சேர்ந்து உட்புகுந்து ஆங்கு அரண்மனையில் அவ்வரக்கனைத் தேடினன். அவ்விடத்து மதுவென்னுமரக்கன் காணப்படவில்லை, ராவணனது அரைச் சகோதரியான கும்பீநஸியொருத்திமாத்திரமே காணப்பட்டனள். அவள் ராவணனைக் கண்டவளவில் அச்சங்கொண்டவளாகிக் கைகூப்பிய வண்ணம் அவனது பாதங்களில் வீழ்ந்து பணிந்தனள். ராவணன் அவளை

யெழுப்பியெடுத்து 'தங்காய்! நீ எதற்கு மஞ்சாதொழிக. உனக்கு யாது வேண்டுமாயினும் யான் அளிப்பேன்' என உரைத்தனன்.

அதுகேட்டுக் கும்பீநஸி 'அண்ணா! உமக்கு என்மீது விருப்ப முளதாயின் எனது மணவாளனை மாய்க்காது விடுத்து எனக்கு மாங்கலியப் பிச்சையளிப்பீராக. குலமகட்குக் கணவனே தெய்வ மன்றோ?' என்று வேண்டிக் கொண்டனள். ராவணன் அது கேட்டு அகமகிழ்ந்தவனாகி 'பெண்மணி! உன்னிடத்து எனக்குள்ள அன்பினால் உனது மணாளனைக்கொல்லவில்லை. அவன் இப்பொழுது எங்குளன்? கூறுவாயாக. அவனுடன் கூடிச்சென்று யான் தேவ லோகத்தை வெல்லப்போகின்றேன்' என்றனன்.

உடனே கும்பீநஸி களிகூர்ந்து விரைவிற்சென்று படுக்கை யறையிற் புகுந்து ஆங்கு துயில் கொண்டிருந்த தன் புருஷனைத் தட்டியெழுப்பி 'நாதா! இதோ தசக்கிரீவன் உமது நட்பை நாடி வந்திருக்கின்றனன். அவன் உம்மை மன்னித்து விட்டமையால் நீர் இனி அவனிடம் அச்சமுற வேண்டியதில்லை. நீர் அவனுடன் சென்று அவனுக்கு தேவர்களிடம் வெற்றியுண்டாகும் பொருட் டுத் துணை செய்வீராக' என உரைத்தனள்.

பிறகு மதுவென்பவன் ராவணனைத் தக்க மரியாதையுடன் எதிர்கொண்டழைத்துச் சென்று அவனை நன்கு பூஜித்தனன். ராவணன் அவனிடம் சிநேகங்கொண்டு அம்மாளிகையிலேயே ஒருநாள் தங்கி மறுநாளுதயத்தில் பிரயாணமாகி அவ்விடம் விட் டகன்று குபேரனிருக்கு மிடமான கைலாயமலையில் சேனைகளு டன் இறங்கினன்.

முப்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தோராவது ஸர்க்கம்.

## ராவணன் அரம்பையைப்புணர்ந்து சாபம்பெறுதல்.

ராவணன் கைலாயமலை சென்றவளவில் சூரியன் அஸ்தமித்து விட்டமையால் தன் பெரும்படையுடன் அன்றிரவை அம்மலையி

லேயே கழிக்க நிச்சயித்தனன். பொழுதுபட்டவளவில் அவ் வெள்ளி மலையை நிகர்த்த நிர்மலமான நிலவொளியை யெங்கும் பரவச்செய்துகொண்டு பூரணசந்திரன் உதயமாயினன். ராவணனது பெரும்படை பேருறக்கமுற்றது. அக்காலையில் அரக்கர் தலைவன் தூக்கமின்றி அம்மலையில் உட்கார்ந்துகொண்டு அங்குள்ள இயற்கை விநோதங்களைப் பார்த்துக்கொண்டிருந்தனன். அங்கு மல்லிகை, முல்லை, சண்பகம், புன்னை முதலிய நறுமணங் கமழும் மலர்களையுடைய செடிகளால் விளங்கும் அழகிய நந்தவனங்களையும் அவற்றிடையே ரமணீயமாய் விளங்கும் தாமரைத் தடாகங்களையும், மந்தாகினியென்னும் அழகிய நதியையும் ராவணன்கண்டு காமவிகாரமடைந்தனன். குயிலையொத்த குரலோசை யுடையோர்களான கின்னரர்கள் தம் காதலிகளுடனே கூடிக் கர்ணாமிர்தமாகக் கானஞ் செய்தனர். காதல்கொண்டு கண்கள் சிவந்து காரிகைகளுடன்கூடி விச்சாதரர்கள் அங்கு வந்து விநோதமாக விளையாடினர். குபேரனது இருப்பிடமான அக்கைலைமலையில் கானஞ்செய்கின்ற அப்சரப்பெண்களது மதுரமான கண்டத்தொனி மணியோசைபோன்று வெகுதூரம் பரந்து கேட்போர்மனதை மயக்கியது. மந்தமாருதம் குளிர்ந்து வீசிச் செடிகளிலுள்ள புஷ்பங்களை யுதிர்த்தது. இத்தகைய விநோதங்களைக்கண்டு ராவணன் காமனுக்கு வசமாகிப் பலவாறு பெருமூச்செறிந்து பூர்ண சந்திரனைப் பார்த்தவண்ணம் பரிதபித்து நின்றனன்.

அச்சமயம் குபேரனது மருமகளான அரம்பை யென்னும் அப்சரப்பெண்மணி சிறந்த ஆடையாபரணங்களணிந்து, நாணத்தோடு களபம் பூசி மந்தாரப்பூமாலை சூடி அவ்வழியே சென்றனள். அரை நூன்மாலை யணிந்து காண்போர் கண்களையும் மனத்தையும் கவர்ந்து காம வேட்கை விளைக்கவல்ல பருத்த தனமுடையளாகி விளங்குமவ்வணங்கைக்கண்டு தசக்கிரீவன் மன்மத பாணங்களால் பீடிக்கப்பட்டவனாகி நாணத்தினால் தலைகுனிந்து சென்ற அவளைக் கையைப்பிடித்துப் புன்னகைகொண்டு பேசலாயினன்.

'என்காதற்கிளியே! நீ இப்பொழுது எங்குச் செல்கின்றனை? யாது பயன்பெறப் போகின்றனை? அச்சமுறும் ஆரணங்கே! சுவர்ணகலசங்களை நிகர்த்து இடைவெளியின்றி நெருங்கிப் பருத்துப் பேரழகுவாய்ந்துள்ள உனது ஸ்தனங்கள் எவனது மார்பை யணையப்போகின்றன? என்னில் மேலான புருஷன் உலகில் வேறொருவன் உளனோ? தேவேந்திரனாயினும் விஷ்ணுவாயினும் அசுவினி தேவர்களாயினும் எனக்கு இணையாவரோ? நீ என்னைத் தவிர்த்து யாரிடம்செல்ல வெண்ணுகின்றனை? அஃது உனக்கு ஏற்றதன்று. உளமகிழ்ந்து நீ என்னையணைக' என உரைத்தனன்.

இங்ஙனம் ராவணன் கூறியதுகேட்டு ரம்பை உடல் நடுங்கி 'ராக்ஷசேச்வரா! யான் உமக்கு மருமகள் முறையாகிறேன். எப்படியெனில் உமது சகோதரனை குபேரனுக்கு நளகூபரர் என்றொரு மகனிருப்பது உமக்குத் தெரியுமன்றோ? யான் அந்நளகூபரருடைய மனைவியான அரம்பையென்பவள்; மகனுக்குச்சமானமான மருமகளை நீர் புணருதல் நியாயமன்று. யான் எனது கணவரான நளகூபரரிடம் செல்லுகின்றேனாதலின் என்னை அருள் புரிந்து விடுத்தனுப்புவீராக. நீர் எனக்குப் பூஜிக்கத் தகுந்த பிதாவைப்போன்றவர் என்பதை உணர்ந்து இக்கொடிய எண்ணத்தையொழித்து என்னைப் போக விடுவீராக' என வணங்கிக் கூறினள்.

தசக்கிரீவன் இதுகேட்டு 'கண்மணி! நீ எனக்கு மருமகள் முறையென மொழிந்தது மெய்யே. ஒரு புருஷனைக் கைப்பிடித்த கற்புடைய பெண்டிர்களுக்கல்லவா இம்முறை? தேவஸ்திரீகளுக்கு இந்த நியாயமில்லை யென்பது உனக்குத் தெரியாதோ? அப்சரப்பெண்களுக்குக் கணவன் இன்னானென்பதில்லை. ஒருத்தியை ஒருவனே வைத்துக்கொள்வதுமில்லையே? அத்தன்மையானவருக்கு முறையேது?' எனவுரைத்துக் காமவெறி தலைக்கேறியவனாகி, அவ்வரம்பையை பலாத்காரஞ்செய்து அந்தக் கற்பாறையிலேயே படுக்கச்செய்து அவளிடம் இன்பம் நுகரலாயினன்.

பிறகு அவனால் விடப்பட்ட அவ்வணங்கு பூக்களும் பூணாரங் களும் அலங்கோலமாய் வாயுவினா லலைப்புண்ட பூங்கொடியெனக் கூந்தலவிழ்ந்து கைகள் நடுங்க, அங்கமெல்லாம் வியர்த்து வெட் கித் தலைகுனிந்து தன்கணவனான நளகூபரரையடைந்து அவரை வணங்கித் தசக்கிரீவனால் தனக்கு நேர்ந்த அவமானத்தைக்கூறிப் புலம்பினள்.

அது கேட்டுக் குபேரனது மகன் கோபத்தினால் கண்கள் சிவந்து தண்ணீரைக் கையிலெடுத்து அரம்பையை நோக்கிப் 'பெண்மணி! அப்புலையன் தன்மீது காதல் கொள்ளாத உன்னை இவ்வண்ணம் பலாத்காரஞ் செய்தமையால், இனிமேல் இவ்வாறு அவன் காமாதுரனாகித் தன்மேல் விருப்பமுறாத வனிதைகளை வருத்துவானாகில், அவனது சிரம் பல சுக்கல்களாக வெடித்துப் போகக்கடவது' என்று சாபமளித்தனன். அப்பொழுது தேவ துந்துபிகள் முழங்கின. வானத்தினின்று பூமாரி பொழிந்தது. கேட்போர் நடுக்கமுறத் தக்கதான இக்கொடிய சாபத்தைக் கேள்வியுற்றுத் தசாநநன் தன்மீது மனங்கொள்ளாத பெண்க ளின்மீது இனி மோகங் கொள்ளலாகாதெனத் துணிவு கொண்ட னன். அவன் பிடித்து வந்த பதிவிரதைகளான பெண்கள் பல ரும் நளகூபரனது சாபத்தைக் கேள்வியுற்று மனக்கவலை நீங்கி மகிழ்ச்சி யடைந்தனர்.

முப்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்திரண்டாவது ஸர்க்கம்

## ராவணன் தேவலோகஞ் சென்று யுத்தம் தொடங்க, சுமாலி சண்டையில் மாண்டொழிதல்

பிறகு ராவணன் தன் சேனைகளுடன் தேவலோகஞ் சென்ற னன். அவனது வருகையைக் கேட்டு தேவேந்திரன் சிந்தை கலங்கினவனாகி ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்திரர்கள், விசுவ தேவர்கள், மருத்துக்கள் முதலிய தேவர்களைச் சண்டைக்கு ஆயத்தமாக்கி ராவணனை எதிர்க்கும்படி கட்டளையிட்டனன்.

ஆயினும் இந்திரன் ராவணனிடம் அஞ்சினவனாகி அகங் குலைந்து, உடனே ஸ்ரீ மகாவிஷ்ணுவினது சன்னிதானஞ்சென்று தனக்கு நேர்ந்திருக்கும் விபத்தை நீக்கியருளுமாறு அக்கடவுளை வேண்டினன். அதுகேட்டுக் கமலைகேள்வன் தேவராஜனை நோக்கி 'சுரேச்வர! இப்பொழுது ராவணன் பிரமதேவனிடம் சிறந்த வரங்கள் பெற்றிருக்கின்றானாகையால் இவனை வெல்வ தரிது. மேலுமவன் தன் புத்திரனோடு வந்திருக்கிறான். ஆதலின் நம் மனோரதம் இப்பொழுது ஈடேறுவதன்று. ஆயினும் உன்னெதிரில் ஒரு பிரதிக்ஞை செய்கிறேன் கேள். இவ்விராவணனைக் கொல்லும் பொருட்டுக் கூடிய சீக்கிரத்தில் நானே ஒரு அவதாரஞ்செய்து உங்களது துன்பங்களை நீக்குவேன். ஆதலின் தேவராஜனே! நீ உடனே படைகொண்டு சென்று அரக்கர்களுடன் அஞ்சாது அமர் புரிக' என அருளிச் செய்தனர்.

உடனே தேவேந்திரன் வேகமாகச் சென்று அரக்கர்களை எதிர்த்தனன். அச்சமயம் ராவணனது அமைச்சர்களான மாரீசன், பிரகஸ்தன், மகாபார்சுவன், மகோதரன், அகம்பனன், ஜம்புமாலி, விரூபாக்ஷன் முதலியோர் பயங்கரமான தோற்றமுள்ள மகா சூரர்களான பல இராக்கதர்களுடனே கூடி ராவணனது பாட்டனான சுமாலி யென்பவனைத் தலைவனாகக் கொண்டு தேவர்களை யெதிர்த்தனர். அரக்கர்களால் அடியுண்ட தேவர்படை சிங்கத்தினால் துரத்தப்பட்ட சிறு விலங்குகளென நாற்றிசையும் ஓடி ஒளிக்கலாகியது. ஆயினும் தேவர்களும் பயங்கரரான ராக்ஷசர்களின்மீது பற்பல படைக்கலங்களைப் பெய்து அவர்களை யமனுலக மனுப்பலாயினர்.

ராம! இவர்கள் இவ்வண்ணம் உக்கிரமாக அமர்புரிகையில் சுமாலி யென்னு மிராக்கதன் சினமூண்டு படைக்கலங்களை விடுத்துத் தேவசேனையைப் பறந்தோடச் செய்தனன். அது கண்டு எட்டாவது வசுவான சாவித்திரன் என்பவன் அதற்கு ஆற்றாதவனாகிச் சினமெழுந்து சேனைகள் புடைசூழச்சென்று அச்சுமாலியை எதிர்த்துப் போர் புரிந்தனன். முடிவில் அந்த சாவித்திரன் காலதண்டமென மிகக்கொடியதாய் அனலுக்கொப்பாக விளங்

கும் தண்டாயுதமொன்றைக் கையிலெடுத்துச் சுமாலியின் முடி மீது விடுத்தனன். வஜ்ஜிராயுதத்தை யொத்த அத்தண்டாயுதம் சுமாலியின்மீது விழுந்தவளவில் அவனுடம்பில் முடியென்றும், மாமிசமென்றும், எலும்பென்றும் யாதொன்றும் தோற்றிலது. அவனது சரீரம் முழுதும் அங்ஙனமே நீறாகிவிட்டது. இதுகண்ட அரக்கர் சேனைகள் அஞ்சி ஓடலாயின.

முப்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்து மூன்றவது ஸர்க்கம்

## தேவர்களுக்கும் இராக்கதர்களுக்கும் யுத்தம்.

சுமாலி இங்ஙனம் வசுவினால் நசித்து நீறானது கண்ட ராவணனது மகனான மேகநாதன் ஓடுகின்ற அரக்கர்களை நிலைகொள்ளுமாறு நிறுத்தி அற்புதமயமான தனது தேரிலேறித் தேவர்களை எதிர்க்கலாயினன். அவனைக்கண்ட தேவர்கள் யாவரும் திசைகள் தோறும் ஓடி ஒளிக்கலாயினர். ஒருவரேனும் அவனெதிரில் நிற்கத் துணிவு கொண்டிலர்.

இவற்றைக்கண்ட தேவேந்திரன் புறங்காட்டி யோடுகின்ற தேவகணங்களை யழைத்து அஞ்சலென்று அபயமளித்துத் தனது புத்திரனான சயந்தனுடன் அவர்களை மறுபடியும் போருக்கனுப்பினன். பிறகு சயந்தனுடன் கூடின தேவர்கள் அரக்கரைப் புடைக்கலாயினர். அப்பால் மேகநாதனுக்கும் சயந்தனுக்கும் வெகுநேரம் கோரமான யுத்தம் நடந்தது. பிறகு திடீரென்று ராவணன்மகன் மாயையைக் கைக்கொண்டு தேவசேனையைத் திக்குத்திசை தெரியாது புறங்காட்டி ஓட்டி வெருட்டியடித்தனன். அச்சமயம் சயந்தன் மிகவும் களைத்துப் போக அவனது பாட்டனான புலோமாவென்னும் சூரன் அவனை யெடுத்துக் கொண்டு கடலிற்புக் கொளித்தனன். இங்ஙனம் சயந்தன் காணாமற்போகவே மேகநாதன் தேவசேனைகளை யதட்டியோட்டி ஆனந்தகோஷஞ் செய்தனன்.

பிறகு தேவேந்திரன் மிகுந்த ரோஷத்துடன் போர்க் கோலம் பூண்டு தேரேறிப் புறப்பட்டனன். அச்சமயம் தேவர்களுக்குத் தோல்வியைக் குறிக்கும்படியான பல அபசகுனங்கள் தோன்றின. அப்பால் ராவணனுக்கும் தேவராஜனுக்கும் மிகப் பயங்கரமான யுத்தம் நடந்தது.

முப்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்து நான்காவது ஸர்க்கம்.

## மேகநாதன் மகேந்திரனைக் கட்டியது.

இங்ஙனமவர்கள் போர் புரிகையில் அவர்கள் விடுத்த வாளிகள் விண்ணிடையெங்கும் படர்ந்து பேரிருள் உண்டாகி யாவும் கட்புலனாகாது மறைந்து போயின. அந்த அந்தகார யுத்தத்தில் தேவர்களும் இராக்கதர்களும் இவர் இன்னாரெனக் கண்டறியத் திறமின்றித் தவித்தனர். இந்திரன், ராவணன், மேகநாதன் ஆகிய மூவர்மாத்திரமே அப்பேரிருளில் மோகங் கொள்ளாது முயற்சி கொண்டிருந்தனர்.

அக்காலையில் தசக்கிரீவன் வடபுறமாக வந்து செருக்களம் சேர்ந்தனன். தேவேந்திரன் தென்புறமாகச் சென்று செருச் செய்யலாயினன். இராக்கதராஜன் தேவசேனையின்மீது சரமாரி பொழிந்து கொண்டே நூறு யோசனை தூரம் சென்றனன். அது கண்டு தேவராஜன் சிந்தை கலங்காதவனாகி தசாநநனைப் பிடித்துக் கட்டிக் கொண்டு போயினன். ராவணன் இந்திரன் கையிற் சிக்கியது கண்டு 'அந்தோ! ஐயோ!! யாமழிந்தோம்!!!' எனத் தானவரு மிராக்கதரும் கூக்குரலிட்டுக் கதறினர்.

இவற்றை யெல்லாம் கண்ட மேகநாதன் மிகுந்த கோபமுடையவனாகி தேவசேனையிற் புகுந்து முன்பு மகேச்வரனளித்த மாயையை மேற்கொண்டு ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதவனாகி தேவேந்திரன் மீது பாய்ந்து சென்றனன். மகேந்திரன் மிகுந்த மகிமை பெற்றவனாயினும் அவனது கண்ணுக்கு ராவணன் மகன் புலப்பட்டவனல்லன். அவன் மாயையினது வலியால் இந்திரன்

கண்ணிலகப்படாது ஆகாயத்திலிருந்தவாறே இந்திரனை மாயையினால் மயக்கி அவன்மீது பாணங்களைப் பெய்தனன். தான்பெய்த பாண மழைக்கு ஆற்றாது இந்திரன் இளைப்புற்றது கண்டவுடனே, மேகநாதன் அம்மாயையினாலேயே அவனைப் பிடித்துக்கட்டித் தனது சேனையினருகே செலுத்திக் கொண்டு போயினன்.

அதுகண்ட தேவர்கள் மிக வருத்தமுற்ற போதிலும் அதிகமான கோபங்கொண்டவர்களாகி மேகநாதனை அப்புறஞ் செல்ல விடாது அவன்மீது அம்புமாரி பொழியலாயினர். அக்காலையில் ராவணன் விடுபட்டவனாயினும், ஆதித்தியர், வசுக்கள் முதலியவர்களோடு முனைந்து போர் புரிய வலியற்றவனாயினன். தகப்பன் உடம்பெங்கும் அடிபட்டு இளைப்புற்றுத் தவிப்பது கண்டு அவனை நோக்கி மகன் மாயையில் மறைந்தவனாகவே 'தந்தையே! போர் புரிதலை யிவ்வளவோடு நிறுத்தித் திரும்பி வருக. நாம் வெற்றி பெற்றோம். மூவுலகங்களுக்கும் நாதனான தேவேந்திரன் இதோ என் கையில் கட்டுண்டிருக்கின்றனன். தேவர்கள் செருக்கொழிந்து சீர்குலைந்தனர். இனி நமக்குப் பகைவரால் பயமில்லையாதலின், இம்மூவுலகங்களையும் நீரே ஏக சக்ராதிபதியாய் அனுபவித்து வருக. இனி நீர் என் வீணாக யுத்தஞ் செய்யவேண்டும்?' என்று கூறினன்.

இங்ஙனம் மேகநாதன் கூறக் கேட்ட ராவணன் சிந்தைநோய் நீங்கி அகமகிழ்ந்தவனாகித் தனது மகனை மிகவும் கொண்டாடி 'மகனே! நீ இந்த வாசவனை ரதத்திலேற்றிக்கொண்டு சேனைகள் புடைசூழப் புறப்பட்டுப் பட்டணஞ் செல்லுக. யான் உன் பெருமையைப் பார்த்துப் பெருமகிழ்ச்சி கொண்டு மந்திரிகளுடன் கூடி உன்னைப் பின்பற்றி வருகிறேன்' என்று கூறினன். இந்திரன் கட்டுண்டமையால் தேவர்களனைவரும் போர்புரிதலொழிந்து அப்புறஞ்சென்றனர். பிறகு மேகநாதன் தந்தை கூறியவண்ணம் மகேந்திரனைக் காவல் செய்து பிடித்துக்கொண்டு போய் இலங்கை சேர்ந்தனன்.

முப்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

# மேகநாதன் இந்திரசித்தென்று விருதுபெறுதல்

## முப்பத்தைந்தாவது ஸர்க்கம்.

## பிரமதேவன் இந்திரனை விடுவித்தல்.

இங்ஙனம் தேவராஜனை மேகநாதன் பிடித்துக்கொண்டு போனதைக் கேள்வியுற்று பிரமதேவன் இலங்காபுரஞ் சென்று ராவணனை நோக்கி 'அரக்கர் தலைவனே! போரில் உனது புத்திரனது ஆற்றலைக்கண்டு யான் பெருமகிழ்ச்சி கொண்டேன். ராவண! உனது குமாரன் இந்திரனை வெற்றிகொண்டதுபற்றி இனி இவனுக்கு இந்திரசித்து என்று உலகமெங்கும் பெயர் பிரசித்தமாகக்கடவது. இவன் பராக்கிரமத்தில் இணையில்லாதவனுகி எவராலும் வெல்வதற்கரியனுவான். நீ இயற்றியது இவ்வளவே போதுமானது. இனி நீ இந்திரனைப்பிடித்துக் கட்டிவைப்பதனுல் உனக்கு யாது பயன்? அவனை விட்டுவிடுக. அதற்குப் பிரதியாக வேண்டிய வரங்களை யான் அளிப்பேன்' என்று கூறினன்.

பிரமதேவன் இங்ஙனம் கூறுகையில் மேகநாதன் அவரை நோக்கி 'தேவ! இப்பொழுது இந்திரனைவிட்டுவிட வேண்டுமாயின் அமரனுக (என்றைக்கும் மரணமற்றவனுக) இருக்க எனக்கு வரமளிக்க வேண்டுகிறேன்' என மொழிந்தனன். அது கேட்டுப் பிரமதேவன் 'குழந்தாய்! இவ்வுலகில் படைக்கப்பட்ட பிராணிகள் என்றைக்காயினும் ஒருநாள் இறக்கவேண்டுமல்லது, என்றுமிறவாதிருத்தல் இயலாத காரியம்' என்றனர். மேகநாதன் அதுகேட்டு 'தேவ! அது முடியாதாயின் மற்றெரு வரம் வேண்டுகிறேன், அதையாயினும் அளித்தல் வேண்டும். அது யாதெனில், யான் பகைவர்களை வெல்ல வேண்டிப் போர்புரிவதற்காக ஒரு வேள்வி யியற்றுகின்றேன். அஃது இடையூறின்றி முற்றுப் பெறுமாயின், அவ்வக்கினியி னிடையே அற்புதமான ரதமொன்று பரிமாக்கள் பூட்டியவாறே மேலெழுந்து வரக்கடவது. அதன்மீதேறி யான் அமர்புரிவேனுயின் அப்பொழுது எனக்கு அமரத்துவம் (சாவில்லாமை) உண்டாகக்கடவது. அங்ஙனமின்றி அந்த யாகம் இடையூறு உண்டாகப் பெறுமாயின், அப்பொழுதே எனக்கு விநாசம் உண்டாகக்கடவது. இதுவே

எனது முக்கியமான மனோரதம்' என வேண்டிக்கொண்டனன். அதனைச் செவியுற்ற அயன் 'அங்ஙனே யாகுக' என்று அருள் புரிந்து தேவலோகம் போய்ச்சேர்ந்தனன். உடனே இந்திர சித்து அகமகிழ்ந்து இந்திரனைச் சிறை நீக்கி விட்டனன்.

ராமா! தேவேந்திரன் இந்திரசித்தினிடம் அகப்பட்டு அல்லலுற்றமையால் ஒளியிழந்து ஊக்கம் குறைந்து சிந்தை கலங்கிச் சோகிக்கலாயினன். அதுகண்ட தாமரையோன் அவ னுக்கு ஆறுதலுண்டாகுமாறு அவனை நோக்கி "தேவராஜனே! அவரவர் தாம் தாம் செய்த வினைப்பயனைத் தாமேயனுபவித்தல் வேண்டுமன்றோ! முன் நீ செய்யத்தகாத ஒரு பாபத்தொழில் புரிந்தனை. அதன் பயனும் இப்பொழுது நீ அல்லலுற்றனை. அதன் விவரம் கூறுகின்றேன் கேள்.

'முன்பு நான் அகலிகையென்னும் இணையற்ற கட்டழகு வாய்ந்த ஒரு பெண்மணியைப் படைத்தேன். அவளது பேரழ கிற்கேற்றவன் நீயேயென நீ மதித்து அப்பெண்மணி உனக்கே மனைவியாக வேண்டுமென்று என்னை வேண்டிக்கொண்டனை. உனது செருக்கைக்கண்டு யான் அவளை உனக்குக் கொடுக்காது கௌதம முனிவருக்கு வாழ்க்கைத்துணைவியாக்கினேன். அது கண்டு நீ கோபங்கொண்டவனாகி அம்முனிவரது ஆச்சிரமத்திற்குச் சென்று அப்பெண்கள்நாயகத்தைக் கண்ணுற்றுக் காமமும் கோபமும் மேலிட்டு அவளைப் பலாத்காரஞ் செய்து அணைந்தனை. அக்காலையில் கௌதமர் உன்னை அவ்விடத்தே கண்டு கடுங் கோபத்துடன் உன்னைச்சபித்தனர். அத் தபோதனருடைய தவப் பெருமையினாலேயே இப்பொழுது உனக்கு இத்தகைய அவமானம் வந்து விளைந்தது. மேலும் உனக்கு விருஷணமொழிந்து போகுமாறும் அவர் சாபமிட்டனர். அதுபற்றியே உனக்கு இப்பொழுது மேஷவிருஷணம் அமைக்கப்பட்டுள்ளது.

பிறகு அம்முனிவர் தன் மனைவியை ஒரு கற்சிலையாகச் சபித்தனர். அதுகேட்டு அகலிகை அவரை நோக்கி 'முனிவர் பெருமானே! அடியாள் காமவேட்கைகொண்டு மனமொப்பி இக் குற்றஞ் செய்தவளன்றே; இது அறியாமல் நேர்ந்த விபரீத

மன்றோ? தேவரீர்போலவே உருவமெடுத்து வந்தன்றோ தேவேந்திரன் அடியாளை மயக்கினன். ஆதலின் அருள் புரிந்து மன்னிக்க வேண்டுகிறேன்' என வேண்டினள். முனிவர் அவள் கூறியதைக் கேட்டு மனமிரங்கி 'இனி விஷ்ணுதேவன் இக்ஷ்வாகு குலத்தில் ஸ்ரீராமன் எனப்பெயர் பெற்று அவதரிக்கப் போகின்றனன். ஒரு சமயம் அவர் இவ்வனத்திற்கு எழுந்தருளும்போது அவரது பாத ஸ்பரிச மாத்திரத்தில் நீ சுய உருவமடைந்து அவரை வணங்கி விடைபெற்று என்னிடம் வந்து சேருவாயாக' என வரமளித்தனர். ஆதலின் தேவேந்திரனே! உனக்கு முன் அம்முனிவரிட்ட சாபத்தினாலேயே இவை யாவும் நேர்ந்தன. இப்பொழுது நீ வைஷ்ணவமான வேள்வியொன்று இயற்றுவாயாகில், அதனால் இப்பாவம் நீங்கிப் பரிசுத்தனாகிப் பிறகு தேவலோகஞ் சேர்வாய்'' என்று மொழிந்தனர். அதுகேட்டு மகேந்திரன் நான்முகன் கூறியபடியே விஷ்ணுவைக் குறித்து யாகம் புரிந்து புனிதனாகிப் பொன்னுலகம் போய்ச் சேர்ந்தனன்.'' என்று அகத்தியமுனிவர் கூறினர். ராமனும் லக்ஷ்மணன் முதலியோரும் அதுகேட்டு மிகவும் வியப்படைந்தனர்.

**முப்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## முப்பத்தாறவது ஸர்க்கம்

## ராவணன் கார்த்தவீரியனுடன் சண்டை செய்யும்பொருட்டு மாகிஷ்மதி பட்டணஞ் சென்றது.

பிறகு இராமபிரான் அகத்தியமுனிவரை நோக்கி 'தபோதனரே! இவ்விராவணனை வெல்லத் தகுந்தவர் அக்காலத்தில் எவரேனுமிருந்தனரோ? ராவணன் எவர்களிடமாவது தோல்வியுற்றதுண்டோ?' என்று வினவ அம்முனிவர் ராவணன் தோல்வியடைந்த வரலாறுகளை உரைக்கலாயினர்.

''ராமா! ஒரு சமயம் ராவணன் மாகிஷ்மதியென்னும் பட்டணத்தில் அரசாண்டுவந்த சிறந்த பராக்கிரமசாலியான கார்த்தவீரியனை வெல்லவிரும்பி அந்நகரஞ் சென்றனன். அப்பொழுது

அர்ச்சுனன் எனப் பெயர்பெற்ற அக்கார்த்தவீரியன் ஜலக்கிரீடை செய்தற்பொருட்டு ஸ்திரீகளுடன்கூடி நருமதா நதிக்குச் சென்றிருந்தனன். ராவணன் இதையறிந்து இமயமலைபோன்ற மகிமையுடையதான விந்திய பர்வதத்தையடைந்து அதன் இயற்கை வனப்புகளைப் பார்த்துக்கொண்டே நருமதா நதியை யடைந்தனன்.

அழகுவாய்ந்த உத்தம நதியான நருமதையாற்றைக் கண்டவுடன் ராவணன் புஷ்பகவிமானத்தினின்று இறங்கி அமைச்சர்களை நோக்கி 'இந்நதி மகா பரிசுத்தமானது. பாவங்களைப் போக்குவதில் கங்கையை நிகர்த்தது. ஆதலின் நீவிர் அனைவரும் ஆயாஸத்தைத் தீர்த்து ஆரோக்கியத்தைத் தருவதான இந் நருமதையாற்றில் குளித்துக் களை தீருக. சரத்காலத்துச் சந்திரனைனத் துலங்கும் இம்மணற் குன்றின்மீது யானும் மகேச்சுவரனுக்கு மெதுவாகப் பூஜைசெய்யத் தொடங்குகின்றேன்.' என மொழிந்தனன்.

அதுகேட்டு அவனது மந்திரிகள் அவ்வாற்றிலிறங்கி நீராடலாயினர். பின்னர் அவர்கள் ராவணனது சிவபூஜைக்காக வேண்டிய புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு வந்தனர். பிறகு அரக்கர்கோன் நீராடி புனிதமான மனதுடன் ஈச்வரனைப் பூஜை செய்யலாயினன். ராவணன் சிவலிங்கமொன்றை ஆற்றுமணலாலமைந்த மேடையின்மீது ஸ்தாபித்து திவ்வியகந்தமுள்ள புஷ்பங்களால் அர்ச்சனை செய்யலாயினன். பிறகு மகேச்வரனை சாமகானஞ்செய்து துதித்து கைகளைப் பரப்பிக்கொண்டு நர்த்தனமும் செய்யலாயினன்.

முப்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தேழாவது ஸர்க்கம்.

## கார்த்தவீரியனால் ராவணன் கட்டுண்டது.

"இராவணன் இங்ஙனம் நருமதையாற்று மத்திமணலில் மகேச்வரபூஜை செய்துகொண்டிருக்கையில், அவ்விடத்திற்குச் சமீபத்

# ராவணன் கார்த்தவீரியனை அடர்க்கச் செல்லுதல்

தில் அதே நருமதை யாற்றில், கார்த்தவீரியார்ச்சுனன் அநேகப் மங்கையருடனே மகிழ்ந்து ஜலக்கிரீடை செய்துகொண்டிருந்த னன். அவன் தன் ஆயிரங்கைகளைப் பரப்பி அவற்றால் அவ்வாற்று வெள்ளத்தை யோடவிடாது அணைகட்டியதுபோலத் தடுக்க லாயினன். அர்ச்சுனன் அவ்வாறு தடுத்தவளவில் வெள்ளம் அப்பால் பெருகியோட வழியின்றித் தேங்கி யிருகரையளவும் பரவி, மச்சம் முதலை மரஞ்செடிகளுடன் எதிர்முகமாயோடத் தலைப்பட்டது. இங்ஙனம் எதிர்த்துப் பெருகிய நீர் வெள்ளம் மேலே சிறிது தூரத்தில் சிவபூஜை செய்துகொண்டிருந்த ராவண னது பூஜைத் திரவியங்கள் பலவற்றையும் அடித்துக்கொண்டு போயிற்று. அதுகண்டு தசக்கிரீவன் பூஜையை முடிக்காமலே பாதியிலெழுந்து மிகுந்த கோபத்துடன் அந்நதியை விழித்து நோக்கினன். அவன் அந்நதி திடீரென்று அங்ஙனம் பெருக் கெடுத்துவந்த காரணத்தை யறிந்து வரும்படி மந்திரிகளான சுக சாரணர்களை யனுப்பினன்.

அவர்கள் உடனே ஆகாயத்திலெழுந்து மேற்றிசை நோக் கிச் சென்று சிறிது நேரத்தில் திரும்பி வந்தனர். அவர்கள் ராவணனை நோக்கி 'ராக்ஷசேச்வரா! மேற்றிசையில் அரை யோசனை தூரத்தில் யாரோ ஒரு மகாபுருஷன் பலகிளைகளுள்ள பெரியதோர் ஆச்சாமரமென நின்று அணைகட்டியதுபோல் இவ் வாற்று நீரைத்தடுத்துத் தனது காதலிகளைக் குளித்து விளை யாடச்செய்கின்றனன். அவனது ஆயிரம் புஜங்களாலும் தடுக்கப் பட்டதாகி இவ்வாற்று வெள்ளம் கடல் பொங்குவதெனப் பொங்கி இவ்வாறு மேலெழுந்து வருகின்றது' எனமொழிந்தனர்.

உடனே ராவணன் கோபத்தினால் கண்கள் சிவந்து தனது பரிவாரங்களுடன் அர்ச்சுனனிருக்குமிடம் வந்து அவனது அமைச் சர்களை நோக்கி 'உமது அரசனோடு அமர்புரிய விரும்புகின்றேன். சீக்கிரம் வரச்சொல்லுக' என்றனன். அதுகேட்ட அமைச்சர்கள் 'எங்களரசன் காதலிமார்களுடன் ஜலக்கிரீடை செய்துகொண் டிருக்கின்றனன், அவர் வருமளவும் எங்களுடன் யுத்தம் செய்க

பிறகு ராவணனுக்கும் கார்த்தவீரியனின் சேனைகளுக்கும் மிகவும் பயங்கரமான யுத்தம் நடந்தது. அரக்கரின் சேனைகளால் அர்ச்சுனனது சேனைகள் முறியடிக்கப்பட்டுத் தோல்வியுற்றன. அப்பால் அர்ச்சுனன் சீற்றமுண்டு கதிரவனொத்த சுவர்ணமயமான கதையைக் கையிலேந்தி ராவணனது மந்திரிகளான பிரகஸ்தன், சுகன், சாரணன் முதலியோரை அடித்து வீழ்த்தினன். அவனைக் கண்ட அரக்கர் சேனை அஞ்சியோடின.

ராவணன் இதற்கு ஆற்றாதவனாகி அர்ச்சுனனை யெதிர்த்து அற்புதமாக யுத்தஞ்செய்தனன். இங்ஙனம் வெகுநேரம் அவ்விருவரும் ஒப்பற்ற யுத்தஞ்செய்த பின்னர் அர்ச்சுனனது கதாயுதத்தினால் ராவணன் அடியுண்டு கதறிக்கொண்டு வீழ்ந்தனன். உடனே அர்ச்சுனன் விரைவாகப் பாய்ந்து பன்னகத்தைப் பக்ஷிராஜன் பற்றுவதெனத் தசாநநனைப் பற்றிக்கொண்டு தனது ஆயிரங்கைகளாலும் பிடித்துக்கட்டினன்.

இதுகண்டு மூர்ச்சை தெளிந்தெழுந்த ராவணனது அமைச்சர்களான பிரகஸ்தன் முதலியோர் அர்ச்சுனனை யெதிர்த்து வந்தனர். அர்ச்சுனன் தனது பேராற்றலால் அவர்களை அதட்டி ஓட்டி மிகுந்த சந்தோஷத்துடன் ராவணனைக்கட்டி இழுத்துக் கொண்டு தனது நகரம்போய்ச் சேர்ந்தனன்.

முப்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தெட்டாவது ஸர்க்கம்.

## புலஸ்தியர் ராவணனை விடுவித்தல்.

"இங்ஙனம் ராவணன் கார்த்தவீரியனால் கட்டுண்டிருப்பதைக் கேள்வியுற்ற புலஸ்திய முனிவர் தனது பேரனிடமுள்ள ஆசைப் பெருக்கினால் அதனைப் பொறுக்கமுடியாதவராய் உடனே மாகிஷ்மதி பட்டணத்தையடைந்து தமது வரவை வாயில் காப்போன் மூலம் அர்ச்சுனனுக் கறிவித்தனர். இது கேட்டு அர்ச்சுனன் ஓடோடியும் வந்து முனிவரை வணங்கி பக்தியுடன் அவரைப் பூஜித்தனன். புலஸ்தியர் அவனை ஆசீர்வதித்து 'நரேந்

திரனே! நீ தசக்கிரீவனையும் வெற்றிகொண்டனையாதலின் பராக்கிரமத்தில் இணையற்றவனாயினை. தசாநநன் எனது பேரன்; போரில் எவராலும் வெல்வதற்கரியவன்; கடலுங்காற்றும் அவனுக்கஞ்சி அவனது கட்டளைக்குக் கீழ்ப்பட்டிருக்கின்றன. இத்தகைய சௌரியம் வாய்ந்த எனது பேரனை நீ போரில் பிடித்துக்கட்டி அவனது புகழையழித்து உனது புகழையெங்கும் பரவச்செய்தனை. ராவணனது செருக்கை யழிக்க இவ்வளவே போதுமானது. ஆதலின் அவனை இனி விட்டுவிடுக' என வேண்டினர்.

கார்த்தவீரியன் அம்முனிவரின் வேண்டுகோளுக்கிசைந்து அங்ஙனமே தசக்கிரீவனைச் சிறையினின்றும் விடுத்து அக்கினி சாக்ஷிகமாக் அவனுடன் சிநேகஞ் செய்துகொண்டு புலஸ்திய முனிவரை வணங்கி விடைபெற்றுத் தன்னிருப்பிடஞ் சென்றனன். ராவணனும் வெட்கித் தலைகுனிந்து புலஸ்திய மாமுனிவரிடத்து விடைபெற்றுச் சென்றனன்.

ராமா! இங்ஙனம் அர்ச்சுனனால் அவமானமடைந்த ராவணன் சிறிது நாள் சென்றபின் மீண்டும் செருக்குற்று அங்கங்கேயிருக்கும் அரசர்களுக்கு இடுக்கண்கள் இயற்றிக்கொண்டு பூமி முழுவதும் திரியலாயினன்.

முப்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## முப்பத்தோன்பதாவது ஸர்க்கம்.

## வாலி வாலில் ராவணன் கட்டுண்டது.

"இங்ஙனம் ராவணன் உலகெலாம் பயமின்றி சஞ்சரிக்கும் போது ஒருநாள் வாலியினால் பரிபாலிக்கப்பட்ட கிஷ்கிந்தாபுரிக்குச் சென்று பொன்மாலை பூண்டிருந்த வாலியைப் போர்புரிய வருமாறு அழைத்தனன். அப்பொழுது அவ்விடத்திலிருந்த வாலியின் மந்திரியும் மாமனுமாகிய தாரன் என்னும் வானரன் ராவணனை நோக்கி 'அரக்கர் கோனே! இப்பொழுது வாலி இங்கில்லை. அவன் நான்கு சமுத்திரங்களுக்குஞ் சென்று ஸந்தியோபாஸனஞ் செய்துவரப் போயிருக்கின்றனன். இன்னும் ஒரு

முகூர்த்த காலத்திற்குள் திரும்பி வருவான். நீ அமிர்தபானஞ் செய்தவனேயாயினும் உன்னால் வாலியை வெல்ல முடியாது. அவனைக் கண்டவுடன் உனதுயிர் உடலைவிட்டு நீங்கும். அதற்குள்ளேயே மரணமடைய வேண்டுமென விருப்பமுளதாயின் உடனே தென் கடலுக்குச் செல்லுக. பூமியிலெழுந்த அக்கினியென ஆங்கு வாலி வீற்றிருக்கக் காண்பாய்' என்றனன்.

அதனைச் செவியுற்ற ராவணன் தாரனை வெருட்டி உடனே புஷ்பக விமானமேறித் தென்கடலை நோக்கிச் சென்றனன். அவ்விடத்தில் மேருமலைபோலவும், பால சூரியனைப்போலவும் பிரகாசித்துக்கொண்டு சந்தியோபாஸனமே சிந்தையாகக்கொண்டிருக்கின்ற வாலியை ராவணன் கண்ணுற்று விமானத்தினின்று இறங்கி வாலியை அங்ஙனமே பிடித்துக்கொள்ள வேண்டுமென்றெண்ணி, அடியோசைப்படாது மெதுவாக நடந்து சென்றனன்.

இதனைத் தற்செயலாய்க் கீழ்க்கண்ணாற்கண்ட வாலி அவனது கெடு நினைவினையுணர்ந்து சலியாது அங்ஙனமே நின்றனன். அக்காலையில், கையினாற் பற்றுதற்கெளிதான அவ்வளவு சமீபத்தில் ராவணன் வந்தவுடன் வாலி தான் பின்புறமாகத் திரும்பியிருக்கையிலும், தன்னைப் பிடிக்கக் கைநீட்டிய ராவணனை பாம்பைப் புள்ளரசு பற்றுவதெனக் கக்கத்திலிடுக்கிக்கொண்டு அங்ஙனமே ஆகாயத்தில் எழும்பினன். அப்பொழுது இராக்கதராஜன் பல்லாற்கடித்து, நகங்களாற் பீறி வருத்துகையிலும் வாலி அதனை ஒரு பொருட்டாக மதியாது கொண்டலைக் காற்று ஈர்த்துக் கொண்டு செல்வதென விரைந்து சென்றனன்.

ராவணனது அமைச்சர்கள் அவனை விடுவிக்குமாறு விரைந்து வாலியைப் பின் தொடர்ந்தனர். அப்பொழுது அவர்கள் அவனையணுக ஆற்றலொழிந்து அவனது கை கால்களது வேகத்தினால் அடியுண்டு இளைப்புற்றுப் பின் தங்கினர். வாலி இங்ஙனம் ராவணனைக் கக்கத்திலிடுக்கிய வண்ணமே அநேகமாயிரம் யோசனை தூரம் ஆகாய மார்க்கமாக வாயுவேக மனோவேகமாகச் சென்று மற்றுமுள்ள மூன்று சமுத்திரங்களிலும் சந்தியாவந்தனஞ் செய்து கிஷ்கிந்தாபுரியை யடைந்தனன்.

இறங்கினவுடன் வாலி ராவணனைக் கக்கத்தினின்று கீழே விடுத்து அவனை நோக்கிப் பலதரம் நகைத்து 'ஓகோ! தாங்கள் எங்கிருந்து இப்பொழுது வருவது?' என வினவினன். வாலியினது செய்கையைக் கண்டு வியப்புற்ற ராவணன் மிகவுமிளைப்புற்றுக் கண்களை வெருள வெருள விழித்து 'மிக்க வலிமை பெற்ற வானரேந்திரனே! நான் இலங்காதிபதியான ராவணன். உன்னுடன் அமர்புரிய விரும்பி இவ்விடம் வரலானேன். வந்தவிடத்து இவ்வாறு அலைக்கழிக்கப் பெற்றேன். உனது வலியே வலி! உனது வீரியமே வீரியம்! புலி பசுவைப் பற்றுவதென நீ என்னைப் பற்றிக்கொண்டு நான்கு சமுத்திரங்களையும் சுற்றி வந்தனையன்றோ? உனது ஆற்றல் ஒப்பற்றது. ஹே வானரராஜனே! நான் உன்னோடு அக்கினி சாக்ஷியாக அழியா நட்புச் செய்து கொள்ள ஆவல் கொள்ளுகின்றேன். பெண்டிர், பிள்ளைகள், நகரம், நாடு, போக, பாக்கியங்கள், உண்டி, உடை ஆகிய யாவும் இனி என்றென்றும் நம்மிருவர்க்கும் பேதமின்றிப் பொதுவாகவேயிருக்கக் கடவன' என்று கூறி வேண்டினன்.

வானரராஜன் 'அங்ஙனமேயாகுக' என்று கூறி உடன்பட்டனன். அப்பொழுதே தீ வளர்த்தி அவ்விருவரும் ஒருவரையொருவர் ஆலிங்கனஞ் செய்துகொண்டு நெருப்பு சாக்ஷியாக நட்புச் செய்துகொண்டு சகோதரர் போலாயினர். பிறகு ராவணன் கிஷ்கிந்தையில் ஒரு மாதகாலம் தங்கியிருந்து பின்னர் தன் அமைச்சர்களுடன் இலங்காபுரம் போய்ச்சேர்ந்தனன். ராமா! வாலியினது வலி ஒப்புவமையில்லாதது; அத்தன்மையனான வாலியும் உன்னால் கொல்லப்பட்டனன்'' என மொழிந்தனர்.

முப்பத்தோன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பதாவது ஸர்க்கம்.

## அகத்தியர் அனுமானது வரலாறு கூறுதல்.

இங்ஙனம் அகத்திய முனிவர் கூறக்கேட்ட ராமபிரான் அவரை நோக்கி 'முனிவர் பெருமானே! தேவரீர் கூறியபடி

வாலிக்கும் ராவணனுக்குமிருந்த வலி இணையற்றதேயாயினும அவர்கள் அனுமானுக்கு இணையாகாரென நினைக்கின்றேன். சௌரியம், சாமர்த்தியம், பலம், தைரியம், பாண்டித்தியம், நீதி, விக்கிரமம் ஆகிய பலவும் அனுமானிடத்தில் குடிகொண்டிருக்கின்றன. அவனாலல்லவோ நான் இப்பொழுது ராவணனை வென்று சீதையைப்பெற்று இராஜ்ஜிய பட்டாபிஷேகமும் பெற்று உற்ளூர் உறவினருடன் கூடினேன். இஃது இங்ஙனமாக அடியேனுக்குப் பெரிய சந்தேகமொன்றுளது. இத்தகைய பேராற்றலுடைய அனுமான் வாலி சுக்கிரீவர்களுக்குள் விரோதமுண்டான பொழுதே சுக்கிரீவனுக்கு நன்மை செய்யும்பொருட்டு ஏன் வாலியைக் கொல்லவில்லை? அப்பொழுது அனுமான் தனது ஆற்றலை உணர்ந்திலனோ? இல்லையாயின் தன் உயிரினுமினிய சுக்கிரீவன் அங்ஙனம் துன்புறப் பார்த்துப் பொறுத்திருப்பானோ? இதை நினைக்கில் எனக்கு வியப்புண்டாகின்றது. சிறந்த மேதாவியான அனுமானிடமுள்ள மகிமைகள் எல்லாவற்றையும் உள்ளபடி அடியேனுக்கு விளங்கக் கூறவேண்டும்' என வினவினன்.

அகத்திய முனிவர் ராமனை நோக்கி "ரகுகுல திலகனே! கூறியபடி அனுமானுக்கிணையானவர் ஒருவரும் உலகிலில்லை. இவனுக்குப் பெரியோர்கள் பூர்வத்திலிட்ட சாபமொன்றுண்டு. அதனால் இவன் சிறந்த பலவானாய், எதிரிகளை யெரிக்கு மாற்றலுடையோனாயினும், தன்வலி இத்தன்மையதென வுணரத் திறமற்றிருக்கின்றனன். இனி இவனது வரலாற்றைக் கூறுகிறேன் கேள்,

இவ்வனுமான் கேசரியென்னும் வானரனின் மனைவியான அஞ்சனாதேவிக்கு வாயுதேவனால் பிறந்த உத்தமகுமாரனாவான். இவன் பிறந்தவுடன் பசியினால் வருந்த அஞ்சனாதேவி குழந்தைக்குக் கனிகள் கொண்டு வருமாறு காட்டுக்குச் சென்றனள். அச்சமயம் அனுமான் சூரியன் ஆகாயத்தில் உதயமாவது கண்டு அவனை ஓர் கனியென நினைத்து கனி வேண்டுமெனக் காதல் கொண்டவனாகிக் கதிரவனை நோக்கி ஆகாயத்திலெழும்பிச் சென்றனன். இதுகண்டு தேவர், தானவர், யக்ஷர் முதலியோர் 'ஆ! இதென்ன ஆச்சரியம்! இந்த வாயுகுமாரன் வானத்திலெழுந்து

செல்கின்றனனே! இத்தகைய வேகம் வாயுவுக்காயினும் கருடனுக் காயினும் மனத்திற்காயினு முளதோ? சிசுவாயிருக்கையிலேயே இவனுக்கு இத்தகைய வேகமுளதாயின், யௌவனமும் பலமும் வந்தவளவில் இவனது வேகம் எத்தன்மையதாகுமோ' என்று கூறி அதிசயிக்கலாயினர்.

அனுமான் இங்ஙனம் ஆகாயத்தில் செல்வது கண்டு தந்தையான வாயுதேவன், சூரியன் ஒருகால் எரிப்பனோவென்ற அச்சத்தினால் பனிமலையெனக்குளிர்ந்தவனாகி அவனைக் காத்துக்கொண்டு கூடவே சென்றனன். அங்ஙனம் அனுமான் ஆகாயத்தில் அநேக யோசனை தூரஞ்சென்று சூரியனைச் சமீபித்தனன். அச்சமயம் ராகுவும் இரவியைப் பிடிக்குமாறு அவ்விடம் வந்தனன். சூரியனது ரதத்தின்மீது ராகுவைக்கண்ட அனுமான் ரவியை விட்டு ராகுவின்மீது பாய்ந்தனன். ராகு அதனைக்கண்டு அஞ்சி தேவேந்திரனிடம் ஓடி இச்செய்தியை முறையிட்டனன்.

அதுகேட்ட இந்திரன் ஐராவதத்தின் மீதேறி மிக்க பரபரப்புடன் அனுமானை நோக்கி வந்தனன். அனுமான் ஐராவதத்தைக் கண்ணுற்று அதுவுமொரு பழமென நினைத்து அதைப்பற்ற வெண்ணி வேகமாக வந்தனன். இந்திரன் அதற்காற்றாது வாயு மைந்தனை வஜ்ஜிராயுதத்தினால் புடைத்தனன்.

உடனே அக்கவிக்குழந்தை அங்குள்ள ஒரு மலையின்மீது விழுந்து மூர்ச்சித்துக் கிடந்தது. இதுகண்டு வாயுதேவன் இந்திரன்மீது கோபித்து பிராணிகளனைவர்க்கும் பெருந்துன்பம் விளைக்கவெண்ணித் தானெங்கும் சஞ்சரிப்பதை யொழித்துத் தனது குழந்தையுடன் ஒரு குகையிற் போய்ப் புகுந்தனன். இங்ஙனம் வாயு வீசாதொழியவே, சர்வ பூதங்களும் மூச்சுவிடவும் கைகாலசைக்கவும் திறமற்றுத் தவித்தன. வாயுவினது கோபத்தினால் மூவுலகங்களும் நரகத்தில் வீழ்வனபோலாயின.

பிறகு தேவர், கந்தருவர், அசுரர், மானிடர் முதலிய சகலமானவர்களும் தமது துன்பத்தைத் தீர்க்க வழிதெரியாமல் பிரமதேவனிடஞ் சென்று முறையிட்டனர். நான்முகன் அவர்களை நோக்கி 'ஓ தேவர்களே! தேவேந்திரன் இப்பொழுது ராகுவி

னது வார்த்தையைக் கேட்டு வாயுகுமாரனையடித்துத் தள்ளினன். அதனால் வாயு கோபங்கொண்டிருக்கின்றனன். ஆதலின் நாம் இப்பொழுது வாயுவை வேண்டிக் களிப்புறச் செய்தாலன்றி உலகத்திற்கு உண்டாகிய இத்துன்பம் தீர வழியில்லை' எனக்கூறி சகலமான பிரஜைகளோடும் தேவர், கந்தருவர் முதலியவர்களோடும்கூடி, மகேந்திரனால் அடியுண்ட மகனை மடியில் வைத்துக்கொண்டு மாருதன் எவ்விடத்திலிருக்கின்றனனோ அவ்விடத்திற் கேகினர்.

நாற்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தோராவது ஸர்க்கம்

## தேவர்கள் அனுமானுக்கு வரமளித்தது.

தானிருக்குமிடந்தேடிப் பிரமதேவன் வந்ததுகண்டு அக்கடவுளை வாயு மூன்று தரம் சாட்டாங்கமாக வணக்கஞ்செய்து தோத்திரம் செய்தனன். பிதாமகன் தன்னை வணங்கி நின்ற வாயுதேவனை வாரியெடுத்து அவனது புத்திரனையும் பரிசித்தனன். அங்ஙனம் பிரமதேவன் பிரீதியுடன் தொட்டவளவில் வாயுமைந்தன் நீர் பாய்ச்சப்பெற்ற பயிரெனப் பிழைத்தெழுந்தனன். அது கண்டு வாயுதேவன் அகமகிழ்ந்து உடனே சகல சராசரங்களிலும் உலாவலாயினன். வாயுபந்தத்தினால் பெருந்துன்பமுற்றிருந்த பல்லாயிரம் பிரஜைகளும் துன்பம் நீங்கிப் பெரு மகிழ்ச்சி கொண்டனர்.

அப்பொழுது நான்முகக் கடவுள் சமஸ்த தேவர்களையும் நோக்கி 'ஓ சுரர்களே! இச்சிசுவினால் உங்களுக்கு ஆகவேண்டிய காரியங்கள் அநேகமுள்ளன. ஆதலின் நாமனைவரும் இப்பொழுது இவ்வாயுவின் பிரீதியின் நிமித்தம் இக்குமாரனுக்கு வேண்டிய வரங்கள் அளித்தல் வேண்டும்' என மொழிந்தனர்.

அதுகேட்டு இந்திரன் அகமகிழ்ந்து தான் கழுத்திலணிந்திருந்த பொற்றாமரை மாலையைக் கழற்றிக் கவிக்குழந்தையின் கழுத்திலணிவித்து 'யான் விடுத்த வஜ்ஜிராயுதத்தினாலடிபட்டு இச் சிசுவினது அனு (கவுள்) சூம்பிப் போயினபடியால், இனி இவ்

வானரக் குழந்தைக்கு அனுமான் எனவே பெயர் பிரசித்தமாகக் கடவது. இனி இவனுக்கு ஒருகாலும் எனது வஜ்ஜிராயுதத்தினல் வதையுண்டாகாதிருக்குமாறு யான் மேலான வரமளிக்கின்றேன்' என்றனன்.

பிறகு சூரியபகவான் 'யான் எனது கிரணங்களில் நூற்றிலொருகலை இவ்விளைஞனுக்கு அளிப்பேன். இவனுக்குப் பருவம் வந்தவுடன் இவன் எல்லாக் கலைகளிலும் வல்லவனாகுமாறு இவனுக்குக் கல்வி கற்பித்து, இவனுக்கு சாஸ்திர ஞானத்திலிணையானவன் மற்றெவனுமில்லையென்னுமாறு செய்வேன்' என வரமீந்தனன். 'வருணபாசத்தினலும், தண்ணீரினலும் இவனுக்கு எந்நாளும் மரணமுண்டாகாதிருக்கக்கடவது' என வருணன் வரமளித்தனன். யமதண்டத்தினல் இறுதியுண்டாகாமையும் அரோக திடகாத்திரமும் அனுமானுக்குண்டாகுமாறு யமதரும ராஜன் வரங்கொடுத்தனன். அமரில் இளைப்புறாமையும் தனது கதையினல் செருக்களத்தில் சாவின்மையுமளித்து, தன்னலும் மற்றுமுள்ள தனது படைக்கலங்களாலும் பிராணபயமில்லாதவாறு தனதிபதி மகிழ்ந்து வரமீந்தனன். அவ்வாறே சங்கரனும், தனது சூலம், பாசுபதாஸ்திரம் முதலியவற்றல் மரணமில்லாதவாறு மேலான வரங்களை அனுமானுக்களித்தனன்.

'பிரம சாபங்களாலும், பிரமாஸ்திரம் முதலியவற்றாலும் இவனுக்கு அழிவு உண்டாவதில்லை. தீர்க்காயுள் பெற்று இவன் பெருமையுடன் வாழக்கடவன்' என பிரமன் வரமீந்தனன். சிற்பிகளிற் சிறந்த விசுவகர்மா 'என்னல் நிருமிக்கப்பட்ட திவ்வியமான சஸ்திரங்கள் எவையோ, அவை யனைத்தாலும் இவ்விளைஞன் அமரில் ஊறுபடாதவனாகிச் சிரஞ்சீவியாக வாழக்கடவன்' என்று வரமளித்தனன். அப்பால் பிரமதேவன் 'ஹே மாருத! உனது குமாரன் பகைவர்களைச் சங்கரிப்பவனும், மித்திரர்களை மகிழ்விப்பவனுமாகி எவராலும் வெல்வதற்கு அரியனாகுவான். இவன் வேண்டியவாறு உருவமெடுக்க வல்லவனும், வேண்டியவாறு வேண்டிய விடஞ்செல்லவல்லவனும், எவ்விடத்தும் தடையின்றித் தாவவும் செல்லவும் திறமையுடையோனுமாகி

மிக்க புகழ்பெற்று விளங்குவான். ராவணன் அழியவும் ஸ்ரீராமச்சந்திரன் மனமகிழவும் காரணமான அரியபெரிய காரியங்களை அமர்க்களத்திலிவன் இயற்றி வெற்றிவீரனாக விளங்குவான்' என மொழிந்து வாயுவினிடம் விடைபெற்றுத் தேவர் குழாம் புடைசூழத் தனதிருப்பிடஞ் சென்றனன்.

பிறகு வாயுதேவன் புத்திரனையெடுத்துக்கொண்டு இல்லஞ்சேர்ந்து அஞ்சனாதேவியிடமளித்து அவனுக்குக் கிடைத்த வரங்களையுங்கூறி சந்தோஷத்துடன் அவளிடம் விடைபெற்றுச் சென்றனன்.

இவ்வாறிருக்கையில் அனுமான் ஆற்றலதிகரித்தவனாகி எவரையும் மதியாமல் மகரிஷிகளின் ஆச்சிரமங்களிற் புகுந்து அவர்களது ஸ்ருக்கு, பாண்டம் முதலிய வேள்விக் கருவிகளையும், அக்கினி ஹோத்திரம், மரவுரி, மான்தோல் முதலியவற்றையும் உடைத்தும் கெடுத்தும் அழித்தும் பலவிதமான தீமைகள் செய்யலாயினன். அவன் பிரமதண்டத்தினாலூறுபடாதவனென அவனுக்குப் பிரமதேவனளித்த வரத்தினை யுணர்ந்து அவர்கள் அவன் செய்யும் தீமைகளைத் தம்மால் கூடுமானவளவு பொறுத்து, வாயுதேவனிடமும், கேசரியினிடமும் அதனைத் தெரிவித்தனர்.

ராமா! ஆஞ்சனேயன் அவர்கள் புத்திசொல்லித் தடுத்தும் கேளாமல், அளவுகடந்து கொடுமையிழைக்கப் புகுந்தமைகண்டு, பிருகு, அங்கிரசு என்னும் முனிவர்களது மரபிற்றோன்றிய மகரிஷிகள் முனிந்து சபிக்கலாயினர். ஆயினுமவர்கள் அதிகமாகச் சீற்றங்கொள்ளாது 'ஹே வானர! நீ எந்த வலியே துணையாகக் கொண்டு எம்மை இவ்வாறு வருத்துகின்றனையோ, அவ்வலியை நீ எங்கள் சாபத்தினால் மயக்கமடைந்தவனாகி உணரவல்லமையற்றவனாகுக. யாவரேனும் உனது ஆற்றலை யெடுத்துப் புகழ்ந்து போற்றி உனக்கு அறிவுறுத்துவாராயின், அப்பொழுதே அவ்வலி உனக்கு விருத்தியாகக்கடவது' என்று சாபமிட்டனர். பிறகு மாருதி தனது பல பராக்கிரமங்களழிந்தவனாகி மறுபடியும் அம்முனிவர் ஆச்சிரமங்களிலேயே அடக்கமுடையவனாய் சஞ்சரித்துக்கொண்டிருந்தனன்.

இஃது இங்ஙனமாக அனுமானுக்கும் சுக்கிரீவனுக்கும் மாறுதலின்றி இளமை முதற்கொண்டே இணைபிரியாத தோழமை அமைந்திருந்தது. பிறகு வாலி சுக்கிரீவர்களுக்கு வைரமுண்டான நாள்தொடங்கி சுக்கிரீவன் வாலியினால் பலவாறு துன்புறுத்தப் பட்டு வருந்துகையிலும், அவனது நண்பனான மாருதி, முனிவரது சாபத்தின் மகிமையால் தனது வலியுணராதவனாகி யானைகளால் தடையுண்ட சிங்கமென மயங்கி வாளாவிருந்தனன். ராமா! நீ கூறியபடி பராக்கிரமம், உற்சாகம், புத்தி, பிரதாபம், நீதி, வலிமை, சாதுரியம், தைரியம் ஆகிய இவற்றில் அனுமானை அதிசயித்தவன் இவ்வுலகில் எவனுமில்லை.

இவ்வனுமான் சூரிய தேவனிடம் ஒன்பது வியாகரணங்களையும் நன்கு வாசித்துணர்ந்தவன். சகல சாஸ்திரங்களையும் கற்று தேவ குருவிற்கு இணையானவன். ஹே ரகுவீர! இவ்வனுமானைப்போலவே சுக்கிரீவன், மைந்தன், துவிவிதன், நீலன், தாரன், அங்கதன், நலன், ரம்பன் முதலான மேன்மை பெற்ற வானர வீரர்களும் உன்பொருட்டு தேவதைகளால் படைக்கப் பட்டவர்கள். சிறந்த பலசாலிகளான இவர்கள் அனைவரும் ராவண வதம் நிமித்தமாகப் பூமியில் வந்து அவதரித்த தேவர்களேயன்றி வேறல்லர்.'' என்று அகத்திய முனிவர் அனுமானது வரலாற்றைக்கூறி முடித்து பிறகு ராமனிடம் விடைபெற்றுக் கொண்டு சகல முனிவர்களும் சூழத் தம்இருப்பிடம் சென்றனர். அச்சமயம் சூரியன் அஸ்தமித்தபடியால் ராமன் சபையை முடித்து சந்தியாவந்தனஞ் செய்ய அரண்மனைக்கேகினன்.

நாற்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்திரண்டாவது ஸர்க்கம்.

## மறுநாள் ஸ்ரீ ராமபிரான் ராஜசபைக்கெழுந்தருளுதல்.

இங்ஙனம் இராமபிரான் மகுடாபிஷேக மகோத்சவம் கண்டருளிய பின்னர் முதல் தினத்தை முனிவர்களுடன் பேசிப் பொழுதுபோக்கி ராத்திரி அந்தப்புரத்தில் திருக்கண்வளர்ந்தனன். அவ்விரவு கழிந்து விடியற்காலமானவளவில் மஹா

ராஜனைத் திருப்பள்ளி யெழுமாறு சுப்பிரபாதஞ் சொல்லிப் போற்றிப் புகழும் வந்திகள் ராஜமாளிகை வாயிலில் வந்து கூடி 'ஹே! வீர! கௌசல்யா தேவிக்கு மகிழ்ச்சி விளைக்கும் உத்தமனே! சீதை மணாளனே! துயிலெழுந்து வரவேண்டும்?' என்னுமிவை போன்ற பலவித துதிகளைச்செய்து ராமனைத் திருப்பள்ளி யெழுமாறு பாடினர்.

பிறகு சக்கரவர்த்தித் திருமகன் திருக்கண்மலர்ந்து திருப் பள்ளியினின்று மெழுந்து காலைக்கடன்களை முடித்துப் பரிசுத்த மான தேவபூஜா கிருகத்தினுள் புகுந்து, ஆங்கு விதிமுறைப்படி தேவதைகளையும், பிதிருக்களையும் பிராமணர்களையும் பூஜித்தனன்.

அப்பால் இராமபிரான் பரிஜனங்கள் புடைசூழ இராஜ சபைக்கெழுந்தருளினன். அவ்விடத்துப் புரோகிதரான வசிஷ்ட பகவானும் மகாத்மாக்களான மந்திரிகளும் ஜொலிக்கின்ற அக் கினியென எதிர்கொண்டு வந்தனர். பற்பல தேசாதிபதிகளான அரசர்களும் ஸ்ரீராமபிரானைக் காணவந்து தேவேந்திரனைச் சூழ்ந்த தேவர்களென ஸ்ரீராகவனுக்கருகில் அவரவர்க்கேற்ற ஆசனங்களில் வீற்றிருந்தனர்.

பரத சத்ருக்கனர்களும் இலக்குமணனும் மிக்க மகிழ்ச்சி கொண்டு, வேள்வியை மூன்று வேதங்களுமென ஸ்ரீராமபிரானை உபாஸித்து நின்றனர். கிங்கரர்கள் பலர் வணங்கிக் கை கூப்பிக்கொண்டு வேண்டிய உபசாரங்கள் செய்யலாயினர். மகா பராக்கிரம சாலிகளும் காமரூபிகளுமான சுக்கிரீவன் முதலான வானர வீரர்கள் வந்து வீற்றிருந்தனர். தனது மந்திரிமார் நால்வருஞ்சூழ விபீஷணன் அந்த ராஜசபைக்கு வந்து ராமனை வணங்கினன். உத்தமகுலத்திலுதித்து வேதமோதிய வேதியர் களும், மகாசமர்த்தர்களான பெரியோர்கள் பலரும் ராஜசபைக்கு வந்து ராமனை முடிதாழ்த்தி வணங்கி அருகேயுட்கார்ந்தனர். இங்ஙனம் இராமபிரான் தேவசபையில் தேவர்களும் முனிவர் களும் புடைசூழ வீற்றிருக்கும் தேவேந்திரனைவிட பலமடங்கதிக மாக விளங்கினன்.

நாற்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நாற்பத்துமூன்றாவது ஸர்க்கம்.

## அகத்தியர் வாலி சுக்கிரீவர்களது வரலாறு கூறியது.

அப்பால் இராமபிரான் அகத்திய முனிவரை நோக்கி 'முனி புங்கவரே! இனி வாலி சுக்கிரீவர்களது வரலாற்றைக் கேட்க விரும்புகிறேனாதலின் அதை விளங்கக்கூற வேண்டுகிறேன்' என்றனன். அதுகேட்டுக் குடமுனிவர் கூறத்தொடங்கினர். "ராமா! முன்பொருகால் தாமரையோன் யோகாப்பியாசஞ்செய்து கொண்டிருக்கையில் அவரது கண்களில் நீர்த்துளி ததும்பியது. அதை அவர் கையாலெடுத்துக் கீழே யெறிந்தனர். அவ்வளவில் அந் நீர்த்துளி ஒரு வானரனாக மாறியது. பிதாமகன் அவ்வானரனைக்கண்டு இனிய மொழிகள் மொழிந்து 'ஏ வானர! மிகப்பெரிய தான இம்மேரு பருவதத்தில் எப்பொழுதும் வாசஞ்செய்க. மிக்க ரமணீயமான இம்மலையிலுள்ள காய் கனிகளை யுணவாகக் கொண்டு நீ என் அருகிலேயே வாசஞ்செய்க. பிறகு உனக்குப் பெரிய பாக்கிய மொன்றுண்டாகும்' என்று கூறினர். அங்ஙனமே அவ்வானரன் மேரு மலையில் வெகு காலம் வாசஞ் செய்து கொண்டிருந்தனன்.

இவ்வண்ணம் சிலகாலம் நிகழ்ந்து வருகையில் அவ்வானரன் ஒரு நாள் நாவறண்டு நீர் வேண்டி அம்மேரு வெற்பிலுள்ள ஓரழகிய தாமரைத் தடாகத்திற்குச் சென்றனன். அதனுள் தனது நிழல் தோற்றுவதைக் கண்ட அக்கவிகுஞ்சரன் அது தனக்கு விரோதியான மற்றொரு வானரனென்று நினைத்து அந்நிழலின்மீது பாய்ந்தனன். இங்ஙனம் அம்மடுவில் குதித்த குரங்கு அதில் மூழ்கி மறுபடி மெல்ல நீந்திக் கரையேறிய வளவில், ஓர் அற்புதமான அணங்காக மாறியது. காண்போர் மனதை மயக்கவல்ல அழகான ரூபமும், சௌந்தரியமும், காமனது கணைபோன்ற புருவமும், கறுத்த குழலும், புன்னகைவாய்ந்த வதனமும், விம்மி வீங்கிய

* இந்த ஸர்க்கம் முதல் 5 ஸர்க்கங்கள் அதிக பாடமென்பர். ஆதலின் விடை பெற்றுச்சென்ற அகத்திய முனிவர் மறுபடி கதை கூறுவதாகச் சொல்லப்படுகிறது.

கொங்கைகளுமமைந்த புதுமையானதோர் பொற்கொடியென அப்பெண்மணி பொய்கைக் கரையிலே நின்றனள்.

தனது ஒப்பற்ற வடிவழகினால் எல்லாத் திசைகளேயும் ஒளி பெறச் செய்துகொண்டு அப்பொய்கைக் கரையில் அப்பெண்மணி நின்றுகொண்டிருக்கையில் தேவேந்திரன் அவ்வழியே வந்தனன். அதே தருணத்தில் ஆதித்தன் எங்குஞ் சுற்றித் திரிந்து, இந்தச் சுந்தரி நிற்குமிடத்தருகே வரலாயினன். இந்திரனும் ஆதித்தனு மாகிய இரண்டு தேவர்களும் அவளை ஒரே சமயத்தில் கண்ணுற் றனர். அவ்வழகியைக் கண்ட வளவில் அவ்விருவர்களும் காமன் வசப்பட்டவர்களாகி மெய்மறந்து மனங்கலங்கித் தைரியமழிந்து நின்றனர். உடனே இந்திரனது வீரியம் ஸ்கலிதமாக, அதனை யவன் அவளது தலையில் விழுமாறு செய்தனன். அஃது அவ் வாறு முடிமீது விழாது வாலிலே விழுந்தது. தேவர்களது வீரியம் ஒரு பொழுதும் வீணாவதில்லையாதலின், உடனே அஃது அதிக பலசாலியான ஒரு வானரமாக மாறியது. வாலினின்றும் உற்பவித்த காரணத்தினால் அவ்வானரனுக்கு வாலியெனவே பெயர் பிரசித்தமாயிற்று.

அருக்கனும் அவ்வாறே அநங்கனுக்கு வசமாகித் தனது வீரியத்தை அப்பெண்மணியின் கழுத்தில் வீழ்த்தினன். கிரீவை யில் (கழுத்தில்) வீழ்ந்த அவ்வீரியம் சுக்கிரீவன் எனப் பெயர் பெற்ற வானரமாகிவிட்டது. அப்பால் தேவேந்திரன் ஒரு காஞ்சன (பொன்) மாலையைத் தன் குமாரனான வாலிக்குப் பரிசாக அளித் துத் தேவலோகஞ் சென்றனன். சூரியன் தனது புதல்வன் வாயுகுமாரனிடம் சேருவானென உணர்ந்து தன் காரியத்திலேயே கண்ணுற்றவனாகி விண்ணிடையே சென்றனன்.

ராமா! அன்றிரவு கழிந்து மறுநாள் காலையில் கதிரவனுதித்த வளவில் அவ்வனிதை மறுபடி வானரமேயாயினள். ருக்ஷராஜ என்னுமவ்வானரன் தன் அருகே நின்ற காமரூபிகளான இரண்டு குமாரர்களேயும் கண்ணுற்றுக் களிப்படைந்தவனாகி, அவ்விடத்தி லுள்ள அமுதத்திற்கொப்பான மதுவை யருந்தச் செய்து அப் புதல்வர்களுடன் பிரமதேவனது சன்னிதானம் போய்ச் சேர்ந்து

னன். நான்முகன் தன் குமாரனைக் கண்டு களிப்புற்று அருகி லிருந்த தேவதூதனொருவனை நோக்கி 'நீ இவ்வானரர்களை யழைத்துக்கொண்டு கிஷ்கிந்தாபுரிக்குச் செல்லுக. அந்நகரம் எல்லாச் சிறப்பும் பொருந்தி மிக மேன்மை பெற்று விளங்குகின் றது. அவ்விடத்து வானரவீரர்கள் திரள் திரளாக வசிக்கின்ற னர். முன்பு எனது கட்டளையின்படி விசுவகர்மாவினால் நவரத்தி னங்கள் நிரம்பப்பெற்ற மிகப்பெரிதான கடைவீதிகளுள்ளதாகி அந்நகரம் அநேகவிதமான அரண்களுடனே நிருமிக்கப்பட்டுள் ளது. காமரூபிகளான வானரர்கள் விசேஷமாக வசிக்கும் அவ் விடத்திற்கு நமது குமாரனை ருக்ஷரஜனென்னும் இவ்வானரனை இவனது புத்திரர்களுடனே அழைத்துக்கொண்டுபோய் அங்குள்ள சகல வானரர்களையும் வரவழைத்துச் சபை சேர்த்து நமது சாஸனமின்னதென்பதை யறிவித்து அவர்களுடைய மத்தியில் இவனைச் சிங்காசன மேற்றிக் குரக்கரசனாக அபிஷேகஞ் செய்க' என்று கூறிக் கட்டளையிட்டனர்.

தேவதூதன் அங்ஙனமே அவ்வானரனைக் கிஷ்கிந்தைக் கழைத்துச் சென்று அவனை அவ்விடத்திற்கு அரசனாக்கினன். இங்ஙனம் ருக்ஷரஜசு மகுடாபிஷேகஞ் செய்து கொண்டு இப்புவியி லுள்ள வானரர்களனைவரையும் தனது ஆணைக்கு உட்படுத்தி ஆட்சி செய்து வரலாயினன். இந்த ருக்ஷரஜசு என்னும் வானர னொருவனே வாலி, சுக்கிரீவன் இருவருக்கும் தந்தையும் தாயு மாகின்றனன்" என்றனர்.

**நாற்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## நாற்பத்து நான்காவது ஸர்க்கம்.

## சீதையை ராவணன் எடுத்ததற்குக் காரணம் கூறுதல்.

குடமுனிவர் மீண்டும் ராமனை நோக்கி "ராமா! பூருவம் கிருதயுகத்தில் பிரமதேவனது புத்திரரான சனத்குமாரர் சூரிய னெனச் சோதிமயமாக விளங்கிக்கொண்டு வீற்றிருப்பது கண்டு, ராவணன் அதிவினயத்துடன் அம்முனிவரை வணங்கி வினவலாயி

னன், 'ஹே! தபோதனரே! இவ்வுலகில் உத்தம புருஷன் யாவன்? தேவர்கள் அனைவரிலும் அதிகமான ஆற்றலுடையவன் யாவன்? எவனைத் துணையாகக் கொண்டு தேவர்கள் யுத்த பூமியில் பகைவர்களை வெல்லுகின்றனர்? ஜனங்கள் எவனைக்குறித்து யாகஞ் செய்கின்றனர்? யோகிகள் எவனை என்றும் உள்ளத்திற்கொண்டு தியானிக்கின்றனர்?' என்று வினவினன்.

அதுகேட்டு அம்முனிவர் அவனை நோக்கி 'குழந்தாய்! நீ கேட்ட கேள்விகள் மிகவுமழகியது. ஹரி, நாராயணன், விஷ்ணு என்று பெயர் பெற்ற மகாநுபாவனே அனைத்துலகங்களையும் படைத்துக் கெடுத்துக்காத்துழல்பவன். அவனையே அனைவரும் ஆராதிக்கின்றனர். புராணம், வேதம், பாஞ்சராத்திரம் முதலான சாஸ்திரங்கள் அவனையே கூறுகின்றன. யோகிகள் எப்பொழுதும் அவனையே தியானிக்கின்றனர். தைத்தியர், தானவர், இராக்கதர் முதலான தேவசத்துருக்கள் அனைவரையும் அவனே செருக்களத்தில் ஜயங்கொள்பவன்.' எனப்புகன்றனர்.

இவ்வாறு மகரிஷி சொன்னது கேட்டு ராவணன் மீண்டுமவரை நோக்கி 'சுவாமி! செருக்களத்தில் மாண்டொழியும் தைத்தியர், தானவர், அரக்கர் முதலியோர் என்ன கதியடைகின்றனர்? அவ்வண்ணம் விஷ்ணுவினுல் வதையுண்டவர் யாவர்?' என வினவினன்.

முனிவர் ராவணனை நோக்கி 'ராக்ஷஸேச்வர! தேவதைகள் கையில் வதையுண்டவர்கள் எப்பொழுதும் தேவலோகஞ் செல்லுகின்றனர். மீண்டுமவர்கள் அவ்வுலகத்தினின்றும் நழுவிப் பூலோகத்தில் வந்து வீழ்கின்றனர். அவர்களனைவரும் பூர்வ ஜன்மத்தில் பண்ணிய புண்ணிய பாவங்களுக் கேற்றபடி பிறந்து மிறந்தும் இன்பமும் துன்பமும் அநுபவிக்கின்றனர். ஆனுல் சக்கரபாணியான விஷ்ணு தேவனுல் வதையுண்ட வீரர்களோ அங்ஙனல்லாமல் அக்கடவுளது வீடான அந்தமில் பேரின்பமான மோக்ஷ சாம்ராஜ்ஜியத்தை யடைகின்றனர். ஆதலின், அந்தக் கேசவனது கோபமும் அவர்கட்குக் கருணையே யாகின்றது.' எனவுரைத்தருளினர்.

இது கேட்ட நிசாசர ராஜன் மிக்க மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்தவனாகி 'யான் செருக்களத்தில் அந்தச் சார்ங்கபாணி யின் எதிரே போய் நிற்கும் வகை யாது?' என விசாரங் கொள்ள லாயினன்.

நாற்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தைந்தாவது ஸர்க்கம்

## நாராயணனுடைய பிரபாவங்களை ராவணன் அறிதல்.

பிறகு ராவணன் சனத்குமாரரை நோக்கி 'சுவாமி! யான் அப்பரம புருஷனுடைய கையால் முடிய விரும்புகிறேனாதலின் என் கருத்து நிறைவேறும் காலம் எப்பொழுது வரும்? அதற்கு அறிகுறி யாது? அடியேனுக்கு விளங்க அருளிச்செய்க' என வேண்டினன்.

முனிவர் 'ராக்ஷசராஜனே! யானுரைத்த ஆதிதேவன் கறந்த பாலுள் நெய்யேபோல் எங்கும் அந்தர்யாமியாய் இருப்பவன். பிரணவமும் சத்தியமும் அவனே. அப்புருஷனே ஐந்து பூதமாய் இரண்டு சுடராய் அருவாகி, நாகமேறி நடுக்கடலுள் உறங்குவான் போல் யோகநித்திரை புரிபவன். சகல உலகங்களையும் படைத்துக் கெடுத்துக் காத்துழலும் காரியத்தைத் தனக்கு ஒரு லீலை யாகவுடையவன்.

ஹே தசாநந! நீலோத்பலத்தின் இதழ்போன்ற நீல நிற மான திருமேனியும், தாமரை மலரினது இதழ்போன்ற சிவந்த பீதக வாடையும் உடையவனாகி மாரிகாலத்து மின்னலோடுகூடிய கருமுகிலென விளங்குகின்றனன். தாமரைக் கண்ணனை அவனது திருமார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் மறுவிளங்க, அவனது கரு முகில்போன்ற திருமேனியில், நீருண்ட மேகத்திடையே தோன் றும் மின்னற்கொடியென வெற்றிவடிவமான திருமகள் என்றும் இணைபிரியாது வீற்றிருக்கின்றனள்.

அம்மகா புருஷனைத் தேவர்களேனும் அசுரர்களேனும் பன்ன கர்களேனும் காணும் திறமுடையவரல்லர். எவர்களிடத்திலவன்

அருள் புரிகின்றனனே, அவர்களே அவனைக் காணவல்லவர்கள். ஸ்வபிரயத்தனத்தினால் எவரும் அவனைக் காண முடியாது. ராவண! இத்தகைய பரமபுருஷனை உன்னால் எங்ஙனம் காண முடியும்? ஆயினும் நீ அவனைக்காண விரும்புவாயாயின் அதற்கு யானொன்று சொல்லுகிறேன். கிருதயுகம் கழிந்த பின்னர் திரேதா யுகத்தின் துவக்கத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணு தேவன் (பரமபுருஷன்) இக்ஷ்வாகு வமிசத்தில் தசரதராமனாக அவதரிப்பான். அக்காலையில் ஸ்ரீ மகாலக்ஷ்மியே சீதாதேவி என்ற பெயருடன் ஜனக மஹாராஜனென்பானுக்குப் புத்திரியாகப் பூமியினின்று உற்பத்தியாகி அவ்விராமனுக்கு தருமபத்தினியாவாள். அவன் பிதிர்வாக்கிய பரிபாலனஞ் செய்யும்பொருட்டுத் தன் மனைவியுடனும் தம்பியுடனும் தண்டகாவனத்திற்குச் சென்று அவ்வனமெங்கும் சஞ்சரிக்கப்போகின்றனன். அச்சமயம் நீ அவனைக் காண்பாய்' என்று கூறினர்.

ராமா! இங்ஙனம் சனத்குமாரர் மொழிந்ததுகேட்டு ராவணன் அம்முனிவரிடம் விடைபெற்று அவருரைத்த வார்த்தைகளை ஓயாது சிந்தனை செய்துகொண்டு மனமகிழ்ந்து, உன்னுடன் பகைகொண்டு போர்புரிய விருப்பமுற்று சீதையை அபகரித்துச் சென்றனன்'' என்று கூறினர்.

நாற்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நாற்பத்தாறவது ஸர்க்கம்.

## சுவேத த்வீபப் பெண்களால் ராவணன் பரிபவமடைதலும் அவனது முற்பிறப்பு வரலாறும்.

''மீண்டும் ராவணன் வெற்றிகொள்ள விருப்பமுடையவனாகி சூரர்களான ராக்ஷசர்கள் பலர் சூழப்பெற்று இப்பூமண்டலமெங்கும் சஞ்சரிக்கலாயினன். அச்சமயம் நாரத முனிவர் அவனெதிரில் வரக்கண்டு ராவணன் அவரை நோக்கி 'தபோதனரே! தேவரீர் மூவுலகங்களிலும் சஞ்சரிக்கிறீரல்லவா? என்னுடன் அமர் புரியக்கூடிய பலசாலி எவனேனும் உளனோ? எவனேனும் இருப்

பின் அவனது இருப்பிடத்தை அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டும்' என வினவினன்.

நாரதர் அரக்கர்தலைவனை நோக்கி 'பாற்கடலின் பாங்கரிலுள்ள சுவேதமென்கிற தீவினில் சிறந்த பலிஷ்டர்களான மானிடர்கள் வசிக்கின்றனர். அவர்களே உன்னோடு போர்புரிய வல்லவர்கள்' என்று மொழிந்தனர். மீண்டும் ராக்ஷச ராஜன் அம்முனிவரை நோக்கி 'அத்தீவில் மானிடர்கள் அத்தகைய பலசாலிகளாய் இருப்பதற்கென்ன காரணம்? அம்மகாநுபாவர்களுக்கு சுவேதத்வீபம் உறைவிடமாய் அமைந்தது எதனால்? இவையாவும் உள்ளபடி அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டும்' என வேண்டினன்.

நாரத பகவான் அவனை நோக்கி 'ராவணா! அம் மனிதர்கள் வேறு சிந்தனையின்றி, எப்பொழுதும் நாராயணனையே மனத்திற்கொண்டு அவனே தமக்குத் தஞ்சமென்றுணர்ந்து, என்றும் அவனையே தியானஞ் செய்துகொண்டிருக்கின்றனர். அவர்களது ஜன்மாந்தர புண்ணிய விசேஷத்தினால் அத்தீவினில் வசிக்கும்படியான பாக்கியம் அவர்களுக்குக் கிடைத்தது. சங்கொடு சக்கரமேந்தும் தடக்கையனான நாராயணன் தனது சார்ங்கமென்னும் வில்லை வளைத்துச் சமர்புரிய, அவன் கையில் அடியுண்டவர் யாவரோ, அவர்களுக்கே எல்லாவற்றிற்கும் மேலான அவ்வுலகில் வாசங்கிடைக்கலாகும். அவ்வுலகம் தானம், தவம், வேள்வி முதலியவை புரிந்தவர்களுக்கும், துறவறம் பூண்டவர்களுக்கும் எளிதிற் கிடைப்பதரிதாகும்' என்றனர்.

இதுகேட்டு ராவணன் வியப்புற்றவனாகி நெடுநேரம் ஆலோசனை செய்து 'யான் அந்த நாராயணனுடன் எதிர்த்துப் போர் புரிவேன்' என்று தீர்மானித்து சுவேத த்வீபத்தை நோக்கிச் செல்லலாயினன். இங்ஙனம் தேவர்களும் செல்வதற்கரிய விடமான சுவேத த்வீபத்தை அவனணுகியதும் அவனேறிச் சென்ற புஷ்பகவிமானம் அத்தீவினது ஒளியினால் எரிக்கப்பட்டதாகி, அங்குண்டாகிய காற்றினது வேகத்தினால் மோதப்பட்டு நிலைகொள்ளாத் திறமையற்றதாகியது. கண்ணெடுத்துக் காணவும் அரிய

தாக விளங்கும் அத்தீவினிடஞ் சேர்ந்த வளவில் ராவணனது அமைச்சர்கள் அஞ்சி நடுங்கினவர்களாகி ராவணனை நோக்கி 'ராஜனே! யாங்கள் இவ்விடத்தையணுகிய வளவில் அறிவும் ஆலோசனையு மிழந்து மூடர்களாயினோம். நிலைத்து நிற்கவும் திறமையற்றுத் தவிக்கிறோம். ஆதலின் நாங்கள் எதிர்த்து அமர் புரிவ தெங்ஙனம்?' என்று கூறி யாவரும் ஒன்றுகூடி ஓடிப் போகலாயினர். அதற்குள் நாரதமுனிவர் அத்தீவை யடைந்து அவ்விடத்து நடக்கும் அதிசயத்தைக் காணவிரும்பி அங்குச்சென் றனர்.

ஆனால் ராவணன் கொஞ்சமேனு மஞ்சாமல் விமானத்தை விட்டிழிந்து பயங்கரமான ரூபந்தரித்து அந்த சுவேத த்வீபத்தில், பிரவேசிக்கலாயினன். அவன் அத்தீவில் புகுந்த மாத்திரத்தில் பல கட்டழகு வாய்ந்த பெண்மணிகள் அவனைக் கண்டனர். அவ்வணங்குகளி லொருத்தி அவனை நோக்கி நகைத்து அவனது கையைப் பிடித்துக்கொண்டு 'நீ யாவன்? இங்கு வந்த காரண மென்?' என வினவினள். அதுகேட்டு ராவணன் சினமூண்டு அவளை நோக்கி 'நான் விச்சிரவஸ முனிவரது புதல்வன், ராவணன் எனப் பெயர் பூண்டவன், நான் யுத்தஞ் செய்வதன் பொருட்டு இங்கு வந்தேன்' என்று கூறினன்.

ராவணன் இங்ஙனம் கூறக்கேட்ட அங்கிருந்த கட்டழகிகள் யாவரும் குலுங்க நகைத்தனர். அவர்களிலொருத்தி கதம்விஞ்சி அவ்வரக்கனை ஒரு குழந்தையெனக் கையிலெடுத்து விநோதமாய் அவனைச் சுழற்றிக் கீழே வீழ்த்தி மற்றொரு தோழியை அருகி லழைத்து 'ஏடி! நீ இப்பூச்சியைப் பார்த்தனையா? பத்து முகமும் இருபது கரமுமுடையதாய் மைபோலக் கருநிறமா யிருக்கின்றது" என்று அவனை மீண்டு மெடுத்து மற்றொருத்தி கையிலெறிந்தனள். அவள் வேறொருத்தி கையிலெறிந்தனள். இங்ஙனமவர்கள் கைக்குக் கை வீசி யெறிவதைத் தாங்க முடியாது தசக்கிரீவன் தவித்து ஆயாசமுற்றனன். அக்காலையில் அவன் மிக்க கோபங்கொண்டு ஒரு காரிகையைக் கையிற் பற்களால் பற்றிக் கடித்தனன். அவ்வேதனை பொறுக்க முடியாது

அந்த மாது அவனைக் கீழெறிய, மற்றொரு மங்கை அவனைக் கையிலெடுத்துக் கொண்டு வானத்தி லெழுந்தனள். தசானனன் மிக்க சினமுண்டு அவளை நகங்களால் நன்றாகப் பீறினன். அந்த நோயினால் அவளும் அவனைக்கீழே விட்டுவிட, அவன் அங்கிருந்த அகாதமான கடலினிடையே வஜ்ஜிராயுதத்தினால் அடியுண்ட மலை யென வீழ்ந்து, அக்கடலின் மீதே மிதந்து கொண்டு கிடந்தனன். ராமா! இங்ஙனம் சுவேதத்வீப வாசிகளான வனிதையர்களால் ராவணன் வருத்தப்பட்டவனாகி மயங்கித் தவித்தனன். இதை நாரத முனிவர் கண்டு மிக்க மகிழ்ச்சி கொண்டு நகைத்து நர்த்தனஞ் செய்தனர்.

அப்பால் ராவணன் அக்கடலின் தென்கரை சேர்ந்து 'ஆ! இதென்ன ஆச்சரியம்! நான் உலகமெல்லாம் சென்று ஜயம்பெற்றேன். இயற்கையிலேயே ஆற்றலில்லாதவர்களாய் அபலைகளெனப் பெயர்பெற்ற பெண்களுக்கு இவ்விதமான செய்கை இயல்பிற்கு விரோதமானதன்றோ? இவ்வுலகத்து மனிதர்கள் நாரதர் கூறியபடி ஸர்வ வல்லமையுள்ளவர்கள்போலும்! அவர்களே இங்ஙனம் அரிவையர்களாக வேடம் பூண்டு என்னைப் பரிபவப்படுத்தினர் என நினைக்கிறேன். அத்தகைய பலவான்களுடன் சிநேகஞ் செய்து கொள்வதே சிறப்புடையது' என்று சிந்தித்துத் தேறினன்.

பின்னர் அவர்களது வரலாற்றை நன்கு உணருமாறு அவன் அங்குள்ள வனமெங்கும் சுற்றித் திரிந்தனன். அங்குள்ள ஓர் குகையில் சனத்குமார முனிவரைக் கண்டு அவரை நோக்கி 'தபோதனரே! இந்தவுலகம் எந்த மகாநுபாவனால் கற்பிக்கப் பட்டது? இவ்வுலகத்தில் வசிப்பவர் யார்? தேவரீர் எவரை உள்ளத்தில் தியானஞ் செய்துகொண்டிருக்கிறீர்?' என வினவினன்.

இவ்வாறு ராவணன் வினவியதுகேட்டு அம்முனிவர் 'குழந்தாய்! கூறுகிறேன் கேள். சகல உலகங்களையும் படைத்துக் கெடுத்துக் காத்தருளும் ஆதியந்தமில்லாதவனான நாராயணனால் தனக்கு வாசஸ்தானமாக இவ்விடம் கற்பிக்கப்பட்டது. இத் தீவிலுள்ளவர்கள் அந்த நாராயணனையே தஞ்சமெனக்கொண்டு

அவனை ஆராதிக்கின்றனர். ஏ ராவண! முனிவர்கள் தொழு தேத்தும் அந்த நாராயணனையே நீ நாடக்கடவை. பிரமதேவ னும் அக்கடவுளை அறிந்தவனல்லன். ஸர்வலோகநாதனும் ஜகத் காரணபூதனுமான அப்பெருமானை எவன் எப்பொழுதும் பூஜிக் கின்றனனோ அவன் நிச்சயமாக அந்தமில் பேரின்பமான மோக்ஷ சாம்ராஜ்ஜியத்தை யடைவான்' என மொழிந்தனர்.

அப்பால் ராவணன் அம்முனிவரிடத்து விடைபெற்றுக் கொண்டு இலங்காபுரி போய்ச் சேர்ந்தனன். நாரதரும் அத் தீவை விட்டு மேருமலையிலுள்ள பிரமதேவனது மகாசபையை யடைந்து தான்கண்ட அதிசயத்தை நான்முகனிடம் கூறினர். அப்பொழுது திசைமுகன் நாரதரை நோக்கி "குழந்தாய்! அரக்கர் தலைவனான ராவணன் முன் ஜன்மத்தில் இரண்யகசிபுவாகப் பிறந் திருந்தனன். அவன் பலவிதமான தவம் புரிந்து வேண்டிய வரங்கள் பெற்றுச் சிறந்த பலசாலியாய் எவராலும் வெல்லுதற் கரியனாயிருந்தனன். அக்காலையில் அவன் நரசிங்கமூர்த்தியினால் கிழிக்கப்பட்டு அப்பெருமானது மடியில் படுத்தவாறே அவரது உகிர்களால் உடல் பிளந்து பரிதபித்துக்கொண்டிருக்கையில் பூர்வ ஞானம் உண்டாகப்பெற்று அக்கடவுளை நோக்கி 'ஹே தேவ! அடியேனைக் காத்தருள்க. அடியேனுக்கு இனி நேரிடப் போவ தான ராக்ஷசப் பிறவி தேவரீரது திருக்கரத்தினாலொழிந்து அங்ஙனமே அதன்பிறகு உண்டாகும் மானிடப் பிறவியும் ஒழிந்த பின்னர், அடியேன் தேவரீருடைய ஸாமியத்தை யடைந்து முக்தி யுலகம் பெறுமாறு அருள்புரிய வேண்டுகிறேன். ஹே! லோக நாத! அங்ஙனமே நோக்கியருள்க' என வேண்டிக்கொண்டனன். நரசிங்கமூர்த்தி அதுகேட்டு 'அங்ஙனமேயாகுக' என அருள் புரிந்து அற்புதமான விமானத்திலேறிச் சென்றனர். நாரதா! அவ்வண்ணமே அவ்விரணியகசிபு இப்பொழுது ராக்ஷசனாகப் பிறந்திருக்கின்றனன். இவன் எப்பொழுதும் அந்த நாரா யணனையே சிந்தையிற் கொண்டவனாகி நாள் கழிக்கின்றனன்.

இனி இவன் மானிடனாகப் பிறந்து உலகங்களைத் துன்புறுத் தத் தலைப்படுவான். அந்த மூன்றாவது பிறவியிலும் விஷ்ணு

தேவனது கையினால் வதையுண்டு பெறுதற்கரிய விஷ்ணு சம்பந்தமான சோதியிற் புகுந்து சுவேதத்வீபத்தை யடைவான். நாரத! சகல பாபங்களையும் போக்குவதான இந்தப் புண்ணியமாகிய வைஷ்ணவ சரித்திரத்தை எவன் நித்தியம் ஆதியோடந்தமாகப் படிக்கின்றானோ, அவன் மேலான கதியடைவான்'' என்று கூறினர்.

ராமா! பிறகு நாரதமுனிவர் மேரு வெற்பை வலஞ்செய்து கொண்டு எனது ஆச்சிரமத்திற்கு எழுந்தருளினர். அப்பொழுது நான் அவரை வணங்கி வரவேற்றுப் பூஜித்தனன். அக்காலையில் அம்முனிவர் இக்கதையை எனக்குக் கூறினர். அதையப்படியே இப்பொழுது நான் உனக்குச் சொன்னேன். ஹே ராமா! இக்காரணம் பற்றியே துராத்துமாவான ராவணன் உன்னால் மரணமடையவிரும்பி மைதிலி (சீதை)யை யபகரித்துக்கொண்டு சென்றனன். ஆதலின் நீ பஞ்சாயுதங்கள் தரித்த அந்த பரஞ்சோதியான நாராயணனே யன்றி வேறல்ல. இதை நீயே உனது சக்தியைக்கொண்டு உணர்வாயாக. நீ சகல உலகங்களையும் படைத்துக் காத்து அழிப்பவனன்றோ? நான்கு வேதங்களின் பொருளாய் நிற்பவன் நீயேயன்றோ? நாராயணனான நீ ராவணனைச் சங்கரிப்பதற்காக ராமாவதாரம் செய்தருளினை. நீயே முன்பு மாவலியை வஞ்சித்து மூவடியால் உலகளந்தனை; நீ வந்தவரித்த காரியம் முடிந்தது. ஸ்ரீ மகாலக்ஷ்மியே சீதையாக அவதாரம் செய்தனள். அந்தத் தேவியை ராவணன் மிகப் பிரயாசப்பட்டு இலங்காபுரிக்குக் கொண்டுபோய்த் தாயைப்போல வைத்து வெகு கருத்தாகப் பாதுகாத்தனன்.

ஹே ராமச்சந்திரா! முக்காலமுணர்ந்த முனிவரான நாரதர் எனக்குரைத்தவை யாவும் உனக்கெடுத்துக் கூறினேன். இவை யாவும் சனத்குமாரர் சொற்படி கேட்டு அதன்படி ராவணன் செய்த காரியமேயன்றி மற்றொன்றுமல்ல. இதன் பெருமையை யுணர்ந்து எவன் இந்த சரித்திரத்தை சிராத்த காலத்தில் பிராமணர்களுடைய சன்னிதானத்தில் அவர்கள் கேட்குமாறு செய்

கின்றனனே அவனுடைய பிதிருக்களுக்கு அனந்தமான அக்ஷயம் அளிக்கப்பட்டதாகும்'' எனக் கூறி முடித்தனர்.

திவ்வியமான இக்கதையைக்கேட்டுச்செந்தாமரைக் கண்ணனுன ஸ்ரீராமபிரான் தனது சகோதரர்களுடனே அளவில்லாத மகிழ்ச்சி கொண்டனன். அந்தச் சபையில் கூடியிருந்த சுக்கிரீவன் முதலிய வானரர்களும், விபீஷணன் முதலிய ராக்ஷசர்களும், பற்பல அரசர்களும் மந்திரிகளும் ஏனையோரும் கேட்டுக் கண்கள் மலர்ந்து களிப்புற்றவர்களாகிக் காகுத்தனையே கண்ணுற்று நின்றனர். அப்பால் அகத்திய முனிவர் ராமனிடம் விடைபெற்றுத் தமதிருப்பிடஞ் சென்றனர்.

நாற்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தேழாவது ஸர்க்கம்.

## ராமன் ஜனகமகாராஜன், கேகயராஜன், காசிராஜன் முதலானோர்க்கு விடைகொடுத் தனுப்பியது.

ஸ்ரீராமபிரான் அப்பால் தனது மாமனுரான ஜனகமகாராஜனையழைத்து அவரை வணங்கிக் கைகூப்பியவண்ணம் ''தேவரீருடைய உக்கிரமான தபோபலத்தினுலேயே ராவணனை நான் வதை செய்தேன். இத்துணை நாள் அடியேனது சபையில் எழுந்தருளி அடியேனைக் கௌரவித்ததுபற்றி மிகுந்த சந்தோஷம். தேவரீர் ராஜ்ஜியத்தைவிட்டு வெகு நாள் வெளியிலேயிருப்பது உசிதமாகுமோ? உடனே வேண்டிய செல்வங்களை யெடுத்துக் கொண்டு தமது நகரத்திற்குச் செல்லுக. தேவரீருக்குத் துணையாகப் பரதனைக் கூடவே அனுப்புகிறேன்'' என்று விடை கொடுத்தனன். மிதிலையரசன் அதுகேட்டு அகமகிழ்ந்து 'ராமா! வெற்றி வீரனே! நீ எனக்களித்த அருமையான பொருள்கள் எல்லாவற்றையும் என் புத்திரிக்கு யான் நன்கொடையாகக் கொடுக்கிறேனுதலின் அவற்றை இவ்விடத்திலேயே வைத்துக் கொள்க' எனவுரைத்து விடைபெற்றுக்கொண்டு தனது நகரஞ் சென்றனன்.

பிறகு ராமன் தனது மாமனும் கேகய தேசாதிபதியுமான யுதாஜித்தை நோக்கிக் கைகூப்பிக்கொண்டு 'மாதுலரே! எங்களுக்கு தேவரீரைவிட்டுப் பிரிய மனமில்லையாயினும், பாட்டனார் அவ்விடத்தில் தேவரீரைப் பிரிந்ததனால் மிகவும் தவித்துத் துன்புறுவாராதலின், தேவரீர் இப்பொழுதே தேவரீரது நகரத்திற்குச் செல்வது நலமெனத் தோற்றுகிறது. லக்ஷ்மணன் தேவரீருக்கு வழித்துணையாக வருவான். வேண்டிய ரத்தினங்களையும் தனங்களையும் எடுத்துக்கொண்டு தேவரீர் செல்லுக' என்று விடைகொடுத்தனன். அதுகேட்டு யுதாஜித்து தாசரதியை நோக்கி 'ராமா! அங்ஙனமே நான் சென்று வருகிறேன். நீ கொடுத்த ரத்தினங்களும் தனங்களும் என்னாலுனக்குப் பிரீதியாகக் கொடுக்கப்பட்டதாதலின் அவை உன்னிடத்திலேயே அக்ஷயமாயிருக்கக் கடவது' என்றுகூறி விடைபெற்று லக்ஷ்மணனையழைத்துக்கொண்டு கேகயதேசம் சென்றனன்.

அப்பால் இராமபிரான் தனது உயிர் நண்பனான காசிவேந்தனை நோக்கி 'நண்பனே! உனக்கு என்னிடமுள்ள பிரீதி விசுவாசங்களை நீ நன்கு வெளியிட்டனை, நீ ராவணனை வதை செய்யும் விஷயத்தில் பரதனுடன் கூடி எனக்கு உதவிபுரிய உத்தியோகஞ் செய்தனையன்றோ? உன்னைவிட உயிர்த்தோழன் எனக்கு வேறிலன். இப்பொழுது நீ நகரத்தைவிட்டு வந்து வெகு நாட்களானமையால் நீ உனது பட்டணத்திற்குப் புறப்பட்டுச் செல்லுக' என்றுகூறி விடைகொடுத்தனன். அதுகேட்டுக் காசிவேந்தன் களிகூர்ந்து விரைந்து வாராணசிக்குச் சென்றனன்.

பிறகு ரகுநாதன் மற்றுமுள்ள முன்னூறு மன்னவர்களை நோக்கி மனமகிழ்ந்து 'அரசர்களே! உங்களுக்கு எம்மிடத்திலுள்ள பிரீதி அளவுகடந்தது. அஃது உங்கள் பராக்கிரமத்தினால் நன்கு பரிபாலிக்கப்படுகின்றது. உங்களது சத்தியமும், தருமமும் என்றும் ஒருதன்மையானவை. உங்களது பிரபாவத்தினாலும் மகாத்துமாக்களுடைய தபோபலத்தினாலும் துர்ப்புத்தியான ராவணன் வதையுண்டனன். இப்பொழுது நீங்களனைவரும் அவரவரது நகரங்களைவிட்டு வந்து வெகு நாட்களாயின

வாதலின் இனி அவரவாது நகரங்களுக்குச் செல்லுக' என்று விடைகொடுத்தனன்.

அவ்வரசர்களனைவரும் மிகுந்த சந்தோஷத்துடன் 'ராமா! வெற்றி வீரனே! எமது பாக்கிய விசேஷத்தினால் நீ ராவணனை வென்றனை. செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களும், அழகிய நாசியும், சிவந்த அதரமும், வெண்மையான முத்துப்போன்ற தந்தங்களும் அமைந்து சரத்கால சந்திரனெனச் சோதிபெற்று விளங்குகின்ற உனது முகத்தைத் தரிசித்து யாங்கள் தன்னியர்களாயினோம். இதோ, நாங்கள் விடைபெற்றுச் செல்லுகின்றனம். நீ எப்பொழுதும் எங்கள் உள்ளத்திலேயே குடிகொண்டிருக்கின்றனை. சக்கரவர்த்தியே! உன்னுடைய பிரீதி எங்களிடத்தில் என்றும் மாறாதிருத்தல் வேண்டும்' என மொழிந்து யாவரும் விடைபெற்றுச் சென்றனர்.

**நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## நாற்பத்தெட்டாவது ஸர்க்கம்.

## ராமன் வானர வீரர்களுக்குப் பரிசளித்து அவர்களுடன் ஒரு வருஷம் வாழ்ந்திருத்தல்.

பிறகு ராமனிடம் விடைபெற்றுச் சென்ற நானாதேசத்தரசர்களும் தம்தம் நகரம் போய்ச்சேர்ந்து ஸ்ரீராமனுக்கு பிரீதி செய்வதன் பொருட்டு நானாவிதமான சிறந்த பரிகள், தேர்கள், யானைகள், உயர்ந்த சந்தனங்கள், திவ்வியமான ஆபரணங்கள், மணிகள், முத்துக்கள், பவழங்கள், அழகிகளான தாசிகள், தோலினால் நிருமித்த உத்தமமான சயனங்கள் ஆகியபலவும் நம்முடனே வந்த பரதன் முதலியோர்களிடம் உபகாரமாகக் கொடுத்தனுப்பினர். பரதன், லக்ஷ்மணன், சத்துருக்கனன் முதலியோர் அவைகளனைத்தையும் அன்புடனே பெற்று அயோத்திக்குத் திரும்பினர். ராமன் அப்பரிசுகளை அதிக ஆதரத்துடன் ஏற்றுக்கொண்டு அவற்றையெல்லாம், தமக்குப் பேருதவி புரிந்த சுக்கிரீவ மகாராஜனுக்கும் விபீஷணாழ்வா,

னுக்கும், மற்றும் பல வானர ராக்ஷசர்களுக்கும் பரிசாக அளித்தனன்.

பிறகு ராமன் அனுமானையும் அங்கதனையுமழைத்து மடிமீது உட்காரவைத்துக்கொண்டு சுக்கிரீவனை நோக்கி 'நண்ப! இவ்வங்கதன் உனக்கு நற்புதல்வனும், இவ்வனுமான் உனக்கு நல்லமைச்சனுமாக அமைந்தது உனது பாக்கியமேயாகும். இவர்கள் உனது நன்மையை எவ்வாறு கருதுகின்றனரோ, அவ்வாறே எனது நன்மையையும் கோருகின்றனர். ஆதலின் வானர ராஜனே! உன் பொருட்டாக இவர்களுக்கு எவ்வளவு உபசாரங்கள் செய்யினும் ஏற்கும்' என உரைத்துத் தான் திருமேனியிலணிந்துகொண்டிருந்த விலையுயர்ந்த திருவாபரணங்களெல்லாவற்றையும் கழற்றி அங்கதனுக்கும் அனுமானுக்கும் இட்டு அழகு பார்த்தனன்.

அப்பால் ராமன் நீலன், நலன், கேஸரி, குமுதன், சுஷேணன், கஜன், கவாக்ஷன், ததிமுகன் முதலிய வானர வீரர்களைக் கொண்டாடி அவரவர்களுக்கு ஏற்றவாறு அற்புதமான ஆடையாபரணங்களும் அளித்து ஆலிங்கனமும் செய்துகொண்டனன்.

அவ்வானரர்கள் மிகவும் மதுரமான மதுமாமிசங்களையும், நானாவிதமான காய்கிழங்குகளையும், நல்ல மணமுள்ள விசித்திரமான மலர்களையும் யதேஷ்டமாக அருந்தி அகமகிழ்ந்தவர்களாகி அயோத்தி நகரிலேயே வசித்துக்கொண்டிருந்தனர். இவ்விதமாக அவர்கள் இராமபிரானுடன் ஒருவருஷகாலம் இனிது வசித்துவர மறுபடியும் பங்குனி மாதம் வந்துவிட்டது.

நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நாற்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

## ஸ்ரீராமபிரான் வானர ராக்ஷசர்களுக்கு விடைகொடுத்தனுப்பியது.

இவ்வண்ணம் அயோத்தியரசன் அவர்களை விட்டுப்பிரிய மனமின்றி எப்பொழுதும் அந்த நற்றோழருடனே கூடிக்களிக்கலாயினன். இங்ஙனமிருக்கையில் ஒருநாள் ரகுவீரன் சுக்கிரீவனை நோக்கி 'வானர ராஜனே! நீ உனது கிஷ்கிந்தாபுரியை விட்டு

வந்து வெகுநாளாகின்றமையால் சீக்கிரமே அவ்விடம் சென்று உனது, அமைச்சர்களுடன்கூடி உனது ராஜ்ஜியத்தை இனிமையாக ஆட்சிசெய்து வரக்கடவை' என மொழிந்து அவனைப் பலதரம் மார்புறத்தழுவி, பின்னர் மற்றும் பல வானர வீரர்களையும் தனித்தனியே ஆலிங்கனஞ் செய்துகொண்டனன்.

பிறகு விபீஷணாழ்வானை நோக்கி 'ராக்ஷச ராஜனே! நீ தருமங்களனைத்தையும் நன்குணர்ந்தவ னென்பது எனது துணிபு. ஆதலின் நீ உனது பராக்கிரமத்தைக் கொண்டு அறநெறி தவருது இலங்காபுரியைப் பரிபாலித்து வருக. உனது நகரத்திலுள்ளவர்களுக்கும் மற்றுமுள்ள ராக்ஷசர்களுக்கும் உனது சகோதரனை குபேரனுக்கும் நீ உண்மையான விருப்பத்திற்கிடமான்வனன்றே? ஆதலின் அவர்கள் திறத்தில் நீ விரோதமான செய்கையெதனையும் செய்யாதொழிக. எக்காலத்திலும் நீ அதருமமான காரியத்தில் புத்தியைச் செலுத்தாதிருக்கவேண்டும். சுக்கிரீவனையும் என்னையும் நீ என்றைக்கும் மறவாது உள்ளத்தில் வைத்து அதிகமான அன்பு பாராட்டி வரவேண்டும். இனி நான் உனக்கு விடை கொடுக்கிறேன். நீ உடனே புறப்பட்டு இலங்காபுரம் செல்லுக' எனமொழிந்து அனுமதியளித்தனன்.

அப்பால் ராமன் அனுமான் வேண்டிக்கொண்டபடி அவனை நோக்கி 'வானர சிரேஷ்டனே! இவ்வுலகத்தில் எனது சரித்திரம் எவ்வளவு காலம் நீடித்திருக்குமோ, அவ்வளவு காலம் உனது புகழும் நீடித்திருக்கக்கடவது. இவ்வுலகம் எவ்வளவு காலம் நீடித்திருக்குமோ, அவ்வளவு காலம் எனது கதையும் இங்கழியாதிருக்கும். ஆஞ்சனேயா! அவ்வளவு காலம் உனது சரீரத்தில் ஜீவனும் நிலைத்திருக்கும். நீ செய்த ஒவ்வொரு உபகாரத்திற்கும் கைம்மாருக யான் என் உயிரை அளித்தாலும் போதுமோ? கைம்மாறு செய்வதற்கு ஆபத்துக்காலமே ஏற்ற தருணமாகும்; உனக்கு ஆபத்தும் நேரவேண்டா; நான் கைம்மாறு செய்யவும் வேண்டா; என மொழிந்து தாம் கழுத்திலணிந்து கொண்டிருந்த சந்திரனுக்குச் சமமான சோதிபெற்ற அற்புதமான ஹாரமொன்றைக் கழற்றி அனுமானது கழுத்தில் இட்டனன்.

அப்பால் வானரர்களும் ராக்ஷசர்களும் ஸ்ரீராமபிரானை முடி தாழ்த்தி யடியணிந்து விடை கொள்ளலாயினர். சுக்கிரீவன் ராமனை மார்புறத்தழுவி அவனை விட்டுப் பிரியவேண்டுமென்கிற துயரத்தினால் மெய்மறந்தவனாகி பிறகு ராமனால் சமாதானஞ் செய்யப்பெற்று விடை கொண்டனன். சகலமான வானரர்களும் இராக்கதர்களும் உடலைவிட்டுச் செல்லும் உயிரென அடங்காத துக்கத்துடன் கண்ணீர் தாரை தாரையாகப்பெருக ஸ்ரீராமனை வணங்கி விடைபெற்றுத் தம் தம் இருப்பிடம் போய்ச் சேரலாயினர்.*

நாற்பத்தோன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பதாவது ஸர்க்கம்

## ராமன் புஷ்பக விமானத்திற்கு விடை கொடுத்தது.

இங்ஙனம் ஸ்ரீராமச்சந்திரன் வானரா ராக்ஷசர்களுக்கு விடை கொடுத்தனுப்பியபின் ஒரு நாள் தம்பிமார்களுடன் விநோதமாகப் பொழுதுபோக்கிக் கொண்டிருக்கையில் ஆகாயத்தில் அற்புதமான வாக்கு ஒன்று கேட்டது. அது என்னவெனில் "ஹே ராமா! நான் குபேரனிடமிருந்து விடைகொண்டு வந்தவன்; புஷ்பகமெனப் பெயர்பெற்றவன்; முன்பு நான் தேவரீரிடமிருந்து விடைபெற்றுக் குபேரனுக்கடிமை செய்யும்பொருட்டு அவனது மாளிகைக்குச் சென்றேன். அக்காலையில் அத்தனதிபதி என்னை நோக்கி 'அயோத்தி மன்னனான ராமனால் எவராலும் வெல்வதற்கரியனாயிருந்த ராவணன் மாய்க்கப்பட்டு அவனிடமிருந்து நீ ராமனால் பெற்றுக்கொள்ளப்பட்டவன். பரமாத்துமாவான ஸ்ரீ ராமபிரான் அவ்விராவணனை வென்று உன்னைச் சுவாதீனஞ் செய்துகொண்டனனாதலின் நீ அவனுடைய பொருளேயாகின்

---

* வானர ராக்ஷஸர்களுக்கு ராமன் விடை கொடுத்தனுப்பியது இவ்விடத்தில் தான். முன்பு யுத்த காண்டத்திறுதியில் விடை கொடுத்தனுப்பியதாகக் கூறியது காண்டத்தின் கதையைச் சுருக்கமாக முடிப்பதற்காக வென்றறிக.

றனே. ஆகையால் இனி நீ அந்த ராமனுக்கே வாகனமாகக் கடவை. இதுவே எனக்கு விருப்பமாக விருக்கிறது. நீ சந்தோஷமாய் அவனிடஞ்சென்று அவ்வுத்தமனுக்கு வேண்டிய விடம் செல்லச் சிறந்த சாதனமாகுக' எனக் கட்டளையிட்டருளினன். ராமா! அவ்வண்ணமே நான் உன்னையடைந்துளேன். ஆக்ஷேபனையின்றி என்னை அங்கீகரித்தருள்க'' என விளம்பி வேண்டிக்கொண்டது.

புஷ்பகவிமான தேவதை தன்னிடம் திரும்பிவந்து இவ்வாறு உரைத்ததுகேட்டு ரகுவீரன் அத்தேவதையை நோக்கி "புஷ்பக விமானமே! அந்தக் குபேரன் எனக்கு நண்பனேயாதலின், நீ யாரிடத்தில் வசித்திருப்பினும் வித்தியாசமிலது. தற்காலம் நீ அவனிடமே போய்ச் சேருக. நான் உன்னை எப்பொழுது உள்ளத்தில் நினைக்கின்றேனோ, அப்பொழுது என்னிடம் வந்து சேர்ந்து வேண்டிய விடங்களுக்கு ஆகாயமார்க்கமாய் என்னை வகித்துக்கொண்டு செல்லுக. நீ பத்துத் திசைகளிலும் உனக்கிஷ்டமானபடி செல்லலாம். நீ செல்லுமளவில் உனக்கெவ்விடத்தும் தடையுண்டாவதின்று'' என்றுகூறி அனுமதியளிக்க அவ்விமானம் 'அங்ஙனமேயாகுக'. வென்று தனக்கிஷ்டமான விடத்திற்குச் சென்றது.

ஐம்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஐம்பத்தோராவது ஸர்க்கம்

## ஸ்ரீராமன் சீதையுடன் சிங்காரவனஞ் சேன்றது.

இவ்விதமாக ராமன் புஷ்பகவிமானத்திற்கு விடைகொடுத்தனுப்பிய பிறகு விநோதமாய் உலாவிப் பொழுது போக்குமாறு ஒருநாள் தனது உத்தியானவனத்திற்குச் சென்றனன். அவ்வனத்தில் பற்பல வழகிய மரங்களும் நானாவிதமான மணங்கமழும் புஷ்பச் செடிகளும் எங்கும் நிறைந்திருந்தன. அங்கு மதுவைக் குடித்து வண்டினங்கள் முரல, மயிலினங்கள் ஆல, குயிலினங்கள் கூவ வெகு ரமணீயமாய் இருந்தது. மதுநிறைந்து மணம் வீசுகின்ற தாமரை நெய்தல் முதலான மலர்கள் மலர்ந்த நானாவிதமான

வாவிகள் தெளிந்த நீர் நிறையப்பெற்று அங்கங்கே அதிசயமாகத் தோன்றின. அவ்வாவிகளெங்கும் மாணிக்கக் கற்களால் படித்துறைகள் கட்டி, படிகக் கற்களால் மறைசுவரெடுத்து நீராடும் துறைகளமைந்து அழகு பெற்றிருந்தன. அவ்வாவிகளில் மலர்ந்த தாமரைக் காட்டிலே சக்கரவாகம், பரதபக்ஷி, ஹம்ஸம், ஸாரசம் முதலான பற்பல நீர்ப்பறவைகள் சிறகடித்துக் கூவிக் களித்து விளையாடிக்கொண்டிருந்தன.

இவ்வித அழகு வாய்ந்து அங்கங்கே அநேகவிதமான ஆஸனங்களும் சிறு மாளிகைகளும் கொடி வீடுகளும் அமைந்து தேவேந்திரனது நந்தவனமெனவும் குபேரனது சைத்திர ரதமெனவும் விளங்கும் அப்பூஞ்சோலையிற் புகுந்து ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியாருடன் அங்கோரிடத்தில் தனக்கென நிருமித்திருந்த அழகான ஆசனத்தில் எழுந்தருளியிருந்தனன். அப்பொழுது காகுத்தன் தனது காதலியைக் கையிற் பிடித்துக் கொண்டு மைரேயம் என்கிற மதுரமான ஒருவகைத் தேனை அம் மைதிலிக்கு உண்பிக்கலாயினன். அக்காலையில் வேலையாட்கள் ஸ்ரீராகவனுக்கு அமுது செய்வதற்காக நானாவிதமான கனிகளைக் கொண்டுவந்தளித்தனர். ஆட்டம் பாட்டுக்களில் தேர்ச்சி பெற்றவர்களான அழகிய இளம் பெண்கள் மதுபானஞ் செய்து மதித்தவர்களாகி ஸ்ரீராகவனுக்கு எதிரில் வந்து தோன்றியாடிப் பாடிப் புகழ்ந்தனர். அகங்களிக்கச் செய்பவர்களான அவ்வழகிகளைக் கண்ணுற்றுக் காகுத்தன் தனது காதலியுடன் கூடி யின்புற்று மகிழ்ந்தனன். இங்ஙனம் தினந்தோறும் ஒழிந்த வேளைகளில் அவ்விருவரும் உத்தியான வனஞ்சென்று விநோதமாகப் பொழுது போக்கி வந்தனர்.

சகல போக பாக்கியங்களும் பெற்று வாழும் ஜானகி ரகு நாயகர்களுக்கு இவ்விதமாகவே பதினாயிரமாண்டுகள் பெருமையாகச் சென்றன. அக்காலையில் ஸ்ரீராமபிரான் பிரதிதினம் முற்பகலில் ராஜாங்க சம்பந்தமான சகல காரியங்களையும் நீதிமுறை தவறாது நிறைவேற்றி, அதன் பின்னர் அந்தப்புரஞ் சென்று பிராட்டியுடன் அகமகிழ்ந்திருக்கலாயினன்.

இங்ஙனம் நிகழ்ந்துவருகையில் சீதை கர்ப்பம் தரிக்கலாயினள். அப்பொழுது ஒரு நாள் ராமன் சீதையை நோக்கி "வைதேகி! நீ வயிறுவாய்த்திருப்பது எனக்குச் சாலக் களிப்பைத் தருகின்றது. இப்பொழுது நீ யாது விரும்புகின்றனை? நீ யாது வேண்டினும் அதை யான் நிறைவேற்றுவேன்" எனக்கூறினன்.

இதுகேட்டு ஜனகராஜன் மகள் புன்னகைகொண்டு "சுவாமி! சகல சற்குணங்களும் வாய்ந்த தேவரீரை நாயகனாகப் பெற்ற அடியாளுக்கு வேறென்ன விருப்பமுளது? ஆயினும் தேவரீரே இங்ஙனம் வினவுகின்றமையால் ஒன்று வேண்டுகிறேன். முன்போல் இன்னுமொருதரம் கங்கைக் கரையிலுள்ள மிகப் பரிசுத்தமான தபோவனங்களிற் சென்று ஆங்கு கனி கிழங்குகளையே உணவாகக்கொண்டு விளங்கும் மகரிஷிகளுடைய பாதமூலத்தில் பணிவிடை செய்துகொண்டு அவ்விடத்தினழகை யனுபவிக்க விரும்புகிறேன். பலநாள் போயிருக்க இயலாதாயினும், ஒரு நாளாயினும் அவ்விடம் போயிருந்து வரவேண்டுமெனக் கருதுகின்றேன்" என மொழிந்தனள். இதுகேட்டு ராமன் 'ஜானகி! அங்ஙனமே யாகுக. நாளையதினமே அவ்விடம் போய்வரலாம்' என உரைத்து அகமகிழ்ந்திருந்தனன்.

**ஐம்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம்.

## ஸ்ரீ ராகவன் லோகாபவாதத்தைக் கேட்டருளியது.

இவ்வாறு விநோதமாயிருக்குமளவில் ஒரு நாள் தாசரதி மந்திரி முதலானோர் புடைசூழ ராஜ சபையில் வீற்றிருக்கையில் விஜயன், மதுதத்தன், கிாசியமன், பிங்களன் முதலிய ஹாஸியக்காரர்கள் வந்து பலவிதமான பரிகாசக் கதைகள் பேசி அரசனுக்கு ஆனந்தம் விளைவித்து வந்தனர். அப்பொழுது ராமன் அவர்களை நோக்கி 'நல்லது, இதனை இவ்வளவோடு நிறுத்துக; ஹே பத்திர! நகரத்திலாயினும் நாட்டிலாயினும் நகரத்தாரும் நாட்டாரும் நம்மைப்பற்றி என்ன சொல்லுகின்றனர்? சீதையைப்பற்றி யாது

புகல்கின்றனர்? பரதன், லக்ஷ்மணன், சத்துருக்கனன், நம் தாயான கைகேயி இவர்களைப் பற்றி என்ன பேசிக்கொள்கின்றனர்? நாட்டுக்குப் புதிதாக அரசன் ஒருவன் ஏற்படுகையில் அவனைப் பற்றி ஜனங்கள் ஏதாவதொன்று சொல்லிக் கொள்ளுவது உலக வழக்கமன்றோ?' என வினவினன்.

அதுகேட்டு ஹாஸியக்காரனான பத்திரன் கைகூப்பியவண்ணம் ராமனை நோக்கி 'அரசே! தேவரீர் ராவணனை வதைத்து வெற்றிபெற்று வந்ததை இந்நகரத்தாரனைவரும் மிகவும் ஏற்றமாகவே எடுத்துரைக்கின்றனர்' என்றனன். ராமன் அதனைச் செவியுற்று 'ஏ பத்திர! இதுமாத்திரமோ? இன்னுமேதேனு முளதோ? நன்மையோ தீமையோ நகரவாசிகள் கூறுமெல்லாவற்றையும் ஒன்றுகூடவிடாது யாவும் உண்மையாக நீ கூறுதல் வேண்டும். நன்மையோ தீமையோ எனக்குத் தெரிந்ததாகில் தீமையைக் களைந்து நன்மையை நான் வளர்த்தமுயலலாகுமன்றோ? ஆதலின் நீ பயமின்றித் தைரியத்துடனே நாட்டாரும் நகரத்தாரும் என்னைப்பற்றிச் சொல்லிக்கொள்ளுகின்ற வார்த்தைகளை விளங்கக்கூறுவாய்' என்று கட்டளையிட்டனன்.

ராமன் இங்ஙனம் மொழிந்ததுகேட்டு அவனை வணக்கத்துடன் நோக்கி "ராஜனே! ஜனங்கள் பலரும் பேசிக்கொள்வது யாதெனில் 'ராமன் சமுத்திரத்தி லணைகட்டி, வெல்வதற்கரிய ராவணனை வென்று சீதையை மீட்டுவந்தது மிகவும் பெருமையாகக்கொண்டாடத் தக்கதேயாயினும், அவனுக்கு ரோஷமென்பது சிறிதும் இல்லாமற் போனதுமாத்திரமே ஒரு பெருங்குறையாகும். ராவணன் வலியவெடுத்து மடிமீது வைத்துக்கொண்டு இலங்கை சேர்ந்து வெகுநாள் சிறைவைத்த சீதையை ராமன் மறுபடி தனது வீட்டிற்கு அழைத்துக்கொண்டு வந்தனனே அம்மனையாளிடத்து அவனுக்கென்ன மோகமோ! இங்ஙனம் இராக்கதர் வசத்தில் வெகுநாள் இருந்த இல்லாளை இவ்விராமன் ஏன் வெறுக்காது வைத்துக் குலாவுகின்றனனோ யாமறியோம். இதனை நோக்குகையில் நமது பெண்டிர்கள் இங்ஙனம் பிறர் வீட்டிற்போயிருந்து வரினும், நாமும் அதைப் பொறுக்கவேண்டிய

தாகின்றதே! அரசன் செல்லுகிறவழியே யன்றோ குடிகளும் செல்லும்' என இவ்வாறு நாடு நகரங்களில் ஜனங்கள் பலமாகப் பேசிக்கொள்கின்றனர்'' என்று விண்ணப்பஞ் செய்தனன்.

இதனைச் செவியுற்றவளவில் ஸ்ரீராமபிரான் சோகமடைந்தவனாகி அங்கிருந்து நண்பர்களனைவருக்கும் விடைகொடுத்தனுப்பி விட்டனன்

**ஐம்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## ஐம்பத்து மூன்று & ஐம்பத்து நான்காவது ஸர்க்கம்.

## ஸ்ரீராகவன் தம்பிமார்களை வரவழைத்து லோகாபவாதத்தை அவர்களிட முரைத்தல்.

அப்பால் ஸ்ரீராமச்சந்திரன் சற்றுத் தனியே ஆலோசனை செய்து தனது தம்பிமார்களை யழைத்து வரும்படி வாயில் காப்போனுக்கு உத்தரவிட்டனன். ராமனது உத்தரவைக் கேட்டவுடன் லக்ஷ்மணன் பரதன் சத்துருக்கனன் ஆகியோர் ஓடோடியும் வந்து ராமனது மாளிகையை யடைந்தனர். அம்மூவரும் வணங்கிக் கைகூப்பிய வண்ணம் ராமனது சன்னிதானஞ் சென்றனர். சமீபத்திற்சென்ற அவர்கள் ராமனது முகம் ராகுவினால் பீடிக்கப்பட்ட சந்திரனெனவும் சந்தியா காலத்துச் சூரியனெனவும் ஒளியிழந்திருக்கவும், கண்களில் நீர் பெருகுவதையும் கண்டு கலக்கமுற்றவர்களாகி அவனது பாதங்களில் வீழ்ந்து வணங்கி நின்றனர்.

ராமன் அவர்களையணைத்து ஆலிங்கனஞ் செய்து கொண்டு அருகிலுள்ள ஆசனங்களில் உட்காரச்செய்து 'எனது செல்வச் சகோதரர்களே! எனக்குப் பிராணனைப்போன்ற நீவிர் எல்லாம் கற்றுணர்ந்த விவேகிகள். உங்களுக்காகவே நீங்கள் கொடுத்த இவ்விராஜ்ஜியத்தை யான் பரிபாலிக்கின்றேன். புத்தியில் இணையற்ற நீங்கள் அனைவரும் ஒன்றுகூடி யான் கருதிய காரியத்தை நன்கு ஆராய்ந்து உரைக்கக் கடவீர்.' என்று கூறி தான் ஹாஸ்யக்காரனிடம் கேட்ட விஷயத்தை அப்படியே கூறி முடித்தனன்.

## ராமன் லோகாபவாதத்தைத் தம்பிகளிடமுரைத்தல்

பின்னும் ராமன் அவர்களை நோக்கி "சகோதரர்களே! அயலானகத்திலிருந்த சீதையை நாமெங்ஙனம் நமது வீட்டிற்குக் கொண்டு செல்வதென முன்னமேயே எனக்குக் கவலையுண்டாகியது. ஆனதுபற்றியே வைதேகியை அக்கினிப்பிரவேசம் செய்யும்படி செய்தேன். லக்ஷ்மணா! அன்று உன் கண் முன்பு அக்கினி தேவன் நேரில் சீதையைக் கையிலேந்தி வந்து அவள் களங்கமில்லாத கற்புடையாளென்று கூறவில்லையா? வாயு தேவனும் இஃதுண்மையேயென்று ஆகாயத்திலிருந்து சொல்லவில்லையா? இங்ஙனம் தேவதைகள் முன்னிலையிலும் மகரிஷிகள் முன்னிலையிலும் சூரிய சந்திரர்கள் முன்னிலையிலும் தேவேந்திரன் இலங்கையில் வந்து மகா பரிசுத்தையான சீதையைக் கைக்கொள்ளுமாறு வேண்டிக்கொள்ள வில்லையா? சீதை சிறந்த பதிவிரதையென்று முன்பே எனக்குத் தெரிந்திருந்தும் உலக அபவாதம் நீங்குவதற்கு வைதேகியைத் தீக்குளிக்கும்படி செய்தேன். ஆகவே தான் ஜானகியை நான் வீட்டிற்கழைத்து வந்தேன்.

இப்பொழுது இவ்வாராத பேச்சைக் கேட்கையில் எனக்கு மனம் மறுகுகின்றது. உலகாபவாதம் மிகப் பெரியதாய் விட்டதே! வசைச்சொல் ஒருவனுக்கு உலகில் வழங்கத் தலைப்படுமாயின், அச்சொல் உலகில் வழங்குமளவும் அவன் இழிவான உலகங்களையடைந்து அல்லலுறுவான். இவ்வுலகினில் மேலோர்களான பலரும் பாடுபடுவதெல்லாம் புகழ்பெறுவதற்கேயன்றோ? நான் உலகாபவாதத்திற்கு மிகவும் பயந்தவனாதலின் அதனை விலக்கிக்கொள்ளுமாறு யான் என் உயிரையும் ஒழித்துவிடுவேன்; புருஷ சிங்கங்களான உங்களையும் கைவிடுவேன். அங்ஙனமாக இனி சீதையைப் பரித்தியாகஞ் செய்யக் கேட்கவும் வேண்டுமோ? ஆதலின் நீங்கள் யான் கூறுவதற்கு உடன்படுக" என்று கூறினன்.

ராமன் மீண்டும் லக்ஷ்மணனை நோக்கி "ஏ லக்ஷ்மணா! என்உயிரின்மேலாணை; எனது புஜங்கள்மேலாணை. நான் சொல்வதை நீ சிறிதும் மறுக்கலாகாது. என் சொற்படி செய்யாயாயின் எனது விருப்பத்திற்கு விரோதஞ் செய்கின்ற பகைவனேயாவாய்.

வீணுக என் கோபத்திற்காளாக வேண்டாம். சீதை முன்னொரு சமயம் என்னிடம் கங்கா தீரத்திலுள்ள முனிவராச்சிரமங்களைக் காணவேண்டுமென உரைத்தனள். அதையே வியாஜமாகக் கொண்டு இப்பொழுது நான் சொல்லுகிறபடி நீ செய்யவேண்டும். நாளை யுதயகாலத்தில் நீ சீதையைத் தேரிலேற்றிச் சென்று நமது நாட்டுக்கு அப்பால் சேர்த்துவிடுக. கங்காநதிக்கப்பால் தமசா நதி தீரத்தில் வால்மீகி முனிவரது அழகான ஆச்சிரமமிருக்கின்றது. அது ஜனசஞ்சாரமில்லாத ஏகாந்தமான வனம். அவ்விடத்தில் சீதையைக் கொண்டுபோய் விடுத்து நீ மீண்டு வருக" என்று கட்டளையிட்டனன்.

ஐம்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

## ஐம்பத்தைந்து & ஐம்பத்தாறுவது ஸர்க்கம்

### லக்ஷ்மணன் சீதையைக் காட்டுக்கழைத்துச் செல்லுதலும் அவளுக்கு ராஜசாஸனம் தெரிவித்தலும்.

அப்பால் அன்றிரவு கழிந்ததும் மறுநாளுதயத்தில் லக்ஷ்மணன் மிகுந்த விசனமடைந்து வாடிய முகத்துடன் சாரதியான சுமந்திரனைத் தேர்கொண்டு வரும்படி ஆஞ்ஞாபித்தனன். பிறகு அவன் சீதையிடஞ்சென்று 'ஹே தேவீ! முனிவர் ஆச்சிரமங்களைத் தரிசித்து வரவேண்டுமெனத் தேவரீர் மன்னவனை வேண்டினீர்களாம். மகாராஜாவும் அங்ஙனமே செய்வதாக சம்மதித்தாரன்றோ? அவ்வாறே செய்விக்க இன்று அடியேனுக்கு உத்தரவு ஆகியிருக்கிறது. இப்பொழுது தேவரீர் எழுந்தருளினுல் கங்கா தீரத்தில் முனிவர்கள் ஆச்சிரமம் நிறைந்த அரணியத்திற்கு அழைத்துக்கொண்டு போகிறேன்' என்று விண்ணப்பஞ் செய்தனன்.

லக்ஷ்மணன் இங்ஙனம் மொழிந்ததுகேட்டு மைதிலி மிகுந்த மனமகிழ்ச்சியுடன் சிறந்த ஆடையாபரணங்களை யெடுத்துக்கொண்டு 'இவற்றை யான் அவ்வனத்திலுள்ள முனிபத்தினிகளுக்கு அளிக்கப்போகிறேன்' என்று கூறிப் பிரயாணமாயினள்.

உடனே லக்ஷ்மணன் சீதையைத் தேர்மீதேற்றிக்கொண்டு ராமனது கட்டளையை மனத்திற்கொண்டு தூரகங்களைத் தீவிரமாகச் செலுத்தி விரைவாகச் சென்றனன்.

அங்ஙனஞ் செல்லுகையில் சீதை நடுவழியே லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! இதென்ன! அபசகுனங்கள் அநேகம் காணப் படுகின்றனவே! எனது கண் துடிக்கின்றது; உடல் நடுங்குகின்றது; உள்ளமும் நிலை கொள்ளாமல் கலக்கமுறுகின்றது. இப் பூமி முழுமையும் எனக்குச் சூனியமாகவே காணப்படுகின்றது. அண்ணனிடத்தன்பு மாறாத உத்தமனே! உனது அண்ணனுடைய திருமேனியை யான் எப்பொழுதும் நினைக்கிறேன். அவர் எனதுள்ளத்தினின்றும் ஒரு நிமிஷமேனும் அப்புறம் விலகுவதில்லை. அவருக்கு ஒருவித குறையுமில்லாதிருக்குமோ? மாமிமார்களுக்கும் மற்றுமுள்ள ஜனங்களுக்கும் துன்பமொன்றுமில்லாதிருக்கவேண்டும்" என்று இவ்விதமாக வுரைத்துக் கை கூப்பிக்கொண்டு தனதிஷ்ட தேவதைகளை வேண்டிக் கொண்டனள்.

இதுகேட்டு லக்ஷ்மணன் உள்ளத்தில் துயரங்கொண்டிருந்தனனாயினும் அதை வெளிக்குக் காட்டாமல் சந்தோஷமே காட்டி 'அனைவர்க்கும் மங்களமுண்டாகுக' என மொழிந்து அன்றிரவு கோமதி நதிக்கரையிலுள்ள ஓராச்சிரமத்தில் தங்கியிருந்தனன். அப்பால் மறுநாளுதயத்தில் கங்காநதி தீரத்தில் போய்ச்சேர்ந்தனன். அச்சமயம் நடுப்பகலாய் இருந்தது. லக்ஷ்மணன் கங்காநதியைக் கண்ணுற்ற வளவில் விசனமுள்ளடங்காமல் உரத்த குரலில் கதறலாயினன்.

இதுகேட்டுச் சீதை லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! நீ ஏன் இங்ஙனம் வருந்துகின்றனை? நீ எப்பொழுதும் ராமனை விட்டுப் பிரியாதிருந்தவனாதலின் இவ்விரண்டு நாளாக அவனது பிரிவாற்றாமையால் வருந்துகிறாய் போலும்! நானும் ராமனைக் காண ஆவல் கொள்ளுகின்றேன். சீக்கிரம் என்னை இக்கங்கா நதியின் அக்கரை சேர்ப்பித்து அங்குள்ள முனிவர்களை எனக்குக்காட்டுக. நான் அவர்களுக்கு வஸ்திர பூஷணாதிகளை யளித்து விதிமுறைப்

படி அவர்களை வணங்கிப் பூஜித்து விட்டுத் திரும்பிவிடுகிறேன்'' என்றனள்.

சீதை இங்ஙனம் புகன்றது கேட்டு லக்ஷ்மணன் கண்களைத் துடைத்துக்கொண்டு ஓடக்காரர்களை யழைத்து ஓடம் கொண்டு வரும்படி கட்டளையிட, அவர்களங்ஙனமே சிறந்த ஓடமொன்று கொண்டு வந்து நிறுத்தினர்.

பிறகு லக்ஷ்மணன் தேரை சுமந்திரன் வசமிருத்தி சீதை யுடன் ஓடமேறிக் கங்கையின் தென்கரை சேர்ந்தனன். அப்பால் அவன் கண்களில் நீர் ததும்பக் கைகூப்பிக்கொண்டு ''ஹே வைதேகி! இப்பொழுது நான் தேவரீருக்கு ஒரு செய்தியை விண் ணப்பஞ் செய்யப்போகிறேன். அது நமது மகாராஜனது கட்டளை யாகும். அந்தோ! இத்தகைய கொடிய காரியஞ் செய்வதற்கு உடன்பட்டு அடியேன் உலகத்தார் பழிக்காளாயினேன். ஐயோ! எனக்கு இத்தருணத்தில் மரணமேனும் மிருத்யுவாகிலும் சம்ப விக்குமாகில் அதுவே மிகச் சிறப்புடையதாகும். தேவரீர் அடி யேனிட மருள் புரிக.

அருந்ததியும் ஒப்பாகாத வுத்தமி! அடியேன் விஷயத்தில் திருவுள்ளங் கலங்கலாகாது'' என்று கூறியவண்ணம் கைகூப்பிய வாறு கீழே வீழ்ந்தனன். மைதிலி இதுகண்டு திகைப்படைந்த வளாய் ''லக்ஷ்மணா! இஃது என்ன புதுமை! எனக்கொன்றும் விளங்கவில்லையே! நடந்த விருத்தாந்தமென்ன? நீ ஏன் இங்ங னம் வருத்தமுற வேண்டும்?'' என வினவினள்.

இங்ஙனம் வைதேகி வினவியதைக்கேட்ட லக்ஷ்மணன் அவ ளிடம் தழதழத்த குரலில் ராஜ சபையில் ஹாஸ்யக்காரன் சொன்ன செய்தியையும் அதனால் ராமன் மனம் நொந்து தனக் களித்த கட்டளையையும் விவரமாக ஒன்றும் விடாமல் புகன்று மீண்டுமவளை நோக்கி ''ஜனகநந்தினி! தேவரீர் சிறிதும் கலக்க முற வேண்டா. இதோ கங்கைக்கரையில் மகரிஷிகளது ஆச் சிரமங்கள் காணப்படுகின்றன. நமது தந்தையான தசரத சக் கரவர்த்திக்கு ஆப்த நண்பரான வால்மீகி முனிவர் இங்கு வசிக் கின்றனர். அவர் அருளே வடிவெடுத்து வந்தவர் போன்ற அந்

தணர் பெருமான்; அவரது திருவடி வாரஞ்சேர்ந்து தேவரீர் இங்குச் சுகமாக வாழ்க. தேவரீர் பதிவிரதா சிரோமணியாதலின் கணவனையே என்றும் மனதில் தியானித்துக்கொண்டு விரதம் பூண்டு உபவாசமிருந்து இனிது வாழ்க. இங்ஙனமே அனுஷ்டித்து வருவீராயின் உமக்கு நன்மையே விளையும்'' என விண்ணப்பஞ் செய்தனன்.

ஐம்பத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தேழாவது ஸர்க்கம்.

## சீதை சோகித்து லக்ஷ்மணனுக்கு விடை கொடுத்தது.

லக்ஷ்மணன் இவ்வாறு விளம்பிய மிகக்கொடிய வார்த்தைகளைக் கேட்டு வைதேகி விசனம் தாளமாட்டாது சரேலென்று தரையில் வீழ்ந்து மூர்ச்சித்தனள். ஒரு முகூர்த்த காலஞ்சென்ற பின் சற்று மூர்ச்சை தெளிந்து கண்ணும் கண்ணீருமாய் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! என்னைப் பிரமதேவன் துக்கத்திற்கென்றே ஒரு பெண்ணாகப் படைத்தனன் போலும்! எனது தேகம் முழுவதுமே துக்க வடிவமாகவேயன்றோ காணப்படுகின்றது! யான் முற்பிறப்பில் என்ன பாவஞ்செய்தேனோ! எவரைப்பெண்டிருடன் சேரவொட்டாமல் பிரித்தேனோ? அங்ஙனமில்லையாயின் ஒரு பாவமுமறியாது கணவனே கதியெனக் கொண்டு நல்வழியிலொழுகு மென்னை இங்ஙனம் நம் மன்னவர் துறக்க நேரிடுமோ? ஐயோ! யாருமில்லாத இவ்வனத்தில் நான் எங்ஙனம் வசிப்பேன்? இப்பெருந் துக்கத்தை யாரிடஞ்சொல்லி ஆறுவேன்? முனிவர்களிடம் யான் யாது கூறுவேன்? யாது நற்செய்கை செய்யத் துணிவேன்? இராகவன் ஏதோ ஒரு காரணம் பற்றி என்னைத் துறந்தனன். இது பொறுக்கத்தகுவதன்றாதலின் யான் இப்பொழுதே இகங்கையில் வீழ்ந்து உயிரையொழித்து விடலாம்.

லக்ஷ்மணா! அங்ஙனம் செய்வேனாயின் அது களங்கமற்ற மகா குலத்தில் பிறந்த எனது கணவனுக்கு ஒருபெரிய பழிப்பாகுமாதலின் அங்ஙனஞ் செய்யத் துணிகின்றிலேன. இனிச் செய்

தென்ன? மன்னவன் உனக்குக் கட்டளையிட்டபடியே நீ செய்க. நடந்தது நடந்து விட்டது. ஆயினும் நீ என்கணவனையும் மாமிமார்களையும் யான் கைகூப்பி முடி தாழ்த்தி வணங்கியதாக விண்ணப்பஞ் செய்வாயாக. பின்னும் தருமமே உருவெடுத்த உனது தமையனரிடத்தில் என் பேச்சாக மிக்க வினயத்துடன் ஒன்று உரை செய்தல் வேண்டும்.

அஃதென்னவெனில் 'ஹே ராகவ! இத்துணைகாலம் அடியாளுடன் பழகி எனது உள்ளமும் ஒழுக்கமும் தூய்மையும் பக்தியும் இத்தன்மையனவென்று தேவரீர் நன்கு உணர்வீர்; ஆயினும் அபகீர்த்திக்கஞ்சி அடியாளை அரணியத்திற் கோட்டினீர். ஹே! வீர! லோகாபவாதத்தினல் தங்களுக்கு ஏதேனும் அபகீர்த்தி புண்டாகுமாயின் அதனைப் பரிகரிப்பது அடியாளுக்கும் கடமையாகும்' கற்புடைய மகளிர்க்குக் கணவனேயன்றோ கதி. ஹே லோகநாத! எனது சரீரத்தைப்பற்றி யான் அத்தனையாகக் கவலையுறுகின்றேனில்லை. உலகாபவாதத்திற்கே யானும் அதிகமாக அஞ்சி ஆயாசமுறுகின்றேன். ஸ்திரீகளுக்குக் கணவனே தெய்வம். கணவனே பந்துவும் குருவுமாவான். ஆதலின் கணவனது காரியம் பெண்களுக்குப் பிராணனிலும் பிரியமானதாகும்' என இவ்வாறு யான்சொன்னதாக ராமனிடம் விண்ணப்பஞ் செய்க. இப்பொழுது யான் ருதுகாலம் நீங்கிக் கர்ப்பக்குறியுடையளாயிருக்கின்றேன். என்னை நன்று யுற்றுப் பார்த்து* இதனைத் தெரிந்துகொண்டு செல்லுக'' என்றனள்.

இங்ஙனம் சீதை புகன்றதுகேட்டு லக்ஷ்மணன் சிந்தை கலங்கியவனாகி அவளைத் தரையில் வீழ்ந்து வணங்கி "தேவி! இதுவரையில் அடியேன் தேவரீருடைய பாதாரவிந்தங்களைத் தவிரத் திருமேனியை ஒருபொழுதும் சேவித்தவனல்லனே! ராமனை விட்டுப் பிரிந்திருக்குமித் தருணத்தில் இவ்வனத்தில் தேவரீரது திருமேனியை அடியேன் எங்ஙனம் நோக்குவேன்?'' என்று கூறி அவளை வலம்வந்து மீண்டும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு

*மறுபடியும் ராமன் தன்மீது அபவாதஞ் சொல்லாதிருத்தற்காக வென்றபடி.

படகேறிக் கங்கையின் வடகரையை யடைந்தனன். தென்கரையில் தனியே விடப்பட்ட சீதை தூரத்தில் செல்லும் லக்ஷ்மணனையும் தேரையும் பலதரம் பார்த்துத் துயரமதிகரித்தவளாகி கோவென்று கதறிப் புலம்பலாயினள்.

ஐம்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம்.

## வால்மீகி முனிவர் சீதையைத் தேற்றியது.

சீதாபிராட்டி இவ்வாறு புலம்புவதுகேட்டு அக்காட்டில் திரிந்துகொண்டிருந்த முனிமக்கள் அவளைக் கண்ணுற்று, உடனே வால்மீகி முனிவரிடம் ஓடி இச்செய்தியை யறிவித்தனர். முனிவர் மக்கள் மொழிந்ததுகேட்டு வால்மீகி மகரிஷி தமது ஞான திருஷ்டியினால் உற்றுநோக்கி நடந்த வரலாற்றை யுணர்ந்து உடனே மைதிலி யிருக்குமிடத்திற்கு விரைந்தோடினர். அவளைக்கண்டவுடன் அம்முனிவர் தமது தேஜஸ்ஸினாலேயே அவளை அகமகிழச்செய்பவராகி மதுரமான குரலில் "ஹே! ஜானகி! ராகவனது காதலி! நீ சிறந்த பதிவிரதா சிரோமணியல்லவா? உனக்கு ஒரு குறையுமிலது. நீ இங்கு வருகையிலேயே எனது யோகதிருஷ்டியினால் உனது வரலாற்றை யான் உணர்ந்தேன்.

ஹே சீதே! நீ குற்றமற்ற குணபூஷணை யென யான் நன்கறிவேன். இனி நீ சோகந்தெளிந்து மனந்தேறுக. குழந்தாய்! எனது ஆச்சிரமத்திற்கருகில் பலபெண்டிர்கள் தவம்புரிந்துகொண்டிருக்கின்றனர். அவர்கள் உன்னைத் தங்களுடைய பெண்போலவே பாவித்துப் பாதுகாத்து வருவார்கள். இனி மனக்கவலை யொழிந்து தைரியங்கொண்டு உனது சொந்த மாளிகையிற்போலவே நீ இவ்விடத்தில் வசித்து வருக" என மொழிந்தனர்.

வால்மீகி முனிவரது செவிக்கின்பமான சிறந்த வார்த்தையைச் செவியுற்ற சீதாபிராட்டி அவரது திருவடிகளை வணங்கிக்

கைகூப்பிக்கொண்டு 'அங்ஙனமே யாகுக' என உடன்பட்டு அவரைப்பின்பற்றி அவரது ஆச்சிரமத்திற்குச் சென்றனள். அம்முனிவர் அங்கிருந்த முனிபத்தினிமார்களை நோக்கி "சர்வாங்க சுந்தரியான இப்பெண்மணி ஜனகராஜனது திருமகளும் ராம பிரானது காதலியுமாவள். பழிபாவமொன்றுமில்லாத இவளைக் கணவன் துறந்தமையால் இவள் இங்குவந்து சேர்ந்தனள். இவளை யென்றுங் கைவிடாது பரிபாலிப்பது எனது முக்கியமான கடமையாகும். இவளிடத்தில் நீவிர் அதிகமான அன்பு வைத்து இவளை ஒருகண்ணுகப் பார்த்துவரல் வேண்டும்." என இவ்வாறுரைத்துச் சீதையை அவர்களிடமொப்புவித்துச் சீடர்களுடன் வெளியில் சென்றனர்.

ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## ஐம்பத்தோன்பதாவது ஸர்க்கம்.

## சுமந்திரர் லக்ஷ்மணனைத் தேற்றுதல்.

இஃது இங்ஙனமாக, சீதையை விட்டுச்சென்ற லக்ஷ்மணன் அவள் ஆச்சிரமத்திற் புகுந்து கண்ணுக்குத்தோன்றாது மறைந்ததுகண்டு சிந்தை நொந்து சாரதியான சுமந்திரரை நோக்கி "ஹே சூத! மிகப்பரிசுத்தமான ஒழுக்கமுடைய சீதையைத் துறந்து ராமன் தனியே யிருக்க நேர்ந்தது ஏதோ ஜன்மாந்தர பாபவிசேடமென்று எண்ணுகின்றேன். ஒன்று மறியாத பட்டணத்து ஜனங்கள் ஏதோ பிதற்றினார்களென்று, மைதிலி விஷயத்தில் அபகீர்த்திக்கிடமாகிய இவ்வகைக் கொடிய செய்கையைத் தருமத்தையே துணையாகக்கொண்டவனுன எவனேனும் செய்யத் துணிவனோ?" என இவ்வாறு கூறி வருத்தமுற்றனன்.

அப்பொழுது சுமந்திரன் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! விதியை வெல்ல யாரால் முடியும்? ராமன் இவ்விதமாய் அற்ப பாக்கியமுடையவனுகித் துன்பமே அதிகமாக அனுபவிப்பானென்பது முன்னமே முனிவர்களால் உனது தந்தையினது சன்னிதானத்தில் நிர்ணயிக்கப்பட்டதோர் ரகசியம். இஷ்ட ஜனங்

களை விட்டுப்பிரிவது ராமனுக்கு விசேஷமாக சம்பவிக்கும். இப்பொழுது பதிவிரதையான சீதையைவிட்டுப் பிரிந்ததுமாத்திரமன்று. உன்னையும் சத்துருக்கனனையும் பரதனையும் விட்டு வெகு காலம் பிரிந்திருக்கப்போகிறான். இந்த விருத்தாந்தம் உன்னுடைய பிதாவின் முன்னிலையில் யானும் வசிஷ்டரும் இருக்கும்போது துருவாச முனிவர் கூறினர். அப்பொழுது தசரதர் என்னை நோக்கி இவ்விருத்தாந்தத்தை நான் யாரிடத்திலும் வெளியிடலாகாதென்று எனக்குக் கட்டளையிட்டனர். அந்த ரகசியத்தைக் கேட்க உனக்கு விருப்பமுளதாயின் சொல்லுகிறேன்கேள். ஆயின் நீ இதனைப் பரதனிடத்திலும், சத்துருக்கனனிடத்திலும் வெளியிடாதிருக்கவேண்டும்'' என்றனன்.

லக்ஷ்மணன் இதுகேட்டு அந்த ரகசியத்தை யறிந்து கொள்ள விருப்பமுடையவனாகி 'அங்ஙனமே நான் எவரிடமும் சொல்லவில்லை. அதை எனக்குரை செய்வாயாக' என்று சுமந்திரனை வேண்டினன். சுமந்திரன் லக்ஷ்மணனை நோக்கி ''லக்ஷ்மணா! முன்னொரு சமயம் உனது தந்தை துர்வாச முனிவரது ஆச்சிரமஞ் சென்று அவரை வணங்கி 'முனிவரே! அடியேனது வமிசம் எவ்வளவு காலம் நீடித்திருக்கும்? எனது குமாரனான ராமனுக்கு வயதெத்தனை? ராமனுக்குப் புதல்வர்கள் எத்தனை பேர்? அவர்களது வயதென்ன? இவைகளையடியேனுக்கு உள்ளவாறு எடுத்துரைக்க வேண்டுகிறேன்' என வினவினர்.

அப்பொழுது துர்வாசர் தசரதரை நோக்கி 'தசரத! முன்னம் தேவாசுர யுத்தம் நடந்த காலத்தில், அசுரர்கள் தேவர்களால் அடித்தோட்டப் பட்டவர்களாகி, பிருகு முனிவரது மனைவியை யடைக்கலம் புகுந்தனர். அவள் அவ்வசுரர்கட்கு அபயமளிக்க, அவர்கள் அச்சமொழிந்து அவ்விடத்திலேயே இனிது வாழ்ந்திருந்தனர். பிருகு பத்தினி அசுரர்கட்கு இவ்வாறு அபயமளித்ததையுணர்ந்து தேவாரதனான ஸ்ரீ மகாவிஷ்ணு தமது சுதர்சனமென்னும் சக்கரத்தை விடுத்து அவளது சிரத்தையறுத்துத் தள்ளினர். இதுகண்டு பிருகுமுனிவர் அந்நாராயணனை நோக்கி 'ஹே ஜனார்த்தனா! நீ வீணான வைரங்கொண்டு வதைக்கத்

தகாதவளான எனது வாழ்க்கைத் துணைவியைக் கொன்றனை யாதலின் நீ பூலோகத்திலே மானிடனாகப் பிறந்து அவ்விடத்துப் பலவாண்டளவும் மனைவியைப் பிரிந்து பரிதவிப்பாயாக' எனச் சாபமிட்டனர்.

தசரத! சீற்றத்துடன் இங்ஙனம் சபித்த பின்னர் அம்முனிவர் சற்று நிதானித்து 'ஓகோ! மதிமயங்கி பகவானைச் சபித்து விட்டேனே! இது வீணாகுமாயின் யாது செய்வது?' எனப் பச்சாத்தாபமடைந்து அந்த பகவானையே தவத்தினால் ஆராதிக்கலாயினர். அதுகண்டு விஷ்ணு தேவன் அவரை நோக்கி 'முனிபுங்கவரே! நீர் சபித்த சாபம் உலகத்திற்கு உபகாரம் செய்வதற்கேயாகும். ஆதலின் நீர் இதைப்பற்றிக் கவலை கொள்ளவேண்டா' என மொழிந்தனர். அரசே! அம்முனிவர் சபித்த சாபத்தினாலேயே ஸ்ரீமகாவிஷ்ணு ராமன் எனப் பெயர் பூண்டு இவ்விடத்து உனக்கு மகனாக வந்து அவதரித்திருக்கின்றனன். இராகவன் இவ்வயோத்தியில் சுகமாக பதினாயிரமாண்டு அரசுபுரிவான். அதன் பிறகு பிரமலோகஞ் செல்வான். ராமனுக்கு சீதையிடம் இரண்டு புதல்வர்கள் பிறப்பார்கள். அவர்கள் இவ்வயோத்திக்கு வெளியில் வேறோரிடத்தில் முனியாச்சிரமத்தில் பிறப்பார்கள். பிறகு அவர்கள் மண்டலாதிபதிகளாக உனது மைந்தனால் அபிஷேகம் செய்யப்பெற்று சுகமாக வாழ்வார்கள்' என்று கூறினர்.

லக்ஷ்மணா! துர்வாச முனிவர் இங்ஙனம் கூறியபின்னர் உனது தந்தை அவரை வணங்கி விடைபெற்று நகரஞ்சென்றனர். ஆதலின் அம்முனிவர் கூறியது அவ்வாறே நடக்கும். இதற்காக நீ வீணாக வருத்தமுற வேண்டா'' என மொழிந்தனன். இதுகேட்டு லக்ஷ்மணன் மனந்தேறி வருந்தா தொழிந்தனன். பிறகு அவ்விருவரும் கேசினியாற்றினருகே சூரியாஸ்தமனமாய் விட்டபடியால் தங்கி அன்றிரவை யங்கே கழிக்கலாயினர்.

ஐம்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## அறுபதாவது ஸர்க்கம்.

## லக்ஷ்மணன் ஸ்ரீராமபிரானைத் தேற்றியது.

பிறகு மறுநாள் உதயமானவுடன் லக்ஷ்மணன் கேசினியாற்றங்கரையை விட்டுப் புறப்பட்டு அன்று நடுப்பகலில் அயோத்தி போய்ச் சேர்ந்தனன். லக்ஷ்மணன் தலையைக் குனிந்து கொண்டு வாடிய முகத்துடன் கண்களில் நீர் பெருக ராமனிடஞ் சென்று அவனை வணங்கி "அண்ணா! தேவரீரது கட்டளைப்படி அடியேன் ஜானகியை கங்காதீரத்தில் மிகப் பரிசுத்தமான வால்மீகி முனிவரது ஆச்சிரமத்தருகேவிட்டுத் திரும்பி இதோ வந்துசேர்ந்தேன்.

புருஷ சிங்கமான தேவரீர் இவ்விஷயத்தில் சிந்தை கலங்கிச் சோகிக்கலாகாது. காலகதி இத்தன்மையாய் இருக்கின்றது. கற்றுணர்ந்த பெரியோர் இன்பங்கள் மொய்த்திடினும் களியார்; துயரங்கள் மிகுந்தாலும் முனியார். அவர்களுக்கு சுக துக்கங்கள் இரண்டும் ஒன்றேயன்றோ? எவ்விதமான செழிப்புக்கும் இறுதியில் அழிவென்பது ஒன்றுண்டல்லவா? உயரவெழுகின்றவை யாவையும் இறுதியில் கீழே விழுகின்றவையே. அவ்வாறே சம்யோகத்திற்கு வியோகமும், உயிர் வாழ்க்கைக்கு மரணமும் அவசிய முண்டாகின்றவையேயாம். ஆதலின் புத்திரன், மனைவி, சிநேகிதன் முதலியோர்களிடமும் தனத்திலும் அதிகமான மனப்பற்றுவைக்கலாகாது; என்றைக்கேனும் அவர்களது வியோகம் (பிரிவு) சம்பவிக்குமென்பது நிச்சயம்.

அண்ணா! தேவரீர் இங்ஙனம் மனங்கலங்கினால் மீண்டும்நமக்கு உலகாபவாதம் சம்பவிக்குமாதலின், தேவரீர் தைரியத்தைக் கைக்கொண்டு வீணான விசனத்தை விலக்கியருள்க" என்று கூறினன்.

லக்ஷ்மணன் இங்ஙனம் கூறக்கேட்டு ஸ்ரீராமபிரான் சிறிது மகிழ்ச்சியுடன் அவனை நோக்கி "லட்சுமணா! நீ உரைத்தவை யாவும் உண்மையே. உனது வார்த்தைகளைக்கேட்டு நான் மனக் கவலையொழிந்து களிப்புறலாயினேன்" என்று அருளிச் செய்தனன்.

அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

அறுபத்தோராவது ஸர்க்கம்
நிருகராஜனைப் பிராமணர் சபித்தது.

அப்பால் ராமன் லக்ஷ்மணனை நோக்கி "சுமித்திரையின் சிந்தைக்கினிய செல்வனே! நான் நான்கு தினங்களாக ராஜகாரியங்களொன்றும் விசாரியாதிருக்கிறேன். அங்ஙனம் விசாரியாதிருப்பது என் மனத்தை யதிகமாயுறுத்துகின்றது. ஆதலின் உடனே புரோகிதர்களையும் மந்திரிகளையும், ஸ்திரீகளோ புருஷர்களோ தங்கள் காரியத்தின்பொருட்டு வந்த நாட்டுஜனங்களனைவரையும் இவ்விடத்து வரவழைத்தல் வேண்டும். பட்டணத்து ஜனங்களுடைய காரியத்தை பிரதிதினம் எந்த அரசன் கேட்டு விசாரிக்கவில்லையோ, அவனுயிரிழந்தபின் மிகக்கொடிய நரகத்தில் வீழ்ந்து வருந்துவான். இது நிச்சயம். லக்ஷ்மணா! இதைப்பற்றி முன் நடந்த கதையொன்று கூறுகிறேன் கேள்:—

முன்னொரு காலத்தில் சத்தியமும் நல்லொழுக்கமுமுடைய நிருகனென்னுமரசன், கன்றுகளுடன் கூடிய ஒரு கோடி பசுக்களைப் பொன்னாபரணங்களால் அலங்கரித்துப்பிராமணர்களுக்குப் புஷ்கரக்ஷேத்திரத்தில் தானஞ்செய்தனன். அங்ஙனமளிக்கப்பட்ட பசுக்களில் ஓர் ஏழை அந்தணனுக்களிக்கப்பட்ட ஒருபசு மற்ற பசுக்களுடனேகூடி வேறிடம் போய்விட்டது. பசியால் வருத்தமுற்ற அவ்வேதியன் தனது பசுவைத்தேட விரும்பி, பல ஆண்டளவு பற்பல தேசங்களிலும் சென்று தேடினன். அங்ஙனம் தேடுகையில் 'கனகலம்' என்னும் ஒரு கிராமத்தில் ஒரு வேதியன் வீட்டில் அப்பசுவைக்கண்டனன். அதுவும் அதன் கன்றும் மிகவுமிளைத்து அன்றே இறந்துபோவதுபோலிருந்தன. தனது பசுவைக் கண்டதும் பிராமணன் அதனைப் பெயரிட்டழைக்க, அப்பசுவும் வேதியனது குரலையறிந்து அவனைப் பின்தொடர்ந்து செல்லலாயிற்று. அதுகண்டு அப்பசுவைப் போஷித்துவந்த பிராமணன் அதனைத் துரத்திக்கொண்டோடி அப்பசு தனதென்று வாதாடினன். பிறகு அவ்வந்தணரிருவரும் அப்பசு விஷயமாக விவாதஞ்செய்துகொண்டு அதனுண்மையை விசாரித்தறிய அப்பசுவை யீந்த வேந்தனிடம் போய்ச் சேர்ந்தனர்.

அவ்விருவரும் ராஜமாளிகையின் வெளியில் வெகு நேரங் காத்திருந்தும் உள்ளே புக அவர்களுக்கு அனுமதி கிடைக்க வில்லை. எத்தனை நாள் காத்திருந்தும் அவர்களுக்கு ராஜதரிச னம் நேர்படவில்லை. இதனால் அவ்வந்தணரிருவரும் கோப முற்று 'ஓ அரசனே! உன்னிடம் ஒரு காரியம் வேண்டி வந்த ஏழைகளான எங்களுக்கு நீ கண்ணிற்படாது மறைந்திருக்கின்ற மையின், நீ ஒரு ஓணானாகி ஒரு குழியில் வீழ்ந்து அநேகமாயிர மாண்டளவு வசித்திருப்பாயாக' எனச் சபித்தனர்.

ஆயினும் அவ்விருவரும் அவனிடம் இரக்கங்கொண்டு 'கலி யுகம் வருவதற்கு முன்னே பூமி பாரம் நீக்கும்பொருட்டு நர நாராயணர்களிருவரும் இப்புவியில் வந்து பிறக்கப்போகின்றனர். அவர்களில் நாராயணனான கண்ணபிரானை நீ தரிசித்த வளவில் உனக்கு இப்பாவம் நீங்கும்' என்றுகூறி, விவாத மொழிந்தவர்க ளாய் அக்கிழப் பசுவை மற்றொரு பிராமணனுக்கு தானங் கொடுத்துத் தம்மிடஞ் சென்றனர். அவ்வரசன் மிகக் கொடி தான அந்த சாபத்தை இப்பொழுது அனுபவித்துக் கொண்டிருக் கின்றனன்.

லக்ஷ்மணா! தம்மைத் தேடிவருகிறவர்களுடைய காரியத்தை விசாரியாது வருந்தச் செய்வது வேந்தர்களுக்குப்பெரிய பாதக மாகும். ஆதலின் நம்மிடம் காரியமாக வந்திருப்பவர் எவரே னும் உளராயின் அவர்களை அதிசீக்கிரத்தில் இவ்விடம் வரவிடுக" என்று கட்டளையிட்டனன்.

அறுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்திரண்டாவது ஸர்க்கம்.

## நிருகராஜன் சாபமனுபவித்த வகை.

லக்ஷ்மணன் இதுகேட்டு ராமனை நோக்கி "அண்ணா! பிறகு நடந்த வரலாற்றை யறிய விரும்புகிறேன். தயவு செய்துகூறுக" என வேண்ட, ஸ்ரீராமபிரான் அருளிச்செய்யலாயினன். "லக்ஷ் மணா! தனக்கு பிராமணர்களினால் நேர்ந்த கொடிய சாபத்தை

அவ்வரசன் தனது யோக திருஷ்டியினால் கண்டறிந்து, மந்திரிகள், புரோகிதர் முதலியவர்களை வரவழைத்து அவர்களிடம் தனக்கு நேர்ந்த சாபத்தைக்கூறி 'நண்பர்களே! இப்பொழுதே எனது குமாரனை வசுவுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யுங்கள். சிற்பிகளையுடனே வரவழைத்து யான் சுகமாக வசிப்பதற்கேற்றபடி சிறந்த குழியொன்று நிருமிக்குமாறு கட்டளையிடுக. யான் அதிற்புகுந்து எனக்கு நேரிட்ட பிராமண சாபத்தைப் போக்குகிறேன். அக்குழியைச் சுற்றி காய் கனி மரங்களும் நானாவிதமான மரங்களும் அமைத்து எப்புறத்திலும் அதி ரமணீயமாய் இருக்குமாறு செய்வீர்களாக' எனக் கட்டளையிட்டனன்.

அப்பால் அவ்வரசன் தன் புதல்வனையழைத்து 'குழந்தாய்! யான் செய்த அபராதம் மிகவும் அற்பமேயாயினும் இங்ஙனம் மிகக் கொடிய சாபத்தை பிராமணர்கள் எனக்கிட்டதை நீ யறிவாயல்லவா? ஆகையால் நீ எப்பொழுதும் தருமத்தில் நோக்குடையவனாகி ராஜநீதி தவறாமல் ஜனங்களைப் பரிபாலித்து வருக. என்னைப்பற்றி நீ சோகிக்கவேண்டா. எல்லாம் ஈசனது செயலேயாகும். அவரவர் முன்செய்த பாப புண்ணியங்களுக்கேற்றவண்ணம் நன்மை தீமைகளையடைகின்றனர். ஆதலின் இவ்விஷயத்தில் நீ விசனமுறுவது வீண்' என்று புத்திமதி கூறி, உடனே ஒன்றாக மாறி அற்புதமாக நிருமிக்கப்பட்ட பள்ளத்திற்புகுந்து தனக்கு வேதியர்களிட்ட சாபத்தை யனுபவிக்கலாயினன்" என்றனன்.

அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்துமூன்றாவது ஸர்க்கம்.

## நிமி சக்கரவர்த்திக்கு நேர்ந்த சாபம்.

பின்னும் ராமன் தனது சகோதரனை நோக்கி "லக்ஷ்மணா! இஃதொன்றுமாத்திரமேயன்று. இதற்கு திருஷ்டாந்தமாக மற்றொரு கதையுமுண்டு. அதையும் கூறுகின்றேன் கேள். மகாத்துமாவான இக்ஷ்வாகு மகாராஜனுக்குப் பன்னிரண்டாவது புத்

திரனுகிய நிமியென்னும் சக்கரவர்த்தியொருவர் இருந்தனர். அவர் கௌதம முனிவராச்சிரமத்தருகே அமராவதிக்கு நிகரான 'வைஜயந்தம்' எனப்பெயர்பெற்ற அற்புதமான நகரமொன்று நிருமிக்கச்செய்து அதில் வசிக்கலாயினர். அங்ஙன மிருக்கையில் அச்சக்கரவர்த்தி தீர்க்கஸத்திரம் எனப்பெயர்பெற்ற யாகம்செய்ய விரும்பி, அதற்குப் புரோகிதராய் இருந்து நடப்பிக்குமாறு வசிஷ்டமுனிவரை வேண்டினர். ஆனல் அம்முனிவர் அரசனை நோக்கி 'தேவேந்திரன் இதற்குமுன்பே தனது வேள்விக்கு வருமாறு என்னை வேண்டியிருக்கின்றனன். அது முடிந்த பின்னர் நீ யாகம் ஆரம்பிக்கலாம்' எனமொழிந்து சென்றனர்.

வசிஷ்டர் திரும்பிவருமளவும் பொறுத்திருக்க மனமில்லாத நிமிசக்கரவர்த்தி, அத்திரி, அங்கிரசு, பிருகு முதலிய தபோதனர்களைப் புரோகிதர்களாக வரித்து மற்றுமுள்ள வேதியர்களைவைத்துக்கொண்டு இமயமலைச்சாரலில் தமது நகரத்தருகே கௌதம முனிவரைக்கொண்டு வேள்விபுரியலாயினர். இஃது இங்ஙனமாக அமருலகஞ் சென்ற வசிஷ்டமுனிவர் இந்திரனது வேள்வி முடிந்ததும், தம்மரசனுன நிமிசக்கரவர்த்திக்கு யாகஞ் செய்வித்தற்பொருட்டு விரைந்து வந்தனர். வந்தவிடத்தில் அரசன் கௌதமரைக்கொண்டு யாகஞ்செய்வதுகண்டு முனிவர் கோபங்கொண்டனர். ஆயினும் அக்குரிசிலைக் காணவேண்டுமெனக்கருதி அவ்வரண்மனை வாயிலிற்சென்று ஒரு முகூர்த்த காலம் காத்திருந்தனர். அப்பொழுது அரசர் இளைப்பினுல் நித்திரைசெய்துகொண்டிருந்தமையால் வசிஷ்டர் அரசன் தன்னை வேண்டுமென்றே எதிர்கொண்டழையாமல் காக்க வைத்தனன் எனக்கருதி முனிந்து 'அரசனே! நீ என்னை அவமதித்தமையின், உனது உயிர் உடலைவிட்டுப் பிரியக்கடவது' எனச் சாபமிட்டனர்.

அப்பால் நிமிசக்கரவர்த்தி துயிலெழுந்து தனக்கு நேர்ந்த சாபத்தையுணர்ந்து அதிகமாகச் சீறிச்சினந்து 'யான் உடம்பு தெரியாமல் துயிலுமளவில், நீர் சினத்தினுல் வீணுக என்னைச் சபித்த படியால், உமது அற்புதமான உடலும் ஜீவன் ஒழிந்ததாகக் கடவது' என வசிஷ்டருக்குச் சாபமிட்டனர். இவ்வண்ணம்

மகாப்பிரபாவ சாலிகளான அந்தணர் பெருமானும் அரசர் பெருமானும் உள்ளங் கலங்கி ஒருவர்க்கொருவர் சாபமளித்த வளவில், இருவரும் உடலைவிட்டு உயிர் நீங்கினவர்களாயினர்.

அறுபத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்து நான்காவது ஸர்க்கம்.

### பிரமதேவன் வசிஷ்டருக்கு உடம்புண்டாகும் வகை கூறியது.

"லக்ஷ்மண! இங்ஙனம் உடலையிழந்த வசிஷ்டர் மீண்டும் வேறொரு சரீரத்தை வேண்டிப் பிரமதேவரை யடைந்தனர். அவ்விடத்து அவர் வாயு வடிவமாகவே நின்று தனது துயரத்தை நான்முகனிடஞ் சொல்லித் தனக்கு வேறொரு உடல் உண்டாக வேண்டுமென்று அக்கடவுளை வேண்டினர்.

இதுகேட்டு நாமகள்கேள்வன் வசிஷ்டரை நோக்கி 'குழந்தாய்! நீ இப்பொழுது மித்திராவருணர்களது வீரியத்தில் பிரவேசிப்பாயாகில், அதினின்று அயோநிஜனாக (ஒரு சரீரத்தினின்றும் பிறவாமல்) உற்பவித்து மகாதருமிஷ்டனாகி எனக்குப் பிரியமான புத்திரனேயாகுவை' எனவுரைத்தனர். உடனே வசிஷ்டர் கமலாசனனை வணங்கி விடைபெற்று வருணனது ஆலயமான சமுத்திரத்திற்குள் சென்றனர். அக்காலத்தில் மித்திரன் என்னும் ஒரு தேவன் வருணனுக்கு மித்திரனாகி யிருந்தனன்.

இஃது இங்ஙனமாக ஒரு சமயம் ஊர்வசி யென்னும் தெய்வப்பெண் தன் தோழிமார்களுடன் கூடிக் கையிற் குடமேந்திக் கடற்கரைக்கு வந்து விளையாடலாயினள். அப்பொழுது மித்திரன் அவளை முதலில் கண்ணுற்று மோகித்தனன். அத்தருணம் புணரவியலாது அவர்களிருவரும் மனத்தின்கண்ணே காதல் கொண்டிருந்தனர். அதனால் ஸ்கலிதமான மித்திரனது வீரியத்தை ஊர்வசி தனது குடத்தில் ஏற்றுக்கொண்டனள். அதன் பின்னர் வருணன் அவளைக் கண்ணுற்றுக் காதல் கொண்டு அவளிடம் இன்பம் நுகர ஆவல் கொண்டனன். அது கண்டு ஊர்வசி தான் முன்னமே மித்திரனுக்கு உடன்பட்டுப்போயின செய்தி கூறி, அது காரணமாக வெளிப்பட்ட வருணனது வீரியத்தினையும் தன் குடந்

திலே ஏற்றுக்கொண்டனள். தமக்கு சரீரத்தை வேண்டிப் பிரம தேவரிடம் விடைபெற்றுச் சென்ற வாயு வடிவமான வசிஷ்டர் அத்தருணம் ஊர்வசியினது குடத்திலிருந்து மித்திராவருணர்களது வீரியத்தில் புகுந்தனர்.

அப்பால் அவ்வரம்பைமகளான ஊர்வசி அவ்விடம்விட்டு மித்திரனிடஞ் சென்றனள். அவளைக்கண்டவுடன் மித்திரன் கோபங்கொண்டவனாகி 'பெண்ணே! நீ முதலில் என்னைப் புருஷனாகவரித்து அதன் பின்னர் மற்றொருவனை மனதில் கணவனாகக் கொண்டமையால் நீ கற்பழிந்தவளாயினை. ஆதலின் நீ பூலோகம் சேர்ந்து புதனது புத்திரனும் காசி ராஜனுமான புரூரவன் என்னும் மன்னவனுக்கு மனைவியாகி வாழக்கடவை' என்று சாபமிட்டனன்.

அத்தகைய சாபத்தினால் ஊர்வசி புரூரவ சக்கரவர்த்தியையடைந்தனள். அவ்வரசனுக்கு அவளிடம் ஆயுவென்னும் புத்திரன் பிறந்தனன். ஆயுவுக்கு தேவேந்திரனுக்கொப்பான ஆற்றலுடைய 'நகுஷன்' என்னும் நற்புத்திரன் பிறந்தனன். அந்த நகுஷன் இந்திரன் விருத்திராசுரனைக் கொன்று வருந்திய காலத்தில் இந்திரபதம் பெற்று அநேகமாயிரமாண்டு தேவலோகத்தையாண்டனன். மகா ரூபவதியான ஊர்வசி மித்திரனது சாபத்தினால் பூலோகஞ்சேர்ந்து பலகாலம் அங்கே வசித்திருந்து, அச்சாபமொழிந்த பின்னர் தேவலோகம் போய்ச்சேர்ந்தனள்" என்று கூறினன்.

**அறுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

அறுபத்தைந்தாவது ஸர்க்கம்.

## வசிஷ்டர் உடல்பெற்றதும் நிமி பிராணிகளது கண்ணிமையில் வசிக்கலானதும்.

ராமன் இவ்வண்ணம் உரைசெய்த அற்புதமான வரலாற்றைச் செவியுற்ற லக்ஷ்மணன் மிகுந்த சந்தோஷத்துடன் "அண்ணா! சரீரத்தை நீத்துச்சென்ற வசிஷ்டரும் நிமிசக்கர

வர்த்தியும் மீளவும் எவ்வாறு தேகம் பெற்றனர்?'' எனவினவ ராமன் மீண்டும் கூறலாயினன்.

"லக்ஷ்மணா! ஊர்வசியினது கும்பத்தில் புகுந்த மித்திரா வருணர்களது வீரியமானது பரிபூரணமாக, அதினின்றும் சோதி மயமான இரண்டு முனிவர்கள் தோன்றினர். முதலில் தோன்றியவரே அகத்திய முனிவராவர். அம்முனிவர் தோன்றியவுடன் மித்திரனை நோக்கி 'யான் உனது புத்திரனல்லேன்' எனப்புகன்று புறப்பட்டுப்போயினர். அகத்தியர் வருணனது வீரியத்தினின்றே தோன்றினராதலின் அவர் அங்ஙனமுரைத்தனர். அப்பால் சில காலஞ் சென்று அந்த மித்திராவருணர்களது வீரியத்திலினின்றும் நமது குலகுருவான வசிஷ்ட முனிவர் தோன்றினர்.

லக்ஷ்மணா! நிமிசக்கரவர்த்தி உயிர்பிரிந்துபோனமை கண்டு அங்கிருந்த முனிவர்கள் அவ்வுடலைப் புஷ்பசந்தனாதிகளாலும் ஆடையாபரணங்களாலும் அலங்கரித்து, அஃது அழியாவண்ணம் சுகந்தமிட்டுத் தைல கடாஹத்தில் வைத்துக் காப்பாற்றினர். பிறகு அவ்வேந்தன் துவக்கிய வேள்வியைக் குறையற நிறைவேற்றி அவனது யாகதீக்ஷையையும் பூர்த்திசெய்தனர். அப்பால் பிருகு முனிவர் அவ்வரசனது ஆவியை நோக்கி 'ராஜனே! யான் உன் விஷயத்தில் அகமகிழ்ந்தனன். உன் உயிர் உடலோடு கூடுமாறு அருள்புரிகின்றேன்' என்று கூறினார். வானவர்கள் அச் சக்கரவர்த்தி செய்த வேள்வியினால் மிகத்திருப்தியடைந்து அவ்விறையைநோக்கி 'அரசர்பெருமானே! நீ எங்களை நன்கு பூஜித்தனை. உனக்கு யாதுவரம் வேண்டும்? உனது ஜீவன் எவ்விடத்துக் குடிபுகுந்திருக்கவேண்டுமென நீ விரும்புகின்றனை?' என வினவினர்.

அதுகேட்டு மன்னவன் மகிழ்வெய்தி 'தேவர்களே! இனி எனக்கு தேகம் வேண்டியதில்லை. பிராணிகளுடைய நேத்திரங்களில் வசித்திருக்க வரம்வேண்டுகின்றேன்?' என்று கூறினன். தேவர்கள் அவனை நோக்கி 'ஓ அரசனே! அங்ஙனமேயாருக. நீ அங்ஙனம் சமீரணவடிவமாக சஞ்சரிக்கையில் எல்லாப் பிராணிகளும் இளைப்பாறுதற்பொருட்டாக அடிக்கடி கண்களை இமை

கொட்டுவார்கள்' என வுரைத்துத் தம்மிடஞ் சென்றனர். (நிமி யினால் உண்டானமை பற்றி இமைகொட்டுதலுக்கு நிமிஷம் என்கிறபெயர் வழங்கலாயிற்று.)

இஃதிங்ஙனமாக, நிமியினது உடலைப்பாதுகாத்துவந்த முனி வர்கள் அவ்வுடலை யெடுத்து அவனுக்குப் புத்திரன் உண்டாவ தன்பொருட்டு மந்திரங்களோடு ஓமஞ்செய்து அவ்வுடலை அரணி கொண்டு கடையலாயினர். அவ்வாறு கடையுமளவில், அதி னின்றுமொரு மஹாபுருஷர் தோன்றினர். மதனம் (கடைதல்) செய்து உண்டானமையால் மிதி யெனவும், ஜனித்ததனால் ஜனக ரெனவும், விதேஹனால் (உடலில்லாதவனால்) உண்டானமையால் விதேஹரெனவும் அவர்க்குப் பெயர்கள் உண்டாயின. இந்த விதேகராஜனே ஜனககுலத் தலைவரான முதலரசர். இவரால் தான் அந்நாட்டிற்கே மிதிலையெனப் பெயர் பிரசித்தமாயிற்று. இவரது குலத்தில் தோன்றின ஜனகமகாராஜனே எனது மாம னாரும் சீதைக்குத் தகப்பனாருமானவர்" என்று கூறி முடித்தனன்.

அறுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தாறாவது ஸர்க்கம்.

## ராமன் யயாதி சரித்திரம் கூறுதல்.

இங்ஙனம் ராமன் கூறக்கேட்ட லக்ஷ்மணன் "அண்ணா! தேவ ரீர் கூறிய வரலாற்றில் எனக்கொரு சந்தேகமுண்டாகின்றது; நிமிசக்கரவர்த்தி மகாசூரரான க்ஷத்திரியரன்றோ? அத்துடன் யாகதீக்ஷைகொண்டவரன்றோ? அங்ஙனமாக தமது குலகுருவான வசிஷ்ட முனிவரிடத்தில் பொறுமைகொள்ளாமல் சீற்றங்கொண் டது யாதுகாரணம்?" எனவினவ ஸ்ரீராமபிரான் கூறலாயினன்.

"லக்ஷ்மணா! பொறுமை யென்பது யாவருக்கும் கைகூடுமோ? கோபத்தை யடக்குவதருமையல்லவா? சத்துவகுணமே மேலிட் டவரான யயாதி மகாராஜர் பொறுத்தவாறு மற்று எவரும் பொறார். அவருடைய கதையைக் கூறுகிறேன்கேள். முந்

சொன்ன நகுஷமகாராஜாவின் புத்திரர் யயாதியென்பவர் ஒருவர் இருந்தார். அவருக்குச் சிறந்த ரூபவதிகளான இரண்டு மனைவிகள் வாய்த்தனர். அவர்களுள் ஒருத்தி அசுர ராஜனான விருஷபர்வாவினது மகளான சர்மிஷ்டை யென்பவள். மற்றொருத்தி சுக்கிராசாரியாது மகளான தேவயானி யென்பவள். தேவயானியிடத்தில் மன்னனுக்கு பிரீதி அவ்வளவாக அதிகமில்லை. அம்மன்னனுக்கு அம்மனைவியர்களிருவரிடத்திலும் அற்புதமான வடிவழகுள்ளவர்களான இரண்டு புதல்வர்கள் பிறந்தனர்.

சர்மிஷ்டையின் புத்திரன் பூருவென்பவன். தேவயானியின்மகன் யதுவென்பவன். பூரு சற்குணமுள்ளவனாய் இருந்தபடியாலும் அவனது தாயிடமுள்ள அன்பின் மிகுதியாலும் இளையாள் மகனை அவனை அரசன் அதிகமாகப் பாராட்டி வரலாயினன். இதுகண்டு பொறாத யதுவென்பவன் விசனமதிகரித்தவனாகித் தன்தாயிடஞ் சென்று 'தாயே! தந்தை என்னை அனாதரவு செய்து இளையாள் மகனை மேலாகக் கொண்டாடுகின்றனரே! உயர்குலத்தவரான சுக்கிராசாரியாது வயிற்றிற்பிறந்த நீ பொறுத்தற்கரியதான இவ்வகையவமானத்தை எவ்வாறு சகித்துக்கொண் டிருக்கின்றனை? நாமிருவரும் ஒன்றுகூடி இப்பொழுதே தீக்குளித்து உயிரைவிடுவோம். அரசன் அசுரராஜன் மகளுடனே மகிழ்ந்து வாழட்டும். இதனை நான் இனிப்பொறுக்க முடியாது' என உரைத்தனன்.

இங்ஙனம் தனது செல்வப் புதல்வன் கூறக்கேட்டு தேவயானி மிக்க சினங்கொண்டவளாகித் தந்தையை மனதில் நினைத்தனள். அப்பொழுதே சுக்கிராசாரியர் அங்குவர அவரிடம் அரசனது நடவடிக்கையைக் கூறினள். அசுரகுரு தன்மகள் கூறியதைக்கேட்டு சினமூண்டு யயாதியை நோக்கி 'ஹே! நகுஷபுத்திர! நீ துர்ப்புத்தியுடையோனாகி என்னை யவமதிக்கின்றமையின், நீ உடனே உடம்பு தளர்ந்து மூப்புமேலிட்டு மனம் வருந்துக' எனச் சபித்துத் தனது புத்திரியை சோகந்தணியச் சமாதானப்படுத்தித் தம்மிருப்பிடஞ் சென்றனர்.

அது தெரிந்து வேந்தன் அவரிடஞ் சென்று வணங்கி வேண்டிக்கொள்ள அவர் 'யானிட்ட சாபம் ஒருபொழுதும் மாருது. எவனேனுமொருவன் உனது மூப்பை மாற்றிக்கொள்ள உடன் படுவானாயின், உனது மூப்பை அவனுக்குக் கொடுத்து அவனது வயதை நீ பெற்று உனக்குவேண்டிய இன்பங்களை நுகரலாம்' என வரமீந்தனர்.

## ஸ்ரீராமாயணத்தில் சொல்லியிராத விஷயம்

பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்னும் நான்கு வருணத்தவரில் மேற்குலத்தில் பிறந்த புருஷர் தாழ்ந்த குலத்தில் பிறந்த பெண்ணை மணஞ்செய்து கொள்ளலாமென்றும், தாழ்ந்த குலத்தவர் மேற்குலத்து ஸ்திரீயைக் கலியாணம் செய்துகொள்ளலாகாதென்றும் சாஸ்திரத்தில் சொல்லியிருக்க க்ஷத்திரியனை யயாதி பிராமணரான சுக்கிராசாரியரது மகளை மணந்துகொண்டதெங்ஙனம்? எனில்,

அசுரராஜனை விருஷபர்வாவின் மகளான சர்மிஷ்டையானவள் ஒருகால் தன் தோழிமார்களுடனும், குரு புத்திரியான தேவயானியுடனும் உத்தியான வனத்திற் சென்று பொழில் விளையாட்டு விளையாடலாயினள். அக்காலையில் அவர்கள் ஆடைகளைக்களைந்து கரைமீது வைத்து ஆங்குள்ள தாமரைத் தடாகத்தில் ஜலக்கிரீடை செய்யலாயினர். அச்சமயம் பரமசிவன் பார்வதியுடன் இடபாரூடராய் அவ்விடத்து ஆகாயமார்க்கமாய் எழுந்தருள, அவரைக்கண்டு அக்கன்னியர்கள் வெட்கி, உடனே கரையேறி ஆடைகளையணிந்து கொண்டனர். சர்மிஷ்டை அவசரத்தில் அறியாமல் தனதெனவெண்ணித் தேவயானியின் புடவையையெடுத்து உடுத்துக் கொண்டனள்.

அதுகண்டு சுக்கிரனது மகள் வெகுண்டு 'சர்மிஷ்டே! என்னைப் பிரமகுலமென்றும் குருபுத்திரியென்றுமுணராது அசுரன் மகளான நீ எனது புடவையை எடுத்துத் தரித்துக்கொண்டனையே இதென்ன அநியாயம்?' என்றனள். சர்மிஷ்டை யவளை நோக்கி 'அடி பேதாய்! நீ எதில் உயர்ந்தவளென்று இறுமாப்புறுகின்றனை? காலையிலெழுந்தவுடன் காக்கைகள் போல் எங்கள் வீட்டிற்கு ஓடி

வந்து பிச்சையெடுத்தாலன்றி உங்களுக்குப் பிழைப்பு வேறு உண்டோ?' என்றிப்படி பலவாறு பேசி ஆடையின்றியே அவளை ஆங்குள்ள ஒரு கிணற்றில் தள்ளிவிட்டு வீட்டுக்குச் சென்றனள்.

இஃது இங்ஙனமாக, தற்செயலாய் யயாதிமன்னன் வேட்டையாடி அதனால் நீர் வேட்கை கொண்டு தண்ணீருக்காகத் தேவயானி வீழ்ந்திருந்த கிணற்றை எட்டிப் பார்த்தனன். அவன் அவ்வணங்கின் மீது பரிதாபமுற்றுத் தனது மேல் துணியைக் கொடுத்து அவளையணிந்து கொள்ளச்செய்து அவளது கையைப் பிடித்துத் தூக்கிக் கரைமேலேற்றி விட்டனன். பிறகு தேவயானி அவ்வரசனை நோக்கி 'மகாப்பிரபு! இப்பொழுது நீர் என் கையைப் பிடித்ததனால் இனி யான் மற்றொருவர்க்கு மனையாளாக விருப்பங்கொள்ளேன். என்னைத்தொட்டு தேவரீர் காப்பாற்றியது தெய்வச் செயலேயன்றி வேறில்லை. ஆதலின் தெய்வமே தேவரீரை எனக்குக் கணவனாகக் கொண்டு வந்து விட்டது போலும். அன்றியும் எனக்கு பிராமணன் கணவனாகக் கூடாதென்று ஒரு சாபமும் ஏற்பட்டிருக்கின்றது. அது என்னவெனில்,

பிருகஸ்பதியின் குமாரனான கசன் என்பவன் எனது தந்தையிடம் மிருத ஸஞ்சீவியென்னும் ஒரு அருமையான வித்தையைக் கற்றுக்கொண்டு போயினன். அப்பொழுது யான் அவனை எனக்குக் கணவனாகும்படி வேண்டினேன். குருபுத்திரியாதலின் என்னையவன் மணஞ்செய்து கொள்ள மறுத்தனன். அதனால் யான் சீற்றங்கொண்டு என் தந்தை கற்பித்த வித்தை அவனுக்குப் பயன்படாமற் போகக்கடவதெனச் சாபமிட்டேன். அதற்குப் பிரதியாக அவன் எனக்குப் பிராமணன் கணவனாகாமற் போகக் கடவன் எனச் சபித்தனன். அதனால் தேவரீரே அடியாளுக்கு ஏற்ற கணவன். என்னை ஏற்றுக்கொள்ளுக' என வேண்டினள். அரசன் அதுகேட்டு அந்த விவாகம் சாஸ்திர விரோதமாயினும், அஃதொரு தெய்வச்செயலென்று உணர்ந்து அவளது வேண்டுகோளுக்கு உடன்பட்டு விடைபெற்றுச் சென்றனன்.

அதன் பிறகு தேவயானி கோவென்று கதறிக்கொண்டு தன் பிதாவினிடம் போய் நடந்த வரலாற்றைக் கூறி அவருக்குச்

சீற்றமுண்டாகச் செய்தனள். அது கேட்டு சுக்கிராசாரியர் மிருந்த கோபத்துடன் தனது புரோகிதத்தொழிலை வெறுத்துத் தன் மகளுடன் பட்டணத்தை விட்டுச் சென்றனர். இதைக்கண்ட தேவர்கள் அவரைச் சந்தோஷப் படுத்தித் தம்மிடம் அழைத்துக் கொள்ளக் கருதினர். அதுகண்டு அசுரராஜன் மிகவுமஞ்சி ஓடிச் சுக்கிரனை வணங்கித் தன் பிழையைப் பொறுத் தருளுமாறு வேண்டிக் கொண்டனன். சீரொழுகு சான்றோர் சினம் விற் பிடித்து நீர் கிழிய வெய்த வடுப்போல மாறுமாதலின் அசுரகுரு அக்கணமே கோபந்தணிந்து 'அரசனே! என்னலாவ தொன்று மில்லை. எனது மகளை விட்டுவிட என்னலாவதன்று. ஆதலின் நீ அவளது மனோரதத்தைப் பூர்த்தி செய்க' என்றனர். அசுர ராஜன் 'அங்ஙனமேயாகுக' வென்று கூறி அதற்கு உட்பட்டனன்.

அதுகேட்டு தேவயானி 'எவ்விடத்தில் என்னை எனது தந்தை கன்னிகாதானஞ் செய்து கொடுக்கின்றனரோ அவ்விடத் துச் சர்மிஷ்டை தனது தோழிமார்களுடன் வந்து எனக்கு என் றைக்கும் வெள்ளாட்டி வேலை செய்து கொண்டிருத்தல் வேண் டும்' என்றனள். வேறு விதியின்றிக் காரிய கௌரவத்தை நோக் கிச் சர்மிஷ்டை யங்ஙனமே செய்துவர உடன்பட்டனள். பிறகு சுக்கிராசாரியர் தேவயானியை யயாதி மகாராஜனுக்கு விவாகஞ் செய்து கொடுக்க, அவள் சர்மிஷ்டை முதலான வேலைக்காரிக ளுடன் யயாதியிடம் சென்று வாழ்ந்திருந்தனள்.

இவ்வாறிருக்கையில் ஒருகால் சர்மிஷ்டை புத்திரனைப்பெற விரும்பி ருது காலத்தில் யயாதி மகாராஜனிடம் மோகங்கொண்டு அவனைத் தன்னை மணந்து கொள்ளுமாறு வேண்டினள். அங் ஙனமே அவ்வரசன் அதற்குட்பட்டதனால் அவனுக்குச் சர்மிஷ்டை யிடத்தில் புத்திரர் பிறந்தனர். அதுகண்டு தேவயானி கோபித் துத் தந்தையிடஞ் சென்று முறையிட்டனள். அதனால் அசுரகுரு அவனுக்கு அப்பொழுதே மூப்பு மேலிட்டு மெய் தளர்ச்சியடையச் சாபமிட்டனர்—என்பது ஸ்ரீபாகவதத்தில் கூறப்பட்டுள்ளகதை.

அறுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

## அறுபத்தேழாவது ஸர்க்கம்.

## பூருவுக்குத் தந்தையிடத்துள்ள பக்தி.

அசுரகுரு இங்ஙனஞ் சபித்தவளவில் யயாதி மகாராஜன் தனது யௌவனமழிந்து மூப்பை மேற்கொண்டவனாயினன். அதனால் அரசன் மிகவும் வருத்தமுற்றுத் தன் புத்திரனை யதுவை யழைத்து 'குழந்தாய்! எனக்குச் சிற்றின்பங்களில் ஆசையின்னும் ஒழிந்திலது; அஃதொழிவதற்குள் எனது சரீரத்தில் மூப்புவந்து புகுந்துவிட்டது. இந்த மூப்பை நீ ஏற்றுக்கொண்டு உனது யௌவனத்தை எனக்குக் கொடுப்பாயாகில் யான் இன்னும் சில காலம் வேண்டுமளவு காமபோகங்களை யனுபவித்துத் திருப்தி யடைந்து அதன் பிறகு உனது பருவத்தை உனக்களித்து எனது மூப்பை ஏற்றுக்கொள்ளுகிறேன்' என வேண்டினன். அது கேட்டு யதுவானவன் 'அரசே! நீர் தான் என்னை யடியோடு விரும்புவதில்லையே! உமக்கு வேண்டாப்பிள்ளையான யான் இந்தப் பீடையைப் பெறுவதற்கு மாத்திரம் வேண்டுமோ? உமதருமைப் புதல்வனை பூருவே இதை ஏற்றுக்கொள்ளட்டும்' என்று கூறினன். யயாதி உடனே பூருவையழைத்துத் தனது எண்ணத்தை வெளியிட அவன் 'தந்தையே! இதுவே எனக்குச் சிறந்த பாக்கியமாகும். தேவரீரது கட்டளைப்படி நடக்கச் சித்தமாயிருக்கிறேன்" என்றுகூறித் தனது யௌவனத்தை அரசனுக்களித்து அரசனது மூப்பைத் தான் ஏற்றுக்கொண்டனன்.

இங்ஙனம் யௌவனம் பெற்ற யயாதிமன்னன் ஆயிரக்கணக்கான யாகங்கள் செய்து அநேகமான இன்பங்களுமனுபவித்துப் பலவாண்டளவு பூமியைப் பரிபாலித்து வந்தனன். பின்னர் அரசன் பூருவையழைத்து 'குழந்தாய்! இனி நீ உனது யௌவனத்தைப் பெற்று எனது மூப்பைத் தந்துவிடுவாயாக. நீ என் சொல்லைக் கடவாது நடந்தமையின் யான் உன் விஷயத்தில் மிகவும் சந்தோஷித்து அதன் மிகுதியால் யான் உன்னையே எனது இராஜ்ஜியத்திற்கு அரசனாக அபிஷேகஞ் செய்கிறேன்' என்று கூறித் தேவயானியின் மகனை நோக்கி 'அடே குமாரா! நீ ஒரு ராக்ஷசன்; தந்தை சொல் கேளாத மூர்க்கன். ஆதலின் நீ அர

சினை யிழந்து போகக்கடவாய். உன்னிடம் மிகக் கொடியவர்களான இராக்கதர்கள் அநேகர் தோன்றுவார்கள். இனி நீ சந்திரகுலத்தரசனுகாய்' என்று கூறிப் பூருவுக்குப் பட்டமளித்துத் தான் காடு சென்று தவம்புரிந்து முடிவில் உடலை நீத்துத் தேவலோகஞ் சென்றனன்.

இவ்வாறு யயாதி மகாராஜன் க்ஷத்திரிய தருமத்தை மேற்கொண்டு பொறையுடையோனுகிச் சுக்கிரனிட்ட சாபத்தைப் பொறுத்திருந்தனன். நிமிசக்கரவர்த்தி இங்ஙனம் பொறுத்திலன். லக்ஷ்மணு! அரசர்களிடம் காரியமாக வருகின்றவர்களை வரவேற்காது உபேக்ஷை செய்வதனுலாய தீமை யிப்படிப்பட்டதெனக் கூறினேன். ஆதலின் நிருக ராஜனுக்கு நேர்ந்தவாறு நமக்கு நேராவண்ணம் நாம் நடந்துகொள்ள வேண்டும்'' என்றனன்.

அறுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தேட்டாவது ஸர்க்கம்.

## நாய் ரியாயம் தேடி ராமனிடம் வருதல்.

மறுநாள் பொழுது புலர்ந்ததும் ஸ்ரீராமபிரான் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு ராஜ சபைக்கு வந்து சீரிய சிங்காசனத்தில் வீற்றிருந்தனன். அக்காலையில் பிராமணர்களும், நகரத்து பிரபுக்களும், வசிஷ்டர் முதலிய ரிஷிகளும், தருமமும் நீதியுமுணர்ந்த மந்திரிகளும், பல அரசர்களும் அவ்வரசவையில் வந்து கூடினர். அப்பொழுது ராமன் லக்ஷ்மணனை நோக்கி 'லக்ஷ்மணு! நீ உடனே சென்று வாயிலில் எவரேனும் என்னிடம் முறையிட்டுக்கொள்பவர் இருப்பின் அழைத்து வருக' என்று கூற லக்ஷ்மணன் அங்ஙனமே அரண்மனை வாயிலை நோக்கிச் சென்றனன். ஆனுல் அங்கு எவருமிலர். ஏனெனில் ராமன் அரசாட்சி செய்கையில் உலகத்தில் ஒருவர்க்கும் ஒருவிதமான துன்பமும் உண்டானதில்லை. வியாதிகள் ஒன்றும் தோன்றுவதில்லை, பூமியெங்கும் சகல தானியங்களும் நன்றாக விளைந்து

சகலமான ஓஷதிகளும் சம்பூரணமாக விருந்தன. பாலியத்திலாயினும் யௌவனத்திலாயினும் எவரும் துர்மரணமாயும் அல்பாயுசாயும் மரணமடைவதில்லை. உலகம் முழுமையும் தருமமாகவே பரிபாலிக்கப்பட்டதாதலின், எவர்க்கும் எவ்விதமான பீடையும் உண்டாவதில்லை. அதனால் அரசவைக்கு முறையிட்டுக் கொள்பவர் ஒருவரும் காணப்படார். ஆனதுபற்றி வெளியே சென்ற லக்ஷ்மணன் அங்கொருவரையும் காணாது ராமனிடம் திரும்பிவந்து அவ்வரலாற்றை விளம்பினன்.

இதுகேட்டு ராமன் சந்தோஷமடைந்தானாயினும் மீண்டும் லக்ஷ்மணனை நோக்கி 'தம்பி! நீ சொல்வது சரியே. ஆயினும் ஒருவருமில்லையென்று உபேக்ஷயாயிருக்கலாகாது. அடிக்கடி வெளியே போய் விசாரித்துக்கொண்டு வருவாயாக' என்றனன். அவ்வாறே லக்ஷ்மணன் மறுபடி வெளியிற் சென்று பார்த்த போது அங்கொரு நாய் காத்துக்கொண்டிருந்தது. அது லக்ஷ்மணனைக் கண்டதும் பலதரம் குரைத்து 'அரசனது சமுகத்தில் நான் ஒரு விண்ணப்பஞ் செய்ய வந்திருக்கிறேன்' என வேண்ட, லக்ஷ்மணன் அதனை அரசவைக்கு அழைத்துச் சென்றனன்.

அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## அறுபத்தொன்பதாவது ஸர்க்கம்.

## நாயையடித்த வேதியனை விசாரித்தல்.

ராமன் அந்த நாயை நோக்கி 'நீ இங்கு வந்தகாரியம் யாது? எதற்கும் நீ அஞ்சாது உரைசெய்க' என்று வினவ, மண்டையுடைபட்ட அந்த நாய் ராமனைப்பார்த்து 'சுவாமி! அரசனானவன் தருமத்தினாலேயே இராஜ்ஜியத்தைப் பெறுகின்றனன். அந்த தருமத்தினாலேயே இராஜ்ஜியத்தைப் பரிபாலித்து சகல பிராணிகளுக்கும் சரணியனாகி ஜனங்களுடைய பயத்தைப் போக்குகின்றனன். இதனையுணர்ந்த தேவரீர் அடியேனுடைய விண்ணப்பத்தைக் கேட்க வேண்டுகிறேன். ஸ்வார்த்தசித்தன் என்கிற பிச்சை எடுக்கும் ஒரு பிராமணன் என்னை ஒருகாரணமுமின்றி வீணாய் அடித்து வருத்தினன். இதை விசாரிப்பீராக' என்றது.

உடனே ராகவன் அவ்வேதியனை யழைத்துவருமாறு காவல னுக்குக் கட்டளையிட, அவன் அப்பொழுதே விரைவிற் சென்று அவ்வந்தணனை யழைத்து வந்தனன். ஸ்ரீராமபிரான் அம் மறை யோனை நோக்கி 'பெரியோய்! நீர் ஒரு பிராமணனாயிருக்க, இந்த எளிய நாயை அடித்தது யாதுகாரணம்? இஃது உமக்கு யாது அபகாரஞ்செய்தது? நீர் ஏன் கோபத்தை யடக்கிக்கொள்ளாமல் இத்தகைய காரியஞ்செய்தீர்? கோபத்தைக் கைவிடாதவன், ஸ்நா னம், தானம், ஹோமம், வேதாத்தியயனம், பிதிருதர்ப்பணம் முத லிய நற்செயல்கள் எவ்வளவு செய்யினும் அவ்வளவும் வீணான வையே யாகுமன்றோ?' என்று கேட்டனன்.

இங்ஙனம் ராமன் கூறக்கேட்டு ஸ்வார்த்தசித்தன் என்கிற வேதியன் "ஸ்வாமி! யான் கோபத்தினால் கலங்கிய மனமுடையோ னாகி இந்த நாயை அடித்தேன் என்பது உண்மையே. யான் பிச்சை எடுத்துக்கொண்டு வீதிவழியே வரும்போது இந்தநாய் நடுவழியே நின்று ஒருபுறமு மொதுங்காமல் என்னை உபத்திரவப் படுத்தியது. நான் 'ஒதுங்கு, ஒதுங்கு' என்று பலதரம் சொல்லியும் இது கேளாமல் என்னை எதிர்த்து நின்றமையால் நான் பசியாலும் களைப்பாலும் கோபமதிகரித்தவனாகி இந்த நாயைப் புடைத்து விட்டேன். யான் செய்தது பெரிய குற்றமே. தகுந்த தண்டனை விதித்தருள்க" என மொழிந்தனன்.

வேதியன் விண்ணப்பஞ் செய்ததைக் கேட்ட ராமச்சந்திரன் சபையிலுள்ள பெரியோர்களை நோக்கி அவ்வேதியனுக்கு விதிக்க வேண்டிய தண்டனை யின்னதென ஆராய்ந்துரை செய்யும்படி வேண்டினன். அதுகேட்டு நீதிசாஸ்திரமும் ராஜதருமமுமுணர்ந்த அப்பெரியோர்கள் 'அரசே! பிராமணர்களுக்கு வதைதண்டனை விதிக்கலாகாதென்று சாஸ்திரங்களில் சொல்லி யிருக்கிறது' என் றனர். அக்காலையில் அந்த நாய் ஸ்ரீராமபிரானை நோக்கி 'அரசே! தேவரீர் அடியேனிடத்து அருள்புரியத் திருவுள்ளமாயின், யான் கேட்டுக்கொள்வதைச் செய்விக்க வேண்டுகிறேன். இந்த பிரா மணருக்குக் குலபதி யென்கிற தருமபரிபாலனாதிகாரம் அளிக்க வேண்டுகிறேன்.' என்று கேட்டுக்கொண்டது. அதனைக்கேட்ட

காகுத்தன் அங்ஙனமே அவ்வந்தணர்க்கு அவ்வதிகாரத்தில் அபிஷேகஞ்செய்வித்தனன். தனக்குக்கிடைத்த மேலான அதிகாரத்தினுல் அவ்வந்தணன் மிகவும் மகிழ்ச்சிகொண்டு யானைமீதேறி அனைவராலும் பூஜிக்கப்பட்டவனுகி, ஆனந்தமாகச் சென்றனன்.

இங்ஙனம் குற்றம்செய்த பிராமணனுக்கு உத்தமமான அதிகாரமளித்தது கண்டு ஸ்ரீராமனது மந்திரிகள் வியப்புற்றவர்களாகி ராமனை நோக்கி 'ஸ்வாமி! இந்தக் குற்றவாளிக்கு மேலான பதவியன்றோ அளிக்கப்பட்டது. இதன்கருத்துயாது?' என விண்ணப்பஞ் செய்தனர். ஸ்ரீராமபிரான் அவர்களைப் பார்த்து 'நீங்கள் நீதிசாஸ்திரம் உணர்ந்திலீர் போலும். இதனுண்மையை இந்த நாய் நன்குணர்ந்திருக்கின்றது. இதுவே இதை விளங்கக் கூறும்! நீவிர் கருத்துடன் கேட்டுணர்க' எனமொழிந்து அதன் வரலாற்றை யாவர்க்கும் நன்கு எடுத்துரைக்குமாறு நாய்க்குக் கட்டளையிட்டனன். உடனே அந்தநாய் சொல்லத் தொடங்கியது.

'ஸ்வாமி! அடியேன் பூருவத்தில் ஒரு குலபதியாகித் தருமாதிகாரி பதம் பெற்றிருந்தேன். அக்காலையில் அடியேன் தேவபூஜைகளிலும், பிராமண பூஜைகளிலும் மிகுந்த அன்னத்தை போஜனஞ்செய்வேன். தேவதாசிகளுடனும் தேவதாசர்களுடனும் கூடிக் களிப்புற்றிருப்பேன். தேவதிரவியங்களைக் கருத்தாகக் காப்பாற்றினேன். அன்றியும் வினயமும் நல்லொழுக்கமு முடையவனுகி எல்லாப் பிராணிகளுக்கும் நன்மையையே நாடிவந்தேன். அக்காரணம்பற்றி அடியேனுக்கு இந்த கோரமான அவஸ்தையும் அதமமான ஜன்மமும் கிடைத்தது. கோபங்கொண்ட பிராமணருக்கும், தருமநிலை தவறித் தீமையிழைக்கத் துணிந்த வேதியர்க்கும் இதே கதிதான். ஹே ராகவ! சினங்கொண்டவனும், ஜீவகாருணிய மில்லாதவனும், அறிவில்லாத மூடனும் எழேழு ஜன்மமும் தன்குலமழியுமாறு தீமையைத் தேடிக்கொள்ளுகிறுன். ஆதலின் எவனும் எவ்விதமான நிலைநேர்ந்தகாலத்திலும் தருமாதிகாரஞ் செலுத்தலாகாது.

எவனெருவன் தேவஸ்தானங்களுக்கும், பசுபரிபாலனஸ்தானங்களுக்கும் பிராமண ரக்ஷணஸ்தானங்களுக்கும் அதிகாரி

யாக விருக்கின்றனனோ அவன் தனது புத்திரர்களுடனும் பந்துக்களுடனும் நரகத்தில் வீழ்வது நிச்சயம். எவன் பிராமணர்களது பொருளேயும், தேவஸ்தான திரவியத்தையும், ஸ்திரீகளின் செல்வத்தையும், சிறுபிள்ளைகளின் தனத்தையும் அபகரிக்கின்றனனோ, எவனொருவன் தானஞ்செய்து கொடுத்துவிட்டதை மறுபடி பறித்துக்கொள்ளுகின்றனனோ அவன் தன்னிஷ்டர்களுடனே விநாச முறுவது நிச்சயம்' என விளம்பியது.

அப்பால் அந்த நாய் ராமனிடம் விடைபெற்றுக்கொண்டு வெளியே சென்றது. அது நீச ஜாதியில் பிறந்ததாயினும் பூர்வ ஜன்ம ஸ்மரணமுடையதாகிக் காசிக்ஷேத்திரஞ் சென்று அவ்விடத்துப் பிராயோபவேசஞ்செய்து உடலை விட்டது.

**அறுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## எழுபதாவது ஸர்க்கம்.

## கழுகு கோட்டான்களுடைய வழக்கை விசாரித்தல்.

அச்சமயம் ஒரு காட்டிலிருந்து ஒரு கழுகும் கோட்டானும் விவாதப்பட்டு ராமனிடம் வந்து நியாயம் வழங்கும்படி வேண்டிக்கொண்டன. கலகத்திற்குக் காரணமென்னவெனில், கெடுமதியுடையதான கழுகு கோட்டானது கூட்டிற்குச்சென்று அது தன்னுடையதென்று சொல்லி அதனுடன் போராடத்தொடங்கியது. கழுகு ராமனை நோக்கி 'மண்டலேச்வரா! அடியேன் நெடுநாளாகக் குடிபுகுந்து வசித்து வருகிற எனது இருப்பிடத்தை இந்தக்கோட்டான் தனதென்று சொல்லி வலியவந்து வாதுசெய்கின்றது. இதுவிஷயத்தில் எனக்கு நீதியளிக்க' என்று கூறியது.

அப்பால் கோட்டான் சொன்னதாவது' ராகவா! தேவரீர் சர்வலோக சரணியனான ஸ்ரீமந்நாராயணனேயன்றோ? இது அடியேனுக்கு நன்கு தெரியும். அடியேன் விஷயத்தில் தகுந்தபடி நியாயமளிப்பீராக. ராஜனே! இந்தக்கழுகு எனது கூட்டினுள் வந்து புகுந்து எனக்குப் பலவிதமான வருத்தத்தை யுண்டாக்கு

கின்றது. இதனைத் தீர விசாரித்தருளுக?' என்று சொல்லி முறையிட்டது.

ராகவன் முதலில் கழுகை நோக்கி 'நீ இந்தக் கூடுகட்டிக் கொண்டு இதில் எத்தனை வருஷகாலமாக வசித்துவருகின்றனை?' உள்ளதை உள்ளவாறு உரைசெய்க' என்று வினவினன். அது கேட்டுக் கழுகு 'ராமா! இப்பூமியில் மானிடர் உற்பத்தியாகி எங்கும் எப்பொழுது பரவினர்களோ, அன்றுதொட்டு இது எனது வீடாகவே யிருக்கின்றது' என்றது. பிறகு கோட்டான் ராமனைப்பணிந்து ராஜாதிராஜனே! இப்பூமியில் எப்பொழுது பாதவங்கள் செழித்து வளரத்தொடங்கினவோ, அக்காலந் தொடங்கி இது எனது இல்லமாயிருக்கின்றது' எனக்கூறியது.

அப்பறவைகள் கூறியதைக் கேட்ட இராமபிரான் சபையோர்களை நோக்கி அவ்வழக்கின் நுட்பத்தையறிந்து உரைக்குமாறு பணித்தனன். அதனைச் செவியுற்ற மந்திரிகள் 'அரசே! கோட்டான் கூறியதே உண்மையெனத் தோன்றுகின்றது. கழுகு வீணான வாதஞ் செய்கின்றது. இதற்கு தேவரீரே பிரமாணம். சகலமான பிரஜைகளும் அரசனையே பற்றினவையாகும்' என மொழிந்தனர்.

இவ்வாறு அமைச்சர்கள் உரை செய்ததைக் கேட்டு ஸ்ரீராமபிரான் அவர்களை நோக்கி 'மந்திரிகாள்! இதைப்பற்றிய புராண கதை யொன்றுளது. உரைக்கின்றேன் கேளுங்கள். ஆதியில் இப்பூமிதேவி லக்ஷ்மியுடன் கூடி ஸ்ரீ மகாவிஷ்ணுவினது திருவுதரத்தினுட்புகுந்தனள். அவ்வாறு உலகங்களனைத்தையும் தம் முதரத்தினுட்கொண்ட ஆதிபுருஷனான நாராயணன் அலைகடல்மீது அனேகமாண்டளவு அறிதுயிலமர்ந்தனன். அக்காலையில் பிரமதேவன் அம் மகாவிஷ்ணுவினது திருவுந்தியிற் பூத்த பொற்றாமரை மலரின் வழியே வெளித்தோன்றி மகா யோகியாகி முதலில் இப்பூமியையும் அதன்மீது மாங்களையும் மலைகளையும் படைத்து அப்பூமியைச் சுற்றி வாயுவைச் சிருஷ்டித்தனன். அப்பால் அதில் மானிடர்களும் மிருகங்களும் சர்ப்பஜாதிகளுமான அநேகமாயிரம் உயிர்களைப் படைக்கலாயினன்.

அக்காலையில் நான்முகனது சுரோத்திர மலத்தினின்றும் மதுகைடபர்களென்னும் இரண்டு அசுரர்கள் தோன்றி மிகவும் பயங்கரமாக அவ்வயன்மீது பாய்ந்தனர். அது கண்டு பிரம தேவன் நடுநடுங்கி மிகப் பெரிய கூச்சலிட்டனன். அக்கணமே ஸ்ரீ மகாவிஷ்ணு அங்குத்தோன்றி அத் தைத்தியர்களை எதிர்த் துத் தனது சக்கரத்தினால் அவர்களை மாய்த்தனர். அவர்களது உடலினின்று மொழுகிய மேதஸ் என்கிற நிணநீர் முதலியவை இப்பூமி முழுவதும் பாய்ந்து பரவின. அதன் பின்னர் ஸ்ரீ விஷ்ணு தேவன் இப் பூமியை மீண்டும் மிகப் பரிசுத்தமாக்கி எவ்விடத் தும் மரங்களும் பற்பலவிதமான பயிர் பூண்டுகளும் அநேகமான ஓஷதிகளும் விசேஷமாக விருத்தியடையும்படி செய்தனர். மது கைடபர்களின் மேதஸ்ஸினது நாற்ற மெங்கும் பரவியதுபற்றி இப்பூமிக்கு மேதினியெனவும் ஒரு பெயர் வழங்கலாயிற்று. ஆத லின் இது கழுகினது வீடன்று, கோட்டானது இல்லமேயென நான் நிச்சயிக்கின்றேன். இக்கழுகு மற்றொருவனுடைய மனையை மோசமாகக் கைக்கொள்ளக் கருதுகின்ற கொடும்பாவியே யாகும்' என்று கூறினன்.

அச்சமயம் ஆகாயவாணி உரத்த குரலில் "ஹே ரகுகுல நாதா! முன்னரே தபோ பலத்தினால் தகிக்கப்பட்டிருக்கின்ற இப்பறவையை (கழுகை) மீண்டுமொருதரம் வதை செய்யா தருள்க. இது முன் ஜன்மத்தில் பிரம்மதத்தனெனப் பெயர் பூண்ட ஓர் அரசனாய் இருந்தது. அவ்வரசனது வீட்டிற்கு ஒரு சமயம் கௌதமனென்னும் முனிவர் போஜனஞ் செய்யுமாறு எழுந் தருளினர். அந்தப் பிரமரிஷியைக் கண்டவுடன் பிரமதத்தன் மிக்க மகிழ்ச்சிகொண்டவனாகி அவரை நன்கு பூஜித்து போஜனத் திற்கு மாமிசங்களை மிகுதியாக வரவழைத்தனன். அதுகண்டு அம்முனிவர் மிகுந்த கோபங்கொண்டு 'இக்கணமே நீ பிணந் தின் னும் கழுகாகுக' எனச் சாபங் கொடுத்தனர். பிறகு அம்முனிவர் அரசன்மீது அருள் கூர்ந்து 'செந்தாமரைக் கண்ணனான ஸ்ரீ மகா விஷ்ணு இக்ஷுவாகு குலத்தில் ஸ்ரீராமன் எனப் பெயர்பூண்டு அவதரிக்கப் போகின்றனர். அவரது திருக்கரம் உன்மீது

பட்ட மாத்திரத்தில் இந்தப் பாப ஜன்மமொழிந்து புனிதனுகக் கடவை' என்று வாமீந்தனர்'' என்று கூறியது.

அவ்வசரீரி வாக்கைச் செவியுற்று ராமன் வியப்படைந்து அக் கழுகின்மீது கருணை கூர்ந்து தனது திவ்வியமான திருக்காத்தி ஞல் அதனைத் தொட்டுத் தடவிக்கொடுத்தனன். அக்கணமே அக் கோமகன் கழுகு வடிவம்போய் அற்புதமான ஆடையாபரணங்க ளணிந்து திவ்விய ரூபம் பெற்று ராகவனை யடிபணிந்து வணங் கியபின் அவனை வாழ்த்தி விடைபெற்றுக்கொண்டு தன்னிடஞ் சேர்ந்தனன்.

எழுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்தோராவது ஸர்க்கம்

## ஸ்ரீராமபிரான் முனிவர்களுக்கு அபயமளித்தது.

இங்ஙனம் ஸ்ரீராமபிரான் பலவிதமான விவகாரங்களை விசாரித்து அரசு செலுத்தி வருகையில் ஒரு நாள் காலை யமுனு நதிக்கரையில் வாசஞ்செய்கின்ற தவசிகள் பலர் பிருகு புத்திர ரான சியவன முனிவரை முன்னிட்டுக் கொண்டு, மந்திரங்கள் ஜபித்த புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்த பூரண கும்பங்களையும், கனி கிழங்குகளான பற்பல உபகரணங்களையும் கையிலேந்தி, ஸ்ரீராமனது சபையில் வந்து அவனை ஆசீர்வதித்தனர்.

அது கண்டு ராமன் அவர்கள் அளித்த புண்ணிய தீர்த்தங்களை யும் பலவகைப் பழங்களையும் பெற்றுக்கொண்டு, பெருமகிழ்ச்சி யுடன் எல்லோரையும் ஏற்றவாறு உபசரித்து அவர்களுக்கேற்ற ஆசனங்களில் எழுந்தருளியிருக்குமாறு அனுமதியளித்தனன்.

அப்பால் ராகவன் அம்முனிவர்களை நோக்கிக் கை கூப்பிய வண்ணம் ''தபோதனர்களே! அடியேனல் உங்களுக்கு ஆகவேண் டிய காரியம் யாது? மகரிஷிகள் யாது விரும்பினும் அதனைச்செய்து முடித்தற்குச் சித்தமாயிருக்கிறேன். இவ்விராஜ்ஜியம் முழுமை யும், இத்தேகத்தினுள்ளிருக்கும் உயிரும் ஆகிய யாவும் அந்தணர் பொருட்டேயன்றி வேறன்று. இது உண்மையே''என்று கூறினன்.

அதுகேட்டு யமுனைக்கரை முனிவர்கள் யாவரும் 'நன்று நன்று' எனக்கொண்டாடி அம்மன்னவனை நோக்கி 'மண்டலேச்வரா! உனது கருணையே கருணை. இதுகாறும் யாம் இப்புவியில் பூபதிகள் பலரிடஞ் சென்றோம். அவர்கள் எங்களுக்கு இத்தகைய உறுதிமொழி கொடுத்திலர். நீயோ அங்ஙனன்றி, பிராமணர்களிடமுள்ள கௌரவத்தையே முதன்மையாகக் கொண்டு எங்களுக்கு அபயமளித்தனை. ஆதலின் முனிவர்களுக்கு நேர்ந்துள்ள மகா பயத்தைப் போக்கி யாவரையும் நீயே பாதுகாத்தருள வேண்டும்' என்று வேண்டிக் கொண்டனர்.

எழுபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்திரண்டாவது ஸர்க்கம்

## லவணாசுர விஜயம்.

பிறகு அம்முனிவர்கள் ராமனை நோக்கி "ஹே ராமச்சந்திரா! முன் கிருதயுகத்தில் லோலையென்பவளுக்கு மூத்த குமாரனான மதுவெனப் பெயர்பூண்ட மகாசுரன் ஒருவன் இருந்தனன். அவன் தைரிய சௌரிய பராக்கிரமங்களுடன் தருமத்திலும் அதிகமாக ஊற்றங்கொண்டவனாகிப் பல்லாயிரமாண்டளவு சிவபிரானைக் குறித்து அரிய தவம் புரிந்தனன். அதனால் திருப்தியடைந்த முக்கண்ணன் அவனிடம் கருணைகூர்ந்து அவனுக்கு அற்புதமான வரமீந்தனன். அன்றியும் தனது சூலாயுதத்தினுடைய சக்தியை ஆரோபித்துச் சிறந்த வீரியமும் சிறந்த சோதியுமுடையதான சூலமொன்றை அவனுக்களித்தனன்.

பின்னும் அவிர்சடையோன் அவ்வசுரனை நோக்கி "நீ எவ்வளவு காலம் தேவர்களுடனும் வேதியர்களுடனும் விரோதங்கொள்ளாதிருக்கின்றனையோ, அதுவரையுமே இச்சூலாயுதம் உன்னுடையதாகும். மாறுகொள்வாயாயின் உடனே இஃது உன்கையைவிட்டகன்றுவிடும். நீ சிறந்த ஒழுக்கங்களையுடையவனா யிருக்கும் வரையில், உன்மீது எவன் எந்த ஆயுதத்தை எய்தவளவிலும் அவ்வாயுதத்தை இந்தச் சூலாயுதம் சென்று எரித்துச் சாம்பலாக்கி உடனே உன்னிடம் சேர்ந்துவிடும்" என்று அருளிச்செய்தனன்.

இங்ஙனம் கூறின அரனை மதுவென்னு மசுரன் மறுபடி அடி பணிந்து 'தேவ! அடியேனுக்கு மற்றொரு வரமருளல் வேண்டும். அதாவது இவ்வாயுதம் அடியேனுக்கு மாத்திரமன்றி அடியேனது வமிசத்தவர்களுக்கும் உரியதாயிருக்குமாறு அருள் புரிய வேண்டு கிறேன்.' என்று பிரார்த்தித்தனன். அதனைச் செவியுற்ற சிவ பெருமான் 'அங்ஙனம் ஒருபோது மாவதின்று. ஆயினும் யான் உன்னிடம் அதிகமான உவப்புற்றேனாதலின் உனது மைந்தன் ஒருவனுக்கு மாத்திரம் இது ஆயுதமாகக் கடவது. இச்சூலாயுதம் எவ்வளவு காலம் கையிலிருக்கின்றதோ, அவ்வளவு காலம் உனது குமாரன் ஒருவனாலும் வெல்லக்கூடாத வலிமை பெற்றவனாவான்' என மொழிந்து தம்மிருப்பிடஞ் சென்றனன்.

மகாதேவனிடம் இவ்விதமான வரம்பெற்று அவ்வவுணன் சாலக் களிப்பெய்தி மிகச்சிறந்ததான மாளிகையொன்று நிருமா ணஞ் செய்து கொண்டு, அதில் இனிது வாழ்ந்திருந்தனன். இம் மதுவினது மனையாளான கும்பீனஸியிடம் (மாலியவானது பெண் வயிற்றுப் பேத்தி-ராவணனது அரைச்சகோதரி) அவனுக்கு மிகக் கொடியனும் மகா வீரியமுடையோனுமான லவணன் என்னும் புத்திரன் ஒருவன் பிறந்தனன். அவன் சிறு வயது முதற் கொண்டு மகா துஷ்டனாகிப் பாவங்களையே புரிந்து வந்தனன். புத்திரன் இங்ஙனம் துஷ்டனாயிருப்பது பற்றி மது கோபமும் சோகமும் அடைந்தவனாகி அவனிட மொன்றும் பேசமாட்டாமல் தனது சூலத்தை யவன் கையில் கொடுத்துத் தான் பெற்ற வரத் தின் பெருமையையும் அவனிட முரைத்து இவ்வுலகத்தை விட்டு வருண லோகஞ் சென்றனன்.

அன்று முதல் லவணாசுரன் சூலத்தின் மகிமையாலும் தனது இயற்கையான கொடுமையாலும் மூவுலகங்களையும் மிக வருத்து கின்றனன். அதிலும் ஒருதலையாக முனிவர்களையே மிகத் துன் புறுத்துகின்றனன். ராமா! அவனால் நாங்களடைந்து வரும் துன்பத்திற்கு ஓரளவில்லை; இனி நீயே எங்களுக்குத் தஞ்சம். உன்னையன்றி மற்று எவராலும் லவணாசுரனை யடக்க முடியாது.

இனி எங்களைக்காத்து ரக்ஷிப்பது உனது பாரம்.'' என வேண்டி விண்ணப்பஞ் செய்தனர்.

எழுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்து மூன்றவது ஸர்க்கம்.

### சத்துருக்கனன் லவணனை வதைக்க உடன்பட்டது.

முனிவர்கள் இங்ஙனம் விளம்பியதைச் செவியுற்று ராமன் தனது சகோதரர்களனைவரையும் அருகில் அழைத்து 'தம்பிகாள்! இப்பொழுது மதுவனஞ்சென்று வீரனான லவணாசுரனை வதைக்கும் புண்ணியத்தை ஏற்றுக்கொள்ள விருப்பமுடையவர் யாவர்?" என வினவினன்.

உடனே பரதன் எழுந்து 'அண்ணா! இந்தக் காரியத்தை அடியேன் சென்று செய்து தலைகட்டி வருகின்றேன். எனக்குக் கட்டளையிடுக' என்றனன். இது கேட்டு சத்துருக்கனன் சடக்கெனத் தன் சிங்காசனத்தினின்று எழுந்து 'சுவாமி! இந்த பரதன் முன்பே மிகப் பெரிய காரியஞ் செய்திருக்கின்றனன். அதாவது, முன்பு தேவரீர் வனவாச மெழுந்தருளியபோது இவ்வயோத்தியாபுரியைப் பரிபாலிப்பதாகிய பெரிய பாரத்தைத் தாங்கினன். அன்றியும் அக்காலத்தில் இப்பரதன் மரவுரியும் சடைமுடியுமாய்க் காய்கனிகளையே தின்றுகொண்டு நல்ல பாய்படுக்கையின்றிப் பதினான்கு வருடங்கள் பலவிதமான துன்பங்களை யனுபவித்துக்கொண்டு நந்திக் கிராமத்தில் வாசஞ்செய்தனன். ஆதலின் இவனை மீண்டும் கஷ்டப்படுத்துவது தகுதியல்ல. அடியேன் இதோ காத்துக்கொண்டிருக்கின்றேன். அடியேனுக்குக் கட்டளையிட்டருள்க' என விண்ணப்பஞ் செய்தனன்.

இவ்வாறு சத்துருக்கனன் கூறியதைக்கேட்டு ராமன் அவனை நோக்கி 'சத்துருக்கனா! அங்ஙனமே யாகுக. நீயே சென்று லவணாசுரனை வென்று வருவாயாக. ஆயினும் அதனுடன் நில்லாது நீ பின்னுமொரு காரியஞ் செய்ய உடன்படவேண்டும். எவனொருவன் பகைவனை வதைத்தபின் அந்த ராஜ்ஜியத்தில் பிரஜை

களைப் பரிபாலிக்க மற்றொரு அரசனை நியமிக்கின்றிலனோ, அவன் நரகத்திற்கு ஆளாகுவான். ஆதலின் மதுவினது மேலான நகரத்திற்கு ராஜனாக உன்னை இவ்விடத்திலேயே யான் அபிஷேகஞ் செய்துவிடுகிறேன். நீ லவணனை வதைசெய்தபின்னர் அந்த ராஜ்ஜியத்தை அங்கிருந்து நீதிமுறை தவறாமல் நன்கு பரிபாலித்து வருவாயாக. எனது சொல்லை மீறாது இங்ஙனஞ் செய்க. மூத்தோர் சொன்னவாறு செய்தல் இளையோரது கடமையல்லவா? வசிஷ்டர் முதலான முனிவர்களைக்கொண்டு விதிமுறைப்படி யான் இப்பொழுது செய்விக்கும் மகுடாபிஷேகத்தை நீ பெற்றுக்கொள்ளுக' எனக் கட்டளையிட்டனன்.

எழுபத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்து நான்காவது ஸர்க்கம்.

## ஸ்ரீராமபிரான் லவணனை வதைக்கு முபாயமுரைத்தல்.

இங்ஙனமுரைத்த ராமனது வசனங்களைக் கேட்டு சத்துருக்கனன் "அண்ணா! நமது குலத்தில் மூத்தோனிருக்க இளையவன் அரசாளுதல் வழக்கமுண்டோ? அங்ஙனமிருக்க பரதனைவிட்டு அடியேனை அரசனாகச் செய்வது சரியோ? தேவரீருக்குத் தெரியாதது யாதிருக்கின்றது? அடியேனிடம் கருணைகூர்ந்து மூத்தோனிருக்க இளையோன் அரசாளுதலாகிய இந்த அதருமம் அடியேனுக்கில்லாதொழியுமாறு அருள்புரிக" என்றனன்.

ஸ்ரீராமபிரான் சத்துருக்கனனது வார்த்தைகளைக் கேட்டு மிகுந்த சந்தோஷமடைந்து பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய சகலமான பொருள்களும் சேகரிக்கும்படி லக்ஷ்மணனுக்கு ஆஞ்ஞாபிக்க அவனும் அங்ஙனமே செய்தனன். புரோகிதர், ரித்துவிக்குகள், மந்திரிகள், பிரதானிகள், பட்டணத்திலுள்ள பிரபுக்கள், அந்தணர்கள் முதலானோர் அனைவரும் வந்துசேர்ந்ததும் வசிஷ்ட முனிவர் ராமனது விருப்பத்தின்படி சத்துருக்கனனுக்கு முடிசூட்டினர். யமுனாதீர வாசிகளான முனிவர்களெல்லோரும் சத்துருக்கனன் அபிஷேகம் செய்யப்பெற்ற போழ்தே லவணாசுரன் உயிரிழந்தனனென வெண்ணி அகமகிழ்ந்தனர்.

அப்பால் ராமன் சத்துருக்கனனை யெடுத்துத்தன்மடிமீதிருத்தி 'தம்பி! இதோ இந்த அம்பைப்பார். இது பேரோதவண்ணன் பிரளய காலத்துப் பெருங்கடலின்மீது பள்ளிகொண்டிருந்த போது அந்தப் பரம புருஷனுல் படைக்கப்பட்டது. தாமரை யோன் இதனுலேயே தோல்வியடையாது வெற்றி கொண்டனன். தேவாசுரர்களும் இதனைக்கண்ணெடுத்துப் பார்க்க வல்லவரல்லர். அதனுல் இது ஒருவர் கண்ணுக்கும் புலப்படாத பெருமையுடையது. உலகங்களுக்குப் பெரிய விரோதஞ்செய்த துராத்துமாக்களான மதுகைடபர்களிடத்தில் மிகக்கோபங் கொண்டு அவர்களையும் மற்றுமுள்ள ராக்ஷசர்களையும் சங்காரஞ் செய்யும்நிமித்தம் இது சிருஷ்டிக்கப்பட்டது. இதனைப் பிரயோகித்தால் உலகமெங்கும் அலோல கல்லோல மாகுமென்றஞ்சி, இராவண யுத்தத்தில் கூட யான் இதனைப் பிரயோகஞ் செய்யாது காப்பாற்றி வைத்திருக்கிறேன்.

சத்துருக்கனு! அந்த லவணனிடம் சிவபிரானுடைய சூலாயுதம் ஒன்றிருக்கின்றது. அதனை லவணன் தனது மாளிகையில் வைத்துப் பூஜித்துத் தனியே பல திசைகளிலும்சென்று திரிகின்றனன். அவன் சூலாயுதத்தைக் கையில் தரித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் அவனை வெல்ல ஒருவராலு மாகாது. ஆதலின், அவன் கையில் சூலமின்றி வெளியில் சென்றிருக்கும் சமயத்தில் நீ ஆயுதமும் கையுமாக அவனை எதிர்த்துப் போர்புரிவாயாக. வேறு விதமாக அவனை வெல்லுவது அசாத்தியமான காரியம்' என்றனன்.

எழுபத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்தைந்தாவது ஸர்க்கம்.

## சத்துருக்கனன் முன்னதாக சேனைகளை யனுப்புதல்.

பின்னும் ஸ்ரீராமபிரான் சத்துருக்கனனை நோக்கி "தம்பி! நீ யுத்தத்தில் ஆசைகொண்டு எதிர்த்து வருகின்றனையென்பது லவணாசுரனுக்குத் தெரியாத வண்ணம் உனது சேனைகளை முன்னதாக அனுப்பிவிட்டு, அதன் பிறகு லவணனுக்குச் சிறிதும் சந்

தேக முண்டாகாதபடி நீ ஒருவனுகவே வில்லும் கையுமாக மதுவனத்திற்குத் தனித்து விரைந்து செல்வாயாக. அங்ஙனன்றிச் சென்று அக்கொடியவனது கண்ணிலகப்படுவா யாயின் உன்னல் அவனை வெல்லமுடியாது. ஆதலின் இந்தக் கோடை கழிந்து மாரி காலம் துவக்கியவுடன் சென்று நீ அந்த லவணுசுரனை வதைசெய்க. அவனை வெல்வதற்கு ஏற்றகாலம் அதுவேயாகும். ஏனெனில் மாரி காலத்தில் மன்னவர்கள் எவரும் படையெடுத்து வாரார்களென்று அவன் விசாரமொழிந்து திரிவான். முன்னதாக உனது சேனையெல்லாவற்றையும் நீ இந்த மகரிஷிகளுடன் கூட்டியனுப்பி விடுக. மழைபொழிந்து கங்கை பெருக்கெடுக்கு முன்னமே உனது பெரும்படை கங்கை நதியைக்கடந்து அக்கரை சேருமாறு இக்கணமே பிரயாணப்படுத்துக. பின்னர் நீ தனியே வில்லுங் கையுமாகச் செல்வது நன்மையை விளைவிப்பதாகும்'' என்றனன்.

சத்துருக்கனன் ராமனது கட்டளைப்படி அவ்விடம் வந்த முனிவர்களுடனே தனது பெருஞ்சேனையைப் புறப்பட்டுச் செல்லுமாறு திட்டமிட்டு, அம்முனிவர்கள் எவ்விடத்துப் பாசறையிறங்குமாறு விதிக்கின்றனரோ அவ்விடத்து இறங்கியிருக்க வேண்டுமென்றும் விதித்தனன். அப்பால் சத்துருக்கனன் ஒரு மாதகாலம் ராமனுடனே வசித்திருந்து அதன் பின்னரே தான் பிரயாணமாயினன்.

**எழுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

**எழுபத்தாறுவது ஸர்க்கம்.**

## சத்துருக்கனன் மதுவனஞ் செல்லப் பிரயாணப்படுதல்.

இங்ஙனம் பிரயாணமான சத்துருக்கனன் விரைந்து சென்று வழியில் இரண்டு ராத்திரி வசித்து மூன்றுவது நாள் மிகப் பரிசுத்தமான வால்மீகி முனிவரது ஆச்சிரமஞ் சேர்ந்தனன். அம்முனிவர் சத்துருக்கனன் வந்தது கண்டு மிகுந்த சந்தோஷத்துடன் அவனை யுபசரித்து அவன் வந்த காரியத்தையுமறிந்து அவனுக்கு வாழ்த்துக் கூறினர். அப்பொழுது சத்துருக்கனன்

அவரை நோக்கி "சுவாமி! இதோ இவ்வாச்சிரமத்திற்கருகே யாகசாலையொன்று காணப்படுகின்றதே! இஃது எவருடையது?" என வினவ, வால்மீகி விடை கூறலாயினர்.

## கல்மாஷபாதன் கதை.

"குழந்தாய்! உங்கள் முன்னோர்களில் சுதாசர் என்றொரு சக்கரவர்த்தியிருந்தார். அவரது புத்திரரான வீரஹஸர் என்பவர் ஒருநாள் காட்டிற்கு வேட்டையாடச் சென்றனர். அங்ஙனமவர் வேட்டையாடிவருகையில் இரண்டு ராக்ஷசர்கள் வேங்கைவடிவம் பூண்டு அவ்வனமெங்கும் ஓடியாடி அங்குள்ளவிலங்குகளை ஆயிரமாயிரமாய் அடித்துக் கொன்று தின்று அழிக்கக் கண்டனர். அதனாலவர் கோபங்கொண்டு தமது அற்புதமான அம்பினால் அவ்வரக்கர்களில் ஒருவனைக் கொன்றனர். அதுகண்டு மற்றவன் அம்மன்னனை நோக்கி 'அடே பாபி! ஓர் அபராதமும் செய்யாத எனது நற்றோழனை நீ காரணமின்றிக் கொன்றமையால், யான் ஏற்ற சமயத்தில் உன்னிடம் பழி தீர்த்துக்கொள்வேன்' என்று கூறி மறைந்து போயினன்.

இது இங்ஙனமாக அந்த வீரஹஸர் மித்திரஸஹர் எனப்பெயர் பூண்டு ராஜ்ஜிய பார மேற்றுக் கொண்டனர். அவரே இவ்வாச்சிரமத்தருகில் அசுவமேத யாகம் இயற்றினர். வசிஷ்ட முனிவர் அதற்குப் பிரதம குருவாக விருந்து நடப்பித்தனர். அவ்வேள்வி முற்றுப்பெற்ற வளவில் அந்த அரக்கன் அரசனிடம் பழிதீர்த்துக் கொள்ள வெண்ணித் தான் வசிஷ்ட முனிவரைப்போல் வேடம் பூண்டு அரசனருகிற் சென்று 'வேந்தே! இப்பொழுதெனக்கு ஊனுணவில் ஆசையுண்டாயிருக்கின்றமையால் நீ சீக்கிரம் எனக்கு போஜனமளிக்க' என வேண்டினன்.

அதுகேட்டு அரசன் சமையல் வேலையில் தேர்ந்தவனை பாசடனயழைத்து 'நமது குருவிற்கு திருப்தியுண்டாகுமாறு வெகு சீக்கிரத்தில் நீ ஊனுணவு சித்தஞ்செய்க' எனக்கட்டளையிட்டனன். அத்தருணத்தில் அவ்வரக்கனே சமையல்காரனாக வேஷம் பூண்டு வந்து அங்ஙனமே செய்வதாக உடன்பட்டு அக்கணமே நரமாமிசஞ் சமைத்து அரசனுக் களித்தனன்.

இராக்கதன் கொணர்ந்த நர மாமிச போஜனத்தை அரசன் வசிஷ்ட முனிவர்க்குப் பரிமாறலாயினன். தனக்கு வேண்டுமென்றே அரசன் நரமாமிசத்தை யுணவாகப் படைத்தனனென்று கருதிய வசிஷ்டர் அவ்வரசனைநோக்கி 'நீ என்றைக்கும் ஊனுணவையே யுண்ணும் புலையனாகுவை.' எனச் சாபமிட்டனர்.

அதுகேட்ட மன்னவன் அக்கணமே அம்முனிவர்க்குப் பிரதி சாபம் கொடுக்கக் கையில் தண்ணீரை எடுத்தபோது அவனது மனைவியான மதயந்தி யென்பவள் மன்னனை நோக்கி 'ராஜனே! தேவர்களுக் கொப்பான மகிமையுடைய நமது குருமூர்த்தியை தேவரீர் சபிக்கத்துணிவது உசிதமன்று' என இதமுரைத்தனள். வேந்தன் அது கேட்டு ஆசிரியரைச் சபிக்குமாறு கோபத்துடன் கையிலெடுத்த தீக்குணமுடைய தண்ணீரைத் தனது தாளின் மீதுபெய்தனன். அதனால் அவ்வேந்தரது பாதம் வெம்பிப்போக, அது முதலாக மித்திர ஸஹராஜனுக்குக் 'கல்மாஷ பாதர்' எனப் பெயர் பிரசித்தமாகியது.

அப்பால் அவ்வரசன் தன் மனையாளுடன் வசிஷ்டரை வணங்கி, பிராமணவேஷம் பெற்று வந்த பிசிதாசனன் முன் சொன்ன வார்த்தையை அவரிடம் விண்ணப்பஞ்செய்தனன். அதனைச் செவியுற்ற வசிஷ்டபகவான் அவையாவும் அரக்கனது சூதினால் நேர்ந்தவெதன ஞான திருஷ்டியாலுணர்ந்து 'அரசனே! உன்மீது பிழையில்லையென்பதுண்மையே. ஆயினும் எனது சாபம் ஒரு பொழுதும் வீணாவதன்று. ஆனால் பன்னீராண்டு கழிந்த பின்னர் உனக்கு இந்தச்சாபம் நீங்கிவிடும். அதன்பின் முன் நுகர்ந்த துன்பங்கள் அனைத்தையும் நீ மறந்துவிடுவாய்' என அருளிச்செய்தனர். அங்ஙனமே அவ்வரசன் அச்சாபத்தை யனுபவித்து, சாபந்தீர்ந்து பழையபடி ராஜ்ஜியபாரம் பெற்றுப் பிரஜைகளைப் பரிபாலிக்கலாயினன். அந்தக் கல்மாஷ மகாராஜன் அச்வமேதஞ் செய்த யாகசாலையே இவ்வாச்சிரமத்திற்குச் சமீபத்தில் விளங்குவது" என்று கூறினர்.

எழுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

## எழுபத்தேழாவது ஸர்க்கம்.

## குச லவர் ஜனனம்.

சத்துருக்கனன் வால்மீகி முனிவரது ஆச்சிரமத்தில் தங்கியிருந்த அதே இரவில் சீதாதேவி இரண்டு குமாரர்களை ஈன்றனள். இதனைச் செவியுற்ற வால்மீகி முனிவர் மிகுந்த மகிழ்ச்சியுடன் எழுந்து சென்று பாலசந்திரன் உதயமானதுபோல் மிக்க ஒளிபெற்று விளங்குகின்ற ராஜ குமாரர்களைக் கண்டு களிப்புற்று துஷ்டதேவதைகளும், கொடிய ரக்ஷசகளும் குழந்தைகளை யணுகாதபடி அவைகளுக்கு ரக்ஷைசெய்யலாயினர்.

எங்ஙனமெனில் குசம் என்கிற தருப்பைப் புல் ஒருபிடி எடுத்து அதை இரண்டாக இடையே தரித்து, அவையிரண்டிலும் ரக்ஷாமந்திரம் ஜபித்து அதன் நுனியாகிய குசத்தினால் மூத்த குமாரனையும், அடியாகிய லவத்தினால் இளைய குமாரனையும் துடைத்துப் புனிதராக்குமாறு வயதுமுதிர்ந்த தவசிகளிடம் அவற்றைக்கொடுத்தனர். வயது முதிர்ந்த ஸ்திரீகள் அவற்றைப் பெற்றுக்கொண்டு சென்று அங்ஙனமே துடைத்துப் பிள்ளைகளுக்கு ரக்ஷைசெய்தனர். இதுவே அக்குமாரர்களுக்கு ஜாதகருமமாகியது. அக்குழந்தைகளில் மூத்தவன் குசத்தினால் ரக்ஷைசெய்யப்பட்டனனாதலின் அவன் குசன் எனவும், இளையவன் லவத்தினால் ரக்ஷைசெய்யப்பட்டமையின் லவன் எனவும் பெயர் பெற்றுப் பிரசித்தமாக வாழ்வார்களென அம்முனிவர் அப்பொழுதே நிச்சயஞ் செய்துகொண்டனர்.

இச்செய்தியைக் கேள்வியுற்ற சத்துருக்கனன் மிகுந்த மகிழ்ச்சியுடன் சீதை பிரசவித்தவிடமான பர்ணசாலையிற் சென்று ஜானகியாரை நோக்கி 'தாயே! தெய்வாதீனமாய் இத்தருணத்தில் அடியேன் தேவரீரைச் சேவிக்க நேரிட்டது அடியேனது பாக்கியமே யாகும்' என்று கூறி சந்தோஷப்படுத்தினன்.

இங்ஙனம் அவன் அகமகிழ்ந்திருக்கையில் மாரிகாலத்தைச் சேர்ந்த அந்த ஆவணி மாதத்திரவு இனிதாகக் கழிந்தது. அப்பால் மறுநாள் காலை சத்துருக்கனன் எழுந்து காலைக் கடன்களை

முடித்து வால்மீகி முனிவரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு மேற்றிசை நோக்கிப் புறப்பட்டு ஆங்கு கங்கைக்கரையில் காத்திருந்த பார்க்கவர் முதலான முனிவர்களுடன் கூடி ஏழு இரவுகள் விநோதமாக வழி நடந்து எட்டாவது நாள் யமுனாதீரம் போய்ச் சேர்ந்தனன். பிறகு அவ்வரசிளங்குமரன் அங்குள்ள முனிவர்களது ஆச்சிரமத்தில் அன்றிரவு தங்கினன்.

எழுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்தேட்டாவது ஸர்க்கம்.

### லவணனது பிரபாவத்தை சியவன முனிவர் கூறுதல்.

அன்றிரவு முனிவர் தலைவரான சியவன முனிவர் சத்துருக்கனனை நோக்கி "குழந்தாய்! முன் ஒரு காலத்தில் அயோத்தியாபுரியில் யுவனாச்வனென்று ஒரு ராஜனிருந்தனன். அவனது மைந்தனை மாந்தாதாவென்பவன் கீர்த்திப் பிரதாபங்களிலிணையற்றவனாகி மூவுலகங்களிலும் புகழ்பெற்று வாழ்ந்தனன். அம்மன்னவன் இம்மண்ணுலகம் முழுவதையும் தனது அதிகாரத்திற்கு உட்படுத்தி, இங்கிருந்து தெய்வலோகத்தையும் வெற்றிகொள்ள முயற்சி கொண்டனன். அதுகேட்டு தேவேந்திரனும் மற்றுமுள்ள தேவர்களும் அஞ்சி நடுங்கினர். அக்காலையில் தேவலோகத்தின்மேல் படையெடுத்து வந்த மாந்தாதாவை இந்திரன் நோக்கி 'ஹே! வீர! பூலோகத்திலேயே உனது ஆட்சி முழுமையும் செல்லாதிருக்க, அதனை வசமாக்கிக்கொள்ளாது நீ தேவராஜ்ஜியத்தைக் கைக்கொள்ளக் கருதுவது நோக்கத் தோற்றவில்லையே! பூமி முழுதும் வசப்படுத்திக் கொண்டபின் நீ தேவலோகத்தை வெற்றிகொள்ள விரும்புவது அழகாகும்' என உரைத்தனன்.

அதுகேட்டு மாந்தாதா இந்திரனை நோக்கி 'சுரேந்திரா! இப்பூமியில் எனது ஆணை செல்லாதவிடம் எங்குளது?' என வினவ, விண்ணவர் கோன் அரசனைப் பார்த்து 'மதுவனத்திலுள்ள லவணாசுரனென்பவன் சுதந்திரமாக அரசாட்சி செலுத்து

கின்றனன். அவன் உனது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடக்கின்றிலன்' என விளம்பினன். உடனே மாந்தாதா வெட்கித் தலை குனிந்து யாதொன்றும் இயம்பத் தோன்றாது இந்திரனை வணங்கி விடைபெற்று மிகுந்த கோபத்துடன் மீண்டும் பூலோகம் வந்து சேர்ந்தனன்.

அப்பால் அவ்வரசன் பெருஞ் சேனைகளைத் திரட்டிக் கொண்டு மதுவனம் நோக்கிச் சென்று லவணாசுரனிடத்து ஒரு தூதனையனுப்பினன். அத்தூதன் லவணனிடஞ் சென்றதும் அவனது பேச்சைக் கேட்கப் பொறாத லவணாசுரன் அத்தூதனைக் கொன்று புசித்து விட்டனன். சென்றதூதன் நெடுநேரமளவும் திரும்பி வாராமை கண்டு மாந்தாதா லவணாசுரனைச் சுற்றி நாற்புறமும் அம்புமாரி பொழியலாயினன். அதுகண்டு அவ்வவுணன் நகைத்துத் தனது சூலாயுதத்தைப் பிரயோகஞ் செய்துவிட, அவ்வாயுதம் ஜொலித்துக்கொண்டு சென்று சகலமான சேனைகளுடன் மாந்தாதாவை யெரித்து மறுபடி லவணாசுரனது சன்னிதானம் வந்து சேர்ந்தது.

சத்துருக்கனா! லவணாசுரனது சூலத்தின் பலமானது இத்தன்மையதென அளவிடக்கூடாததாகும். ஆயினும் நீ நாளைக் காலையில் அவ்வவுணனைக் கொலை செய்வது திண்ணம். அவன் கையில் ஆயுதமற்றிருப்பானாயின் அழிந்து படுவான்; நீயும் வெற்றி பெறுவாய் சூலம் அவன் கையிலிருக்குமாயின் அவனை வதைப்பது அசாத்தியமான காரியம். இக்காரியத்தை நீ செய்து முடிப்பாயாயின் சகல உலகங்களுக்கும் நீ நன்மை விளைவித்ததாகும்" என்று கூறினர்.

எழுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எழுபத்தொன்பதாவது ஸர்க்கம்

## லவணாசுரனுடன் போர்.

மறுநாள் பொழுது விடிந்ததும் சத்துருக்கனன் முனிவரிடம், விடைபெற்றுக்கொண்டு யமுனை நதியைக் கடந்து வந்து

மதுபுரத்துக் கோட்டை வாயிலில் வில்லும் கையுமாகக் காத்து நின்றனன். அன்று நடுப்பகலில் கொடுஞ் செய்கையுடையோனான அவ்விராக்கதன் அநேகமாயிரம் பிராணிகளைப் பெருமூட்டையாகத் தோளிலே சுமந்துகொண்டு திரும்பி வந்தனன் வருகையில் கோட்டை வாயிலிலேயே சத்துருக்கனன் ஆயுதபாணியாக நிற்பதுகண்டு 'அடே! நீ யாரடா? உன்னைப் போன்ற ஆயுதபாணிகளை யான் இதுவரை ஆயிரமாயிரமாகக் கொன்று தின்று இருக்கிறேன். விட்டிலைப்போல் என் வலியவந்து நெருப்பில் வீழ்ந்து மாள்கின்றனை?' என்றிங்ஙனம் கூறி ஆர்ப்பரித்தனன்.

இதுகேட்டு சத்துருக்கனன் கோபத்தினால் கண்கள் சிவந்து அந்தப் பிசிதாசனை நோக்கி "துஷ்ட! யான் ராமனுக்குச் சகோதரன்; சத்துருக்களைக் கொலை செய்பவனாதலின் சத்துருக்கனன் எனவே பெயர் பெற்றவன். அமராட ஆவல்கொண்டிருக்கும் என்னுடன் நீ எதிர்த்துப் போர்புரிவாயாக" என்றனன்.

சத்துருக்கனனது வார்த்தையைக் கேட்ட அவ்வவுணன் அவனை நோக்கி "மந்த மதியுடைய மானிடப் பதரே! நீ தெய்வாதீனமாக இப்பொழுது என்னிடம் வந்து சிக்கிக்கொண்டனை. ஒரு பெண் நிமித்தமாக உனதண்ணன் எனது மாமனான ராவணனை வதைத்த காலத்தில் மானிடப் பூச்சிகளுடனே நாமெதிர்த்து அமராடுவது நமக்குத் தகுதியல்லவென்று அலக்ஷியத்தினால் ராமனை நான் இதுவரையில் பொறுத்திருந்தேன். முற்காலத்தவர், இக்காலத்தவர், வருங்காலத்தவர் ஆகிய மானிடர்களனைவரும் என் கையில் அடியுண்டிறந்தவர்களேயாவர். பலரைப் புல்லினும் புன்மையானவரென்றெண்ணி அலக்ஷியமாய் அவமதித்து ஓடிப்போகச் செய்தேன். சற்றுப் பொறு; கடுகச் சென்று ஆயுதங் கைக்கொண்டு நீ வேண்டியவாறு யுத்தஞ்செய்ய ஆயத்தமாக வருகின்றேன்" என்றனன்.

லவணாசுரன் இங்ஙனம் கூறக்கேட்ட சத்துருக்கனன் ஆயுதமெடுத்துவரக் கருதிய அவ்வசுரனை நோக்கி "அடே! ராக்ஷச! என் கண்ணிலகப்பட்ட பிறகு இனி யான் உன்னை அரைக்கணமும் உயிரோடு புறஞ்செல்ல விடுவேனோ? மதிமயக்கத்தால்

அங்ஙனம் எதிரிக்கு இடங்கொடுக்கின்றவன் தான் சாக மருந்து கொள்பவனே யாவான்; ஆதலின் இப்பொழுதே மூவுலகங்களுக்கும் பகைவனுன உன்னை யமனுலகமனுப்பப் போகின்றேன்" என்று கோபத்துடன் மொழிந்தனன்.

எழுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பதாவது ஸர்க்கம்.

## லவணசுர வதம்.

உடனே லவணசுரன் கோபமுண்டு மிகப் பெரிய மரமொன்றைப் பெயர்த்து சத்துருக்கனனது மார்பை நோக்கி விடுத்தனன். சத்துருக்கனன் அதைக் கூரான அம்புகளால் பல துண்டங்களாக்கி வீழ்த்தினன். தான் விடுத்த மரம் வீணனது கண்டு லவணன் மீண்டும் பல பாதபங்களைப் பெயர்த்துச் சத்துருக்கனன் மீது சொரியலாயினன். அவற்றையெல்லாம் லக்ஷ்மணனுஜன் நான்கு பகுதிகளைப் பெய்து சேதித்துத் தள்ளி அவன்மீது சரமாரி பொழிந்தனன். அதனுலவன் சிறிதும் துன்புறுதவனுகிப் பெருநகை நகைத்து ஒரு பெரிய மலையைப் பெயர்த்தெடுத்துச் சத்துருக்கனனது சென்னிமீது புடைக்க அதனுலவன் சோர்ந்து வீழ்ந்து மூர்ச்சையடைந்தனன். இதுகண்டு ரிஷிகள், தேவர்கள், கந்தருவர், ஆகிய பலரும் 'ஹா! ஹா!' வெனக் கூவிக் கதறினர்.

லவணசுரன் சத்துருக்கனன் தரையில் மூர்ச்சித்து வீழ்ந்தது கண்டு அவன் இறந்தானென நினைத்து வீட்டினுள் புகவாயினும் சூலம் கைக்கொள்ளவாயினும் கருதாது, தான் தேடிக் கொணர்ந்த புசிப்புக்களைப் புசிக்கலாயினன். இங்ஙனமாக ஒரு முகூர்த்தகாலத்தில் மூர்ச்சை தெளிந்தெழுந்து சத்துருக்கனன் முனிவர்களால் போற்றிப் புகழப்பெற்றவனுகிப் படைக்கலங் கைக்கொண்டு, தனக்கு ராமனளித்த அற்புதமான அம்பைக் கையிலெடுத்துக்கொண்டு லவணனை எதிர்த்து நின்றனன்.

அதனுல் சகல உலகங்களும் நடுங்கலாயின. அமரர்கள் அசுரர்கள், கந்தருவர், முனிவர், நாகர் முதலியோர் அதன்

ஜாஜ்வல்லியமான தேஜஸைக்கண்டு அஞ்சி நடுங்கிப் பிரமதேவ னிடஞ்சென்று 'சுவாமி! இதென்ன கொடுமை? உலகமழியுங் காலமோ? யுகப்பிரளயம் நெருங்கியதோ? இத்தனை கொடிய தோற்றத்தை இதுவரை யாம் கண்டதுமில்லை கேட்டதுமில் லையே! இதன் காரணமென்ன?' என்று வினவினர்.

பிரமதேவன் அவர்களை நோக்கி 'தேவர்காள்! இப்பொழுது லவணாசுரனைக்கொல்லும் பொருட்டு சத்துருக்கனன் ஓர் கணை யைக் கையிலெடுத்தனன். அது ஜகந்நாதனுன மகா விஷ்ணு வினது பழமையான பாணம். அது சோதிமயமாகச் சொலிக்கு மியல்புடையதாதலின் நீவிர் அனைவரும் இங்ஙனம் அஞ்சவேண் டியதாயிற்று. இவ்வம்பினுல் மகாவிஷ்ணு முன்பு மதுகைடபரை மாய்த்தனர். இதன் மகிமை ஒப்புயர்வற்றது. சீக்கிரம் செல் லுக. வீரனுன சத்துருக்கனன் லவணனை வதைக்கின்ற விநோ தத்தைக் காண்பீர்கள்' என்றனர்.

நாமகள்கேள்வன் இங்ஙனம் நவின்றது கேட்டு வானத் தவர்களனைவரும் சத்துருக்கனனும் லவணாசுரனும் சமர்புரியு மிடஞ்சென்று சத்துருக்கனனது கரத்தில் விளங்கும் ஒப்புயர் வற்ற அம்பைக் கண்ணுற்றனர். அச்சமயம் சத்துருக்கனன் தனது கோதண்டத்தைக் காதளவுமிழுத்து லவணாசுரனது மார்பை நோக்கி வாளியை விடுத்தனன். அது உடனே அவ் வரக்கனது உடலைப் பிளந்து கொண்டு பூமியிற் புகுந்து தேவர்க ளனைவராலும் புகழ்ப்பெற்றதாகி மீண்டும் சத்துருக்கனனிடம் வந்து சேர்ந்தது.

இங்ஙனம் சத்துருக்கனனது சரத்தினுல் லவணாசுரன் வஜ்ஜிராயுதத்தினுல் அடியுண்டமலையெனவீழ்ந்தவளவில், தவனிட மிருந்த சிவபிரானது சூலமானது தேவர்களனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே மகாதேவனிடம் போய்ச்சேர்ந்தது. சகலமான தேவர்களும் சத்துருக்கனனைப் போற்றி வாழ்த்தினர்.

**எண்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.**

## எண்பத்தோராவது ஸர்க்கம்.

## சத்துருக்கனன் மதுராபுரியை ஸ்தாபித்தல்.

அப்பொழுது தேவர்கள் சத்துருக்கனனை நோக்கி 'ரகுகுல திலக! உனக்கு வேண்டிய வரமளிக்க வந்துளோம். வேண்டிக் கொள்வாயாக' என்றனர். அது கேட்டு சத்துருக்கனன் 'ஹே தேவர்களே! உங்களால் முன்பு நிருமிக்கப்பட்டதாய் மதுரை எனப் பெயர் பெற்ற மிகவும் ரமணீயமான இந்த மதுபுரியானது சீக்கிரத்தில் ஜனங்கள் வசித்தற்குரிய பெரிய நகரமாகும்படி வேண்டுகிறேன்' என்றனன். தேவர்கள் அங்ஙனமே வரமளித்துத் தம்மிருப்பிடஞ் சென்றனர். முன் மதுவென்பவன் வசித்த விடமாதலாலும், காணுதற்கு மதுரமாயிருந்ததாலும் அந் நகரத்திற்கு மதுரையெனவே பெயர் விழங்கலாகியது.

அப்பால் சத்துருக்கனன் தனது பெரும்படையைப் பட்டணத்திற்கு வரவழைத்தனன். சிராவண மாதத்தில் சத்துருக்கனன் தனது சேனைகள் அந்நகரத்தில் குடி புகுமாறு செய்தனன். அப்பூமி முழுதும் செழித்து விசேஷமான விளைவுள்ளதாயிற்று; விண்ணவர்கோன் காலந்தவறாது மழை பொழியச்செய்தனன். சத்துருக்கனனால் ஆளப்பட்ட அம்மதுராபுரியிலுள்ள ஜனங்களனைவரும் ஆரோக்கிய திடகாத்திரர்களாய் அழகு பெற்று விளங்கினர். யமுனாநதி தீரத்தில் அந்நகரமானது அர்த்த சந்திராகாரமாய் அமைக்கப்பட்டு, அற்புதமான மாட மாளிகைகளும், கோபுர மண்டபப் பிராகாரங்களும், கடை வீதிகளும் அமைந்து தம்தம் நிலை தவறாத நால்வகை வருணத்தவரும் நிறைந்து ஒன்றொன்று குறைவின்றி நானாவிதமான விலைப் பண்டங்களும் பொருந்தியதா யிருந்தது. இங்ஙனம் தேவேந்திர நகரத்தை யொத்து சகல சம்பத்துக்களும் நிறைந்து செழிப்புற்று விளங்கும் நூதனமான அந்நகரத்தைச் சத்துருக்கனன் கண்ணுற்றுக் களிப்பெய்தினன். இப்படிப்பட்ட அற்புதமான அந்நகரில் சத்துருக்கனன் பன்னிரண்டாண்டு அரசு செலுத்தி வருகையில் அவன் ராமனைக்காணப் பேரவாக் கொள்ளலாயினன்.

எண்பத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## எண்பத்திரண்டாவது ஸர்க்கம்.

## சத்துருக்கனன் ராமாயணம் பாடக் கேட்டுக் களிப்பெய்தியது.

அப்பால் சத்துருக்கனன் அரசாட்சியை மந்திரிமார் வச மொப்புவித்து முதன்மையான சில துரகங்களும் நூறு ரதங்களும் பின் தொடரப் புறப்பட்டு ஏழெட்டு நாள் வழித்தங்கி வால்மீகி முனிவராச்சிரமம் சேர்ந்தனன். அன்றிரவு அவ்வாச்சிரமத்தில் தங்கியிருக்கும்போது வால்மீகி முனிவர் அவனுக்குப்பற்பல மதுர மான கதைகளைச் சொல்லி அவன் லவணனை வதைத்தது பற்றி அவனைக் கொண்டாடினர். பிறகு அம்முனிவர் சத்துருக்கனனை உச்சிமோந்து அவனுக்கும் அவனுடன் வந்த பரிஜனங்களுக்கும் விசேஷமாக விருந்தளித்தனர்.

அச்சமயம் அவ்வாச்சிரமத்தில் அதி மதுரமான சங்கீத மொன்று கேட்டது. ஸ்ரீராம சரிதமானது ஸம்ஸ்கிருத பாஷை யில் இசையொத்த தாளவகைகளுடனே யாழிலிட்டு சலக்ஷண மாக மறைவிலே பாடப்பட்டது. அதனைச் செவியுற்றவளவில் சத்துருக்கனனுக்கு முன் நடந்த ஸ்ரீராம சரித்திரம் முழுமையும் மறுபடி தன் கண்ணெதிரில் நடப்பதுபோலத் தோற்றியது. அத ஞல் அவன் மனம் தளர்ந்து கண்ணீர் மல்க ஒரு முகூர்த்தகாலம் யாதொன்றும் தோற்ருது மயங்கி நின்றனன். பின்பு தெளிந்து அச்சரித்திரம் முழுமையும் சங்கீதத்தில் பாடக் கேட்டனன்.

அவனது பரிஜனங்கள் அனைவரும் அவ்வற்புதமான சங்கீ தத்தைச் செவியுற்றுத் தலைகுனிந்து தீனர்களாகி, 'இப்பொழுது யாம் எங்கிருக்கிறேம்? இதுவோர் கனவோ? அல்லது நனவோ?' என வியப்புற்றவர்களாகி அதைப் பற்றி சத்துருக்கனனை வினவ லாயினர். அவன் அவர்களை நோக்கி 'இதைப்பற்றி வால்மீகி முனிவரை நாம் கேட்பது ஏற்றதன்று. முனிவரச்சிரமத்தில் அதிசயங்களநேகமுண்டு; அவைகளை யாம் கண்டறியலாகுமா?' எனப் புகன்று நித்திரை செய்யலாயினன்.

எண்பத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

# சத்துருக்கனன் ராமனை வணங்கி மதுரை செல்லல்

## எண்பத்துமூன்றுவது ஸர்க்கம்.

## சத்துருக்கனன் ராமனை வணங்கி மீண்டும் மதுரைக்குப் புறப்பட்டுச் சென்றது.

மறுநாள் காலை பொழுது புலர்ந்தவுடன் சத்துருக்கனன் எழுந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டு வால்மீகி முனிவரிடம் விடைபெற்று அயோத்தி நோக்கிப் பிரயாணமாயினன். சீக்கிரம் அயோத்தி நகரில் பிரவேசித்து அற்புதமாய் அலங்கரிக்கப் பெற்ற ராமனது மாளிகையில் நுழைந்தனன். அங்கு அமைச்சர்களின் மத்தியில் சோதிமயமாய் விளங்கும் சக்கரவர்த்தித் திருமகனுரைச் சத்துருக்கனன் வணங்கிக் கைகூப்பி நின்று 'மகாராஜனே! தேவரீரது கட்டளைப்படி அடியேன் யாவுஞ் செய்து முடித்தேன். இப்பன்னிரண்டாண்டளவும் அந்த லவணனது நகரம் நன்கு பரிபாலிக்கப்பட்டு வருகின்றது. அன்று முதல் அடியேன் தேவரீரைவிட்டுப் பிரிந்திருக்க நேர்ந்தது அடியேனது பாபவிசேஷமே யாகும். இனியாகிலும் அடியேன் தேவரீரை விட்டுப் பிரியாதிருக்கும் வண்ணம் அருள்புரிய வேண்டும். தேவரீரை விட்டுப் பிரியுமளவில் அடியேன் தாயைவிட்டுப்பிரிந்த கன்றெனத் தவிப்புறுகின்றேன்' எனப் பலவாறு வேண்டி விண்ணப்பஞ் செய்தனன்.

இவ்வாறு உரைசெய்து அல்லலுறுகின்ற இளையோனை யெடுத்து ஆலிங்கனஞ் செய்துகொண்டு அயோத்தி மன்னன் 'குழந்தாய்! மகாசூரனுன நீ இங்ஙனம் சோகிக்கலாகுமா? இப்படி பிரிவிற்கரைதல் க்ஷத்திரிய தருமமன்றே! ரகுகுலதிலக! க்ஷத்திரிய தருமத்தை மேற்கொண்டு பிரஜைகளைப் பரிபாலித்தல் நமது கடமையன்றோ? நீ அப்பொழுதைக்கப்பொழுது அயோத்தியாபுரிக்குவந்து என்னைப் பார்த்துவிட்டுப்போகலாம். கடைக்குட்டியான உன்னைவிட்டுப் பிரிந்திருக்கமாத்திரம் எனக்கு இஷ்டமோ? நீ எனக்கு உயிர்நிலைபோன்றவனன்றோ? யாது செய்வது? அறத்திற்கு யாருமடங்கவேண்டுமன்றோ? ஆதலின், குழந்தாய்! நீ எழுநாள் இங்கே எம்முடன் கூடிக்களிப்புற்றிருந்து பிறகு மதுராபுரிக்குப் பிரயாணமாகுக' என்றனன். சத்துருக்

கனன் மூத்தோனது கட்டளைப்படி அயோத்தியில் எழுநாள் தங்கியிருந்து அப்பால் மதுராபுரிக்குச் சென்றனன்.

எண்பத்துமூன்ருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்துநான்காவது ஸர்க்கம்.

### பிள்ளையை யிழந்து பிராமணன் புலம்பியது.

இங்ஙனம் ஸ்ரீராமபிரான் சத்ருக்கனனை மதுராபுரிக்குச் செல்லவிடுத்தபின், சகோதரர்களுடன் கூடி ராஜ்ஜியபரிபாலனஞ் செய்துவருகையில், ஒரு நாள் ஒரு கிழவேதியன் மரணமடைந்த தன் சிறுமகனை யெடுத்துக்கொண்டு ராஜமாளிகையை யடைந்து 'ஐயோ! மகனே! இதுவரை யான் எவ்விதமான பாவமும் செய்தேனில்லை. அங்ஙனமிருக்க பாலகனை நீ எனக்குச்செய்ய வேண்டிய ஈமக்கடன்களை யொன்றுஞ்செய்யாமல் இளமைப் பருவத்திலேயே துர்மரணமடைந்த காரணமென்? இத்தகைய கோரமான காட்சியை இதுகாறும் கண்டதுமில்லை கேட்டதுமில்லையே!. இந்த ராமனது ராஜ்ஜியத்தில்தான் இவ்விதமான அகாலமரணமுண்டாகின்றது. ஆதலின் இத்தேசாதிபதியான ராமனே ஏதோ மகத்தான பாவஞ் செய்திருக்கவேண்டும்.

ஐயோ! ராமா! பிராணனை இழந்திருக்கும் என்பாலகனை நீ பிழைப்பிக்க வேண்டும்; இல்லையாயின் யான்திக்கற்றவனுக இன் இல்லறத் துணைவியுடன் உன் மாளிகைவாயிலில் உயிரை விட்டுவிடுகின்றேன். நீ பிரமஹத்தி தோஷத்தையுமடைந்து சுகமாக வாழ்ந்திருப்பாயாக' என்றிங்ஙனம் பலவாறு புலம்பியழுதனன்.

பின்னுமவ்வந்தணன் வசிஷ்டர், வாமதேவர் முதலான புரோகிதர்களின் முன்னிலையில் ராமனை நோக்கி 'ராகவா! நாங்கள் இவ்விராஜ்ஜியத்தில் வெகுகாலமாக இனிது வாழ்ந்து வருகின்றோம். இவ்விதமான விபத்து இப்பொழுது சம்பவிக்கலாயிற்று. இக்ஷ்வாகு முதலிய மகாராஜாக்கள் பரிபாலித்து வந்த இந்தப்பெரிய ராஜ்ஜியம் இன்று நாதனற்றதாகியது. நீ அரச

ளுக ஏற்பட்டபின் பாலகர்கள்மரிக்கத் தலைப்படுகின்றனர். ஆத லின் உனது ராஜ்ஜியத்தினது அரசாட்சியில் அதருமம் மேலிட்டிருக்கின்றது. ஆனதுபற்றியே இப்பாலகன் இங்ஙனம் இளம் பிராயத்தில் பிராணனை யிழந்தனன்' என்று மீண்டும் பலவாறு ராமனை இகழ்ந்து அழுதுபுலம்பலாயினன்.

எண்பத்துநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்தைந்தாவது ஸர்க்கம்.

## வைதிகன் மகன் மரணமடைந்த காரணம்.

இங்ஙனம் புத்திரனைப் பறிகொடுத்த துயரம் தாங்கமாட்டாது கதறிய பிராமணனது அழுகுரலைக் கேட்டு ஸ்ரீராமபிரான் தனது சபையில் வீற்றிருந்த முனிசிரேஷ்டர்களையும் மற்று முள்ள மந்திரிபிரதானிகளையும் கைகூப்பி வணங்கி வேதியனது வரலாற்றை அவர்களிடம் விவரமாக விண்ணப்பஞ் செய்தனன்.

அதுகேட்டு அங்கு முனிவர்களிடையில் வீற்றிருந்த நாரத முனிவர் ராமனை நோக்கி "ஹே ரகுவீர! இச்சிறுவன் வாணாள் குறுகி வதையுண்டதற்குக் காரணம் கூறுகின்றேன் கேள். ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு வருணத்தவர் தவம்புரிய அதிகார முடையவராகின்றனர். முதல் முதலில் கிருதயுகத்தில் பிராமணர்கள்மாத்திரமே தவஞ்செய்ய அதிகாரம் பெற்றிருந்தனர். திரேதாயுகத்தில் க்ஷத்திரியர்களும் தவம்புரிய அதிகாரம்பெற்றனர். துவாபர யுகத்தில் வைசியர்களும் கலியுகத்தில் சூத்திரர்களும் இவ்வித அதிகாரம் பெறுவர். சூத்திரர் கலியுகத்தில் தவஞ்செய்யவேண்டியிருக்க இந்த திரேதாயுகத்தில் (வைசியருக்கே தவஞ்செய்ய அதிகாரமில்லாத காலத்தில்) ஒரு சூத்திரன் தவஞ்செய்வானேயாயின் இதைவிட ஓர் அதருமம் வேறு இருக்குமோ?

ராமா! இப்பொழுது கீழ்க்குலத்தவனான ஒரு சூத்திரன் துர்ப்புத்தியுடையோனாகி உனது ராஜ்ஜியத்தின் எல்லையில் மிகவும் கொடிய தவமியற்றுகின்றனன். துவாபரயுகத்திலேயே சூத்திரன் தவமியற்றுவது அதருமமாகும்பொழுது இந்த திரேதா

யுகத்தில் கேட்கவேண்டுமோ? அக்காரணம்பற்றியே இப்பாலகன் மரிக்கலாயினன். எவனேனு மொருவன் ஒரு அரசனது நாட்டிலாயினும் நகரத்திலாயினும் செய்யத்தகாத செய்கைகளையேனும் அதருமங்களையேனும் செய்வானாகில், அங்ஙனம் செய்கின்றவன் மாத்திரமேயன்றி அந்நாட்டரசனும் நரகம் புகுவானென்பது நூற்றுணிபு. பிரஜைகளை அறநெறி தவறாது பரிபாலிக்கின்ற மன்னவன் அந்தப் பிரஜைகள் செய்யும் வேதாத்தியயனம் தவம் சுகிருதம் (புண்ணியம்) ஆகிய பலவற்றிலும் ஆறிலொருபாகம் புண்ணியத்தைப் பெறுகின்றனன். அங்ஙனமாக அவர்கள் புரியும் அதருமத்தில் ஆறிலொருபாகம் பாபத்தை மாத்திரம் பெறாதொழிவனோ? ஆதலின் நீ உடனே உனது தேசமெங்கும் திரிந்து இப்பாவத்தொழில் புரியும் சூத்திரனைக் கண்டுபிடித்துத் தண்டிப்பாயாயின் இப்பாலகன் மீண்டும் உயிர்பெற்றெழுவான். மனிதர்கட்கு வயது விருத்தியாகும்'' என்றனர்.

எண்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்தாறு & எண்பத்தேழாவது ஸர்க்கம்

## ஸ்ரீராகவன் சம்புகனைக் கண்டு வதைத்தல்.

அப்பால் ராமன் அந்த பிராமணனை விசனமுறாதிருக்குமாறு தேற்றி உயிரிழந்த அவன் சிறுவனது சரீரம் சிதைவுற்று அழியாவண்ணம் சுகந்தமிட்டு அதனை எண்ணெய்க் குடத்திலமைத்துப் பாதுகாத்து வரும்படி லக்ஷ்மணனுக்குக் கட்டளையிட்டு, புஷ்பக விமானத்தைத் தன்னிடம் வருமாறு மனதில் நினைத்தனன். அங்ஙனமே ஒரு முகூர்த்தகாலத்தில் அவ்விமானம் வந்து சேர்ந்தவளவில் ராமன் ராஜ்ஜியத்தைத் தம்பிமார்வசம் ஒப்புவித்து உடனே புஷ்பகத்தின் மீதேறி சம்புகனைத் தேடித் திரியலாயினன்.

நான்கு திசைகளிலும் எங்கும் தேடிய பின்னர் தென் திசையில் விந்தியமலைக்குத் தெற்கிலுள்ள சைவலமென்னும் மலையின் வடபாகத்தில் பொலிவுற்று விளங்கும் பொய்கையொன்றை

ராமன் கண்டனன். அதன் கரையில் ஒருவன் தலை கீழாகத் தொங்கிக்கொண்டு கோர மாதவம் இயற்றுவதைக்கண்ட காகுத்தன் அவனையணுகி "அருந்தவம்புரியும் பெரியோனே! நீ யாது காரணம்பற்றி இக்கொடிய தவஞ் செய்கின்றனை? நீ யாது பயனைக் கருதி இத்தகைய செய்தற்கரிய செயலைச் செய்கின்றனையோ, அதனை யான் அறிய விரும்புகின்றேன். நீ வரம் வேண்டுகின்ற வேதியனாயின் இனிது வாழ்க. அங்ஙனன்றாகில் நீ எந்த வருணத்தைச் சேர்ந்தவன்? நீ இப்பொழுது தவத்தை மேற்கொண்டிருக்கின்றனையாதலின் பொய் மொழி புகலாது உள்ளபடி உண்மை பேசுக" என வினவினன்.

இங்ஙனம் ராமன் வினவியது கேட்டு அத்தவசி "ஐயா! யான் சூத்திர யோனியிற் பிறந்தவன்; சம்புகனெனப் பெயர் பெற்றவன்; சரீரத்துடன் சுவர்க்கம்புக வெண்ணி இங்ஙனம் அருந்தவமியற்றுகின்றேன்" என்றனன்.

ராமன் அவனை நோக்கி "சம்புக! இந்த யுகத்தில் சூத்திரர் தவமியற்றுமதிகாரம் பெற்றிலராதலின் இவ்வண்ணம் நீ செய்வது அறத்திற்கு மாறேயாகின்றது. யான் நாடெங்கும் அறம் திறம்பாது பாதுகாப்பவனான தசரத குமாரனுவேன். ஆதலின் அறத்தைப் பாதுகாத்தற்குரிய யான் இப்பொழுது உன்னை வதைப்பது நீதி முறைப்படி எனது கடமையாகின்றது. இதற்கு நீ யாது கூறுகின்றனை?" என்று வினவ அத்தவசி "தேவரீர் திருக்கரத்தால் கொலையுண்பதும் அடியேனுக்கு ஒரு பெரும் பேறேயாகும்" எனப் புகல அக்கணமே அயோத்தி மன்னன் உறையினின்றும் கத்தியை யுருவிக் கையிலெடுத்து வீசிச் சம்புகனது சிரத்தைக் கீழே வீழ்த்தினன்.

அதுகண்டு விண்ணவர்கள் அகமகிழ்ந்து அப்பார்த்திவன் மீது பூமாரி பொழிந்தனர். அவர்கள் ராமனை நோக்கி "ஹே ரகுவீர! சுவர்க்கம் புகுவதற்கு உரிமையுடையோனல்லாத இச் சூத்திரன் கொடிய தவம்புரிதல் கண்டு யாங்கள் அச்சங் கொண்டிருக்கையில், இவனது தவம் முற்றுப்பெறுவதற்கு முன் நீ இவனை வதைத்தமையால் எங்களுக்குப் பெரிய உபகாரஞ்

செய்தவனுயினை. ஆதலின் நீ வேண்டிய வரமளிக்க விரும்பு கின்றோம்'' என்றனர்.

ராமன் கூப்பிய கையனுய் அவர்களை நோக்கி "தேவர்காள்! எனது பிழையினுல் ஒரு பிராமணனது ஏக புத்திரனுன பாலகன் அகால மரணமடைந்து யமலோகஞ் சென்றனன். அவ்வேதியன் மகனைப் பிழைப்பூட்டுவதாக யான் வாக்களித்து வந்திருக் கின்றேன். ஆதலின் நீவிர் அவ்விளைஞனைப் பிழைப்பூட்டுக'' என்று வேண்டினன்.

விண்ணவர்கள் ராமனை நோக்கி "காகுத்தா! நீ இவ்விசா ரத்தை இனி விட்டொழிக. எந்த முகூர்த்தத்தில் அந்த சூத் திரன் சிரமற்று வீழ்ந்தனனே அக்கணமே அவ்வந்தணனது மகன் உயிர்த்தெழுந்து தனது பந்துக்களிடம் போய்ச் சேர்ந்த னன். இனி உனக்கு மங்களமுண்டாகுக. ராமா! இப்பொழுது நாங்கள் அகத்தியமுனிவரது ஆச்சிரமம் செல்கின்றோம். அம் முனிவர் பன்னிரண்டு வருஷ காலமாக மிகப் பெரிய தீக்ஷை கொண்டு ஜலத்திலே படுத்து அருந்தவமியற்றினர். அவ்விரதம் இப்பொழுது முற்றுப்பெறுகின்றதாதலின் அவரைப் போய்க் கண்டுகளித்துவர வேண்டும்; நீயும் எம்முடன் வருக'' என்றனர். தாசரதி அவ்வண்ணமே வருவதாக இசைந்து அக்கணமே புஷ்பக விமானத்திலேறினன்.

எண்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## எண்பத்தெட்டாவது ஸர்க்கம்.

## ராமன் அகத்தியரிடம் திவ்வியாபரணம் பெற்றது.

பிறகு குறுமுனிவர் தமதாச்சிரமத்திற்கு வந்த சகல தேவதைகளையும் ஒரு தன்மையாக விசேஷமாய் உபசரித்துப் பூஜிக்க அகத்தியர் அளித்த அதிதி பூஜையைப் பெற்றுப் பெரு மகிழ்ச்சிகொண்டு தேவர்கள் யாவரும் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு விண்ணுலகடைந்தனர்.

## அகத்தியர் ராமனுக்கு ஓர் அணிகலனளித்தல்.

அப்பால் ஸ்ரீராமபிரான் புஷ்பக விமானத்தினின்று இறங்கி அகத்திய முனிவரை வணங்கி நிற்க அம்முனிவர் ராமனை நன்கு உபசரித்த பின் அவனை நோக்கி "ராமா! நீ சம்புகனை வதைத்து வைதிகன் பிள்ளையைப் பிழைப்பித்துத் தருமத்தைச் சீர்படுத்தினையென்று தேவர்கள் கூறக்கேட்டு உனது வருகையை எதிர்பார்த்திருந்தேன். நீ இன்றிரவு என்னருகில் வசித்திருந்து நாளைக் காலையில் அயோத்திக்குச் செல்வாயாக. நீ சாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியன்றோ? நீயே சகல பூதங்களுக்கும் பிரபுவும் ஆதி புருஷனுமாய் இருக்கின்றனை" என உரைத்துப் பலவித உபசாரங்கள் செய்து பிறகு சோதிமயமாய் விளங்குகின்ற ஒரு திவ்வியாபரணத்தைக் கொணர்ந்து "ராமா! விசுவகருமாவினல் நிருமிக்கப் பட்டு அற்புதமான இவ்வாபரணத்தை நீ பெற்றுக் கொள்வது எனக்கு மிகவும் பிரியமாகும். நீ இதை ஏற்றுக்கொள்க; இதையுனக்கு நன்கொடையாகத் தருகின்றேன்" என்றனர்.

ராமன் அதுகேட்டு அம்முனிவரை நோக்கி "முனிசிரேஷ்டரே! தானம் வாங்கும் அதிகாரம் அந்தணர்கட்கன்றோ உரியது? க்ஷத்திரியருக்கு அவ்வதிகாரமில்லையே? அங்ஙனமாக அடியேன் இதனை எங்ஙனம் வாங்கிக்கொள்வது? தேவரீரே இதனை அடியேனுக்கு விளங்கத் தெரிவிக்கவேண்டும்" என வேண்டினன்.

அகத்தியர் ராமனை நோக்கி "காகுத்தா! முன் பிராமணர் பெருமை பெற்று விளங்கிய கிருதயுகத்தில் அரசனில்லாமல் ஜனங்கள் ஒவ்வொருவரும் தம்மைத் தாமே பாதுகாத்துக் கொள்ள வேண்டியதாயிற்று. தேவர்கட்குமாத்திரமே மகேந்திரன் ஒருவன் அரசனாய் இருந்தனன். அதனால் மானிட உலகத்தவர் அனைவரும் நான்முகக் கடவுளை நண்ணி 'தேவ! தேவர்களுக்கு இந்திரனை அரசனாய் ஏற்படுத்தியதுபோல் எங்களுக்கும் ஒரு வேந்தனை விதித்தல்வேண்டும். அவ்வேந்தனுக்கு யாங்கள் ஏற்றபடி பூஜை புரஸ்காரங்கள் செய்துகொண்டு பாபத்தொழிலொழிந்து வாழ்வோம்' என வேண்டினர்.

அதுகேட்டுப் பிரமதேவன் தேவேந்திரனையும் மற்றுமுள்ள திக்குப் பாலகர்களையும் வரவழைத்து 'தேவர்காள்! இப்பொழுது

பூலோகத்தைப் பாதுகாக்க ஒரு அரசனைப் படைக்கவேண்டு மாதலின் அதன்பொருட்டு நீவிர் ஒவ்வொருவரும் உங்களது உத்தமமான அமிசங்களில் ஒரு பகுதி தருக' என்று கேட்க, அவர்கள் அங்ஙனமே தந்தமையால், பிரமதேவர் அவைகளைக்கொண்டு 'க்ஷுபன்' எனப் பெயர்கொண்ட ஒரு புருஷனைப் படைத்து அவனைப் பூலோகத்தவர்கட்கு அரசனாக்கினர்.

அவ்வேந்தன் இந்திரனது கலையினால் இப்பூமியெங்கும் அதிகாரஞ் செலுத்துகின்றனன்; வருணகலையினால் சரீரங்களை வளர்க்கின்றனன்; குபேரனது கலையினால் தனாதிகாரியாகி ராஜ்ஜியத்துப் பொருளை ஜனங்களுக்கு அளிக்கின்றனன்; யமனது கலையினால் அறநெறி தவறுது பிரஜைகளைத் தண்டிக்கின்றனன். ஆதலின் ராமா! தேவேந்திரனது அமிசம் உன்னிடத்திலிருக்கின்றமையால் அதைக்கொண்டு ஜனங்களைப் பரிபாலிப்பதன் நிமித்தமும் என்னைக் கடைத்தேறச் செய்வதின் நிமித்தமும் இதனை நீ கைக்கொள்ளத்தகும்'' எனவுரைத்தனர்.

அகத்தியர் தருமத்திற்கேற்றவாறு இங்ஙனம் கூறக்கேட்டு ராமன் திருப்தியடைந்து அவ்வுத்தமமான ஆபரணத்தைப் பெற்றுக்கொண்டு அம்முனிவரை நோக்கி "தபோதனரே! இவ்வற்புதமான திவ்வியாபரணம் எவ்விதமாக எவ்விடத்திலிருந்து யாரால் தேவரீர்க்குக் கிடைத்தது? இதன் வரலாற்றைக் கேட்டறிய விரும்புகின்றேனாதலின், அருளிச் செய்யவேண்டும்'' என்று வினவினன்.

எண்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## எண்பத்தொன்பதாவது ஸர்க்கம்.

## சுவேதராஜன் கதை.

அகத்தியர் ராமனை நோக்கி "ரகு வீர! இத்திரேதாயுகத்தின் ஆதியில் யான் நிர்மாநுஷ்யமான மிகப் பெரிய ஒரு வனத்தைக் கண்டு அதில் தவமியற்ற விரும்பினேன். அவ்வனத்து நடுவில் அன்னம் காரண்டவம் சக்கரவாகம் முதலிய நீர்ப்பறவைகள் பல

விளையாடப்பெற்று தாமரை நெய்தல் முதலான மலர்கள் அழகாக மலர்ந்து பாசியின்றி நிர்மலமாய் மதுரமான தண்ணீர் நிறைந்து கலக்கவொண்ணாது ஆழ்ந்திருந்தது. அப்பொய்கைக் கரையில் மிகத் தூயதும் அற்புதமுமான மகிமைபெற்ற ஆச்சிரமமொன்று இருக்கக் கண்டேன். அதில் தவசி யொருவருமில்லை. ஆங்கு கோடையில் ஒருநாளிரவு துயின்று வைகறைத் துயிலெழுந்து அத் தடாகத்தின் கண் நீராடச் சென்றேன். அதில் ஒரு மனிதப் பிணம் கொஞ்சமேனும் கரையாது புஷ்டியுள்ளதாய் மூப்பிலதாய் மிதக்கக் கண்டேன்.

ராமா! அங்ஙனம் காணப்பட்ட மனிதச்சவத்தை யான் வியப்புடன் நோக்கிக்கொண்டிருக்கையில் திடீரென்று அவ்விடத்து வாயு வேகம் மனோவேகமாய் வருகின்ற திவ்விய விமானமொன்று கண்ணிற் புலப்பட்டது. அதில் திவ்வியமான பூமாலைகளும் ஆபரணங்களு மணிந்து காந்தியும் அழகுமமைந்த திவ்விய புருஷ னொருவன் தோன்றினன். அவனைச்சுற்றிலும் அரம்பையர்கள் சிலர் மதுரமான கீதங்கள் பாடினர். சிலர் மங்கள வாத்தியம் முழங்கினர்; சிலர் அவனைப் போற்றிப் புகழ்ந்தனர்; சிலர் நர்த்தன மாடினர்.

ரகுகுல திலக! யான் பார்த்துக்கொண்டே யிருக்கையில் அந்தப்புருஷன் அவ்விமானத்தினின்று மிறங்கி வந்து அச்சவத்தினது கொழுப்பு மிகுந்துள்ள தசைகளை வயிறாரவுண்டு, அக்குளத்தில் கைகழுவி மீண்டும் தனது விமானத்திலேற எழுந்தனன். தேவனுக்கொப்பான அவனை யான் நோக்கி 'ஐயா! நீர் யார்? இத்தன்மையதான உணவில் ஆசையுங்கருத்தும் உம்மைப்போன்ற பெருமையுடையோர்க்கு உண்டாகுமோ? தேவத்தன்மையுடைய உமது உணவு மிகவும் இகழத்தக்கதாக விருக்கின்றதே. இது எனக்கு மிகவும் ஆச்சரியமாய் இருக்கின்றதாதலின் இதன் காரணத்தைத் தெரியவுரைப்பீராக?' எனவினவ அத்தேவன் மிகுந்த மகிழ்ச்சியுடன் யாவும் என்னிடம் உரை செய்யலாயினன்.

எண்பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## தொண்ணூறாவது ஸர்க்கம்.

## சுவேதராஜன் அகத்தியருக்கு ஆபரணமளித்தது.

"ராமா! அத்தேவன் என்னை நோக்கி 'முனிவர் பெருமானே! முன் விதர்ப்ப தேசத்தில் மிகுந்த பராக்கிரம சாலியாய் மூவுலகங்களிலும் பிரசித்திபெற்ற சுவேதனென்னும் பெயருடைய ஓர் அரசன் ஆண்டு வந்தனன். அவர்க்கு இரண்டு மனைவியர் இருந்தனர். அவ்விருவருக்கும் சுவேதனென்கிற யானும் சுரதனென்கிற என் தம்பியுமாக இரண்டு மக்கள் பிறந்தோம். தந்தை சுவர்க்கமடைந்த பின்னர் பட்டணத்து ஜனங்கள் என்னைத் தங்களுக்கு அரசனாக்கிக் கொண்டனர். யானும் அவ்வரசாட்சியை ஏற்றுக் கொண்டு நீதிமுறை தவறாது பல்லாண்டளவு ராஜ்ஜிய பரிபாலனஞ் செய்து வந்தேன்.

வேதியர் பெருமானே! இங்ஙனமிருக்கையில் நான் எனது வாழ்நாள் இவ்வளவென்பதை யுணர்ந்து நற்கதி பெறக்கருதி ராஜ்ஜியத்தைத் துறந்து தம்பிக்கு முடிசூட்டி இவ்வனத்துட் புகுந்து இத்தடாக தீரத்தில் மூவாயிரமாண்டளவு அருந்தவம் இயற்றிப் பிரமலோக மடைந்தேன். பிணி பசி மூப்புத் துன்பங்களில்லாத அவ்வுத்தம உலகம் புகுந்த வளவிலும் என்னைப் பசியும் தாகமும் மிகவும் பீடிக்கலாயின.

அதுகண்டு யான் சிந்தை கலங்கி நான்முகக் கடவுளையடைந்து 'ஸ்வாமி! இவ்வுத்தம உலகமடைந்த என்னைப் பசியும் தாகமும் பீடிப்பதேன்? அதை அடியேனுக்கு அருளிச் செய்ய வேண்டும்' என வேண்டினேன். பிதாமகர் என்னை நோக்கி 'சுவேதன் மைந்தனே! நீ உத்தமமான தவம்புரியு மளவிலும், உனது உடலின்மீது ஆசையொழியாதவனாகி அதை அதிக ஆதரத்துடன் போஷித்து வந்தனை. அங்ஙனம் போஷித்து வருகையிலும் நீ சிறிதும் திருப்தியடையவில்லை. அதனால் அப்பசி தாகங்கள், தவத்தின் பெருமையால் நீ இப்பதி புகுந்த வளவிலும் உன்னை விட்டு நீங்கவில்லை.

ராஜனே! முன் ஒரு சன்னியாசி உன்னிடம் பிச்சை வேண்டி வர அவனுக்கு நீ அன்னமிடாமற் போயினை. அதனால் முன்னம்

நீ கொடுத்து வைத்தது ஒன்றுமில தாதலின் உனக்கு வேறு ஆகாரமெதுவும் இங்குக் கிடைப்பதரிது. நீ செய்த தவத்துடனே நல்லுணவளித்து அருமையாய் ஆதரித்த உனது உடலொன்று மாத்திரமே மிகுந்துள்ளது. ஆதலின் நீ உதர போஷணைத்தில் வைத்திருந்த அதிகமான ஆசையினால், நீர் வேட்கையும் நல்லுண வில் ஆசையும் உன்னை இங்கும் பீடிக்கின்றன. எனவே நீ போஷித்து வைத்த உனது சரீரத்தின் மிக மதுரமான மாமிசங் களையே நீ நாடோறும் அருந்தி அவ்வாசை தணியக்கடவை. ஹே சுவேத! நீ தவம்புரிந்த வனத்திற்கு எப்பொழுது மகாத்து மாவான அகத்தியமுனிவர் எழுந்தருளுகின்றனரோ அப்பொழுது உனக்கு இத்துயரம் விமோசனமாகும்' என்றனர்.

தபோதனரே! அன்று தொட்டு அடியேன் அநேக மாண்டுள வாக மிகவும் இகழத்தக்கதான எனது உடலையே உணவாகத் தின்று வருகின்றேன். எத்தனை காலம் புசித்தும் இவ்வுடலின் ஊன் சிறிதளவேனும் குறைவுபடுவதில்லை. எனக்கும் பசி தணிந்து திருப்தி யுண்டாகவில்லை. முனிசிரேஷ்டரே! இன்றே உமது தரிசனத்தினால் யான் கடைத்தேறினேன். அதற்குப் பிரதியாக திவ்வியமான இவ்வாபரணத்தை வாங்கிக்கொண்டு அடியேனிடம் அருள் புரிக. இது பொன், பொருள், பட் டாடை, பூஷணம், பக்ஷியம், போஜனமாகிய யாவற்றையும் சகல மான போகங்களையும் அளிக்கும்' என்று வேண்டிக்கொண்டனன்.

இங்ஙனம் சுவேத ராஜன் கூறியது கேட்டு யான் அவ் வாபத்தினின்று அவனை விடுவிக்குமாறு அவ்வாபரணத்தைப் பெற்றுக்கொண்டேன். அதனை யான் கைக்கொண்டவளவில், அந்த ராஜரிஷியினது பழமையான மானிடதேகம் அழிந்து போயிற்று. உடனே அவ்வரசன் மிகுந்த மகிழ்ச்சியுடன் சுவர்க்க லோகஞ் சென்றனன், அச்சுவேத ராஜனால் கொடுக்கப்பட்ட ஆபரணமே இதுவாகும்'' என்று கூறி முடித்தனர்.

தொண்ணூற்றுருவது ஸர்க்கம் முற்றிற்று.

## தொண்ணூற்றோராவது ஸர்க்கம்.

## தண்டகன் கதை.

அகத்திய முனிவர் மொழிந்த அற்புதமான கதையைச் செவியுற்ற ராமன் மிகுந்த வியப்புடன் அம்முனிவரை நோக்கி "ஸ்வாமி! விதர்ப்ப தேசாதிபதியான சுவேதராஜன் கொடிய தவம்புரிந்த கானகம் மிருக பக்ஷிகள் எதுமில்லாமல் சூனியமானது யாது காரணம்? அவ்வேதன் அங்குத் தவம் புரியக் காரணமென்ன?" என்று வினவினன்.

அகத்தியர் ராமனை நோக்கி "காகுத்தா! முன் கிருதயுகத்தில் மனுவானவர் தவம்புரியக் கருதித் தனது குமாரனை இக்ஷ்வாகுவை அரசனாக நியமித்து அவனை நோக்கி 'குழந்தாய்! நீ நீதி தவறாமல் அரசுபுரிதல் வேண்டும். நிஷ்காரணமாக எவரையும் தண்டிக்கலாகாது. நிரபராதிகளைத் தண்டித்தால் தீரா நரகம் சம்பவிக்கும். ஆதலின் பிரஜைகளைத் தண்டிக்கும் விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும்' என்று புத்திமதிகளைச் சொல்லி நிஷ்டையிலிருந்து வீடுபெற்றனர்.

அப்பால் இக்ஷ்வாகு மகாராஜன் நீதியுடன் அரசு செலுத்தி வருகையில் அவருக்கு நூறு குமாரர்கள் பிறந்தனர். அவர்களுள் கடையிற் பிறந்த புத்திரன் மூடனும் கல்விப் பயிற்சியில்லாத கொடியனுமாகிப் பெரியோரை அவமதித்து வந்தனன். அதுகண்டு தந்தை சினங்கொண்டு அவன் அவசியம் தண்டனையுறுவான் எனக்கருதி அவனுக்கு தண்டன் அல்லது தண்டகன் என்று பெயரிட்டு, விந்தியமலைக்கும் சைவல மலைக்கும் இடையிலுள்ள நிலத்தை அவனுக்களித்தனன்.

அப்பால் அந்தத் தண்டகன் அவ்விடத்திற்கு அரசனாகி அழகான அம்மலைச்சாரலில், இணையில்லா அற்புதம் வாய்ந்த நகரமொன்று நிருமாணஞ்செய்து அதற்கு மதுமந்தமென நாமஞ்சூட்டி அதிற் குடி புகுந்தனன். அவன் சுக்கிராசாரியரைத் தனக்குப் புரோகிதராக வரித்துக்கொண்டு அவருடன் கூடி தேவலோகத்

தில் தேவேந்திரன் ஆட்சி செலுத்துவது போல் அந்நகரத்தை ஆண்டு வந்தனன்'' என்றனர்.

தொண்ணூற்றொராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றிரண்டாவது ஸர்க்கம்.

## தண்டகன் குரு புத்திரியைக் காமுற்றது.

*அகத்தியர் மீண்டும் கூறத்தொடங்கி, "ராமா! தண்டகனென்னு மவ்வரசன் இவ்விதமாய் அநேக வருஷ காலம் இனிது அரசாட்சி புரிந்து வருகையில் ஒரு கோடை மாலையில் ரமணீயமான சுக்கிராசாரியரது ஆச்சிரமத்திற்குச் சென்றனன். அச்சமயம் அங்கு ஒப்பிலா வனப்பு வாய்ந்த கன்னிகையான சுக்கிரனது மகளைக்கண்டு அரசன் அறிவிழந்து மன்மதனுக்கு வசமாயினன்.*

*அரசன் அக்கன்னிகையை விளித்து 'அழகிற் சிறந்த பவழக்கொடியே! நீ யார்? உன்னைக் கண்டதும் எனது அஞ்சாநெஞ்சம் பஞ்சபாணனுக்குத் தஞ்சமாகியது. என்னையணைந்து இன்பமூட்டுவாயாக' என்றனன். அக்கன்னிகை அதுகேட்டு தண்டகனை நோக்கி 'நான் உனது குருவின் மூத்த மகளான அரஜை என்பவள். என்னிடத்து உனக்குக் காதலுளதாயின் தருமமான நேர்வழியில் எனது தந்தையிடஞ் சென்று வரித்து வேண்டிக்கொள்க. அங்ஙனமின்றி அதிக்கிரமஞ் செய்யின் உனக்கு மிகக்கொடிய சாபம் நேரிடும். தவப்பெருமை பெற்ற எனது தந்தை முனிவராதலின் மூவுலகங்களையும் எரித்து விடுவார்' என வணக்கமாக வுரைத்தனள்.*

*அரஜை யிவ்வாறு நயமாக நவின்றவளவிலும், தண்டகன் அதனைச் செவிக்கொள்ளாது காமாதுரனாகி முடிமீது அஞ்சலி வைத்து 'பெண்மணி! என்மீது அருள் புரிக; காலதாமதஞ் செய்யற்க. முகச்சோதி மிகுந்த மாதே! உன்னைப் புணர்ந்த பின்னர் எனக்கு மரணம் நேரிடினும் நேரிடுக. அதினும் கொடிய சாபம் வந்தாலும் வருக.' என்றுகூறி நடுங்கி நின்ற அப்பெண்மணியைத் தனது கைகளால் பிடித்திழுத்து அவளுடன் வேண்*

டியவாறு வலியப் புணரலாயினன். அப்பால் தண்டகன் தனது நகரம் செல்ல, அரஜை ஆச்சிரமத்தருகே அழுதவண்ணம் தந்தையின் வரவை எதிர்பார்த்து நின்றுகொண்டிருந்தனர்.

தொண்ணூற்றிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்று மூன்றுவது ஸர்க்கம்.

## தண்டகன் சாபம் பெறுதல்.

"ராமா! அப்பால் சுக்கிரன் தண்டகன் தன்மகளுக்கியற்றிய கொடிய செய்கையைக் கேட்டு மிகுந்த சீற்றங்கொண்டு 'துஷ்ட புத்தியும் பாவச்செயலு'முடையனான இவ்வரசன் ஏழுதினங்களில் தனது சேனை முதலிய பரிவாரங்களுடனும் வாகனங்களுடனும் மரணமடைவானாக. மதிகேடனான இவனது ராஜ்ஜியத்தில் மகேந்திரன் மிகக்கொடியதான மண்மாரி பொழிவித்துச் சுற்றிலும் நூறு யோசனைதூரம் இதனை அழித்துவிடுவானாக. அம்மண்மாரியினால் இவ்விராஜ்ஜியத்திலுள்ள சகலமான ஜீவராசிகளும் நாசமுறுமாக' என்று கொடிய சாபமிட்டனர்.

பிறகு சுக்கிராசாரியர் அவ்வாச்சிரமத்திலுள்ளோர் அனைவரையும் நோக்கி 'நீவிர் இத்தேசத்தின் எல்லைக்கு அப்பால் எழுந்து செல்லுக' என்று கட்டளையிட்டுப் பின் அரஜையை நோக்கி 'மதிகெட்ட மகளே! துன்மார்க்கமான பாவச்செயலுக்கு நீ உடன்பட்டனை யாதலின் அப்பாவத்தை யொழிக்குமாறு நீ இவ்வாச்சிரமத்திலேயே இருந்து தவம்புரிக. இவ்வாச்சிரமமும் இங்கிருக்கு மித்தடாகமும் இங்ஙனமே என்றைக்கும் அழியாதிருக்கக் கடவன. நீ இவ்வனத்திலேயே மனக்கவலை யொழிந்து உனது நற்காலத்தின் வரவை எதிர்பார்த்து இனிது வாழ்க. மண்மாரி பொழியு மிரவில் உன்னருகில் எந்தெந்த ஜீவன்கள் இருக்கின்றனவோ அவற்றிற்கு அதனால் அழிவு நேரிடாது' என்று கூறினர். அப்பால் ஏழு நாளைக்குள் தண்டகனது ராஜ்ஜியமானது பார்க்கவாது சாபத்தின்படி நாசமடைந்தது.

ராமா! அசுர குருவினால் இவ்வாறு சபிக்கப்பட்ட இவ்விடம் தண்டகாரணியம் என்று பிரசித்தி பெறலாயிற்று. அப்பால் இதில் தவசிகள் பலர் வந்து சேர இது ஜனஸ்தானமாகியது" என்று கூறி முடித்து ராமனை மாலை சந்தியா வந்தனஞ் செய்யுமாறு அழைத்தனர்.

**தொண்ணூற்று மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## தொண்ணூற்று நான்கு & தொண்ணூற்றைந்தாவது ஸர்க்கம்

## ராமன் அயோத்தியாபுரி போய்ச் சேர்ந்து அசுவமேதஞ் செய்தது.

குடமுனிவர் இவ்வாறு கூறக்கேட்டு ராமன் வியப்படைந்த வண்ணம் மாலைக்கடன்களை முடித்துக்கொண்டு முனிவரால் கொடுக்கப்பட்ட காய் கனிகளையுண்டு அன்றிரவு அவ்வாச்சிரமத்திலேயே படுத்துறங்கலாயினன். மறுநாள் பொழுது விடிந்ததும் ராமன் எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு முனிவரிடம் விடைபெற்று அயோத்திக்குப் பிரயாணமாயினன். அன்று நடுப்பகலில் ராமன் அயோத்தியடைந்து அங்கங்கே பலரும் போற்றிப் புகழத் தனது அரண்மனை சேர்ந்து அதன் மத்தியிலுள்ள சபாமண்டபத்தில் கீழே இறங்கி புஷ்பக விமானத்தை வாழ்த்தி விடைகொடுத்தனுப்பிவிட்டு வாயில்காவலனை விளித்து பரதலக்ஷ்மணர்களையழைத்து வருமாறு கட்டளையிட்டனன்.

### அச்வமேதஞ் செய்தல்

உடனே பரதலக்ஷ்மணர் ஆங்கு வந்தது கண்டு ரகுவீரன் அவர்களையன்புடனே ஆலிங்கனம் செய்துகொண்டு "சகோதரர்காள்! நான் பிரதிக்கினை செய்தவண்ணம் காரியஞ் செய்து வைதிகன்மகனை உயிர்ப்பித்தேன். இனி ராஜதருமம் மேன்மேலும் வளருவதற்கேதுவான ராஜசூய யாகஞ்செய்யக் கருதுகின்றேன். இந்த யாகம் செய்வதனால் சகலமான பாபங்களும் நாசமுறுமாதலின் உங்களிருவருடன் கூடி அவ்வேள்வி புரிய விரும்புகின்றேன். அரசர்க்கு அழியாப்புகழ் உண்டாவதற்கும் இந்த ராஜசூயமே

காரணமாகும். மித்திரன் என்பவன் இந்த யாகத்தைச் செய்து சத்துருக்களை வென்று வருணபதம் பெற்றனன். சோமன் இதைச் செய்து என்றுமழியாத பதம் பெற்றனன். ஆதலின் இப்பொழுது நீவிர் என்னுடன்கூடி ஆலோசித்து உசிதமானதை உரை செய்தல் வேண்டும்" என்றனன்.

அதுகேட்டு பரதன் "சுவாமி! தேவரீர் இவ்வுலக முழுமைக்கும் சக்கரவர்த்தியாக விருக்கின்றீர். இப்பூமண்டலத்திற்கும் இதிலுள்ள ஸமஸ்த பிராணிகளுக்கும் கதி தேவரீரேயன்றி வேறில்லை. இத்தன்மையரான தேவரீர் இவ்வேள்வி இயற்றக் கருதுவது யாதுகாரணமோ? இதனைத் தேவரீர் செய்வதுதான் தகுதியோ? ஏனெனில் இதனிமித்தம் இப்புவியில் பலராஜவமிசங்கள் மாள வேண்டி வருமே?

ராஜனே! சோமன் ராஜசூயஞ் செய்தவளவில் வானத்திலுள்ள நட்சத்திரங்கள் கோரமான யுத்தஞ் செய்யலாயின. அரிச்சந்திரன் ராஜசூயஞ் செய்த காலத்தில் க்ஷத்திரியர்களனைவரும் நாசமுறலாயினர். தேவேந்திரனது ராஜசூய யாகத்தில் மிகக் கொடிய தேவாசுர யுத்தம் நடந்தது. அநேக பிராணிகள் நாசமுற்றன. புருஷ சிங்கமான தேவரீர் இதனை நன்கு ஆராய்ந்துணர்க" என்றனன்.

ராமன் பரதனது இனிய வார்த்தைகளைக் கேட்டு மிகவும் களிகூர்ந்து அவனை நோக்கி "பரதா! அறநெறியை அனுசரித்து நீ யுரைத்த வார்த்தை முற்றும் உண்மையே. இது யாவருக்கும் பிரீதியையும் பேரானந்தத்தையும் விளைவிப்பதன்றி நன்மை பயக்குவதுமாகின்றது. நீ கூறியவாறு உலகத்திற்கு உபத்திரவமான காரியம் உத்தமர்கள் ஒருபொழுதும் செய்யத்தகுவதன்று. ஆதலின் யான் உனது விருப்பப்படி ராஜசூயம் செய்ய வேண்டுமென்னும் எனது மனோரதத்தை மாற்றி விடுகின்றேன். நீ சிறியோனாயினும் உனதுமொழிகள் நியாயமும் தருமமும் தவறாதனவாய் இருக்கின்றன" என்றனன்.

தொண்ணூற்றைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## தொண்ணூற்றெட்டாவது ஸர்க்கம்
## விருத்திராசுரன் மகிமை கூறல்.

அப்பொழுது லக்ஷ்மணன் ராமனை நோக்கி "ரகுநந்தன! ஏதேனும் ஓர் உத்தமமான வேள்வியியற்றவேண்டுமெனத் திருவுள்ளமாயின் அசுவமேதம் என்னும் சுபமான யாகத்தைச் செய்யலாமே. முன்னம் விண்ணவர்கோன் விருத்திராசுரனை வதஞ் செய்தமையால் நேர்ந்த பிரமஹத்தியை யொழிக்குமாறு அசுவமேதஞ் செய்து புனிதனாயினனென ஆரணமறைகின்றதே. அவ்வரலாற்றை விண்ணப்பஞ் செய்கிறேன் கேட்பீராக.

முன்பு நூறுயோசனை விஸ்தீரணமும் அதனிலும் மும்மடங்கு உயரமுமுடையவனாய் மிகப் பெரியனான விருத்திரன் என்னும் அசுரன் ஒருவன் இருந்தனன். அவன் அறநெறி பிறழாது மேதையிற் சிறந்தவனாகி மனுநீதி முறைப்படி மூவுலகங்களையும் அன்போடு பரிபாலித்து வந்தனன். இராஜ்ஜியமெங்கும் செழித்து அற்புதமாக விளங்க அவன் இவ்வாறு அரசாட்சி செய்து வருநாளில் மேலான தவம் புரியவேண்டுமென அவனுக்கு விருப்பமுண்டாகியது. உடனே அவ்வசுரன் தனது மூத்த குமாரனிடம் இராஜ்ஜியபாரத்தைக் கொடுத்துவிட்டு, விண்ணவர் வெதும்பித் தவிக்க உக்கிரமமான தவம் புரியலாயினன்.

அதுகண்டு தேவராஜன் மிகவும் வெருவித் திருமாலை யடைந்து 'தேவ! விருத்திராசுரன் அருந்தவமியற்றப் புகுந்து இப்புவனங்களனைத்தையும் கைக்கொள்ளும் ஆற்றலுடையவனாகின்றனன். அவன் மிகுந்த பலசாலியும் தருமிஷ்டனுமாதலின் அவனை வெல்ல யான் வல்லேனல்லேன். அவன் இன்னும் இங்ஙனமே விடாது தவம்புரிவானாயின் எல்லாவுலகங்களும் அவனுக்கே யதீனமாகி விடுமன்றோ?

தேவபக்ஷபாதியான தேவரீர் எங்களிடத்தருள்கூர்ந்து அவ்வசுரனை வதைத்து எங்களைப் பரிபாலித்தருள்க' என்று வேண்டிக் கொண்டனன்.

தொண்ணூற்றெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றேழாவது ஸர்க்கம்

## தேவேந்திரனைப் பிரமஹத்தி சூழ்தல்.

"விஷ்ணுதேவன் இங்ஙனம் வேண்டிக்கொண்ட தேவராஜனையும் தேவர்களையும் நோக்கி 'தேவர்காள்! யான் முன்னமே விருத்திரனது விசுவாசத்திற்குக் கட்டுண்டவனாயினேனாதலின் இப்பொழுது உங்களுக்குப் பிரீதி செய்வதன் பொருட்டாக யான் அவனை வதைக்கத் துணியேன். ஆதலின் விருத்திரனை நீங்களே வெல்லுமாறு ஒரு உபாயம் உரைக்கின்றேன். அங்ஙனஞ் செய்தால் அவ்வசுரன் மரணமடைவான்.

சுரர்களே! என்னை யான் மூன்று பாகமாகப் பிரித்து அவற்றுள் ஒரு அமிசத்தினால் இந்திரனிடம் அனுப்பிரவேசிக்கிறேன். ஒன்றினால் அவனது வஜ்ஜிராயுதத்தில் புகுகின்றேன். விருத்திராசுரனது சரீரத்தைத் தாங்குமாறு மூன்றாவது பாகத்தினால் பூமியில் பிரவேசிக்கின்றேன். இவ்வண்ணம் செய்தால் வாசவன் விருத்திரனை யெளிதில் வெல்லவல்லவனாவான்' என்றனர்.

விண்ணவர் அதுகேட்டு மிகுந்த சந்தோஷத்துடன் விஷ்ணுவை வணங்கி விடைபெற்றுக்கொண்டு விருத்திராசுரன் தவமியற்றும் வனம் போய்ச் சேர்ந்தனர். அங்கு அவ்வசுரன் ஆகாயத்தை யெரிப்பதுபோல் அருந்தவம் புரிந்து சோதியுருவாய்த் திகழ்வதுகண்டு அமரர்களனைவரும் அஞ்சினவர்களாகி அவனையணுகவும் முடியாமல் திகைத்தனர்.

அச்சமயம் புரந்தரன் வஜ்ஜிராயுதத்தைக் கையிலெடுத்து அதனை அவ்வசுரனது தலையில் விடுக்க அதனாலடியுண்ட அவனது தலை காலாக்கினிபோல் ஜொலித்துக்கொண்டு கீழே வீழ்ந்தது. அவ்வசுரனது தலை யறுபட்டு மிகவும் பயங்கரமாய் வீழ்ந்தது கண்டு உலகமெல்லாம் அஞ்சி நடுங்கின.

தேவராஜன், நிரபராதியாய்த் தவம்புரிந்துகொண்டிருந்த தானவேந்திரனைக் கொன்றமையால் பிரமஹத்தி அவனைவிடாது பற்றிக்கொண்டது. அவன் அதற்கஞ்சி இவ்வுலகங்களுக்கப்பாலுள்ள பேரிருள் சூழ்ந்த ஓரிடத்தில் ஓடி யொளித்தும் பிரம

ஹத்தி அவனை விட்டபாடில்லை. அதனாலவன் பெருந்துயரத்தி லாழ்ந்தனன்.

அப்பால் அக்கினிமுதலான தேவர்கள் இந்திரனைக் காணாது கலங்கி ஸ்ரீமகாவிஷ்ணுவையடைந்து அவரைப் பூஜித்து 'தேவதேவ! தேவரீரது மகிமையால் விருத்திராசுரன் வதை யுண்டானாயினும், இந்திரனை பிரமஹத்திதோஷம் பற்றிக்கொண்டு பீடிக்கின்றதே. அதற்கு விமோசன முண்டாகும் உபாயம் அருளிச் செய்யவேண்டுகின்றோம்' என்று வேண்டினர்.

அதுகேட்டு விஷ்ணுதேவன் தேவதைகளை நோக்கி 'தேவர்காள்! அஞ்சேல்மின்; இந்திரன் என்னைக்குறித்து யாகஞ் செய்வானாயின், யான் அவனைப் புனிதனாக்குவேன். மிகவும் புனிதமான அசுவமேத யாகத்தினால் என்னை ஆராதித்து மீண்டு மவன் பயமற்றவனாகித் தேவேந்திரபதம் பெறுவான்' என்று அருளிச்செய்தனர்.

தொண்ணூற்றேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றெட்டாவது ஸர்க்கம்.

## இந்திரனைப் பிடித்த பிரமஹத்தி ஒழிந்தமை கூறல்.

"அண்ணா! இங்ஙனம் இந்திரன் பிரமஹத்தியால் சூழப்பட்டவனாகித் தேசிழந்து, அறிவுகெட்டு இவ்வுலகத்தின் கோடியிற் சென்று ஆங்கு சிலகாலம் பெரும் பாம்புபோல் புரண்டு வாதைப் பட்டுக்கொண்டிருந்தனன். இந்திரன் ஒழிந்தவளவில் உலக மனைத்தும் செழியாது பூமிவறண்டு அழிந்ததுபோலாகியது. காடுகள் யாவும் உலர்ந்துபோயின. ஆறுகளும் ஏரிகளும் மடுக்களும் நீர்வற்றிப் பாழாயின. இவ்வாறு மழைபொழியாதொழி யவே சகல சராசரங்களும் அல்லலுற்றுத் தவித்தன.

இதுகண்டு அமரர்களனைவரும் அசுவமேதமியற்றுவதற்கு வேண்டிய சாமான்களை யெடுத்துக்கொண்டு மகரிஷிகளைக் கூட்டிக்கொண்டு இந்திரன் இருக்குமிடஞ்சென்று அவனை முன்னிட்டு ஆங்கு அசுவமேதயாகஞ் செய்யத் தொடங்கினர். அவ்வேள்வி

முடிந்ததும் பிரமஹத்தி தேவேந்திரனைவிட்டு நீங்கித் தேவர்கள் எதிரேவந்து நின்று 'விண்ணவர்களே! நீவிர் இப்பொழுது எனக்கு எவ்விடத்து வாசஸ்தானம் விதிக்கின்றீர்கள்?' என்று வினவ அமரர்கள் அதைநோக்கி 'நீ உன்னை நான்கு பகுதிகளாகப் பகுத்து நான்கு இடங்களில் வசித்துவருக' என்றனர்.

அங்ஙனமே பிரமஹத்தி தன்னை நான்கு பகுதிகளாகப் பகுத்து 'யான் எனது பாகங்களிலொன்றினால் வருஷா காலத்தில் முதல் முதல் பெருக்கெடுத்து வருகின்ற ஆற்று வெள்ளங்களில் நான்கு மாதம் வசிப்பேன். மற்றொரு பகுதியினால் இப்பூமியில் ஓரிடத்தில் எந்நாளும் விடாது வாசஞ் செய்வேன். மூன்றாவது பாகத்தினால் பருவம்வந்து பூப்படைந்த பெண்களிடத்தில் மாதம் மூன்று நாள் வசிப்பேன்; நான்காவது பகுதியினால் பிராமணர்களை வதைக்கும் கொடும் பாதகர்களைப்பற்றி வசிப்பேன்' என்று கூறி அவ்விடம்விட்டகன்றது.

அப்பால் வாசவனும் பரிசுத்தனாகிக் கலக்கமொழிந்து களிப்படைந்தனன். ஹே ரகுநந்தன! அசுவமேத யாகத்தின் பிரபாவம் இத்தன்மையதன்றோ! ஆதலின் திருவுள்ளமாயின் இதைச் செய்தருள்க'' என்று லக்ஷ்மணன் மொழிந்தனன்.

தொண்ணூற்றெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## தொண்ணூற்றொன்பதாவது ஸர்க்கம்.

## இளோபாக்கியானம்—இளனுக்கு சாபம் நேரிட்டது.

லக்ஷ்மணன் கூறின விருத்திராசுரவதத்தையும் அசுவமேதத்தின் பெருமையையும் கேட்ட ராமன் மிகுந்த மகிழ்ச்சியடைந்து அவனை நோக்கி "லக்ஷ்மணா! நீ கூறியபடி அசுவமேதத்தின் பெருமை ஒப்பற்றதேயாகும். இதைப்பற்றி மற்றொரு கதையுமுண்டு. கூறுகின்றேன் கேள்:—

முன் கர்த்தமப்பிரஜாபதியினது மகனான இளன் என்பவன் மிகப்பிரக்கியாதிபெற்று பாஹ்லிக தேசத்தரசனாகி இப்பூமி முழுவதையும் சுவாதீனஞ்செய்துகொண்டு அறநெறி தவறாமல் அரசாட்சி புரிந்து வந்தனன்.

# இளமகாராசனுக்குப் பரமசிவன் அருள்புரிதல்

ஒருகால் அவன் வேட்டையாட விரும்பி சித்திரைமாதத்தில் தனது சேனை பரிவாரங்களுடன் காட்டிற்குச் சென்று மிருகங்களை அநேகமாய் அதஞ்செய்யலாயினன். அவன் அங்ஙனம் வேட்டையாடிக்கொண்டே சுப்பிரமணியர் பிறந்தவிடமான வனம்போய்ச் சேர்ந்தனன். அவ்விடத்தில் பரமேசுவரர் பார்வதியுடன்கூடி அவளுக்கு ஆனந்தம் விளைவிக்குமாறு தானும் ஸ்திரீரூபம் தரித்து அம்மலைச் சாரலில் ரமித்துக்கொண்டிருந்தனர். அதுகாரணமாக அக்காட்டிலுள்ள ஆண் இனமான பசுபக்ஷி மிருகாதிகளும் ஆண் இனமான மரங்களும் எல்லாம் பெண்ணுருவமாக மாற்றப்பட்டன. அங்குள்ள சகல சராசரங்களும் ஸ்திரீரூபமாகவே புலப்பட்டன. அத்தகைய கானகத்தில் இளமகாராஜன் நுழைந்ததும் அவனும் அவனது பரிஜனங்களும் பெண்களாக மாற்றப்பட்டனர். அதுகண்டு மன்னன் மகத்தான துக்கமடைந்து அது மலைமகள்கேள்வனது மாயச் செய்கையென்று உணர்ந்து அச்சங்கொண்டவனாகித் தனது சகல பரிவாரங்களோடும் பரமசிவனைச் சரணமடைந்தனன். உடனே சங்கரன் உமாதேவியுடன் அவ்வரசனுக்கு முன்தோன்றி 'ஹே ராஜரிஷியே! இனி நீ புருஷனாக மாறுவதை வேண்டற்க; அஃதொன்றொழிய வேறு யாதுவரம் வேண்டினும் தருவேன்' என்று கூறினர்.

அதுகேட்டு இளமகாராஜன் மனச்சோர்வடைந்து அருகில் நின்ற உமாதேவியை மிகுந்த பயபக்தியுடன் முடிதாழ்த்தி வணங்கி 'தேவீ! நீ சகல லோகங்களுக்கும் நாயகியன்றோ? கதியற்றவனான அடியேனிடம் அருள்புரிக' என வேண்டிக்கொண்டனன். பரமேச்வரி அவனிடம் அருள்கூர்ந்து 'ராஜனே! நீ ஒரு மாதகாலம் பெண்ணுருவாயும் மறுமொருமாத காலம் ஆணுருவாயுமிருந்து வாழ்வாயாக. ஆயினும் நீ புருஷனாக மாறியவளவில் முன்பு நீ பெண்ணாயிருந்த காலத்து நடந்தவை யொன்றும் தோன்றாது. அங்ஙனமே பெண்ணாக மாறிய காலத்தில், முன்னம் புருஷனாய் இருந்தது ஞாபகம் வராது' என இனிமையாக அருளிச்செய்தனள். பிறகு இளமகாராஜன் ஒருமாத காலம்

புருஷனாகவும் மற்றொரு மாதகாலம் திரிலோக சுந்தரியான இளையென்னும் அழகிய வனிதையாகவும் உருவம்பெற்று வாழ்ந்து வந்தனன்'' என்றனன்.

தொண்ணூற்றொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூறாவது ஸர்க்கம்.

## புதன் இளையைக் கண்டு காமுறல்

பிறகு மீண்டும் ராமன் கூறத்தொடங்கி "நம்பிகாள்! தாமரை யிதழ்போன்ற கண்களையுடைய கட்டழகியாக மாறிய பின் இளையென்பவள் கால்களால் நடந்துசென்று இமயமலைச் சாரலெங்கும் திரிந்துகொண்டிருக்கையில், அம்மலைக்கருகில் ஒரு ரமணீயமான பொய்கையைக் கண்ணுற்றனள். அங்கு பூரண சந்திரன்போன்ற சோதியுடையனும் காமவேட்கையை விருத்தி செய்கின்ற வடிவழகுவாய்ந்த ஒருகட்டழகன் நடுத்தண்ணீரில் நின்று கொடிய தவம்புரிந்துகொண்டிருந்தனன். அவன் சந்திரனது புத்திரனான புதனென்பவன். அதுகண்டு வியப்புற்று இளையும் தன்பரிஜனங்களுடன் அத்தடாகத்திலிறங்கி நீர்விளையாடலாயினள்.

சகோதரர்களே! அக்காலையில் புதன் இளையைக்கண்டு காமபாணங்களுக்கு வசப்பட்டவனாகித் தன்னை மறந்து தண்ணீருக்குள்ளேயே துடித்துச் சீக்கிரம் தண்ணீரினின்றும் கரையேறி தனது ஆச்சிரமம் போய்ச்சேர்ந்தனன். பிறகு புதன் அவ்விடத்தினின்று இளையுடன் கூடி விளையாடும் தோழிமார்களுக்குக் குறிகாட்டிக் கூவியழைத்து இளையின் வரலாற்றைப் பற்றி வினவினன். அதுகேட்ட அவர்கள் 'ஐயா! இவ்வுத்தமி எங்களுக்குத் தலைவியாய் இருக்கின்றனள். இவளுக்குப் புருஷன் ஒருவருமில்லை. இக்கானகத்தில் இவள் எங்களுடன் கூடி விளையாடிக் கொண்டிருக்கின்றனள்.' என விளம்ப, அப்பெண்கள் புகன்றது நன்கு விளங்காமை கண்டு தனது யோக மகிமையால் இளமகாராஜனது வரலாற்றை நன்கு தெரிந்துகொண்டு, அப் பாவையர் பலரையும்

நோக்கி 'நீங்கள் இம்மலைச்சாரலிலேயே கிம்புருடர்என்னும் தேவ ஜாதிப் பெண்களாகி வாழ்வீர்களாக. விரைவில் உங்களுக்கேற்ற இருப்பிடங்களை யமைத்துக் கொள்வீர்களாக. இங்கு உங்களுக்கு இஷ்டமான கிம்புருடர் எனப் பெயர் பூண்ட கணவன்மார்களைப் பெற்று இனிது வாழ்க' என்றனன். அங்ஙனமே அக்கோதையர்கள் கிம்புருஷ ஸ்திரீகளாகி அவ்வெற்பினிடமே சென்று விநோதமாக வசித்து வாழ்ந்து வரலாயினர்.

நூறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றோராவது ஸர்க்கம்.

## புதனுக்கு இளையிடம் புரூரவன் பிறந்தது.

"அப்பெண்களனைவரும் சென்றபின் அங்குத் தனியே நின்ற இளையைப் புதன் கண்டு காமவெறியினால் குறுநகை கொண்டு அவளுடன் இனிமையாக உரையாடித் தன்னை மணக்கும்படி வேண்டினன். நவக்கிரகங்களில் ஒன்றின் அதிபதியான புதன் தன்னை இங்ஙனம் வேண்ட இளையும் அவனழகைக் கண்டு அவனுக்கு இணங்கினள். உடனே புதன் அவளை மணந்து இனிது வாழ்ந்து வந்தனன்.

அவ்வளவில் ஒரு மாதகாலம் கடந்தது. கடக்கவே இளை அரசனாக மாறினன். உடனே அரசன் அங்கு நீர் நடுவில் தவம் புரிந்துகொண்டிருந்த புதனை நோக்கி 'ஸ்வாமி! அடியேன் எனது சேனைகளுடன் இம்மலைப் பிரதேசத்தில் வேட்டையாடப் புகுந்தேன். எனது சேனை எங்குச் சென்றதோ அறியேன். நேரான வழியும் எனக்குத் தெரியவில்லை. தயவுசெய்து உண்மையுரைக்க' என வேண்டினன்.

இளமகாராஜன் முன் நடந்த வரலாற்றின் நினைப்பிழந்தவனாகி வினவியது கேட்டு புதன் அவனை நோக்கி 'ராஜனே! விசனமுறுதே! மிகக் கொடிய கல்மாரி பொழிந்து உனது ஜனங்களனைவரும் புடைபட்டு மாண்டனர். நீயோ அப்பெருமழைக்குப்பயந்து இவ்வாச்சிரமத்திலுள்ளே படுத்து நித்திரை கொண்டமையால்

பிராணனைப் பறிகொடாது பிழைத்தனை. இனி அச்சமும் மன விசாரமு மொழிந்து மனந்தேறுக; உனக்கு மங்களமுண்டாகும். ஹே வீர! நீ கனி கிழங்குகளையே உணவாகக் கொண்டு இவ்வனத்திலேயே இனிது வாழ்க' என விடை பகர்ந்தனன்.

அதுகேட்டு அரசன் சற்று மனந்தேறினனாயினும் பரிஜனங்களைப் பறி கொடுத்த பெரிய துக்கத்தினால் மனந்தாளாதவனாகி புதனை நோக்கி 'முனிவர் பெருமானே! எனது சேனை வீரர்களனை வரையு மிழந்த பின்னர், யான் இங்கு வசித்திருக்க விரும்புகின்றே னில்லை. இராஜ்ஜியத்தையும் யான் இனித் துறந்து விடுவேன். எனது மூத்த குமாரனான சசபிந்து வென்பவன் தேசத்தை நன்கு பரிபாலித்து வருவான். ஆயினும், இதுகாறும் மேலான சுகத்துடனே வாழ்ந்த எனது சேனை வீரர்களது பெண்சாதிகளைப் பாராதிருக்க எனக்கு மனந்தாளாமையால் நகரஞ்செல்ல எனக்கு விடை யளிக்க வேண்டுகின்றேன்' என்று துயரத்துடன் வேண்டினன்.

அரசன் மனந்தவித்துச் சொன்ன மொழிகளைச் செவியுற்று புதன் அவ்வேந்தனை நோக்கி 'ராஜேந்திர! வீணாக வருத்த முறாதே; ஓராண்டளவு இங்கு நீ வாழ்ந்திருப்பையாயின், யான் உனக்கு வேண்டிய நன்மை விளைக்கின்றேன். சிறந்த பலசாலி யான நீ மனச்சோர்வடையலாகாது' என உரைத்தனன்.

அரசன் அதுகேட்டு மனந்தேறி அங்ஙனமே உடன்பட்டு அவ்விடத்திலேயே வசிக்கலாயினன். அக்காலையில் அவன் ஒரு மாதம் பெண்ணுருவாக மாறி எப்பொழுதும் புதனுடனே கூடி இன்புற்று வாழ்ந்து வந்தனன்; மற்றொரு மாதம் புருஷனாக மாறித் தருமானுஷ்டானம் செய்து வந்தனன். இங்ஙனம் ஒன்பது மாதங்கள் செல்ல ஒன்பதாவது மாதத்தினிறுதியில் இளையானவள் புரூரவனென்னும் ஒரு புதல்வனைப் பெற்றனள். பிறந்த மாத்திரத்திலேயே அப்புத்திரன் பிதாவுக்குச் சமமான வடிவமும் அழகும் உடையவனானது கண்டு அப்புதல்வனுக்கு உபநயனாதிகளைப் புதன் செய்து இனிது வளர்த்து வந்தனன். அம்மகனும் தந்தைக் கொப்பான ஆற்றலும் ஒளியுமுடையவனாகி நன்கு

விருத்தியடைந்து வந்தனன். அப்பால் புருஷனுக மாறின இளனை யைப் புதன் தருமமான பலகதைகளைச் சொல்லிக் களிப்புறச் செய்து வந்தனன்.

நூற்றோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிரண்டாவது ஸர்க்கம்.

## புதன் அசுவமேத யாகஞ்செய்வித்து இளனை மீண்டும் அரசனுக்கியது.

"தம்பிகாள்! இளன் மீண்டும் ஆணுருக்கொண்ட வளவில் மஹா மேதாவியான புதன் ஸம்வர்த்தர், சியவனர், பார்க்கவர், அரிஷ்டநேமி, பிரமோதனர், துர்வாசர் முதலான சிறந்த மகரிஷிகளை வரவழைத்து அரசனது (இளனது) சாபத்தைத் தவிர்க்கத் தக்க வழியைப்பற்றி அவர்களுடன் கூடி ஆலோசிக்கலாயினன். அச்சமயத்தில் கர்த்தமப் பிரஜாபதி பல மகாநுபாவர்களான பிராமணர்களுடன் அங்கு வந்து அங்குக் குழுமியிருந்த முனிவர்களையும் புதனையும் நோக்கி 'முனிவர்களே! இவ்வேந்தனுக்கு இப்பொழுது இதமானது யாதென்று ஆராய்மிடத்து முன்னம் இவனைச்சபித்த சிவபெருமானை வேண்டுவதை விட வேறு மருந்து எனக்குத் தோன்றவில்லை. அசுவமேதத்தினும் மேலான யாகம் வேறொன்றிலது. இந்த யாகமே அம்மகாநுபாவனுக்குப் பிரியமாகின்றது. ஆதலின் இப்பொழுது யாவரும் ஒன்று கூடி இவ்வேந்தன் பொருட்டு அவ்வேள்வி யியற்றுவோம்' என்று கூறினர். அதுகேட்டு அனைவரும் அதற்கு இணங்கினர்.

உடனே ஸம்வர்த்தரென்னும் ராஜரிஷியின் சீடரான மருத்தரென்பவர் அந்த யாகத்திற்கு வேண்டிய சகல சாமான்களையும் சேகரித்தனர். புதனுடைய ஆச்சிரமத்திற்கு அருகில் அசுவமேத யாகம் அற்புதமாக நடத்தப்பட்டது. அதனுல் பரமேசுவரன் பரம சந்தோஷ மடைந்தவனுகி சகல முனிவர்களுக்கு மெதிரில் வந்து தோன்றி அவர்கள் வேண்டிக்கொண்டபடி இளமகாராஜன் எப்பொழுதும் புருஷனுகவே யிருக்க அருள் புரிந்தனர். உடனே

இளன் ஸ்திரீ ரூபம் மாறி என்றைக்கும் புருஷனாகவே விளங்கி னன்.

அப்பால் சகல முனிவர்களும் விடைபெற்றுத் தந்தம் இருப் பிடம் போய்ச்சேர்ந்தனர். இளமகாராஜன் பாஹ்லி தேசத்தை விட்டு, மத்தியப்பிரதேசத்தில் பிரதிஷ்டான மென்கிற மிகப் பிர சித்தமான பட்டணமொன்று நிருமித்துக்கொண்டனன். சசபிந்து (இளனது மூத்தமகன்) பாஹ்லி பட்டணத்திலும் இளன் பிரதிஷ்டான நகரத்திலும் ராஜ்ஜிய பரிபாலனஞ் செய்து வந்த னர். இளமகாராஜன் தனது ஆயுள் முடிவில் பிரமலோகஞ் சென்ற அளவில் அவனது புத்திரனான புரூரவன் பிரதிஷ்டான நகரத்தில் பட்டாபிஷேகஞ் செய்யப் பெற்றனன். ஆகையால் சகோதரர்களே! இத்தன்மையதன்றோ அசுவமேதத்தின் பிரபா வம்! இது செய்வதே தகுதியாகும்'' என்றனன்.

நூற்றிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்று மூன்றவது ஸர்க்கம்

## வேள்வி புரிதற்கு வேண்டிய ஏற்பாடு செய்தல்.

இங்ஙனம் அற்புதமான இளன் கதையைக் கூறி முடித்தபின் ஸ்ரீராமபிரான் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! நீ உரைத்தபடி அசுவமேதமே புரிய விருப்பங்கொண்டிருக்கின்றேனாதலின் அதன் பிரயோகங்களை நன்குணர்ந்தவர்களான, வசிஷ்டர் வாமதேவர் ஜாபாலி காசியபர் முதலான பிராமணர்களை வரவழைத்து, அவர் களுடன் ஆராய்ந்து உணர்ந்து யாகஞ் செய்யத் தொடங்கி, சிறந்த லக்ஷணங்களுடன் கூடிய அசுவத்தை (குதிரையை) விடு வேன்'' என்றனன். அங்ஙனமே ஸௌமித்திரி அன்னவர்களை வரவழைத்து வர, ராமன் அவர்களை வணங்கித் தனதெண் ணத்தை அவர்களுக்குத் தெரிவித்தனன். அதுகேட்ட அவர்கள் 'நல்லது நல்லது' என்று ராமனைக் கொண்டாடினர்.

பிறகு ராமன் லக்ஷ்மணனை விளித்து "தம்பீ! நாமியற்றும் அற்புதமான வேள்வியைக் கண்டு மகிழுமாறு சகல வானரர்

களுடனும் இங்கு அதி சீக்கிரத்தில் வந்து சேரும்படி சுக்கிரீவ மகாராஜனுக்குத் தூதனுப்புக. விபீஷணனும் சகல ராக்ஷசர்களுடன் வந்து சேரும்படி அவனுக்கும் தூதனுப்புக. நமது நன்மையை நாடுகின்றவர்களாய் இப்பூமண்டலத்திலுள்ள அரசர்கள் பலரும் தங்கள் தங்கள் பரிவாரங்களுடன் நமது வேள்வியைக் கண்டு வியக்குமாறு வந்து சேரும்படி ஓலைகளனுப்புக.

தேசாந்தரங்களிலுள்ள வேதியர்களையும் முனிவர்களையும் தவசிகளையும் தங்கள் குடும்பத்துடன் நமது வேள்விக்கு வரவழைப்பாயாக. கீதவாத்தியங்களில் வல்லவர்களையும் நடனத்தில் தேர்ந்தவர்களையும் விசேஷமாக வரவழைக்கவேண்டும். யாம் வேள்வி புரிவதற்குக் கோமதி தீரத்தில் நைமிசாரணியத்திலே மிகப் பெரிதான யாகசாலை நிருமிக்குமாறு ஆஞ்ஞாபித்தல் வேண்டும். இப்பொழுதே அதற்குவேண்டிய சாந்தி கருமங்கள் செய்யுமாறு கட்டளையிடுக. லக்ஷக்கணக்கான சகடங்களில் சிறந்த அரிசி, எள்ளு, பயறு, கடலை, கொள்ளு, உளுந்து முதலான தானிய வர்க்கங்களும், உப்பும் இவைகளுக்கேற்றபடி நெய், எண்ணெய், பால், தயிர் முதலியவைகளும், பலவகை வாசனைத் திரவியங்களும், சந்தனக் கட்டைகளும், கோடிக்கணக்கான பொன் நாணயங்களும் பல கோடிக்கணக்கான வெள்ளி நாணயங்களுமாகிய பலவற்றையும் வெகு சாவதானமாக சேகரித்துக்கொண்டு பரதன் முன்னே செல்லுவானாகுக. அநேகமான சமையல்காரர்களும், பருவமுள்ளவர்களான பணிப்பெண்களும் பரதனோடு கூடவே புறப்பட்டுச் செல்லுக. அநேகம் சேனைகளும் வேதமோதியுணர்ந்த வேதியர்களும் வெகு சீக்கிரமாக முன்னதாகச் செல்லுக. அநேக வேலையாட்களையும், மந்திரி பிரதானிகளையும், நமது தாய்மார்களையும் பரதன் முதலியோருடைய அந்தப்புர ஸ்திரீகளையும், சீதைக்குப் பிரதியாக நிருமித்து வைத்திருக்கின்ற சுவர்ண சீதையையும், யாகஞ் செய்யும் முறைகளை நன்குணர்ந்த பல பிராமணர்களையும் முன்னிட்டுக் கொண்டு பரதன் முன்னெழுந்து செல்லுக. தங்கள் தங்கள் பரிவாரங்களுடன் கூடிவரும் வேந்தர்கள் பலருக்கும் ஆங்கு

உத்தமமான விடுதிகள் அநேகம் அமைத்துவைக்க வேண்டும்" என்று கட்டளையிட்டனன்.

நூற்று மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்று நான்காவது ஸர்க்கம்

## ராமன் அசுவமேத யாகஞ் செய்தல்.

அங்ஙனமே அசுவமேத யாகத்திற்கு வேண்டிய சகல காரியங்களும் கிரமப்படி மிகவும் அற்புதமாக நடந்து வருகையில் ஸ்ரீராமபிரான் ரித்துவிக்குகளைக் கொண்டு விதிமுறைப்படி சிறந்த லக்ஷணமுள்ள ஒரு கறுப்புக் குதிரையை லக்ஷ்மணனது காவலில் வைத்துவிடுத்து சகல சேனைகளும் புடைசூழப் புறப்பட்டு நைமிசாரணியம் போய்ச் சேர்ந்து அங்கு அற்புதமான யாகசாலையைக் கண்டு களிகூர்ந்தனன். சகலமான அரசர்களும், முனிவர்களும், வானரர்களும், ராக்ஷசர்களும் அங்கு வந்து சேர்ந்து அயோத்தி மன்னனை வணங்கி நிற்க அவ்வரசர்பெருமான் அவர்களை வரவேற்று அவரவர்க்கு ஏற்படுத்திய விடங்களில் இறங்குமாறு கட்டளையிட்டனன். அவர்களுக்கு வேண்டிய அன்னபானங்கள் ஆடையாபரணங்கள் ஆகியவற்றையும் பரதன் சத்துருக்கனனோடுகூடி உடனுக்குடன் கொடுத்து ஒன்றிலொன்று குறைவின்றி வேண்டியவாறு உபசரித்தனன்.

சுக்கிரீவ மகாராஜனும் மற்றுமுள்ள வானரர்களும் அங்குள்ள வேதியர்கட்கு வணக்கத்துடன் அடிசில் முதலியன பரிமாறி யுபசரித்தனர். விபீஷணன் தன் துணைவரான அரக்கர்களுடன் கூடி அங்குள்ள முனிவர்கட்குச் செய்யவேண்டிய பூஜைகளைச் செய்தனன். அசுவமேதயாகம் அனைவரும் கொண்டாடும்படி அற்புதமாக நடந்தது.

லக்ஷ்மணனால் பாதுகாக்கப்பட்ட மிகப் பெரிய பரிமாவினது செய்கையும் முறைப்படி அனுஷ்டிக்கப்பட்டு வந்தது. அந்த யாகத்தில் யாசகர்களுக்குத் திருப்தியுண்டாகுமளவும் சகலமான பொருள்களும் அவர்களுக்கு அளிக்கப்பட்டன. அங்குச் சென்றவர்களில் ஒருவராயினும் தமக்கு இன்னது குறையென்று

கூற விடமின்றி வேண்டியவைகள் எல்லாவற்றையும் பெற்று யாவரும் பெருமகிழ்ச்சிகொண்டு ஆனந்தமெய்தினர். அங்கு எழுந்தருளியிருந்த நெடுங்காலங் கண்ட நன் முனிவர் பலரும் 'இத்துணைச் சிறந்த யாகம் நடக்க நாங்கள் எந்நாளும் கண்டிலோம். இத்தன்மையது எந்நாளும் நடந்திலது' என வியந்து கொண்டாடினர். இந்திரன், குபேரன், யமன், வருணன் ஆகிய லோகபாலகர்கள் செய்த யாகங்களும் இங்ஙனம் சிறக்கக் கண்டதில்லை யெனத் தபோதனர்கள் போற்றிப் புகழ்ந்தனர். ராமன் இயற்றிய அசுவமேத யாகம் இவ்வண்ணமாகவே யாவும் குறைவற நிறைந்து ஓராண்டளவே யன்றி அதற்கு மேலும் ஓயாது நடந்து கொண்டிருந்தது.

**நூற்று நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.**

---

## நூற்றைந்தாவது ஸர்க்கம்.

## வால்மீகி குசலவருக்கு ராமாயணம் பாடக் கட்டளையிடல்.

இவ்வாறு சிறந்த வைபவத்துடன் நடக்கும் அற்புதமான அயமேத மாவேள்விக்கு வால்மீகி முனிவரும் தமது சீடர்களுடன் எழுந்தருளி அதைக்கண்டு வியந்து யாகசாலைக்குச் சமீபத்தில் ஒரு பர்ணசாலை நிருமித்து அதிலிறங்கினர். மகாராஜனை ராமனும் மற்றுமுள்ள முனிவர்களும் அவரை நல் வரவு கொண்டாடி விசாரித்து அவருக்குச் செய்யவேண்டிய உபசாரங்கள் யாவும் செய்தனர்.

அப்பொழுது அம்முனிவர் தமது சீடர்களான செல்வச் சிறுவர்களை (லவகுசர்) விளித்து "என் கண்மணிகளே! நீங்கள் இருவரும் கூடி வெகுஜாக்கிரதையுடன் புறப்பட்டு யான் கற்பித்த ராமாயணத்தைப் பெருமகிழ்ச்சியுடனே பாடிக்கொண்டு முனிவர்களின் வாசஸ்தானங்களிலும் பிராமணர்கள் இறங்கியிருக்குமிடங்களிலும் பெருவீதிகளிலும் ராஜமார்க்கங்களிலும் விநோதமாகச் செல்லுக. யாகம் நடக்குமிடமான ஸ்ரீராமபிரானது சன்னிதானத்திலும், ரித்துவிக்குகளின் எதிரிலும் இதனை விசேஷ

மாகப் பாடுக. இதோ யதேஷ்டமான இனிய கனிகிழங்குகள் இருக்கின்றன. இவற்றைப் புசிப்பீர்களாயின் உங்களுக்குச் சிறிதும் இளைப்புத் தோற்றாது. முனிவர்களுடைய மத்தியில் ராமன் உங்களது பாட்டைக் கேட்கச் சமீபத்தில் வரவழைப்பானாயின் அவ்விடத்துஞ்சென்று நீங்கள் கானஞ் செய்யலாம். யான் உங்களுக்கு முன்னம் போதித்தவாறே சுலக்ஷணமாக மிகவும் மதுரமாய்க் கேட்போர்க்கு கர்ணாமிருதமாய் இருக்கும்படி பிரதி தினம் இருபது ஸர்க்கம் வீதமாகக் கானஞ்செய்துவருக. யாவரேனும் உங்களுக்குப் பொருள்கொடுப்பதாகக் கூவியழைத்தால் நீங்களவ்விடம் செல்லவேண்டா. நீங்கள் யாருடைய குமாரர்களென்று ராமன் கேட்பானாயின் வால்மீகி முனிவரது சீடரென்று அவனுக்கு விடைகூறுக. இந்த ராமாயணத்தை யாழின் தந்திஸ்வரத்துடனே அதிமதுரமாகச் செவிக்கின்பமாய் ஆதிதொடங்கியே வெகுதீரமாகப் பாடுவீர்களாக. நாளைக் காலை தொடங்கி நீங்கள் யான் சொன்னவண்ணம் சரியாக வீணைமீட்டிக்கொண்டு செவிக்கின்பமாக ராமாயணத்தைப் பாடிவருக" எனக் கட்டளையிட்டனர்.

நூற்றைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றாறவது ஸர்க்கம்.

## பிள்ளைகள் பாடுவதுகேட்டுச் சபையோர் மகிழ்தல்.

பிறகு அன்றிரவு நீங்கிப் பொழுது புலர்ந்ததும் அவ்விரட்டையர் காலையிலெழுந்து நீராடிச் சந்தியாவந்தனமும் ஹோமதானமும் செய்து முனிவர் கூறியவண்ணம் இராமாயணத்தைக் கானஞ் செய்துகொண்டே சென்றனர். அக்காலையில் ஸ்ரீராமபிரான் அதைக்கேட்டு மிகவும் வியந்து களிப்படைந்தனன். அப்பால் ராமன் தனது வைதிக காரியங்களைச் செய்து முடித்துக்கொண்டு கற்றுணர்ந்த பெரியோர்களையும், விருத்த குத்திரமறிந்தவர்களையும், சங்கீதத்தில் தேர்ச்சியடைந்தவர்களையும், வியாகரணம் நீதி சாஸ்திரம் முதலிய சாஸ்திரங்களில் பாண்டித்திய முடையோரையும், முனிவர்களையும் மற்றும் பலரையும் வரவழைத்துச் சபை

கூட்டி மிக்க பெருஞ்சபை நடுவே இந்தச் சிறிய பாடகர்களை (லவகுசர்களை) வந்து உட்காரும்படி நியமித்தனன்.

அப்பொழுது அச்சபையில் வந்து கூடிய முனிவர்களும் மன்னவர்களும் ராமனையும் அச்சிறூர்களையும் தமது கண்களால் பானம் பண்ணுகின்றவரெனச் சிறிது நேரம் இமைகொட்டாது நோக்கி 'ஆ! இக் குமாரர்களிருவரும் ரூபசௌந்தரியங்களில் ராமனுக்கு முற்றும் சமானமாய் இருக்கின்றனர். ஒரு பிம்பத்தினது பிரதிபிம்பமெனவே தோற்றுகின்றனர். இப்பாலர்களுக்குச் சடைமுடியும் மரவுரியுமாத்திரமில்லாதிருக்குமாயின் இப் பாடும் பிள்ளைகளுக்கும் நம்மரசனுக்கும் பேதமே தோற்றாது' என்று ஆங்காங்கு தனித்தனி பேசிக்கொள்ளலாயினர்.

அக்காலையில் அம் முனிமக்கள் கேட்போர்க்கு ஆனந்தம் மேன்மேலும் விளைவிக்குமாறு மதுரமாகப் பாடத்தொடங்கினர். அதுவரையில் மானிட உலகத்தவர்களால் எந்நாளும் பாடப்படாத திவ்வியமான அவர்களது கானத்தைக் கேட்டவர்களனைவரும் கேட்கக் கேட்க ஆனந்தமதிகரித்தவர்களாகிச் சிறிதும் திருப்தியடையாதவராயினர். முதல் இருபது ஸர்க்கங்களைக் கேட்ட ராமன் அப்பாலர்களுக்குத் தனித் தனிப் பதினெண்ணாயிரம் பொன்னும் பின்னுமவர்கள் யாது வேண்டினும் கொடுக்கும்படி தனது சகோதரர்களுக்குக் கட்டளையிட்டனன்.

அப்பொருள்களை அங்ஙனமே வெகு சீக்கிரத்தில் லக்ஷ்மணன் கொண்டு கொடுக்க அப்பாடகர்கள் அவற்றைப் பெற்றுக்கொள்ளாமல் "காட்டிலுள்ள கனிகிழங்குகளையே ஆகாரமாகக்கொண்டு வசிக்கும் நாங்கள் இவற்றைப் பெற்று யாது செய்வோம்? எமக்குப் பொன்னும் பொருளுமேதுக்கு?" எனச் சிறிதும் பொருளாசை யில்லாதவர்களாய்ப் பணித்தனர். அதுகேட்டு அச்சபையிலுள்ளோரும் ஸ்ரீராமபிரானும் மிக்க வியப்புற்றவர்களாகி அச் சிறுவர்களை மேலாகக் கொண்டாடினர்.

பிறகு ராமன் அந்தக் காவியத்தின் வரலாற்றைக் கேட்க ஆவல் கொண்டு அக் குமாரர்களை நோக்கி "சிறுவர்காள்! நீங்கள் பாடும் இக்காவியம் எவ்வளவு பெரியது? எது வரையில் இயற்

றப்பட்டுள்ளது? இம்மகா காவியத்தை இயற்றியவர் யார்? அவர் இப்பொழுது எங்கே எழுந்தருளி யிருக்கின்றனர்?'' என வினவ அக்குழந்தைகள் "மகாப்பிரபுவே! இக்காவியத்தை இயற்றியது வால்மீகி பகவான்; அவர் இப்பொழுது இந்த யாகத்திற்கு இவ்விடமெழுந்தருளி யிருக்கின்றனர். இப்பிரபந்தம் இருபத்தினாலாயிரம் சுலோகங்களும் நூறு உபாக்கியானங்களு மடங்கியது. இதனை ஆதிமுதல் ஐந்நூறு ஸர்க்கங்களாகவும் ஆறு காண்டங்களாகவும் வகுத்து அவற்றுடன் உத்தர காண்டமும் சேர்த்துச் செய்தருளி யிருக்கின்றனர். இந்த கதாநாயகர் இவ்வுலகினில் ஜீவித்திருக்குமளவும் நடக்கும் அவரது சரித்திரம் யாவத்தும் இதில் கூறப்பட்டுள்ளது. ராஜனே! தேவரீருக்கு இஷ்டமாயின் வைதிக காரியங்களொழிந்து சாவகாசமாயிருக்கையில் சகோதரர்களுடனே தேவரீர் கேட்டருளலாம்'' என்று விண்ணப்பஞ் செய்தனர்.

'அப்படியே செய்க'வென்று ராமன் அனுமதிகொடுக்க, அக்குமாரர்கள் அவனிடம் விடைபெற்றுக்கொண்டு வால்மீகி முனிவரிடம் போய்ச் சேர்ந்தனர். ராமனும் அக்குழந்தைகள் தாளலயைகளுக்கிசைய வீணைமீட்டி இனிய குரலுடன் பாடிய கானத்தின் இனிமையைக்கேட்டுக் களிகூர்ந்தவனாகி யாகசாலைக்கெழுந்தருளினன்.

நூற்ராறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றேழாவது ஸர்க்கம்.

### சீதை சபதஞ்செய்ய வருவதை ராமன் அறிதல்.

அன்று முதல் ராமன் நாள்தோறும் பல முனிவர்களும் அரசர்களும் வானரர்களும் புடைசூழச் சபையின் நடுவே முனிகுமாரர்களை வரவழைத்து மிகச் சிறந்ததும் சுபமானதுமான அவர்களது சங்கீதத்தைக் கேட்டுக் களிகூர்ந்தனன். இங்ஙனம் பலநாள் நடந்து வருகையில் அந்த கானத்தினாலேயே அக்குசலவர்கள் ஜானகியிடம் பிறந்த தனது புதல்வர்களெனவறிந்து அக

மகிழ்ந்து ராமன் ஒருநாள் சபைநடுவே சிறந்த தூதர்களை விளித்து "நீங்கள் உடனே வால்மீகி முனிவரிடம் சென்று 'சீதை குற்றமில்லாத நல்லொழுக்கமுள்ளவளாயின் அம்முனிவரது அனுமதி பெற்று இச்சபையிலுள்ள அனைவர்க்கும் நம்பிக்கை யுண்டாகும்படி அவள் தான் மிகப் பரிசுத்தமானவளெனப் பிரமாணஞ் செய்யக்கடவள்' என யான் சொன்னதாய் அம்முனிவரிடம் அறிவித்து இது விஷயத்தில் அவரது கருத்தும் சீதையினது கருத்தும் இத்தன்மையதெனத் தெரிந்துகொண்டு தீவிரமாக வருக" என நியமித்தனன்.

அத்தூதர்கள் அங்ஙனமே வேகமாக வால்மீகி முனிவரிடஞ் சென்று ராமனது கருத்தை வெளியிட்டனர். அதுகேட்டு அம் முனிவர் "தூதர்களே! உங்களுக்கு மங்களமுண்டாகுக. சீதா தேவி அப்படியே பிரமாணஞ் செய்வாள்; குலமகட்குத் தெய்வம் கொழுநனே யன்றோ" என்றருளிச்செய்ய அவர்கள் ராமனிடஞ் சென்று அதையறிவித்தனர்.

ராமன் மகரிஷியினது சொல்கேட்டு மகிழ்ச்சிகொண்டு ஆங்குவந்துகூடிய ரிஷிகளையும் அரசர்களையும் நோக்கி "சபையோர்களே! நாளைய தினம் சீதை தனது நல்லொழுக்கத்திற்கு நிதர்சனமாகப் பிரமாணஞ் செய்யப்போகின்றனள். சீடர்களுடன் கூடின சகலமான முனிவர்களும் பரிஜனங்களுடன் கூடின அரசர்களும் அதனை வந்து நேரில் பார்க்கலாம். இன்னு*மெவனேனும் காணக் கருத்துடையனாயின் அவனும் அதனை வந்து காணலாம்" என யாவருமறிய எடுத்துரைத்தனன்.

மன்னவனது மொழியைச் செவியுற்ற அனைவரும் 'நன்று நன்று. இங்ஙன முரைப்பது இப்புவியில் ராமன் ஒருவனுக்கே தகும். மற்று எவர்க்கும் தகாது' என்று கூறி ராமனைப் போற்றிப் புகழ்ந்தனர்.

நூற்றேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

* எவனேனுமென்றது சீதையின்மேல் பழிகூறிய பாவியைக் குறிக்கும்.

## நூற்றெட்டாவது ஸர்க்கம்.

## சீதையின் தூய்மையை வால்மீகி வெளியிட்டது.

அப்பால் மறுநாள் பொழுது விடிந்ததும் அனைவரும் தந்தம் காலைக்கடன்களை முடித்துக் கொண்டு ராஜசபைக்கு வந்து சேர்ந்தனர். ராமன் அனைவர்க்கும் முன்னமே தனது சகோதரர்களுடன்வந்து சிங்காசனத்தில் வீற்றிருந்தனன். ஆங்கு அப்பொழுது சகலமான முனிவர்களும், ராக்ஷசர்களும், வானரர்களும் சீதையைக் காணப் பேராவல் கொண்டவர்களாகி வந்து நிறைந்தனர். இவ்விதமாகவே நானா தேசங்களிலிருந்து வந்த க்ஷத்திரியர்களும் வைசியர்களும், சூத்திரர்களும் ஆயிரமாயிரமாக வந்து கூடினர்.

அப்பொழுது வால்மீகி முனிவர் சீதாதேவியுடன் ராஜசபைக்கு வெகு சீக்கிரமாக எழுந்தருளினர். அவரது பின்புறத்தில் சீதை, ராமனையே தன் மனத்தில் தியானித்த வண்ணமாகத் தனிந்த சென்னியும் குவித்தகையுமாய்க் கண்களில் நீர்ததும்ப அவரைத் தொடர்ந்து சென்றனள். மைதிலியினது மகத்தான துயரத்தைக்கண்டு சபையிலுள்ளவர் பலரும் ஒருவர்க்கொருவர் கலகலவெனப் பலவாறு பேசிக்கொள்ளலாயினர். 'ராமன் இங்ஙனஞ் செய்யத்தகுமோ' வெனச் சிலர் சொல்லிச் சோகமுற்றனர். 'சீதையினுடைய பொறுமையை யாம் என்னென்று சொல்வது?' எனப் பலர் புகழ்ந்தனர். 'இங்ஙனமொழுகுதல் இவர்களிருவர்க்குமே தகும்' என வேறு சிலர் வியந்தனர்.

அப்பொழுது வால்மீகி முனிவர் ராமனை நோக்கி "ஹே! தாசரதே! இதோ நிற்கின்ற சீதாதேவி மகா பதிவிரதை; எந்நாளும் மேலான தருமங்களையே அநுஷ்டித்து வருபவள். அவள் தனது கற்பு நிலைமை நன்கு விளங்க இன்று இச்சபை நடுவே சபதஞ் செய்ய வந்திருக்கின்றனள். பாடுகின்ற இப்பாலகர்கள் இருவரும் உன்னுடைய புத்திரர்களேயென நான் பிரமாணமாகச் சொல்லுகிறேன். யான் எப்பொழுதும் பொய் புகலாதவன்; வருணனகவானது பத்தாவது புதல்வன். யான் பல்லாயிர மாண்டுகள் பெருந்தவம் புரிந்திருக்கின்றேன். இம்மைதிலி குற்றமுள்ளவ

ளாயின், அநேகமாயிர மாண்டுகளாக யானியற்றிய தவங்களின் பயனை யிழக்கக் கடவேன்.

ராமா! யான் எனது பஞ்சேந்திரிய சாக்ஷியாயும் மனச் சாக்ஷியாயும் மிகப்பரிசுத்தமானவள் என ஆய்ந்துணர்ந்தே வனத்தில் தனியே நின்று புலம்பிய இப்பதிவிரதையை யழைத்து ஆதரித்து வந்தேன். இவளை நீ வனத்தில் விடுத்த காலத்திலேயே யான், இவளைச் சிறிதும் களங்கமற்ற குணபூஷணி யெனவும், இவளது தூய்மை உன் மனத்திற்கே தெரிந்திருக்கையிலும் லோகாபவாதத்தைக் கேட்டு மனங் கலங்கியே நீ இவளை யங்ஙனம் துறந்தாயெனவும் யோக திருஷ்டியால் அறிந்து கொண்டேன்" என யாவருக்கும் நன்கு விளங்கக் கூறினர்.

நூற்றெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றென்பதாவது ஸர்க்கம்.

## சீதை பிரமாணஞ் செய்து பூமியில் புகுதல்.

அதுகேட்டு ராமன் அம் மகாசபையின் நடுவில் கைகூப்பி நின்று வால்மீகி முனிவரை நோக்கி "தபோ நிதியே! தேவரீர் உறுதியாகச் சொன்ன சத்திய வாக்கினாலேயே அடியேனுக்கு நம்பிக்கை யுண்டாகி விட்டது. அன்றியும் முன் ராவண சங்காரமான பின் தேவதைகளின் முன்னிலையில் நடந்த காரியத்தினாலேயே இவளிடத்தில் அடியேனுக்கு சந்தேகம் நீங்கியது. இவள் சிறிதும் குற்றமில்லாதவள் என யான் நன்குணர்ந்தவனாயினும் உலகநிந்தைக் கஞ்சியே இவளைக் கைவிட வேண்டியதாயிற்று. தேவரீர் அப்பிழையைப் பொறுத்தருள வேண்டுகின்றேன். சீதை இப்பொழுது இம் மகாசபையில் தான் மிகப் பரிசுத்தமானவளென்பதை வெளியிட்டு எனக்குத் தன்னிடம் விசுவாச முண்டாகுமாறு செய்துகொள்ளக்கடவள்" என்றனன்.

அப்பொழுது சீதாபிராட்டியார் சபதஞ்செய்வதைக் காணும் பொருட்டு இந்திராதி சகலதேவர்களும் நான்முகனை முன்னிட்டு ஆங்கு வந்து குழுமினர். பன்னிரண்டு ஆதித்தியர், எட்டு வசுக்

கள், பதினொரு ருத்திரர்கள், அசுவினீ தேவதைகள், மருத்துக்கள், கந்தருவர், விச்வே தேவர்கள், தேவரிஷிகள் ஆகிய அனைவரும் வந்து கூடினர்.

அச்சமயம் திடீரென்று வாயுதேவன் திவ்வியமான பரிமளத்துடன் மனோஹரமாகவும் மங்களமாயும் வீசிச் சபையோர் அனைவரும் மகிழுமாறு செய்தனன். அவ்வற்புதத்தைக் கண்டு மண்ணவரும் விண்ணவரும் 'இஃதென்ன கிருதயுகமோ?' என்று வியப்புற்று நின்றனர்.

இங்ஙனம் மண்ணோரும் விண்ணோரும் வந்து குழுமியிருக்கும் மிக்க பெருஞ்சபை நடுவில் அரையில் காஷாய வஸ்திரம் தரித்த வைதேகி சபையோரனைவரையும் நோக்கிக் கைகூப்பிக்கொண்டு தலையைக் குனிந்து தரையை நோக்கிய வண்ணமாய் "யான் மனமொழி மெய்களால் என்றும் ராமனையே பூஜித்திருப்பவளாயின், இப்பூமா தேவி எனக்கு இடங்கொடுக்கக்கடவள். யான் ராமனையன்றி மற்று எவரையும் மனத்தினாலும் சிந்தியாதவளாயின் இப்பூமாதேவி எனக்கு இடங்கொடுக்கக்கடவள். யான் உரைத்தவை யாவும் உண்மையேயாயின், ராமனையன்றி மற்றெவரையும் அறியாதவளாயின் என்னைப்பெற்ற பூமாதேவி எனக்குத் தன்னுள் இடங்கொடுக்கக்கடவள்" என மூன்றுதரம் சபதஞ் செய்தனள்.

உடனே திடீரென்று பூமியினின்றும் ஒப்புவமையில்லாத திவ்வியமான சிங்காதனமொன்று திவ்விய சரீரமுள்ள நாகங்களால் முடிகளில் தாங்கப்பெற்று வெளித்தோற்றியது. உடனே பூமிதேவி வந்து தோன்றிச் சீதாபிராட்டியை நல்வரவு கொண்டாடி அன்புடன் போற்றிப் புகழ்ந்து தனது இரண்டு கைகளாலும் அணைத்தெடுத்து அச்சிங்காதனத்தின்மீது வைத்துக்கொண்டனள். அவ்வாசனத்தில் வீற்றிருந்தவாறே, சீதை பூதலத்தினுள் பிரவேசிக்க அதுகண்டு விண்ணவர்கள் சீதையின்மீது ஓயாது பூமாரி பொழிந்து 'நன்று நன்று' எனப் புகழ்ந்து கொண்டாடினர்.

அவ்வதிசயத்தைக் கண்டு யாகசாலையில் வந்து கூடிய முனிவர்களும் மன்னவர்களும் மற்றுமுள்ள பலரும் வெகு நேரமளவும் யாதும் தோற்றாது ஆனந்தித்துக்கொண்டே யிருந்தனர். மண்ணிலும் விண்ணிலுமுள்ள சராசரங்களனைத்தும் ஆகாயத்தில் நின்ற அசுரர்களும், பாதாளத்திலிருந்த பன்னகர்களுமாகிய யாவரும் 'சீதைக்குண்டாயிருந்த அபவாதம் தொலைந்தது' என்று அகமகிழ்ந்து ஆனந்தக் கூச்சலிட்டனர். மைதிலி மகிதலத்தில் புகுந்தது கண்டவளவிலே அனைவரும் அதிகமான ஆச்சர்யமடைந்தவர்களாக, ஒரு முகூர்த்த காலம் இவ்வுலகம் முழுமையுமே மோகத்தில் மூழ்கியதுபோலாகிவிட்டது.

நூற்றொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப் பத்தாவது ஸர்க்கம்

## ஸ்ரீராமபிரானைப் பிரமதேவன் தேற்றியது.

வைதேகி வசுதாதலத்தில் புகுந்தபொழுது வானரர்களெல்லாரும் 'ஆ! ஆ!!' எனக் கூச்சலிட்டனர். முனிவர்களெல்லாரும் ஸ்ரீராமபிரானது சந்நிதானஞ்சேர்ந்து 'இதென்ன ஆச்சரியம்?' என்று கூறி பிரமித்து நின்றனர். ராமன் ஒரு தண்டத்தை யூன்றித் தலை குனிந்து கண்ணீர் மல்கி மனஞ்சோர நின்று அழுதாற்றிக் கோபமும் சோகமும் விஞ்சப் பூமிதேவியை நோக்கி "நிலமகளே! ஸ்ரீதேவியெனச்சிறந்த ரூபவதியாய் விளங்கும் வைதேகி என்கண்ணெதிரிலேயே காணுமற்போனதால் ஒருநாளு முண்டாகாத விசனம் இப்பொழுது உண்டாகி என்மனத்தை மிக வருத்துகின்றது. முன் நெடுங்கடலுக்கப்பால் இலங்காபுரியிற்சென்றிருந்த சீதையைச் சிறை நீக்கிக்கொணர்ந்த எனக்கு இப்பொழுது உன்னிடமிருந்து எடுத்துக் கொள்வது ஒரு பெரிய காரியமோ? ஆதலின் நீயே மைதிலியை என்னிடம் அழைத்துக்கொண்டு விடுவது நலம். அங்ஙனஞ் செய்கின்றனையா? என் கோபத்தை யான் உன்மேல் செலுத்துவதா? சீக்கிரம் உனது மகளான சீதையை என்னிடம் அழைத்து வருக. இல்லையேல் அவளுக்கு இடங்கொடுத்ததுபோல் எனக்கும் உள்ளே போக இடங்கொடு. பாதாளத்

திலோ, நாகலோகத்திலோ வைதேகியுடன் கூடி யானும் வசிக்கின்றேன். அவள் பொருட்டு நான் அதிகமாக மோகங்கொண்டிருக்கின்றேன். அங்ஙனமில்லையாயின் நீ நிலைகுலையுமாறு இந்நானில முழுமையும் நாசமாக்கி விடுகிறேன் பார்." என்றனன்.

ராமன் இங்ஙனம் சினமும் சோகமும் மேலிட்டுக் கதறுமளவில் சகல தேவதைகளுடன் பிரமதேவன் அவ்விடத்திற்கு வந்து ரகுவீரனை நோக்கி "ஹே ராமா! நீ இங்ஙனம் வருந்தலாகுமா? உனது பூர்வ சொரூபமான விஷ்ணுபாவத்தையும் நீ தேவதைகளுடன் கூடி நிர்ணயித்த காரியத்தையும் நினைத்துக் கொள்க. இத்தருணத்தில் உனது நிகரற்ற நாராயண ரூபத்தை நினைந்துச் சோகந் தணிக. அணுவளவும் இழுக்கில்லாத சீதாபிராட்டி உனது ஆதியுருவத்தை யனுக ஆவல் கொண்டு இப்பொழுது ஸ்ரீ வைகுண்டத்தில் இனிது வீற்றிருக்கின்றனள். நீ பரமபதத்தில் அப்பிராட்டியுடன் சேரலாகும்; இதிற் சந்தேகமில்லை.

ஹே ராமா! காவியங்கள் பலவற்றிலும் சிறந்த உனது சரித்திரமான இம்மஹா காவியமே முழுமையும் கேட்கப்படுமாயின், எல்லாவற்றையும் உனக்கு விளங்க நினைப்பூட்டு மென்பதற்குச் சந்தேகமிலது. வீரனே! உனது திரு அவதாரம் முதற்கொண்டு சுகதுக்க ரூபமாக நடந்த நினது சரித்திரமும், இனிது நடக்கப் போகிற உத்தரசரிதமுமாகிய யாவும், வால்மீகி முனிவன் எனது அநுக்கிரகத்தினால் அற்புதமாகச் செய்திருக்கின்றனன். இதுவே ஆதி காவியமெனப்படும். ரகுகுல திலகனே நீயொருவன் தவிர மற்று எவரும் இக்காவியத்திற்குக் கதா நாயகனாகின்ற பெருமை வாய்ந்தவனல்லன். மிகவும் அற்புதமாயிருக்கின்ற சத்தியமாகிய நினது திவ்விய சரிதத்தை யான் முன்னமே சகல தேவர்களுடனும் சந்தேகமறக் கேட்டுக் களித்திருக்கின்றேன். ஆதலின், ஹே ராகவா! உனது மிகுந்துள்ள கதையை விளக்கும் உத்தர ராமாயணத்தையும் முனிவர்களுடனே கூடிக் கேட்டருள்க" என்று கூறி ராமனைச் சமாதானப் படுத்தி பிரமதேவன் தேவர்களுடன் கூடி விடைபெற்று விண்ணுலகஞ் சென்றனன். பிரமலோகத்தவர்களான மகரிஷிகள் இனி நடக்கப்போகின்ற ஸ்ரீ

ராகவனது சரிதமாகிய உத்தர ராமாயணத்தைக் கேட்கக் காதல் கொண்டவர்களாகி அம்புயத்தோனிட மனுமதி பெற்று அவ்விடம் திரும்பி வந்தனர்.

அச்சமயம் அவனியினின்றும் அசரீரி வாக்கொன்று உண்டாகி "ஹேராம! வீணனவருத்தத்தை மேற்கொள்ளாது மகிழ்க. பிரமதேவன் கூறியது யாவுமுண்மையே. அதன்படி நடப்பாயாக" என்று கூறியது. உடனே ராமன் வால்மீகி முனிவரை நோக்கி "முனிவர் பெருமானே! எனது உத்தர சரித்தைக் செவிக்கொள்ளுமாறு பிரமலோகத்து முனிவர்களும் வந்து காத்திருக்கின்றனர். நாளைய தினம் அதனை நடத்தல் வேண்டும்" எனமொழிந்து அங்குள்ள யாவருக்கும் விடை கொடுத்து குமாரர்களைக் கையில் பிடித்துக்கொண்டு பர்ணசாலைக்கெழுந்தருளினன்.

நூற்றுப்பத்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பதினோராவது ஸர்க்கம்

## ஸ்ரீராமபிரான் பல யாகங்கள் செய்தருளியது.

இராப்பொழுது கழிந்து மறுநாள் உதயமானவளவில் ராமன் முனிவர்களெல்லோரையுமழைப்பித்து, அவர்களனைவரும் தத்தமக்குரிய ஆசனங்களில் அமர்ந்த பின்னர் மற்றக் காவியத்தையும் கானம் பண்ணுமாறு தனது குமாரர்களுக்குககட்டளையிட அவர்கள் உத்தர ராம சரிதத்தை முறையே பாடத்தொடங்கினர். சீதையைப் பிரிந்த ராமனுக்கு இவ்வுலகம் முழுமையுமே சூனியமாகத் தோற்றியது. அதனால் ராமன் சோகந்தணியாதவனாகி அந்த யாகத்தை விதிமுறைப்படி நிறைவேற்றி அவரவர்க்குச் செய்யவேண்டிய சன்மானங்களைச் செய்து சகலமான ராஜாக்களையும் வானர ராக்ஷசர்களையும், மற்றுமுள்ள பலரையும் விடை கொடுத்தனுப்பிவிட்டு, மைதிலியின் மோகமே மனத்திற்குடி கொண்டவனாகி அயோத்தியாபுரிக்குச் சென்றனன்.

அப்பால் ராமன் தனது குமாரர்கள் இருவருடனும் கூடிக் களித்து, அநேக யாகங்களியற்றி அறம் வளரச் செய்தனனேயல்

லது, மைதிலியையன்றி மற்றொருத்தியை மனையாட்டியாக மணம் புரிய மனமிசைந்திலன். அவனியற்றிய ஒவ்வொரு யாகத்திற்கும் பொற்சீதையே பத்தினியாக நின்றனள். பொற்சீதையையே கொண்டு பதினாயிரமாண்டளவு ராமன் அசுவமேதயாகங்கள் அநேகம் செய்தருளினன். அதுவன்றி அவற்றினும் பதின்மடங்காய் வேண்டிய பொருள் செலவு செய்து வாஜபேயம், அக்கினிஷ்டோமம், அதிராத்திரம், கோஸவம் முதலான இன்னுமநேகம் யாகயக்ஞங்களுமியற்றி விசேஷமான தக்ஷிணைகள் கொடுத்து அறநெறி தவறாது பிரஜைகளைப் பாதுகாத்து வந்தனன்.

ராமன் இங்ஙனம் இராஜ்ஜியபரிபாலனஞ் செய்து வருகையில் அவனை வானரர்களும் இராக்கதர்களும் பிரதி.தினம் வந்து சேவித்து அவனை அகமகிழச் செய்து அவனது ஆணைக்கு உட்பட்டு நடந்து வந்தனர். ராம ராஜ்ஜியத்தில் காலந்தவறாது மாதம் மும்மாரி பொழிய ராஜ்ஜியமெங்கும் செழிப்பாய் இருந்தது. நாட்டிலும் நகரத்திலுமுள்ள நாலுவிதமான ஜனங்களும் புஷ்டியும் துஷ்டியு மடைந்தனர். அந்நாளில் எவர்க்கேனும் அகால மரணமென்பதே சம்பவித்ததில்லை. ஒருவர்க்கும் ஒருவிதமான வியாதியும் உண்டானதில்லை.

இவ்விதம் பலவாண்டுகள் செல்ல ராமனது தாய்மார்களான கௌசலை, சுமித்திரை, கைகேயி முதலியோர் புத்திரர்களும் பேரன்மார்களும்புடைசூழ்ந்திருக்க ஒருவர்பின்ஒருவராக சுவர்க்க லோகமடைந்து ஆங்குத் தம் கணவனான தசரதனுடன் கூடிக் களிப்புற்றிருந்தனர். ராமன் அவர்களுக்குச் செய்யவேண்டிய சரமகிரியை (மரணச்சடங்கு) முதலான எல்லாவற்றையும் யாவர்க்கும் வேற்றுமையின்றி ஒரே சீராக நடத்திச் சிறந்த தருமங்களை அந்தணர்கட்கும் அருந்தவ முனிவர்கட்கும் அந்தந்த காலத்தில் தவறாமல் செய்து, பிதிர் தேவதைகளுக்குப் பிரீதியை விருத்தி செய்பவையான பிண்டபிதிர் யஞ்ஞம் முதலியவற்றையும் செய்து சந்தோஷிப்பித்தனன். இங்ஙனம் அநேகமாயிர வருடங்கள் கழிந்தன.

நூற்றுப்பதினோராவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்றுப்பன்னிரண்டாவது ஸர்க்கம்

## யுதாசித்து ஸ்ரீராமனிடம் தூதனுப்பியது கூறல்.

இங்ஙனம் சிலகாலஞ் செல்லுகையில் ஒருகால் கேகய தேசாதிபதியான யுதாசித்து மன்னவன் ஸ்ரீராமனுக்குப்பரிசாகப் பலவாயிரம் நற்பரிகளும் விசித்திரமான வஸ்திரங்களும் அற்புதமான ஆபரணங்களும் கொடுத்துத்தமது புரோகிதரான கார்க்கிய முனிவரை ராமனிடம் அனுப்பினன். அம்முனிவர் வருவது கண்டு ராமன் தனது சைன்னியங்களுடன் அவரை ஒரு நாழிகை வழிதூரமெதிர்கொண்டு சென்று தேவேந்திரன் தேவ குருவைப் பூஜிக்குமாபோலவே அவரைப் பூஜித்தனன்.

அப்பால் ராமன் தன் மாமன் கொடுத்தனுப்பிய மேலான பொருள்களைப் பிரீதியுடன் பெற்றுக் கொண்டு ஒவ்வொருவர் யோக க்ஷேமங்களையும் வினவிய பின்னர் அம்முனிவரை நோக்கி "சுவாமி! எனது நல்லம்மான் யாது நியமித்தருளினர்? தேவரீர் இவ்வளவு தூரம் எழுந்தருளின விசேஷம் யாது?" என வினவ கார்க்கிய முனிவர் கூறலுற்றனர்.

"ஹே! காகுத்த! நமது நாட்டிற்கருகில் மிக்க வளமுள்ள கந்தருவ தேசம் சிந்து நதியின் இருகரையும் பரவியிருக்கின்றதல்லவா? அந்நாட்டைச் சைலூஷனது மக்களும் சிறந்த பலிஷ்டர்களுமான கந்தருவர் அநேகமாயிரத்தவர் கைப்பற்றிக் கொண்டு அரசர்கள் பலரைத் துன்புறுத்தி வருகின்றனர். ஆதலின், ராமா! நீ உடனே அக்கொடிய கந்தருவர்களை வென்று அவர்களது நகரத்தை நமது ராஜ்ஜியத்துடனே சேர்த்துக் கொள்ளவேண்டும். இக்காரியம் உன்னையன்றி மற்று எவராலும் முடியத்தக்கதன்று. நீ இக்காரியத்திற்கு உடன்பட வேண்டும் என்று உனது நல்லம்மான் சொல்லியனுப்பினர்" என மொழிந்தனர்.

மாமன் சொல்லியனுப்பிய விருத்தாந்தத்தை மகரிஷியின் மூலமாய்க் கேட்ட ராமன், பரதனை விழித்து நோக்கிப் பிறகு அம்முனிவர் பெருமானைப் பார்த்து "சுவாமி! நம் பரதனது மகக

ளான மகாவீரர்களாகிய தக்ஷனும், புஷ்கலனும் அத்தேசத்திற்கு வருகின்றனர். இவர்கள் வேண்டிய படைகள் புடைசூழப் பரதனை முன்னிட்டுப் புறப்பட்டு அங்குச் சென்று அக் கந்தருவர்களை வெற்றி கொள்வார்கள். பிறகு அவ்விராஜ்ஜியத்தை இரண்டு பாகங்களாகப் பிரித்து அவ்விரண்டிலும் இவ்விரண்டு புத்திரர்களுக்கும் பட்டாபிஷேகஞ் செய்வித்துப் பரிபாலித்து வருமாறு ஸ்தாபித்துப் பரதன் திரும்பி என்னிடம் வந்து சேருவான்." என்று கூறிச் சீக்கிரம் சேனைகளுடன் புறப்படுச் செல்லுமாறு பரதனுக்குக் கட்டளையிட்டு அக்குமாரர்களுக்கு அவ்விடத்தில் அப்பொழுதே அபிஷேகஞ் செய்வித்தனன்.

பிறகு பரதன் தனது குமாரர்களுடனும் பெருஞ் சேனையுடனும் புறப்பட்டுச் சென்று பதினைந்து நாள் வழி நடந்து சுகமாகக் கேகய தேசம் போய்ச் சேர்ந்தனன். தேவர்களாலும் வெல்வதற்கரிய தான பரதனது சேனை பரதனைப் பின் தொடர்ந்து செல்லும்பொழுது தேவேந்திரனுடன் செல்லும் தேவசேனையென விளங்கியது.

நூற்றுப்பன்னிரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்றுப்பதின்மூன்றாவது ஸர்க்கம்

### தக்ஷ புஷ்கலர்களைக் கந்தருவ தேசத்தில் அரசர்களாக்கியது.

சதுரங்க சேனைகளுடன் வந்த பரதனைக் கண்டு கேகய ராஜனை யுதாஜித்து மிகவும் ஸந்தோஷமடைந்து தானும் விரைந்து தனது சேனைகளுடனும் பரதனுடனும் கூடிப் புறப்பட்டு கந்தருவ நகரம் போய்ச்சேர்ந்தனன். அதுகண்டு கந்தருவர் அனைவரும் ஒன்றுகூடி வந்து அவர்களை எதிர்த்தனர். அப்பால் இவ்விருதிறத்தவர்க்கும் மிகப்பயங்கரமாக ஏழு நாள் வரை வெற்றி தோல்வியின்றி யுத்தம் நடந்தது. கட்கம், சக்தி, வில் முதலாயுதங்கள் முதலைகளாகவும் மனிதர் சரீரங்களே பெரிய மரங்களாகவும் மிதக்க, உதிர வெள்ளம் எப்புறமும் பெருக்கெடுத்தோடியது.

அக்காலையில் பரதன் மிகுந்த கோபங்கொண்டு பயங்கரமான ஸம்வர்த்தமென்கிற காலமூர்த்தியினது அஸ்திரத்தை எடுத்துக் கந்தருவர்களின்மீது பிரயோகித்தனன். அதனால் மகா பராக்கிரமசாலிகளான மூன்றுகோடி கந்தருவர்களும் கால பாசத்தினால் கட்டுண்டவராகி க்ஷணப்பொழுதில் மாண்டொழிந்தனர்.

அப்பால் பரதன் மிகவும் செழிப்புள்ளவைகளான கந்தருவதேசத்திலும், காந்தார தேசத்திலும் ஒன்றுக்கொன்று ஏற்றத்தாழ்வின்றி சகலசம்பத்துக்களும் நிறைந்த தக்ஷசிலையென்றும் புஷ்கலாவதமென்றும் பெயர் பெற்ற இரண்டு அற்புதமான நகரங்களை நிருமித்து, அவற்றிற்கு முறையே தக்ஷனையும் புஷ்கலனையும் அரசர்களாக்கினன். தேவ மாளிகைகள்போல் மிகவும் அற்புதமாய் எழெட்டு அடுக்குள்ள மாளிகைகள் நிறைந்த பெரிய வீதிகளும், எல்லாப்பண்டங்களும் குறைவற நிறைந்த கடைவீதிகளும், ரமணீயமான உத்தியான வனங்களும் அமைந்து அந்நகரங்கள் எவரும் வியக்கத்தக்கவைகளாய் விளங்கின. ஆங்கு எல்லா விவகாரங்களும் நீதி முறைப்படி நன்கு நிறைவேறி வருமாறு தன் குமாரர்கள் அரசு புரியும் அதிசயத்தைக்கண்டு களிப்புற்று பரதன் ஐயாண்டளவு அவ்விடத்தே வசித்திருந்து அப்பால் அயோத்திக்குச் சென்று ராமனை வணங்கி கந்தருவர்களை வதைத்த வரலாறுகளையும் தமது ஆட்சியை அங்கு ஸ்தாபித்த விதத்தையும் விண்ணப்பஞ்செய்ய, ராமன் அது கேட்டு மிகவும் களி கூர்ந்தனன்.

நூற்றுப் பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப் பதினான்காவது ஸர்க்கம்.

## காருகபத தேசத்தில் அங்கதன் சந்திர கேதுக்களுக்கு மகுடாபிஷேகம் செய்தது.

அப்பால் ஸ்ரீராமபிரான் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! உனது குமாரர்களான அங்கதன் சந்திரகேது என்னுமிருவரும்

இராஜ்ஜிய பரிபாலனஞ்செய்யும் திறமையுடையவர்களாய் விளங்குகின்றனர். ஆதலால் அவர்களையும் ஓரிடத்தில் அரசர்களாக நியமிக்கவேண்டும். அதற்குத் தகுந்ததான தேசமொன்று தெரிந்துகூறுக" என்று கூறினன்.

அது கேட்டு பரதன் "அண்ணா! மேற்கே காருபதமென்கிற மிகவும் அழகான தேசமொன்று உளதன்றோ? அஃது அரசாளுதற்கு ஏற்ற இடமாகையால் ஆங்கு அங்கதனுக்கும் சந்திரகேதுவுக்கும் அற்புதமான நகரங்கள் நிருமிக்கலாம்" என விண்ணப்பஞ் செய்தனன். ராமன் அஃது உசிதமேயென்று கருதி அந்தேசத்தில் அங்கதீயை என்கிற அழகான பட்டணம் பிரதிஷ்டை செய்து அதில் அங்கதனை அரசுசெலுத்திவருமாறு நியமித்து பிறகு வடக்கே மல்ல பூமி யென்னுமிடத்தில் சந்திரகாந்தையென்ற திவ்வியமான நகரமொன்று நிருமித்து அதில் அரசபுரியுமாறு சந்திரகேதுவுக்கு அபிஷேகஞ் செய்வித்து சந்தோஷமடைந்தனன்.

லக்ஷ்மணன் அவர்களுடன் கூடச் சென்று அவர்கள் அரசாட்சி செய்யும் திறத்தைக்கண்டு வியந்து ஓராண்டளவு அங்கேயே இருந்து அப்பால் அயோத்தியை யடைந்து ராமனை வணங்கினன். பிறகு லக்ஷ்மணனும் பரதனும் ராமனுக்கு சகலவிதமான பணிவிடைகளையும் செய்து கொண்டு காலஞ்செல்வது தெரியாமலே பதினாயிரமாண்டுகளைக் கழித்தனர்.

நூற்றுப் பதினான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

---

நூற்றுப் பதினைந்தாவது ஸர்க்கம்.

## ஸ்ரீராமனிடம் பிரம தேவன் தூதனுப்பியது.

ஸ்ரீராமபிரான் இவ்வண்ணம் தருமம் தழைத்தோங்க ராஜ்ஜிய பரிபாலனஞ் செய்து வருகையில், ஒருநாள் கால ருத்திரமூர்த்தி தவசி வேஷந்தரித்து, ராமனது அரண்மனை வாயிலில் வந்து அங்கே வெகு தீரமாக நின்ற லக்ஷ்மணனை நோக்கி "யான் மகா பிரபாவ சாலியான அதிபல மகா முனிவரது தூதன். யான்

ஒரு பெரிய காரியத்தின் பொருட்டு வந்திருப்பதாக நீ வேந்தனிடம் விரைவில் அறிவிக்க ' என்று கூற, லக்ஷ்மணன் அங்ஙனமே ராமனிடஞ்சென்று தெரிவிக்க, ராமன் அம்முனிவரை உள்ளே அழைத்து வரும்படி கட்டளையிட்டனன்.

அந்தவசி யாவரினும் அற்புதமானதோர் ஒளி திகழ ராஜ சபையிற்சென்று ராமனை வாழ்த்த, ராமன் அவரை நல்வரவேற்றுப் பூஜித்து ஓர் சித்திராசனத்தில் எழுந்தருளச் செய்தபின் அவரை நோக்கி "தபோதனரே! தேவரீரது வரவு நல்வரவாகுக. தேவரீர் யாருடைய தூதராக எழுந்தருளியதோ அவரது பணிப்பை யருளிச் செய்க" என்றனன்.

அது கேட்டு அம்முனிவர் "ராமா! என்னைத் தூதனுப்பிய தபோதனர் மொழிந்த இதவசனத்தைக் கேட்க விருப்பமாயின், நாமிருவர் மாத்திரமே தனித்திருக்கையில் அதனைப்பிரஸ்தாபித்தல் வேண்டும். அப்படி நாம் சம்பாஷிக்குமளவில் யாவரேனும் அதைக்கேட்டாலும், அத்தருணத்தில் யாவரேனும் இங்கு வந்து பார்த்தாலும், அவர் உடனே மரணத்திற்கு ஆளாவரென உக்கிரமாகக் கட்டளையிட வேண்டும்" என்றனர்.

ராமன் 'அங்ஙனமேயாகுக' வென்று கூறி லக்ஷ்மணனை விளித்து "லக்ஷ்மணா! நீ வாயிலோனை அப்புறம் போக விடுத்து நீயே வாயிலில் காவல் காத்திருத்தல் வேண்டும். யானும் இம்முனிவரும் ஏகாந்தமாக சம்பாஷணை செய்கையில் எவரேனும் இங்கு வந்து பார்த்தாலும், இதனைக் கேட்டாலும் மரண தண்டனைக்கு ஆளாகுவர்" என்று கட்டளையிட்டு லக்ஷ்மணனை அரண்மனை வாயிலில் காவல் காத்திருக்கும்படி செய்து இருவரும் தனியே நின்றபோது ராமன் முனிவரை நோக்கி "சுவாமி! இங்கொருவருமில்லை. இனி விசாரமின்றி மனதிலுள்ளதைத் தெரிவிக்கலாம்" என்றனன்.

நூற்றுப் பதினைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்றுப்பதினாறாவது ஸர்க்கம்.

## காலனுக்கும் காகுத்தனுக்கும் சம்பாஷணை.

அப்பொழுது அத்தவசி ராமனை நோக்கி "ராஜனே! நான் பிரமதேவனால் இவ்விடம் அனுப்பப்பட்டவன். ஹே வீர! பூர்வத்தில் நான் உனக்குப் புத்திரனாகப் பிறந்தவன். உலகங்களை அழிக்கும் நிமித்தமாக நீ என்னை உனது திவ்விய சக்தியினால் உண்டாக்கினை. நான் திரிபுர சங்காரஞ் செய்த கால ருத்திர மூர்த்தியேயாவேன். பிரமதேவன் சொல்லியனுப்பியது யாதென்னில், படைப்பு,அளிப்பு, அழிப்பென்னும் முத்தொழிலுக்கும் உரியனை நீ சகல லோகங்களையும் ரக்ஷிப்பதே பெரிய விரதமாகக் கொண்டவனன்றோ? ஆதலின் அதன்பொருட்டு நீ உன்னடிச் சோதிக்கு (வைகுண்டத்திற்கு) வந்து சேரவேண்டிய சமயம் வந்து விட்டது.

ஆதியில் நீ உனது திவ்விய சக்தியினால் எல்லாவுலகங்களையும் வயிற்றிலடக்கிப் பெரும்புறக் கடலில் பள்ளிகொண்டு முதலில் என்னைப் பிறப்பித்துப் பிறகு உனக்குப் படுக்கையான ஆதிசேஷனைத் தோற்றுவித்தனை. அப்பால் மகா பலிஷ்டர்களான மது கைடபர்களைப் படைத்தனை. அவர்களில் கைடபன் என்னும் அசுரன் முதலை முத்துச்சிப்பி முதலியபோல் உடம்பில் எலும்புகளே மேலிட்டவனானது பற்றி அவனுடம்பின் எலும்புகள் இப்பூமி யெங்கும் பரவி மலைகளும் மேடுகளுமாயின. மற்றவனான மதுவினுடல் மீன் முதலியவற்றின் உடலென நிணமே மேலிட்டிருந்தமையின் அது படிந்து பூமியெங்கும் புல்பூண்டு முதலியவை முளைக்கும்படியான செழிப்புடையதாகி மேதினியென்னும் பெயர் பெற்றதாயிற்று.

ராமா! நீ மனோ வாக்குக்களுக்கு எட்டாத பர வாசுதேவனென்கிற ஆதிமூர்த்தியினின்றும் ஸ்ரீ மகா விஷ்ணுவாக வந்து தோன்றினை. தவிர அதிதியினிடத்தில் உபேந்திரனாக வந்து பிறந்து தேவதைகளுக்கு நேர்ந்த துன்பங்களைப் போக்கினை. இது இங்ஙனமாக ராவணனை சங்கரிப்பதற்காக தசரதன் புத்திர

னாய்த் தோன்றினை. ஆதியில் செய்த ஸங்கேதப்படி நீ பூலோகத்தில் வசிக்க வேண்டிய ஆயுளளவு பூரணமாகி உன்னடிச்சேர்திக்கு எழுந்தருள வேண்டிய காலம் நெருங்கி விட்டது. மறுபடி இன்னும் சிலகாலம் இங்ஙனம் பூலோகத்திலேயேயிருந்து ஜனங்களைப் பரிபாலித்து வர வேண்டுமென விருப்பமாயின் அப்படியே செய்க. உனக்குப் பல்லாண்டு பல்லாண்டு; தேவலோகத்திற்கு வர உனக்கு விருப்பமாகில் சகலமான தேவர்களும் உனது வரவை எதிர்பார்த்திருக்கின்றனர். அங்கே யெழுந்தருளி அவர்கட்கு சேவை சாதித்து அவர்களுடைய ஆவலைத் தணித்தருள்க என விண்ணப்பஞ்செய்யுமாறு இங்கு அனுப்பினர்" என்றனர்.

நான்முகன் சொல்லியனுப்பியதாகக் கால ருத்திர மூர்த்தி கூறியது கேட்டு ராமன் புன்னகை செய்தருளி "ஹே தேவ! மூவுலகத்தவர்க்குமாக வேண்டிய காரியத்தை முடித்தற் பொருட்டே நானிங்கு வந்து பிறந்தது. இனி யான் வந்தவிடம் போய்ச் சேருகிறேன். யான் மனத்தில் எண்ணியிருந்ததையே நான்முகன் சொல்லியனுப்பினைதலின், அதுவிஷயத்தில் எனக்கு விசாரமொன்றுமில்லை. எனது பக்தர்களான தேவதைகளுக்கு நான் வசப்பட்டவனாதலின் அத்தேவர்களில் முதல்வனை பிரம தேவன் சொல்லுகின்றவாறே நடக்கக் கடமை பூண்டவன்" என்றனன்.

நூற்றுப்பதினாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பதினேழாவது ஸர்க்கம்.

## துருவாச முனிவர் வந்ததும் லக்ஷ்மணன் பிரிந்ததும்.

காலனும் காகுத்தனும் இங்ஙனம் சம்பாஷணை செய்துகொண்டிருக்கையில் துருவாச முனிவர் ஸ்ரீராம பிரானைத் தரிசிக்க வேண்டி அரண்மனை வாயிலையடைந்து அங்குக் காவல் புரிந்துகொண்டிருந்த லக்ஷ்மணனை நோக்கி "சீக்கிரம் என்னை ராமனிடம் அழைத்துச் செல்லுக" என்றனர். லக்ஷ்மணன் அதுகேட்டு அம்முனிவரை வணங்கி "சுவாமி! தேவரீர்க்கு ஆகவேண்டிய

காரியம் யாதோ அதை அடியேன்பூர்த்தி செய்கின்றேன். மன்னவன் மற்றொரு அவசியமான காரியத்தை மேற்கொண்டிருப்பதால் அவனைக்காண ஒரு முகூர்த்த காலம் பொறுத்தருளவேண்டுகின்றேன்'' என, துருவாசர் கோபத்தினால் கண்கள் சிவந்து "லக்ஷ்மணா! யான் வந்திருப்பதை நீ இந்த நிமிஷமே ராமனிடம் அறிவித்தல் வேண்டும். தவறினால் உன்னையும் இந்நாட்டையும் நகரத்தையும் நான் சபித்து விடுவேன். ராமனையும் பரதனையும் உங்கள் சந்ததிகளையும் சபித்து விடுவேன். மேலெழுந்த கோபத்தை யான் மீண்டும் உள்ளடக்க வல்லேனல்லேன்'' என்று உக்கிரமாகக் கூறினர்.

சொன்ன வண்ணஞ் செய்யும் தவப் பெருமை பெற்ற துருவாச முனிவர் கூறிய கடூரமான வார்த்தைகளைக் கேட்டு லக்ஷ்மணன் சிறிது ஆலோசித்து "என்னொருவனுக்கு மரணம் நேர்ந்தாலும் நேரிடுக. இம்முனிவரது கோபத்திற் கிலக்காகி யாவும் அழியாதிருந்தால் போதும்'' என மனதில் உறுதி செய்து கொண்டு உள்ளே சென்று முனிவர் வந்திருக்கின்ற செய்தியை ராமனிடம் விண்ணப்பஞ் செய்தனன்.

கோப முனிவர் வந்திருப்பது கேட்டுக் காகுத்தன் காலமூர்த்திக்கு விடை கொடுத்தனுப்பி விட்டு உடனே எழுந்து துருவாசரை யெதிர் கொண்டு சென்று அவரை வணங்கிப் பூஜித்துக் கைகூப்பிய வண்ணம் அவரை நோக்கி "சுவாமி! அடியேனுக்கு இப்பொழுது என்ன காரியம் நியமிக்கின்றது?'' என்று கேட்க, அம்முனிவர் ராமனை நோக்கி "தருமமே துணையாகக் கொண்ட காகுத்த! யான் ஆயிரம் வருஷங்களாக எவ்விதமான ஆகாரமுமின்றி அருமையான தவம்புரிந்தேன். ஆதலின் எனக்குப் பசி அதிகமாக விருக்கின்றது. விதி முறைப்படி எனக்குப் போதுமான போஜனமளிக்க வேண்டுகின்றேன்'' என்றனர்.

ராமன் அதுகேட்டு மகிழ்ச்சியுடன் அவருக்கு முறைப்படி மேலான போஜனம் அளிக்க, அமுத மயமான அவ்வுணவை அருந்தவ முனிவர் அருந்தி அகமகிழ்ந்தவராகி ராமனை ஆசீர்வதித்து விடை பெற்றுத் தமது ஆச்சிரமஞ் சென்றனர். அப்பால் ராமன்

காலருத்திர மூர்த்தி கூறிய கோரமான வார்த்தையை நினைத்து அத்துயரத்தினால் தவிப்புண்டவனாகி மிகவும் தீனனாய்த் தலை குனிந்து ஒன்றும் சொல்ல வாயெழாமல் நின்று "நமக்குச்சகோதரனேது? வேலைக்காரனேது? ஒருவருமில்லை" என்று நிச்சயித்து மௌனமாய் இருந்தனன்.

நூற்றுப் பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப் பதினெட்டாவது ஸர்க்கம்.

## லக்ஷ்மணனை ராமன் பிரிந்தது.

இங்ஙனம் வாய்திறவாது மௌனமாய் இருந்த ராமனைக் கண்டு லக்ஷ்மணன் சந்தோஷமடைந்தவனாகி "அண்ணா! எனக்காக தேவரீர் வருத்தமுறுதல் உசிதமன்று. அன்று விதித்தவாறேயன்றோ யாவும் நடந்தேறும்? காலகதி இப்படிப்பட்டது தான். ஆதலின் தேவரீர் அடியேனைத் துறந்து செய்த பிரதிக்கினையை நிறைவேற்றியருள்க. செய்த பிரதிக்கினையைப் பரிபாலியாது தவறினவர்கள் நரகமே புகுவார்களன்றோ? தேவரீருக்கு அடியேனிடம் அன்பும் அருளும் உள்ளனவாயின், மனதிற் சிறிதும் கலக்கம் கொள்ளாது அடியேனைத் துறந்து அறத்தை வளரச் செய்க" என்றனன்.

லக்ஷ்மணன் இவ்வண்ணம் உரைத்ததுகேட்டு ராமன் சோகந் தணிந்தவனாகி மந்திரிமார்களையும் புரோகிதரையும் உடனே வரவழைத்து, துருவாச முனிவர் எழுந்தருளியதையும் அவருக்கு முன் வந்த தவசியிடம் தான் செய்த பிரதிக்கினையையும் அதன்மேல் நடந்த விருத்தாந்தத்தையும் அவர்களிடம் சொல்ல, அது கேட்டு அவர்கள் ஒன்றுந் தோன்றாது மௌனமாய் இருந்தனர். அப்பொழுது வசிஷ்ட பகவான் ராமனை நோக்கி,

"ஹே ரகுவீர! உனக்கு இப்படிப்பட்ட சங்கடங்களும், இளையவனோடு பிரிவும் உண்டாகுமென முன்னமே தெரிந்த விஷயமே. அதைப்பற்றி விசனமுறுவதில் பயனில்லை. விதியே வலிதுள்ளதாதலின் லக்ஷ்மணனைத் துறந்து விடுக. செய்த

பிரதிக்கினையை வீணாக்கலாகாது. "பிரதிக்கினை வீணாகுமாயின் தருமமழியும். ஆதலின் இம்மூவுலகங்களுக்கும் பரிபாலகனாய் இருக்கின்ற நீ லக்ஷ்மணன் ஒருவனைத் துறந்து அறத்தை வளர்க்க" என்றனர்.

மந்திரிமார்கள் பலருங்கூடிய பெரிய சபையில் வசிஷ்ட பகவான் இங்ஙனம் கூறக்கேட்டு ராமன் லக்ஷ்மணனை நோக்கி "லக்ஷ்மணா! தருமநிலை குலையாமைக்காக யான் உன்னை இன்றோடு இழந்து விடுகிறேன். சாதுக்களுக்குத் தியாகமும் வதமுமாகிய இரண்டும் சமமெனவே விதிக்கப்பட்டிருக்கின்றனவன்றோ?" என்றனன்.

இங்ஙனம் ராமன் கூறியதும் லக்ஷ்மணன் கண்களில் தண்ணீர் ததும்ப ஐம்பொறிகளும் உள்ளமும் கலங்கினவனாகி நேராகச் சரயூநதிக்குச் சென்று நீராடிக் கைகூப்பி நமஸ்கரித்துப் பிராணாயாமஞ் செய்து, (சுவாஸ பந்தஞ் செய்து) பரவாசுதேவனது என்றுமழிவில்லாத திருவடித் தாமரைகளையே மனத்தில் சிந்தித்து மரணமடைந்தனன்.

அப்பொழுது இந்திராதி தேவர்கள் லக்ஷ்மணன்மீது பூமாரி பொழிந்தனர். பிறகு லக்ஷ்மணனை மானிடர் ஒருவருடைய கண்ணுக்கும் புலப்படாமலே இந்திரன் அத்தேகத்துடனேயே தேவலோகத்திற்கு எழுந்தருளச் செய்து கொண்டு போயினன். ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாவிஷ்ணுவினது அம்சத்தில் நாலில் ஒரு பாகமாய் ஆதிசேஷாவதாரமான அம்மகானுபாவன் எழுந்தருளியது கண்டு தேவர்களும் தேவரிஷிகளும் மிக்க மகிழ்ச்சி கொண்டவர்களாகி அவனைப் பூஜித்தனர்.

நூற்றுப்பதினெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றுப்பத்தொன்பதாவது ஸர்க்கம்

## ராமன் பரமபதம் செல்லச் சித்தமானது.

இங்ஙனம் லக்ஷ்மணனைத் துறந்த ராமன் துக்கம் மேலிட்டவனாகிப் புரோகிதர்களையும் மந்திரிகளையும் நோக்கி "யான் இப்

பொழுது மகாசூரனும் தர்மிஷ்டனுமான பரதனை அயோத்தியா பதியாக அபிஷேகஞ்செய்து யான் மகாப்பிரஸ்தானம்மாய் அரணியஞ் செல்லுகின்றேன். சீக்கிரம் அதற்கு வேண்டிய சகலமான ஏற்பாடுகளையும் செய்க. லக்ஷ்மணன் சென்றவழியே பற்றி யான் இப்பொழுதே செல்லுகின்றேன்" என்றனன்.

அதுகேட்டு பரதன் சோகமதிகரித்தவனுகி அரசாட்சியை இகழ்ந்து, ராமனை நோக்கி "மகாப்பிரபு! அடியேன் சத்தியமாக ஆணையிட்டுச் சொல்லுகின்றேன். தேவரீரை விட்டுப் பிரிந்து அடியேனுக்கு சுவர்க்கலோகம் கிடைப்பினும் அதனை யடியேன் வேண்டுகிறேனில்லை. அங்ஙனமே தேவரீரின்றித் தனியே இவ் வரசாட்சியையும் விரும்புகின்றிலேன். தேவரீருக்குத் திருவுள்ள மாயின் இந்தத் தெற்குக் கோசல நாட்டில் குசனுக்கும், வட கோசலத்தில் லவனுக்கும் முடிசூட்டலாம். நாம் மகாப் பிரஸ் தானம் புறப்படுகின்ற விருத்தாந்தத்தைச் சீக்கிரம் சத்ருக்கன னுக்கு அறிவிப்போமாக" என்றனன்.

பரதன் இவ்வாறு கூறியது கேட்டு பட்டணத்து ஜனங்க ளனைவரும் துயரத்தினுல் தவிப்புண்டவராகித் தலைசாய்த்துத் தரையில் வீழ்ந்து கிடப்பதைக் கண்ட வசிஷ்ட பகவான் ஸ்ரீராமனை நோக்கி "ராமா! இதோ தவிப்புண்டு தரணியில் வீழ்ந்து கிடக்கின்ற இந்த ஜனங்களைப் பார். நீ இவர்களின் மனோரதத்தை யுணர்ந்து அதனைப் பூர்த்தி செய்யவேண்டும்" என்று வேண்ட, ராமன் சகலமான ஜனங்களையுமெழுப்பி அவர் களை நோக்கி "யான் உங்களுக்குச் செய்யவேண்டியது யாது?" என வினவினன்.

ராமனது சொல் செவிப்பட்ட மாத்திரத்தில் சகல பிரஜை களும் சந்தோஷமுடையவர்களாகி "ஆண்டவனே! தேவரீருக்கு எங்களிடத்தில் பிரீதியும் அருளுமுண்டாகில் தேவரீர் செல்கின்ற நல்வழிக்கு நாங்களனைவரும் புத்திர மித்திர களத்திராதிகளுடன் கூடப்புறப்பட்டு வருமாறு அருள் புரிக. ராமா! தேவரீர் எவ் விடத்திற்கு எழுந்தருளுகின்றதோ, அவ்விடத்திற்கு யாங்களும்

தேவரீரை விடாது பின்தொடர்ந்து வருகின்றோம்" என வேண்டிக் கொண்டனர்.

பட்டணத்து ஜனங்களுடைய திடமான பக்தியை ராமன் நன்குணர்ந்து அவ்வண்ணமே செய்வதாக அவர்களுக்கு வாக்களித்து அன்றையதினமே தனது புத்திரர்களுக்குப் பட்டாபிஷேகஞ் செய்தனன். அப்பால் அவ்விருவர்களையும் மடிமீது உட்கார வைத்துக்கொண்டு அவர்களை ஆலிங்கனஞ் செய்து பலதரம் உச்சி மோந்து, போதிக்க வேண்டுவன போதித்து, பிறகு அவ்விருவர்க்கும் ஆயிரக்கணக்கான ரதங்களும், அயுதக் கணக்கான யானைகளும், கோடிக்கணக்கான குதிரைகளும், அளவற்ற ஐசுவரியங்களுமளித்து, துஷ்டியும் புஷ்டியுமடைந்து பிரஜைகளுடனே கூட அவ்விருவரையும் அவரவருடைய பட்டணத்திற்கு அனுப்பினன். பிறகு ராமன் சத்துருக்கனனிடம் சீக்கிரம் சென்று செய்தி சொல்லி வருமாறு தூதர்களையனுப்பினன்.

நூற்றுப் பத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று

---

## நூற்றிருபதாவது ஸர்க்கம்

## ஸ்ரீராமன் விபீஷணன் முதலியோருக்கு ஆஞ்ஞாபித்தது.

அங்ஙனமே தூதர்கள் விரைவிற் சென்று மூன்று தினங்களில் மதுராபுரி போய்ச் சேர்ந்து சத்துருக்கனனைக் கண்டு "ராஜனே! ராமன் லக்ஷ்மணனைத் துறந்து விட்டனன். பிரமலோகஞ் செல்வதாகக் காலபுருஷனுக்கு வாக்களித்தனன். குசனுக்கு விந்தியமலைக்கருகில் குசாவதியென்னும் ஒரு நகரமும், லவனுக்கு சிராவஸ்தியென்னும் சிறந்த பட்டணமும் நிருமித்து, அப்புரிகளிலிருந்து அரசு புரிந்து வருமாறு அவர்களுக்கு நியமித்து, அயோத்தியாபுரியில் எவருமில்லாதபடி அதனைச் சூனியமாக்கிவிட்டு ஸ்ரீராமபிரானும் பரதனும் சுவர்க்கலோகஞ் செல்லச் சித்தமாயிருக்கின்றனர். தம்மைப் பின் தொடர்ந்து பட்டணத்து ஜனங்களனைவரும் வருமாறு ராமன் அனுமதியளித்திருக்கின்ற

ஏன். ஆதலின் தேவரீர் காலதாமதஞ் செய்யாது அயோத்திக்கு எழுந்தருள்க" என்றனர்.

சத்துருக்கனன் அதுகேட்டுத் தனது குலம் க்ஷணமாகுங் காலம் வந்ததெனவறிந்து சத்துருக்கனன் தனது மந்திரிகளை யும் புரோகிதரான காஞ்சன முனிவரையும் வரவழைத்து, நடந்த வரலாறுகளனைத்தையும் அவர்களிடம் கூறித் தானும் தனது சகோதரர்களுடன் பரமபதஞ்செல்லச் சித்தமாயிருப் பதைத் தெரிவித்தனன்.

அப்பால் சத்துருக்கனன் தனது தனயர்களான சுபாகு, சத்துருகாதி யென்னுமிருவர்க்கும் மகுடாபிஷேகஞ் செய்து, தனது சேனைகளையும் செல்வங்களையும் அவ்விருவர்களுக்கும் சம மாகப் பங்கிட்டுக் கொடுத்து, சுபாகு மதுராபுரியிலும், சத்துரு காதி வைதிச பட்டணத்திலுமிருந்து ராஜ்ஜிய பரிபாலனஞ் செய்து வருமாறு கட்டளையிட்டு பிறகு தான்மாத்திரம் ஒற்றைத் தேரோடு புறப்பட்டு விரைவிற்சென்று அயோத்தியை யடைந்து ராமனை வணங்கி "எங்களாண்டவனே! அடியேன் றஞ்சிறுவர்களிருவர்க்குமே ராஜ்ஜிய பரிபாலனம் செய்து வரு மாறு விதிப்படி முடிசூட்டி தேவரீர் திருவடிநிழலை யெய்தி வரச் சித்தமாகி இப்பொழுது இங்கு விடைகொண்டேன். யாதொன்றும் மறுத்துரையாது அடியேனது விண்ணப்பத்தை நிறைவேற்றும்படி வேண்டுகிறேன்" என்றனன். ராமன் சத்து ருக்கனனது சலியாத திடமான பக்தியை யறிந்து "அப்பனே! அப்படியேயாகுக" என்றனன்.

அப்பொழுது இச்செய்தியைக் கேள்வியுற்ற சகலமானவர் களும் ராக்ஷசர்களும், வானரர்களும் முறையே தேவேந்திரனையும் விபீஷணனையும் சுக்கிரீவனையும் முன்னிட்டுக்கொண்டு ராம னிடம் வந்து சேர்ந்தனர். ராக்ஷசர்களும் வானரர்களும் ராமனை நோக்கி "சுவாமி! தேவரீரைப் பின் தொடர்ந்துவர ஆயத்த மாகி நாங்களனைவரும் வந்து சேர்ந்தனம்; புருஷோத்தமா! எங்களை யிங்குத் தனியே விட்டுத் தேவரீர் மாத்திரமே எழுந

தருளுவதாயின், எங்களை யமதண்டத்திற்குக் காட்டிக்கொடுத்த தாகிவிடும்" என முறையிட்டுக்கொண்டனர்.

அப்பொழுது ராமன் சுக்கிரீவனை நோக்கி "நண்ப! நான் சொல்லுவதைக் கேள். 'தேவலோகத்திற்காயினும், பரமபதத் திற்கேயாயினும் யான் உன்னைவிட்டுப் பிரிந்து போகின்றே னில்லை" என உறுதிமொழி கூறினன். பிறகு ராக்ஷசராஜனுன விபீஷணனை நோக்கி "விபீஷண! எவ்வளவு காலம் இப்பூமியில் ஜனங்கள் வாழ்கின்றனரோ அவ்வளவு காலம் நீயும் இலங்காபுரி யில் உயர்வுபெற்று வாழ்வாய். சந்திர சூரியர்கள் எவ்வளவு காலம் பிரகாசிக்கின்றனரோ, இப்பூமி யெவ்வளவு காலமழியா திருக்கின்றதோ, என்னுடைய கதை இப்பூமியில் எவ்வளவு காலம் மேன்மைபெற்று விளங்குகின்றதோ அவ்வளவு காலம் நீ அழியாது அரசு செலுத்தி வருக. விபீஷண! இந்திராதி சகல தேவதைகளாலும் எப்பொழுதும் ஆராதிக்கப்படுகின்றவரான இக்ஷுவாகு குல தேவதையான ஸ்ரீ ஜகந்நாதனை ஆராதித்து வாக்கடவை" என்று கூற விபீஷணனும் 'திருவுள்ளப்படி நடக் கக் காத்திருக்கின்றேன்' என ஒப்புக் கொண்டனன்.

பிறகு ராமன் அனுமானை நோக்கி "பவனதனய! நீ சிரஞ்சீவி யாயிருக்க ஆசை கொண்டவன். இவ்வுலகத்தில் எனது கதை எவ்வளவு காலம் வழங்குகின்றதோ அவ்வளவு காலம் நீ இப்பூமி யில் பெருமையாக வாழ்க" என்று கூற வாயுகுமாரன் அகமகிழ்ச்சி கொண்டு "சுவாமி! திருவுள்ளப்படி நடக்கக் காத்திருக் கின்றேன்" என்றனன்.

அப்பால் ஜாம்பவானையும் மைந்த துவிவிதர்களையும் நோக்கி ராமன் அங்ஙனமே கூறினன். விபீஷணன் முதலான சிரஞ்சீவி களாகிய இவ்வைவரையும் பார்த்துக் கலி வருமளவும் தமது புத்திர பௌத்திராதிகளைப் பாதுகாத்துக்கொண்டு இப்பூமி யிலே வசித்திருக்குமாறு ராமன் கட்டளையிட்டு, மற்றவர்களனை வரையும் தன்னுடனே கூடப் புறப்பட்டு வருமாறு அருள் புரிந் தனன்.

நூற்றிருபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

## நூற்றிருபத்தோராவது ஸர்க்கம்.

### எல்லோரும் ஸ்ரீராமபிரானைப் பின்தொடர்ந்து சென்றது.

மறுநாள் விடிந்தவளவில் ராமன் தன் புரோஹிதரான வசிஷ்டரை நோக்கி "வாஜபேயத்தைப் பற்றிய வெண்கொற்றக்குடை யாம் செல்லும் ராஜ மார்க்கத்திலே நிழற்ற, அந்தணர்களுடனே அக்கினி ஹோத்திரம் ஜொலித்துக்கொண்டு முன்னே செல்லுக" என நியமித்தனன். பிறகு வசிஷ்டமாமுனிவர் மஹாப்பிரஸ்தானத்திற்குச் செய்யவேண்டிய சடங்குகள் யாவும் செய்து முடிக்க, ஸ்ரீராமபிரான் மெல்லிய பீதகவாடை சாத்திக் கொண்டு, விரல்களில் தருப்பைப் பவித்திரங்கள் விளங்க, பிரம மந்திரத்தை வாய்வெருவிக்கொண்டு ஒருவருடனும் பேசாது இந்திரியங்களனைத்தையும் பட்டிமேயாமலடக்கித் திருவடிகளில் பாதுகைகளின்றியே உதயகிரியினின்று எழுகின்ற சூரியனென ஜொலித்துக்கொண்டு தனது மாளிகையினின்றும் அழகாகப் புறப்பட்டனன்.

ஸ்ரீராமபிரான் பட்டணத்தை விட்டெழுந்தருளுகையில் அவனது வலது பாரிசத்தில் பதும மலர் கைக்கொண்ட மலர் மகளும், இடது பக்கத்து நிலமகளுமாகிய இருவருமடுத்துச் சென்றனர். அன்றியும் ஸங்கற்பம், பராக்கிரமம், நானாவிதமான கணைகள், கார்முகம், சகலமான படைக்கலங்கள் ஆகிய பலவும் புருஷரூபங்கொண்டு கூடவே சென்றன. வேதங்கள் நான்கும் வேதியர் வடிவமெடுத்துப் போயின. பரிசுத்தமான காயத்திரி மந்திரமும் ஓங்காரம் வஷட்காரம் முதலான வேறு பல மகா மந்திரங்களும் ராமனைப் பின் தொடர்ந்தன. மகரிஷிகளும் பிராமணர்களும் பரமபத வாயில் யாவருக்கும் திறக்கப்பட்டிருக்கின்றதென்று அறிந்து ராமனுடன் சென்றனர்.

அந்தப்புரத்திலுள்ள பாலர்களும் விருத்தர்களும் தாசிகளும் சேவகர்களும், சகல ஸ்திரீகளும், பேடிகளும் ராமனைப் பின்பற்றினர். பரத சத்துருக்கனர்கள் ராமனையே தங்களுக்குக் கதியாகப் பற்றித் தமது அந்தப்புரத்துடனே ராமனைத்

தொடர்ந்தனர். பட்டணத்து ஜனங்களனைவரும், மந்திரிகளும் ராமனைப் பின்பற்றினர். இங்ஙனமே ஸ்ரீராமபிரானது சம்பந்தம் பெற்ற சகலமான ஸ்திரீபுமான்களும் பக்ஷி பசு வாகனம் முதலிய சகல சராசரங்களுடனே சகல பாபங்களும் நீங்கினவராகி மிக்க மகிழ்ச்சி கொண்டு ஸ்ரீ ராமனுடன் சென்றனர்.

அத்தருணத்தில் அந்நாட்டில் விசனமுற்றவனுமில்லை; வெட்கமடைந்தவனுமில்லை. சகலமான பேர்களும் பேரானந்தக் கடலில் மூழ்கியிருந்தனர். ஸ்ரீராமபிரான் பட்டணத்தைவிட்டு எழுந்தருளுவதைப் பார்க்க வந்தவர் எவரோ அவர்களும் காகுத்தனைக் கண்டவளவில் களிப்படைந்தவராகிப் பரமபதஞ் செல்லப் பின் தொடரலாயினர்.

ஸ்ரீராமபிரான் பரமபதமெழுந்தருளப் புறப்படுகையில் அயோத்தியாபுரியில் ஒருவர் கண்ணிலும் புலப்படாமல் மூலை முடுக்குகளில் மறைந்திருந்த பூதங்களும் ஜங்கமஸ்தாவரங்களான சகல ஜீவன்களும் கூடவே புறப்பட்டுச் சென்றன. அக்காலத்தில் அயோத்தியாபுரியில் உயிருள்ள பொருள் ஒன்றேனும் ராமனைப் பின்தொடராது நின்றிலது.

நூற்றிருபத்தோராவது ஸர்க்கம் முற்றிற்று.

---

### நூற்றிருபத்திரண்டாவது ஸர்க்கம்.

## ஸ்ரீராமனுடன் சென்ற சகல ஜீவனும் பரமபதம் பெற்றது.

இங்ஙனம் ஸ்ரீராமபிரான் அயோத்தியினின்றும் புறப்பட்டு மேற்கு முகமாய் அரை யோசனை தூரமெழுந்தருளிப் புண்ணிய நதியான சரயூநதியை யடைந்தனன். அப்பொழுது பிரமதேவன் சகலமான தேவதைகளும் தேவரிஷிகளும் கோடிக்கணக்கான தேவ விமானங்களும் புடைசூழ அங்கு வந்து வானத்தில் நின்று ராமனை நோக்கி "ரகுகுலசிகாமணியே! உனக்குப் பல்லாண்டு பல்லாண்டு. ஸாக்ஷாத் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் அவதாரமான தேவரீர் இனி இவ்விண்ணுலகத்திற்கு எழுந்தருள்க. இனித் தம்பிமார்களுடன் கூடித் தத்தமக்குரிய சுயமான திருமேனியிற் பிரவேசித்தருள்க. வைஷ்ணவமான திருமேனியில் பிரவேசிக்கத்

திருவுள்ளமாயின் பிரவேசித்தருள்க; அல்லது நலமந்தமில்லதோர் நாட்டிற்கு நேராயெழுந்தருளத் திருவுள்ளமாயின் அப்படியும் செய்தருளலாம். மனோ வாக்குக்களுக்கு மெட்டாதவரும் ஆதியந்தமில்லாதவரும் சகலமான உயிர்களையும் ஆதரித்து ரக்ஷிப்பவரும் எங்கும் நிறைந்த பரம்பொருளும் நீயேயாதலின் எந்தத் திருமேனியில் பிரவேசிக்கத் திருவுள்ளமோ அதில் பிரவேசித்தருளலாம்'' என்றனர்.

ஸ்ரீராமபிரான் திருவுள்ளத்தில் சற்று நன்கு ஆராய்ந்துணர்ந்து தம்பிமார்களுடன் கூடித் தனது திருமேனியுடனே வைணவமாகிய தனதுசோதியிற்கலந்தருளினன். ஸ்ரீமஹாவிஷ்ணுவினது மூர்த்தியில் ஸ்ரீராமபிரான் சேர்த்தியாயினது கண்டு சகலமான தேவதைகளும் அப்பெருமானை நமஸ்கரித்து விசேஷமாகப் பூஜித்தனர். ஸ்ரீராமன் எழுந்தருளிய வளவில் தேவலோகம் சகலபாபங்களுமொழிந்து நிர்மலமாகியது.

அப்பொழுது விஷ்ணுதேவனது திருமேனியிற் பிரவேசித்தருளிய ஸ்ரீராமபிரான் பிரமதேவனைப்பார்த்து "என்னிடத்து என்று மிடையறாத அன்புள்ளவர்களாய் என்னைப்பின்பற்றி வந்திருக்கின்ற இந்த சகலமான பிரஜைகளுக்கும் புகுதற்கு மேலான உலகந்தருக.'' என்று அருளிச்செய்ய நான்முகன் பகவானது திருவுள்ளத்தையுணர்ந்து "சுவாமி! · இவர்கள் ஸாந்தானிகமென்கிற சிறந்த உலகம் புகுந்து அங்கிருந்து தேவரீரது நலமிந்தமில்லதோர் நாட்டிற்போலவே பேரின்பமனுபவிப்பார்கள். இவர்கள்மாத்திரமேயன்றி இனிமேலும் தேவரீரது திவ்விய சரணாரவிந்தங்களைச் சிந்திக்கின்றவைகளும் தேவரீரிடம் பக்தி பண்ணுகின்றவைகளுமாகிய பசு பக்ஷி முதலான திர்யக்குகளும் மரணமடையுங் காலத்தில் பிரமலோகத்திற்கு மேற்பட்டதும் மறுபடி திரும்பிவருதலில்லாமை முதலிய பரமபதத்தின் பெருமைகள் பலவு மமைந்ததுமான இவ்வுலகமே சேர்ந்து பேரின்பம் பெறலாகும். வானரவீரர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு அதிகாரதேவதையின் அம்சமேயாதலின், சகலரும் எந்தெந்தத்

தேவதையின் அமிசமாய் அவதரித்தனரோ, அவரவர் அந்தந்தத் தேவசரீரத்தில் பிரவேசிக்கலாகும்'' என்றனன்.

திசைமுகன் இவ்வாறு புகன்றவளவில் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கையிலேயே சுக்கிரீவ மகாராஜன் சூரிய மண்டலத்தில் சேர்ந்து போயினன். பிறகு அங்குள்ள சகலமான ஜீவராசிகளும் சரயூ நதியில் கோப்பிரதார மெனும் துறையி லிறங்கி மிக்க மகிழ்ச்சி கொண்டு மூழ்கின; மூழ்கின மானிடர்கள் மானிட சரீரமொழிந்து தேவ விமானத்திலேறினர். பசு பக்ஷி முதலான மற்ற பிராணிகளும் அந்நதியில் நீராடியவுடன் மிகப் பிரகாசமான திவ்விய தேகம்பெற்றுத் தேவலோகத்தையடைந்து தேவதைகளாயின. சகலமான வானர ராக்ஷசர்களும் தம் தம் தேகத்தை யொழித்து சுவர்க்கம் புகுந்து தத்தம் பிதாவான தேவதைகளின் சரீரத்தில் சேர்ந்து போயினர். இங்ஙனம் ஸ்ரீராம பிரான் அ[illegible]த்தியில் வாழும் சராசரம் முற்றவும் நான்முகனுர் பெற்ற நாட்டையடையும்படி செய்து ஆனந்த பரிபூரிதர்களான நித்தியசூரிகளுடன் கூடிக்களிகூர்ந்து ஸ்ரீவைகுண்டத்திற்கெழுந் தருளினன்.

நூற்றிருபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

## நூற்றிருபத்து மூன்றவது ஸர்க்கம்.

## ஸ்ரீராமாயண பாராயணத்தாலுண்டாகும் பலன்.

இந்த ஸ்ரீராமாயணத்தை இப்பூலோகத்தவர் மாத்திரமன்றி தேவலோகத்திலுள்ள சகலமான தேவதைகளும் கந்தருவர் களும் சித்தர்களும் தேவரிஷிகளும் அதிகமான ஆதரத்துடன் அனுதினமும் கேட்டுக் களிப்படைகின்றனர். இந்த ராமாயண மென்னும் ஆதி காவியமானது படிப்போர், கேட்போர், ஆதரிப் போர் ஆகிய பலருக்கும் சகல பாபங்களையும் போக்கி ஆயுளும் ஐசு வரியமும் அளிக்கவல்லது. வேதத்திற்குச் சமமான சிறப்புடைய இந்த ராம சரிதத்தைச் சிராத்த காலங்களில் அக்ஷய பிதிர் திருப்தியின் பொருட்டுப் பிதிர் தேவர்கள் கேட்குமாறு படிக்கக் கடவர்கள்.

இந்த ராமாயணத்தில் ஒரு பாதம் படித்தாலும் புத்திரனை வேண்டுவோன் புத்திரனைப் பெறுவான். பொருளை வேண்டுவோன் பொருளைப் பெறுவான். அவன் செய்த பாபமனைத்தும் அழிந்துபோம். ஸ்ரீராமாயணத்தைப் படிப்பவருக்கு விசேஷமாக வஸ்திரமும் பசுவும் பொன்னும் அளித்தல் வேண்டும். ஸ்ரீ ராமாயணத்தைப் படிப்பவர் திருப்தியடைவாராயின் சகல தேவதைகளும் திருப்தி யடைவார்கள். சகல சம்பத்தையும் கொடுப்பதான ஸ்ரீராமாயணத்தைக் கிரமமாகப் பாராயணஞ் செய்கின்ற புருஷன் இவ்வுலகில் புத்திர பௌத்திராதிகளுடனே கூடிப் பெருமைபெற்று வாழ்வதுமன்றி மறுமையிலும் வீடு பெறுவான்.

தர்சாதி திருநாட்டுக் கெழுந்தருளிய பின் அயோத்தியாபுரி பல வருஷ காலம் பாழாயிருந்து பிறகு ருஷப னென்பவன் ராஜாவாக வருங்காலத்துச் சிறப்பும் செல்வமும் பெற்றுச் சௌபாக்கியமுடைய நகரமாகும்—என்று இவ்விதமாக ராமாயணத்தை உத்தரகதையையும் பவிஷ்யத் கதையையும் சேர்த்துப் பிரசேதசரது புத்திரரான வால்மீகி முனிபுங்கவர் செய்தருளினர். இதனைப் பிரமதேவரும் மிகக் கொண்டாடிப் பிரதிதினம் படித்து வருகின்றனர்.

இந்த ராமாயணத்தில் ஒரு ஸர்க்கமேனும் படிக்கக் கேட்பவன் கேட்ட மாத்திரத்தில் ஆயிரம் அசுவமேதமும் பதினாயிரம் வாஜபேயமும் செய்த பலனைப் பெறுகின்றான்; பிரயாகம் முதலான புண்ணிய தீர்த்தங்களிலும் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களிலும் நீராடினவனாகிறான்; நைமிசாரணியம் குரு க்ஷேத்திரம் முதலான புண்ணிய ஸ்தலங்களில் யாத்திரை செய்தவனாகிறான். சூரிய கிரகண காலத்தில் குரு க்ஷேத்திரத்தில் துலாபாரம் தானம் செய்பவனும் ஸ்ரீ ராமாயண பாராயணம் செய்யக் கேட்பவனும் ஒருவர்க்கொருவர் ஒப்பானவர்களாம். இவ்விராமாயணம் முழுமையும் சிரத்தையுடன் எவனொருவன் கேட்கிறானோ அவன் சகல பாபங்களினின்றும் விடுபட்டு விஷ்ணு லோகத்தை யடைகின்றனன். பிராமணர் மூலமாகப் பிரதிதினமும் இந்த காவியத்தை யாவரும் கேட்குமாறு செய்து வரக் கடவர்.

இந்த ராமாயணத்தை எவனொருவன் சம்பூரணமாகப் பாராயணம் செய்கின்றனனோ, அவன் சரீரத்தை விடுங்காலத்தில் விஷ்ணு லோகம் சேருகின்றானென்பது சத்தியம்; அவனும் பிதாவும் பாட்டனும், பிதாவுக்குப் பாட்டனும் இன்னுமவருடைய தந்தை பாட்டன் முதலியோரும் விஷ்ணு லோகத்தையடைகின்றனர். இதில் சிறிதும் சந்தேகமில்லை. ஸ்ரீராம சரிதமானது எப்பொழுதும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பேறுகளையும் அளிக்க வல்லதாதலின் இதை ஒவ்வொருவரும் தினந்தோறும் படிக்கவாவது கேட்கவாவது வேண்டும். இதனைப் பூரணபக்தி விசுவாசங்களுடன் பாடிப் பாராயணஞ் செய்க. அங்ஙனம் பாராயணஞ் செய்புமுங்களுக்குப் பல்லாண்டு பல்லாண்டு ஸ்ரீ மகாவிஷ்ணுவினது திருவருள் மேன்மேலும் உயர்ந்தோங்குக.

வால்மீகி முனிவர் செய்தருளிய ஆதிகாவியமான
ஸ்ரீ ராமாயணத்தில் உத்தர காண்டத்தின் வசனம்
முற்றுப்பெற்றது.

சக்கரவர்த்தித் திருமகன் சந்நிதானத்தில்
குசலவர்கள் கானம் பண்ணினபடி
இருபத்திநாலாயிரம் கிரந்தங்களடங்கிய
ஆதிகாவியமான
ஸ்ரீ வால்மீகி ராமாயணத்திற்கு நேராக
ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசார்ய சுவாமிகள்
எழுதிய மொழிபெயர்ப்பு வசனம்
முற்றுப்பெற்றது.
ஸ்ரீராமபிரான் திருவடிகளே சரணம்.

# பொருளடக்கம்

## சுந்தரகாண்டம்

---

## யுத்த காண்டம்.

---

## உத்தர காண்டம்.

---